# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - முதற் பாகம்

ச, சா

Vol. III - Part - I


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

மூன்றாம் மடலம் - முதற் பாகம்

**ச, சா**

**Vol. III - Part - I**


**பு.ஏ. இராமையா** இ.ஆ.ப.,

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

**தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,

இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**மேற்பார்வையாளர்**

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2004

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு - 7

முதற் பதிப்பு : 2004

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. III, Part - I



விலை : உருபா 300/-

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314" K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

நூல் கிடைக்குமிடம் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**Vol. III - Part - I**

**மூன்றாம் மடலம் - முதற்பாகம்**

**(ச முதல் சா வரை)**

## பதிப்புக் குழு

திரு. **பு.ஏ. இராமையா** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

திரு. **தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

### மேற்பார்வையாளர்

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

### கூர்ந்தாய்வாளர்

புலவர் **த. சரவணத் தமிழன்**

### தொகுப்பாளர்கள்

திரு. **முத்து. பிச்சை**
முனைவர் **மு. கண்ணன்**
முனைவர் பா. **வெற்றிச்செல்வன்**
முனைவர் **ச. செந்திலாண்டவன்**
முனைவர் **இரா.கு. ஆல்துரை** (பகுதிப்பொறுப்பாளர்)
திரு. **கா. இளமுருகு**
திரு. **ச.கி. கணேசன்** (ஓவியர்)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**ஜெ ஜெயலலிதா**
முதலமைச்சர்

வாய்மையே வெல்லும்

தலைமைச் செயலகம்
சென்னை-600 009.

நாள் 22.12.2004

## அணிந்துரை

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்' என்னும் வைர வரியில் தமிழின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் என்பதை எடுத்துக் காட்டினார் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

பாவேந்தர் பணித்தபடி, ஒல்லும் வகையில் எல்லாம் அந்த ஒண்டமிழை வளர்க்க உற்ற பணி புரியும் நற்றமிழ் அரசே தமிழ் நாடு அரசு.

காலத்தை வென்று நிற்கும் நம் கன்னித் தமிழை இந்திய அரசின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கும், உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகவும், உலக சிந்தனையின் உச்சமாகவும் விளங்கும் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஆக்குவதற்கும், இடையறா முயற்சிகளை எடுத்து வருகிறது எனது அரசு. அனைத்து மாணவரும் தமிழைப் பயில வேண்டும் என்பதற்காக மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை அறிவியல் தமிழைக் கற்பிக்க ஏற்பாடு செய்ததும் எனது அரசே.

வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஈடு கொடுக்கும் வகையிலும், இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கும் முறையிலும் மொழியின் சொல்வளத்தை அறிந்து கொள்வதும், பெருக்குவதும் இன்றியமையாததாகும். இப் பயன்பாட்டு நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி' (A comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. இப் பணியின் தனித் தன்மை கருதி, பன்மொழிப் புலமையும், ஆய்வு நுட்பமும், தமிழ்ப் புலமையும், ஒருங்கே அமையப் பெற்றிருந்த மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு இத் திட்டம் தொடங்கப்பட்டது. பைந்தமிழ் அறிஞர் பாவாணர் அவர்கள் 'தனித் தமிழ் இயக்கம்' கண்ட மறைத்திரு மறைமலை அடிகளார் வழியில் தமிழ் ஆய்ந்து தமிழே உலக முதன்மொழி என்பதை உலகுக்கு உணர்த்தியவர் ஆவார்.

அவர் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், அருந்தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான தலையாய பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கருத்திற் கொண்டு எனது அரசு இத் திட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. இத் திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து 6 பகுதிகள் மட்டுமே முடிக்கப்பட்டிருந்தன. இவற்றில் 'அ' முதல் 'ஔ' வரையிலான எழுத்துக்களில் அமையும் சொற்கள் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தற்பொழுது 'ச' வரிசையில் மூன்று பகுதிகளும் 'த' வரிசையில் மூன்று பகுதிகளும் ஆக மேலும் 6 பகுதிகள் முடிக்கப்பட்டு வெளியிடப் பெறுவதை அறிந்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு இந்த யுகத்தின் நான்காவது தமிழாகிய 'அறிவியல் தமிழ்' வளர, அறிவியலைத் தமிழில் கூறுவதற்கான சொற்களைக் கண்டறிய வேண்டியது இன்றியமையாததாகும். அதற்காக ஏற்கெனவே தமிழில் உள்ள சொல்வளத்தை அறியவும், புழக்கத்தில் இல்லாத சொற்களைப் புதுப் பயன்பாட்டிற்குக் கொண்டு வரவும், புதிய சொற்களை உருவாக்கவும், சொற்களின் வேர்களை ஆராய்ந்து புதியன படைக்கவும் இன்றைய தமிழ் வளர்ச்சியின் உடனடித் தேவையை நிறைவு செய்வதாக செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி நூல் மடலங்கள் அமைகின்றன.

இம் மடலங்கள் தமிழின் அழிவிலாச் சொத்தாக விளங்கும் என்பது உறுதி.

இப் பகுதிகள் வெளிவர அயராது உழைத்த அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

**வாழ்க தமிழ்!**
**வளர்க தமிழ்ப் பணி!**

**ஜெ ஜெயலலிதா**
**தமிழக முதலமைச்சர்**

*சி.வி. சண்முகம்*
*கல்வி மற்றும்*
*வணிக வரித்துறை அமைச்சர்*

*தலைமைச் செயலகம்*
*சென்னை - 600 009*

# *அணிந்துரை*

"ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும் பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும் மேனாட்டாரிடமிருந்து நாம் அறிந்தவை.

**இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று**
**அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே** **(தொல்.சொல்.எச்.1)**

என்று தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டிலிருந்ததேனும் விரிவான முறையிலும், நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் (Etymology), மொழிநூலும் (Philology) நாம் பெற்றது மேலையரிடமிருந்தே". இது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்ற நூலைச் சேலத்திலிருந்து 1948-இல் வெளியிட்டபோது, அந்நூலில் அவரே எழுதிய முகவுரை. ஆகப் பல்லாண்டுகளாகச் சொல்லாராய்ச்சியிலேயே தம்மை ஆட்படுத்திக் கொண்டு, நுணுகி நுணுகித் துருவித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அதன் வாயிலாகத் தமிழின் சொல்வளத்தை நாம் அறிகின்றோம். அத்துடன் நில்லாது தொன்றுதொட்டு இன்று வரையுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றையும் அறிய முடிகிறது.

தமிழ் பிறமொழியின் கலப்பில்லாமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னிகரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களெல்லாம் ஒப்புக் கொள்கின்றனர். செந்தமிழின் நீண்ட நெடிய சொல்வள வரலாற்றில் சொல்லும் பொருளும் பெருகியுமுள்ளன; அருகியுமுள்ளன! வழக்கிழந்த சொற்களை மீட்பதற்கும், அனைத்துச் சொற்களையும் காப்பதற்கும் அகரமுதலிகள் இன்று வழிவகுக்கின்றன.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதலாக இன்றைய பேச்சு வழக்குச் சொல்லாட்சிகள் ஈறாக அனைத்தையும் உள்ளடக்கிச் சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் விளக்கமுற உரைப்பவையாக இருப்பவையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மடலங்கள்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு விழா கண்ட நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் அமைந்த அரசு, அவரின் தனித்தமிழ்ப் பற்றினைப் பேணிக் காத்திடவும், அவர் காட்டிய நெறிமுறைகளின்படி அகரமுதலி மடலங்கள் வெளிவரவும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று இந்தியாவிலேயே தலைசிறந்த முதன்மை மாநிலமாக மாற்றிடச் சூளுரைத்துச் செயற்பட்டு வரும் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய வழிகாட்டுதல்படி தமிழக அரசு முனைந்து பீடுநடை போடுகின்றது.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எஞ்சிய பகுதிகள் யாவும் நான்காண்டுக்கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப்படும்' எனச் சட்டப்பேரவையில் அறிவித்தபடி 'ச'கர மடலத்தின் 3 பகுதிகளும், 'த'கர மடலத்தின் 3 பகுதிகளும் இப்போது ஒருசேர வெளிவருவது, மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும். முன் எப்போதும் இல்லாதவாறு 6 பகுதிகள் ஒருசேர முடிக்கப்பெற்று வெளியிடப்பெறுவது அருஞ்சாதனையே! அதற்கு முதற்காரணம் நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மை. 6 பகுதிகள் சீரிய முறையில் வெளிவர அரும்பங்காற்றிய தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பொறுப்பு இயக்குநர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் மற்றும் அகரமுதலித் தொகுப்பாளர்களுக்கும் என்னுடைய பாராட்டுகள். இதேபோல மற்றப் பகுதிகளையும் விரைந்து முடித்து வெளியிடத் தொடர்ந்து பாடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

31.8.04

சென்னை

**சி.வி. சண்முகம்**
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்

**பு.ஏ. இராமையா,** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்

தமிழ் வளர்ச்சி-பண்பாடு
(ம) அறநிலையத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

## அணிந்துரை

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முன்தோன்றி மூத்த குடி"** (பு.வெ.மாலை)

என்று தமிழ்க்குடி பாராட்டப்பெறும். அவ்வகையில் எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் சீரிளமைத்திறம் வியந்து தம்முடைய வாழ்நாள் பணியாகச் சொல்லாராய்ச்சியை மேற்கொண்டவர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரி; உலக முதன் மொழி தமிழ். என்ற கோட்பாட்டில் திளைத்து, அக்கோட்பாட்டின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன்மொழியாகிய தமிழின் சொற்பிறப்பாய்வைத் துருவித்துருவியாய்ந்து மிகத் துல்லியமாக வேர் விளக்கம் கண்டவர் பாவாணரே.

இப்பெருமகனாரைப் போலத் தனித்தமிழ் ஆய்வுக் கருத்துகளை இதுவரை எந்தவோர் அறிஞரும் வழங்கிடவில்லை; பெருஞ்சித்திரனார் கூறுவதைப்போலத் "தமிழ்த் துறைக்கு அவர் தொண்டு புதியது; தமிழர்க்கு அவர் கருத்துகள் மயக்கறுப்பன; மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன; அவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்". இவ்வுரைக்கு ஏதும் மறுப்புரையுண்டோ?

**"கதிர்தரு ஒளியென மொழிதரு மலையே!**
**முதிர்முகி லெனவே வேர்பொழி விளைவே**
**தமிழ்ச்சுட ரணிதலைப் பாவா ணர்தான்**
**தமிழ்மகள் பெறுதவப் பேரறிவாளன்!**

*வேர்ச்சொல் லாய்வின் வித்தகன்! மொழியின்*
*போர்ப்படைத் தலைவன்! புலமைப் புதையல்!*
*தலைவ! நீதரும் ஒளியே பாதை*
*விலைமதிப் பில்லா வெற்றியைத் தருமே!"*

என்றொரு பாவலர் பாடியதற்கேற்பப் பாவாணர் பெரும்புகழ் பெற்ற அமுதப்படையல்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி 12 மடலங்களில் 31 தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டதாகும். கடந்த 28 ஆண்டுகளில் 6 தொகுதிகள் மட்டுமே வெளிவந்துள்ள நிலையில், சுணக்கமுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் புதுத்தெம்பு ஊட்டியதன்விளைவாய், எஞ்சிய 25 தொகுதிகளை நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. அதன் வெளிப்பாடே இப்போது 'ச' மற்றும் 'த' மடலங்களின் 6 தொகுதிகள் ஒருசேர வெளிவருகின்றன. இது ஓர் அரும்பெருஞ் செயல் என்றால் மிகையாகாது.

இத்தொகுதிகளில் காட்டப்பெறும் தமிழ்ச் சொற்களின் விரிவும் விளக்கமும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றிரண்டினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

'ச'கர மடலத்தின் முதற்பகுதியில் (ச, சா) வரும் **'சக்கரம்'** என்ற சொல்லிற்கு 27 வகையான பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாது இலக்கிய மேற்கோள்களும் வேர் விளக்கமும் அருமையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சருக்கு - சருக்கரம் - சக்கரம்** (வே.க. 239)

அதேபோல் **'சத்தம்'** என்ற சொல்லுக்கான விளக்கமும் அருமை.

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்துவண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் - சத்தம் ஆயிற்று.

அடுத்து, இரண்டாவது தொகுதியில் (சி-சூ), 'சிலை' என்ற சொல்லிற்குக் காட்டப்பட்டுள்ள விளக்கம் அழகுற அமைந்துள்ளது. 'சீரகம்' என்ற சொல்லிற்குப் பொருள் - வேர் விளக்கம் - விரிவுப் பொருள் காட்டியிருப்பது திகைக்க வைக்கிறது.

**சீர் - சீரம் - சீரகம்**

உலகில் முதன்முதலாகச் சிறந்த முறையில் சமையல் தொழில் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே! என்பதற்குச் சான்றுகள் பல உள.

"சிறுபிள்ளை இல்லா வீடும், சீரகம் இல்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டுவரும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமை பற்றிப் பெயர்பெற்ற நிலைத் திணை வகைகள். பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

5 கடுகு = 1 சீரகம்; 5 சீரகம் = 1 நெல்

"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி
உளவெனப் பட்ட வொன்பதிற்றெழுத்தே
அவைதாம்
கசதப வென்றா நமவ வென்றா
அகர உகரமோ டவையென மொழிப" (தொல்.எழுத். 170)

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா உரையில் கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என்று இளம்பூரணரும், 'கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை, இவை நிறை' என்று நச்சினார்க்கினியரும் கூறியிருத்தலையும் நோக்குக.

செரி - செரியகம் - சீரகம்

என்றுமாம். வடவர் மூலம் காட்டும் வகை. ஜீரக - ஜீரண; ஜ்ரு - ஜீரண, ஜ்ரு - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜ்ரு என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே (வ. மொ. வ.153).

அடுத்து, மூன்றாம் தொகுதியில் (செ - சௌ) 'செம்பியன்' என்ற சொல்லின் பொருள் விளக்கம் சிறப்புடையதாயிருக்கின்றது. அதைப்போலச் 'செஞ்சம்' என்ற சொல்லுக்கு அளிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கமும் சிறப்பாயுள்ளது. செஞ்சு - செம்மை, செவ்வை, நிறைவு, செஞ்சு - செஞ்சம்.

அடுத்து, 'த்'கர மடலத்தின் முதற் தொகுதியில் (த, தா) 'தமிழ்' என்ற சொல்லுக்குக் காட்டப்பெற்றிருக்கும் விளக்கம் விரிவானதாகவும் பொருத்தமானதாகவும் நுட்பமானதாகவும் அமைந்துள்ளது. அதைப்போலத் 'தா' என்னும் சொல்லுக்கும் அருமையான விரிவான விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது, 'தா' என்ற சொல் தந்தை என்பதனையும் குறிக்கும் என்று நிறுவியிருப்பது ஆராய்ச்சியாளரின் சான்றாண்மையைக் காட்டுகிறது.

அதே மடலத்தின் இரண்டாவது தொகுதியில் (தி-தூ) 'திறம்' என்ற சொல்லுக்கும், 'துடி' என்ற சொல்லுக்கும் தரப்பட்டுள்ள விளக்கங்கள் பயனுடையவையாகும்.

மூன்றாவது தொகுதியில் (தெ-தௌ), 'தெரு' என்னும் சொல்லின்கீழ், முடுக்கு சிறுசந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறுவீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி; சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடும் என்ற வகையில் பதிவு செய்துள்ளமை பாராட்டுக் குரியதாகும்.

அடுத்து, 'தொல்காப்பியர் காலம்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ள சான்றுகள் ஆய்வாளர்களுக்கு மிக்கப்பயனுடையனவாகும். இந்த ஆறு தொகுதிகளிலும் தேவையான சொற்களுக்குப் பொருத்தமான பட விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாயுள்ளது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டப்பணிகள் விரைந்து நடைபெற பலவகையிலும் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசு அறிவித்தவண்ணம் 6 தொகுதிகளை ஒருசேர அணியமாக்கி வெளியிடும் பணியைச் சிரமேற்கொண்டு செவ்விய முறையில் வெளிவர அரும்பணியாற்றிய தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசு சிறப்புச் செயலாளரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் **திட்டப்பொறுப்பு இயக்குநருமான திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பணியாளர்கள் மற்றும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது மனமுவந்த பாராட்டுகள். பாராட்டுகளைப் படிக்கற்களாகக் கொண்டு தொடர்ந்து நன்கு உழைத்து எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் அரசு விரும்பிய வண்ணம் வெளிக்கொணர வேண்டுமென விழைகிறேன்.

**சென்னை**

***23-10-2003***

**பு.ஏ. இராமையா**

**அரசு செயலாளர்**

**தா. சந்திரசேகரன்,** இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
சென்னை - 600 008

# பதிப்புரை

*வடமொழியும் இந்தியும் மற்றும் வடக்கிற்*
*படுமொழிகள் என்ற பலவும் - தடவியே*
*அந்தமிழே ஆதியெனுந்தேவ நேயர்தாம்*
*எந்தமிழர் எல்லார்க்கும் வேந்து*

என்று, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் ஆய்வைக் கண்டு, அவரை நெஞ்சாரப் பாராட்டினார் புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார்.

தமிழின் பழமையான நிலையை ஞால முதன்மொழி, திராவிடத்திற்குத் தாய், ஆரியத்திற்கு மூலம் என்னும் முப்பெரும் தன்மைகளோடு வகுத்துக் கொண்டு விளக்குவார் மொழிஞாயிறு பாவாணர் அவர்கள். இயல்பாகத் தோன்றிய இயன்மொழியாகிய தமிழுக்கு

*தொன்மை இயன்மை தூய்மை தாய்மை*
*முன்மை வியன்மை வளமை மறைமை*
*எண்மை இளமை இனிமை தனிமை*
*ஒண்மை இறைமை அம்மை செம்மை*

என்னும் பதினாறு தன்மைகளும் வாய்த்துள்ளன என ஏத்திப் புகழ்ந்தவர் மொழிஞாயிறு பாவாணர் அவர்கள்.

உலகின் பழம்பெரும் மொழிகளான இலத்தீனம், கிரேக்கம், வடமொழி, ஈப்புரு, சீனம் ஆகியவற்றைக் காட்டிலும் பழமைத் தன்மைகள் பலவற்றைக் கொண்டது தமிழ் என்று உலக அறிஞர்களும் ஒப்புக் கொள்கின்றனர். கால்டுவெல் என்னும் மேலைநாட்டறிஞர், ''தமிழ் திராவிடக் குடும்ப மொழிகளுள் முதலில் திருந்திய தன்மை எய்திய மொழி; இத்தமிழ்மொழி மிகச் சிறந்த சொல்வளம் நிறைந்த மொழி; இம்மொழி ஐயத்திற்கு இடமில்லாமல் வளப்பம் மிக்க பழமையான வடிவங்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது; இது திராவிடக் குடும்பத்திற்குத் தலைமை இடத்தில் வைத்தெண்ணும் தகுதிப்பாட்டினைக் கொண்டது'' என்று தம்முடைய ''திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்'' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ள திறம் எண்ணிப் பெருமைப்படத்தக்கதாம். மேலும், ''சில திராவிடக் குடும்ப மொழிகள் வட இந்தியாவில் இன்றளவும் பேச்சு மொழியாக இருப்பதையும், கிழக்கு பலுச்சித்தானத்தில் திராவிட இனமொழியான 'பிராகுவி' வழங்கி வருவதையும் கொண்டு, இந்தோ ஐரோப்பிய மொழி பேசுவோர் இந்தியாவிற்குள் வருமுன் கி.மு.2000 இறுதி வரை இந்தியா முழுமையும் திராவிட மொழி பேசப்பட்டு வந்தது. இதுவே இந்நாட்டிற்குறிய மொழியினமாகும் என்று மேனாட்டறிஞர் சார்லஸ் பிலிப் பிரௌன் கூறும் கருத்தை வலியுறுத்தும் பாவாணர், பழமையான இலக்கிய இலக்கணங்களைக் கொண்ட தமிழின் தன்மை, தென்னாட்டின் தென்கோடியில் தூய்மையுடன் வழங்குவதையும் அது வடக்கே செல்லச் செல்லத் திரிபுற்று வழங்குவதையும் வடமொழித் திரவிடம் (வடுகு), வடதிரவிடம் (பிராகிருதம்), கீழையாரியம், வேதமொழி, சமஸ்கிருதம் என்று

ஐந்நிலைப்படுவதையும் காட்டித் தமிழ் ஆரியத்திற்கு மூலம் என்னும் கோட்பாட்டினைத் தம் நூல்களில் நன்கு விளக்கிக் காட்டுகிறார்.

சொற்களுக்குரிய வேர் விளக்கம் காணுவதோடு மட்டும் நில்லாது, தமிழில் வழங்கும் அயற்சொற்களை இனம் பிரித்துக் காணும் முறையைக் காட்டிய சிறப்புக்குரியவரும் பாவாணரே. இது போன்றே அயன் மொழிச் சொற்களாகக் கருதப்பட்டு வந்தவற்றுள் பல தமிழ்ச் சொற்களாக இருப்பதன் உண்மையை உணர்த்திய மேன்மைக்கு உரியவரும் அவரே. பாவாணரது ஆய்வு நெறியைத் தழுவிச் சொற்களுக்கு வேர் விளக்கம் காட்டப்படுவதால் இயன்மொழிச் சொற்களின் மாண்பினை எடுத்துரைப்பதாக இப்பேரகரமுதலி திகழ்கிறது.

மொழியில் இருவகை மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஒன்று சிக்கனம், ஒப்புமை போன்ற அகக் காரணங்களால் நிகழ்வது. அரசியல் தாக்கம், குமுகாயப் புரட்சி, வேற்று நாட்டவர் படையெடுப்பு போன்ற புறக்காரணங்களால் நிகழ்வது மற்றொன்று. இவ்விருவகை மாற்றங்களையும் கண்டறிந்து விளக்குவதற்கு இவ்வகரமுதலி முயலுகிறது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் தற்போது மூன்றாம் மடலத்தின் முதற் பகுதி (ச-சா)யை வெளியிடுகிறது. இப்பகுதியில் அரிய சொல் விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

'சக்கரம்' என்ற சொல்லிற்கு 27 பொருள்களும், அப்பொருள்களுக்கேற்ற மேற்கோள்களும் ஏற்றவிடங்களில் கூறப்பட்டுள்ளன. வேர் விளக்கமும் பாவாணரின் வேர்ச்சொற் கட்டுரையிலிருந்து எடுத்தாளப் பெற்றுள்ளது. 'சக்கிலி' என்னும் ஓர் இனத்தைக் குறிக்கும் சொல் வரலாறு, பாவாணரின் ஒப்பியன் மொழி நூலிலிருந்து எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது.

சங்கின் வேர் வரலாறும், சங்கின் வகைகளும் இனிதே காட்டப்பெற்றுள. 'சட்டம்' என்ற சொல்லின் பொருள் விளக்கமும் வேர்விளக்கமும், 'சட்டை' என்ற சொல் வழக்கும் இந்த அகரமுதலிப் பகுதியில் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன. இவை மட்டுமன்றி அரிய வகை உயிரிகளின் பெயர்களும் (எ-டு: சவரிமான்). நிலைத் திணைப் பெயர்களும் (எ-டு: சாம்பல் மாலி), பாவாணர் படைத்தாண்ட சொற்களும் (எ-டு: ஆகமம் = தோன்றியம்) ஆங்காங்கே காட்டப்பெற்றுள.

பேரகரமுதலியின் எஞ்சிய மடலங்கள் யாவற்றையும் நிறைவாகவும், விரைவாகவும் கொண்டு வருதல் வேண்டுமென்னும் முனைப்பான செயலுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து எங்களை வழிநடாத்தும் **மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கு எங்கள் துறையின் சார்பாக நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்துறையின் சிந்தனையூக்கத்திற்கும் செயலாக்கத்திற்கும் தக்காங்கு நெறிகாட்டும் **மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செம்மலை** அவர்களுக்கும், ஒப்புரவு தரும் தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திரு. **பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,** அவர்களுக்கும் அகரமுதலி மேற்பார்வையாளராகப் பணியாற்றிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் மிகவும் நன்றிக் கடப் பாடுடையேன். மேலும், இந்த மூன்றாம் மடல முதற்பாகம் வெளிவருவதற்கு முன்னின்றுழைத்த அனைத்து அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் உளமாரப் பாராட்டுகிறேன்.

சென்னை
**15-10-2003**

**தா. சந்திரசேகரன்**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ச

**ச்** *c,* தமிழ் நெடுங்கணக்கில் மூன்றாம் மெய்யெழுத்து; the third consonant in Tamil, being the palatal voiceless stop.

**ச** *ca / ša,* 'ச்'கர மெய்யும் 'அ'கர உயிரும் சேர்ந்த உயிர்மெய் யெழுத்து; syllable formed by adding the short vowel 'a' to the consonant 'c' / 'š'.

*[ச் + அ]*

"சகரம் மொழி முதல் வாராதென்று கூறுவது தமிழுக்குச் சற்றும் பொருந்தாது. "அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே" *(தொல். எழுத்து. மொழி. 62)* என்னும் தொல்காப்பிய நூற்பா அடிக்கு 'அவை ஔ எனும் ஒன்றலங்கடையே' என்ற பாட வேறுபாடும் உள்ளது. சக்கட்டி, சக்கை, சகடு, சகதி, சங்கு, சட்டென, சட்டம், சட்டகம், சட்டி, சட்டை, சடசட, சடை, சடைவு, சண்டி, சண்டு, சண்டை, சணல், சதுப்பு, சப்பட்டை, சப்பென்று, சப்பாணி, சப்பு, சப்பை, சம்பு, சம்மட்டி, சமட்டு, சமம், சமழ், சமை, சரடு, சரள், சரி, சருகு, சருக்கரை, சரேல்என, சல்லடை, சல்லரி, சல்லி, சலசல, சலங்கை, சலி, சவ்வு, சவம், சவர், சவை, சழக்கு, சள்ளென, சள்ளை, சளக்கென, சளி, சளை, சற்று, சறுக்கு, சன்னம் முதலிய நூற்றுக்கும் மேற்பட்ட தனித்தமிழ்ச் சொற்கள் அடிப்படையானவும் தொன்றுதொட்டனவும் இன்றியமையாதனவும் வேரூன்றினவும் சேரி வழக்கினவுமாயிருக்க, அவற்றைப் பிற்காலத்தினவென்று கொள்ளுவது பெருந்தவறாகும். சக்கை, சட்டி, சண்டு, சண்டை, சதை, சப்பு, சவி, சற்று, சறுக்கு முதலிய சொற்கள் எத்துணை எளிமையும் இயல்புமானவை என்பது சொல்லாமலே விளங்கும். சண்டு, சருகு முதலிய பல சொற்கள் சகர முதலினவாய் இருந்திருத்தல் கூடுமெனினும் சக்கு, சடாரி, சடேர், சரட்டு, சலசல, சரேல், சவ்வு, சள், சளக்கு, சளார் முதலிய ஒலிக்குறிப்புச்சொற்களும் அவற்றினடிப் பிறந்தனவும் துவக்கந்தொட்டுச் சகர முதலனவாயே இருந்திருத்தல் வேண்டும். சாப்பிடு என்னும் உலகவழக்கெளிமைச் சொல் சப்பு என்னும் மூலத்தினின்று தோன்றியதாகும். சப்பு + இடு - சப்பிடு → சாப்பிடு. சுவை என்னும் சொல்லும் சவை என்பதன் திரிபாகவே தோன்றுகின்றது. செத்தான் என்னும் இறந்தகால வினைமுற்று பண்டைக்காலத்தில் சத்தான் என்றே இருந்திருத்தல் வேண்டும்.

ஒநோ: காண் → கண்டான். நோ→ நொந்தான். நெடில் முதலான வினைப் பகுதி இறந்தகால முற்றில் முதல் குறுகும்போது இனக்குறிலாய்க் குறுகுவதே மரபு; தெலுங்கிலும் சச்சினாடு (செத்தான்) சச்சிப் போயினாடு (செத்துப் போனான்) என்றே சொல்வர். மேலும் "முழுமுதல் அரணமும்" *(தொல். பொருள். புறத். 10),* "வருபகை பேணார் ஆரெயிலும்" *(தொல்.பொருள்.புறத். 12),* அமைத்துக்கொண்ட தொல்காப்பியர்காலத் தமிழர், சட்டி செய்யத் தெரியாதிருந்தனர் என்பது, பெருநகைக்கு இடமானதாகும். சட்டி என்பது, சமையலுக்கு இன்றியமையாததும் எளிநிலையானதும் மறுபெயரற்றதுமான கலவகை.

> "சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி
> சளிசகடு சட்டை சவளி - சவிசரடு
> சந்து சதங்கை சழக்காதி ஈரிடத்தும்
> வந்தனவாற் சம்முதலும் வை"

என்பது நன்னூல் மயிலைநாதருரை மேற்கோள்." *(தொல். எழுத்து. மொழிமரபு. பாவாணர் அடிக்குறிப்பு).*

மொழிமுதல் சகரம் மறைவது, பலசொற்களில் உண்டென்று, இற்றை மொழியியலாளர் கருதுகின்றனர். அவ்வடிப்படையிலேயே உப்பு, ஏர் என்னும் சொற்கள் சுப்பு, சேர் என்னும் சொற்களினின்று உருவாகின எனக் கருதுகின்றனர். ஆயினும், அவை → சவை

போன்ற சொற்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது சகரச்சேர்ப்பு உண்டென்று கூறுவது பொருத்தமுறும். அமைதல் = பொருந்துதல், கூடுதல், நிலைதல். அவை = கூட்டம். அவை → சவை. ஒ.நோ.: அமை → சமை.

இவ்வாறே ஏமம் → சேமம். ஆலை → சாலை, ஏணி → சேணி, ஊசி → சூசி, ஆயிரம் → சாவிரம் (கன்னடம்) போன்றன சகரச் சேர்ப்புடன் கூடித், தமிழிலும் தமிழ் இனமொழிகளிலும் வழக்கூன்றியுள்ளன. இவை வடமொழியில் முறையே kṣēma, šālā, šrēṇi, šūci, šahasra எனத் திரிந்துள்ளன.

ஆவம் (வில் நாண்) → Skt. cāpa (வில்); Pkt. cāv.

அரண், அரணம் (காப்பு, கோட்டை) → Skt. šaraṇa (புகலிடம்)

ஆலை, சாலை → Skt., Pkt. sālā

ஐயவி (வெண்சிறுகடுகு) → Skt. sarspa

இவ்வடிப்படையிலேயே உப்பு, ஏர் என்பன முறையே சுப்பு, சேர் என மாற்றம் பெற்றுள்ளன எனக் குறித்தல் பொருத்தமுடையதாம்.

"ஊசி என்னும் சொல் தமிழ்ச் சொல் என்பது அதன் பொருட்காரணத்தால் மட்டுமன்றி, ஊசிக்கண் (சிறுகண்), ஊசிக்களா (முள்ளுக் களா), ஊசிக்காது (நுணித்துக் கேட்குஞ்செவி), ஊசிக்காய், ஊசிக்காரர், ஊசிச்சம்பா, ஊசித் தூற்றல், ஊசிப்பாலை, ஊசிப்புழு, ஊசி மல்லிகை, ஊசிமிளகாய், ஊசி முல்லை, ஊசிவேர், குத்தூசி, துன்னூசி, தையலூசி, முதலிய பெயர் வழக்குகளாலும் அறியப்படும். மேலும் வடமொழியிலுள்ள சூசி என்னுஞ் சொல் siv (to sew) என்னும் வேரினின்று பிறந்ததாகக் காட்டப்படுவது. ஊசி என்னும் தென் சொல்லோ குத்துவது என்று பொருள் படும் உள் என்னும் வேரினின்று உள்→உளி→ உசி→ஊசி என ஒழுங்காகத் திரிந்திருப்பது" (முதா121) என்று சகரச்சேர்ப்பிற்குப் பாவாணர் காட்டும். எடுத்துக்காட்டு, தெளிவாய் இருத்தலைக் காண்க.

இற்றை மொழியியலாளர்கள் முந்து திரவிடத்தில், இடையண்ண அடைப்பொலி சகரத்திற்கும் (c) முன்னண்ண உரசொலி சகரத்திற்கும் (š) தனித்தனியான ஒலியன் இடம் கொடுக்கவேண்டியது இல்லை என்கின்றனர். இதற்கு இனமொழி இனச் சொற்களில் ஒருமொழியில் முறையாக இவற்றுள் ஒன்று ஒலியனாய் இருக்க மற்றொன்றில் இன்னொன்று இருக்கும் நிலையைக் காட்டுவர். முந்துதிரவிட (பழந் தமிழ்) இடையண்ண அடைப்பொலிச் சகரம் (c), இனமொழிகளில் முன்னண்ண உரசொலி (š), பின்னண்ண அடைப்பொலி (k), பல் அடைப்பொலி (t), பின்னண்ண உரசொலி (h) என மாறியிருக்கும் தன்மையைக் காட்டுவர்.

பழந்தமிழ் மொழிமுதல் சகரம் தமிழிலும் அதன் இனமொழிகளிலும் பல்வேறு மாற்றங்களைப் பெற்றுள்ளது. குறிப்பாக மொழி முதலிலும் மொழியிடையிலும் உயிருடன் கூடி வரும்பொழுது உரசொலி (sibilant)யாக ஒலிக்கப்படுவது பரவலாக உள்ளது. எனினும் இம் மாற்றம் பொருள் வேறுபாடு எதனையும் உருவாக்காததால் நெடுங்கணக்கில் உரசொலி சகரம் என்று தனியான ஒன்றைக் கொள்ள வேண்டிய தேவை ஏற்படவில்லை. தமிழின் இன மொழிகளான மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளின் நெடுங் கணக்குகள் வடமொழி இலக்கணத்தைப் பின்பற்றியமைத்தனவாக இருப்பதால் உரசொலிச் சகரத்திற்குத் தனியான எழுத்தைக் கொண்டுள்ளன. எனினும் வெடிப்பொலிச் சகரத்திற்கும் உரசொலிச் சகரத்திற்கும் வேறுபாடு இல்லாமல் பயன்படுத்துவது அங்கும் பெரும்பான்மை. எ-டு: தெ. சூடு, சூடு (பார்.); க. சளி, சளி (குளிர்).

**சஃகுல்லி** *šakkulli,* பெ. (n.) சிற்றுண்டி வகை. (பிங்.); a kind of pastry or cake.

*[அக்குள்ளி → அஃகுல்லி → சஃகுல்லி]*

சஃகுல்லி → Skt. šaṣkulī

**சக்கசேனாபதி** *šakka-šēṉābadi* பெ. (n.) **இலங்கை மன்னன் ஐந்தாம் காசிபனின் படைத் தலைவன்;** army chief of Ceylon king Kāsibaṉ V.

*[சக்கை → சக்க + சேனாதிபதி. சேனை அதிபதி → சேனாதிபதி]*

கி.பி.919இல் வெள்ளூர் எனும் ஊரில் நடந்த போரில் இவன் தலைமையில் இலங்கைப் படையும் மூன்றாம் இராசசிம்மனின் பாண்டியப் படையும் சேர்ந்து சோழமன்னன் முதல் பராந்தகனிடம் போர்செய்து தோல்வி அடைந்தன *(பிற். சோழ. வர. பக். 35).*

**சக்கட்டம்**[1] *šakkaṭṭam* பெ. (n.) *1.* **ஏளனம் (பரிகாசம்)** (வின்.); scoff, mockery, sport; *2.* **கண்டனம் (நிந்தை)** (யாழ். அக.); censure.

க. சக்கந்த, சக்குளிசு, சக்குலிசு (மகிழ்வி); து. சக்கந்த; தெ. சக்கலிம்பு; E. kickle.

**சக்கட்டம்**[2] *šakkaṭṭam,* பெ. (n.) மயிர் (யாழ். அக.); hair.

*[சள் → சள்ளு. சள்ளுதல் = சிக்கு விழுதல். சள் + கட்டம் → சட்கட்டம் → சக்கட்டம். சிக்கு விழும் தன்மையது]*

**சக்கட்டிசக்கட்டியெனல்** *šakkaṭṭi-šakkaṭṭi-y-enal,* பெ. (n.) மென்பொருள்கள் விழும் ஒலிக்குறிப்பு; onom. expr. of repeated thud (செ.அக.).

*[சக்கட்டி + சக்கட்டி + எனல்]*

**சக்கட்டை** *šakkaṭṭai,* பெ. (n.) *1.* திறமையின்மை (யாழ்ப்.); badness, unfitness, inferiority, incompetency. *2.* இளப்பம்; degradation. *3.* மடையன்; block head, dolt. அவன் ஒரு சக்கட்டை.

*[சத்தற்றகட்டை → சக்கட்டை]*

சக்கட்டை → Skt. sakaṭa

**சக்கட்டையாள்** *šakkaṭṭai-y-āḷ,* பெ. (n.) வலுவில்லாதவன் (யாழ்ப்.); fragile, weak person.

*[சக்கட்டை + ஆள்]*

**சக்கடா** *šakkaḍā,* பெ. (n.) சக்கடாவண்டி பார்க்க; see *šakkaḍā-vaṇḍi.*

*[சக்கு → சக்கடம் → சக்கடா (வ.வ. 134)]*

சகடம்[1] பார்க்க

**சக்கடாவண்டி** *šakkaḍā-vaṇḍi,* பெ. (n.) கட்டை வண்டி (இ.வ.); springless bullock-cart.

ம. சக்கடவண்டி, சக்கடாவண்டி; தெ. செகடாபண்டி

*[சகடம் → சக்கடம் → சக்கடா + வண்டி]*

சக்கரத்தின் பெயர் அதை உறுப்பாகக் கொண்ட ஊர்திக்கு ஆகி வந்தது சினையாகுபெயர்.

ஒ.நோ: வண்டி = சக்கரம், சக்கரத்தையுடைய ஊர்தி. இன்றும் கமலைவண்டி, வண்டி யுருட்டுதல் என்னும் வழக்குகளை நோக்குக.

சக்கரத்தைக் குறிக்கும் கால் என்னுஞ் சொல் வண்டியையும் குறித்தல் காண்க. 'கலத்தினுங் காலினுந் தருவன ரீட்ட' (சிலப். 2:7).



சக்கடாவண்டி

**சக்கடி** *šakkaḍi,* பெ. (n.) சக்கணி பார்க்க; see *šakkaṇi* "இயங்கொட்டச் சக்கடி கற்று" (திருப்பு.417).

*[சக்கணி → சக்கடி]*

**சக்கணி** *šakkaṇi,* பெ. (n.) கூத்துவகை; a kind of dance. 'சக்கணியி லோர்தருவுஞ் சாதித்து' (பணவிடு. 186).

தெ. சக்கிணி

*[அக்குளு → அக்குளி → சக்குளி → சக்கணி (மகிழ்ச்சி)]*

**சக்கத்து** *šakkattu,* பெ. (n.) நடுவில் உயர்ந்தும் இருபுறமும் சரிந்தும் சிராய்ப்புப் போன்ற தோற்றமுடன் உருவான முத்து; a kind of pearl which has bulging shape at centre and slope in either sides.

*[அங்கு → சங்கு → சங்கத்து → சக்கத்து]*

**சக்கதேவி** *šakka-dēvi,* பெ. (n.) சக்கம்மாள் பார்க்க; see *šakkammāḷ.* 'கருத்து நன்றாய்ப் பேசுது சக்கதேவி' (குற்றா.குற.71).

*[இயக்கி → இசக்கி → சக்கி + தேவி. இசக்கிதேவி → சக்கிதேவி. → சக்கதேவி. இது மக்கள் வழக்கில் ஜக்கம்மாள் என்றும் ஜக்கதேவி என்றும் திரிந்தது]*

**சக்கந்தம்**[1] *šakkandam,* பெ. (n.) சக்கட்டம்[1] பார்க்க; see *šakkaṭṭam*[1].

க., து. சக்கந்த

*[சக்கட்டம் → சக்கந்தம்]*

**சக்கந்தம்**[2] *šakkandam,* பெ. (n.) மகிழ்ச்சி (யாழ். அக.); joy.

க., து. சக்கந்த

**சக்கந்து** *śakkandu,* பெ. (n.) சக்கந்தம் பார்க்க; see *śakkandam.*

*[சக்கந்தம் → சக்கந்து]*

**சக்கப்பிரதமன்** *śakka-p-piradaman,* பெ. (n.) பலாப்பழங்கொண்டு செய்யப்படும் கன்னலமுது (பாயச) வகை (நாஞ்.); a kind of sweet milk-porridge prepared from jack-fruit (செ. அக.).

ம. சக்கப்ரதமன்; து. சங்குளி, சங்குலி, தங்குளி

*[சக்கை → சக்க(ம்) + பிரதமன். சக்க = பலாப்பழம். பிரதமன் = கன்னலமுது (பாயச) வகை]*

Skt. pradhama → த. பிரதமன்

**சக்கம்மா** *śakkammā,* பெ. (n.) சக்கம்மாள் பார்க்க; see *śakkammāḷ.*

*[சக்கம்மாள் → சக்கம்மா]*

**சக்கம்மாள்** *śakkammāḷ,* பெ. (n.) 1. ஒரு பெண் தேவதை; a demoness. 2. பெண்பாற்பெயர்; female proper name (செ.அக.).

ம. சக்கி; தெ. சக்கம்; பட. சக்கி (பெண்பாற் பெயர்)

*[இயக்கி → இசக்கி → சக்கி + அம்மாள் – சக்கியம்மாள் → சக்கம்மாள்]*

**சக்கரக்கல்** *śakkara-k-kal,* பெ. (n.) திருமால் கோயிலுக்குக் கொடையாக விடப்பட்ட நிலங்களின் எல்லை குறிக்கும் திருவாழிக்கல்; boundary or demarcation - stone for lands granted to Tirumāl (Viṣṇu) temples (செ.அக.).

*[சக்கரம் + கல். சக்கரம் = வட்டம், வளைவு, எல்லை]*

**சக்கரக்கலப்பை** *śakkara-k-kalappai,* பெ. (n.) சேற்றைக் கூழாக்கும் கருவி; a kind of instrument for ploughing.

*[சக்கரம் + கலப்பை]*

**சக்கரக்கவி** *śakkara-k-kavi,* பெ. (n.) வண்டிச் சக்கரம் போன்ற சித்திரத்தில் அமையுமாறு பாடும் மிறைப்பாடல்; a fantastic metrical composition in the diagrammatic form of the cart-wheel.

*[சக்கரம் + கவி]*

சக்கரப்பா எனில் தமிழாம் சக்கரக்கவி நாலாரைக் கவி, ஆறாரைக் கவி, எண்ணாரைக் கவி என்றாற்போல் பல வகைப்படும்.

**சக்கரக்கள்ளன்** *śakkara-k-kaḷḷan,* பெ. (n.) கஞ்சன் (கருமி) (நாஞ்.); close-fisted person, miser (செ.அக.).

*[சக்கரம் = ஒரு வகைச் சிறு காசு. சக்கரக்கள்ளன் = சிறுகாசும் கொடாதவன்]*

**சக்கரக்காரன்** *śakkara-k-kāran,* பெ. (n.) செல்வன் (இ.வ.); rich man (செ.அக.).

ம. சக்கரக்காரன்

*[சக்கரம் = காசு. சக்கரம் + காரன். காரன்= உடையானைக் குறிக்கும் ஈறு]*

**சக்கரக்குளிகை** *śakkara-k-kuḷigai,* பெ. (n.) காசு (நாணய) வகை; a coin (M.E.R. 1 of 1925) (செ.அக.).

*[சக்கரம் + குளிகை. குள் → குளம் → குளகம் = வெல்ல உருண்டை. குளியம் = உருண்டை. குளிகை = உருண்டை மாத்திரை. இங்கு வட்டவடிவையே உணர்த்திற்றென்க]*

**சக்கரக்கூடம்** *śakkara-k-kūḍam,* பெ. (n.) சக்கரத்தின் நடுவில் ஆரக்கால்கள் ஒன்றுசேரும் வட்டவடிவமான பாகம்; the axis of a wheel.

ம. சக்கரக்கூடம்

*[சக்கரம் + கூடம்]*



சக்கரக்கூடம்

# சக்கரக் கவி

## நாலாரைக் கவி



## ஆறாரைக் கவி



## எண்ணாரைக் கவி



**சக்கரக்கொடம்** *šakkara-k-koḍam,* பெ. (n.) சக்கரக்கூடம் பார்க்க; see *šakkara-k-kūḍam.*

ம. சக்ரகூடம்

*[சக்கரம் + கொடம். குள் → குட → குடம். குடம் → கொடம்]*

**சக்கரக்கொடி** *šakkara-k-koḍi,* பெ. (n.) பீர்க்கு; sponge-gourd - Luffa acutangularis *(சா.அக.).*

*[சக்கரம் + கொடி. கொள் → (கொண்) → கொடு = வளைவு, வளைவானது. கொடு → கொடி = வளைந்து படரும் நிலைத்திணை]*

**சக்கரக்கோட்டம்**[1] *šakkara-k-kōṭṭam,* பெ. (n.) முதலாங் குலோத்துங்கச் சோழனால் வெல்லப்பட்டதும் நடுவண் (மத்தியப் பிரதேச) மாநிலத்தில் உள்ளதுமான ஒரு நாடு (இராச்சியம்); an ancient state in the central provinces conquered by Kulōttuṅga Cōḻa I. "விருதராச பயங்கரன் ........................ வென்ற சக்கரக் கோட்டத்திடை" *(கலிங். 134).*

*[சக்கரம் + கோட்டம், கோடு = வளைவு, எல்லை. கோடு → கோட்டம் = பெரும் எல்லைப் பரப்பைக் கொண்டது]*

**சக்கரக்கோட்டம்**[2] *šakkara-k-kōṭṭam,* பெ. (n.) ஆந்திர மாநிலம் விசாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள, நடுவண் (மத்திய) மாவட்டத்தைச் சேர்ந்த இராசபுரத்திற்கு எட்டுக்கல் தொலைவில் உள்ளதும் முதல் இராசேந்திரனால் வெல்லப்பட்டதுமான ஊர்; an ancient state with central provinces conquered by Rajendran. "விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும்" *(முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி).*

*[சக்கரம் + கோட்டம்; கோடு → கோடுதல் = வளைதல். கோட்டம், வளைவு, மதிலைச் சூழ்ந்த ஒளி, வட்டம், மதில் சூழ்ந்த கோயில், குளக்கரை, நிலப்பிரிவு]*

**சக்கரகாரகம்** *šakkara-kāragam,* பெ. (n.) புலி தொடக்கி (மலை.); tiger-stopper.

**சக்கரகுச்சம்** *šakkara-kuccam,* பெ. (n.) செயலை (அசோகு) மரம்; asoka tree - Jonesia asoka *(சா.அக.).*

மறுவ. பிண்டி.

*[சக்கரம் + குச்சம். குச்சம் = கொத்து. சுற்றிலும் கொத்துக் கொத்தாக இலைகள் உள்ள மரம்]*

**சக்கரகுலியம்** *šakkara-kuliyam,* பெ. (n.) மலை நாட்டுப்பூடு வகை; a kind of fern found in hilly tracts *(சா.அக.).*

*[சக்கரம் + குலியம்]*

**சக்கரச்சக்கரம்** *šakkara-c-cakkaram,* பெ. (n.) சித்திரப்பா வகை (யாப். வி. 497); a variety of metrical composition (pros.).

*[சக்கரம் + சக்கரம்]*

**சக்கரச்சுவாசம்** *šakkara-c-cuvāšam,* பெ. (n.) சக்கரவுயிர்ப்பு பார்க்க; see *šakkara-v-uyirppu.*

ம. சக்ரசுவாசம்

*[சக்கரம் + சுவாசம்]*

Skt. švāsa → த. சுவாசம்

**சக்கரச்சுழி** *šakkara-c-culi,* பெ. (n.) நீர்ச்சுழி; whirlpool.

ம. சக்ரச்சுழி

*[சக்கரம் + சுழி. சுள் → சுளி → சுழி (வி.)= வளை, உருள், சுற்று. சுழி (பெ.) = சுற்றும் பகுதி]*

**சக்கரச்செல்வம்** *šakkara-c-celvam,* பெ. (n.) பெருஞ்செல்வம்; great wealth and prosperity, as of Indra "சக்கரச் செல்வம் பெறினும்" *(நாலடி. 346).*

*[சக்கரம் + செல்வம். சக்கரம் = ஆணைச் சக்கரம். சக்கரச்செல்வம் = அரசுச்செல்வம்]*

**சக்கரசரம்** *šakkara-šaram,* பெ. (n.) சருக்கரச்சரம் பார்க்க; see *šarukkarā-c-caram.*

*[சருக்கரம் → சக்கரம். சக்கரம் + சரம்]*

**சக்கரஞ்சுற்று-தல்** *šakkarañ-suṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* சுழலுதல் (இ.வ.); to revolve, rotate, as a wheel. *2.* சுற்றி விளையாடுதல் (வின்.); to whirl around in play. *3.* பெரிதுந் துன்பப்படுதல்; to be in sore distress. கையிற் பணமில்லாமல் சக்கரஞ் சுற்றுகிறான் *(நாஞ்.).*

*[சக்கரம் + சுற்று. சக்கரம் போல் சுற்றுதல். துன்பத்தில் துவளும் நிலை சக்கரஞ் சுற்றலாயிற்று. ஒ.நோ: ஆலாய்ப் பறத்தல்]*

**சக்கரணங்கால்** *šakkaranaṅgāl*, பெ. (n.) *அட்டங்காலிடுகை;* act of sitting flat and cross-legged.

க. சக்களபக்கள, சக்கலுபக்கலு, சக்கள மக்கள, சக்களமுக்கள, சக்கமெளுக்கமெ; படை. சக்கரமள்ளு

*[சக்கரம் + அணை + கால்]*

**சக்கரத்தாபனம்** *šakkara-t-tābaṉam*, பெ. (n.) *சக்கர நிறுவு-தல் பார்க்க;* see *šakkara-niṟuvu-*.

*[சக்கரம் + தாபனம்]*

Skt. šthāpaṉa → த. தாபனம்

**சக்கரத்தாழ்வார்** *šakkarattāḻvār*, பெ. (n.) *திருமாலின் சக்கரமாகக் கருதப்படும் ஆழ்வார்;* Viṣṇu's discus, considered a deity.

*[சக்கரம் + அத்து + ஆழ்வார். 'அத்து' சாரியை]*

**சக்கரத்தீவட்டி** *šakkara-t-tīvaṭṭi*, பெ. (n.) *வட்டத்தீவட்டி;* a kind of round torch *(செஅக.)*.

*[சக்கரம் + தீவட்டி]*

**சக்கரத்துன்பம்** *šakkara-t-tuṉbam*, பெ. (n.) ஒரு வகைத் துன்புறுத்தல் (சித்திரவதை); a mode of torture.

*[சக்கரம் + துன்பம்]*

**சக்கரத்தேமல்** *šakkara-t-tēmal*, பெ. (n.) நல்லூழைக் (அதிர்ஷ்டம்) குறிப்பதாகக் கருதப்படும் வட்டத் தேமல் (இ.வ.); round whitish spots on the body believed to indicate fortune.

ம. சக்ரப்பொரிகண்ணி

*[சக்கரம் + தேமல்]*

**சக்கரத்தேர்** *šakkara-t-tēr*, பெ. (n.) இழுப்புத் தேர் (வின்.); a wheeled car.

*[சக்கரம் + தேர். தில் → திர் → (திரி) → தேர். தோளில் வைத்துத் தூக்கிச் செல்லும் பல்லக்குக்கு அடுத்த நிலை வளர்ச்சியே சக்கரம் அமைந்த தேர்]*

**சக்கரதரன்** *šakkaradaraṉ*, பெ. (n.) *1.* திருமால்; Viṣṇu, as discus bearer. *2.* பாம்பு (யாழ்.அக.); snake, as being hooded.

*[சக்கரம் + தரன். சக்கரப் படையை யுடையவன் என்னும் பொருளில் திருமால் சக்கரதரன் என அழைக்கப் பட்டார். பாம்பின் படம் சக்கரம்போல் இருப்பதால் அதுவும் சக்கரதரன் எனப்பட்டது]*

**சக்கரதாரி** *šakkaradāri*, பெ. (n.) சக்கரதரன் பார்க்க; see *šakkaradaraṉ*.

*[சக்கரம் + தாரி]*

Skt. dhārin → தாரி

**சக்கரதானம்** *šakkara-tāṉam*, பெ. (n.) முயன்று பாடுந் தாளவகை; a difficult type of tāṉam.

*[சக்கரம் + தானம்]*

**சக்கரதானர்** *šakkara-tāṉar*, பெ. (n.) சிவவுருவங்களுளொன்று (காஞ்சிப்பு. சிவபுண். 23); a manifestation of Śivaṉ (śaiva).

*[சக்கரம் + தானர்]*

**சக்கரதிசை** *šakkaradišai*, பெ. (n.) வாணாள் முடிவறியுந் திசைகளுளொன்று; the direction which gives the indication of one's end of life.

*[சக்கரம் + திசை. ஒருவரது வாணாள் ஒருவட்டமாக நிறைவுறும் எனக் கருதப் பட்டதன் அடிப்படையே சக்கரம் வாணாளைக் குறித்ததென்க.]*

**சக்கரதீர்த்தம்** *šakkara-tīrttam*, பெ. (n.) நூற்றெட்டுத் திருப்பதிகளுளொன்றாகிய திருவெள்ளறையென்னுந் தலத்தில் உள்ள நன்னீர்; the sacred water of Tiruveḷḷarai, one of the 108 sacred temples.

*[சக்கரம் + தீர்த்தம்]*

Skt. tīrtha → த. தீர்த்தம்

**சக்கரதேவன்** *šakkara-dēvaṉ*, பெ. (n.) கலிங்கதேச மன்னனாகிய சுருதாயுவினது இரண்டாம் புதல்வன்; the second son of Surudayu king of Kalinga country.

*[சக்கர(ம்) + தேவன். தேய் → தேய்வு → தேவு = தெய்வம், தெய்வத்தன்மை. தேவு → தேவன் = கடவுள், அரசன், இயற்பெயர்]*

த. தேவன் → Skt. dēva

**சக்கரந்தறி-த்தல்** *šakkarantaṟi-, 4.* செ.கு.வி. (v.i.) இயந்திரமாட்டல்; to rotate a mill.

*[சக்கரம் + தறி-,]*

**சக்கரநாற்காலி** *šakkara-nāṟkāli,* பெ. (n.) நடக்க முடியாதோர் இடம்விட்டு இடம் செல்லப் பயன்படுத்தும் சக்கரங்கள் பொருத்தப்பட்ட நாற்காலி; wheelchair.

*[சக்கரம் + நாற்காலி]*



சக்கரநாற்காலி

**சக்கரநிறுவுதல்** *šakkara-niṟuvudal,* பெ. (n.) *1.* பிறர் செய்த தீங்கைப் போக்க மந்திரமமைந்த சக்கரத்தைப் பதித்து வைக்கை; ceremonial setting of a plate containing mystical diagrams and letters for counteracting evil. *2.* கோயில் கருவறையின் (மூலஸ்தானத்தின்)கீழ் மந்திரத் தகட்டைப் பதித்து வைக்கை; ceremonial setting of a plate containing a mystic diagram under the 'mūlavar'.

*[சக்கரம் + நிறுவுதல்]*

**சக்கரநோவு** *šakkara-nōvu,* பெ. (n.) ஒரு வகைக் கடுநோவு (சித்திரவதை); a mode of torture.

*[சக்கரம் + நோவு. சக்கரம் சுழலுவது போல் தொடர்ந்து ஏற்படும் நோவு சக்கரநோவு]*

**சக்கரப்பட்டி** *šakkara-p-paṭṭi,* பெ. (n.) விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் வட்டத்திலுள்ள ஊர்; a village in Viḻupuram district Tiṇḍivaṉam taluk. "ஆழ்வார்தேவர்தானம் சக்கரப்பட்டி செறுவுக்கும் வடக்கும்" *(தெ. க. தொ. 7, கல். 853 - 9).*

*[சக்கரம் + பட்டி. பட்டுதல் = தட்டுதல். பட்டு → பட்டி = பட்டை, மூங்கிற்பிளாச்சு, அதனாலமைந்த தொழு, தொழு இருந்த ஊர்]*

**சக்கரப்பட்டித்தடி** *šakkara-p-paṭṭi-t-taḍi,* பெ. (n.) நீட்டல் அளவுகோல்; linear measure scale. "திருவாபரணங்களுஞ் செய்வார்களாகவு(ம்) சக்கரப்பட்டி தடி இரண்டும்" *(தெ. க. தொ. 7, கல். 392/3, பக். 251)*

*[சக்கரப்பட்டி + தடி. தண்டு → தண்டி → தடி]*

**சக்கரப்பட்டை** *šakkara-p-paṭṭai,* பெ. (n.) சக்கரத்தில் வெளிப்புற எஃகு வளையம்; steel tyre of as cart-wheel.

*[சருக்கரம் → சக்கரம் + பட்டை]*

**சக்கரப்படை** *šakkara-p-paḍai,* பெ. (n.) சக்கராயுதம் பார்க்க; see *šakkarāyudam.*

*[சக்கரம் + படை]*

**சக்கரப்பணம்** *šakkara-p-paṇam,* பெ. (n.) காசு வகை; a coin (M.E.R. 261 of 1929-30).

*[சக்கரம் + பணம். சக்கரம் = வட்டவடிவு. படம் → பணம் = தகடான காசு. சக்கரப் பணம் = வட்டவடிவுடைய நாணயம்]*

**சக்கரப்பரிபாலனம்** *šakkara-paripālaṉam,* பெ. (n.) அரசாட்சி செய்கை; governing, ruling, reigning.

*[சக்கரம் + பரிபாலனம்]*

Skt. paripālana → த. பரிபாலனம்

**சக்கரப்பள்ளி** *šakkara-p-paḷḷi,* பெ. (n.) தஞ்சை மாவட்ட ஊர்ப் பெயர்; a village in Tañjāvūr district.

*[சக்கரம் + பள்ளி. பள் = பள்ளம், படுக்கை. பள் = படு. பள் → பள்ளி = படுக்கை அல்லது அறை, படுக்கும் அறையுள்ள வீடு, கோயில், அரண்மனை, ஊர்]*

**சக்கரப்பாடியார்** *šakkara-p-pāḍiyār,* பெ. (n.) செக்கார்; oilmen. 'சக்கரப்பாடியார் குலமெய்த்தவ மாயுள்ளார்' *(திருத்.பு.50).*

*[சக்கு → செக்கு → செக்கார் + பாடி + ஆர். செக்கரப்பாடியார் → சக்கரப்பாடியார்]*

**சக்கரப்பாத்தி** *šakkara-p-pātti,* பெ. (n.) *சக்கரங்கள் சென்றதால் பாதையில் உருவான சால்;* wheel track *(சேரநா.)*

*ம. சக்கரப்பாத்தி*

*[சக்கரம் + பாத்தி]*

**சக்கரப்பாதை** *šakkara-p-pādai,* பெ. (n.) *வண்டிப்பாதை, வண்டித்தடம்;* cart road.

*[சக்கரம் + பாதை. பதி → பதம் → பாதை]*

**சக்கரப்பிரசங்கம்** *šakkara-pirasangam,* பெ. (n.) *ஏரணக் குற்றங்களுளொன்றான சக்கிரகம் (நீலகேசி, 391, உரை);* a defect in argumentation.

*[சக்கரகம் + பிரசங்கம். சக்கரம் = வளைவு, சக்கிரகம் = வளைய வளையப் பேசுகை]*

**சக்கரப்புள்** *šakkarappuḷ,* பெ. (n.) சகோரம்[1] பார்க்க; see *šagōram*[1].

*[சக்கரம் + புள்]*

**சக்கரப்புளி** *šakkara-p-puḷi,* பெ. (n.) *இனிப்புப் புளி;* sweet tamarind - Tamaridus Indicus *(சா.அக.).*

*[சருக்கரை → சக்கரை + புளி]*

**சக்கரப்பொறி** *šakkara-p-poṟi,* பெ. (n.) *திருமாலியத்தைப் பெறுதற்கு அடையாளமாக அருட்குரவரால் வலத்தோளில் பொறிக்கப் படும் சக்கர முத்திரை;* branded mark of the discus upon the right shoulder of a person, made by his preceptor at the time of his initiation into vaiṣṇavism. 'உன் சக்கரப்பொறி யொற்றிக் கொண்டு' *(திவ். பெரியாழ். 5, 4, 1).*

*[சக்கரம் + பொறி]*

**சக்கரபதி**[1] *šakkara-padi,* பெ. (n.) *தகரை (இராட்.);* foetid cassia.

*மறுவ. மசகெண்ணெய்*

*[சக்கரம் + பதி]*

*சக்கரம்*[4] *பார்க்க*

**சக்கரபதி**[2] *šakkara-padi,* பெ. (n.) *அரசன்;* the lord of a dominion, a king.

*ம. சக்ரபதி*

*[சக்கரம் + பதி]*

**சக்கரபந்தம்** *šakkara-bandam,* பெ. (n.) *சக்கரக்கவி பார்க்க;* see *šakkara-k-kavi.*

*[சக்கரம் + பந்தம்]*

Skt. bandha → த. பந்தம்

**சக்கரபாணம்** *šakkara-bāṇam,* பெ. (n.) *சக்கரவாணம் பார்க்க;* see *šakkara-vāṇam.*

*[சக்கரம் + பாணம். வாணம் → பாணம்]*

**சக்கரபாணி**[1] *šakkara-pāṇi,* பெ. (n.) திருமால் *(சக்கரப்படையைக் கையில் உடையவன்);* Tirumāl (Viṣṇu), as holding the discus in His hand. சாமவேத கீதனாய சக்ரபாணி யல்லையே *(திவ். திருச்சந். 14).*

*[சக்கரம் + பாணி. பண் = பண்ணுதல். பண் → பாண் → பாணி = செயல் செய்கின்ற உறுப்பு. பண்ணுவது பாணி. ஒ.நோ. பெண் → பேண். செய்வது செய். செய்(தெ.) = கை. செய்(கை) → கை.]*

த. பாணி → Skt. pāṇi.

**சக்கரபாணி**[2] *šakkara-pāṇi,* பெ. (n.) *காளி;* goddess Durga.

*[சக்கரம் + பாணி]*

த. பாணி → Skt. pāṇi

**சக்கரபாணிஆச்சார்** *šakkara-pāṇi-āccār,* பெ. (n.) *செல்லாண்டியம்மன் சதகம் என்னும் நூலின் ஆசிரியர்;* author of šellāṇḍi-yammaṉ sadagam.

*[சக்கரபாணி + ஆச்சார். ஆச்சார் = ஆசிரியர். இவர் கொங்கு நாட்டிலுள்ள ஊஞ்சலூரினர் (த. பு. அக.)]*

**சக்கரபாணிநல்லூர்** *šakkara-pāṇi-nallūr,* பெ. (n.) *ஆழ்வார் திருநகரிக்கு அருகிலிருந்த செவ்விருக்கை நாட்டிலமைந்த ஓரூர்;* a place name situated in Ševvirukkai nāḍu near Āḻvār Tirunagari. "செவ்விருக்கை நாட்டுச் சக்கரபாணி நல்லூர்" *(தெ. க. தொ. 26. கல். 492-5).*

*[சக்கரபாணி + நல்லூர்]*

**சக்கரபுட்பி** *šakkara-puṭpi,* பெ. (n.) குப்பைமேனி *(மலை.);* Indian acalypha.

*[சக்கரம் + புட்பி. புட்பம் → புட்பி. வட்டவடிவப் பூவைக் கொண்டது.]*

Skt. puṣpa → த. புட்பம்.

**சக்கரம்**[1] *šakkaram,* பெ. (n.) *1.* வட்டம் *(பிங்.);* circle. *2.* **உருளை** *(சூடா.);* wheel, as of a cart, car. *3.* ***குயவன் சக்கரம்;*** potter's wheel. *"சக்கரந்தான் கழற்றத்தகுங் குயத்தி" (சிவப்பிரபந். பிக்ஷாடன. 6).* *4.* ***சக்கரப்படை;*** discus, especially of Viṣṇu; missile weapon, sharp edged and circular. *"சக்கரக்கை மன்னுயிர் முதல்வன்" (மணிமே. 13:57).* *5.* ***ஆட்சிச் சக்கரம்;*** symbol of sovereignity. *"வழுக்கில் சக்கரம் வலவயி னுய்க்கும்" (பெருங். வத்தவ. 5, 106).* *6.* **கோள் நிலைச் சக்கரம்;** chart showing the position of planets at one's birth; astrological diagram. *7.* **மந்திர வெழுத்தடைக்கும் தகடு;** engraved magic circles on amulets; mystical diagrams for counteracting evil influences. *'சக்கரஞ் சீர்த்தமிழ் விரகன்' (தேவா. 146. 12).* *8.* ***சக்கரக்கவி*** *(தண்டி. 94)* பார்க்க; see *šakkara-k-kavi.* *9.* ***சக்கரமாற்று*** *பார்க்க;* see *šakkara-māṟṟu.* *10.* ***சக்கரயூகம்*** *பார்க்க;* see *šakkara-yūgam.* *11.* **பழைய காசு வகை;** ancient silver coin formerly current in South India - $^1/_{16}$ gold pagoda. *"சால்பு திருவையாற்றுச் சக்கரமென்றும்" (பணவிடு. 14).* *12.* **அரையணா மதிப்புள்ளதாய் வழங்கும் மலையாளக் காசு வகை;** a coin in Travancore nearly equal to six pies. *13.* **ஒரு தண்டனைக் கருவி** *(வின்.);* turning pillory, wheel of torture. *14.* ***சக்கரவாகப்புள்*** *(சூடா.);* ruddy goose (*Anas cascara*). *15.* **அரைக்கும் பொறி** *(வின்.);* grind mill. *16.* **செக்கு;** oil mill. *"தயிலவினைத் தொழின் மரபிற் சக்கரபாடித் தெருவு" (பெரியபு. கலியனா. 5).* *17.* **நிலவுலகம்** *(பிங்.);* the earth. *18.* **மதில்** *(பிங்.);* fortress wall, compound wall. *19.* **கடல்** *(சூடா.);* sea. *20.* **மலை** *(சூடா.);* mountain. *21.* **பாம்பின் படம்;** hood. *22.* **பிறப்பு** *(சூடா.);* birth, transmigration of souls. *23.* **அறுபது ஆண்டு கொண்ட காலம்;** a cycle of 60 years. *24.* **பதக்கு** *(தைலவ. தைல. 14);* a measure of capacity. *25.* **பீர்க்கு** *பார்க்க;* see *pīrkku.* *26.* **அத்தி** *(மலை.);* fig, ficus. *27.* **வாணாள்;** life time.

ம. சக்ரம்; க. சக்ர; து. சக்ர; பட. சக்கர

*[சருக்கு → சருக்கரம் → சக்கரம் (வேக. 239).]*

சக்கரம் (ஆழி) → Skt. cakra

செக்கு வட்டமாயிருத்தலாலும் வட்டமாய் எள்ளாடுதலாலும் சக்கரம் எனப்பட்டது. செக்காரக் குடியைச் 'சக்கரப்பாடித் தெருவு' என்று பெரியபுராணம் கூறுதல் காண்க (வே.க. 114).

சுழிதல் = வளைதல், திருகுதல். சுழி → சழி. சழிதல் = ஒருபக்கஞ்சரிதல். சழி → சரி → சருவு. சருவுதல் = சாய்தல். சரி = வளையல் வகை. சருவு = சருக்கு. சருக்குதல் = சாய்தல், வளைதல், சறுக்குதல். சருக்கு → சருக்கம் = வட்டம், நூற்பிரிவு. L. circum = வட்டம்.

சருக்கு → சருக்கல் → சருக்கர் → சருக்கரம் → சக்கரம் = வட்டம், உருளி, குயவன் சக்கரம், சக்கரப்படை, வட்டக்காசு, சக்கரப்புள், மாநிலம், செக்கு. Gk. kuklos; E. cycle = சக்கரம்

சக்கரம் → (சக்கு) → செக்கு = எண்ணெய் ஆட்டும் வட்டமான உரல். ஒ.நோ: பரு → பெரு, சத்தான் → செத்தான், சக்கு → சக்கடம் → சக்கடா = கட்டைவண்டி. தெ. செக்கடா பண்டி. சக்ர என்னும் வடசொல் வடிவிற்கு வடமொழியாளரால் குறிக்கப்பட்டுள்ள மூலம் க்ரு (செய்) என்பதே. மா.வி. அகரமுதலி சர் (car) என்னும் சொல்லை வினாக்குறியுடன் குறித்துள்ளது. சர் = இயங்கு. இவ்விரண்டுள் முன்னதின் பொருந்தாமையையும் பின்னதின் வன்புணர்ப்புத் தன்மையையும் அறிஞர் கண்டுகொள்க. *(வ.வ. 134-135).*

நூற்கும் சக்கரம் கையினாற் சுற்றப்படுவதனால், அது கையிறாட்டு அல்லது கையிறாட்டை அல்லது கையிறாட்டினம் என்று சொல்லப்படும்.




**சக்கரம்**[2] *šakkaram,* பெ. (n.) *1.* **மலைமல்லிகை** *(மூ.அ);* Indian cord. *2.* **பெருமை** *(பிங்.);* greatness, majesty.

*[சருக்கு → சருக்கரம் → சக்கரம்]*

**சக்கரம்**[3] *šakkaram,* பெ. (n.) நெசவில் ஊடை நூலை மாட்டி நூல் இழைப்பதற்குரிய கருவி; pulley in a loom.

மறுவ. பூட்டுத்தலை, குச்சிராட்டினம், திருவட்டம், பூட்டை

*[சருக்கு → சருக்கரம் (வட்டம்) → சக்கரம்]*

இது சிறுசிறு மூங்கில் சிம்புகளால் செய்யப் பட்டது. சிம்புகளின் தலைப்பகுதி பூட்டுப் போல் கட்டுக்கட்டி வைக்கப்பட்டுள்ளமையால் இது பூட்டுதலை எனப்பட்டது. இஃது ஒரு கொம்பில் அல்லது கம்பியில் சுற்றப்படும் தன்மையுடையதனால் சொழல் (சுழல்) என்றும், சக்கரம் போன்றுள்ளதால் சக்கரம் என்றும் அழைக்கப்படுகிறது.

**சக்கரம்**[4] *šakkaram,* பெ. (n.) தகரைச் செடி; foetid cassia.

ம. சக்ரம்

*[சருக்கு → சருக்கரம் (வட்டம்) → சக்கரம் = சக்கரத்திற்கு இடும் எண்ணெயைத் தருவது]*

**சக்கரமடை-த்தல்** *šakkaram-aḍai-,* 4 செ.கு.வி. (v.i.) எந்திரத்தில் மந்திரவெழுத்து அடைத்தல் (வின்.); to inscribe letters of a mantra in a mystic diagram.

*[சக்கரம் + அடை-,]*

**சக்கரமண்டலி** *šakkara-manḍali,* பெ. (n.) பெரும்பாம்பு; a kind of big snake, the Python, boa constricter.

ம. சக்ர மண்டலி

*[சக்கரம் + மண்டலி. மண்டு → மண்டலி, வளைந்து, வட்டமிட்டு இருக்கும் இயல்புடையது]*

**சக்கரமாற்று** *šakkara-māṟṟu,* பெ. (n.) திருக்காழி (சீர்காழி)யின் பன்னிரு பெயர்களையுஞ் செய்யுடோறும் அமைத்து ஒரு பாடலின் இறுதியிற் கூறிய பெயரை அடுத்த பாடலின் முதலிற்கொண்டு கூறும் சம்பந்தர் தேவாரப் பதிகம். (தேவா. 145); a poem on Tirukkāḻi (Sīrkaḻi) by Saint Sampandar, where in each stanza mentions all the names of that sacred shrine and the last mentioned name in stanza begins the next stanza.

*[சக்கரம் + மாற்று]*

**சக்கரமுடிவு** *šakkaramuḍivu,* பெ. (n.) ஒருவனது வாழ்நாள் முடிவு (வின்); the close of one's life, as indicated in one's horoscope.

*[சக்கரம் + முடிவு. வாழ்நாள் ஒரு வட்டமாகக் கருதப்பட்டதன் அடிப்படையில் வட்டம் நிறைவு பெறுதல் வாழ்நாள் முடிவாகக் கருதப்பட்டது]*

**சக்கரமூதூர்** *šakkaramūdūr,* பெ. (n.) காஞ்சிபுர வட்டத்திலுள்ள சக்கரமல்லூர் என்ற ஊரின் பண்டைய பெயர்; a village in Kāñjipuram taluk "இம்மண்டலத்து தாமர்கக்கோட்டத்துத் தனியூர் சக்கரமுதூர் காணிஉடைய ஊரவர்" (தெ. க. தொ. XII க. எண். - 190, 5).

*[சக்கரம் + மூதூர்]*

**சக்கரயானம்** *šakkarayāṉam,* பெ. (n.) சக்கர வண்டி[1] பார்க்க; see *šakkara-vanḍi*[1] (செ.அக.).

ம. சக்ரயானம்

*[சக்கரம் + யானம்]*

Skt. yāṉā → த. யானம்

**சக்கரயூகம்** *šakkara-yūgam,* பெ. (n.) சக்கர வடிவாக அமைத்த படைவகுப்பு (சீவக. 757, உரை); circular of an army.

*[சக்கரம் + யூகம்]*

Skt. vyūha → த. யூகம்

**சக்கரயெண்ணெய்** *šakkara-yeṉṉey,* பெ. (n.) தகரைச் செடியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்; oil extracted from the plant cassia tora.

ம. சக்ரதைலம்

*[சக்கரம் + எண்ணெய்]*

சக்கரம்[4] பார்க்க

**சக்கரராசன்** *šakkara-rāšaṉ,* பெ. (n.) சக்கரத்தாழ்வார் பார்க்க (இ.வ.); see *šakkarattāḻvār* (செ.அக.).

*[சக்கர(ம்) + ராசன். அரசன் → ராசன்]*

**சக்கரரேகை** *šakkara-rēgai,* பெ. (n.) சக்கர வரிகை பார்க்க; see *šakkara-varigai* (செ.அக.).

*[சக்கரம் + ரேகை]*

Skt. rēkha → த. ரேகை

**சக்கரலிபி** *šakkara-libi,* பெ. (n.) சக்கர வெழுத்து பார்க்க; see *šakkara-v-eluttu.*

ம. சக்ரலிபி

*[சக்கரம் + லிபி]*

Skt. lipi → த. லிபி

**சக்கரவங்கம்** *šakkara-vangam,* பெ. (n.) நாணற் கோரை; straight-sedge-cyperus pertinuis *(சா.அக.).*

*[சக்கரம் + வங்கம். வங்கு → வங்கம் = வளைவு. வளைந்தாலும் நிமிரும் தன்மையையுடைய வங்கம் சக்கரம் என்னும் நேர்ப்பொருளை அடையாக ஏற்றது]*

**சக்கரவட்டம்** *šakkara-vattam,* பெ. (n.) வட்டவடிவு; circular form *(செ.அக.).*

*[சக்கரம் + வட்டம். வல் → வள் → வண்டு → வட்டு → வட்டம். வட்ட → வட்ட (பிரா.); வ்ருத்த (வ.); L. vērto (turn). சக்கரவட்டம் மீமிசைச் சொல். எனினும் சக்கரத்தைப் போன்ற வட்ட வடிவம் எனப் பொருள்படவும் இடமுண்டு]*

**சக்கரவட்டி** *šakkara-vatti,* பெ. (n.) கூட்டுவட்டி; interest upon interest, compound interest.

க. சக்கரபட்டி; தெ. சக்ரவ்ருத்தி

*[சக்கரம் + வட்டி. தொடர்ந்து சுழலும் சக்கரத்தின் தன்மைபோல் முதலுடன் வட்டிசேர அதற்கும் சேர்த்து வட்டியாகும் தன்மை]*

**சக்கரவட்டை** *šakkara-vattai,* பெ. (n.) வண்டிச் சக்கரத்தின் புறவட்டம்; the rim of a wheel.

ம. சக்ரதார

*[சக்கரம் + வட்டை. வள் → வடு → வட்டை. வள் = வளைந்தது]*

**சக்கரவண்டி**[1] *šakkara-vandi,* பெ. (n.) சக்கரத்தை உடைய வண்டி; wheeled cart.

*[சக்கர(ம்) + வண்டி]*

**சக்கரவண்டி**[2] *šakkara-vandi,* பெ. (n.) நீர் இறைக்கும் உருளையின் அச்சுமரம்; the axle-tree of a water - wheel *(சேரநா).*

ம. சக்ரதார

*[சக்கர(ம்) + வண்டி]*



சக்கரவண்டி

**சக்கரவர்த்தி**[1] *šakkara-vartti,* பெ. (n.) 1. பேரரசன்; emperor. "சக்கரவர்த்திகளாற் பயமுண்டெனும்" *(சிலப். 15: 98 உரை)* 2. திகிரி மன்னவர் *(சூடா. 12, 55);* any one of tikiri-mannavar *(செ.அக.).*

ம. சக்ரவர்த்தி

*[சக்கரம் + வர்த்தி]*

த. வட்டம் → Skt. vartin → த. வர்த்தி

**சக்கரவர்த்தி**[2] *šakkara-vartti,* பெ. (n.) குயவன்; potter.

மறுவ. வேட்கோ

க. சக்ரவர்த்தி

*[சக்கரம் + வர்த்தி]*

**சக்கரவர்த்தி**[3] *šakkara-vartti,* பெ. (n.) மற்றொருவனைப் பணியாத தனியாள் வேலை; independent work.

*[சக்கரம் + வர்த்தி. மன்னவன், மன்னவன் போல் பிறர் ஆணையில்லாமல் தன் விருப்பம் போல் செய்யும் வேலை.]*

**சக்கரவர்த்திக்கீரை** *šakkaravartti-k-kirai,* பெ. (n.) சமையலுக்குப் பயன்படும் முளைக் கீரையைப் போன்ற ஒருவகைக் கீரை; a kind of greens.

மறுவ. கண்ணாடிக் கீரை

*[சக்கரவர்த்தி + கீரை]*

**சக்கரவர்த்தித் திருமகன்**[1] *šakkaravartti-t-tiru-magan̲,* பெ. (n.) **இராமன்;** Raman̲, as the son of the emperor Dašaratha 'சக்கரவர்த்தித் திருமகனுக்கு வில்லு கைவந்திருக்குமா போல' (ஈடு. 6, 4,2) (செ.அக.).

*[சக்கரவர்த்தி + திருமகன். சக்கரவர்த்தி = தசரதமன்னன். சக்கரவர்த்தித் திருமகன் - அவரது மகன் இராமப் பெருமான்]*

**சக்கரவர்த்தித் திருமகன்**[2] *šakkaravartti-t-tiru-magan̲,* பெ. (n.) **நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய அயோத்தியிற் கோயில் கொண்ட திருமால்;** The Tirumal temple of Ayodya, one among l08 famous temples.

*[சக்கரவர்த்தி + திருமகன். தசரதனின் மகன் இராமபிரான் திருமாலின் தோற்றரவமாகக் கருதப்படுவதால் அயோத்திக் கோயிலில் வீற்றிருக்கும் திருமால் சக்கரவர்த்தித் திருமகன் என அழைக்கப்பட்டார்.]*

**சக்கரவர்த்தினி**[1] *šakkaravarttin̲i,* பெ. (n.) **பேரரசி;** empress.

க. சக்ரவர்தினி

*[சக்கரம் + வர்த்தினி]*

சக்கரவர்த்தி (ஆ.பா.) - சக்கரவர்த்தினி (பெ.பா.)

Skt. vartini → த. வர்த்தினி

**சக்கரவர்த்தினி**[2] *šakkaravarttin̲i,* பெ. (n.) 1. **சடாமாஞ்சி** (சங்.அக.); spikenard herb. 2. **செம்பஞ்சு** (சங்.அக.); redlac (செ.அக.).

**சக்கரவரி** *šakkara-vari,* பெ. (n.) **சக்கரவரிகை** பார்க்க; see *šakkara-varigai.*

*[சக்கர(ம்) + வரி]*

**சக்கரவரிகை** *šakkara-varigai,* பெ. (n.) **ஒருவனது நல்லூழை (அதிர்ஷ்டத்தை)க் காட்ட வட்ட வடிவாகக் கையில் அமைந்த வரை;** circular marks, usually on palm, believed to indicate one's fortune.

*[சக்கரம் + வரிகை. வரி → வரிகை. 'கை' பெயராக்க ஈறு]*

**சக்கரவாகப்புள்** *šakkara-vāga-p-pul̤,* பெ. (n.) **வட்டவடிவினதும், இரண்டடி நீளம் உள்ளதுமான பறவை;** brahminy duck; ruddy goose - cascara - rutila alias Anas ruba alias A. cascara.

க. சக்கவக்கி, சக்கவக்கி, சக்ரவாக பக்ழி.

*[சக்கரவாகம் + புள். வாளம் → வாகம்]*

இணைபிரிந்ததால் வருந்துவதாகக் கூறும் பறவை வகை. இதன் தலை, கழுத்து வெளிர் மஞ்சள் நிறமாகவும், கண், பிடரி வெளிர் சாம்பல் நிறமாகவும், கழுத்து மஞ்சள் வண்ணத்தில் கருப்புக் கோடுடையதாகவும், உடம்பு மஞ்சள், கருப்பு, நீலம் கலந்த வண்ண மாகவும், மூக்கு, கால் கருப்பு வண்ணமாகவும் காணப்படும் (சா.அக.).



சக்கரவாகப்புள்

**சக்கரவாகம்** *šakkaravāgam,* பெ. (n.) 1. **சக்கரவாகப்புள்** பார்க்க; see *šakkara-vāga-p-pul̤.* "சக்கரவாகச் செழும் பெடைகாள்" (தணிகைப்பு. களவு. 347). 2. **ஒரு பண் (இராகம்);** a musical mode.

**மறுவ.** நேமிப்புள், சகோரம், கோகம், யானைக் குருகு, சக்கரப்புள்

ம. சக்ரகம்

*[சக்கரம் + வாகம்]*

*வாள் → வாளம் = வாளம் (sword), வட்டம். வாளம் → வாகம். இணைபிரிந்து வருந்துவதைக் காட்டும் பண்.*

**சக்கரவாகாதனம்** *šakkaravāgā-tan̲am,* பெ. (n.) **ஓக (யோகாசன) வகை.** (தத்துவப். 107, உரை); a yogic posture.

*[சக்கரம் + வாகாதனம்]*

**சக்கரவாணம்** *śakkara-vāṇam,* பெ. (n.) சக்கரம் போலச் சுழன்று தீப்பொறிகளைச் சிதறும் வாணம்; wheel-rocket.

ம. சக்கரவாணம்; க. சக்கரபாண; தெ. சக்கரபாணமு.

*[சக்கரம் + வாணம்]*

**சக்கரவால்** *śakkara-vāl,* பெ. (n.) ஒரு வகைக் குதிரை நோய்; ring-bone in horses *(சா.அக.).*

*[சக்கர(ம்) + வால்]*

**சக்கரவாலை** *śakkara-vālai,* பெ. (n.) நீர்மம் (திராவகம்) காய்ச்சப் பயன்படும் வட்டமான வாலைக் குடுவை; a round distilling apparatus used for preparing acids *(சா.அக.).*

*[சக்கரம் + வாலை]*

**சக்கரவாளக்கோட்டம்** *śakkaravāḷa-k-kōṭṭam,* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தில் நன்காட்டுப் புறத்திருந்த ஓர் இடம்; a place in the ancient city of Kāviri-p-pūm-paṭṭinam adjoining its buring-ground. 'சக்கரவாளக் கோட்ட மீங்கிதுகாண்' *(மணிமே. 6: 202).*

மறுவ. சுடுகாட்டுக் கோட்டம்

*[சக்கரவாளம் + கோட்டம். கோடுதல் = வளைதல், கோடு → கோட்டம் = வளைவு, மதியைச் சூழ்ந்த ஒளி, வட்டம், மதில் சூழ்ந்த கோயில், குளக்கரை]*

கோயிலைக் குறிக்கும் கோட்டம் என்னும் சொல் உல் என்னும் மூல வேரின்றும் குல் என்னும் அடிவேரினின்றும் தோன்றிய தூய தென் சொல்லாயிருப்பினும் செபஅகரமுதலி அதை kōṣṭa என்று திரித்து வடசொல்லாகக் காட்டியுள்ளது.

மா.வி.அகரமுதலியில் 'கோஷ்ட்ட' என்னும் சொற்கு மூலமென வினாக்குறியுடன் ஐயுறவாகக் காட்டப்படும் சொல், to tear as under, to pinch, to force or draw art, extract, to knead, to test, examine ?. to shine-?, to gnaw, nibble, to weigh, balance என்று பொருள் குறிக்கப்பட்டுள்ள 'குஷ்' என்பதே. குஷி (வயிறு), கோச (உறை) என்பன உறவுச் சொற்களாயிருக்கலாமென்றுங் குறிக்கப் பட்டுள்ளது. அறிஞர் இதன் புரைமையைக் கண்டு கொள்க. *(வள்ளுவர் கோட்டக் கால்கோள் விழா வாழ்த்து)*

**சக்கரவாளகிரி** *śakkara-vāḷa-giri,* பெ. (n.) ஆழியங்குன்றம் என மணிமேகலையிற் குறிக்கப் பட்டுள்ள மலை; a mountain mentioned in Maṇimēgalai, an ancient Tamil epic.

*[சக்கரவாளம் + கிரி]*

Skt. giri → த. கிரி

**சக்கரவாளம்**[1] *śakkara-vāḷam,* பெ. (n.) *1.* உட்புறம் ஒளியும் வெளிப்புறம் இருளுங்கொண்டு நிலவுலகத்தைச் சூழ்ந்துள்ளதாகக் கருதப் படும் மலை; a mythical range of mountains encircling the orb of the earth and forming the limit of light and darkness. "சூழ்ந்து நிற்குஞ் சக்கரவாளச் சையம்" *(கந்தபு. அண்டகோ. 20).* *2.* மேரு மலையின் மூன்றாந் தாழ்வரை *(சி.போ.பா. 2,3, பக். 205);* the third slope or tier of mt. Mēru. *3.* சக்கரவாளக் கோட்டம் பார்க்க *(மணிமே. 6:183);* see *śakkravāḷa-k-kōṭṭam.* *4.* வட்டவடிவு; circular form.

ம. சக்கரவாளம்

*[சக்கரம் + வாளம்]*

வாள் → வாளம் = வாளம் (sword), வட்டம். வளைந்த மலைத் தொடர். (சு.வி. 16)

**சக்கரவாளம்**[2] *śakkara-vāḷam,* பெ. (n.) எல்லை (யாழ். அக); boundary, limit.

ம. சக்ரவாடம்

*[சக்கரம் (வட்டம், வளைவு, விளிம்பு எல்லை) + வாளம்]*

**சக்கரவாளம்**[3] *śakkaravāḷam,* பெ. (n.) சக்கரவாகப்புள் பார்க்க; see *śakkara-vāga-p-puḷ.*

*[சக்கரம் + வாளம்]*

**சக்கரவாளிநம்பி** *śakkaravāḷi-nambi,* பெ. (n.) திருவரங்கத் திருக்கோயிலுக்கு நிலம் கொடுத்தவன்; the land donar to Tiruvarangam (Srirangam) temple. "சக்கரவாளி நம்பி திருநந்த வன வாத்தலைக்கு மேற்கும்" *(தெ. க. தொ. 24, கல். 246-3).*

*[சக்கரம் → சக்கரவாளி + நம்பி]*

**சக்கரவித்து** *śakkara-vittu,* பெ. (n.) வட்டமான விதை; any round seed.

*[சக்கரம் + வித்து]*

**சக்கரவியூகம்** *šakkara-viyūgam,* பெ. (n.) *சக்கர யூகம் பார்க்க;* see *šakkara-yūgam* (செ.அக.).

*[சக்கரம் + வியூகம்]*

Skt. vyūha → த. வியூகம்

**சக்கரவிருத்தி** *šakkara-virutti,* பெ. (n.) *சக்கரவட்டி பார்க்க (சங்.அக); see šakkara-vaṭṭi.*

*[சக்கரம் + விருத்தி]*

த. வட்டம் → Skt. vṛddhi → த. விருத்தி

**சக்கரவுயிர்ப்பு** *šakkara-v-uyirppu,* பெ. (n.) **இறப்புக்காலத்திற் போலத் திணறியெழும் மூச்சு;** gasp for breath, dying breath.

*[சக்கரம் + உயிர்ப்பு]*

**சக்கரவெழுத்து**[1] *šakkara-v-eḻuttu,* பெ. (n.) **இந்திய நாட்டின் பழைமையான ஒரு வகை எழுத்து;** an ancient Indian script.

க. சக்ரலிபி

*[சக்கரம் + எழுத்து]*

தமிழ் எழுத்து கீறெழுத்தும் வட்டெழுத்தும் என இருவகைப்பட்டது. முன்னது ஓலையெழுத்து; பட்டயவெழுத்தையே வட்டெழுத்தென்ப.

எழுத்தாணிகொண்டு ஏட்டில் கீறியெழுதுவதற்கு வளைகோட்டெழுத்தும், உளி கொண்டு பட்டயத்தில் குழித்தெழுதுவதற்கு நேர்கோட்டெழுத்துமே ஏற்றவாதல் காண்க *(ப. ப. 134, 135).*

சக்கரம் வட்டவடிவைக் குறித்தலால் சக்கர வெழுத்தென்பது வட்டெழுத்தைக் குறித்த தாயிருக்கலாம்.

**சக்கரவேதனை** *šakkara-vēdaṉai,* பெ. (n.) **ஒரு வகைத் துன்பம்;** a mode of torture.

*[சக்கரம் + வேதனை]*

**சக்கரன்**[1] *šakkaraṉ,* பெ. (n.) திருமால் *(யாழ்.அக.);* Tirumāl *(Viṣṇu).*

*[சக்கரம் → சக்கரன். சக்கரப்படைக் கருவியையுடையவன்]*

**சக்கரன்**[2] *šakkaraṉ,* பெ. (n.) 1. **சக்கிரன் பார்க்க** *(சங்.அக.);* see *šakkiraṉ.* 2. **பன்னிரு ஆதித்தருள் (துவாத சாதித்தருள்) ஒருவர்;** Sun-god, one of tuvāta-cātittar, q.v. 'துளங்கு சக்கரன்' *(கூர்மபு. ஆதவர்ச்சிறப். 2).*

*[சக்கரம் → சக்கரன்]*

**சக்கரன்**[3] *šakkaraṉ,* பெ. (n.) **மணிமலைத் தமிழ்க் கழகத்தில் தலைமைப் புலவராக இருந்து தமிழாய்வு செய்த பெரும்புலவர்;** chief poet of the Maṇimalai Tamil academy.

*[சக்கரம் = பெருமை. சக்கரம் → சக்கரன்]*

**சக்கராக்கினை** *šakkarākkiṉai,* பெ. (n.) 1. **உண்மைக்குப் புறம்பான தண்டனை;** arbitrary punishment inflicted by a despot. 2. *அரசனாணை;* the decree of a monarch (செ.அக.).

*[சக்கரம் + ஆக்கினை]*

த. ஆணை → Skt. ājnā → த. ஆக்கினை

**சக்கராகாரம்** *šakkarāgāram,* பெ. (n.) *வட்ட வடிவு;* circle. circular form *(செ.அக.).*

*[சக்கரம் + ஆகாரம். சக்கரம் = வட்டம். ஆகாரம் = உருவம், வடிவம்]*

**சக்கராங்கனம்** *šakkarāṅgaṉam,* பெ. (n.) **திருமாலியத்தைப் பெறுதற்கு அடையாளமாக ஒருவரது தோள்மீது சங்கு சக்கர முத்திரைகளைக் குரவர் (ஞானாசிரியர்) பொறிக்கை;** branding with šaṅgu and šakkaram of Tirumāl *(Viṣṇu)* made by preceptor on the shoulders of a person at the time of his initiation into vaiṣṇavism *(செ.அக.).*

*[சக்கரம் + ஆங்கனம்]*

**சக்கராங்கி** *šakkarāṅgi,* பெ. (n.) கடுகு ரோகிணி; black hellibore - Helliborus niger *(சா.அக.).*

**சக்கராங்கிதம்** *šakkarāṅgidam,* பெ. (n.) சக்கராங்கனம் பார்க்க; see *šakkarāṅgaṉam* (செ.அக.).

*[சக்கராங்கனம் → சக்கராங்கிதம்]*

**சக்கராடி** šakkarāḍi, பெ. (n.) *1. எத்தன்;* deceiver. *2. பாம்பாட்டி;* snake charmer.

*[சக்கரம் + ஆடி - சக்கராடி = சக்கரம் போல் படம் எடுக்க வைத்து ஆட்டுபவன், சுழன்று சுழன்று பேசி ஏமாற்றுபவன்]*

**சக்கராதபம்** *šakkarādabam,* பெ. (n.) செம்புளி *மரம்;* deccany deodar - Erythroxylon monogynum.

**சக்கராதிபம்** *šakkarādibam,* பெ. (n.) பேரரசன் ஆணை; paramount power 'புவிச்சக்கராதிபம் உடற்சோதரர் தாங் கொண்டிருப்பவும்' *(பாரதி. பாஞ்சாலி, i, 74).*

*[சக்கரம் + ஆதிபம்]*

Skt. ādhipatya → த. ஆதிபம்

**சக்கராபந்தம்** *šakkarā-bandam,* பெ. (n.) வட்டத்துத்தி அல்லது சிறுதுத்தி; membranous-carpelled evening mallow - abutilon crispum (சா.அக.).

*[சக்கரம் + பந்தம்]*

**சக்கராயுதத்தி** *šakkarāyudatti,* பெ. (n.) காளி; goddess Durga.

ம. சக்ராயுதி

*[சக்கரம் + ஆயுதம் + அத்தி. சக்கர ஆயுதத்தையுடையவள்]*

**சக்கராயுதம்** *šakkarāyudam,* பெ. (n.) வட்ட வடிவமான படைக்கலன்; a discus-weapon.

ம., து. சக்ராயுத; க. சக்ராயுத

*[சக்கரம் + ஆயுதம்]*

த. சக்ராயுதம் → Skt. šakrāyudha

**சக்கராயுதன்** *šakkarāyudan̠,* பெ. (n.) திருமால் (திவா) (சக்கரப்படையுடையவன்); Tirumāl (Viṣṇu) as having the discus weapon.

ம. சக்ராயுதன்; க. சக்கராயுத

*[சக்கரம் + ஆயுதன்]*



சக்கராயுதன்

**சக்கராயுதி** *šakkarāyudi,* பெ. (n.) காளி (துர்க்கை) (பிங்.); Durgā, as having the discus weapon.

ம. சக்ராயுதி

*[சக்கரம் + ஆயுதி]*

**சக்கராரம்** *šakkarāram,* பெ. (n.) ஆரக்கால்; spoke of a wheel.

ம. சக்ராரம்

*[சக்கரம் + ஆரம். ஆர் → ஆரம்]*

**சக்கரான்கட்டு** *šakkarān̠-kaṭṭu,* பெ. (n.) ஒன்றாகத் தைக்கப்பட்ட இரண்டு அல்லது மூன்று சாக்கு (இ.வ.); two or three gunnies stitched together (செ.அக.).

*[சக்கரம் + ஆம் + கட்டு - சக்கராங்கட்டு→ சக்கரான்கட்டு. ஒன்று சேர்த்துச் சுற்றிக் கட்டுதல்]*

**சக்கரை** *šakkarai,* பெ. (n.) சருக்கரை1 பார்க்க; see *šarukkarai* [1].

*[சருக்கரை → சர்க்கரை → சக்கரை]*

**சக்கரைக்கட்டி** *šakkarai-k-kaṭṭi,* பெ. (n.) சருக்கரைக்கட்டி பார்க்க; see *šarukkarai-k-kaṭṭi.*

*[சருக்கரைக்கட்டி → சக்கரைக்கட்டி]*

**சக்கரைக்கத்தி** *šakkarai-k-katti,* பெ. (n.) சருக்கரைக்கத்தி பார்க்க; see *šarukkarai-k-katti.*

*[சருக்கரைக்கத்தி → சக்கரைக்கத்தி]*

**சக்கரைக்கரண்டி** *šakkarai-k-karaṇḍi,* பெ. (n.) சருக்கரைக்கரண்டி பார்க்க; see *šarukkarai-k-karaṇḍi.*

*[சருக்கரைக்கரண்டி → சக்கரைக்கரண்டி]*

**சக்கரைக்குத்தி** *šakkarai-k-kutti,* பெ. (n.) சருக்கரைக்குத்தி பார்க்க; see *šarukkarai-k-kutti.*

*[சருக்கரைக்குத்தி → சர்க்கரைக்குத்தி → சக்கரைக்குத்தி]*

**சக்கரைக்கேளி** *šakkarai-k-kēḷi,* பெ. (n.) சருக்கரைக்கேளி பார்க்க; see *šarukkarai-k-kēḷi.*

*[சருக்கரைக்கேளி → சக்கரைக்கேளி]*

**சக்கரைச்சோறு** *šakkarai-c-cōr̠u,* பெ. (n.) சருக்கரைச்சோறு பார்க்க; see *šarukkarai-c-cōr̠u.*

*[சருக்கரைச்சோறு → சக்கரைச்சோறு. சொல் = நெல். சொல் + தி = சொன்றி. சொன்றி → சோறு]*

**சக்கரைநோய்** *šakkarai-nōy,* பெ. (n.) நீரிழிவு நோய்; diabetes.

*[சருக்கரை → சக்கரை + நோய்]*

**சக்கரைப்பேச்சு** *šakkarai-p-pēccu,* பெ. (n.) சருக்கரைப்பேச்சு பார்க்க; see *šarukkarai-p-pēccu.*

*[சருக்கரைப்பேச்சு → சக்கரைப்பேச்சு]*

**சக்கரைப்பொங்கல்** *šakkarai-p-poṅgal,* பெ. (n.) சருக்கரைப்பொங்கல் பார்க்க; see šarukkarai-p-poṅgal.

*[சருக்கரைப்பொங்கல்→ சக்கரைப்பொங்கல்]*

**சக்கரையமுது** *śakkarai-y-amudu,* பெ. (n.) *சருக்கரையமுது பார்க்க;* see *śarukkarai-y-amudu.*

*[சருக்கரையமுது→ சக்கரையமுது]*

**சக்கரைவள்ளி** *śakkarai-vaḷḷi,* பெ. (n.) *சருக்கரைவள்ளி பார்க்க;* see *śarukkarai-vaḷḷi.*

ம. சக்கரவள்ளி

*[சருக்கரைவள்ளி → சக்கரைவள்ளி]*

**சக்கல்** *śakkal,* பெ. (n.) *1. மக்கல்;* rotten straw, muck. *2. சாரமற்றது;* that which is withered, shrivelled.

தெ. சக்கு

*[சள் → சளக்கல் → சக்கல்]*

**சக்களம்** *śakkaḷam,* பெ. (n.) தோல்; skin.

க. சக்கள

*[அக்கு = எலும்பு. அளம் = செறிவு, நெருக்கம். எலும்புடன் நெருங்கியிருப்பது, எலும்பைப் போர்த்தியிருப்பது, தோல்]*

**சக்களவி** *śakkaḷavi,* பெ. (n.) *1.* சதுரக் கள்ளி; square - spurge - Euphorbia antiquorum. *2.* திருகுக் கள்ளியின் புல்லுருவி; a parasite on twisted spurge - Euphorbia tirucalli.

*[சதுரக்கள்ளி → சக்கள்ளி → சக்களவி]*

**சக்களா** *śakkaḷā,* பெ. (n.) வாலை; the female energy worshipped in the form of an immatured girl *(சா.அக.).*

**சக்களி[1]-தல்** *śakkaḷi-,* 4 செ.குன்றாவி. (v.i.) *தட்டையாதல் (யாழ்ப்.);* to become oblate, flattened, compressed.

ம., க. சக்கழி.

*[தக்கை → சக்கை → சக்கு + அளி-.]*

**சக்களி[2]-தல்** *śakkaḷi-,* 4 செ.கு.வி. (v.i) சளிதல் *(யாழ். அக.);* to be fermented; to grow stale.

*[சக்கழி → சக்களி]*

**சக்களையன்** *śakkaḷaiyaṉ* பெ. (n.) வீணே பொழுதைப் போக்கும் சோம்பேறி *(யாழ்ப்.);* corpulent, sluggish fellow.

*[சக்களி → சக்களை + அன்]*

**சக்காந்தம்** *śakkāndam,* பெ. (n) பகடி (பரிகாசம்); ridicule 'மின்னார்களுமே சக்காந்த முரைக்கில்" *(தனிப்பா. i, 378,22).*

*[சக்கந்தம் → சக்காந்தம்.]*

சக்கந்தம்[2] பார்க்க

**சக்காரம்** *śakkāram,* பெ. (n.) சருக்கரை போல் இனிக்கும் தேமா; a kind of mango.

*[அக்காரம் = சருக்கரை போல் இனிக்கும் மாங்கனி அல்லது மாங்கனி வகைகளுள் ஒன்று, அக் கனிமரம். அக்காரம் → சக்காரம்]*

**சக்கி** *śakki,* பெ. (n.) துண்டுச் சட்டம் (உ.வ.); any wooden piece or frame.

தெ. செக்க; பட. சக்கெ.

*[தக்கை → சக்கை → சக்கி]*

**சக்கிமுக்கி** *śakki-mukki,* பெ. (n.) *1.* நெருப்பு உண்டாக்கப் பயன்படுத்தும் கல்; a steel or flint-stone to strike fire with. *2.* தீப்பற்றும் ஓர் எஃகு; a steel for striking fire. *3.* தீப்பற்றும் கட்டை (திருவாங்கூர் மலையர்கள் பயன் படுத்துவது); a wood used for producing fire - Isora corlifolia.

மறுவ. தீத்தட்டி;

ம. சக்கிமுக்கி, சக்குமுக்கி; க. சக்கமுக்கி, சக்கமுங்கி, சகமுகி, சகமகி.

*[சக்கி + முக்கி]*

**சக்கிமுக்கிக்கல்** *śakkimukki-k-kal,* பெ. (n.) நெருப்பையுண்டாக்கப் பயன்படுத்திய ஒரு வகைக் கல்; flint-stone used for kindling fire.

மறுவ. தீத்தட்டிக்கல்.

*[சக்குமுக்கி + கல்]*

**சக்கிமுக்கிக்குடுக்கை** *śakki-mukki-k-kuḍukkai,* பெ. (n.) தீப்பற்றும் பஞ்சை வைத்திருக்கும் குடுக்கை; a box for keeping tinder such as, charred linen used in obtaining fire, tinder-box *(சா.அக.).*

மறுவ. தீத்தட்டிக் குடுக்கை

*[சக்கிமுக்கி + குடுக்கை]*

**சக்கிமுக்கிதட்டு-தல்** *śakki-mukki-tattu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* சக்கிமுக்கிக் கல்லைக் கொண்டு தீ வளர்த்தல்; to kindle fire with flint and steel. *2.* சண்டை மூட்டுதல் (வின்.); to stir up strife.

*[சக்கிமுக்கி + தட்டு-,]*

கற்களைத் தட்டி தீ உண்டாக்குவது போல் இருவரிடையே கலகமூட்டுதலும் சக்கிமுக்கி தட்டுதல் எனப்பட்டது.

**சக்கிமுக்கிப்பஞ்சு** *śakki-mukki-p-pañju,* பெ. (n.) தீப்பஞ்சு; an inflammable substance such as charred liner used for obtaining fire

with a steel and flint in olden days, tinder (சா.அக.).

*[சக்கிமுக்கி + பஞ்சு]*

**சக்கிமுக்கிப்பை** *šakki-mukki-p-pai,* பெ. (n.) சக்கிமுக்கிக்கல், சக்கிமுக்கிக்குடுக்கை, எஃகு இவை மூன்றும் அடங்கிய பை; a purse containing flint, tinder and steel (சா.அக.).

*[சக்கிமுக்கி + பை. பொள் → பொய் → (பய்) → பை = உட்டுளையுடையது]*

**சக்கிமுக்கிபோடு-தல்** *šakki-mukki-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சக்கிமுக்கிதட்டு-தல் பார்க்க; see *šakki-mukki-taṭṭu-.*

*[சக்கிமுக்கி + போடு-,]*

**சக்கிமுக்கிவளையம்** *šakki-mukki-vaḷaiyam,* பெ. (n.) சக்கிமுக்கி தட்டும் இரும்பு வளையம்; a round plate of iron used with strike a light.

மறுவ. தீத்தட்டி வளையம்.

*[சக்கிமுக்கி + வளையம். வள் → வளை → வளையம்]*

**சக்கியம்** *šakkiyam,* பெ. (n.) இயல்வது; that which is possible, practicable (செ. அக.).

*[தக்கு = ஏற்றதாதல். தக்கு → சக்கு → சக்கியம் = இயல்வது]*

த. சக்கியம் → Skt. śakya

**சக்கியன்** *šakkiyan,* பெ. (n.) நண்பன், தோழன் (இராட்.); friend.

*[சக்கியம் → சக்கியன் = ஏற்புடைத் தலைவன், ஒத்தவுணர்வுள்ளவன், நண்பன்]*

**சக்கிரகம்** *šakkiragam,* பெ. (n.) (ஏரணம்) வளைய வளையப் பேசுகை (புதுவை.); arguing in a vicious circle.

*[சக்கரம் = வளைவு. சக்கரம்→ சக்கிரகம்]*

சக்கரப்பிரசங்கம் பார்க்க.

**சக்கிரகாசிகம்** *šakkira-kāšigam,* பெ. (n.) மாசிக்காய்; oak-gall (சா.அக.).

*[சக்கிரம் + காசிகம்]*

**சக்கிரகாரகம்** *šakkira-kāragam,* பெ. (n.) சக்கரகாரகம் பார்க்க; see *šakkara-kāragam.*

**சக்கிரசம்** *šakkirašam,* பெ. (n.) அத்தி; fig tree-ficus glomerata (சா.அக.).

*[சக்கரம் → சக்கிரம் → சக்கிரசம்]*

**சக்கிரநாயகம்** *šakkira-nāyagam,* பெ. (n.) ஓமாலிகைகளில் ஒன்றாகிய புலியுகிர் (சங். அக.); an aromatic substance.

**சக்கிரபாணி** *šakkira-pāṇi,* பெ. (n.) 1. காளி (துர்க்கை), (சூடா.); Durgā. 2. சக்கரபாணி[1] பார்க்க; see *šakkara-pāṇi.*

*[சக்கரம் → சக்கிரம் + பாணி. சக்கரத்தை யுடையவ-ள்-ன்; பாணி = கை. பண்ணுவது பாணி]*

**சக்கிரபாதம்** *šakkira-pādam,* பெ. (n.) 1. உருளைகளை (சக்கரங்களை)க் கால்களாக உடைய வண்டி; cart, as having wheels for its legs. 2. வட்டமான கால்களையுடைய யானை; elephant, as having round legs.

*[சக்கரம் + பாதம். பதி → பாதம் நிலத்தில் பதியும் உறுப்பு அல்லது பாகம்]*

**சக்கிரபுட்பி** *šakkira-puṭpi,* பெ. (n.) சக்கரபுட்பி பார்க்க; see *šakkara-puṭpi.*

*[சக்கரபுட்பி → சக்கிரபுட்பி]*

**சக்கிரபுளிச்சை** *šakkira-puḷiccai,* பெ. (n.) செம்புளிச்சை; deccany dender-Erythroxylon monogynum (சா.அக.).

**சக்கிரம்** *šakkiram,* பெ. (n.) சக்கரம்[1] பார்க்க; see *šakkaram*[1]. "சோழன சக்கிரமாங் கருணாகரன்" (கலிங்.350).

*[சக்கரம் → சக்கிரம்]*

**சக்கிரம்[1]** *šakkiram,* பெ. (n.) தகரை; ringworm plant.

*[சக்கரம் → சக்கிரம்]*

சக்கரம்[4] பார்க்க

**சக்கிரம்[2]** *šakkiram,* பெ. (n.) 1. மாமரம்; mango tree. 2. பூவரசு; portia tree - Thespesia populrea (சா.அக.).

**சக்கிரமண்டலி** *šakkira-maṇḍali,* பெ. (n) சக்கரமண்டலி பார்க்க; see *šakkara-maṇḍali* (யாழ். அக.).

*[சக்கரம் → சக்கிரம் + மண்டலி]*

**சக்கிரமாமூலி** *šakkira-māmūli,* பெ. (n.) கருநொச்சி; willow-leaved justicia - Justicia gendarussa (சா. அக.).

*[சக்கரம் → சக்கிரம் + மா + மூலி(கை)]*

**சக்கிரமுகம்** *šakkira-mugam,* பெ. (n) பன்றி (யாழ். அக.); pig.

*[சக்கரம் → சக்கிரம் + முகம். முகம் = முன்பக்கம், தலையின் முன்பக்கம்]*

சக்கிரமுகம் = சக்கரம் போன்று வட்டவடிவ முகத்தை (வாய்ப்பகுதியை) யுடையது.

**சக்கிரயானம்** *šakkira-yānam,* பெ. (n.) சக்கரயானம் பார்க்க; see *šakkarayānam.*

*[சக்கரம் → சக்கிரம் + யானம்]*

Skt. yāna → த. யானம்

**சக்கிரலேகை** *šakkira-lēgai,* பெ. (n.) சக்கிர வரிகை பார்க்க; see *šakkara-varigai.*

*[சக்கரம் + ரேகை → சக்கரரேகை → சக்கரலேகை (கொ.வ.)]*

Skt. rēkha → த. ரேகை

**சக்கிரவர்த்திக்கீரை** *šakkira-vartti-k-kīrai,* பெ. (n.) மலமிளக்கியாகப் பயன்படும் ஒருவகைக் கீரை; a kind of edible greens - Amaranthus (சா.அக.).

*[சக்கிரவர்த்தி + கீரை]*

**சக்கிரவாதபம்** *šakkira-vādabam,* பெ. (n.) செம்புளிச்சை (மலை.); red cedar.

**சக்கிரவாதம்** *šakkira-vādam,* பெ. (n.) சுழல் காற்று (யாழ். அக.); whirlwind.

*[சக்கரம் → சக்கிரம் + வாதம். சக்கரம் = வட்டம், உருளை, சுழற்சி]*

Skt. vāta → த. வாதம்

**சக்கிரவாளம்** *šakkira-vāḷam,* பெ. (n.) வட்டம்; circle.

*[சக்கரவாளம் → சக்கிரவாளம்]*

**சக்கிரவான்** *šakkira-vān,* பெ. (n.) வேங்கை மரம்; kino tree - Pterocarpus marsupium (சா.அக.).

**சக்கிரவிருத்தி** *šakkira-virutti,* பெ. (n.) சக்கரவட்டி பார்க்க; see *šakkaravaṭṭi.*

*[சக்கரவிருத்தி + சக்கிரவிருத்தி]*

**சக்கிரன்** *šakkiran,* பெ. (n.) இந்திரன் (பிங்.); Indra.

*[சக்கரன் → சக்கிரன். ஆணைச் சக்கரத்தை யுடையவன்]*

**சக்கிராங்கம்** *šakkirāṅgam,* பெ. (n.) வண்டி; cart.

*[சக்கரம் + அங்கம் → சக்கராங்கம் - சக்கிராங்கம். சக்கரத்தை உறுப்பாக (அங்கமாக)க் கொண்டது]*

Skt. aṅka → த. அங்கம்.

**சக்கிராங்கி** *šakkirāṅgi,* பெ. (n.) நோய் நீக்கி (கடுரோகிணி) (தைலவ. தைல. 23); christmas rose.

*[சக்கராங்கி → சக்கிராங்கி]*

**சக்கிராடி** *šakkirāḍi,* பெ. (n.) சக்கராடி பார்க்க; see *šakkarāḍi.*

*[சக்கராடி → சக்கிராடி]*

**சக்கிராதம்** *šakkirādam,* பெ. (n.) பன்றி (மூ. அ.); pig.

*[சக்கரம் → சக்கிரம் → சக்கிராதம் = வட்டமான மூக்குப் பகுதியுடையது]*

**சக்கிரி[1]** *šakkiri,* பெ. (n.) *1.* (சக்கரத்தை உடைய) அரசன் (சூடா.); king, emperor. *2.* சக்கரத்தைக் கையில் கொண்டவன், திருமால் (சூடா.); Tirumāl (Viṣṇu).

மறுவ. புரவலன், பெருமான், ஏந்தல், வேந்தன், மன்னன், பொருநன், குரிசில், கோ, கொற்றவன், இறைவன், அண்ணல், தலைவன், காவலன்.

*[சக்கரம் → சக்கரி → சக்கிரி]*

**சக்கிரி[2]** *šakkiri,* பெ. (n.) சக்கரத்தால் மட்பாண்டம் செய்யும் குயவன் (பிங்.); potter.

மறுவ. கும்பகாரன், குவாலன், வேட்கோவன், மட்பகைவன்

*[சக்கரம் → சக்கரி → சக்கிரி]*

**சக்கிரி[3]** *šakkiri,* பெ. (n.) *1.* செக்கான் (திவா); oil-monger, oil-grinder. *2.* பாம்பு (பிங்.); snake.

*[சக்கரம் → சக்கரி → சக்கிரி]*

**சக்கிரிகை** *šakkirigai,* பெ. (n.) முழந்தாள் (யாழ். அக.); knee.

*[சக்கரிகை → சக்கிரிகை. சக்கரம் போன்று அசையும் உறுப்பு]*

**சக்கிலி[1]** *šakkili,* பெ. (n.) கண்ணில்லாதவன்; blind.

*[சக்கு + இலி]*

**சக்கிலி[2]** *šakkili,* பெ. (n.) தோல்; skin, leather.

க. சக்கலி; Mar. sāga (goat's skin, leather)

*[அக்கு = எலும்பு. அளம் = செறிவு, நெருக்கம். அக்கு + அளம் → அக்களம் → சக்களம் = எலும்புடன் செறிந்து மூடியிருப்பது, தோல். சக்களம் → சக்கலி]*

**சக்கிலி[3]** *šakkili,* பெ. (n.) சக்கிலியர் இனம்; caste of shoe-makers.

*[சக்கிலி[2] → சக்கிலி. தோலைக் கொண்டு பணி செய்பவன்]*

தமிழ்நாட்டில் இப்போதுள்ள சக்கிலியர் தெலுங்கராதலின் விசயநகர ஆட்சியில் அல்லது அதற்குச் சற்று முன்பு தெலுங்க நாட்டினின்று தமிழ்நாட்டிற்கு வந்தவராவர்.

அவர் வருமுன்பு, அவர் தொழிலைச் செய்து கொண்டிருந்தவர் பறம்பர் (செம்மார்) என்னும் தமிழ் வகுப்பார். இவர் பாணருள் ஒரு பிரிவார். பாணர் பறையர். பாணரும் சக்கிலியரைப் போல் மாடு தின்பவர். மாட்டுத் தோலைப் பதனிட்டு அதனாற் செருப்பு, கூனை முதலிய பொருள்களைச் செய்வது, மாடு தின்பவர்க்கே மிக இசையும். தோல் வேலை செய்பவர் கடைக் கழகக் காலத்திலேயே தமிழ்நாட்டிலிருந்தமை, தோலின் துன்னர் என்று சிலப்பதிகாரத்தில் கூறியிருப்பதால் அறியப்படும். பாணருக்குத் தையல்தொழிலு முண்டு. "பாணர்க்குச் சொல்லுவதும்.... தை...." என்று காளமேகப் புலவர் கூறியிருத்தல் காண்க. தையல் என்னும் பெயர் துணி, தோல் என்னும் இரு பொருள்களை மூட்டுவதற்கும் பொதுவாகும். துன்னம் என்னும் பெயரும் இங்ஙனமே. சக்கிலியர் பறம்பர் தொழிலை மேற்கொண்ட பின், செம்மார் பிற தொழிலை மேற்கொண்டு பெயர் மறைந்தனர். சக்கிலியருக்குச் செம்மான் என்னும் தமிழ்ப் பெயரும் சக்கிலி என்னும் தெலுங்கப் பெயரும் இன்று வழங்கி வருகின்றன. *(ஒ.மொ. முன். 33)*

**சக்கிலிக்குருவி** *šakkili-k-kuruvi*, பெ. (n.) **மீன் குத்திப் பறவை;** king fisher (M.M.416).

*[கிச்சிலி → சிக்கலி → சக்கிலி + குருவி. குரீ → குரீஇ → குருவி]*



சக்கிலிக்குருவி

**சக்கிலிச்சி**[1] *šakkilicci*, பெ. (n.) **சக்கிலிய இனத்துப் பெண்;** a woman of the šakkili caste (செ. அக.).

*[சக்கிலியன் (ஆ.பா.) – சக்கிலிச்சி (பெ.பா.)]*

**சக்கிலிச்சி**[2] *šakkilicci*, பெ. (n.) ஒரு வகை **எரியுப்பு (சத்திசாரம்)** (வின்.); a salt of burning and acrid nature (செ.அக.).

**சக்கிலியப்பெண்** *šakkiliya-p-peṇ*, பெ. (n.) சக்கிலிச்சி பார்க்க; see *šakkilicci*. 'சக்கிலியப் பெண்ணும் சாமைக் கதிரும் சமைஞ்சா தெரியும்' *(பழ.)*

*[சக்கிலி + அ + பெண்]*

**சக்கிலியன்** *šakkiliyaṉ*, பெ. (n.) **செம்மான்;** chucklers, workers in leather (செ.அக.).

ம. சக்கிலியன்; க. சக்கள

*[சக்கிலி → சக்கிலியன்]*

சக்கிலி[3] பார்க்க

**சக்கு**[1] *šakku*, பெ. (n.) **கண்;** eye. "புரந்தர னெனுஞ் சக்கு வாயிர முடைக் களிறு" *(கலிங். 175)*

மறுவ. தாரை, விழி, திருக்கு, அம்பகம், கோ, நாட்டம், அக்கம்

*[அஂகுதல் = சுருங்குதல், சிறியதாதல், நுணுகுதல். அஂகு → அக்கு = துண்டு, சிறியது. அக்கு → சக்கு = சிறிய உருப்பாகிய கண்]*

Skt. šakṣuḥ; Pkt. šakkhū

யானையின் உருவத்தை நோக்க அதன் கண் சிறியதாதலால் சக்கு என்பது முதலில் யானைக் கண்ணைக் குறித்துப் பின் பொதுப் பெயராயிற்று.

**சக்கு**[2] *šakku*, பெ. (n.) **செக்கு;** a country oil-press.

ம. சக்கு; க. செக்கு; Pkt., Pali. cakka; Mar., H. cakkī

*[சருக்கரம் → சருக்கு → சக்கு. இற்றைச் செகர முதற்சொற்கள் சில பண்டு சகர முதலாயிருந்தனவென்று அறிதல் வேண்டும். எ-டு: சத்தான் → செத்தான், சக்கு → செக்கு]*

**சக்கு**[3] *šakku*, பெ. (n.) **பூஞ்சாளம்** (யாழ்ப்.); mouldiness.

தெ. சக்கு

*[சருகு → சருக்கு → சக்கு]*

**சக்குக்கட்டு-தல்** *šakku-k-kaṭṭu-*, 5 செ.குவி. (v.i.) **பூஞ்சாளம் பூத்தல்** (யாழ்ப்.); to grow mouldly.

*[சருகு → சருக்கு → சக்கு + கட்டு-,]*

**சக்குச்சக்கெனல்** *šakku-c-cakku-eṉal*, பெ. (n.) **ஓர் ஒலிக்குறிப்பு** (வின்); onom. expr. signifying harsh, dissonant, dull sound, as of a muffled drum 'சக்குச் சக்கென்று பாக்குத் தின்பான் சபை மெச்ச; வீட்டிலே வந்து கடைவாயை நக்குவான் பெண்டுகள் மெச்ச' *(பழ.)*

*[சக்கு + சக்கு + எனல்]*

**சக்குச்சுசியம்** *šakku-c-šusiyam*, பெ. (n.) 1. **கண்மை;** collyrium for the eyes, extracted

from Amomum antorhiza; 2. தாழை; a fragrant plant-Pandanus odaratissimus (சா. அக.).

**சக்குத்தானம்** *śakku-t-tāṉam*, பெ. (n.) தெய்வத் திருவுருவின் கண்களை நீரால் தூய்மை செய்யும் பூசைவகை (யாழ்.அக.); ceremonial washing of the eyes of a deity in a temple.

[சக்கு + தானம்]

**சக்குப்பிடி-த்தல்** *śakku-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) பூஞ்சாளம் பூத்தல் (இ.வ.); to grow mouldy.

[சருகு → சருக்கு → சக்கு + பிடி-,]

**சக்குப்பூ-த்தல்** *śakku-p-pū-*, 4 செ.கு.வி. சக்குப்பிடி-த்தல் பார்க்க (யாழ். அக.). see *śakku-p-piḍi-*.

[சக்கு + பூ-,]

**சக்குபு** *śakkupu*, பெ. (n.) கையாந்தகரை (மூ. அ.); a plant growing in wet places.

[சளசளத்தல் = சேறாயிருத்தல். சள → சளக்கு. சளக்கு → சக்கு = சேற்று நிலம். சக்கு → சக்குபு = நீர் கோத்த நிலத்தில் வளர்வது.]

**சக்குவரி** *śakkuvari*, பெ. (n.) ஒற்றொழித்து அடியொன்றுக்கு 14 எழுத்துகள் கொண்ட நாலடி மண்டிலம் (விருத்தம்) (வீரசோ. யாப். 33, உரை); a verse of four lines, each of them consisting of 14 letters.

Skt. śakvari

**சக்கேரம்** *śakkēram*, பெ. (n.) மெல்லிய தண்டும், முரட்டுத்தன்மையும் கொண்ட கரும்பு வகை; a kind of sugar cane.

[சக்கு = கண். சக்கு → சக்கேரம் = கண் போன்ற கணுக்கள் உள்ள கரும்பு]

**சக்கை**[1] *śakkai*, பெ. (n.) 1. உள்ளீடற்றது; that which is hollow. 2. தட்டையானது; that which is flat. 3. கோது, சிராய்; refuse, as of sugarcane after pressing; rind as fibrous parts of fruits; anything wanting in solidity or strength; anything useless; 4. பட்டை; bark. 5. இறுக்கும் தக்கை; bark small wooden peg. 4. துமுக்கி (துப்பாக்கி)த் தக்கை (யாழ்ப்.); wadding of a gun.

ம. சக்க; க., து., பட. சக்கெ; தெ. செக்க.

[தக்கை → சக்கை.]

**சக்கை**[2] *śakkai*, பெ. (n.) 1. பலா (இ.வ.); jack. 2. காட்டுப் பலா; jungle jack (செ.அக.).

ம. சக்க; க. சக; து. குச்செ; குட., பட. சக்கெ.

[தக்கை → சக்கை]

த. சக்கை → E. jack

(நீள்) வட்டவடிவம் என்னும் அடிப்படையில் சக்கரம் என்னும் சொல்லிலிருந்து சக்கை வந்திருக்கவேண்டுமெனக் குண்டற்று கருதினார். பயனற்றது, சத்தற்றது என்னும் பொருளில் வந்ததென மலையாள அகரமுதலி குறித்திருப்பதே பொருத்தமானது.

**சக்கை**[3] *śakkai*, பெ. (n.) தவச மணி நீக்கப்பட்ட கதிர்; grainless ear.

[தக்கை → சக்கை]

**சக்கைக்கல்** *śakkai-k-kal*, பெ. (n.) கற்சிறாய்; a thin split of stone.

க., பட. சக்கெ கல்லு

[சக்கை + கல்]

**சக்கைக்காய்** *śakkai-k-kāy*, பெ. (n.) பலாப் பழத்தின் பிஞ்சு; unripe fruit of jack fruit.

[சக்கை + காய்]

**சக்கைச்சுளை** *śakkai-c-cuḷai*, பெ. (n.) பலாப் பழத்திலுள்ள தசைப் பகுதி; the pulp of jack fruit.

ம. சக்கச்சுள

[சக்கை + சுளை. சுள் → சுளை = திரட்சி, திரண்ட பழச்சதைப் பகுதி]

**சக்கைப்பட்டம்** *śakkai-p-paṭṭam*, பெ. (n.) மாதத்தின் 14, 15ஆம் நாள்களில் செய்யும் விதைப்பு; sowing during 14th and 15th days of a month.

[சக்கை + பட்டம்]

மாதத்தின் 14, 15ஆம் நாள்களில் செய்யும் விதைப்பு போதிய விளைச்சல் தராமல் போய் விடும் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் இச் சொல் அமைந்திருக்கக் கூடும்.

**சக்கைப்பப்படம்** *śakkai-p-pappaḍam*, பெ. (n.) சக்கையப்பளம் பார்க்க; see *śakkai-y-appaḷam*.

ம. சக்கப்பப்படம்

[சக்கை + பப்படம்]

அப்பளி → அப்பளம். அப்பளித்தல் = சமனாகத் தேய்த்தல். த. அப்பளம் → Skt. parppaṭa → த. பப்படம்.

**சக்கைப்பழம்** *šakkai-p-paḻam,* பெ. (n.) பலாப் பழம்; jack fruit.

ம. சக்கப்பழம்; பட. சக்கண்ணு.

[சக்கை + பழம்]




**சக்கைப்பால்** *šakkai-p-pāl,* பெ. (n.) பலாப் பழத்தை வெட்டும்போது வடியும் ஒட்டும் தன்மையுள்ள வெண்மையான நீர்மம்; the sticky exudation from the jack fruit when cut.

ம. சக்கயரக்கு

[சக்கை + பால்]

**சக்கைப்புரட்டி** *šakkai-p-puraṭṭi,* பெ. (n.) களத்தில் சக்கைகளைப் புரட்டி விடவும், சென்று சேர்க்கவும் பயன்படும் கருவி; an implement used to gather straw.

[சக்கை + புரட்டி]

**சக்கைபுரட்டிவிடு-தல்** *šakkai-puraṭṭi-viḍu-,* 20 செ.குவி. (v.i.) சக்கைபோடுபோடு-தல் பார்க்க; see *šakkai-pōḍu-pōḍu-* (செஅக.).

தெ. தெக்க

[சக்கை + புரட்டி + விடு-,]

**சக்கைபோடுபோடு-தல்** *šakkai-pōḍu-pōḍu-,* 20 செ.குவி & செ.குன்றாவி. (v.i.) & (v.t.) திறமையாகச் செய்தல் (கொ.வ.); to accomplish a task skilfully (செஅக.).

[தக்கை → சக்கை + போடு + போடு-,]

**சக்கைமடல்** *šakkai-maḍal,* பெ. (n.) பலாப் பழத்தின் புறத்தோல்; the thicky thorny rind of jack fruit.

ம. சக்கமடல்

[சக்கை + மடல்]

**சக்கைமரம்** *šakkai-maram,* பெ. (n.) பலா மரம்; the jack tree.

ம. சக்கமரம்

[சக்கை + மரம்]

**சக்கைமுல்லை** *šakkai-mullai,* பெ. (n.) ஒரு வகை முல்லை; a kind of jasmine.

ம. சக்கமுல்ல; Skt. cakra malliga

[சக்கை + முல்லை. முல் → முல்லை = வெண் பூக்கொடி வகை]

**சக்கைமுள்** *šakkai-muḷ,* பெ. (n.) பலாப் பழத்தின் புறத்தோலில் இருக்கும் முள்; thorny projections on the rind of the jack fruit (சேரநா.)

ம. சக்கமுள்ளு

[சக்கை + முள்]

**சக்கையப்பளம்** *šakkai-y-appaḷam,* பெ. (n.) பலாக்காயின் சுளை கொண்டு செய்யும் அப்பளம்; a kind of pappaḍam - wafer prepared with the pulp of unripe jack fruit.

ம. சக்கப்பப்படம்

[சக்கை + அப்பளம். அப்பளித்தல் = சமமாகத் தேய்த்தல். அப்பளி → அப்பளம்]

**சக்கையன்** *šakkaiyaṉ,* பெ. (n.) உடல் வலியற்றுப் பருத்திருப்பவன் (யாழ்ப்.); a stout, but weak person (செஅக.).

ம. சக்கச்சன், சக்கமாடன்

[தக்கை → சக்கை → சக்கையன்.]

**சக்கையாய்** *šakkai-y-āy,* கு.வி.எ. (adv.) மிகுதியாக; in great measure, abundantly, excessively. மழை சக்கையாய்ப் பெய்தது (சாஅக.).

[சால் → சால்கு → சால்கை → சாக்கை→ சக்கை + ஆய். சாலுதல் = நிறைதல், மிகுதல், ஆய் - வி.எ. ஈறு.]

**சக்கையாய்ப்பிழி[1]-தல்** *šakkai-y-āy-p-piḻi-,* 2 செ.குன்றாவி. (v.t.) சாறு (சத்து) முழுவதும் அறும்படி பிழிதல்; to squeeze out the essence from a thing so completely as to leave only the refuse (சாஅக.).

[சக்கையாய் + பிழி-,]

**சக்கையாய்ப்பிழி[2]-தல்** *šakkai-y-āy-p-piḻi-,* 2 செ.குன்றாவி. (v.t.) கடுமையாக வேலை

வாங்குதல்; to extract hard work from, overwork, as reducing one to skeleton (செ.அக.).

[தக்கை → சக்கை + ஆய் + பிழி-,]

**சக்கையெடு-த்தல்** *śakkai-y-eḍu-*, 4 செ.கு.வி. (v.i) கதிரைப் பிணையிட்டுக் கூலங்கள் நீங்கிய பின் சக்கையையெடுத்தல்; to remove straws after removing grains.

[சக்கை[2] + எடு-,]

**சக்கைவாங்குவாங்கு-தல்** *śakkai-vāṅgu-vāṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சக்கையாய்ப் பிழி-தல் பார்க்க; see *śakkaiyāy-p-piḻi-*. 2. மிகக் கடிந்து பேசுதல்; to take to task severely (செ.அக.). அவனைச் சக்கை வாங்கு வாங்கினான்.

[சக்கை + வாங்கு + வாங்கு-,]

**சககாரம்** *śagakāram*, பெ. (n.) தேமா (பிங்.); a kind of sweet mango.

[சக்கரை → சகக்கரை → சககாரம்]

**சககிரபுட்பி** *śagagira-puṭpi*, பெ. (n.) குப்பைமேனி; a kind of plant.

[சக்கரபுட்பி → சககிரபுட்பி]

**சகச்சாரகம்** *śaga-c-cāragam*, பெ. (n.) சிவப்பு நெல்; a red variety of paddy (சா.அக.).

[சிவப்பு → செகப்பு = செம்மைநிறம். செகப்பு → சகப்பு. சக + சாரகம்]

**சகச்சிராட்சி** *śaga-c-cirāṭci*, பெ. (n.); ஒருவகைப் பூடு (தைலவ. தைல. 23) a kind of plant.

**சகச்சை** *śagaccai*, பெ. (n.) பொன்னாங்காணி; a yellow flowered edible plant known as verbesina mary-gold (சா.அக.).

**சகசம்**[1] *śagaśam*, பெ. (n.) 1. செம்முள்ளி; thorny nail dye-barleria prionitis. 2. நத்தைச் சூரி; bristly button weed (சா.அக.).

[சிகப்பு = செம்மை நிறம். சிகப்பு → சகப்பு → சகம் → சகசம்]

**சகசம்**[2] *śagaśam*, பெ. (n.) 1. இயற்கை; nature. 2. சகடம்; cart.

**சகசரி** *śagaśari*, பெ. (n.) 1. பொன்னிறங்கலந்த கரிய பூமருதோன்றி (மலை); henna. 2. வாடாக் குறிஞ்சி (திவா.); a plant of ever fresh flowers.

[சகசம் → சகசரி]

**சகசா** *śagaśā*, பெ. (n.) சிறு குறிஞ்சா (மலை.); small Indian ipecacuanha.

**சகசாகிகம்** *śagaśāgigam*, பெ. (n.) மிளகுத் தக்காளி; chilly takkali - Solanum melangena (சா.அக.).

**சகசீலகம்** *śaga-śīlagam*, பெ. (n.) முட்டைக் கோசு; cabbage (சா.அக.).

**சகசோபை** *śagaśōbai* பெ. (n.) ஆதொண்டை; thorny caper (சா.அக.).

**சகட்டடியாக** *śagaṭṭaḍi-y-āga*, கு.வி.எ. (adv.) மொத்தமாக; by the lump, at a sweep; on an average (செ.அக).

[சவட்டு → சகட்டு → சகட்டி → சகட்டடி + ஆக]

**சகட்டிலே** *śagaṭṭilē*, கு.வி.எ. (adv.) சகட்டடியாக பார்க்க (கொ.வ.); see *śagaṭṭaḍi-y-āga* (செ. அக.).

[சகடு → சகட்டு + இலே]

**சகட்டுக்கு** *śagaṭṭukku*, கு.வி.எ. (adv.) சகட்டடியாக பார்க்க (கொ.வ.); see *śagaṭṭaḍi-y-āga* (செ.அக.).

[சகடு → சகட்டுக்கு]

**சகட்டுமேனிக்கு** *śagaṭṭumēṉikku*, வி.எ. (adv.) எந்த வகை வேறுபாடும் பார்க்காமல், பாகுபாடு இல்லாமல், ஒட்டுமொத்தமாக; without any discretion or discrimination in a lump on, an average. என்ன ஏது என்று கேட்காமல் சகட்டுமேனிக்குப் பேசாதே.

ம. சரட்டுமேனி

[சகடம் = முழுமை, மொத்தம். சகட்டு + மேனி + கு. முழுமையாக அல்லது ஒட்டு மொத்தமாக. இனி, சகட்டு + மேனி. சகடு = சக்கரம், வண்டி. வண்டியோடும் போது அதன் சக்கரங்கள் சேறு, புழுதி, மேடு, பள்ளம், குப்பை என்று வேறுபாடு பார்க்காது செல்வதுபோல் எவ்வித வேறுபாடும் பார்க்காமல் அனைத்தையும் உள்ளடக்கியது என்னும் பொருளில் சகட்டுமேனிக்கு ஆளப்பட்டுள்ளது என்றுமாம். ஒ.நோ. கண்டமேனிக்கு]

**சகட்டை** *śagaṭṭai*, பெ. (n.) தமரத்தை; coromandal goose-berry (சா.அக.).

**சகடக்கால்** *śagaḍakkāl*, பெ. (n.) வண்டிச் சக்கரம்; cart-wheel; carriage-wheel. "சகடக்கால் போல வரும்" (நாலடி. 2).

*[சகடம் + கால். வண்டிக்குக் காலாக இருக்கும் சக்கரம்]*




**சகடப்பாதை** *šagaḍa-p-pādai,* பெ. (n.) **பெரும் பாதை** *(வின்);* highway, road for wheeled traffic.

*[சகட + பாதை. பதி → பதம் = நிலத்திற் பதியும் காலடி. பதம் → பாதம் → பாதை = பாதம்பட்டு உண்டாகும்வழி]*

ஒருவர் மட்டும் செல்லக்கூடிய அளவினதான ஒற்றையடிப்பாதையைப் (கால்பாதை) போலில்லாமல் வண்டியோடும் பாதை அகலமானதாக அமையும் தன்மை நோக்கி, சகடபாதை பெரும் பாதையைக் குறித்தது.

**சகடப்பொறி** *šagaḍa-p-pōṟi,* பெ. (n.) **சக்கர வடிவான ஒரு பொறி** *(சிலப். 15: 216, உரை.);* a machine in the shape of a wheel, used as a weapon of defence.

*[சகடம் + பொறி]*

**சகடபலம்** *šagaḍabalam,* பெ. (n.) **நீர்க்கோழி** *(சங். அக.);* water-fowl.




**சகடம்**[1] *šagaḍam,* பெ. (n.) *1.* **சக்கரம்** *(சங். அக);* wheel. *2.* **வண்டி;** cart, wheeled conveyance drawn by cattle, carriage, chariot. 'பல்கதிர் முத்தார் சகடம்' *(சீவக. 363);* 3. **தேர்;** car. 'சகட சக்கரத் தாமரை நாயகன்' *(கந்தபு. காப்பு. 1)* *4.* **சகடயூகம்** பார்க்க; see *šagaḍa-yūgam.* 'சகடமாம் வெய்ய யூகமும்' *(பாரத. எட்டாம். 3).* *5.* **கிணற்றிலிருந்து நீரிறைக்கப் பயன்படும் மரவுருளை;** a wooden pulley used for drawing water from the well.

ம. சகடம், சாடு; க. சகட, சகடி, சக்கடி; தெ. செகடா; Skt. sakaṭa; H., Mar. chakaḍā; Pkt. šagaḍa.

*[சக்கு → சக்கடம் → சக்கடா = கட்டை வண்டி. சக்கடம் → சகடம் = சக்கரம், வண்டி, பொது வகையான மாட்டு வண்டி, தேர் (வே.க. 240)]*

வளைவுப் பொருளைக் கொண்ட வண்டி (வள் + தி) முதலாவதாக வட்டமான சக்கரத்தை யுணர்த்திப் பின்பு ஆகுபெயராய்ச் சகடத்தை உணர்த்துகின்றது. சக்கரத்தை வண்டியென்னும் வழக்கு இன்றும் தென்னாட்டிலுள்ளது. சிறுவர் களிமண்ணாற் செய்த சக்கரத்தை வண்டி என்பர். உழவர் கமலையேற்றத்தின் மேலுள்ள உருளை (pulley)யைக் கமலைவண்டி என்பர்.

**சகடம்**[2] *šagaḍam,* பெ. (n.) **துந்துபி** *(பிங்.);* a large drum.

*[சகடு → சகடம்]*

சகடை[3] பார்க்க

**சகடம்**[3] *šagaḍam,* பெ. (n.) **ஊர்க்குருவி** *(பிங்.)* sparrow *(செ. அக.).*

**மறுவ.** குருவி, அடைக்கலான்

ம. சடகம், சடக்கம்

*[சகடு → சகடம். வட்டமாகப் பறக்கும் குருவி. ஒ.நோ. ஆல் → ஆவா = வட்டமிட்டுப் பறக்கும் பறவை வகை.]*

**சகடம்**[4] *šagaḍam,* பெ. (n.) **வட்டில்** *(பிங்,);* plate; cup.

*[சகடு → சகடம் - வட்டமானது]*

**சகடம்**[5] *šagaḍam,* பெ. (n.) **தமரத்தை** *(மூ.அ.);* carambola tree *(செ.அக.).*

**சகடம்**[6] šagaḍam, பெ. (n.) **ஓர் ஓக (யோகம்) நிலை;** a kind of yogic posture.

*[சகடு = சக்கரம், வட்டம். சகடு → சகடம்= உடலை வளைத்துச் செய்யும் ஓக நிலை]*

**சகடம்**[7] *šagaḍam,* பெ. (n.) *1.* **முழுமையானது;** the whole in a lump. *2.* **சராசரி;** average.

ம., க. சகடு

*[சகடு = வட்டம். சகடு → சகடம் = வட்டம், திரட்சி, முழுமை]*

**சகடம்புறா** *šagaḍam-puṟā*, பெ. (n.) பச்சைப் புறாவில் ஒரு வகை; a kind of dove.

*[சகடம் + புறா]*

**சகடமங்கலம்** *šagaḍa-mangalam*, பெ. (n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள நன்னிலத்தை உள்ளடக்கிய ஓரூர்; a village in Tiruvārūr district. "நெற்குணம், சகடமங்கலம் ராமன்நதீசுவரம் ராமனாதசுவாமி கிராமம்" *(நன்னி. க. தொ. 2. கல். 15, வரி 17).*

*[சகடம் + மங்கலம்]*

**சகடயூகம்** *šagaḍa-yūgam*, பெ. (n.) சகட வடிவாக அமைக்கப் பெறும் அணிவகுப்பு வகை; the array of an army in the shape of a car (செ.அக.).

*[சகடம் + யூகம்]*

**சகடயோகம்** *šagaḍa-yōgam*, பெ. (n.) குருவுக்கு ஆறு எட்டு பன்னிரண்டாம் வீட்டில் திங்கள் (சந்திரன்) இருத்தலால் உண்டாகும் பயன் *(சரசோ. குணாகுண. 117)*; occasional prosperity resulting from the situation of the moon in the sixth, eighth or twelth sign from jupiter *(astrol.)*.

*[சகடம் + யோகம்]*

த. ஓகம் → Skt. yōga → த. யோகம்

**சகடாசுரன்** *šakaḍāsuran*, பெ. (n.) கண்ணனைக் கொல்வதற்காக கம்சனால் அனுப்பப்பட்ட ஓர் அசுரன்; a demon sent by Kamša to kill Krisṇa (சிறப். பெ.அக.).

*[சகடம் + அசுரன். இவன் தன்னுடைய ஆற்றலை ஒரு வண்டியிற் புகுத்திக் கொண்டு கண்ணனைக் கொல்லுவதற்கு நேரம் பார்த்துக் காத்திருந்ததாகவும், கண்ணன் அவ் வண்டியைக் காலால் உதைத்து அவ்வசுரனைக் கொன்றதாகவும் கதை. சுரன் = தேவன். அசுரன் = தேவனல்லாதான் தேவர்க்குப் பகைவன். 'அ' அன்மை மறுதலைப் பொருள் முன்னொட்டு]*

**சகடான்னம்** *šagadānnam*, பெ. (n.) தூய்மையற்ற உணவு (யாழ். அக.); bad food.

*[கசடு → சகடு + அன்னம். கசடு → சகடு - முன் பின்னாக மாறிய இலக்கணப் போலி]*

Skt. anna → த. அன்னம்

**சகடி** *šagaḍi*, பெ. (n.) வண்டி (சங்.அக.); cart.

*[சகடம் → சகடு → சகடி (வே.க. 240)]*

த. சகடி → Skt. śakaṭi

**சகடிகை** *šagaḍigai*, பெ. (n.) கைவண்டி (யாழ்.அக.); hand-cart.

*[சகடு → சகடி → சகடிகை (வே.க.240)]*

த. சகடிகை → Skt. śakaṭikā

**சகடு**[1] *šagaḍu*, பெ. (n.) 1. சக்கரம்; wheel. 2. வண்டி; cart. "பெருஞ்சகடு தேர்காட்ட" *(பெரியபு. திருநா. 6).* 3. தேரைக் குறிக்கும் சதுரங்கக் காய்; bishop in chess.

ம. சகடு; Skt. šagaṭa

*[தகடு → சகடு. சகடு என்னும் வடிவம் வடமொழியில் இல்லை (வே.க. 240)]*

**சகடு**[2] *šagaḍu*, பெ. (n.) கசடு பார்க்க; see *kašaḍu*.

*[கசடு → சகடு]*

**சகடு**[3] *šagaḍu*, பெ. (n.) மொத்தம்; as a whole, in a lump.

ம. சகடு; க. சகுடம்; பட. சகட்டு Skt. šagaṭa

*[தகடு → சகடு = வட்டமானது. ஒரு வளைவுக்குள் இருப்பது, மொத்தமானது]*

**சகடை**[1] *šagaḍai*, பெ. (n.) சகடு[1] பார்க்க (புறநா. 60, 8, உரை.); see *šagaḍu*[1].

*[சகடு → சகடை (வே.க. 241)]*

**சகடை**[2] *šagaḍai*, பெ. (n.) 1. மணம்; smell. 2. வசம்பு; sweet flag - Aeorus calamus (சா.அக.).

*[சகடு → சகடை]*

**சகடை**[3] *šagaḍai*, பெ. (n.) 1. சகண்டை[1] பார்க்க; see *šaganḍai*. 'சகடையோ பார்த்தவன்றே' *(கம்பரா. பிரமாத்திர. 5).* 2. இறப்பு நிகழ்வில் ஊதும் துந்துபி என்னும் இசைக்கருவி (வாச்சியம்) (வின்.); a tabret used as funerals.

*[சவள் → சவள் → சகள் → சகண்டை = வட்டமான பறை. சகண்டை → சகடை = சக்கரம், சக்கரமுள்ள வண்டி, பறை]*

**சகடை**[4] *šagaḍai*, பெ. (n.) கிணற்றில் நீரிறைக்கப் பயன்படுத்தும் கப்பி; roller-pulley to draw



சகடை

water from well. தண்ணி மொள்ள சகடையுங் கயிறுங் கொண்டு வா.

ம. சகட

*[சகடு → சகடை]*

த சகடை → Skt. šakaṭa

**சகடைக்கொட்டி** *šagaḍai-koṭṭi*, பெ. (n.) முரசறைவோன்; drummer *(S.I.I.ii, 277)*.

*[சகடை³ + கொட்டி. கொள் → கொட்டு → கொட்டி = கொட்டுபவன், அடிப்பவன்]*

**சகண்டை** *šagaṇḍai*, பெ. (n.) 1. துந்துபி யென்னும் முரசு (பிங்.); a kind of large drum. 2. பறை (வாச்சியப்பொது) (திவா.); drum.

*[சவள் → சவள் → (சகள்) → சகண்டை (மு.தா. 268.)]*

**சகணம்¹** *šagaṇam*, பெ. (n.) புளியாரை; Indian sorrel - Oxalis corniculata (சா.அக.).

**சகணம்²** *šagaṇam*, பெ. (n.) சாணம்; cow-dung (செ.அக.).

*[சண்ணுதல் = நீக்குதல். சண் → (சாண்) → சாணம் = சாணி, மாட்டுப்பவ்வீ. சாணம் → சகணம்]*

க. சகண; பட. செகணி; Skt. chagaṇa

சாணம்¹ பார்க்க

**சகணம்³** *šagaṇam*, பெ. (n.) 1. பயனற்ற பொருள்; something useless or worthless. 2. உள்ளீடற்ற தேங்காய்; an empty or seedless coconut (சேரநா.).

ம. சகணம்

*[சாணம் → சகணம். சாணியை உருவகப்படுத்தி இழிபொருள் உணர்த்தும் வழக்கு நோக்கி இப்பொருள்கள் ஆளப்பட்டுள்ளன]*

'இந்தச் சாணிப் பயலுக்கு என்ன சொன்னாலும் ஏறாது' (உ.வ.) எனும் வழக்கைக் காண்க.

**சகணவர்த்தமரோகம்** *šagaṇa-arttama-rōgam* பெ. (n.) கண்ணோய் வகை (சீவரட். 246); an eye disease.

*[சக்கு → சக → சகண + வர்த்தம + ரோகம்]*

**சகத்திராமி** *šagattirāmi*, பெ. (n.) முப்பிரண்டை; triangular-stalked vine vitis (சா.அக.).

**சகதாமத்தி** *šagatāmatti*, பெ. (n.) தகரை (வின்.); foetid cassia.

மறுவ. சக்கரம்

**சகதி¹** *šagadi*, பெ. (n.) 1. சேறு, ஈரக்குழைவான மண் (திவா.); mud; mire. 'சகதியில் கல்லை விட்டெறிந்தால் தன்துணி என்றும் அசலார் துணி என்றும் பாராது' (பழ.). 2. பொல்லாநிலம்; bog, puddle.

ம. சகதி; க. கரிய; கோத. கெத்தெ; குரு. கச்; Skt. šāda

*[அள்ளுதல் = செறிதல். அள் → அள்ளல்= செறிவு, சேறு. அள்ளல் = சள்ளல். சள் → சய் → சய → சக+தி → சகதி]*

**சகதி²** *šagadi*, பெ. (n.) 1. ஒற்றொழித்துப் பாதம் ஒன்றுக்குப் பன்னிரண்டு எழுத்தாய்த் தமிழில் வழங்கும் வடமொழி மண்டிலம் (விருத்தம்) (வீரசோ. யாப். 33, உரை); Sanskrit verse of four metrical lines of 12 syllables each, adopted in Tamil. 2. நிலம் (யாழ்.அக.); the earth.

*[சகடம் → சகடி → சகதி]*

த. சகதி → Skt. jagati

**சகநாதம்** *šaganādam*, பெ. (n.) துணிவகை (இ.வ.); a kind of cloth (செ.அக.).

**சகம்** *šagam*, பெ. (n.) 1. வெள்ளாடு; goat. 2. முயல்; hare (சா.அக.).

*[தகர் → தகம் → சகம்]*

**சகர்** *šagar*, பெ. (n.) பாம்புகொல்லி; கீரிப்பூடு; Indian snake root; snake-killer; Ophiorrhiza mungos (சா.அக.).

**சகரகம்** *šagaragam*, பெ. (n.) வேம்பு; margosa tree - Aza dirachta Indica (சா.அக.).

**சகரஆகாரம்** *šagara-āgāram*, பெ. (n.) 'சா' என்னும் எழுத்து; the letter 'šā'.

*[சகரம் + ஆகாரம்]*

உயிர்மெய்யெழுத்துகளுள் குறிலுக்குக் கரம் சாரியை. நெடிலுக்குத் தனிச் சாரியை இல்லை. இதனால் மெய்யையும் நெடிலையும் பிரித்து சகர ஆகாரம் எனச் சொல்லப்பெறும்.

**சகரஈகாரம்** *šagara-īgāram*, பெ. (n.) 'சீ' என்னும் எழுத்து; the letter 'šī'.

*[சகரம் + ஈகாரம்]*

**சகரஊகாரம்** *šagara-ūgāram*, பெ. (n.) 'சூ' என்னும் எழுத்து; the letter 'šū'.

*[சகரம் + ஊகாரம்]*

**சகரஏகாரம்** *šagara-ēgāram*, பெ. (n.) 'சே' என்னும் எழுத்து; the letter 'šē'.

*[சகரம் + ஏகாரம்]*

**சகரஐகாரம்** *šagara-aigāram,* பெ. (n.) 'சை' என்னும் எழுத்து; the letter 'šai'.

*[சகரம் + ஐகாரம்]*

**சகரஓகாரம்** *šagara-ōgāram,* பெ. (n.) 'சோ' என்னும் எழுத்து; the letter 'šō'.

*[சகரம் + ஓகாரம்]*

**சகரச்சாரி** *šagaraccāri,* பெ. (n.) சத்திசாரம் (வின்.); a salt of acid and burning taste.

**சகரநீர்** *šagaranīr,* பெ. (n.) கடல்; sea. 'சகரநீர் சுலாம் புவி' *(பிரமோத். 13. 66).*

*[சக்கரம் → சகரம் + நீர். சகரம் = நிலவுலகைச் சுற்றியிருப்பது]*

சாகரம்[1] பார்க்க

**சகரம்[1]** *šagaram,* பெ. (n.) பீர்க்கு; sponge-gourd.

*[தகரம் → சகரம்]*

**சகரம்[2]** *šagaram,* பெ. (n.) 'ச' என்னும் தமிழ் வண்ணமாலை எழுத்து; the letter 'ša'.

*[ச+கரம். கரம் குறிற்சாரியை]*

**சகரம்[3]** *šagaram,* பெ. (n.) சாகரம்[1] பார்க்க; see *šāgaram [1]*.

*[சக்கரம் → சகரம் = மண்ணுலகைச் சுற்றி இருப்பது]*

**சகரன்** *šagaran,* பெ. (n.) முதலேழு வள்ளல்களுள் ஒருவன்; a chief famed for liberality, one of seven mutal-vaḻḻalkal (செ.அக.).

*[அகரம் = மருத நிலத்தூர், ஊர். அகரம் → அகரன் → சகரன். இனி, அகலம் → அகலன் = பெருமையுடையவன். அகலன் → (அகரன்) → சகரன் என்றுமாம்]*

**சகரிகம்** *šagarigam,* பெ. (n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

ம. சகரிகம் (ஒரு மருந்துச் செடி); Skt. śaikharika.

**சகருவம்** *šagaruvam,* பெ. (n.) பெருமை; celebrity.

*[அகல் → அகலம் → (அகரம்) → சகரம் → சகருவம்]*

**சகரையாண்டு** *šagarai-y-āṇṭu,* பெ. (n.) கி.பி. 78இல் தொடங்குவதும் சாலிவாகனன் பெயரால் வழங்குவதுமான ஆண்டு மானம்; Sālivāhana Era commencing from 78 A.D. (செ.அக.).

*[சகரை + ஆண்டு]*

சக்கரம் = ஆணைச் சக்கரம். சக்கரம் → சகரம் → சகரை - ஆண்டூழி என்றுமாம்.

**சகல்** *šagal,* பெ. (n.) கொதுகு; gnats, small flies (செ.அக.).

**சகலகம்** *šagalagam,* பெ. (n.) வெள்ளாடு; goat (யாழ்.அக.).

*[சகம் → சகலகம்]*

**சகலபாசனம்** *šakala-pāšaṉam,* பெ. (n.) அருகன் முக்குடையுள் ஒன்று; an umbrella of Arhat, one of *muk-kuḍai* (சூடா.).

**சகலம்** *šagalam,* பெ. (n.) துண்டு; piece, fragment. 'கொடிஞ்சியுஞ் சகலமுற்று' *(பாரத. பதினான். 150).*

*[சில் → சல் → சகல் → சகலம்]*

Skt. śakala

**சகலமங்கலை** *šagala-maṅgalai,* பெ. (n.) மலைமகள்; Parvati (யாழ். அக.).

**சகலாத்தன்** *šagalāttaṉ,* பெ. (n.) அருகருள் நிகண்டவர்களால் கடவுளென்று கொள்ளப் படுபவர்; God worshipped by the Nirgrantha feet of Jains. "அனையாஞ் சகலாத்தரை" *(பிரபோத. 33, 6).*

*[அகலன் = கடவுள். அத்தன் = அருகன். அகலன் + அத்தன் - அகலத்தன் → சகலத்தன்]*

**சகலாத்து** *šagalāttu,* பெ. (n.) ஒருவகை கம்பளித் துணி; woollen stuff; broadcloth. "கட்டிலின் மேற்கட்டி சகலாத் தென்றும்" *(விறலிவிடு. 142).*

ம. சகலாத்து; U. saklat; Pkt. escarlata

*[சல்லாத்து = நெருக்கமான இழை யோடாத துணி. சல்லாத்து → சகலாத்தல்]*

**சகலி** *šagali,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish (செ.அக.).



சகலி மீன்

**சகலிகரணம்** *šagali-karaṇam,* பெ. (n.) துண்டு துண்டாக்குகை; breaking into pieces (யாழ். அக.).

*[சகலி + கரணம்]*

**சகவம்**[1] *šagavam,* பெ. (n.) பறவை வகை; a bird. (யாழ்.அக.).

*[சகடம் → சகணம் → சகவம்]*

**சகவம்**[2] *šagavam,* பெ. (n.) பெண் வாத்து; duck (சா.அக.).

*[சகமம் → சகவம்]*

**சகளத்திருமேனி** *šagaḷa-t-tirumēṉi,* பெ. (n.) சிவனது உருவவடிவம்; the body or form assumed by Śiva (செ.அக.).

*[சகளம் + திருமேனி]*

**சகளநிட்களம்** *šakaḷa-nitkalam,* 4 பெ. (n.) இலிங்கமாகிய சிவனது அருவுருவத் திருமேனி; the aspect of Śivaṉ as being with and without form, represented by the linga (சி.போ.பா. 8.1, 359).

*[சகளம் + நிட்களம்]*

Skt. niṣkala → த. நிட்களம்

**சகளப்பாடி** *šagala-p-pāḍi,* பெ. (n.) சகலன் பார்க்க; see *šagalaṉ* (செ.அக.).

*[சகலப்பாடி → சகளப்பாடி]*

**சகளம்** *šagalam,* பெ. (n.) உருவத் திருமேனி; the aspect of Śivaṉ as having form, represented by the images. 'சகளமாய் வந்ததென் றுந்தீபற' (திருவுந்தி. 1).

*[சட்டம் → சடம் → சகடம் → சகளம்]*

**சகளவல்லகி** *šagaḷa-vallagi,* பெ. (n.) வீணை வகை; a kind of lute. (பரத. ஒழி. 15).

*[சகளம் + வல்லகி]*

**சகளன்** *šagaḷaṉ,* பெ. (n.) உருவத் திருமேனி கொண்ட சிவன்; Śiva, as with form (சி.சி. 1.65. ஞானப்.).

*[சகளம் → சகளன்]*

**சகளாதனம்** *šagaḷādaṉam,* பெ. (n.) இடக் கையின் மேல் இருகாலையும் ஊன்றி அட்டணைக் காலிட்டிருக்கும் இருக்கை; a yogic posture in which a person sits cross-legged over his left hand (யாழ். அக.).

*[சக்கரம் → சக்கரணம்(கால்) → சகரணம் → சகனம் → சகளாதனம்]*

**சகன்** *šagaṉ,* பெ. (n.) சாலிவாகனன்; sāli vāhaṉa. 'சகன்காலம்' (பெருந்தொ. 956).

*[அகன் = கணவன், தலைவன். அகன் → சகன்]*

**சகன்பன்னி** *šagaṉ-paṉṉi,* பெ. (n.) அகத்தி; Sesbania grandiflora (சா.அக.).

**சகன்னம்** *šagaṉṉam,* பெ. (n.) உற்றுக் கேட்டல்; listening attentively.

**சகனம்**[1] *šagaṉam,* பெ. (n.) உடலின் பின்புறத்தில் புடைப்பாக உள்ள பகுதி, பிட்டம்; buttock, rump (செ.அக.).

*[சகடம் → சகனம்]*

த. சகனம் → Skt. jaghana

**சகனம்**[2] *šagaṉam,* பெ. (n.) பொறுமை; patience; forbearance (செ. அக.).

*[அகம் → அகன் = மனம், உள்ளம். ம் → ன் (போலி). அகன் → அகனம் → சகனம் = மனத்துள் அடக்கிவைத்தல், பொறுமை]*

சகனம் → Skt. sahana

**சகா** *šagā,* பெ. (n.) சகர் பார்க்க (மலை) see *šagar.*

மறுவ. கிரிப்பூடு

*[சகர் → சகா]*

**சகாசகா** *šagā-šagā,* பெ. (n.) ஆவாரை; tanner's cassia - Cassia auriculata (சா.அக.).

**சகாடி** *šagāḍi,* பெ. (n.) *சகரம்¹* பார்க்க *(மலை);* see *šagaram (சா.அக.).*

*[சகரம் → சகா → சகாடி]*

**சகாதம்** *šagādam,* பெ. (n.) வேம்பு; margosa tree - Azadirachta Indica *(சா.அக.).*

**சகாதி** *šagādi,* பெ. (n.) *சகர்* பார்க்க; see *šagar (செ.அக.).*

*[சகர் → சகா → சகாதி]*

**சகாதேவம்** *šagā-dēvam,* பெ. (n.) *ஏலம்; ஏலக்காய்;* cardamom - Elliteria cardamomum *(சா.அக.).*

**சகாமியம்** *šagā-miyam,* பெ. (n.) *ஆலமரம்;* banyan tree - Ficus indica alias F. bengalensis *(சா.அக.).*

**சகாரம்¹** *šagāram,* பெ. (n.) *மாமரம்;* mango tree-Mangiferus indica *(சா.அக.).*

*[சக்கரை → சக்காரம் → சகாரம் = இனிப்புச் சுவையுள்ள பழத்தைத் தருவது.]*

சகாரம் கனியைக் குறிப்பின் பண்பாகு பெயரும் மரத்தைக் குறிப்பின் சினையாகு பெயரும் இருமடியாகு பெயரும் ஆகும்.

**சகாரம்²** *šagāram,* பெ. (n.) *ஏச்சு (நாஞ்.);* abuse.

ம. சகாரம்

*[சகாரி → சகாரம்]*

**சகாரி-த்தல்** *šagāri-,* 11 செ.குன்றாவி. (v.t.) ஏசுதல் *(நாஞ்.);* to abuse, revile.

ம. சகாரம்

**சகாவதீதம்** *šagāvadīdam,* பெ. (n.) *மலை நொச்சி மரம்;* tell chaste tree - Vites altissima *(சா.அக.).*

**சகியம்¹** *šagiyam,* பெ. (n.) 1. *நிலப்பனை;* ground neem. 2. *மஞ்சள்;* turmeric-Curcuma longa. 3. *சேம்பு;* Indian kales - Colocasia antiguorum. 4. *சேப்பங் கிழங்கு;* an esculent root - Caladium nymphaefolium *(சா.அக.).*

*[சகடு = வளைந்தது, வளைவு. சகடு → சகடி → சகிடி → சகியம்]*

**சகியம்²** *šagiyam,* பெ. (n.) *காவிரி ஆறு உருவாகும் மலை;* the mountain in Coorg where the Cauveri has its source *(செ.அக.).*

Skt. shya

**சகிலாகி** *šagilāgi,* பெ. (n.) *கண்டத்திப்பிலி;* Bengal long pepper - Clavica Roxburg.

**சகுச்சம்** *šaguccam,* பெ. (n.) *ஏழிலைப் புன்னை;* seven-leaved milky plant - Alstonia scholaris *(சா.அக.).*

**சகுட்டகம்** *šaguṭṭagam,* பெ. (n.) *ஆடு தீண்டாப் பாலை (மலை.);* worm-killer, a medicinal plant.

**சகுட்டம்** *šaguṭṭam,* பெ. (n.) *சகுட்டகம்* பார்க்க *(வின்.);* see *šaguṭṭagam.*

*[சகுட்டகம் → சகுட்டம்]*

**சகுடம்¹** *šaguḍam,* பெ. (n.) *சேம்பு;* cocco 'சகுட நீரென' *(பாரத.குருகுல.14).*

*[சகடம் → சகுடம்]*

**சகுடம்²** *šaguḍam,* பெ. (n.) *நாய்;* dog 'சகுடம்போ லவன் மனத்திற் சசிகாமம் பிடித்தலைப்ப' *(குற்றா.தல. மந்தமா. 38).*

*[சகடம் = வளைவு. சகடம் → சகுடம்]*

த. சகுடம் → Skt. jakuṭa

**சகுடை** *šaguḍai,* பெ. (n.) *சிற்றகத்தி;* common sesbane - Sesbania aegyptiaca *(சா.அக.).*

**சகுண்டக்கொடி** *šaguṇḍa-k-kōḍi,* பெ. (n.) *ஊசலாங்கொடி;* a kind of medicinal creeper *(சா.அக.).*

**சகுண்டகம்** *šaguṇḍagam,* பெ. (n.) *முக்கிளிக் கீரை;* kind of greens - Corchorus capsularis *(சா.அக.).*

**சகுண்டகா** *šaguṇḍagā,* பெ. (n.) *சகுட்டகம்* பார்க்க; see *šaguṭṭagam.*

*[சகுட்டகம் → சகுண்டகா]*

**சகுண்டிகை** *šaguṇḍigai,* பெ. (n.) *பாக்குமரம்;* areca-nut *(சா.அக.).*

**சகுணம்** *šaguṇam,* பெ. (n.) *குணத்தோடு கூடியது;* that which has qualities or attributes. 'சாடரிய சகுணமெனு' *(திருவிளை. மாணிக்கம்.66).*

*[குணம் → சகுணம்]*

**சகுந்தம்**[1] *šagundam,* பெ. (n.) *1.* **பறவை;** bird. 'சகுந்தங்க ணீள நோக்கின' *(கம்பரா. சித்திர. 43).* *2.* **கழுகு** *(சூடா.);* eagle. *3.* **கமுகு** *(மலை.);* arecapalm.

*[சகடம் → சகுடம் → சகுண்டம் → சகுந்தம்]*

த. சகுந்தம் → Skt. śakunta

**சகுந்தம்**[2] *šagundam,* பெ. (n.) **பூதம்** *(அக.நி.);* goblin.

**சகுலகண்டம்** *šagula-kaṇḍam,* பெ. (n.) **பொன் வண்ண மீன்** (புதுவை.); a kind of fish (செ.அக.).

*[சகுலம் + கண்டம்]*

**சகுலம்** *šagulam,* பெ. (n.) *1.* **மொந்தன் வாழை;** a large plantain. *2.* **வலுமிக்க மீன் அதாவது திமிங்கிலம்;** a powerful fish as whale *(சா.அக.).*

**சகுலன்** *šagulan̲,* பெ. (n.) **ஒருவகைப் பாம்பு;** a kind of snake *(சா.அக.).*

**சகுலாட்சகம்** *šagulāṭcagam,* பெ. (n.) **பவள மறுகு;** a red species of grass - Cynoden genus *(சா.அக.).*

**சகுலாதி** *šagulādi,* பெ. (n.) கடுரோகிணி (மலை.); christmas rose *(சா.அக.).*

**சகுலாதினி** *sagulādin̲i,* பெ. (n.) சகுலாதி பார்க்க; see sagulāḍi.

*[சகுலாதி → சகுலாதினி]*

**சகுலி**[1] *šaguli,* பெ. (n.) **மீன்வகை** *(வின்.);* a kind of fish.

**சகுலி**[2] *šaguli,* பெ. (n.) **அப்பவகை;** a kind of cake. 'அங்கைச் சகுலியு நோக்கி' *(கந்தபு. சந்திரசாப. 11).*

த. சகுலி → Skt. śakulī

*[அம்கேல்லி → அக்குல்லி → சக்குல்லி → சகுலி]*

**சகுலி**[3] *šaguli,* பெ. (n.) **ஒளி;** light.

*[அழல் = நெருப்பு, அழல் → அழலி → அகலி → அகுலி → சகுலி]*

**சகுன்மம்** *šagun̲mam,* பெ. (n.) காட்டுக் கரணை (M.M.414) purple stalked dragon.

**சகுனம்**[1] *šagun̲am,* பெ. (n.) *1.* **பறவை** *(பிங்.);* bird. *2.* **பறவைகள் வலமிடமாதல் முதலிய நன்மை தீமைக்குறி;** omen, as indicated by flight of birds, etc. 'நிமித்தமுஞ் சகுனமும்' *(பெருங். இலாவாண 18,39).* 'சகுனம் நன்றா யிருக்கிறதென்று பொழுதுவிடிகிற வரைக்கும் கன்னம் வைக்கலாமா?' *(பழ.)* *3.* **சகுனி**[1] *3* பார்க்க. (விதான. பஞ்சாங். 29, உரை); see *šagun̲i*[1]*3* (Astron.) *4.* **சகோரம்**[1] பார்க்க (உரி.நி.); see *šagōram.*

*[சகடம் → சகணம் → சகுணம் → சகுனம் = வளைந்து அல்லது வட்டமாகப் பறக்கும் பறவை. அப்பறவையின் பறக்கும் தன்மையை வைத்துக் கணிக்கும் நிமித்தம். வடமொழியில் சகுன (śakuna) என்பதற்குப் பறவை, குறிப்பாகப் பெரிய பறவை என்னும் பொருள் கொண்டு அதற்கு மூலமாக சக் (śak) என்பதனைக் காட்டுகிறது மா.வி. அகரமுதலி. ஆற்றல் எனும் பொருள்படும் சக் என்பதற்குப் பிறவகை ஆற்றல்களே பொருத்தம். பறக்கும் தன்மையால் பெறும் பெயர் பொருத்தமில்லாமையைக் கண்டு கொள்க.*

*த. சகுனம் → Skt. śakuna*

*வல்லூறு, ஆந்தை, காகம், கரிக்குருவி, காடை முதலிய பறவைகளின் குரலையும் இயக்கத்தையும் கொண்டு, வரப்போகும் நன்மை தீமைகளைக் கணித்துக் கூறுவது சகுனம் (புள்நூல்.).*

*சகுனம் - பறவை. பறவையால் அறியப்படும் குறியைச் சகுனம் என்பது ஆகுபெயர்.]*

**சகுனம்**[2] *šagun̲am,* பெ. (n.) *1.* **கிழங்கு** *(பிங்.);* edible or other tuberous roots. *2.* பேரரத்தை (மூ.அ.) பார்க்க; see *pērarattai.*

*[சகடம் = வட்டமானது சகடம் → சகடம் → சகணம் → சகுணம் → சகுனம். உருண்டை வடிவான கிழங்கு]*

**சகுனி**[1] *šagun̲i,* பெ. (n.) *1.* **பறவை** *(பிங்.);* bird. *2.* **கூகை** *(யாழ்.அக.);* owl. *3.* **கரணம் பதினொன்றில் இருட்பக்கத்துப் பதினான்காம் பிறையின் (கிருட்டிணபட்சத்துச் சதுர்த்தசியின்) பிற்பகுதியில் வருங்காலம்;** a division of time,

the latter half of the 14th day of the dark fortnight, one of 11 karaṇam.

*[சகுனம் → சகுனி]*

**சகுனி**[2] *šaguṉi*, பெ. (n.) **நிமித்தம் பார்ப்போன்** *(பிங்.)*; augur, one who predicts future by omens.

*[சகுனம் → சகுனி]*

**சகை** *šagai*, பெ. (n.) **கரிய போளம்**; black bole or aloe.

**சகோடம்** *šagōḍam*, பெ. (n.) **சகோடயாழ்** பார்க்க *(சிலப். 3. 26, உரை)*; see *šagōḍayāḻ*.

*[சகடம் → சகோடம் (வேக. 241)]*

**சகோடயாழ்** *šagōḍayāḻ*, பெ. (n.) **16 நரம்பு கொண்ட யாழ்** *(சிலப். 3, 26, உரை)*; a lute with 16 strings.

*[சகோடம் + யாழ்]*

நரம்புக் கருவி பல வகைப்படும். அவற்றுள் ஐந்து பெரு வழக்கானவை. அவை பேரியாழ் (21 நரம்பு), மகரயாழ் (19 நரம்பு), சகோடயாழ் (16 நரம்பு), செங்கோட்டி யாழ் (7 நரம்பு), சுரை யாழ் (1 நரம்பு) என்பன.

நரம்புக் கருவிகளெல்லாம் பண்டைக் காலத்தில் யாழ் என்றே கூறப்பட்டன. இப்போதுள்ள வீணை செங்கோட்டி யாழாக அல்லது அதன் திருத்தமாக இருத்தல் வேண்டும். செங்கோடு நேரான தண்டு. செங்கோல் என்பதை இதனொடு ஒப்பு நோக்குக *(ஒ. மொா. 177)*.



சகோடயாழ்

**சகோரக்கண்ணி** *šagōra-k-kaṇṇi*, பெ. (n.) **சகோரப் பறவையின் கண் போன்ற கண்ணை யுடைய அழகானவள்**; a beautiful woman, who has beautiful eye like cakōra bird's eye.

ம., க. சகோராக்ழி

*[சகோரம் + கண்ணி]*

**சகோரம்**[1] *šagōram*, பெ. (n.) **நிலா முகிப்புள்** *(பிங்.)*; cakōra, the Greek patridge fabled to subsist on moon beams, Caccabis graeca *(செ.அக.)*.

ம. சம், சகோரம், சகோரகம்; க. சகோர, சகோரக.

*[சகோடம் → சகோரம் (வே.க. 241)]*

சகோரம் → Skt. cakra

நிலாக் கதிர்களை உணவாகக் கொண்டு வாழ்வதாகக் கருதப்படும் புள்வகை.

**சகோரம்**[2] *šagōram*, பெ. (n.) **செம்போத்து**; crow pheasant *(செ.அக.)*.

மறுவ. கள்ளிக் காக்கை

*[சகோடம் → சகோரம்]*

செந்நிறமானதாகவும் செங்கண்ணுடையதாகவும் காக்கையைப் போன்றுமிருக்கும் ஒரு பறவை. பூச்சிகளையும் பழங்களையும் உண்டு வாழும் இப் பறவையின் அலகு காக்கையைப் போல் நீண்டிராது.



சகோரம்

**சகோரம்**[3] *šagōram*, பெ. (n.) **செம்பரத்தை** *(மலை.)*; shoe flower.

*[செவ் → செவு → செகு → செக்கு → செக்கம் = சிவப்பு. செக்கச்செவேர் எனல் = மிகச் சிவந்திருத்தல். செக்கம் → செக்கர் = செவ்வந்தி. செக்கல் → செக்கல் = சிவப்பு. செக்கர் → சக்கர் → சகோரம்]*

**சகோரம்**[4] *šagōram*, பெ. (n.) **பேராந்தை** *(பிங்.)*; a species of large owl.

*[சகோடம் → சகோரம் (வே.க. 241)]*

**சகோரி** *šagōri*, பெ. (n.) **பெண் சகோரப் பறவை**; a female cagōra bird *(சேரநா.)*.

ம., க. சகோரி

*[சகோரம் (ஆ.பா.) → சகோரி (பெ.பா.)]*

**சங்கக்காணிக்கை** *šaṅga-k-kāṇikkai,* பெ. (n.) அவைக் (சபை) காணிக்கை (கிறித்.); congregational contribution (செ.அக.).

*[சங்கம் + காணிக்கை]*

**சங்கக்காப்பு** *šaṅga-k-kāppu,* பெ. (n.) மகளிர் கையிலணியும் சங்குவளை (மீனவ.); bracelet made of conch-shells worn by women (செ.அக.).

*[சங்கு → சங்கம் + காப்பு]*

**சங்கக்காலம்** *šaṅga-k-kālam,* பெ. (n.) கழகக் காலம் பார்க்க; see *kaḻaga-k-kālam.*

*[சங்கம் + காலம்]*

**சங்கக்குழையன்** *šaṅga-k-kuḻaiyaṉ,* பெ. (n.) சங்கினாலியன்ற காதணியை யுடையவன், சிவன்; Šivaṉ, as wearing conch-shell ear-ring ornaments. "சங்கக்குழையனைத் தென்கருவாபுரித் தாணுவை" (திருக்கருவை. கலித். 56).

*[சங்க + குழையன்]*

**சங்கக்கூலி** *šaṅga-k-kūli,* பெ. (n.) சங்கூதும் கூலி; wage for blowing conch.

*[சங்கம் + கூலி]*

**சங்கக்கையன்** *šaṅga-k-kaiyaṉ,* பெ. (n.). சங்கினைக் கையில் கொண்டவன், திருமால்; Tirumāl (Viṣṇu) as holding conch in his hand.

*[சங்கம் + கையன்]*

**சங்கங்குப்பி** *šaṅgaṅ-kuppi,* பெ. (n.) பீநாறிச் சங்கு (பதார்த்த. 257); smooth volkameria.

மறுவ. பீச்சுவிளாத்தி

ம. சங்கக்குப்பி

*[சங்கம் + குப்பி]*

**சங்கச்செய்நஞ்சு** *šaṅga-c-cey-nañju,* பெ. (n.) பிறவி செய்நஞ்சு (பாஷாணம்) வகை; a mineral poison.

*[சங்கம் + செய்நஞ்சு]*

**சங்கச்செய்யுள்** *šaṅga-c-ceyyuḷ,* பெ. (n.) கழகக் காலத்துப் பாடல்; classical poem of the saṅgam period (செ.அக.).

*[சங்கம் + செய்யுள்]*

பண்டைய புலவர் உரைநடை செய்யுள் என இருவகை நடையுள்ளும் செய்யுள் சிறந்த தென்று கண்டே உரைகளும் அகரமுதலி போன்ற உரிசொற்றொகுதிகளும் உட்பட எல்லாப் பனுவல்களையும் செய்யுளில் இயற்றினர் (தமி. வ. 107).

**சங்கசம்** *šaṅgasam,* பெ. (n.) புறா முட்டை யளவாய் சங்கில் பிறந்த முத்து; oyster pearl of the size of a pigeon egg (சா.அக.).

*[சங்கு → சங்கசம்]*

**சங்கசுத்தம்** *šaṅga-suttam,* பெ. (n.) சீமைச் செவ்வந்தி; chamomile flower - Authemis nobilis (சா.அக.).

*[சங்கம் + சுத்தம்]*

*Skt. suddha → த. சுத்தம்*

**சங்கஞ்சாறு** *šaṅgañ-cāṟu,* பெ. (n.) சங்கிலைச் சாறு; juice of leaves of four-spinned monetia- Azema tetracantha (சா.அக.).

*[சங்கம் + சாறு]*

**சங்கஞ்செடி** *šaṅgañ-jeḍi,* பெ. (n.) முட்சங்கஞ் செடி; mistletoe berry thorn, four-spined monetia - Azema tetracantha (சா.அக.).

*[சங்கம் + செடி]*

இலை சங்கு வடிவினதாக இருப்பது. சளியை நீக்கக் குழந்தைகட்கு இதன் இலைச் சாற்றைக் கொடுப்பதுண்டு.

**சங்கட்டங்கெளுத்தி** šaṅgaṭṭaṅ-keḷutti, பெ. (n.) கெளுத்தி மீன்வகையுள் ஒன்று; a kind of fish.

*[சங்கட்டம் + கெளுத்தி]*



சங்கட்டங்கெளுத்தி

**சங்கட்டசதுர்த்தி** *śaṅgaṭṭa-cadurtti,* பெ. (n.) பிள்ளையாரைக் குறித்து மேற்கொள்ளும் ஒரு நோன்பு; a fast observed in honour of Gaṇēśa. "சங்கட்ட சதுர்த்தி முறைமையிற் செய்து" (விநாயகபு. 47, 46).

*[சங்கட்டம் + சதுர்த்தி]*

**சங்கட்டம்** *śaṅgaṭṭam,* பெ. (n.) 1. சங்கடம்[1] பார்க்க; see *śaṅgaḍam.* "சார்ந்த லதுபெரிய சங்கட்டம்" (அருட்பா, 1, விண்ணப்பக்கலி 348). 2. உடல்நலமின்மை (வின்.); uneasiness, sickness, bodily pain. 3. இறப்புத் துன்பம் (வின்.); death thores. "அவன் வெகு சங்கட்டமாய்க் கிடக்கிறான்".

பட. சங்கட (நோய்)

*[சங்கடம் → சங்கட்டம்]*

**சங்கடக்கண்** *śaṅgaḍakkaṇ,* பெ. (n.) துன்ப மிகுதியால் கண்ணை மூடுகை; the closing of eyes as in distress.

*[சங்கடம் + கண்]*

**சங்கடப்படலை** *śaṅgaḍa-p-paḍalai,* பெ. (n.) இரும்புக்கம்பி யாலான தடைவாசல் (யாழ்ப்.); a barred gate at the entrance of a house or garden (செ.அக.).

*[சங்கடம் + படலை. படர்தல் = பரவுதல். படர் → படல் = ஓலை, தட்டை, மாறு முதலியவற்றாலாகிய, கதவுபோன்ற அடைப்பு. உழுதநிலத்திற் பரம்படிக்கும் பரந்த மாறு, கண்ணிற் படரும் புரை. படல் + அம் = படலம். படல் → படலை]*

**சங்கடப்படு-தல்** *śaṅgaḍa-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) துன்பப்படுதல் (கொ.வ.); to be in trouble; to be distressed or grieved at heart (செ.அக.).

தெ. சங்கடப்படு

*[சங்கடம் + படு. 'படு' – து.வி.]*

**சங்கடப்பாடு** *śaṅgaḍa-p-pāḍu,* பெ. (n.) துன்புறும் நிலை (கொ. வ.); state of being in trouble or distress (செ.அக.).

தெ. சங்கடப்பாடு

*[சங்கடம் + பாடு. படு → பாடு]*

**சங்கடம்**[1] *śaṅgaḍam,* பெ. (n.) 1. வருத்தம்; difficulty, trouble, straitened. "ஐவர் சங்கடம் பலவுஞ் செய்ய" (தேவா. 702, 2.). 2. ஒடுக்கவழி (யாழ்.அக.); narrow path. 3. சங்கடப்படலை பார்க்க (யாழ்.அக.); see *śaṅgaḍa-p-paḍalai.*

*[சாங்கடை → சங்கடை → சங்கடம்]*

சங்கடம் → Skt. saṅkaḍa.

**சங்கடாட்சம்** *śaṅgaḍāṭcam,* பெ. (n.) சங்கடக் கண் பார்க்க (யாழ்.அக.); see *śaṅgaḍa-k-kaṇ.*

*[சங்கடம் + அட்சம்]*

Skt. aṭcam → த. அட்சம்

**சங்கடி** *śaṅgaḍi,* பெ. (n.) கேழ்வரகுக்களி (இந்துபாக. 83); ragi porridge.

ம. சங்கிலிப்புல்லு (ஒரு வகைக் கேழ்வரகு); க. சங்கடி; தெ. சங்கடி

**சங்கடை**[1] *śaṅgaḍai,* பெ. (n.) சங்கடம்[1] பார்க்க; see *śaṅgaḍam*[1] (செ.அக.).

*[சாங்கடை → சங்கடை]*

**சங்கடை**[2] *śaṅgaḍai,* பெ. (n.) வாழ்நாளின் மூன்று பகுதிகளுள் கடைப்பகுதி (வின்.); the last of the three stages of a man's life (செ.அக.).

*[சாங்கடை → சங்கடை]*

**சங்கடைப்பன்** *śaṅgaḍaippaṉ,* பெ. (n.) மாட்டு நோய் வகை (மாட்டுவா. 67); a kind of cattle disease.

ம. சங்கடப்பன்

*[சங்கு + அடைப்பன்]*

**சங்கணித்துறை** *śaṅgaṇi-t-tuṟai,* பெ. (n.) ஆழ்வார்திருநகரியில் தண்பொருநையின் தென்கரை; the south bank of the river Tāmiraparaṇi at Āḻvār-tirunagari. "பொருநற் சங்கணி துறைவன்" (திவ். திருவாய். 10, 3, 11).

*[சங்கணி + துறை]*

**சங்கத்தமிழ்** *śaṅga-t-tamiḻ,* பெ. (n.) 1. கழகக் காலத்து வழங்கிய தமிழ்; classical Tamiḻ of the Saṅgam period. "சங்கத்தமிழ் மாலை முப்பதும்" (திவ். திருப்பா. 30). 2. கழகக்காலத்துத் தமிழ்நூல்; Tamil works of the saṅgam age. "சங்கத்தமிழ் மூன்றுந் தா" (நல்வழி. கடவுள் வாழ்.).

*[சங்கம் + தமிழ்]*

**சங்கத்தார்** *śaṅgattār,* பெ. (n.) 1. அவையோர்; members of an assembly, academy, a society, council or committee. 2. புத்த சமண சங்கத்தார் *(சீவக. 4, உரை; சிலப். 30: 32, அரும்.);* Buddhist and Jain fraternity of monks. 3. மதுரைச் சங்கப் புலவர்; the learned body of poets in Madura, in ancient times. "சங்கத்தாரெல்லாம்" *(திருவிளை. தருமிக்கு. 82).*

*[சங்கம் + அத்து + ஆர்]*

**சங்கத்தாளி** *śaṅga-t-tāḷi,* பெ. (n.) சாதிபத்திரி; mace or pulp of nutmeg *(சா.அக.).*

*[சங்கம் + தாளி]*

**சங்கத்திராவகம்** *śaṅga-t-tirāvagam,* பெ. (n.) சங்கநீர்மம் பார்க்க *(மூ.அக.);* see *śaṅga-nīrmam.*

*[சங்கம் + திராவகம்]*

**சங்கத்துறவு** *śaṅga-t-tuṟavu,* பெ. (n.) விருப்ப மக்களை இழந்ததினால், அவரிடம் உண்டான பற்றே துன்பக்காரணம் என்ற உணர்ச்சியில் தோன்றும் துறவு; renunciation on the death of relatives and friends, caused by the idea that attachment is the source of grief.

*[சங்கம் + துறவு]*

**சங்கத்தூதுவளை** *śaṅga-tūduvaḷai,* பெ. (n.) வெள்ளைப்பூவுடைய ஒருவகைத் தூதுவளை; a kind of three-lobed night shade with white flowers - Solanum trilobatum *(சா.அக.).*

*[சங்கம் + தூதுவளை. சங்கு வெண்ணிற மானது ஆகையால் சங்கைப் போன்ற வெண்ணிறமும் சங்கெனப்பட்டது. ஒ.நோ: அக்கு = வெள்ளை, சங்கு]*

இது காயச்சித்தி மூலிகைகளுள் ஒன்று

**சங்கதம்**[1] *śaṅgadam,* பெ. (n.) முல்லைப்பூ; evate-leaved jasmine- Jasminum augustifolium *(சா.அக.).*

*[சங்கு → சங்கதம்]*

**சங்கதம்**[2] *śaṅgadam,* பெ. (n.) 1. பொருத்தம்; appropriateness, consistency. 2. நட்பு (வின்.); acquiantance, friendship. 3. முறையீடு (வின்.); complaint.

*[சங்கு → சங்கதம்]*

சங்கதம் → Skt. saṅgata

**சங்கதி** *śaṅgadi,* பெ. (n.) 1. செய்தி; affair, news. 2. பொருள், உண்மை; matter, fact. 3. இசை வேறுபாடு; short flourishes introduced in a melody (mus.). 4. தொடர்பு; connection, relation. 'கீழ் ஒருபடி சங்கதி சொல்லிக்கொண்டு போந்தோம்' *(ஈடு. 4, 6, பிர).*

*[செய்தி → சங்கதி]*

சங்கதி → Skt. saṅgati

**சங்கதூதி** *śaṅgadūdi,* பெ. (n.) கூட்டிக் கொடுப்பவள் (யாழ்.அக.); procuress.

*[சங்கம் + தூதி. தூது → தூதி]*

சங்கதூதி → Skt. saṅga-dūti

**சங்கதை** *śaṅgadai,* பெ. (n.) செய்தி (இ.வ.); news (செ.அக.).

*[சங்கதி → சங்கதை]*

**சங்கநகை** *śaṅga-nagai,* பெ. (n.) நத்தை; snail.

*[சங்கம் + நகை]*

**சங்கநனம்** *śaṅga-naṉam,* பெ. (n.) நரம்பு; nerve, vein *(சா.அக.).*

**சங்கநாதம்** *śaṅga-nādam,* பெ. (n.) 1. சங்கவோசை; blowing sound of a conch. 2. கோயிலிற் சங்கு ஊதுதற்கு ஏற்பட்ட கொடை; inam for blowing conch in a temple (R.T.).

*[சங்கம் + நாதம்]*

**சங்கநிதி**[1] *śaṅga-nidi,* பெ. (n.) குபேரனது ஒன்பான் நிதியுள் ஒன்று; one of the nine treasures of Kubēra. "சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து" *(தேவா. 1230. 10).*

*[சங்கம் + நிதி]*

**சங்கநிதி**[2] *śaṅganidi,* பெ. (n.) வட்டக் கிலுகிலுப்பை (வின்); blue flowered crotalaria.

*[சங்க + நிதி]*

**சங்கநிறக்கரந்தை** *śaṅga-niṟa-k-karandai,* பெ. (n.) வெண்கரந்தை; white-flowered sweet basil - Ocimum basilicum *(சா.அக.).*

*[சங்கநிறம் + கரந்தை. சங்குவின் நிறம் வெள்ளை]*

**சங்கநீர்மம்** *śaṅga-nīrmam,* பெ. (n.) சங்குகளைக் கரைக்கக் கூடிய ஒருவகை நீர்மம்; solvent for conch or other shells, nitric acid.

*[சங்கம் + நீர்மம். நீர் → நீர்மம்]*

**சங்கநூல்** *śaṅga-nūl,* பெ. (n.) கழகக் காலத்து நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும்; the eight anthologies and ten idyllies of Saṅgam age.

*[சங்கம் + நூல்]*

**சங்கப்பலகை** *śaṅga-p-palagai,* பெ. (n.) தகுதியுள்ள புலவர்க்கு மட்டும் இடங்கொடுக்க கூடியதாய்ச் சிவபிரானாற் சங்கத்தார்க்கு அருளப்பெற்ற ஒரு தெய்வத்தன்மை வாய்ந்த பலகை; miraculous seat capable of accommodating only deserving scholars, believed to have been granted by Śivaṉ at Madurai to the Saṅgam poets. "சங்கப் பலகையாந் தொட்டிலேற்றி" (சீகாளத். பு. பாயி. 15).

*[சங்கம் + பலகை]*

**சங்கப்பாடல்** *śaṅga-p-pāḍal,* பெ. (n.) சங்கச் செய்யுள் பார்க்க; see *śaṅga-c-ceyyuḷ.*

*[சங்கம் + பாடல்]*

**சங்கப்புலவர்** *śaṅga-p-pulavar,* பெ. (n.) முற்காலத்தே மதுரையிலிருந்த தமிழ்ச் சங்கப் புலவோர்; the poets of the Madurai academy of ancient times (செ.அக.).

*[சங்கம் + புலவர்]*

**சங்கப்பூ** *śaṅga-p-pū,* பெ. (n.) ஞாழல்; cinnamon.

*[சங்கம் + பூ]*

**சங்கப்பூவை** *śaṅga-p-pūvai,* பெ. (n.) வெண் மலருடைய ஒரு வகைக் கொடி; a creeper with white flowers.

*[சங்கம்+ பூவை. சங்கம் = வெண்ணிறம்]*

**சங்கபாடாணம்** *śaṅga-pāḍāṇam,* பெ. (n.) சங்கச் செய்நஞ்சு பார்க்க (மூ.அ.); see *śaṅga-c-ceynañju*

*[சங்கம் + பாடாணம்]*

**சங்கபாணி** *śaṅga-pāṇi,* பெ. (n.) சங்கக் கையன் பார்க்க; see *śaṅga-k-kaiyaṉ.*

*[சங்கம் + பாணி. பண் → பாணி = கை]*

**சங்கபாலன்** *śaṅga-pālaṉ,* பெ. (n.) எண்வகை நாகத்தொன்று; a divine serpent one of aṣṭa-mā-nāgam. "சங்கபால குளிகாதி வாலெயிறு" (கம்பரா. நாகபா. 62).

*[சங்கம் + பாலன்]*

**சங்கபீடம்** *śaṅga-pīḍam,* பெ. (n.) 1. நாணல்; reed. 2. நாணற்புல்; coarse grass (சா.அக.).

*[சங்க + பீடம்]*

**சங்கபுங்கி** *śaṅgapuṅgi,* பெ. (n.) கடுரோகிணி வேர் (மலை); root of christmas rose (செ.அக.).

*[சங்கம் + புங்கி]*

**சங்கபுட்பம்** *śaṅga-puṭpam,* பெ. (n.) சங்கப்பூ பார்க்க (மலை.); see *śaṅga-p-pū.*

*[சங்கம் + புட்பம்]*

Skt. puṣpam → த. புட்பம்.

**சங்கபுட்பி** *śaṅga-puṭpi,* பெ. (n.) சங்கப்பூவை பார்க்க (விநாயகபு. 3, 57); see *śaṅga-p-pūvai.*

*[சங்கம் + புட்பி.]*

**சங்கம்**[1] *śaṅgam,* பெ. (n.) 1. சங்கு; conch-shell, an instrument of sound. 'அடுதிரைச் சங்க மார்ப்ப' (சீவக. 701). 2. கைவளை; bracelet. 'சங்கங் கழல' (இறை. 39, உரை, 260) 3. நெற்றி (பிங்.); fore-head. 4. குரல்வளை; Adam's apple. 5. இலக்கங்கோடி; hundred billions or one hundred thousand crores. "நெய்தலுங் குவளையு மாம்பலுஞ் சங்கமும்" (பரிபா. 2, 13). 6. 2187 தேர்களும், 2187 யானைகளும், 6561 குதிரைகளும், 10,935 காலாட்களுமுள்ள சேனை வகை (பிங்.); a large army consisting of 2187 chariots, 2187 elephants, 6561 horses, 10,935 infantry. 7. சங்கநிதி[1] பார்க்க (மூ.அ.); see *śaṅganidi.* 8. தாலம்பாடாணம் பார்க்க; see *tālam-pāḍāṇam.* 9. சங்கபாடாணம் பார்க்க (வின்).; see *śaṅga-pāḍāṇam.* 10. வெண்ணிறம்; white colour.

*[சங்கு → சங்கம்; 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டாதலால் இலக்கண நெறிப்படி, சங்கம் என்பது பெருஞ் சங்கையே குறிக்கும். சங்கு என்னும் இயல்பான வடிவு வடமொழியிலின்மை, அது வடசொல்லன்மையை யுணர்த்தும் (வே.க. 241)]*

*சங்கம் (சங்கு) என்பது ஒவ்வொரு புரிக்கும் (வளைவிற்கும்) ஒரு பெருந்தொகையாக உரையிடல் முறையில் பேரெண்ணிக்கைப் பொருள் ஏற்பட்டது.*

**சங்கம்**[2] *šaṅgam,* பெ. (n.) **பெருவிரல் நிமிர்ந்திருக்க ஒழிந்த நான்கு விரலும் வளைந்து இருப்பது** *(சிலப். 3: 18);* keeping the thumb straight and the rest four fingers folding, a kind of hand posture.

*[சங்கு → சங்கம்]*

*கட்டை விரலை உயர்த்தி மற்ற விரல்களை மடக்கிக் காட்டுவது சங்கு வடிவம் போல் அமைவதைக் காணலாம்.*



சங்கம்

**சங்கம்**[3] *šaṅgam,* பெ. (n.) **கணைக்கால்** (பிங்.) shank, part of the leg from the ankle to the knee (செ.அக.).

*[சங்கு → சங்கம்]*

*சங்கு*[4] *பார்க்க*

**சங்கம்**[4] *šaṅgam,* பெ. (n.) **கைக்குழி;** armpit.

*[சங்கு → சங்கம்]*

**சங்கம்**[5] šaṅgam, பெ. (n.) **சங்கஞ்செடி;** mistletoe berry thorn.

**மறுவ.** இசங்கு

***[சங்கு → சங்கம். சங்கு போன்ற இலைகளை உடையது]***

**சங்கஞ்செடி** *பார்க்க*

**சங்கம்**[6] *šaṅgam,* பெ. (n.) **நேர்மையற்றது;** crookedness. *2.* **முரண்பாடானது** (கருநா.); perversiveness.

*[சங்கு = வளைந்தது. சங்கு → சங்கம்]*

**சங்கம்**[7] *šaṅgam,* பெ. (n.) **அழகு** (யாழ்.அக); beauty.

***[சங்கு → சங்கம். சங்கு = வெண்மை, அழகு. இனி, சந்தம் → சங்கம் என்றுமாம்]***

**சங்கம்**[8] *šaṅgam,* பெ. (n.) *1.* **கூட்டம்;** mustering, gathering. 'சங்கமாகி வெங்கணை வீக்கமொடு' *(பெருங். மகத. 17, 38).* 2. (ஏதேனும் ஒரு நோக்கத்திற்காக) **ஒன்றாகச் சேர்ந்து ஏற்படுத்தும் கூட்டமைப்பு, அவை;** society, ssembly, council, senate, academy. 'புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க' *(மணிமே. 7: 114).* *3.* **புலவர்** (திவா.); literati, poets. *4.* **பாண்டியரால் புரக்கப்பெற்று விளங்கிய தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற முச்சங்கங்கள்;** learned assemblies or academies of ancient times patronised by Pāṇḍya kings, three in number, viz., *talai-c-caṅgam, iḍai-c-caṅgam, kaḍai-c-caṅgam.* எம்மை புவந்திர்ப்பவர் சங்கமிருந்தது *(பெரியபு. மூர்த்திநா. 7).* *5.* **சமண புத்தர்களின் சங்கம்;** fraternity of monks among Buddhists and Jains.

*[சங்கு = பேரெண். சங்கு → சங்கம் = கூட்டம், அவை.*

***வடமொழியில் சங்க (saṅgha) என்னும் சொல்லை சம்+ஹன் (sam+han) என்று பிரித்து ஹன் என்பதற்கு அடித்தல், தாக்குதல் போன்ற பொருள்களையும் சம் என்பதற்கு ṛi என்னும் மூலத்தைக் காட்டிப் போதல், அசைதல், எழுதல் போன்ற பொருள்களையும் காட்டுகிறது மா.வி. அகரமுதலி. இவை இரண்டும் சேர்ந்து கூட்டப் பொருள் தராமையைக் கண்டு கொள்க.***

***வளைவு கருத்தடிப்படையில் தோன்றியுள்ள சங்கத்திற்கு உள்வளைதல், வட்டமாதல், வளைவுக்குள் இருக்கும் கூட்டம் என்று பொருள் கொள்ளவும் இடமுண்டு]***

பழம் பாண்டி நாட்டு முத்தமிழ்க் கழகங்களும் தமக்கு முந்திய தமிழிலக்கியத்தை ஆராய்ந்து வந்ததனால், கற்றோர் பயிலும் இடத்தைக் குறித்த சங்கம் என்னும் சொல் நாளடைவில் கற்றோராக விளங்கிய புலவரையும் குறிக்கத் தலைப்பட்டது. "அவர் சங்கமிருந்து

தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்ப அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை யென்ப" என்று இறையனாரகப் பொருளுரை முறையே முத்தமிழ்க் கழகங்களையும் பற்றிக் கூறுதல் காண்க.

அம் என்னும் வேர் சம் எனத்திரிந்து அந்து → சந்து, அமர் → சமர், அமை → சமை என்றாங்குப் பற்பல சொற்களைத் தோற்றுவித்துள்ளது. சம் → சம்க → சங்க என்பது வடபுலத்திரிபு என்று மொழி ஞாயிறு பாவாணர் கருதியதனால் சங்கம் என்னும் சொல்லாட்சியைத் தவிர்த்துக் கழகம் என்னும் சொல்லையே வழங்கினார்.

**சங்கம்**[9] *šaṅgam,* பெ. (n.) *1.* **சேர்க்கை** (சூடா.); union, junction, contact. *2.* **அன்பு;** friendship. love, attachment. "சங்கந்தருமுத்தி" (திருக்கோ. 85) *3.* **புணர்ச்சி;** sexual intercourse. "சங்கமுண்கிகள்" (திருப்பு. 556). 4. **சங்கமம்** பார்க்க (யாழ். அக.); see *šaṅgamam.*

*[சங்கு → சங்கம்]*

**சங்கம்**[10] *šaṅgam,* பெ. (n.) **சங்கமம்** பார்க்க; see *šaṅgamam.* "தாபர சங்கத்தினுக்கு" (வரத. பாகவத. நாரசிங்க. 116).

*[சங்கு → சங்கம்]*

**சங்கம்பட்டை** *šaṅgam-paṭṭai,* பெ. (n.) **சங்கஞ் செடியின் பட்டை;** bark of the four-spined monetia (சா.அக.).

*[சங்கம்[5] + பட்டை]*

இப்பட்டை காய்ச்சல், சளி, ஈளை, இருமல், புழுநோய் முதலியவற்றைக் குணப்படுத்தும் தன்மையது

**சங்கம்வாங்கி** *šaṅgamvāṅgi,* பெ. (n.) **கூட்டிக் கொடுப்போன்** (வின்.); pimp.

*[சங்கம் + வாங்கி. தொடர்பு ஏற்படச் செய்பவன். வாங்கு → வாங்கி]*

**சங்கம்வாங்கு-தல்** *šaṅgam-vāṅgu-,* 5 செகுன்றாவி. (v.t.) **கூட்டிக் கொடுத்தல்** (வின்.); to pimp, pander (செ.அக.).

*[சங்கம் + வாங்கு-,]*

**சங்கமங்கலம்** *šaṅga-maṅgalam,* பெ. (n.) **கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இருந்த செங்கம் வட்டாரத்து ஓரூர்;** a place name of 7th century A.D. around Cengam area. "சிரிகங்கரை சரு சங்கமங்கலத் தெறிந்த ஞான்று" (த.நா.தொ. 1971/100, செங்கம் நடுகற்கள்).

*[சங்கம் + மங்கலம்]*

**சங்கமங்கை** *šaṅga-maṅgai,* பெ. (n.) **சாக்கிய நாயனார் பிறந்த ஊர்;** Cākkiyanāyanār's native village.

*[சங்கம் + மங்கை. இவ் வூர் தொண்டை மண்டலத்துக் காஞ்சியை யடுத்துள்ளது]*

**சங்கமடைப்பள்ளி** *šaṅgamaḍai-p-paḷḷi,* பெ. (n.) **அமைச்சர்க்குச் சமையல் செய் மரபினராகிய இனத்தார்** (யாழ்ப்.); a sub-caste of 'maḍai-p-paḷḷi' so called from their ancestors having been cooks of ministers (செ.அக.).

*[சங்கம் + மடைப்பள்ளி]*

**சங்கமண்டபம்** *šaṅga-manḍapam,* பெ. (n.) **சங்கத்தார் வீற்றிருந்த மண்டபம்;** hall where šaṅgam poets assembled. 'தெய்வப் பலகையைச் சங்க மண்டபத்திடை நடுவிட்டு' (திருவாலவா. 15:4).

*[சங்கம் + மண்டபம். மண்டு → மண்டகம் = மக்கள் கூடுமிடம். மண்டகம் → மண்டபம்]*

**சங்கமம்** *šaṅgamam,* பெ. (n.) *1.* **கூடுகை;** meeting, union. *2.* **ஓர் ஆறு வேறோர் ஆற்றுடனேனும் கடலுடனேனும் கூடுமிடம்;** river-mouth; confluence of rivers. "குந்தளரைக் கூடற் சங்கமத்து வென்ற" (கலிங். 193). *3.* **சிவனடியார் திருக்கூட்டம்;** šaiva devotees, as viewed collectively. *4.* **கோள்கள் சேருகை** (வின்.); conjunction of celestial bodies (Astron.). *5.* **புணர்ச்சி;** sexual intercourse.

*[சங்கம் → சங்கமம்]*

**சங்கமராயன்பேட்டை** *šaṅgamarāyaṉ-pēṭṭai,* பெ. (n.) **தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்த பண்டைய ஊர்;** an ancient village in Tanjavoor district. "நித்ய வினோத வளநாட்டு மிலட்டூர் பற்று சங்கமராயன் பேட்டை கிராமம்" (தெ. க.தொ-5, க. 14-2-5).

*[சங்கமம் + ராயன் + பேட்டை. அரையன் → ராயன்]*

**சங்கமருவு-தல்** *šaṅgamaruvu-,* 5 செ.குவி. (v.i.) **பண்டைத் தமிழ்ச் சங்கத்தாரது அனுமதி பெறுதல்;** to be approved by the saṅgam poets,

as a literary work of merit. 'சங்க மருவிய நூல்' (செ.அக.).

[சங்கம் + மருவு-,]

**சங்கமன்னர்** *śaṅga-maṉṉar,* பெ. (n.) நட்பினரான வேந்தர்; kings in alliance. "சங்க மன்னர்க்குத் தம்படை கூட்டி" (பெருங்மகத. 25, 41).

[சங்கம் + மன்னர்]

**சங்கமிரு-த்தல்** *śaṅgam-iru-,* 3 செ.குவி. (v.i.) மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உறுப்பினராய் இருத்தல்; to be a member of the Tamil academy at Madurai. 'அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது' (இறை. 1, 5).

[சங்கம் + இரு-,]

**சங்கமுகம்**[1] *śaṅga-mugam,* பெ. (n.) ஆறு கடலுடன் கூடுமிடம் (சிலப். 9: 57, உரை); river-mouth.

[சங்கம் + முகம். முகம் = முன்னிடம், இடம்.]

**சங்கமுகம்**[2] *śaṅga-mugam,* பெ. (n.) சங்கின் முகம்; face of a conch. "அற்றை நாளால் சங்கமுகம்" (தெ.க.தொ. 14, கல் - 192. 20).

[சங்கம் + முகம். முகம் = முன் பக்கம்]

**சங்கமுத்திரை** *śaṅga-muttirai,* பெ. (n.) வலக் கைப் பெருவிரனுனி சுட்டுவிரலினடியைத் தொடும் முத்திரை (சைவச. பொது. 519); a hand-posture in religious worship in which the tip of the right thumb is placed at the root of the right forefinger, as resembling the form of a chank.

[சங்கம் + முத்திரை]

சங்கம்[2] பார்க்க



சங்கமுத்திரை

**சங்கமுழி பறமமுழி சங்கிலிகை** *śaṅga-muḻi-paṟama-muḻi-śaṅgiligai,* பெ. (n.) ஏனங்களின் வகை; a kind of copper vessel "துக்கையென் சந்தியாதீபம் ஒன்றுக்கும் நிலங்காணி சகசரதாரை சங்கமுழி பறமமுழி சங்கிலிகை உட்பட எடை எண்பது செம்பு அழி" (புது.கல் 563/5).

[சங்கமுழி + பறமமுழி + சங்கலிகை]

**சங்கமுழுக்கு** *śaṅgamuḻukku,* பெ. (n.) 1. சங்கத்தினால் இறைவனுக்குச் செய்யும் திருமுழுக்கு; ceremonial bath of an idol with chanks filled with water. 2. ஒருவரை ஆச்சாரி யனாக்குவதற்கு இறைவன் முன்னிலையில் அவர்க்குச் சங்கினாற் செய்யும் திருமுழுக்கு; ceremonial bath of a person in the presence of a deity with water in a chank, ordaining Him to sacred order (saiva.).

[சங்கம் + முழுக்கு]

**சங்கமூலி** *śaṅga-mūli,* பெ. (n.) பீநாறிச் சங்கு; smooth volkameria.

[சங்கம் + மூலி]

**சங்கமேந்தி** *śaṅgam-ēndi,* பெ. (n.) திருமால் (பிங்.); Tirumāl (Viṣṇu), as conch-bearer.

[சங்கம் + ஏந்தி]

**சங்கரக்கழிச்சல்** *śaṅgara-k-kaḻiccal,* பெ. (n.) காய்ச்சல், இருமலுடன் ஏற்படும் செரியாக் கழிச்சல் நோய்வகை; a form of diarrhoea arising from indigestion, and it is marked by rumbling noise in the stomach, fever, excess of phlegm in the chest etc. - sympathetic diarrhoea.

**சங்கரப்பாடியார்** *śaṅkara-p-pāḍiyār,* பெ. (n.) சக்கரப்பாடியார் பார்க்க; see *śakkara-p-pāḍiyār.* "சங்கரப்பாடியான் கண்டன் மாறனான சோழேந்திர சிங்க மாயிலட்டி" (தெ.க.தொ.3. கல் 19).

[சக்கரப்பாடியார் → சங்கரப்பாடியார்]

**சங்கரன்பாடியார்** *śaṅkaraṉ-pāḍiyār,* பெ. (n.) சக்கரப்பாடியார் பார்க்க; see *śakkara-p-pāḍiyār.*

[சக்கரப்பாடியார் → சங்கரன் பாடியார்]

**சங்கராமீன்** *śaṅkarā-mīṉ,* பெ. (n.) சாவாமீன் என்னும் ஒருவகைக் கடல் மீன்; a sea-fish known as Java fish (சா.அக.).



சங்கராமீன்

**சங்கரிங்கி** *šaṅgariṅgi,* பெ. (n.) கடுரோகிணி (வின்.); christmas rose, black hellibore.

*[சங்கு → சங்கரிங்கி]*

**சங்கரேகை** *šaṅga-rēgai,* பெ. (n.) சங்கவரிகை பார்க்க; see *šaṅga-varigai.* "சங்கரேகையிது சக்ரரேகையிது" *(திருவாரூ. குற. MSS.)* (செ. அக.).

*[சங்கு → சங்க + ரேகை]*

Skt. rēkha → த. ரேகை

**சங்கரோகணி** *šaṅga-rōgaṇi,* பெ. (n.) கடுரோகிணி; christmas rose, black hellibore (சா.அக.).

*[சங்கு → சங்க + ரோகிணி]*

**சங்கலிக்கண்** *šaṅgali-k-kaṇ,* பெ. (n.) கழுத்து அணிகலன்களில் கோர்க்கப்படும் பதக்கக் கல்; a kind of locket stone. "சங்கலிக்கண் 15 கெப்பு உள்பட" *(தெ.க.தொ. 24-கல் 598-8).*

*[சங்கிலி → சங்கலி + கண். கல் → கள் → கண்]*

**சங்கலிகரணம்**[1] *šaṅkalikaraṇam,* பெ. (n.) 1. பிறவிக்குல (சாதிக்) கலப்பினையுண்டாக்கு தலாகிய கரிசு (பாவம்); sin of causing admixture of castes. 'காழகந்தரு சங்கலிகரணமும்' *(திருச்செந். பு. செயந்திபுர. 12).* 2. முறையிலாப் புணர்ச்சி (வின்.); bestiality, sodomy. 3. உயிர்க் கொலையாகிய கரிசு; sin of killing animals.

*[சங்கலி + கரணம்]*

**சங்கலேகை** *šaṅga-lēgai,* பெ. (n.) சங்கவரிகை பார்க்க; see *šaṅga-varigai.* "சங்கலேகையும் சக்கிரலேகையும்" *(குளா. குமார. 45).*

*[சங்கரேகை → சங்கலேகை (கொ.வ.)]*

**சங்கவரிகை** *šaṅga-varigai,* பெ. (n.) கையில் சங்கு போல் அமைந்த கோடுகள்; the palm line like conch.

*[சங்கு + வரிகை]*

கையில் சங்கவரிகை இருப்பவனை மேன்மையனாகவும் அவனைத் தெய்வப் பிறப்பினன் என்றும் கருதியதைத் தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. அதிலும் வலம்புரிச் சங்கின் வரிகை இருப்பது தெய்வத்திற்கு நிகரானது எனக் கொள்ளப் பட்டது. சங்குவரிகையுள்ளோர் அரசு, செல்வம் ஆகியவற்றோடு இன்பமாக வாழ்வர் என்னும் நம்பிக்கை இருந்தது. வலம்புரிச் சங்கு வரிகை உடையவர்கள் கொடுக்கும் நீர் தெய்வத்தன்மையுடையது என்றும் அவ்வாறானோரிடமிருந்து பெற்ற நீரை அருந்துவது பெரும்பேறு என்றும் கருதப் பட்டது. திருமாலும் சீவகனும் வலம்புரிச் சங்குவரிகையுடையவர்கள் என்று இலக்கியங்கள் கூறுவது இதன்பால் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைத் தெரிவிக்கிறதென்க.

**சங்கவருணர்** *šaṅga-varuṇar,* பெ. (n.) புறநானூறு 360ஆவது பாடலின் ஆசிரியரான கடைக்கழகப் புலவர்; a saṅgam poet, author of puṟanāṉūṟu 360.

மறுவ. நாகரியர்

*[சங்கம் + வருணர்]*

பெருங்காஞ்சித்துறை பாடுவதில் வல்லவர். இவர் பாடல் யாக்கை நிலையாமையைக் கூறும். இவர் தந்துமாறனைப் புறநானூறு 360இல் பாடியுள்ளார்.

**சங்கவளை** *šaṅga-vaḷai,* பெ. (n.) சங்கினால் செய்த வெள்வளை (பு.வெ. 12, இருபாற். 9, கொளு, உரை); white bangles or bracelets made of conch-shell.

*[சங்கு → சங்கம் + வளை]*

**சங்கவைராக்கியம்** *šaṅga-vairākkiyam,* பெ. (n.) சங்கத்துறவு பார்க்க; see *šaṅga-t-tuṟavu* (செ.அக.).

*[சங்கம் + வைராக்கியம்]*

Skt. vairāgya → த. வைராக்கியம்

**சங்களை** *šaṅgaḷai,* பெ. (n.) மணற்கேணியிற் சுற்றுக்கட்டாக அமைக்கப்படும் பலகை (யாழ்); beams or timbers for shoring up a well (செ.அக.).

*[சங்கு + அளை]*

**சங்களைக்கிணறு** *šaṅgaḷai-k-kiṉaṟu,* பெ. (n.) **பலகைக்கட்டுக் கிணறு** (யாழ்ப்.); well in loose soil walled with timber beams or logs of wood (செ.அக.).

*[சங்களை + கிணறு]*

**சங்கறு-த்தல்** *šaṅgaṟu-,* 4 செ. குன்றாவி. (v.t.) **சங்குகளை அறுத்து வளையல் முதலியன செய்தல்;** to cut conch, to make bracelets and other ornaments from conch.

*[சங்கு + அறு-,]*

**சங்கறுப்போர்** *šaṅgaṟu-p-pōr,* பெ. (n.) **சங்குகளை அறுத்து வளையல் முதலியன செய்வோர்** (பிங்.); chank-cutters, makers of bracelets and other ornaments from chanks.

மறுவ. வளைபோழ்நர்

*[சங்கு + அறுப்போர்]*

**சங்கன்** *šaṅgaṉ,* பெ. (n.) **ஒரு சிறிய வெளவால் மீன்;** a small sea fish known as bat fish of pink colour - cirrhitichthys aurues (சா. அக.).

**சங்காட்டம்** *šaṅgāṭṭam,* பெ. (n.) சேர்க்கை; union, intercourse. 'சங்காட்டந்தவிர்த்து' (தேவா. 655, 1).

*[சங்கம் + சங்காட்டம்]*

**சங்காடம்** *šaṅgāḍam,* பெ. (n.) **சங்குவடம், ஒரு வகைப் படகு** (நாஞ்.); a kind of boat (செ.அக.).

ம. சங்ஙாடம்; து. சங்கால; Skt., Pāli. *saṅghāḍa;* Port. *jangada*

*[சங்குவடம் → சங்காடம்]*

**சங்காடு-தல்** *šaṅgāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) **சங்கினாற் புடைவை முதலியவற்றை மினுங்கச் செய்தல்** (வின்.); to polish with a chank, as cloth, paper.

*[சங்கு + ஆடு-,]*

**சங்காத்தம்** *šaṅgāttam,* பெ. (n.) 1. **இணக்கம்;** friendship, intimacy, familiar intercourse. "பூனைக்கும் வீட்டெலிக்குஞ் சங்காத்தமுண்டோ" (தனிப்பா ii, 13, 28). 2. **இருப்பிடம்;** residence. "துறையூரெனுந் தலத்திற் சங்காத்தங் கொண்டிருப்பாய்" (தமிழ்நா. 62).

ம. சங்ஙாத்தம், செங்ஙாத்தம், சங்ஙாய்த்தம்

*[சங்கம் → சங்காத்தம்]*

**சங்காதம்**[1] *šaṅgādam,* பெ. (n.) 1. **கூட்டம்** (சி.சி. 1, 14, சிவாக்.). 2. **அழிவு** (வின்.); destruction or dissolution of the world. 3. **ஒரு நிரயம்** (நரகம்) (வின்.); a hell. 4. **பாதங்களைக் கூட்டி ஐந்தடி யெடுத்து வைக்கும் நடிப்புவகை** (வின்.); taking five steps forward in succession, with the feet close together.

*[சங்கம் → சங்காதம்]*

**சங்காதம்**[2] *šaṅgādam,* பெ. (n.) **கூடவருவது;** a thing that always goes along with another thing concomitant. "வங்காரமு ....... மடந்தையரும் சங்காதமோ" (குந்தரலங். 59).

*[சங்கம் → சங்காதம்]*

**சங்காதமணல்** *šaṅgāda-maṇal,* பெ. (n.) **கருமணல்;** black sand.

*[சங்கு + ஆ + மணல். சங்கு = வெள்ளை, ஆ - எதிர்மறை இடைநிலை, சங்கு + ஆ - சங்கா = வெள்ளைக்கு எதிரானது, கருப்பு]*

**சங்காதமரணம்** *šaṅgāda-maraṇam,* பெ. (n.) சங்காதவிறப்பு பார்க்க; see *šaṅgāda-v-iṟappu.*

*[சங்காத + மரணம்]*

**சங்காதவிறப்பு** *šaṅgāda-v-iṟappu,* பெ.(n.) **எதிர்பாராத நிகழ்ச்சியால் மக்கள் பலர் ஒரு சேர மடிகை;** disastrous and unexpected death of a number of persons at a time (செ.அக.).

*[சங்கு + ஆ + இறப்பு. தங்கு → சங்கு. சங்குதல் = தங்குதல், நின்றுவிடுதல். 'ஆ' - எதிர்மறை இடைநிலை. சங்கு + ஆ + (து) - சங்காத → தங்காத, எதிர்பார்க்காத]*

**சங்காபிடேகம்** *šaṅgābiḍēgam,* பெ. (n.) சங்கமுழுக்கு பார்க்க; see *šaṅga-muḻukku.* 'சிதம்பரம் சபாநாயகம் உண்ணாழிகையில் சங்காபிடேகஞ் செய்வித்தார்கள்' (உ.வ.).

*[சங்க(ம்) + அபிடேகம்]*

Skt. abhiṣēka → த. அபிடேகம்

**சங்காயம்** *šaṅgāyam,* பெ. (n.) 1. **கரும்புத் தோகைச் சருகு** (இ.வ.); dried leaves of sugar-cane. 2. **வயலிற் களையோடு முளைக்கும் ஆனைப்புல்;** weeds growing in paddy fields, typha elephantina. "மூன்று களையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர்" (ஈடு, 4, 2, ப்ர). 3. **உழுந்து, துவரை முதலியவற்றின் முற்றாத**

அல்லது பதரான மணி (தஞ்சை.); thin immature grain or chaff of black-gram, etc., (செ.அக.).

ம. சங்காயம் (வயலில் வளரும் ஒரு வகைப் புல்)

*[சருகு + அயம் → சருகயம் → சங்காயம். அயம்= அலரி, களை]*

**சங்காரமுத்திரை** *śaṅgāra-muttirai,* பெ. (n.) கட்டைவிரல் நிற்க மற்றை நான்கு விரல்களையும் வளைத்துச் செய்யும் சிவபூசைக்குரிய முத்திரைவகை (செந். X. 424); a hand-pose in which the thumb is kept erect and the other fingers are folded inward, assumed in the worship of Śivan̠ (செ.அக.).

*[சங்கு → சங்காரம் + முத்திரை]*

சங்குக்கை பார்க்க




**சங்கால்பச்சை** *śaṅgāl-paccai,* பெ. (n.) செம்புக் களிம்பு; sub-acetate of copper, verdigris (சா.அக.).

*[செங்கால் பச்சை → சங்கால் பச்சை]*

**சங்காலி** *śaṅgāli,* பெ. (n.) மாசி பத்திரி; santonin wood, Artimesia Indica (சா.அக.).

**சங்காளர்** *śaṅgāḷar* பெ. (n.) கலவியையே நாடுபவர்; lustful presons, as prostitutes. "சங்காளர் சூது கொலைகாரர்" (திருப்பு. 748).

*[சங்க(ம்) + ஆளர். ஆளர் → உடைமை குறித்த பன்மை யீறு.]*

**சங்கி[1]-த்தல்** *śaṅgi-,* 11 செ.குன்றாவி. (v.t.) பெருமைப்படுத்துதல்; to honour, respect, regard. "சவையில் வந்திங்குளோரைச் சங்கியாதகன்ற தூதை" (பிரபோத. 25, 37).

*[சங்கம் → சங்கி-,]*

**சங்கி[2]** *śaṅgi,* பெ. (n.) தொடர்புடையது; that which is related, connected. "விஷய சங்கியாயிருக்கும் ஆணவ தர்மம்" (சி.சி. 2, 56, சிவாக்.).

*[சங்கம் → சங்கி]*

**சங்கி[3]** *śaṅgi,* பெ. (n.) 1. சிறுபூனைக்காலி; whitish passion flower - Passiflora foetida. 2. சங்கஞ் செடி; four-spined monetia (சா.அக.).

*[சங்கம் → சங்கி.]*

**சங்கிக்கடுக்காய்** *śaṅgi-k-kaḍukkāy,* பெ. (n.) உனானி மருந்தில் வழங்கும் கடுக்காய்; a species of gall-nut used in unani medicine (சா.அக.).

*[சங்கி + கடுக்காய்]*

**சங்கிசீயம்** *śaṅgi-śīyam,* பெ. (n.) உகாமரம்; tooth-brush tree - Salvadora persica (சா.அக.).

**சங்கிதாதுரம்** *śaṅgi-dāduram,* பெ. (n.) கிச்சிலிக் கிழங்கு; orange root - Hedysarum spicatum alias kompferia galanga (சா.அக.).

**சங்கிப்பருதி** *śaṅgi-p-parudi,* பெ. (n.) கடுகு ரோகிணி; christmas rose - Helleborus niger (சா.அக.).

*[சங்கி + பருதி]*

**சங்கிப்பீடம்** *śaṅgi-p-pīḍam,* பெ. (n.) நாணற் கொடி; reed - Saccharum spontaneum (சா.அக.).

*[சங்கி + பீடம்]*

**சங்கிரகக்கூர்மை** *śaṅgiraga-k-kūrmai,* பெ. (n.) கடலுப்பு (வின்.); sea-salt.

*[சங்கிரகம் + கூர்மை]*

**சங்கிரண்டூதுவார்** *śaṅgiraṇḍūduvār,* பெ. (n.) கோயிலில் பூசை செய்பவர், மந்திரம் ஓதுபவர்; temple priest. "மஞ்சள் நீராட்டவான் நிலத்தொடும் மேற்கடைய நிலன் மூன்றுமா சங்கிரன்டூதுவார் இருவரி(ர) டிகள் மார்க்கு" (தெ. க.தொ-2, கல்-2, 25).

*[சங்கு + இரண்டு + ஊதுவார். இரட்டைச் சங்கை ஊதிப் பூசைசெய்பவர்]*

**சங்கிராகி** *śaṅgirāgi,* பெ. (n.) ஓமை அதாவது மாமரம்; mango tree-Mangifera indica (சா.அக.).

**சங்கிராகியம்சம்**; *śaṅgirāgi-y-amsam.* பெ. (n.) *நாவல் மரம்;* jamoon tree - Eugenia jambalina (சா.அக.).

**சங்கிலி**[1] *śaṅgili,* பெ. (n.) தொடை; thigh (சா.அக.).

*[அங்கு → சங்கு → சங்கிலி]*

**சங்கிலி**[2] *śaṅgili,* பெ. (n.) 1. தொடரி; chain, link. "சங்கலிபோ லீர்ப்புண்டு" (சேதுபு. அகத். 12). 2. நில அளவைக்குப் பயன்படும் அளவுச் சங்கிலி (C.G.); land-measuring chain, Gunter's chain 22 yards long.). 3. ஒரு நிலவளவு (G.Tn.D.I, 239) a superficial measure of dry land = 3.64 acres. 4. வயிரச்சங்கலி (பொன்னில் வயிரம் பதித்தது) என்னும் அணி; a chain-ornament of gold, inset with diamonds. "சங்கிலி நுண்டொடர்" (சிலப். 6: 99). 5. குற்றவாளிக்குப் பூட்டும் விலங்கு; hand-cuffs, fetters.

ம. சங்கல; Skt. śṛiṅkhale.

*[அங்கு → சங்கு = வளைந்தது. சங்கு → சங்கிலி. வளைந்து ஒன்றுடன் ஒன்று கோர்த்திருப்பது. சங்கிலியைக் குறிக்கும் வடமொழிச் சொல் śriṅkhale என்பதற்கு மூலம் ஐயத்திற்குரியது (derivation doubtful) என்று மா.வி. அகரமுதலி குறித்துள்ள நிலையில் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி சங்கிலி வடசொல் śriṅkhaleயிலிருந்து வந்தது எனக் காட்டியிருப்பது பொருத்தமற்றது]*



சங்கிலி

**சங்கிலி**[3] *śaṅgili,* பெ. (n.) சங்கிலியார் பார்க்க; see *śaṅgiliyār.* "சங்கிலிக்கு மெனக்கும் பற்றாய பெருமானே" (தேவா. 678, 11)

*[சங்கு → சங்கிலி]*

**சங்கிலிக்கறுப்பன்** *śaṅgili-k-kaṟuppaṉ,* பெ. (n.) சிற்றூர்த் தெய்வம்; a minor village-deity.

*[சங்கிலி + கறுப்பன்]*

**சங்கிலிக்காரன்** *śaṅgili-k-kāraṉ,* பெ. (n.) நங்கூரச் சங்கிலி இழுபடும் கப்பலின் துளை; hawse-hole (naut.).

*[சங்கிலி + காரன்]*

**சங்கிலிக்கோவை** *śaṅgili-k-kōvai,* பெ. (n.) தொடர்ச்சியானது; arrangement, sequence, series.

*[சங்கிலி + கோவை. கோர்வை → கோவை]*

**சங்கிலிக்குப்பம்** *śaṅgili-k-kuppam,* பெ. (n.). சங்கொலிக்குப்பம் பார்க்க; see *saṅgoli-k-kuppam* (த.ஊ.பெ.).

*[சங்கொலி + குப்பம் - சங்கொலிக் குப்பம் → சங்கிலிக்குப்பம்]*

**சங்கிலித்துருமம்** *śaṅgili-t-turumam,* பெ. (n.) தான்றிக்காய்; fruit of devil tree - Terminalia bellerica (சா.அக.).

**சங்கிலிப்பிரண்டை** *śaṅgili-p-piraṇḍai,* பெ. (n.) பிரண்டை வகை; a species of piraṇḍai.

*[சங்கிலி + பிரண்டை]*

**சங்கிலிப்பின்னல்** *śaṅgili-p-piṉṉal,* பெ. (n.) 1. சங்கிலியின் பின்னல் (வின்.); linking of a chain. 2. ஒருவகைத் தலைப்பின்னல்; a mode of hair braiding.

*[சங்கிலி + பின்னல்]*

**சங்கிலிப்பூட்டு** *śaṅgili-p-pūṭṭu,* பெ. (n.) 1. சங்கிலியின் பின்னல்; linking of a chain. 2. சங்கிலிமாட்டும் ஆணி; clasp of a chain. 3. மற்போரில் ஒருவகைப் பிடி (யாழ்ப்.); chain-hold in wrestling. 4. பெருஞ்சிக்கல் (வின்.); intricacy.

*[சங்கிலி + பூட்டு]*

**சங்கிலிப்பூதத்தான்** *śaṅgili-p-pūdattāṉ,* பெ. (n.) சங்கிலிக்கறுப்பன் பார்க்க; see *śaṅgili-k-kaṟuppaṉ.*

*[சங்கிலி + பூதத்தான். ஊதுதல் = வீங்குதல், பருத்தல். ஊது → பூது → பூதல் → பூதலி. பூதலித்தல் = பருத்தல், தடித்தல். பூது → பூதம் = பருத்தது, பருத்த பேய். பூதம் → பூதத்தான்]*

**சங்கிலிமண்டபம்** *śaṅgili-maṇḍabam,* பெ. (n.) இணைப்பு மண்டபம் (நெல்லை.); connecting pavilion.

*[சங்கிலி + மண்டபம். மண்டு → மண்டகம் = மக்கள் கூடும் கல் அல்லது காரைக்கூடம். மண்டகம் → மண்டபம். முதற்காலத்தில் கல்லாலும் பிற்காலத்தில் செங்கலாலும் மண்டபம் அமைந்தது]*

தனியாக இருக்கும் அம்மன் கோயிலை மூலக் கோயிலுடன் இணைத்து நிற்பது சங்கிலி மண்டபம்!

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலுடன் காந்தியம்மைக் கோயிலை இணைத்து நிற்பது சங்கிலி மண்டபம்.

**சங்கிலிமோதிரம்** *śaṅgili-mōdiram,* பெ. (n.) *1.* சிக்குமோதிரம்; finger-ring of small links. *2.* கொடி கட்டும் வளையம்; ring fastened in a beam for suspending ropes.

*[சங்கிலி + மோதிரம்]*

**சங்கிலியார்** *śaṅgiliyār,* பெ. (n.) சுந்தரமூர்த்தி நாயனார் மனைவியரிருவருள் ஒருத்தி; one of the two wives of Sundara-mūrtti-nāyaṉār. "தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியார்" (பெரியபு. ஏயர் கோன். 211.).

**சங்கிலிவட்டகை** *śaṅgili-vaṭṭagai,* பெ. (n.) மாழையால் செய்து சங்கிலியாலிணைத்த கரண்டியுடன் கூடிய ஒரு விளக்கு; a kind of lamp chained with a spoon, for pouring oil.

*[சங்கிலி + வட்டகை]*

**சங்கிலிவடம்** *śaṅgili-vaḍam,* பெ. (n.) *1.* சங்கிலி வடிவில் அமைந்த கழுத்தணி; a neck-ornament in the shape of a chain. *2.* தேரிழுக்குஞ் சங்கிலி (வின்.); iron chain for drawing a car.

*[சங்கிலி + வடம்]*

**சங்கிலிவலயம்** *śaṅgili-valayam,* பெ. (n.) சங்கிலிவளையம் பார்க்க; see *śaṅgili-vaḷaiyam.*

*[சங்கிலி + வலயம். வளையம் → வலையம்]*

**சங்கிலிவளையம்** *śaṅgili-vaḷayam,* பெ. (n.) சங்கிலியின் உறுப்பாகவுள்ள வளையம்; links or rings of a chain.

*[சங்கிலி + வளையம்]*

**சங்கிலிவிரியன்** *śaṅgili-viriyaṉ,* பெ. (n.) சங்கிலி போன்ற வரிகளையுடைய ஒருவகைப் பாம்பு; russell's viper, as having marks like chain.

*[சங்கிலி + விரியன்]*



சங்கிலிவிரியன்

**சங்கிலிவிளக்கு** *śaṅgili-viḷakku,* பெ. (n.) *1.* சங்கிலி வட்டகை பார்க்க; see *śaṅgili-vaṭṭagai. 2.* சங்கிலியில் தொங்கும் விளக்கு; a kind of bronze lamp hung on a chain.

ம. சங்஫ல விளக்கு

*[சங்கிலி + விளக்கு]*

**சங்கிற்கூர்மை** *śaṅgiṟ-kūrmai,* பெ. (n.) ஒருவகை உப்பு; a kind of salt.

**சங்கின்குடியோன்** *śaṅgiṉ-kuḍiyōṉ,* பெ. (n.) பொன்வண்டு (நாகரவண்டு) (யாழ்.அக.); a gold-coloured beetle.

*[சங்கின் + குடியோன்.]*

**சங்கின்பிள்ளை** *śaṅgiṉ-piḷḷai,* பெ. (n.) முத்து; pearl born of, or produced from oyster (சா.அக.).

*[சங்கின் + பிள்ளை]*

**சங்கீதம்** *śaṅgīdam,* பெ. (n.) கிச்சலிக் கிழங்கு; orange-root - Hedychium coronatium (சா.அக.).

**சங்கீனி** *śaṅgīṉi,* பெ. (n.) உழமண்; fuller's earth (சா.அக.).

**சங்கு**[1] *śaṅgu,* பெ. (n.) *1.* நந்துக்கூடு; chank, conch, large convolute shell. "சங்குதங்கு தடங்கடல்" (திவ். பெரியதி. 1, 8, 1). 'சங்காயிரம் கொண்டு காசிக்குப் போனாலும் தன்பாவம் தன்னோடே' (பழ.); 'சங்கு சுட்டாலும் வெண்மை தரும்' (பழ.) *2.* ஐம்படை என்னும் அணியின் ஓர் உரு (சூடா.); a constituent of the aimpaḍai ornament. *3.* சங்கவரிகை பார்க்க (திவா.);

see *śaṅga-varigai*. *4.* **சங்கினால் செய்த கைவளை;** shell bracelet. *5.* **குரலென்னு மிசை** *(திவா.);* a musical note. *6.* **மிடறு;** throat. *7.* **ஒரு பேரெண்;** thousand billions. "சங்குதரு நீணிதியம்" *(சீவக. 493).* *8.* **பேரெண் கொண்ட போர்ப்படை** *(சூடா.);* a large army. *9.* **பெருவிரல் நிமிர ஒழிந்த நான்கு விரல்களும் வளைந்து நிற்கும் இணையாவினைக்கை வகை** *(சிலப். 3: 18 உரை);* (Nāṭya. 6) gesture with one hand in which the thum is held upright while the other fingers are bent. *10.* **கோழி** *(அக.நி.);* cock. *11.* **வெண்ணிறம்;** white colour.

**மறுவ.** கோடு, சுரிமுகம், புரி, வளை, வாரணம், நந்து, வெள்ளை, ஊட்டி, பணிலம், நாரு, கம்பு, சுத்தி, தரா.

ம. சங்கு

***['சுல்' வளைதற்கருத்துவேர். சுல் → சுலவு. சுலவுதல் = சுற்றுதல். சுல் → சள் → சழி. சழிதல் = உடற்சதை சரிந்து தளர்தல். சுல் → சுர் → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சரிவு → சருகு → சருக்கு. சருக்குதல் = சாய்தல், சரிதல், வளைதல், வழுவுதல், சறுக்குதல். சருக்கு → சருக்கம் = வட்டம். சருக்கு → சக்கு → சக்கடம் → சக்கடா = கட்டைவண்டி. சக்கு → சங்கு]***

உள் வளைந்துள்ள நந்துக்கூடு, சங்கு வடிவான ஐம்படைத் தாலியுரு, சங்கு வடிவான வரை, சங்கினாற் செய்த கைவளை, சங்கு போன்ற ஊட்டி என்னும் மிடற்றுறுப்பு, மிடற்றில் இயல்பாக எழும் குரல் என்னும் இசை, சங்கு வளைவுகளால் அல்லது முட்களால் ஏற்பட்ட பேரெண், பேரெண் கொண்ட போர்ப்படை, பெருவிரல் நிமிர மற்ற நால் விரல்களும் வளைந்து நிற்கும் இணையாவினைக்கை, சங்கு வடிவான தலையுடைய கோழி.

சங்கு உள் வளைந்திருப்பதால் கோடு, அரிமுகம், புரி (வலம்புரி, இடம்புரி), வளை, வாரணம் என்னும் அதன் பெயர்களெல்லாம் வளைவுக் கருத்தையே வேர்ப்பொருளாகக் கொண்டிருப்பது கவனிக்கத்தக்கது. (வே.க.241)

சங்கினால் குழந்தைகட்குப் பால் ஊட்டுவதால் அதற்கு ஊட்டி என்றும் பெயர்.

சங்கு ஒரே ஓட்டால் ஆனது; சிறிய சங்கு கடுகின் அளவும், பெரிய சங்கு ஓர் அடிக்கு மேலும் இருக்கும்.

சங்கு, சக்கரம், வில், வாள், தண்டம் என்பன திருமாலின் ஐம்படை. இவ்வைம்படை உறுப்புகளைப் பொருத்தியதும் குழந்தைகட்குக் காப்பாக அணிவதுமான தாலி ஐம்படைத் தாலி என்று சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி குறிப்பிடுகிறது. மேலும்,

ஏவுகணைச் சங்கு - மிக அரிதாக கிடைப்பது.

இராமேசுவரம் சங்கு - இராமேசுவரம் கடற்பகுதியில் கிடைப்பது.

இராவணன் வழி - இதுவும் இராமேசுவரம் கடற்பகுதியில் கிடைப்பது.

எழுத்தாணிச் சங்கு - நீளமாகவும் சற்றுக் கூர்மையாகவும் இருப்பது.

ஐவிரலிச் சங்கு - கையைப் போல அமைந்திருப்பது.

சப்பாத்திச் சங்கு - அகன்றதாகவும் பெரியதாகவும் இருப்பது.

இரட்டைச் சங்கு - பெரியதாக இருப்பது. திருவோட்டுச் சங்கு என்றும் இதனை அழைப்பர். இரப்போரும், சிவனிய ஆண்டிகளும் இதனைப் பயன்படுத்துவர்.

முள்ளிச் சங்கு - மேற்பரப்பில் கூரான பகுதிகள் இருப்பது.

யானை முள்ளிச் சங்கு - யானையின் தோற்றம் போன்று, பெரியதாகவும் முள்ளுள்ளதாகவும் இருப்பது.

வாழைப் பூச்சங்கு - வாழைப் பூவைப் போன்றிருப்பது.

வெள்ளையன் சங்கு - வெண்ணிறமானது.

வெள்ளைப்பூண்டுச் சங்கு - வெண்ணிறமானது.

செவ்வாயன் - சிவந்த நிறமுடையது.

சொறி சங்கு - மேற்பகுதி சொரசொரப்பாக இருப்பது.

சோழிச் சங்கு - கிளிஞ்சல் வகையைச் சார்ந்தது.

சங்கு நண்டு - நண்டு போன்ற தோற்றமுடையது.

குதிரை முள்ளிச் சங்கு - குதிரையை போன்றும் முள் உள்ளதுமானது.

குருவிச் சங்கு - குருவியைப் போன்றிருப்பது.

குழாய்ச் சங்கு - மிகவும் சிறியது.

பல்பப் பூச்சி - மிகவும் சிறியது.

பால் சங்கு - வெண்ணிறமுடையது.

பிள்ளையார் சங்கு - யானை முகத்தோற்றம் உடையது.

புறா முட்டைச் சங்கு - புறாமுட்டையைப் போன்றிருப்பது.

என்று சங்கின் வகைகளை பரதவர் கலைச் சொல்லகரமுதலி குறிப்பிடுகிறது.

*சங்கு வகைகள்*

1. *சலஞ்சலம்* - a conch - shell of super - eminent qualities - Voluta ryrum.
2. *முட்சங்கு/கோலச்சங்கு* - prickly chank, one with thorn - like points.
3. *பட்டி அல்லது சிறு சங்கு* - short chank.
4. *சூற்சங்கு* - chank containing or impregnated with pearls.
5. *தாழஞ் சங்கு* - one with a wide mouth.
6. *வலம்புரிச்சங்கு* - one with the spiral opening to the right; chank shell of happy convolutions.
7. *இடம்புரிச்சங்கு* - ordinary chank with - an opening to the left.
8. *பாலடைச் சங்கு* - small conch used for giving milk to children.
9. *உவர்ச்சங்கு* - prickly chank.
10. *நீர்வாழ் சங்கு* - conch - shell Turbinella rapa.
11. *பாற்சங்கு* - white chank.
12. *பச்சைச் சங்கு அல்லது ஊது சங்கு* - conch used for blowing in temples.
13. *வெண்சங்கு* - white dead shell.
14. *கண்ணைச்சங்கு* - the conch worn by Tirumāl (Viṣṇu).
15. *தூநீர்ச் சங்கு* - sacred conch shell - Mazza rapa.
16. *வரிச்சங்கு* - striped conch.
17. *கடற்சங்கு* - a large convolute shell regarded with religious veneration - Turbinella pyrom.
18. *கண்டகச்சங்கு* - a thorny chank in the sacred Gandhaka river near Benares.

*சங்கின் வாழ்க்கை முறையையும் அதன் பயன்பாட்டையும் பற்றித் தமிழர்கள் 3000 ஆண்டுகட்கு முன்பே அறிந்திருந்தனர். சங்கு அணிகலன் செய்வதில், வழிபாட்டில், போர்க்களத்தில் என்று தமிழர் வாழ்க்கை முறையில் பெரும்பங்கு பெற்றுள்ளது. அதுபோல் சங்கு வளமைக் குறியீடாகவும் வெற்றிக் குறியீடாகவும் கருதப்பட்டுள்ளது.*

*சங்கு வளையல்கள் பெண்களின் மங்கல அணிகலன்களாகக் கொள்ளப்பட்டிருந்ததையும், கணவன் மறைவிற்குப்பின் அவ் வளையல்களை உடைந்தெறிந்து கைம்மைத் தோற்றங் கொண்டிருந்ததையும் பழந்தமிழ் நூல்கள் தெரிவிக்கின்றன.*

*அக் காலப் பெண்கள் சங்கு வளையல்களைப் பெரிதும் விரும்பி அணிந்துள்ளனர். சங்கு வளையல் மிகுதியாக இருந்ததால் சங்கிற்கு வளை என்ற பெயரும் உருவாயிற்று. சங்கைக் கொண்டு செய்யப்பட்ட அணிகள் யாவும் வட்டமாகவே இருந்துள்ளதையும் இது குறிக்கிறது.*

*சில்வளை, எல்வளை, இலங்குவளை, அணி வளை, கோல்வளை, செறிவளை, நிறைவளை, நிரைவளை, வால்வளை, வாள்வளை, புரிவளை, இளவளை, உடைவளை, புணரிவளை, நீர்ப்பரப்பின்வளை, நனிமுரல்வளை, தொடிவளை, கைவளை, பவளவளை, இடுப்புணர்வளை, இடுவளை, ஒடுவளை, ஆய்வளை, வரிவளை, நல்வளை, தோள்வளை, ஈர்வளை, தொடுவளை, வலம்புரிவளை எனப் பலவகை வளையல்களைப் பற்றிய செய்திகளைக் கழக இலக்கியங்கள் மூலம் அறிகிறோம்.*

*சங்கு அடிபெருத்தும், நுனி சிறுத்தும் உருண்டுதிரண்டுமிருக்கும். இது வெண்மை யானது. தொல்காப்பியர் சங்கினை ஈரறிவு உயிரினமாகக் குறித்துள்ளார். "நந்தும் முரளும் ஈரறி வினவே" (தொல். பொருள். மரபு. 29).*

*வலம்புரிச் சங்கிலிருந்து கிடைத்த முத்துகள் மன்னனுக்குப் பரிசாகவும் திரையாகவும் அளிக்கப்பெற்றதைச் சீவகசிந்தாமணி (697, 2410, 919, 1503) தெரிவிக்கின்றது.*

**சங்கு**[2] *šaṅgu,* பெ. (n.) **சங்கஞ்செடி** பார்க்க *(பதார்த்த. 118.);* see *šaṅgañ-jeḍi.*

*[இசங்கு → சங்கு]*

**சங்கு**[3] *šaṅgu,* பெ. (n.) கடுரோகிணி *(மலை.);* christmas rose.

**சங்கு**[4] *šaṅgu,* பெ. (n.) **கணைக்கால்;** shank.

*[சங்கு¹ → சங்கு = சங்கு வடிவில் திரண்ட கெண்டைக்கால்]*

**சங்கு**[5] *šaṅgu,* பெ. (n.) *1.* **முளை;** stake, peg, spike. *2.* **நிழலால் நேரமறிவதற்காக நேராக நடப்பெறுங் கோல்** *(வின்.);* gnomon or perpendicular column for measuring the altitude of the sun by the length of its shadow. *3.* **மட்டிப் படைக்கலம்** *(திவா.);* a kind of weapon "கழுக்கடை சங்கொடு ......... விழுப்படையாவும்" *(கந்தபு. சகத்திரவாகு. 7)*

*[சங்கு = வளைந்தது, கூர்மையானது. சங்கு¹ → சங்கு⁵ ]*

# சங்கு வகைகள்


சலஞ்சலம்
கண்டகச் சங்கு
உவர்ச்சங்கு
பாலாடைச் சங்கு
பாற்சங்கு
வம்புரிச்சங்கு
இடம்புரிச்சங்கு

# சங்கு வகைகள்



முட்சங்கு



கடற்சங்கு



தீர்த்த சங்கு



வெண்சங்கு



தாழஞ்சங்கு



வரிச்சங்கு

**சங்கு[6]-தல்** *šaṅgu-,* 5 செ.கு.வி. (v.i) *பல்லாங்குழி ஆடுபவனுக்கு ஊதியமின்றி (இலாபமின்றி) முடிந்து விடுதல்;* to be blocked in ones turn without any gain in the game of pallāṅguḻi.

பட. பிங்கு

*[தங்கு → சங்கு-,]*

**சங்கு[7]-தல்** *šaṅgu-,* 5 செ.கு.வி. (v.i) *துணிவு அழிதல்* (வின்.); to be dispirited, lose courage.

Skt. śaṅkā

*[இங்குதல் = அழுந்துதல். இங்கு → சிங்கு. சிங்குதல் = குன்றுதல், இளைத்தல், அழிதல். சிங்கு → சங்கு-,]*

**சங்கு[8]-தல்** *šaṅgu-,* 4 செ.கு.வி. (v.i.) *குதித்தல், தாண்டுதல்;* to jump (கருநா.).

க. சங்கு

*[சுல் → சல் → சன் → சங்கு-,]*

**சங்குக்கீரை** *šaṅgu-k-kīrai,* பெ. (n.) *கீரைவகை* (சங்.அக.); a kind of greens.

*[சங்கு[7] + கீரை. சங்கு வடிவான இலையைக் கொண்ட கீரை]*

**சங்குக்கை** *šaṅgu-k-kai,* பெ. (n.) *பெருவிரல் நிமிர ஒழிந்த நான்கு விரல்களும் வளைந்து நிற்கும் இணையாவினைக்கை வகை* (சிலப். 3: 18, உரை); a gesture with one hand in which the thumb is held upright while the other fingers are bent.

*[சங்கு + கை. செய் → (சை) → கை]*

பெருவிரலை நிமிர்த்தி மற்ற விரல்களை வளைத்ததாக சங்கின் வடிவம் தோன்றும்

**சங்குக்கொட்டான்** *šaṅgu-k-koṭṭāṉ,* பெ. (n.) *சங்குகளை ஓரிடத்திலிருந்து வேரோரிடத்திற்கு எடுத்துச் செல்லப் பயன்படுத்தும் பெட்டி* (மீனவ.); box used to take conch from one place to another.

*[சங்கு + கொட்டான். குட்டான் = சிறிய ஓலைப்பெட்டி. குட்டான் → கொட்டான் = ஓலைப் பெட்டி, பெட்டி]*

**சங்குக்கோலம்** *šaṅgu-k-kōlam,* பெ. (n.) *சங்கு உருவம் அமையுமாறு போடும் கோலம்;* ornamental figures like conch, drawn on floor, wall or sacrificial pots.

*[சங்கு + கோலம்.]*

பெரும்பாலும் மாலிய (வைணவ சமய)த்தார் இல்லங்களில் சிலை (மார்கழி)த் திங்களில் வாயிலில் சங்குக் கோலம் போடுவர். சங்குக் கோலம் தீமைகளினின்று விடுபடவும் செல்வ வளத்தைக் கொடுக்கவும் வல்லது என்பது நம்பிக்கை.

**சங்குகட்டு-தல்** *šaṅgu-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *கால்நடைகளுக்குச் சங்கு கட்டுதல்;* to tie conch to cattles.

*[சங்கு + கட்டு-,]*

கால்நடைகளின் கழுத்து, நெற்றி, வயிற்றுப் பகுதி ஆகியவற்றில் கருப்புக் கயிற்றில் சங்கைக் கோத்துக் கட்டித் தொங்க விடுவதுண்டு. அழகுபடுத்துவதற்கும் சில தீய விளைவை அகற்றும் என்னும் நம்பிக்கையின் அடிப்படையிலும் சங்கு கட்டுவர். மாட்டு வண்டி போன்றவற்றிலும் சங்கு கட்டுவதுண்டு.

**சங்குகடை-தல்** *šaṅgu-kaḍai-,* 2 செ.குன்றாவி. (v.t.) *இறக்கும் நேரத்தில் நெஞ்சில் களகளவெனும் ஓசை உண்டாதல்;* to rattle in the throat, as of dying persons.

ம. சங்குகரயுக.

*[சங்கு + கடை-,]*

சங்கு போன்ற ஊட்டி என்னும் மிடற்றுருப்பில் கடைதல் போன்ற ஓசை ஏற்படுதல் சங்கு கடைதல் எனப்பட்டது.

**சங்குகர்ணம்** *šaṅgu-karṇam,* பெ. (n.) 1. *ஒட்டகம்;* camel. 2. *கழுதை;* donkey.

*[சங்கு + கர்ணம். சங்குபோன்ற காதினை உடையது]*

Skt. karṇa → த. கர்ணம்.

**சங்குகழித்தல்** *šaṅgu-kaḻittal,* தொ.பெ. (vbl.n.) *தரங்குறைந்த சுறாக்கடி, சொரி, நண்டுக்கடி முதலிய சங்கு வகைகளைக் கழித்தல்;* separating substandard conches (மீனவ.).

*[சங்கு + கழித்தல்]*

**சங்குகாசம்** *šaṅgu-kāšam,* பெ. (n.) *கண்ணோய் வகை* (சங்.அக.); a kind of eye-disease.

*[சங்கு + காசம்]*

**சங்குகிளரி** *šaṅgu-kiḷari,* பெ. (n.) புலிநறளை; fox -grape (சாஅக.).

**சங்குகுலை** *šaṅgu-kulai,* பெ. (n.) ஆமை; tortoise, turtle (சாஅக.).

[சங்கு + குலை]

**சங்குகுளி-த்தல்** *šaṅgu-kuḷi-,* 4 செ.குவி. (v.i.). மூழ்கிச் சங்கெடுத்தல்; to dive for chanks.

[சங்கு² + குளி-,]

**சங்குகுளிக்காரன்** *šaṅgu-kuḷi-k-kāraṉ,* பெ. (n.) 1. கடலில் சங்கெடுப்பதற்காக முக்குளிப்போன்; one who dives for chanks. 2. சங்கெடுப்பதற்காக விடப்பட்ட வரியிலி நிலம் (R.T.); 'inam' granted for diving for chank-shells.

[சங்கு + குளி + காரன்]

**சங்குச்சலாபம்** *šaṅgu-c-calābam,* பெ. (n.) சங்கு குளித்தெடுக்கை; chank fishery.

[சங்கு + சலாபம். சலாபம் = முத்துக் குளிக்கை]

**சங்குச்சுண்ணாம்பு** *šaṅgu-c-cuṇṇāmbu,* பெ. (n.) சங்கு சுட்ட சுண்ணாம்பு; chank-lime, shell-lime.

[சங்கு + சுண்ணாம்பு]

**சங்குச்சுரி** *šaṅgu-c-curi,* பெ. (n.) புரியாணி (யாழ்ப்); screw, as being spiral.

ம. சங்கிரி

[சங்கு + சுரி]

**சங்குச்சன்னி** *šaṅgu-c-caṉṉi,* பெ. (n.) உடல் வெதும்பி, நாக்கு வறண்டு, வயிறு பொருமி, கக்கல், விக்கல், காதடைப்பு, திடுக்கிட்டெழுதல் முதலிய குணங்களுடன், 14 நாள் வரைக்கும் நீடித்திருக்கும் ஒருவகைக் காய்ச்சல், சன்னி; a kind of deilrium from enteric fever extending to a period of fourteen days, with characterised by aching of the limbs, parched tongue, rumbling of the stomach, vomitting, hiccough, dullness of hearing restless due to frequent and sudden rise from the bed etc. (சாஅக.).

[சங்கு + சன்னி]

**சங்குச்சுண்ணாம்பு** *šaṅgu-c-cuṇṇāmbu,* பெ. (n.) சங்கு சுட்ட நீறு பார்க்க; see *šaṅgu-suṭṭa-nīṟu*

[சங்கு + சுண்ணாம்பு. சுள் → சுள்ளை → சூளை. சுள் → சுண் → சுண்ணம் = நீற்றுதல், நீறு, சுண்ணாம்பு]

**சங்குசக்கரக்கடுக்கன்** *šaṅgu-cakkara-k-kaḍukkaṉ,* பெ. (n.) இடது காதில் சங்கின் வடிவாகவும் வலது காதில் சக்கர வடிவாகவும் திருமாலடியவர்கள் அணியும் கடுக்கன் வகை; ear-rings in the form of chank for the left ear and of a discus for the right, used by vaiṣṇavās.

[சங்கு + சக்கரம் + கடுக்கன்]



சங்குசக்கரக்கடுக்கன்

**சங்குசக்கரம்¹** *šaṅgu-cakkaram,* பெ. (n.) தரையிலோ கம்பியிலோ சுழலக் கூடிய சுருள் வடிவான ஒரு பட்டாசு; cracker that either spins on the floor or rotates on a metal wire when lit.

[சங்கு + சக்கரம்]



சங்குசக்கரம்

**சங்குசக்கரம்²** *šaṅgu-šakkaram,* பெ. (n.) சங்கு சக்கர முத்திரை பொறிக்கப்பட்ட ஒரு வகை அணிகலன்; a kind of ornament with the shape of the conch and discus embossed (சேரநா.).

ம. சங்குசக்ரம்

[சங்கு + சக்கரம்]

**சங்குசக்கரம்**[3] *śaṅgu-cakkaram,* பெ. (n.) *சங்குசக்கர வடிவான வரிகை;* conch and circle shaped palm lines.

*[சங்கு + சக்கரம்]*

**சங்குசாரம்** *śaṅgu-śāram,* பெ. (n.) *சங்கைச் சுட்டெடுக்கும் உப்பு;* an essence of salt extracted by burning and reducing chank into ashes *(சா.அக.).*

*[சங்கு + சாரம்]*

**சங்குசிதம்** *śaṅguśidam,* பெ. (n.) சுருக்கமானது *(சி.சி. 4, 36, சிவாக்.);* that which is contracted shrunk, narrowed.

*[சங்கு + சிதம்]*

**சங்குசுட்டநீறு** *śaṅgu-suṭṭa-nīṟu,* பெ. (n.) *சங்குச் சுண்ணாம்பு;* lime obtained by or delivered from, slaking conch-shell; slaked shell-lime *(சா.அக.).*

*[சங்கு + சுட்ட + நீறு]*

**சங்குசூலை** *śaṅgu-śūlai,* பெ. (n.) *ஆமை;* tortoise, turtle *(சா.அக.).*

*[சங்கு + சூலை]*

**சங்குடம்** *śaṅguḍam,* பெ. (n.) கொத்தான்கொடி; air-creeper - Cassytha filiformis.

**சங்குணப்புல்** *śaṅguṇa-p-pul,* பெ. (n.) *நான்முகப்புல்;* square - stalked grass - Saccharum spontaneum *(சா.அக.).*

**சங்குத்தாபனம்** *śaṅgu-t-tābanam,* பெ. (n.) சங்கு நிலைநிறுத்தம் *பார்க்க;* see *śaṅgu-nilai-niṟuttam* *(கட்டட.).*

*[சங்கு + தாபனம்]*

Skt. stābana → த. தாபனம்

**சங்குத்தாலி** *śaṅgu-t-tāli,* பெ. (n.) *1. சங்கு வடிவான தாலி (வின்.);* 'tāli' with beads in imitation of chanks, one on either side. *2. சங்கினாற் செய்யப்பட்ட மகளிரணியுந் தாலி;* tāli made of shell, worn by women.

*[சங்கு + தாலி]*

**சங்குத்தாலி வெள்ளாளர்** *śaṅgu-t-tāli-veḷḷāḷar,* பெ. (n.) *சங்கினாலியன்ற தாலியை மகளிர் அணியும் வழக்குமுடைய ஒருவகை வேளாளர் (வின்);* a class of vēḷāḷas whose women wear śaṅgu-t-tāli.

*[சங்கு + தாலி + வெள்ளாளர்]*

**சங்குத்திரி** *śaṅgu-t-tiri,* பெ. (n.) *சங்கின் உட்சுழி (இ.வ.);* spiral winding in shells.

ம. சங்குதிரி

*[சங்கு + திரி]*

**சங்குத்திருகி** *śaṅku-t-tirugi,* பெ. (n.) *1. சங்கறுக்குங் கருவி (வின்.);* machine for sawing and cutting shells. *2. அடைத்த நெட்டித் தக்கையை இழுத்து வாங்குங் கருவி;* cork-screw *(செ.அக.).*

ம. சங்குதிரி

*[சங்கு + திருகி]*

**சங்குந்தி** *śaṅgundi,* பெ. (n.) *ஒருவகைக் கிலுகிலுப்பை;* rattle-wort - Crotalaria genus *(சா.அக.).*

*[சங்கு → சங்குந்தி]*

**சங்குநகம்** *śaṅgu-nagam,* பெ. (n.) நாகுணம் என்னும் மணப்பொருள் *(நாநார்த்த. 435, உரை);* nākuṇam, an aromatic substance.

*[சங்கு + நகம்]*

**சங்குநண்டு**[1] *śaṅgu-naṇḍu,* பெ. (n.) ஒரு வகைச் சங்கு *(மீனவ.);* a kind of chank.

*[சங்கு + நண்டு]*

**சங்குநண்டு**[2] *śaṅgu-naṇḍu,* பெ. (n.) பெரிய சங்கிற்குள் வாழும் ஒருவகை நண்டு; a crab living in the hollow of a big chank *(சா.அக.).*

*[சங்கு + நண்டு]*

**சங்குநாதம்** *śaṅgu-nādam,* பெ. (n.) சங்கநாதம் *பார்க்க;* see *śaṅga-nādam* *(செ.அக.).*

*[சங்கு + நாதம்]*

**சங்குநிதி** *śaṅgu-nidi,* பெ. (n.) *வட்டக் கிலுகிலுப்பை (மலை.);* blue-flowered crotalaria.

*[சங்கு + நிதி]*

**சங்குநிலம்** *śaṅgu-nilam,* பெ. (n.) *சங்குப் படுகை பார்க்க;* see *śaṅgu-p-paḍugai* (மீனவ.).

*[சங்கு + நிலம்]*

**சங்குநிலைநிறுத்தம்** *śaṅgu-nilai-niṟuttam,* பெ. (n.) *1. வீட்டின் பீடைகள் நீங்குமெனும் நம்பிக்கையில் நீர் நிரப்பிய சங்கினை 45 நாள் மந்திரித்துச் சுவரின் கீழ்ப் புதைத்தல்;* burrying under a wall a conch filled with water after doing manthra for 45 days to drive out affliction of a house. *2. புதிதாக அமைக்கும் கட்டடத்திற்கு எல்லை தெரியும்படி முளையடிக்குஞ் சங்கு;* setting up conch as peg to identity the area of new building.

*[சங்கு + நிலைநிறுத்தம்]*

**சங்குப்பட்டினி** *śaṅgu-p-paṭṭiṉi,* பெ. (n.) ஒரு வகை நோன்பு (இ.வ.); a kind of fast (செ.அக.).

*[சங்கு + பட்டினி]*

**சங்குப்படுகை** *śaṅgu-p-paḍugai,* பெ. (n.) *சங்குகள் நிறைந்திருக்கும் கடற்பகுதி* (மீனவ.); chank bed.

மறுவ. சல்லி, பிறால்

*[சங்கு + படுகை]*

**சங்குப்பறை** *śaṅgu-p-paṟai,* பெ. (n.) *சங்குப் பறையர் பார்க்க* (வின்.); see *śaṅgu-p-paṟaiyar.*

*[சங்கு + பறை]*

**சங்குப்பறையர்** *śaṅgu-p-paṟaiyar,* பெ. (n.) *இறப்புச் சடங்கில் சங்கு ஊதும் இனத்தார்;* a sub-caste whose men act as conch-blowers at funerals (*E.T.*) (செ.அக.).

*[சங்கு + பறையர்]*

**சங்குப்பிடி** *śaṅgu-p-piḍi,* பெ. (n.) வலுக்கட்டாயம் (இ.வ.); extreme compulsion (செ.அக.).

*[சங்கு + பிடி. சங்கு = சங்கு வடிவான மிடற்றுறுப்பு, கழுத்து. சங்குப்பிடி = கழுத்தை நெரித்தல்]*

**சங்குப்புரி** *śaṅgu-p-puri,* பெ. (n.) *1. சங்கின்புரி;* the spire of a conch. *2. புரியாணி;* screw. *3. சங்குப் புரிபோல் உள்ள கருவி;* a tool having spirals like a conch (செ.அக.).

*[சங்கு + புரி]*

புல் → புரு → புரி. புரு → புருவம் = கண்ணின் புருவம். புரிதல் = வளைதல். வலம்புரி, இடம்புரி என்னும் சங்குகளை நோக்குக.

**சங்குப்பூ** *śaṅgu-p-pū,* பெ. (n.) *சங்கின் முட்டைக் கூடு;* egg mass.

*[சங்கு + பூ]*

**சங்குப்பூச்சி** *śaṅgu-p-pūcci,* பெ. (n.) *சங்கினுள் இருக்கும் பூச்சி* (மீனவ.); the insect living inside conch.

*[சங்கு + பூச்சி]*

சங்குப்பூச்சி, இராவணன் விழி, பலகறை, சொறிசங்கு, பல்பப்பூச்சி எனப் பல வகைப்படும்

**சங்குப்பூதம்** *śaṅgu-p-pūdam,* பெ. (n.) கோயிற் கோபுர மேற்றளங்களில் கைகளில் சங்கு ஏந்தியவாறு அமைந்த பூத உருவம் (மீனவ.); the figure which has conch at temple tower.

*[சங்கு + பூதம்]*

**சங்குப்பூனைமதம்** *śaṅgu-p-pūṉai-madam,* பெ. (n.) *1. சவ்வாது;* zibeth. *2. புனுகு;* civet, perfume from the anal gland of a cat (சா.அக.).

*[சங்குப்பூனை + மதம்]*

பூனையின் கழிவுறுப்பின் அருகில் சுரக்கும் நீரிலிருந்து எடுக்கும் மணப்பொருள்.

**சங்குபிடி-த்தல்** *śaṅgu-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *சங்கூது-தல் பார்க்க;* see *śaṅgūdu-,* (செ.அக.).

*[சங்கு + பிடி-,]*

**சங்குபுட்பம்** *śaṅgu-putpam,* பெ. (n.) *சங்கப்பூ பார்க்க;* see *śaṅga-p-pu-.*

*[சங்கு + புட்பம்]*

**சங்குமடப்பளி** *śaṅgu-maḍappaḷi,* பெ. (n.) *சங்க மடைப்பள்ளி (யாழ்ப்.) பார்க்க;* see *śaṅga-maḍai-p-paḷḷi* (செ.அக.).

*[சங்கம் + மடப்பளி. மடைப்பள்ளி → மடப்பளி]*

**சங்குமணி** *śaṅgu-maṇi,* பெ. (n.) *சங்குத் துண்டங்களால் ஆக்கப்பட்ட மணி;* beads cut out from chanks (செ.அக.).

*[சங்கு + மணி. மண் → மணி = உருண்டையானது, உருண்டையான பாசி*

அல்லது முத்து அல்லது ஒளிக்கல் வகை. உருண்டையான விதை அல்லது அரிசி. ஒ.நோ: மணிமாலை, தொண்மணி (நவரத்தினம்), கூலமணி, சிறுமணி (அரிசி)]

**சங்குமதம்** *šaṅgu-madam,* பெ. (n.) புனுகு (இவ.); civet perfume (செ.அக.)

தெ. சங்குமதமு

[சங்கு + மதம். சங்கு = சங்குப்பூனை]

**சங்குமரு** *šaṅgu-maru,* பெ. (n.) வேம்பு (மலை.); neem tree.

[சங்கு + மரு]

**சங்குமரை** *šaṅgu-marai,* பெ. (n.) சங்கின் முறுக்கு; spiral of conch.

[சங்கு + மறை]

**சங்குமாத்திரை** *šaṅgu-māttirai,* பெ. (n.) சங்க நீற்றினால் செய்யப்படுவதும் கண்ணோய்களுக்கு உதவுவதுமான மருந்து (சங்.அக.); a medicinal pill prepared from calcined chank, for use in eye-diseases.



[சங்கு + மாத்திரை]

**சங்குமாருதம்** *šaṅgu-mārudam,* பெ. (n.) வேம்பு; margosa tree (சா.அக.).

[சங்கு + மாருதம்]

**சங்குமால்** *šaṅgu-māl,* பெ. (n.) சங்கு சேமிக்கும் கிடங்கு (மீனவ.); chank godown.

[சங்கு + மால்]

**சங்குமுகம்** *šaṅgu-mugam,* பெ. (n.) ஆறு கடலுடன் கலக்கும் இடம் (மீனவ.); river mouth.

[சங்கமுகம் → சங்குமுகம்]

**சங்குமுத்திரை** šaṅgu-muttirai, பெ. (n.) 1. வலது கட்டைவிரல்நுனி சுட்டுவிரலின் அடியைத் தொடுதலாற் சங்கு வடிவாக அமையும் முத்திரை; a pose of the right hand in the form of a chank, the thumb touching the root of the fore-finger. 2. திருவிதாங்கூரில் உள்ள சங்குவடிவமான அரச முத்திரை; the conch-seal of the Travancore government. (Nāñ) (செ.அக.).

[சங்கு + முத்திரை]

**சங்குமுத்து** *šaṅgu-muttu,* பெ. (n.) சங்கின் முத்து; conch pearl.

[சங்கு + முத்து. முட்டு → முத்து = உருண்டையான மணி வகை]

**சங்குமூடகி** *šaṅgu-mūḍagi,* பெ. (n.) வெண் கீரைத் தண்டு; a white species of spinach - Amaranthus blitum (சா.அக.).

[சங்கு + மூடகி. சங்கு = வெண்ணிறம்]

**சங்குமூர்த்தினி** *šaṅgu-mūrttiṉi,* பெ. (n.) வானத்துச்சி (வின்.); zenith.

[சங்கு + மூர்த்தினி. சங்கு → சங்கை = மேன்மை. சங்கு = வெள்ளை, தூய்மை, மேன்மை, உச்சி]

**சங்குமூலம்** *šaṅgu-mūlam,* பெ. (n.) சங்கஞ் செடியின் வேர்; root of the four spined monetia (சா.அக.).

[சங்கு + மூலம்]

**சங்குமோதிரம்** *šaṅgu-mōdiram,* பெ. (n.) 1. சங்கினாற் செய்த மோதிரவகை; a ring made of conch-shell. 2. சங்கு முத்திரையுள்ள மோதிரம்; ring which has chank mark.

[சங்கு + மோதிரம். முகம் + திரை = முகத்திரை → முத்திரை. முகத்திரம் → மோதிரம் = முத்திரையுள்ள விரலணி. சங்கு முத்திரையுள்ள விரலணியும் சங்கு மோதிரம் என்றுமாம்]

**சங்குருளை** *šaṅguruḷai,* பெ. (n.) ஆமை (யாழ்.அக.); tortoise.

மறுவ. சங்குகுலை

[சங்கு + உருளை]

**சங்குலம்** *šaṅgulam,* பெ. (n.) 1. கூட்டம் (சங்.அக.); gathering, crowd. 2. போர் (யாழ்.அக.); war, battle.

[சங்கம் → சங்குலம்]

**சங்குலிகம்** *šaṅguligam,* பெ. (n.) இலுப்பை மரம்; honey-tree - Bassia longifolia.

**சங்குலிகயுத்தம்** *šaṅguliga-yuttam,* பெ. (n.) கைகலப்பு (வேதாரணி. பக். 124, குறிப்.); hand-to-hand fight.

**சங்குலை** *šaṅgulai,* பெ. (n.) உளி; chisel.

*[சங்கு = சங்குவளை அல்லது முட்கள். சங்கு → சங்குலை]*



**சங்குவங்கணம்** *šaṅgu-vaṅgaṇam,* பெ. (n.) நற்சீரகம்; cummin seed - Cuminum cyminum (சா.அக.).

*[சங்கு + வங்கணம்]*

**சங்குவடம்** *šaṅgu-vaḍam,* பெ. (n.) தோணி வகை (இ.வ.); ferry-boat (செ.அக.).

ம. சங்஢டம்

*[சக்கு → சங்கு + வடம்]*



**சங்குவளலை** *šaṅgu-vaḷalai,* பெ. (n.) சங்கினுள் இருக்கும் சதைப்பகுதி; fleshy part of a conch. "ஆமை தின்னி தூமை தின்னி அடைகோழி முட்டை தின்னி சங்குவளலை தின்னி - இப்போ சருவாதடா என்னோட" (நாட்டுப்பாடல்).

*[சங்கு + வளலை. வழலை → வளலை]*

**சங்குவளை** *šaṅgu-vaḷai,* பெ. (n.) சங்கினாற் செய்த வளையல்; shell bracelets. 'சங்கு வளை இறுகின இறையையுடைய' (நெடுநல். 36, உரை).

*[சங்கு + வளை]*

**சங்குவளையல்** *šaṅgu-vaḷaiyal,* பெ. (n.) சங்குவளை பார்க்க; see *šaṅgu-vaḷai.*

*[சங்கு + வளையல்]*

**சங்குவாதம்** *šaṅgu-vādam,* பெ. (n.) சங்கூதை பார்க்க; see *šaṅgūdai* (சா.அக.).

*[சங்கு + வாதம்]*

**சங்குவிரியன்** *šaṅgu-viriyan,* பெ. (n.) பாம்பு வகை (இ.வ.); a variety of snake (செ.அக.).

*[சங்கு + விரியன்]*

**சங்குவெள்ளை** *šaṅgu-veḷḷai,* பெ. (n.) 1. சங்குச் சுண்ணத்தின் காரை; mortar made of shell-lime. 2. தூயவெள்ளை; pure whiteness (செ.அக.).

*[சங்கு + வெள்ளை]*

**சங்கூதி** *šaṅgūdi,* பெ. (n.) 1. சங்கூதுவோன் (யாழ்ப்.); conch-blower. 2. வழக்குத் தீர்ப்பதற்கு ஊரவையைக் கூட்டுபவன்; convener of village committee for settling disputes. (G.Sm.D.I.i.181).

*[சங்கு + ஊதி]*

**சங்கூதித்திருக்கை** *šaṅgūdi-t-tirukkai,* பெ. (n.) சங்கு முழங்கினாற்போல் ஒலியெழுப்புந் திருக்கைமீன்; tirukkai fish which gives sound as blowing conch.

*[சங்கூதி + திருக்கை]*


சங்கூதித்திருக்கை

**சங்கூது[1]-தல்** *šaṅgūdu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கோயில் முதலியவற்றில் சங்கை ஊதுதல்; to blow a conch, as at a marriage house, a temple, etc. 2. வேலைக்களத்துக்கு ஆட்களை அழைக்க பொறியால் ஒலியெழுப்புதல்; to sound a mill-whistle. 3. சாவை அறிவிக்கச் சங்கொலி எழுப்புதல்; to blow conch as in death (செ.அக.).

*[சங்கு + ஊது-,]*

**சங்கூது[2]-தல்** *šaṅgūdu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒரு செயலை இடையிலேயே முடித்து விடுதல்; to end abruptly, as a work. அவன் தன் படிப்புக்கு ஆறாம் வகுப்போடு சங்கூதிவிட்டான். 2. ஒருவரது வாணாள் முடிவுக்கு வருதல்; to come an end, as of one's life. தன் மகள் திருமணத்திற்கு முன்பே சங்கூதிவிட்டாள் (உ.வ.).

*[சங்கு + ஊது-,]*

**சங்கூதுவோன்** *šaṅgūduvōṉ,* பெ. (n.) சங்கூதி பார்க்க; see *šaṅgūdi* (செ.அக.).

*[சங்கூது + ஓன்]*

உழவர்க்கு வேண்டிய பொருள்களைச் செய்துதவப் பக்கத்துணையாகத் தோன்றிய

*பதினெண்குடிமக்களுள் சங்கூதுவோன் (கோயிற்குடியான்) என்பதும் ஒன்று.*

| | |
|---|---|
| வண்ணான் | எண்ணெய் வணிகன் |
| நாவிதன் | உப்பு வாணிகன் |
| குயவன் | இலை வாணிகன் |
| தட்டான் | பள்ளி |
| கன்னான் | பூமாலைக்காரன் |
| கற்றச்சன் | பறையன் |
| கொல்லன் | ஓச்சன் |
| தச்சன் | வலையன் |
| பாணன் | கோயிற்குடியான் |
| | (சங்கூதுவோன்) (தமி. வ. 53) |

**சங்கூதை** *śaṅgūdai*, பெ. (n.) வெட்டை தொடர்பான ஒருவகை முடக்கு (வாத) நோய்; a kind of rheumatism associated with gonorrhoea - Gonnorrheal rheumatism *(சா.அக.)*.

*[சங்கு + ஊதை]*

**சங்கூமச்சி** *śaṅgūmacci-*, பெ. (n.) சிப்பி வகை *(வின்.)*; boat-shell, a gastroped, cymbium.

*[சங்கு + ஊமச்சி.]*

**சங்கெரி** *śaṅgeri-*, பெ. (n.) புளியாரை; Indian sorrel - oxalis carniculata *(சா.அக.)*.

*[சங்கு → சங்கெரி]*

**சங்கேசுவரம்** *śaṅgēsuvaram*, பெ. (n.) சிவக் கோயில்கள் (சிவத்தலங்கள்) ஆயிரத்தெட்டனுள் ஒன்று; one of the shrine of 1008 Śivan̲ shrines.

*[சங்கு + ஈசுவரம்]*

**சங்கேசுரம்** *śaṅgēsuram*, பெ. (n.) மருளூமத்தை; head-ache plant - Xanthum strumarium *(சா.அக.)*.

**சங்கை**[1] *śaṅgai*, பெ. (n.) *1.* வறட்சுண்டி *(யாழ்.அக.)*; floating sensitive plant. *2.* சுக்கு *(வின்.)*; dried ginger.

*[சுல் = சுடுதற் கருத்துவேர். சுல் → சுள் → சன் → சண்டு = காய்ந்த புற்றாள், கூளம். சண்டு → சங்கு → சங்கை = சுண்டி, காய்ந்த இஞ்சி]*

சங்கை → Skt. samaṅga

**சங்கை**[2] *śaṅgai*, பெ. (n.) மேன்மை *(யாழ்ப்.)*; honour, esteem, reverence *(செ.அக.)*.

*[சங்கு = வெள்ளை, தூயது. சங்கு → சங்கை = தூயது, மேன்மையானது]*

**சங்கை**[3] *śaṅgai*, பெ. (n.) *1.* எண்; number. 'சங்கை தணிக்குங் கொட்டாரம்' *(சிவதரு. சிவஞானதான. 70)*. *2.* அளவு; measure, estimate.

*[சங்கு = ஒரு பேரெண். சங்கு → சங்கை = எண், அளவு]*

த. சங்கை → Skt. saṅkhyā

**சங்கை**[4] *śaṅgai*, பெ. (n.) கணைக்கால்; shank, part of the leg between the ankle and the knee. 'திரண்டு நீண்ட சங்கையும்' *(திருவிளை. உக். 35)*.

*[சங்கு → சங்கை = சங்கு வடிவான திரண்ட கெண்டைக்கால்]*

**சங்கைக்கேடு** *śaṅgai-k-kēḍu*, பெ. (n.) புகழ்க்கேடு *(வின்.)*; disgrace, dishonour.

ம. சங்கக்கேடு

*[சங்கை = மேன்மை, புகழ். சங்கை + கேடு]*

**சங்கைத்தாழ்ச்சி** śaṅgai-t-tāl̲cci, பெ. (n.) புகழின்மை *(யாழ்ப்.)*; disrepute *(செ.அக.)*.

*[சங்கை = மேன்மை. சங்கை + தாழ்ச்சி]*

**சங்கைமான்** *śaṅgai-mān̲*, பெ. (n.) மதிப்புள்ளவன் *(வின்.)*; a respectable person.

*[சங்கை = மேன்மை, மதிப்பு. சங்கை + மான். மகன் → மான்]*

**சங்கைமூலி** *śaṅgaimūli*, பெ. (n.) பெருமருந்து; Indian birth-wort - Aristolochia Indica *(சா.அக.)*.

*[சங்கை + மூலி]*

**சங்கையீனம்** *śaṅgai-y-īn̲am*, பெ. (n.) இழிவாகப் பேசுதல் *(வின்.)*; indecency as in talk or conversation. 'அவன் சங்கையீனமாகப் பேசுகிறான்' *(செ.அக.)*.

*[சங்கை = மேன்மை, புகழ். சங்கை + ஈனம்]*

Skt. hīna → த. ஈனம்

**சங்கைவான்** *śaṅgaivān̲*, பெ. (n.) சங்கைமான் பார்க்க; see *śaṅgai-mān̲* *(செ.அக.)*.

*[சங்கைமான் → சங்கைவான்]*

**சங்கொலி** *śaṅgoli*, பெ. (n.) சங்கிலிருந்து எழும் ஒலி; blowing sound of a conch.

ம. சங்கொலி, சங்குவிளி

*[சங்கு + ஒலி]*

**சங்கொலிக்குப்பம்** *šaṅgoli-k-kuppam,* பெ. (n.) கடலூர் மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Cuddalore district.

மறுவ. சங்கிலிகுப்பம்

*[சங்கொலி + குப்பம்]*

சங்கொலி = சங்குகளில் சிறந்த வலம்புரிச் சங்குகளின் ஒலி, சங்கொலிகுப்பம் = வலம்புரிச் சங்குகளின் ஒலி கேட்கப்படும் ஊர்.

**சங்கோசா** *šaṅgōsā,* பெ. (n.) விலை மதிப்புள்ள திருக்கைமீன் வகையுளொன்று (நெல்லை.); a kind of valuable tirukkai fish.

**சச்சடம்** *šaccadam,* பெ. (n.) தாமரை (மலை.); lotus (செ.அக.).

**சச்சடி** *šaccaḍi,* பெ. (n.) மக்கள் திரண்டு கூடுகை (யாழ்ப்.); crowding, thronging of people (செ.அக.).

*[சந்தடி → சச்சடி]*

**சச்சதுரம்** *šaccaduram,* பெ. (n.) சமசதுரம்; perfect square 'வீட்டுக்குச் சச்சதுரமாகக் கூரை போடு' (உ.வ.).

*[சமம் + சதுரம்; சமசதுரம் → சச்சதுரம்.]*

**சச்சரவு** *šaccaravu,* பெ. (n.) கலகம்; quarrel, disturbance (செ.அக.).

*[சல் → சச் → சச்சு + அரவு]*

**சச்சரி** *šaccari,* பெ. (n.) இசைக்கருவி (வாத்திய) வகை; a kind of drum. "கொக்கரையின் சச்சரியின் பாணியானை" (தேவா. 722, 1).

*[சச் + அரி. அரி = மருதநிலப் பறை.]*

த. சச்சரி → Skt. jharjhara.

**சச்சரை**[1] *šaccarai,* பெ. (n.) சச்சரவு பார்க்க; see *šaccaravu.*

*[சச்சரவு → சச்சரை]*

**சச்சரை**[2] *šaccarai,* பெ. (n.) பிளந்த துண்டு (நன்.273, மயிலை.); broken piece.

*[அரி = துண்டம். சச் + அரி → சச்சரி = சமமான துண்டம். சச்சரி → சச்சரை = பிளந்த துண்டு.]*

**சச்சரை**[3] *šaccarai,* பெ. (n.) சச்சரி பார்க்க (நன். 273, மயிலை.); see *šaccari.*

*[சச்சரி → சச்சரை]*

**சச்சரை**[4] *šaccarai,* பெ. (n.) சச்சரவு பார்க்க; see *šaccaravu.*

*[சச்சரவு → சச்சரை]*

**சச்சரைப்படு-தல்** *šaccarai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சண்டை பிடித்தல்; to engage fight.

*[சச்சரை + படு-,]*

**சச்சவுக்கம்** *šaccavukkam,* பெ. (n.) சமச் சதுரம்; exact sqare (செ.அக.).

தெ. சச்சக்கமு.

*[சமச்சதுக்கம் → சச்சவுக்கம்]*

**சச்சனம்**[1] *šaccaṉam,* பெ. (n.) நாவல்; common jaumoon - Eugenia jambolina (சா.அக.).

**சச்சனம்**[2] *šaccaṉam,* பெ. (n.) காவல் (யாழ். அக.); protection, watch (செ.அக.).

**சச்சாயிரு**[1]**-த்தல்** *šaccā-y-iru-,* 3 செ.கு.வி. (v.i). புகையிலை முதலியன தாழ்ந்ததாயிருத்தல். (யாழ்ப்.); to be of inferior quality, as tobacco (செ.அக.).

*[சச்சு + ஆய் + இரு-,]*

**சச்சாயிரு**[2]**-த்தல்** *šaccā-y-iru-,* 3 செ.கு.வி. (v.i). 1. நெருக்கமாயிருத்தல் (கொ.வ.); to be crowded. 2. குழப்பமாயிருத்தல்; to be in confusion (செ.அக.).

*[சள் → சச்சு + ஆயிரு-,]*

**சச்சிதம்** *šaccidam,* பெ. (n.) அழகுபடுத்தி வைக்கை (யாழ்.அக.); state of being fully decorated or dressed (செ.அக.).

*[சச்சு + இதம்]*

**சச்சிதானந்தம்** *šaccidāṉandam,* பெ. (n) கல்லுப்பு; insoluble rock-salt found underneath the sea (சா.அக.).

**சச்சிதானந்தவெளி** *šaccidāṉanda-veḷi,* பெ. (n.) சச்சிதானந்தம்[1] பார்க்க; see *šaccidanandam*[1] (செ.அக.).

*[சச்சிதானந்தம் + வெளி]*

**சச்சு**[1] *šaccu,* பெ. (n.) 1. தாழ்ந்த தரமான புகையிலை முதலியன (யாழ்ப்.); inferior quality of articles as tobacco leaves. 2. பதர் (இ.வ.); chaff (செ.அக.).

தெ. சச்சு

*[சள் → சள் → சச்சு]*

**சச்சு**[2] *šaccu,* பெ. (n.) *1.* சந்தடி; crowd, throng, bustle, confusion. *2.* தொல்லை (தொந்தரவு) (இ.வ.); irksomeness (செ.அக.).

*[சுல் → சள் → சச் → சச்சு]*

**சச்சு**[3] *šaccu,* பெ. (n.) பறவை மூக்கு (வின்.); birds beak.

*[சுல் → சுண்டு → சொண்டு. சுல் → சல் → சல்சு → சச்சு]*

**சச்சு**[4] *šaccu,* பெ. (n.) சிறிதளவு (கொஞ்சம்); littleness, smallness. 'சச்சில் அடங்காது' (செ.அக.).

*[சற்று → சச்சு]*

**சச்சு**[5] *šaccu,* பெ. (n.) நீர்ச்சுண்டி (மலை.); a kind of water mimosa.

*[சுல் → சல் → சல்சு → சச்சு]*

**சச்சு**[6]**-தல்** *šaccu,* 5 செ.குன்றாவி. (v.t.). அடித்தல், தட்டுதல்; to strike, to beat, to crush (கருநா.).

க. சச்சு, செச்சு, சுச்சு, சர்சு, செச்சு, தெ. சடின்சு, து, சுச்சு; பட. சச்சு.

*[சல் → சல்சு → சச்சு]*

**சச்சுண்டி** *šaccuṇḍi,* பெ. (n.) நீர்ச்சுண்டி; sensitive plant floating on water - neptunia oleracia (சா.அக.).

*[சச்சு → சச்சுண்டி]*

**சச்சை**[1] *šaccai,* பெ. (n.) சட்டை; jacket, coat (செ.அக.).

*[சட்டை → சச்சை]*

**சச்சை**[2] *šaccai,* பெ. (n.) செறிகுழம்பு; a liquid of thick consistency, as sandal paste (செ.அக.).

*[அள் → சள் → சள்சை → சச்சை]*

**சச்சை**[3] *šaccai,* பெ. (n.) சண்டை; quarrel. 'சச்சை வருமுன்னே நடவென்றான்' (தெய்வச். விறலிவிடு, 471).

*[சண்டை → சச்சை]*

**சசகம்** *šašagam,* பெ. (n.) சசம் பார்க்க (சங். அக.); see *šašam.*

*[சசம் → சசகம்]*

த. சசகம் → Skt. śaśaka

**சசகாரம்** *šasagāram,* பெ. (n.) காட்டுமா; jungle mango - Spondias mangifera (சா.அக.).

**சசச்செய்தி** *šaša-c-ceydi,* பெ. (n.) இல்பொருள் சான்றுக்குச் சுட்டப்படும் முயற்கொம்பு; hares horn, a term of illustrating and impossibility.

*[சசம் + செய்தி]*

**சசசசவெனல்** *šaša-šaša-v-eṉal,* பெ. (n.) காற்று ஒலிக்குறிப்பு; onom. expr. signifying the blowing of the wind. 'வாயுவுக்குச் சசசச வான ஒலியும்' (சி.சி. 2.65, மறைஞா.).

*[சசசச + எனல்]*

**சசபரம்** *šaša-param,* பெ. (n.) நாணல்; kaus, a large and coarse grass (செ.அக.).

*[சரம் = நாணல். சரம் → சரபரம் → சயபரம் → சசபரம்]*

**சசம்** *šašam,* பெ. (n.) முயல் (திவா.); hare, rabbit.

*[செவியன் → செயன் → சயன் → சசன் → சசம்]*

த. சசம் → Skt. śaśa

சசம் என்பதற்கு மா.வி. அகரமுதலியில் மூலம் காட்டப்படவில்லை. இந்தைரோப்பிய மொழிகளிலும் இதற்கு இனச்சொல் இல்லை.

**சசம்பரி** *šašambari,* பெ. (n.) ஆமணக்கு (மலை.); castor plant.

**சசம்பிரியம்** *šašam-biriyam,* பெ. (n.) *1.* வெள்ளாம்பல்; white Indian water-lily. *2.* முத்து; pearl (சா.அக.).

**சசவாதம்** *šaša-vādam,* பெ. (n.) முயல் ஊதை (மூ.அ.); epilepsy.

*[சச(ம்) + வாதம்]*

Skt. vāta → த. வாதம்

**சசன்** *šašaṉ,* பெ. (n.) முயல் போன்ற இயல்பினன் (முயற் சாதியாடவன்) (கல்லா. 7, மயிலேறும். உரை); man of hare like nature one of three āḍavar-šādi.

*[செவியன் = முயல். செவியன் → செயன் → செசன் → சசன்.]*

**சசாங்கன்** *šašāṅgaṉ,* பெ. (n.) திங்கள் (முயற்கறையுடையவன்); moon, as hare-marked (செ.அக.).

*[சச(ம்) + அங்கன்]*

Skt. aṅga → த. அங்கம்; அங்கம் → அங்கன்

**சசாணிகம்** *šašāṇigam,* பெ. (n.) நன்னாரி; Indian sarsaparilla - Hemidesmus indicus alias Periploca indica (சா.அக.).

**சசாதனம்** *šašādaṉam,* பெ. (n.) *1.* கழுகு; vulture. *2.* பருந்து; heron, kite (சா.அக.).

**சசாபம்** *šašābam,* பெ. (n.) சிறுநன்னாரி (மலை.); a kind of Indian sarasaparilla.

**சசி**[1] *šaši,* பெ. (n.) திங்கள் (பிங்.); moon.

*[சசம் → சசி = முயல் வடிவத்தைத் தம்முள் கொண்டது]*

**சசி**[2] *šaši,* பெ. (n.) மழை (அக.நி.); rain.

*[கசி → சசி]*

**சசிகலை** *šaši-kalai,* பெ. (n.) தேய்ந்து வளரும் இயல்புடைய திங்கள்; moon.

*[சசி + கலை]*

த. கலை → Skt. kalā

**சசிகன்னம்** *šaši-kaṉṉam,* பெ. (n.) நில வுலகத்திற்கும் திங்களுக்குமுள்ள தொலைவு (வின்.); true distance of the moon from the earth (Astron.).

*[சசி + கன்னம்]*

**சசிகாந்தம்** šaši-kandam, பெ. (n.) திங்கள் காந்தமணி (சந்திரகாந்தமணி); moonstone, a crystal said to emit water when exposed to moonlight, as moon-beloved

*[சசி + காந்தம். காந்து → காந்தம்]*

**சசிகேந்திரம்** *šaši-kēndram,* பெ. (n.) *1.* திங்கள் வீட்டுக்கு ஒன்று நான்கு ஏழு பத்தாம் இடங்களில் இருக்கை; situation of the moon in the ascendant or in the fourth, seventh or tenth house from it. (Astrol.). *2.* திங்களின் வேறுபாடு; moon's anomaly (Astron.). (செ.அக.).

*[சசி + கேந்திரம்]*

Skt. kēndra → த. கேந்திரம்

**சசிசேகரன்** *šaši-šēgaraṉ,* பெ. (n.) சசியுடையான் பார்க்க; see *šaši-y-uḍaiyāṉ.*

*[சசி + சேகரன்]*

**சசிதாகிகம்** *šasidāgigam,* பெ. (n.) வெண் சந்தனம்; white sandal-wood - Santanum album (சா.அக.).

**சசிதுருவம்** *šaši-duruvam,* பெ. (n.) கோள் சாய்வு (கிராந்தி) பாதத்துக்கும் திங்கள் நிலைக்கும் ஒரு குறித்த காலத்திலிருந்து கிழக்கு மேற்கிலுள்ள சராசரி வேறுபாடு; mean longitude of the moon at epoch.

*[சசி + துருவம்]*

**சசிதேகம்** *šaši-dēgam,* பெ. (n.) திங்கள் வட்டம் (வின்.); moon's disk.

*[சசி + தேகம்]*

Skt. dēha → த. தேகம்.

**சசிப்பிரியம்** *šaši-p-piriyam,* பெ. (n.) *1.* முத்து (மூ.அ.); pearl. *2.* வெள்ளாம்பல் பார்க்க; white Indian water-lily (செ.அக.) .

*[சசி + பிரியம். புரியம் → பிரியம்]*

**சசிபுடபுத்தி** *šaši-puḍa-putti,* பெ. (n.) குறித்த காலத்தில் திங்களுக்கு உரிய கதி (வின்.); true motion of the moon in a given time (Astron).

*[சசி + புடபுத்தி]*

**சசியம்**[1] *šašiyam,* பெ. (n.) *1.* பயிர் (சி.சி. 2, 58, சிவாக்.); crop. *2.* தவசம், காய்கனி முதலிய விளைபொருள் (வின்.); grain, fruit, vegetable produce.

*[செய் = நிலம், புன்செய் நிலம், வயல். செய் → சய் → சசி → சசியம் = வயலில் விளையும் பயிர், விளைபொருட்கள்]*

த. சசியம் → Skt. sasya

**சசியம்**[2] *šašiyam,* பெ. (n.) மரா (மலை.); Ceylon ebony.

*[சசியம் → சசியம்]*

**சசியம்**[3] *šašiyam,* பெ. (n.) இந்துப்பு (மூ.அ.); rock-salt.

*[சசி → சசியம்]*

**சசியம்**[4] *šašiyam,* பெ. (n.) *1.* கஞ்சா (மலை.); Indian hemp. *2.* நிலப்பனை; a plant common in sandy tracts (செ.அக.).

*[சசி → சசியம்]*

**சசியா** *šašiyā,* பெ. (n.) ஆச்சா அல்லது மரா மரம்; Ceylon ebony - Diospyros ebenum (செ.அக.).

*[சசியம் → சசியா]*

**சசியாதிதம்** *šaši-y-ādidam,* பெ. (n.) *மாசிபத்திரி;* santonic wood - Artemesia Indica *(சா.அக.).*

**சசியாதிபதி** *šašiyādipati,* பெ. (n.) *ஒவ்வொரு ஆண்டிற்குமுரிய பயிர்த்தலைவர் (பஞ்சாங்.);* the planet which is lord of the crops for the year *(செ.அக.).*

*[சசியம் + அதிபதி]*

**சசியாதிபன்** *šašiyātipan,* பெ. (n.) *சசியாதிபதி பார்க்க;* see *šašiyādipadi (செ.அக.).*

*[சசியாதிபதி → சசியாதிபன்]*

**சசியாமி** *šasiyāmi,* பெ. (n.) *முயற் செவிக் கள்ளி;* a kind of spurge, the leaves of which resemble the ear of a hare, probably referring to leaf spurge - Euphorbia neirifolia *(சா.அக.).*

*[சசி → சசியாமி]*

**சசியுடையான்** *šaši-y-udaiyān,* பெ. (n.) *திங்களைத் தலையில் அணிந்தவன், சிவன்;* Šivan, as wearing the moon on His head.

*[சசி + உடையவன்]*

**சசிவிக்கேபம்** *šaši-vikkēbam,* பெ. (n.) *திங்களின் மறைப்பு காலத்தில் மேழமாதியாக வேனும் தலையாதியாக வேனும் நிற்கும் நிலை (சூடா. உள். 441);* moon's latitute during eclipse position of the moon to the north or south of the ecliptic during eclipse.

**சசுபம்** *šašubam,* பெ. (n.) *1. அசோகு (மலை) பார்க்க;* see Asoka tree. *2. நெட்டிலிங்கம்;* mast tree *(செ.அக.).*

**சஞ்சகாரம்** *šañjagāram,* பெ. (n.) *அச்சாரம்;* earnest money *(செ.அக.).*

தெ. சஞ்சகாரமு

*[அச்சு → அச்சாரம் = அடையாளமாகக் கொடுக்கும் முன்பணம். அச்சாரம் → சச்சாரம் → சஞ்சகாரம்]*

சஞ்சகாரம் → Skt. satyaṅ-kāra

**சஞ்சடி** *šañjadi,* பெ. (n.). *சந்தடி பார்க்க (யாழ். அக.);* see *šandadi.*

*[சந்தடி → சஞ்சடி]*

**சஞ்சயம்** *šañjayam,* பெ. (n.) *கூட்டம் (யாழ். அக.);* assembly, multitude, collection.

*[சங்கை[3] → சங்கியை = எண், எண்ணிக்கை; சங்கியை → சஞ்சியை → சஞ்சயம்]*

த. சஞ்சயம் → Skt. saṃ-śaya

**சஞ்சரி** *šañjari,* பெ. (n.) *தேனீ;* honey-bee *(சா.அக.)*

மறுவ. அளி

*[சல் → சல்சு → சஞ்சு = பறவை மூக்கு. சஞ்சு → சஞ்சரி = கூரிய கொடுக்கினை யுடையது]*

**சஞ்சரிகை** *šañjarigai,* பெ. (n.) *இலந்தைப் பழம்;* common jujube - Zizyphus jujuba *(சா.அக.).*

**சஞ்சலிக்கீரை** *šañjali-k-kīrai,* பெ. (n.) *ஒரு வகைக் கீரை;* a kind of greens *(சா.அக.).*

*[சஞ்சலி + கீரை]*

**சஞ்சலை** *šañjalai,* பெ. (n.) *திப்பிலி (சங். அக.);* long pepper.

*[சஞ்சலி → சஞ்சலை]*

**சஞ்சாங்கம்** *šañjāṅgam,* பெ. (n.) *பெரு முத்தக் காசு;* koray root - Cyprus rotundus *(சா.அக.).*

**சஞ்சாயம்** *šañjāyam,* பெ. (n.) *1. குடிவாரம் (R.T.);* portion of the produce of a field assigned to the cultivator. *2. நாட்கூலி;* daily wages. *3. குத்தகைக்கு நிலத்தைவிடாமல் உரிமையாளர் தாமே பயிர் செய்தல் (வின்.);* direct management of lands, fisheries, etc. by the proprietor. *4. இலவயம் (வின்.);* gratuity. *5. மிகுஊதியம் (நாஞ்.);* extra gain.

க. சந்தாய, சந்தாயித

*[சல் + ஆயம் = சல்லாயம் → சஞ்ஞாயம்= கட்ட வேண்டியதைச் செலுத்துதல். சல் = செலுத்துதல். ஆயம் = வரி]*

**சஞ்சாரி** *šañjāri,* பெ. (n.) *பூனைக் காஞ்சொறி;* cowhage plant - Tragia involucrata *(சா.அக.).*

*[சஞ்சரி → சஞ்சாரி]*

**சஞ்சாவரம்** *šañjāvaram,* பெ. (n.) *தகரை;* cassia foetid or ringworm plant - Cassia tora *(சா.அக.).*

**சஞ்சிதிகை** *šañjidigai*, பெ. (n.) இலந்தைக் கனி; jujube fruit (சா.அக.).

**சஞ்சினி** *šañjiṉi*, பெ. (n.) புளிக்கரணை; a species of soursorrel plant - Oxalis genus.

**சஞ்சீவசரணியம்** *šañjīva-šaraṇiyam*, பெ. (n.) பாலை; ironwood - Mimusops hexandra(சா.அக.).

**சஞ்சீவகாசிகம்** *šañjīva-kāšigam*, பெ. (n.) முசுறுப்புல்; maritime grass - Pommeruella cornucopia (சா.அக.).

**சஞ்சீவகி** *šañjīvagi*, பெ. (n.) புளியமரம்; tamarind tree - Tamarindus indicus (சா. அக.).

**சஞ்சீவன்** *šañjīvaṉ*, பெ. (n.) மாமரம் (மலை.); mango tree.

**சஞ்சீவிக்கருணை** *šañjīvi-k-karuṇai*, பெ. (n.) காட்டுக்கரணை பார்க்க; see *kāṭṭu-k-karaṇai* (சா.அக.).

[சஞ்சீவி+ கருணை]

**சஞ்சீவிமேதி** *šañjīvi-mēdi*, பெ. (n.) முடக்கற்றான்; palsy curer - Cadiospermum halicacabum (சா.அக.).

[சஞ்சீவி + மேதி]

**சஞ்சீவினிக்குடிகம்** *šañjīviṉi-k-kuḍigam*, பெ. (n.) திரிகடுகம், திரிபலை, சேங்கொட்டை ஆகியவற்றைச் சேர்த்துச் செய்து பாம்புக் கடிக்கும் காய்ச்சலுக்கும் கொடுக்கும் மாத்திரை; a pill prepared from Trikadugu viz. dried ginger, long pepper and black pepper, tripala (consisting of gall-nut, tandri-fruite and gooseberry), dhoby-nut etc. as chief ingredients and prescribed for snake-bites, typhoid fever, etc. (சா.அக.).

[சஞ்சீவினி + குடிகம். குளிகம் → குடிகம்]

**சஞ்சு**[1] *šañju*, பெ. (n.) 1. பறவை மூக்கு; bird's beak. 'கனியிற் நீண்டுபு சஞ்சடர்த்திட' (இரகு. குறைகூ. 31). 2. ஆமணக்கு (மலை.); castor plant.

ம. சுண்டு (பறவை மூக்கு), சுண்டன் (கூரிய தோண்டு கருவி); க. சுண்டு; பர். சொண்ட். குவி. சுட (பறவைமூக்கு)

[சுல் = குத்தற்கருத்துவேர். சுல் = சுண்டு, சொண்டு = பறவை மூக்கு. சுல் → சல் → சல்சு → சச்சு = பறவை மூக்கு. சச்சு → சஞ்சு = பறவை மூக்கு, கூரிய முள்ளுள்ள ஆமணக்கு]

த. சஞ்சு → Skt. šañcu

**சஞ்சு**[2] *šañju*, பெ. (n.) குலப்பழக்கம் (வின்.); manners, customs, habits, as peculiar to individuals or castes.

க. சஞ்சு

[சல் = செல்லுதல். சல் → சல்சு → சஞ்சு = செல்லுதல், திரும்பத்திரும்பச் செல்லுதல். ஒரே வழியில் (பழக்கத்தில்) செல்லுதல், திரும்பத்திரும்ப ஒரு பழக்கத்தைக் கடைப்பிடித்தல், குலப்பழக்கம்]

**சஞ்சு**[3] *šañju*, பெ. (n.) சாயல் (யாழ்ப்.); likeness, form, shape.

[சய்யல் → சச்சல் → சச்சு → சஞ்சு]

**சஞ்சுகை** *šañjugai*, பெ. (n.) சஞ்சு[3] பார்க்க; see šañju (செ.அக.).

[சஞ்சு → சஞ்சுகை]

**சஞ்சுபம்** *šañjubam*, பெ. (n.) 1. அரசர்க்குரிய விருதுகள்; paraphernalia of a king. 'சஞ்சுபவர்க்கந் தளதளென' (பணவிடு. 75). 2. உடைமை (வின்.); appurtenances.

**சஞ்சுரி** *šañjuri*, பெ. (n.) காஞ்சொறி; climbing nettle - Tragia involucrata (சா.அக.).

[காஞ்சொறி → சஞ்சுரி]

**சஞ்சுவம்** *šañjuvam*, பெ. (n.) சஞ்சுபம் (வின்.) பார்க்க; see šañjubam.

[சஞ்சு → சஞ்சுவம்]

**சஞ்சேபம்** *šañjēbam*, பெ. (n.) சுருக்கம்; epitome, abstract (செ.அக.).

[சஞ்சு → சஞ்சேபம்]

த. சஞ்சேபம் → Skt. saṅ-kṣēpa

**சஞ்சேயம்** *šañjēyam*, பெ. (n.) ஈட்டியது; earned things.

**சஞ்சை** *šañjai*, பெ. (n.) 1. பெருமழை (யாழ்.அக.); heavy rain. 2. பேரொலி; loud noise.

ஒ.நோ. க. சடி, சடிமழெ (தொடர்மழை); படா. சாடுமே (பெருமழை)

*[சடசட = பேரொலியைக் குறிக்கும் ஒலிக் குறிப்புச் சொல், சடசட = மழை விழுதலைக் குறிக்கும் ஒலிக்குறிப்புச் சொல். சட → சடி → சடிசை → சஞ்சை]*

த. சஞ்சை → Skt. jhañjhā

**சஞ்சோளி** *šañjōli,* பெ. (n.) *பண்வகை;* a specific melody-type *(செ.அக.).*

**சட்சட்டெனல்** *šaṭ-šaṭ-eṉal,* பெ. (n.); *விரைவுக் குறிப்பு;* onom. expr. signifying haste or hurry *(செ.அக.).*

பட. சடக்கன, சட்டன

*[சட்சட் + எனல்]*

**சட்சமம்** *šaṭcamam,* பெ. (n.) *வரகு;* millet *(சா.அக.).*

**சட்சு** *šaṭcu,* பெ. (n.) *கண் (சி.சி. 2, 61, மறைஞா.);* eye *(சா.அக.).*

*[சக்கு → சட்சு]*

சக்கு[1] பார்க்க.

த. சக்கு → Skt. šakṣuh.

**சட்சுகி** *šaṭcugi,* பெ. (n.) *இடு கொள்;* four-leaved cassia- Cassia absus *(சா.அக.).*

**சட்சுசியம்** *šaṭcušiyam,* பெ. (n.) *1. ஆட்டுச் செவி;* worm-killer plant - Aristolochia bracteata. *2. ஒதிய மரம்;* Indian ash tree Odina wodier. *3. தாழை;* screwpine. *4. நீர்ப்பூலா;* water-poola - Phyllanthus multiflorus *(சா.அக.).*

**சட்சுப்பார்வை** *šaṭcu-p-pārvai,* பெ. (n.) *கண்ணோட்டம்;* gracious look, as a mode of imitation.

*[சட்சு + பார்வை]*

**சட்சைவேர்** *šaṭcai-vēr,* பெ. (n.) *வெள்ளைக் கரும்பு;* white sugar-cane *(சா.அக.).*

*[சட்சை + வேர்]*

**சட்ட** *šaṭṭa,* கு.வி.எ. (adv.) *1. செவ்விதாக;* properly, rightly; *'சட்ட வினியுளது சத்தேகாண்' (சி.போ. 9,2). 2. முழுதும்;* entirely. *'நான் சட்டவும்மை மறக்கினும்' (தேவா. 586. 1). 3. விரைவாக;* speedily; *'சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன்' (திருவாச. 30, 2).*

*[சட்டு → சட்ட (மு. தா. 62)]*

**சட்டக்கட்டில்** *šaṭṭa-k-kaṭṭil,* பெ. (n.) *பிரித்துப் பூட்டும்படி அமைந்த கட்டில் (இ.வ.);* cot with a detachable frame *(செ.அக.).*

ம. சட்டக்கட்டில்

*[சட்டம் + கட்டில்]*

**சட்டக்கதவு** *šaṭṭa-k-kadavu,* பெ. (n.) *கனத்த சட்டங்களைக் கோத்து உள்ளே மெல்லிய துண்டுப் பலகைகளால் அமைக்கப்பட்ட கதவு (இ.வ.);* penelled door *(செ.அக.).*

ம. சட்டக்கதவு

*[சட்டம் + கதவு]*

**சட்டக்கல்லி** *šaṭṭa-k-kalli,* பெ. (n.); *வல்லாளப் (சமத்காரப்) பேச்சு (வின்.);* clever but vain talk..

தெ. சழ்டகல்லி

*[சட்டம் + கல்லி]*

**சட்டக்கல்லூரி** *šaṭṭa-k-kallūri,* பெ. (n.) *சட்டக் கல்வி கற்பிக்கும் கல்லூரி;* law college.

*[சட்டம் + கல்லூரி]*

**சட்டக்கல்வி** *šaṭṭa-k-kalvi,* பெ. (n.) *சட்டப் படிப்பு;* legal education.

*[சட்டம் + கல்வி]*

**சட்டக்கால்**[1] *šaṭṭa-k-kāl,* பெ. (n.) *1. மரச்சட்டம் போல சுவரையொட்டி அமைந்த தூண்;* wooden pillar. *2. கோயில் விமான வாயிலில் சற்றுக் கூடுதலாக நீட்டித்து அமைக்கப்பட்ட கால்;* outer projection of a temple tower near its gateway.

*[சட்டம் + கால்]*

**சட்டக்கால்**[2] *šaṭṭa-k-kāl,* பெ. (n.) *கடைத் தட்டியைத் தூக்கி நிறுத்துங் கால்;* movable post in which the bazzar-screen rests. *'சட்டக்காலை வாங்கி ............ நெடிய கடையை அடைத்து' (மதுரைக். 621, உரை.).*

ம. சட்டக்காலு (சட்டகத்தின் கால்)

*[சட்டம் + கால்]*

**சட்டக்கூடு** *šaṭṭa-k-kūḍu,* பெ. (n.) *சட்டகம் பார்க்க;* see *šaṭṭagam.*

ம. சட்டக்கூடு

*[சட்டம் + கூடு]*

**சட்டகப்பை** *šaṭṭaga-p-pai,* பெ. (n.) தட்டகப்பை (கொ.வ.); plate ladle (செ.அக.).

*[சட்டு + அகப்பை. அகழ் → அகழ்பு → அகழ்பை → அகப்பை]*

**சட்டகம்** *šaṭṭagam,* பெ. (n.) 1. சட்டம்; frame, framework. "சட்டகம் பொன்னிற் செய்து" (சீவக. 2523). 2. மக்களது படுக்கை (திவா.); bed, couch. 3. வடிவு (பிங்.); shape, figure, image. 4. உடல்; body. "உயிர் புகுஞ்சட்டகம்" (கல்லா. 8,1). 5. பிணம்; corpse. "சட்டகம் புகழாக் கட்டிலேற்றி" (ஞானா. 6:10.). 6. மரபு, விதி, நம்பிக்கை போன்றவற்றின் அடிப்படைக் கொள்கை; the fundamental principles of custom, law, belief, etc.

*[சட்டம் → சட்டகம் (மு.தா. 119)]*

**சட்டகல்லி** *šaṭṭakalli,* பெ. (n.) சட்டக்கல்லி பார்க்க; see *šaṭṭa-k-kalli* (செ.அக.)

*[சட்டக்கல்லி → சட்டகல்லி]*

**சட்டகி** *šaṭṭagi,* பெ. (n.) பாய்க் கோரை; koray grass used for making mats (சா.அக.).

*[சட்டம் → சட்டகி]*

**சட்டங்கட்டு-தல்** *šaṭṭaṅ-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஏற்பாடு செய்தல் (நாஞ்.); to arrange, settle.

*[சட்டம் + கட்டு-,]*

சப்பரம் முகடு முதலியவற்றிற்குச் சட்டங் கட்டுதல் ஆயத்த வினையாயிருத்தலின், சட்டங்கட்டுதல் என்பது ஆயத்தஞ் செய்தல் என்று பொருள்படும்.

**சட்டங்கொழி-த்தல்** *šaṭṭaṅ-kōḻi-,* 4 செ.கு.வி. (v.t.) ஒழுங்கு பேசுதல் (இ.வ.); to talk glibly on punctilos and proprieties, used in contempt.

*[சட்டம் + கொழி-,]*

**சட்டச்சவை** *šaṭṭa-c-cavai,* பெ. (n.) சட்டத்தை உருவாக்கும் அரசு அவை; legislature.

ம. சட்டசபா

*[சட்டம் + சவை (மு.தா. 62)]*

த. அவை → சவை → சபை → Skt. sabā

**சட்டசபை** *šaṭṭa-šabai,* பெ. (n.) சட்டச்சவை பார்க்க; see *šaṭṭa-c-cavai.*

*[சட்ட(ம்) + சபை]*

சவை → சபை → Skt. šabā

**சட்டத்தரணி** *šaṭṭa-t-taraṇi,* பெ. (n.) வழக்கறிஞர் (யாழ்ப்.); lawyer; attorney at law.

*[சட்டம் + தரணி]*

E. attorney → த. தரணி

**சட்டத்துறை** *šaṭṭa-t-tuṟai,* பெ. (n.) சட்ட நுணுக்கங்கள் பற்றிய துறை; law department.

*[சட்டம் + துறை]*

**சட்டதிட்டம்** *šaṭṭa-tiṭṭam,* பெ. (n.) 1. சட்ட ஒழுங்கு; code or regulation. 2. உறுதிப்பாடு (வின்.); accuracy, preciseness.

*[சட்டம் + திட்டம்]*

ஓர் அமைப்பகத்தின் கரும நடப்பிற்குரிய விதியொழுங்கு முழுவதும் சட்டதிட்டம் எனப்படும் (மு.தா. 109).

**சட்டந்தட்டு-தல்** *šaṭṭan-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) புனுகு வழித்தல் (வின்.); to extract the unctuous substance from the dried sac in the anal pouch of the civet cat.

*[சட்டம் + தட்டு-,]*

**சட்டந்தை-த்தல்** *šaṭṭan-tai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. படம் முதலியவற்றிற்குச் சட்டஞ் சேர்த்தல்; to frame, nail on a frame. 2. வரிச்சலடித்தல்; to put on reapers for tiles (செ.அக.).

*[சட்டம் + தை-,]*

**சட்டநம்பி** *šaṭṭanambi,* பெ. (n.) 1. மாணவர் தலைவனாகிய ஆசிரியர்; teacher. 2. தலைமை மாணவன்; pupil leader.

மறுவ. சட்டாம்பிள்ளை, சட்டநம்பிப்பிள்ளை

*[சட்டன் + நம்பி (மு.தா. 108)]*

**சட்டநாதன்** *šaṭṭa-nātaṉ,* பெ. (n.) சட்டைநாதன் பார்க்க; see *šaṭṭai-nātaṉ.*

*[சட்டைநாதன் → சட்டநாதன்]*

**சட்டநிருமாண சபை** *šaṭṭa-nirumāṇa-šabai,* பெ. (n.) சட்டச்சவை பார்க்க; see *šaṭṭa-c-cavai.*

*[சட்டம் + நிருமாண சபை]*

**சட்டநிரூபணசபை** *šaṭṭa-nirūbaṇa-šabai,* பெ. (n.) சட்டச்சவை பார்க்க; see *šaṭṭa-c-cavai.*

*[சட்டம் + நிரூபணசபை]*

**சட்டப்படி** *šaṭṭa-p-paḍi,* பெ.எ. (adj.) *சட்டத்திற் கேற்ப;* according to law. *சட்டப்படி செய்வது நன்மையே தரும்.*

ம. சட்டப்பிடி

*[சட்ட(ம்) + படி. பள் → படு → படுதல் = விழுதல். படு → படி → படிதல் = ஒன்றின் மேல் விழுதல், விழுந்து பதிதல், பதிந்து உருவம் அமைத்தல்]*

நிலத்திற் பதிந்த பொருளின் வடிவம் நிலத்திலும், தாளிற் பதிந்த அச்சின் வடிவம் தாளிலும் அமைதல் காண்க.

படி = உருவம், உடம்பு. படிந்த உருவம் படிந்த பொருளை ஒத்திருத்தலால், படி என்னும் சொல் ஒப்புமைக் கருத்தை உணர்த்திற்று. அப்படி = அதுபோல்.

**சட்டப்பரம்பு** *šaṭṭa-p-parambu,* பெ. (n.) *வயல் திருத்தும் பலகை வகை;* a kind of roller for land newly ploughed, harrow, drag.

*[சட்டம் + பரம்பு]*

**சட்டப்பல்கலைக்கழகம்** *šaṭṭa-p-palkalai-kaḻagam,* பெ. (n.) *சட்டக்கல்விக்கான பல்கலைக்கழகம்;* law university.

*[சட்டம் + பல்கலைக்கழகம்]*

**சட்டப்பலகை** *šaṭṭa-p-palagai,* பெ. (n.) *1. சட்டம்*[1] *பார்க்க;* see *šaṭṭam*[1]. *2. எழுதுங் கற்பலகை (இ.வ.);* slate or board as enclosed in a frame. *3. வரியிழுக்குஞ் சட்டம் (வின்.);* flat ruler.

*[சட்டம் + பலகை]*

**சட்டப்பெருமக்கள்**[1] *šaṭṭa-p-perumakkaḷ,* பெ. (n.) *ஆளுங்கணத்தார்; (*M.E.R. 498 of 1929-30*)* governing body, board of management.

*[சட்டம் + பெருமக்கள்]*

**சட்டப்பெருமக்கள்**[2] *šaṭṭa-p-perumakkaḷ,* பெ. (n.) *வடமொழி வல்லுநர்கள்;* Sanskrit pandit. *'சட்டப் பெருமக்களும் பணி மக்களும்' (பா.செப.12).*

*[சட்டம் + பெருமக்கள்]*

**சட்டப்பேரவை** *šaṭṭa-p-pēravai,* பெ. (n.) *குடியரசமைப்புள்ள நாட்டின் மாநிலத்தில் மக்களால் தேர்வு செய்யப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு மாநிலத்துக்கான சட்டங்களை இயற்றும் அவை;* legislative assembly of a state in the democratic country.

*[சட்டம் + பேரவை]*

**சட்டப்பேரவைத்தலைவர்** *šaṭṭa-p-pēravai-t-talaivar,* பெ. (n.) *சட்டப்பேரவை உறுப்பினர்களால் பேரவையின் தலைமைப் பொறுப்புக்குத் தேர்வுசெய்யப்படுபவர்;* speaker of the legislative assembly.

*[சட்டம் + பேரவை + தலைவர்]*

**சட்டப்பேரவைஉறுப்பினர்** *šaṭṭa-p-pēravai-y-uṟuppiṉar,* பெ. (n.) *சட்டமன்றவுறுப்பினர் பார்க்க;* see šaṭṭa-maṉṟa-v-uṟuppiṉar.

*[சட்டம் + பேரவை + உறுப்பினர்]*

**சட்டம்**[1] *šaṭṭam*, பெ. (n.) *1. படம், கண்ணாடி முதலியவற்றின் நாற்புறமுங் கோக்கப்படும் மரச்சட்டம்;* wooden frame. *2. கம்பியிழுக்குங் கருவி;* perforated metallic frame for drawing wire. *3. நகையின் உம்மச்சு;* socket in a jewel for insetting gems. *4. எழுதும் ஓலை;* ōlai used for writing. *5. உடம்பு;* body. *6. எழுதுதற்குப் போலிகையாயமைந்த மேல்வரிச் சட்டம்;* plan, model. *7. முறைமை (நியாய) ஏற்பாடு;* rule, order, law, regulation especially written. *"சட்டஞ்செய் துலகைத் திட்டஞ் செய்பவர் போல்" (புலவராற்.).* 8. *செப்பம்;* excellence, superior quality. *9. நேர்மை;* exactness, precision, accuracy, neatness, nicety, propriety. *"சட்டமாய்ப் பேசி" (இராமநா. உயுத். 53).* 10. *அணியம் (ஆயத்தம்) (இ.வ.);* readiness. *11. மாணிக்க வகை;* a kind of ruby. *"மாணிக்கம் சட்டமும் இலைசுனியும் ஒன்றும் உட்பட" (S.I.I. ii, 430, 32).*

ம. சட்டம்; க., து., பட. சட்ட; தெ. சட்டமு; கோத. சட்ம்

*[தட்டு → சட்டு → சட்டம்]*

*சட்டம்: மரச்சட்டம், கோடிழுக்கும் சட்டம், பலகை, நேர்மை, செப்பம், முறைமை,* நயன்மையொழுங்கு, வரம்பு, நெறியீடு.

*மாணவர் பார்த்து ஒழுங்காக எழுதுவதற்கு* மேல் வரியில் வரையப்பட்டிருப்பது மேல்வரிச் சட்டம் எனப்படும்.

*சட்டம் : படம் கண்ணாடி முதலியவற்றின் நாற்புறமுங் கோக்கப்படும் மரச்சட்டம். சட்டக் கட்டில், சட்டக்கதவு, சட்டப் பரப்பு, சட்டவாள் முதலியன நாற்புறமுஞ் சட்டங்* கோத்தவை.

உடம்பு உயிருக்குச் சட்டம் போன்றிருப்பதால் அதுவும் சட்டம் எனப்படும் *(மு.தா. 109).*

*சட்டம் அரசியலார் அமைத்த நெறிமுறை* (law). *மேல்வரிச் சட்டம் ஒருவர் தாம்*

கையாளுவதற்குத் தாமே அமைத்துக் கொண்ட திட்டத் தொடரியம் (motto).

**சட்டம்**[2] *šaṭṭam,* பெ. (n.) *1.* புனுகுச்சட்டம்; sac or gland in the anal pouch of the civet cat. *2.* புனுகுப் பூனையின் உறுப்பிலிருந்து எடுக்கப்படும் நீர்மப் (திரவப்) பொருள்; fluid extracted from the sac of a civet cat (செ.அக.).

ம. சட்டம்

[சட்டு → சட்டம்]

**சட்டம்பி** *šaṭṭambi,* பெ. (n.) *1.* ஆசிரியர்; teacher. *2.* முதலாளி (எசமான்); master "மணியகாரச் சட்டம்" (புலவராற்.); *3.* தலைவன்; chief.

ம. சட்டம்பி

[சட்டநம்பி → சட்டம்பி]

**சட்டம்பிப்பிள்ளை** *šaṭṭambi-p-piḷḷai,* பெ. (n.) சட்டாம்பிள்ளை (வின்.) பார்க்க; see šaṭṭām-piḷḷai.

[சட்டாம்பிள்ளை → சட்டம்பிப்பிள்ளை]

**சட்டம்பியார்** *šaṭṭambiyār,* பெ. (n.) சட்டம்பி (யாழ்ப்.) பார்க்க; see *šaṭṭambi.*

[சட்டநம்பி → சட்டம்பி → சட்டம்பியார்]

**சட்டம்பிழி-தல்** *šaṭṭam-biḻi-,* 2 செ.குவி (v.i) சட்டந்தட்டு-தல் பார்க்க; see *šaṭṭan-taṭṭu-.*

[சட்டம் + பிழி-,]

**சட்டம்பிள்ளை** *šaṭṭam-piḷḷai,* பெ. (n.) சட்டாம்பிள்ளை பார்க்க; see *šaṭṭām-piḷḷai.*

[சட்டநம்பிப்பிள்ளை → சட்டம்பிப் பிள்ளை → சட்டாம்பிள்ளை]

**சட்டம்போடு**[1]**-தல்** *šaṭṭam-pōḍu-,* 20 செ.குவி. (v.i.) ஆணை இடுதல்; to command (செ.அக.).

ம. சட்டம் பெட்டுக.

[சட்டம் + போடு-,]

**சட்டம்போடு**[2]**-தல்** *šaṭṭam-pōḍu-,* 20 செ.குவி. (v.i.) படம், கண்ணாடி முதலியவற்றின் ஓரத்தில் காப்பிடுதல்; to arrange frame for picture, mirror, etc.

[சட்டம் + போடு-,]

**சட்டம் வாரு-தல்** *šaṭṭam-vāru-,* 5 செ.குவி. (v.i.) ஓலையின் அருகுகளை அரிந்து எழுது சட்டமாக அணியஞ் செய்தல்; to remove the ribs in ōla and make it suitable for writing (செ.அக.).

[சட்டம் + வாரு-,]

**சட்டம்வை-த்தல்** *šaṭṭam-vai-,* 4 செ.குவி. (v.i.) சட்டம்போடு-தல் பார்க்க; see *šaṭṭām-bōḍu-.*

[சட்டம் + வை-,]

**சட்டமழி-த்தல்** *šaṭṭam-aḻi-,* 4 செ.குவி. (v.i.) ஆணை மீறுதல் (இ.வ.); to transgress or violate, as a law.

ம. சட்டமழி

[சட்டம் + அழி-,]

**சட்டமன்றம்** *šaṭṭa-manṟam,* பெ. (n.) மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு மாநிலத்துக்கான சட்டங்களை இயற்றும் சட்டப்பேரவை; legislature.

[சட்டம் + மன்றம்]

**சட்டமன்றவுறுப்பினர்** *šaṭṭa-manṟa-v-uṟuppiṉar,* பெ. (n.) சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்; member of legislative assembly.

[சட்டமன்றம் + உறுப்பினர்]

**சட்டமாக்கு-தல்** *šaṭṭam-ākku-,* 5 செ.குவி. (v.i.) ஒரு தீர்மானத்தை எல்லோரும் பின்பற்ற வேண்டிய கட்டளையாக (விதியாக) சட்ட மன்றம் ஒப்புதல் அளித்தல்; to enact, legislate.

ம. சட்டம் ஆக்குக

[சட்டம் + ஆக்கு-,]

**சட்டமிடு-தல்** *šaṭṭam-iḍu-,* செ.குவி. (v.i.) செய்ய வேண்டிய கட்டளையைப் பணித்தல்; to dictate, to issue orders, to chalk out a plan of work. "தானிருந்து சட்டமிடுகின்ற சமுகத்தான்" (பணவிடு. 30).

ம. சட்டமிடுக

[சட்டம் + இடு-,]

**சட்டமியற்று-தல்** *šaṭṭam-iyaṟṟu-,* 5செ.குவி. (v.i.) சட்டமாக்கு-தல் பார்க்க; see *šaṭṭam-ākku-.*

[சட்டம் + இயற்று-,]

**சட்டமுனி** *šaṭṭa-muṉi,* பெ. (n.) சட்டைமுனி பார்க்க. see *šaṭṭai-muṉi.*

[சட்டைமுனி → சட்டமுனி]

**சட்டமூலம்** *šaṭṭa-mūlam,* பெ. (n.) சட்டமன்றம், நாடாளுமன்றம் முதலிவற்றில் ஒன்றைச்

*சட்டமாகச் செய்வதற்கு உறுப்பினர்களால் அல்லது அரசால் கொண்டுவரப்படும் திட்டம் முதலியவை அடங்கிய குறிப்பு, திட்ட வரைவு;* bill in a legislature or parliament.

*[சட்டம் + மூலம்]*

**சட்டமேதை** *šatta-mēdai,* பெ. (n.) *சட்ட வல்லுநர் பார்க்க;* see *šatta-vallunar.*

*[சட்டம் + மேதை]*

**சட்டமேலவை** *šatta-mēlavai,* பெ. (n.) *மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப் படாத அவை;* legislative council.

*[சட்டம் + மேலவை]*

**சட்டமேலவையுறுப்பினர்** *šatta-mēlavai-v-uruppinar,* பெ. (n.) *சட்ட மேலவைக்கான உறுப்பினர்;* member of legislative council.

*[சட்டமேலவை + உறுப்பினர்]*

**சட்டர்[1]** *šattar,* பெ. (n.) கொற்றவைக்கணத்தார் *(வைரவர்);* Bhairava.

*[சட்டைநாதர் → சட்டர். சட்டையணிந்தவர்]*

சட்டைநாதன் பார்க்க.

**சட்டர்[2]** *šattar,* பெ. (n.) *வடமொழி கற்கும் மாணவர்களும் கற்பிக்கும் ஆசிரியர்களும்;* Sanskrit students and Pandits. *"காந்தளூர் மரியாதையால் தொன்னூற்று ஐவர் சட்டர்க்கு சாலையுஞ் செய்தான்" (பா.செ.ப. 11)*

*[சட்டம் → சட்டர் = மறைநூலுடன் மீமாம்சை, இலக்கணம், போன்ற பல பிரிவுகளையும் கற்றவர்]*

**சட்டவட்டம்** *šatta-vattam,* பெ. (n.) *திட்டம்;* neatness, fineness, orderliness.

ம. சட்டவட்டம்

*[சட்டம் + வட்டம்]*

**சட்டவரியோலை** *šatta-vari-y-ōlai,* பெ. (n.) நெறி முறைகள் பதிந்துவைத்துள்ள பனை ஓலை *(சேரநா.);* palm leaves in which rules are recorded.

ம. சட்டவரியோல

*[சட்டம் + வரி + ஓலை]*

**சட்டவல்லுநர்** *šatta-vallunar,* பெ. (n.) சட்டத் தொடர்பானவற்றில் நுட்ப அறிவுடையவர்; expert in law.

*[சட்டம் + வல்லுநர்]*

**சட்டவளை** *šatta-valai,* பெ. (n.) குறுக்குச் *சட்டம் (யாழ்ப்.);* cross-beam connecting wall plates.

*[சட்டம் + வளை]*

**சட்டவாங்குவளையம்** *šatta-vāngu-valaiyam,* பெ. (n.) *சட்டத்தில் பிணைக்கப்பட்ட இரும்பு வாங்கும், வளையங்களும் (நெல்லை.);* joining ring of metalic frames.

*[சட்டம் + வாங்கு + வளையம்]*

**சட்டவாள்** *šatta-vāl,* பெ. (n.) பிடி வைத்த பெரிய *அரம்பம் (யாழ்.);* large saw fixed in a frame.

ம. சட்டவாள்

*[தட்டை → சட்டை → சட்ட + வாள்]*



சட்டவாள்

**சட்ட விளக்கு** *šatta-vilakku,* பெ. (n.) கோயிலில் சட்டத்தில் அமைத்து இடும் விளக்கு வரிசை *(இ.வ.);* rows of lamps fixed to a frame, as in a temple.

ம. சட்டவிளக்கு

*[சட்டம் + விளக்கு]*

**சட்டறம்** *šattaram,* பெ. (n.) அறநூல் (சாத்திரம்) பயிற்றுவிக்கும் நெறிமுறை; teaching the šāstras, considered as a merit. "சாலைதொறும் பயில் சட்டறங்கள் பல்குவன" *(பெரியபு. கழறிற்.3).*

*[சட்டம் + அறம்]*

**சட்டன்** *šattan,* பெ. (n.) *மாணாக்கன்;* scholar, student. "ஒரு சட்டனை ஒரு சட்டன் பிழைக்கப் பேசுவானாகில்" *(T.A.S.I. i, 9).*

*[சட்டம் → சட்டன் (மு.தா.118.). சட்டன் = ஓலைச்சுவடி பயிலும் மாணவன்]*

சட்டன் என்னும் சொல்லைச் சாத்ர (chatra) என்று திரித்து அதனையே தென்சொற்கு மூலமாகக் காட்டுவர் வடமொழியாளர்.

**சட்டாம்பிள்ளை** *šaṭṭām-piḷḷai,* பெ. (n.) பள்ளிக்கூட வகுப்பில் மாணாக்கர் தலைவன்; monitor of a class in school *(செ.அக.).*

*[சட்டநம்பிப்பிள்ளை → சட்டம்பிப் பிள்ளை → சட்டாம்பிள்ளை (மு.தா. 118)]*

**சட்டால்** *šaṭṭāl,* பெ. (n.) வில்வம் *(மலை.);* Indian bael.

ம. சட்டாலு

*[சட்டு → சட்டால்]*

**சட்டாலொட்டா** *šaṭṭālotṭā,* பெ. (n.) ஒரு வகைக் கடல்மீன்; a kind of sea-fish.

*[சட்டை → சட்டா + லொட்டா. மோனை நோக்கி வந்த இணை மொழி]*

**சட்டி**[1] *šaṭṭi,* பெ. (n.) 1. அகன்றவாயுள்ளதும் அடிப்பக்கம் தட்டையாகவுள்ளதுமான மட்பாண்டம்; broad mouthed flaten earthen pot. 2. மட்பாண்டம் *(பெரும்பாண். 317, உரை);* earthen vessel, pan. 3. சமையற்கலம்; vessel in general. "சட்டி சுட்டதடா கையை விட்டதடா" *(பழ.).*

ம. சட்டி; க. சட்டி, செட்டி, சடிகெ, சட்டிகெ (வாயகன்ற சிறு மட்கலம்); தெ. சட்டி (வாயகன்ற மட்கலம்); து. சட்டி; Mar. caṭaṇi, caṭanī; Sind. caṭiṇi

*[தட்டு → சட்டு → சட்டி. ஒ.நோ: க. சட்டு, சட்ட, சட்டெ, தட்டையானது = சரி மட்டமானது; து. சட்டெ= தட்டையானது, சரிமட்டமானது]*

சட்டியின் பயன்பாடு கருதி அப்பச்சட்டி, எண்ணெய்ச்சட்டி, நெய்ச்சட்டி, பூச்சட்டி, வெல்லச்சட்டி, பணியாரச்சட்டி, தீச்சட்டி என்பன போன்று குறிக்கப்படுவதும் அமைப்பு கருதி அடுக்குச்சட்டி, மிடா (சட்டி), கிணிர்ச் சட்டி (அகல் விளக்கு) என்பன போன்று குறிக்கப்படுவதும் செய்பொருள் கருதி, மண் சட்டி, கல்சட்டி, இரும்புச் சட்டி, மரச்சட்டி எனக் குறிக்கப்படுவதும் வழக்கு. சட்டி என்பது பெரியது, சிட்டி சிறியது. அகலுக்குச் சிட்டி என்னும் பெயரே பொருந்தும். நெல்லை மாவட்டத்தில் கிழிபஞ்சிட்டியென்றே சொல்வர்.

**சட்டி வகைகள்**

1. களிமண்சட்டி.
2. பீசலை மண்சட்டி.
3. கருப்புச்சட்டி.
4. வெண்சட்டி.
5. வெண்களிமண் சட்டி.
6. சருவச்சட்டி.
7. போகினிச்சட்டி.

**சட்டி**[2] *šaṭṭi,* பெ. (n.) பெரியது; that which is big. 'சட்டித் தலை' *(உ.வ.).*

**சட்டி**[3] *šaṭṭi,* பெ. (n.) தாமரை *(மலை.);* lotus.

*[தட்டு → சட்டு → சட்டி. சட்டு = தாமரை]*

**சட்டி**[4]**-த்தல்** *šaṭṭi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சட்டி போலாக்குதல், அகன்றதாக்குதல், தட்டி மழுங்க வைத்தல்; to be pot like, to be flat or blunt. 2. அழித்தல்; to destroy ruin. "மாவுருவைச் சட்டித்தருளுந் தணிகையிலென் றாயே" *(அருட்பா. 5, காணாப். 6).* 2. கொல்லுதல் *(வின்.);* to kill.

ம. சட்டிக்குக

*[சட்டுதல் = தட்டுதல், அடித்தல். சட்டுதல் → சட்டித்தல் = தாக்குதல், அழித்தல், கொல்லுதல்]*

**சட்டி**[5] *šaṭṭi,* பெ. (n.) மல்லக செட்டி; a professional wrestler.

க. சட்டி; U. jeṭhī

*[எட்டி → செட்டி → சட்டி]*

**சட்டிக்கரணை** *šaṭṭi-k-karaṇai,* காறாக்கரணை; a tuberous-rooted herb.

*[சட்டி + கரணை]*

**சட்டிக்கல்பம்** *šaṭṭi-k-kalbam,* பெ. (n.) கொள்; horse-gram *(சா.அக.).*

**சட்டிக்கிழங்கு** *šaṭṭi-k-kiḻaṅgu,* பெ. (n.) உணவுக்குப் பயன்படும் ஒருவகைக் கிழங்கு; a kind of edible root.

*[சட்டி + கிழங்கு]*

**சட்டிகை**[1] *šaṭṭigai,* பெ. (n.) தாமரைப் பூ; lotus flower *(சா.அக.).*

*[சட்டி → சட்டிகை]*

**சட்டிகை**[2] *šaṭṭigai,* பெ. (n.) வாயகன்ற சிறு மட்கலம் *(கருநா.);* a small earthern pot with a broad mouth.

க. சட்டிகெ, சடிகெ

*[சட்டி → சட்டிகை]*

# சட்டி வகைகள்



களிமண் சட்டி



பீசலை மண் சட்டி



கருப்புச் சட்டி



வெண்களிமண் சட்டி



சருவச் சட்டி



போகினிச் சட்டி

**சட்டிச்சாரணை** *šaṭṭi-c-cāraṇai,* பெ. (n.) சமையலுக்குப் பயன்படும் ஒருவகைக் கீரை; a kind of greens.

*மறுவ. சத்திக்காரணை; சாரட்டிணை*

*[சட்டி + சாரணை]*

**சட்டிச்சோறடுவார்** *šaṭṭi-c-cōṟ-aḍuvār,* பெ. (n.) உணவு சமைப்பவன்; the person who cooks food. "சட்டிச்சோறடுவாற்கும் விறகிடுவானுக்குமாக நாளொன்றினுக்கு நெல்லு குறுணி யிருநாழியாக" *(தெ. க. தொ. 14. கல். 191 : 22).*

*[சட்டி + சோறு + அடுவார். சொல் → சொன்றி → சோறு. அடுதல் = சமைத்தல்]*

**சட்டிச்சோறு** *šaṭṭi-c-cōṟu,* பெ. (n.) *1.* கோயிற் பணியாளர்க்கும் சிவனடியார்க்கும் சட்டி அளவிட்டுக் கொடுக்கும் சோறு; food offerings distributed as a perquiste to temple-servants. "மகசேுவரர்க்குச் சட்டிச்சோறு ஆயிரம் கொடுக்கவும்" *(தெ.க.தொ. 4, கல். 223).* 'சொக்கனுக்குச் சட்டிச்சோறு' *(பழ.)* *2.* இருநாழி அரிசி சமைத்த சோற்றின் அளவு; two nāḻi measured cooked rice.

*[சட்டி + சோறு]*

**சட்டிசாட்டாரணை** *šaṭṭi-šāṭṭāraṇai,* பெ. (n.) செடி வகை; pointed-leaved hogweed.

*[சட்டி + சாட்டரணை]*

**சட்டிசுரண்டி** *šaṭṭi-šuranḍi,* பெ. (n.) *1.* சட்டி சுரண்டுங் கருவி; small scraping instrument for cleaning mud vessels. *2.* சட்டி சுரண்டுபவர்; scullion, cook, used in contempt.

*[சட்டி + சுரண்டி. சுரண்டு → சுரண்டி]*

**சட்டிசுரண்டு-தல்** *šaṭṭi-šuranḍu-,* 5 செ.கு.வி. (v.i) இழிதொழில் செய்தல்; to do any menial service, used in contempt. "உனக்கென்ன வரும் சட்டி சுரண்ட வருந் தையலே" *(விறலிவிடு.).*

*[சட்டி + சுரண்டு-தல். சட்டி சுரண்டுதல் = மட்பாண்டங்களைக் கழுவி வாழ்க்கை நடத்துதல், வறுமையில் வாழ்தல்.]*

**சட்டித்தலை** *šaṭṭi-t-talai,* பெ. (n.) *1.* பெருந்தலை *(வின்.);* pot-head, big head. *2.* வழுக்கைத்தலை; bald head.

*ம. சட்டித்தல*

*[சட்டி + தலை. வடிவத்தால் பெரிய தலையையும் தோற்றத்தால் வழுக்கைத் தலையையும் குறித்தது]*

**சட்டித்தலைப்பாகை** *šaṭṭi-t-talai-p-pāgai,* பெ. (n.) பெருந்தலைப்பாகை *(இ.வ.);* a kind of large turban.

*[சட்டி + தலைப்பாகை]*

**சட்டித்தலையன்** *šaṭṭi-t-talaiyan,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. "திருக்கை சட்டித் தலையன்" *(பறாளை. பள்ளு.16).*

*[சட்டி + தலையன்]*

**சட்டித்தலையுள்ளான்** *šaṭṭi-t-talai-y-uḷḷāṉ,* பெ. (n.) பெரிய தலையையுடைய உள்ளான் பறவை *(வின்.);* large headed snipe.

*[சட்டி + தலை + உள்ளான்]*




**சட்டித்தோசை** *šaṭṭi-t-tōšai,* பெ. (n.) மண் சட்டியில் வார்த்தெடுக்கும் தோசை வகை *(இ.வ.);* a round cake of rice-flour fried in an earthern pan.

*[சட்டி + தோசை. தோய் → தோயை → தோசை]*

**சட்டித்தோட்டா** *šaṭṭi-t-tōṭṭā,* பெ. (n.) தோட்டா இனக் கடல்மீன் *(முகவை.);* a kind of tōṭṭā fish.

*[சட்டி + தோட்டா]*

**சட்டித்தோணி** *šaṭṭi-t-tōṇi,* பெ. (n.) தட்டையான அடிப்பக்கமுள்ள படகு *(புதுவை.);* flat-bottomed boat.

*[சட்டி + தோணி]*

**சட்டிப்பீரங்கி** *šaṭṭi-p-pīraṅgi,* பெ. (n.) குண்டு முதலியன தொலைவிற் பாயும்படிச் செய்யும் தகரி (பீரங்கி) வகை *(வின்.);* mortar for throwing bombs and shells.

*[சட்டி + பீரங்கி]*

**சட்டிப்புல்** *šaṭṭi-p-pul,* பெ. (n.) புல்வகை *(யாழ்ப்.);* bushy kind of grass.

*[சட்டி + புல்]*

**சட்டிபானை** *šaṭṭi-pāṉai,* பெ. (n.) சமையல் முதலியவற்றிற்கு உதவும் மட்பாண்டங்கள்; pots and pans, cooking utensils, crockery *(செ.அக.).*

ம. சட்டிப்பான

*[சட்டி + பானை. மரபிணைமொழி]*

பானை = பெரிய மட்கலம். சட்டி = பானையை நோக்கச் சிறியது. சருவப்பானை, சருவச்சட்டி என்னும் வழக்குகளும், மோர்ப் பானை, நெய்ச்சட்டி என்னும் வழக்குகளும் இதனை வலியுறுத்தல் காண்க.

**சட்டிமரக்கால்** *šaṭṭi-marakkāl,* பெ. (n.) அகலம் மிகுதியாகவும் உயரம் குறைவாகவும் உள்ள மரக்கால்; a kind of marakkāl.

*[சட்டி + மரக்கால்]*

**சட்டியப்பம்** *šaṭṭi-y-appam,* பெ. (n.) அரிசி மாவினாற் செய்த பணியார வகை; a large cake made of rice flour *(செ.அக.).*

ம. சட்டியப்பம்

*[சட்டி + அப்பம். மண் சட்டியிற் சுட்ட அப்பம், சட்டியப்பம்]*

**சட்டியாட்டு-தல்** *šaṭṭi-y-āṭṭu-,* 5 செ.குவி. (v.i.) சட்டியுருட்டு-தல் பார்க்க; see *šaṭṭi-y-uruṭṭu-.*

ம. சட்டிகளி, சட்டியாட்டம்

*[சட்டி + ஆட்டு-,]*

**சட்டியுருட்டு-தல்** *šaṭṭi-y-uruṭṭu-,* 5 செ.குவி. (v.i) *1.* சூதாடுதல் *(வின்.);* to gamble with balls in a brass vessel. *2.* வாயாலூட்டுதல் *(இ.வ.);* to be blatant, to bluster. *3.* மட்பாண்டங்களில் வைத்திருக்கும் பொருள்களைத் திருடி உண்ணுதல் *(இ.வ.);* to steal and eat things stored in mud-pots. *4.* சட்டிசுரண்டு-தல் பார்க்க; see *šaṭṭi-šuraṇḍu-* *(செ.அக.).*

*[சட்டி + உருட்டு-,]*

**சட்டியெடு-த்தல்** *šaṭṭi-y-eḍu-,* 4 செ.குவி. (v.i.) இரத்தல் (கையில் சட்டியையெடுத்தல்); lit., to take pot on hand, to beg *(செ.அக.).*

*[சட்டி + எடு-,]*

**சட்டியொட்டி** *šaṭṭi-y-oṭṭi,* பெ. (n.) பொருவா என்னும் கடல்மீன் வகை *(வின்.);* sea-fish, blackish.

ம. சட்டிப்பற்றி

*[சட்டி + ஒட்டி]*

**சட்டிவட்டு** *šaṭṭi-vaṭṭu,* பெ. (n.) கப்பல் வள்ளிக் கிழங்கின் துண்டம் *(யாழ்ப்.);* round root of the alligator yam, which is cut out and planted as a sucker.

*[சட்டி + வட்டு]*

**சட்டு[1]-தல்** *šaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தட்டுதல்; to strike, to beat.

க. சச்சு, செச்சு

*[தட்டு → சட்டு]*

'சட்டு' என்பது தட்டுதலைக் குறித்த ஒரு பழந்தமிழ்ச் சொல். *(மு.தா. 108)*

**சட்டு[2]** *šaṭṭu,* பெ. (n.) அழிவு *(வின்.);* destruction, injury, waste.

ம. சட்டு (குற்றம், குறை, முடம்); க. சட்டு, செட்டு; தெ. செடி, செடு (பயனற்றது); து. சட்டு (முடிவு, அழிவு).

*[சட்டுதல் = தட்டுதல், அடித்தல். சட்டு' - சட்டு. சட்டு-தல் பார்க்க]*

**சட்டு[3]** *šaṭṭu,* பெ. (n.) சிக்கனம்; thrift *(செ.அக.).*

*[செட்டு → சட்டு]*

**சட்டுகந்தம்** *šaṭṭugandam,* பெ. (n.) வசம்பு; sweet flag *(சா. அக.).*

*[சடகந்தம் → சட்டுகந்தம்]*

**சட்டுகம்** *šaṭṭugam,* பெ. (n.) சட்டுவம் பார்க்க; see *šaṭṭuvam..*

ம. சட்டுகம்; க. சடுக

*[சட்டுவம் → சட்டுகம்]*

**சட்டுப்பண்ணு[1]-தல்** *šaṭṭu-p-paṇṇu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *சட்டுப்பார்-த்தல் (வின்.) பார்க்க;* see *šaṭṭu-p-pār-*.

*[சட்டு + பண்ணு-,]*

**சட்டுப்பண்ணு[2]-தல்** *šaṭṭu-p-paṇṇu-*, 5 செ.கு.வி. (v.i.) சிக்கனமாயிருத்தல்; to be thrifty *(செ.அக.)*.

*[செட்டு → சட்டு + பண்ணு-,]*

**சட்டுப்பார்-த்தல்** *šaṭṭu-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. அழித்தல்;* to destroy, injure. *2.* விழுங்குதல்; to devour, consume *(செ.அக.)*.

*[சட்டு + பார்-,]*

**சட்டுப்புட்டெனல்** *šaṭṭu-p-puṭṭeṉal*, பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr. signifying haste *(செ.அக.)*.

ம. சட்டுபெட்டனு; H. jhaṭpaṭ; Mar. jaṭpaṭ, Guj. jhaṭāpat; Sind. jhaṭpaṭi.

*[சட்டு + புட்டு + எனல்]*

**சட்டுவக்கல்** *šaṭṭuva-k-kal*, பெ (v.i) மடங்களுக்குக் கொடை கொடுக்கப்பட்ட நிலத்தின் எல்லையில் நடப்பெறும் சட்டுவ வடிவம் வரைந்த எல்லைக் கல் (இ.வ.); boundary stone having a ladle-mark for lands granted to a mutt.

*[சட்டுவம் + கல்.]*

**சட்டுவச்சாதம்** *šaṭṭuva-c-cādam*, பெ. (n.) சட்டுவச்சோறு பார்க்க; see *šaṭṭuva-c-cōṟu*.

*[சட்டுவம் + சாதம்]*

**சட்டுவச்சோறு** *šaṭṭuva-c-cōṟu*, பெ. (n.) திருமணத்தில் மணாளனுக்கு மணப்பெண் படைக்கும் சோறு; food served by the bride to the bridegroom for the first time at the marriage.

*[சட்டுவம் + சோறு]*

**சட்டுவஞ்செலுத்து-தல்** *šaṭṭuvañ-celuttu-*, செ.கு.வி. (v.i) *1.* உணவு பரிமாறுதல்; to ladle out or serve food. *2.* விருந்தோம்புதல்; to exercise hospitality *(செ.அக.)*.

*[சட்டுவம் + செலுத்து-,]*

உணவு அளிப்பதற்கு உதவும் சட்டுவம், உணவு அளித்தலோடு விருந்தோம்புதலு க்கும் ஆயிற்றென்க.

**சட்டுவம்** *šaṭṭuvam*, பெ. (n.) *1. அகப்பை;* ladle. "ஆனபல் சட்டுவ மங்கைதொ றேந்தி" *(கந்தபு. திருச்செந் 4.)*; *2.* தோசை திருப்பி; metal spatula with a long handle for turning and removing a cooked cake. "சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவையறியுமோ" *(சித்தர்பா.)*. *3.* சோற்றுப் பானை கசடு நீக்குங் கருவி; spatula.

ம. சட்டுகம், சட்டகம், சட்டுவம்; க. சடுக, சட்டுக, சொடக, சட்டு; தெ. சட்டுமு, சட்டுவமு; து. சட்டுக; பட. சட்டுகோலு; கோத. சட்ய்கோல்; குட. சட்டுவ.

*[சட்டு → சட்டுவம்]*

**சட்டெனல்** *šaṭṭeṉal*, பெ. (n.) *1.* விரைவுக் குறிப்பு; onom. expr. signifying, quickness. சட்டென வழல்வாய்ப் பல்பிணை மருந்தீமத்து *(ஞானா. 6: 12)*. *2.* திடீரெனற் குறிப்பு; onom. expr. signifying suddenness.

ம., க., து. சட்டனெ; தெ., பட. சட்டன

*[சட்டு + எனல்]*

**சட்டை[1]** *šaṭṭai*, பெ. (n.) *1.* மெய்ப்பை; jacket, coat, gown, cloak. "தேசுடைச் சட்டை சாத்தி" *(திருவாலவா. 16: 19)*. *2.* பாம்புச் சட்டை; slough of a snake. *3. யாக்கை;* body, as put on by the soul or by God.

மறுவ. மெய்ப்பை, கஞ்சுறி, அஞ்சுகம், வாரணம், குப்பாயம், அங்கு, படம்

ம., தெ., து. சட்ட; க. சட்டெ, சொட்டெ

*[சட்டம் → சட்டை = உடம்பு, உடம்பின் மீந்தோல், அதுபோன்ற மெய்ப்பை]*

மீந்தோல் பெயர அடிபட்டவனை நோக்கி அவன் உடம்பு சட்டை சட்டையாய்க் கழன்றுவிட்டது என்றும் பாம்பு மீந்தோல் கழித்தலைச் சட்டை கழற்றுதல் என்றும் கூறுதல் காண்க (மு.தா. 109).

பழங்காலத்து மெல்லாடை, பாம்புச்சட்டை போன்றும், மூங்கிலின் உட்புற மீந்தோல் போன்றும் புகை விரிந்தாற் போன்றும் நீராவி படர்ந்தாற்போன்றும், இழையோடியது தெரியாமலும் பூந்தொழிலுடன் நுண்ணியதாய் நெய்யப்பட்டிருந்ததென்று பண்டைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

அரசர்க்கும் அரசியல் அதிகாரிகட்கும் அரண்மனை அலுவலர்க்குமே சட்டையணியும் உரிமையிருந்தது. சட்டை உடம்பிற்குப் பை

போன்றிருப்பதால் மெய்ப்பை என்றும் பெயர் பெறும். "ஈசனுங் கற்றுச் சொல்வோர் பின்வர விகலிற் கூடித் தேசுடைச் சட்டை சாத்தி" என்னும் பெரும்பற்றப் புலியூர் நம்பிக் கூற்றுப் பிற்காலத்ததேனும், சட்டை என்னும் சொல் முற்காலத்ததே. 'கஞ்சுக மாக்கள்' என்னும் சிலப்பதிகாரச் சொற்கு "சட்டையிட்ட பிரதானிகள்" என்று அருஞ்சொல்லுரைகாரர் வரைந்திருத்தல் காண்க *(ப. ப. 44. 45).*

**சட்டை**[2] *šaṭṭai,* பெ. (n.) மதிப்பு *(உவ.);* esteem, regard, honour, respect. 'அவன் யாரையுஞ் சட்டை செய்யவில்லை' *(உவ.).* 'குட்டுமானம் தப்பி குசவனோடு பேசினால் சட்டையும் பண்ணான் சட்டியும் கொடான்' *(பழ.).*

*[சட்டம் → சட்டை]*

த. சட்டை → Skt. šraddhā

**சட்டை**[3] *šaṭṭai,* பெ. (n.) *1.* ஒருவகை நிறை *(G.Sm.D.I. 1, 283);* a weight of about ten maunds. *2.* பொதி *(வின்.);* pack or sack for a beast of burden. *3.* தைவேளை *(மலை.);* species of cleome.

*[சட்டம் → சட்டை]*

**சட்டை**[4] *šaṭṭai,* பெ. (n.) தட்டை, தட்டையான பொருள்; flatness.

க. சட்டெ, சட்டு; பட. சட்டெ.

*[தட்டை → சட்டை]*

**சட்டைக்கயிறு** *šaṭṭai-k-kayiṟu* பெ. (n.) சட்டையை உடம்புடன் இறுக்கிக் கட்டுங் கயிறு; tying string of a jacket.

மறுவ. தாள்

*[சட்டை + கயிறு]*

**சட்டைக்காரன்** *šaṭṭai-k-kāraṉ,* பெ. (n.) ஐரோப்பியருக்கும் இந்தியருக்கும் பிறந்த கலப்பு இனத்தான்; Anglo-Indian.

ம. சட்டக்காரன்; க., து. சட்டகார; தெ. சட்டகார வாடு

*[சட்டை + காரன்]*

சட்டைக்காரன் = மேனாட்டார் போன்று சட்டை (கால்சட்டை, மேல்சட்டை) அணிபவன். "மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்" என வரும் முல்லைப்பாட்டு வரிகள் நம் நாட்டிற்கு வந்த யவனர் போன்ற அயல் நாட்டினரே சட்டை அணிந்திருந்ததையும் சட்டை மெய்ப்பை என அழைக்கப் பட்டதையும் காட்டுகின்றன. இச்சட்டை வகையைத் திருவாசகம் (177) குப்பாயம் என்று குறிப்பிடுகிறது. உடலில் அணிவது சட்டை (shirt) என்றும், சட்டையின் மேல் அணிவது குப்பாயம் (coat) என்றும் பாகுபடுத்தப்பெற்று வழக்கூன்றியுள்ளது.

**சட்டைக்காரி** *šaṭṭai-k-kāri,* பெ. (n.) சட்டைக்காரப் பெண் *(உவ.);* Anglo-Indian woman.

ம. சட்டக்காரி

*[சட்டைக்காரன் (ஆ.பா.) – சட்டைக்காரி (பெ.பா.)]*

**சட்டைக்கை** *šaṭṭai-k-kai,* பெ. (n.) மேற் சட்டையின் கைப் பகுதி; sleeve of a shirt.

ம. சட்டக்கை

*[சட்டை + கை]*

**சட்டைகழற்று-தல்** *šaṭṭai-kaḻaṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பாம்பு தோலுரித்தல்; to cast slough, as a snake.

*[சட்டை + கழற்று-,]*

**சட்டைச்சாம்பு** *šaṭṭai-c-cāmbu,* பெ. (n.) சீமைத்துணி வகை *(வின்.);* long cloth, Lancashire white cotton-shirtings.

தெ. சாடி

*[சட்டை + சாம்பு]*

**சட்டைத்துணி** *šaṭṭai-t-tuṇi,* பெ. (n.) சட்டை தைப்பதற்கான துணி; shirt-cloth.

*[சட்டை + துணி]*

**சட்டைநாதன்** *šaṭṭai-nādaṉ,* பெ. (n.) கொற்றவைக்கணத்தார் (சட்டையணிந்தவர்); Lord having a jacket, Bhairava *(செ.அக.).*

*[சட்டை + நாதன்]*

**சட்டைநீக்கி** *šaṭṭai-nīkki,* பெ. (n.) கருநீல நொச்சி; black-blue notchi; willow-leaved justicia - Justicia gendarussa *(சா.அக.).*

**சட்டைப்புரை** *šaṭṭai-p-purai,* பெ. (n.) சட்டைப்பை பார்க்க; see *šaṭṭai-p-pai.* "அபகரித்துச் சட்டைப்புரைக்குள்ளே இட்டுக் கொள்வர்" *(திவ். திருமாலை, வியா, 24, ப. 83).*

*[சட்டை + புரை. புரை = துளை, அறை]*

**சட்டைப்பை** *šaṭṭai-p-pai,* பெ. (n.) சட்டையில் அமைக்கப்படும் பை; shirt pocket.

*[சட்டை + பை. பொள் → பொய் → (பய்) → பை = உட்டுளையுடையது]*

**சட்டைபண்ணு-தல்** *šaṭṭai-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மதிப்புக் கொடுத்தல், அக்கறை காட்டுதல்; to care for, regard.

*[சட்டை + பண்ணு-,]*

**சட்டைமுனி** *šaṭṭai-muṉi,* பெ. (n.) ஓகம் (யோகம்), மருத்துவம், பொன்னாக்கம் (இரசவாதம்), மெய்ப்பொருள் (தத்துவம்), முதலியவற்றைப் பற்றிய நூல்களைப் பாடியவரும் அகத்தியரின் மாணவருமான அறிவர் (சித்தர்); a very ancient Siddhar of the Agastiyar's school of thought, author of various works on alchemy, medicine, yoga and philosophy (சா.அக.).

*[சட்டை + முனி. முனிதல் = சினத்தல், வெறுத்தல். முனி → முனிவு = சினம், வெறுப்பு. முனிவு → முனிவன் = உலகப் பற்றைத் துறந்த அறிவன்]*

**சட்டையன்** *šaṭṭaiyaṉ,* பெ. (n.) திருவரங்கத் திருக்கோயிலுக்கு நிலம் கொடையாகக் கொடுத்தவன்; the land donar to Thiruvarangam temple "பெரியகோயில் நம்பிக்கு நீர்வார்த்துக் கொடுத்தேன் சட்டையனேன்". (தெ. க. தொ. 24, கல். 157: 29).

*[சட்டை → சட்டையன்]*

**சட்டோலை** *šaṭṭōlai,* பெ. (n.) சட்டம் எழுதுதற்குரிய ஓலை (யாழ். அக.); ola or palm-leaf fit for writing.

ம. சட்டோல

*[சட்டம் + ஓலை]*

**சட்பதாதிதி** *šaṭpadātiti,* பெ. (n.) 1. சண்பகம்; champak. 2. மாமரம்; mango tree (சா.அக.).

**சட்பம்** *šaṭpam,* பெ. (n.) 1. இளம்புல்; tender grass. 2. அறுகு; bermuda grass (சா.அக.).

*[சல் → சல் → (சல்பம்) → சட்பம்]*

**சட்பராசி** *šaṭbarāsi,* பெ. (n.) 1. அறுகம்புல்; bermuda grass - Cynodon dactylon. 2. நாணல்; reed (சா.அக.).

*[சட்பம் → சட்பராசி]*

**சடக்கடை** *šaḍa-k-kaḍai,* பெ. (n.) ஒன்பது (தைலவ.தைல 114); nine.

*[சடம் + கடை . சடம் = உடம்பு. கடை= இடம். உடம்பிற் காணப்படும் ஒன்பது துளைகள், ஒன்பது.]*

**சடக்கன்** *šaḍakkaṉ,* பெ. (n.) கடல்மீன் வகைகள்; sea-fish. (a.) pearly -white, attaining 18 in. in length. (b.) greyish, attaining 20 in. in length. (c.) brownish (செ.அக.).

**சடக்கன்வெட்டு** *šaḍakkaṉ-veṭṭu,* பெ. (n.) ஒரு வகைக் காசு (நாணயம்) (பணவிடு. 133); a coin.

*[சடக்கன் + வெட்டு]*

**சடக்கினம்** *šaḍakkiṉam,* பெ. (n.) ஒருவகைப் பூ; a plant - Coryza lacera (சா.அக.).

**சடக்கு**[1] *šaḍakku,* பெ. (n.) 1. வேகம்; speed, rapidity. 'சாரிகை வந்த சடக்கு' (ஈடு. 7.4 : 7). 2. செருக்கு; arrogance. 'மீனின் சடக்கு நடக்காது' (தனிப்பா. 1, 339: 51).

ம. சடக்கம், சடக்கு; க. செடகு

*[சட்டெனல் = விரைவைக் குறிக்கும் ஒலிக் குறிப்புச்சொல். சட்டு → சடக்கு]*

**சடக்கு**[2] *šaḍakku,* பெ. (n.) உடல்; body. "மெய் போலிருந்து பொய்யாஞ் சடக்கை" (தாயு. சச்சிதானந்த. 2).

*[சடம் → சடக்கு]*

**சடக்குச்சடக்கெனல்** *šaḍakku-c-caḍakkeṉal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of clacking as when walking with wooden sandals (செ.அக.).

*[சடக்கு + சடக்கு + எனல்]*

**சடக்கெனல்** *šaḍakkeṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr. signifying haste, rush. "சடக்கென............ கன்னறின்னென வேவினன்" (திருவாலவா. 14: 4).

*[சடக்கு + எனல்]*

**சடக்கேதனம்** *šaḍakkēdaṉam,* பெ. (n.) முள்ளங்கி; Indian radish; garden radish (சா.அக.).

**சடக்கோதன்** *šaḍakkōdaṉ,* பெ. (n.) வசம்பு (மலை.); sweet flag.

**சடகந்தம்** *šada-kandam,* பெ. (n.) சடக்கோதன் பார்க்க; see *šadakkōdan.*

*[சடம் + கந்தம்]*

**சடகம்**[1] *šadagam,* பெ. (n.) *1.* ஊர்க்குருவி (சூடா.); sparrow. *2.* கரிக்குருவி; kingcrow. 'சடகமேநின்... இளம்பார்ப்பிற்கும்' *(திருவாலவா. 60: 8.)*

*[சகடம் → சடகம் = வட்டமிட்டுப் பறக்கும் பறவை, ஊர்க்குருவி, கரிக்குருவி]*

**சடகம்**[2] *šadagam,* பெ. (n.) வட்டில் (சூடா.); cup, drinking vessel.

*[சகடு → சகடம் → சடகம்]*

சகடம் → Skt. šaṣaka

**சடகை** *šadagai,* பெ. (n.); ஊர்க்குருவிப் பேடு; hen-sparrow *(சா.அக.).*

ம. சடக்க

*[சகடம் → சடகம் = ஊர்க்குருவி; சடகம்→ சடகை. சடகம் (ஆ.பா.) → சடகை (பெபா.)]*

**சடகோபதாசர்** *šadagōba-dāšar,* பெ. (n.) அரிசமய தீபம் என்னும் நூலை இயற்றியவரும் 17ஆம் நூற்றாண்டிலிருந்தவருமாகிய ஆசிரியர்; author of the Ari-šamaya-dībam, 17th c. *(செ.அக.).*

*[சடகோபன் + தாசர்]*

Skt. dāsa → த. தாசர்

**சடகோபம்** *šadagōbam,* பெ. (n.) திருமால் கோயிலில் இறைவழிபாடு செய்பவர்களது முடியில் வைத்து அருள் வழங்குதற்கும் பிறவற்றுக்குமாக அமைக்கப்பட்டு இறைவனின் முன்பாக வைக்கப்பெற்றுள்ள திருமாலின் திருவடி நிலை; small metal head-cover on which Tirumāl(Viṣṇu)'s sandals or feet are engraved and which is placed over the head of worshippers in Tirumāl (Viṣṇu) temples. 'சடகோபஞ் சித்திக்க' *(அழகர்கலம். காப்பு. 1).*

*[சகடம் → சடம் + கோபம்]*

சடகோபம் → Skt. šatha-kōpa

**சடகோபரந்தாதி** *šadagōbar-andādi,* பெ. (n.) நம்மாழ்வார் மீது கம்பன் இயற்றியதாகக் கூறப்படும் ஓர் ஈறு தொடங்கி (அந்தாதி) நூல்; poem on Nammālvār said to be composed to Kamban.

*[சடகோபர் + அந்தாதி]*

**சடகோபன்** *šadagōban,* பெ. (n.) நம்மாழ்வார் (சடமென்னும் வளியை (வாயுவை) வென்றவன்); Nammālvār, a Vaiṣṇava saint, as one who subdued the evil humour šadam. 'குருகூர்ச்சட கோபன்' *(திவ்.திருவாய். 1, 1, 1).*

*[சடம் + கோபன்]*

**சடங்கடி** *šadaṅgadi,* பெ. (n.) ஏமாற்று (வஞ்சனை); deceit. "சடங்கடிக்கு வாய்த்த சளக்கா" *(சரவண. பணவிடு. 36).*

*[சட்டம் → சடங்கு + அடி. அடி = திரும்புதல், நீக்குதல், மறுத்தல். சடங்கடி → சட்டத்திற்குப் பணியாமல் நடத்தல், ஏமாற்றுதல் (வ.வ. 335)]*

**சடங்கப்படு-தல்** *šadaṅga-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* மூட்டையாகக் கட்டப்படுதல்; to be packed into a bundle. *2.* வேலையில் மூண்டிருத்தல்; to be engaged in a work or duty *(செ.அக.).*

*[சடங்கம் + படு-,]*

**சடங்கப்பூட்டு** *šadaṅga-p-pūttu,* பெ. (n.) சடங்கு[2] பார்க்க *(யாழ்.அக.);* see *šadaṅgu.*

*[சடங்கம் + பூட்டு]*

**சடங்கம்**[1] *šadaṅgam,* பெ. (n.) *1.* வழிச் செல்கைக்கான மூட்டை; knapsack 'சடங்கத்திலே போட்டுக்கட்டு' (வின்.). *2.* வருத்தம் (வின்.); difficulty, straits, entanglement. *3.* வேலை (வின்.); work, duty.

ம. சடங்நம் (மற்போர் வகை)

*[சடம் = பொருள். சடம் + அங்கம் = பொருள் பொதிந்த கட்டு, பயணமூட்டை]*

**சடங்கம்**[2] *šadaṅgam,* பெ. (n.) ஊர்க்குருவி; house sparrow. 'இளங்களிறாயுஞ் சடங்கமாயும்' *(நீலகேசி, 206, உரை, மேற்கோள்).*

ம. சடகம்

*[சடகம் → சடங்கம்]*

த. சடங்கம் → Skt. šaṭaka

**சடங்கம்போடு-தல்** *šadaṅgam-pōdu-,* 9 செ.குன்றாவி. (v.t.) மூட்டையாகக் கட்டுதல் *(வின்.);* to make up or pack into a bundle.

*[சடங்கம் + போடு-,]*

**சடங்கயம்** *šaḍaṅgayam,* பெ. (n.) வெள்ளை முத்துச்சோளம்; white maize (சா.அக.).

**சடங்கா-தல்** *šaḍaṅgā-,* 6 செ.கு.வி. (v.i.) பெண் பூப்படைதல் (இ.வ.); to arrive at puberty, as a girl.

*[சடங்கு + ஆ-,]*

**சடங்காகு-தல்** *šaḍaṅgāgu-,* 5 செ.கு.வி. (v.i.) சடங்கா-தல் பார்க்க; see *šaḍaṅgā-.*

*[சடங்கு + ஆகு-,]*

**சடங்கு[1]** *šaḍaṅgu,* பெ. (n.) 1. நூன்முறை பற்றியும் வழக்கம் பற்றியும் மேற்கொள்ளும் செயற்பாடு; rite, ceremony. "மறையவன் சடங்கு காட்ட" (கம்பரா. கிளைக. 81). 2. முதற் பூப்புச் சடங்கு; ceremony performed at the pubescence of a girl. "சடங்கு மாதுங் கழிக்கு முன்னாம்" (தனிப்பா.1,378:21). 4. திருமண உறவு (இ.வ.); nuptials, consummation.

ம. சடங்கு, சடங்நு; க. சட்டு, செட்டு (முதல் பூப்பு நீராட்டு விழாவின்போது, பெண், மஞ்சள் தடவிய கையால் சுவரைத் தொட்டு உண்டாக்கும் கையடையாளம்).

*[சட்டம் → சடங்கு = மதமுறைப்படி அல்லது ஒழுக்க முறைப்படி நடைபெறும் கரணம் (மு.தா. 108)]*

**சடங்கு[2]** *šaḍaṅgu,* பெ. (n.) குண்டுக் கட்டாய்க் கட்டும் மற்பிடிவகை; a variety of wrestler's grapple, probably forcing a person into a ball-like position. "சடங்காகப் பிடித்து உயிர்போக நெரித்துத் தொலைத்த மல்லாடலும்" (சிலப். 6: 49, உரை).

*[சடங்கம் → சடங்கு]*

**சடங்குகழி-த்தல்** *šaḍaṅgu-kaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) பெண்ணின் முதற்பூப்பிற்கான சடங்கினைச் செய்தல் (உ.வ.); to celebrate the pubescence of a girl with the prescribed ceremonies.

*[சடங்கு + கழி-,]*

**சடங்குவீடு** *šaḍaṅgu-vīḍu,* பெ. (n.) 1. பூப்பு நீராட்டுச் சடங்கு நிகழும் வீடு (உ.வ.); the house where puberty-ceremony is performed. 2. திருமணம் முதலிய சிறப்பு நிகழ்ச்சி நடக்கும் வீடு; the house where a ceremony is performed, as marriage (செ.அக.).

*[சடங்கு + வீடு]*

**சடச்சி** *šaḍacci,* பெ. (n.) 1. பொன்னிமிளை; a mineral, Bismuth pyrites. 2. செவ்வலரி; red oleander (சா.அக.).

*[சடை → சடம் → சடச்சி]*

**சடச்சியங்கம்** *šaḍacci-y-aṅgam,* பெ. (n.) கருப்புக் கொள்; black horse-gram (சா.அக.).

**சடசடப்பு** *šaḍašaḍappu,* பெ. (n.) ஈரடுக் கொலிக் குறிப்பு; onom. expr. signifying dash, etc.

மறுவ. சடசடெனல்

*[சட + சடப்பு. 'பு' - பெ. ஆ. ஈறு]*

**சடசடவெனல்** *šaḍa-šaḍa-v-eṉal,* பெ. (n.) ஒலிக்குறிப்பு; onom. expr. signifying crash, peal of repeated sound (செ.அக.).

*[சடசட + எனல்]*

**சடசடெனல்** *šaḍa-šaḍeṉal,* பெ. (n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying sound of falling trees, report of a gun, rattling of stones thrown. 'சடசட விடுபெணை பழம்' (தேவா. 515, 9).

ம. சடசட, சடசடா; க., தெ., து. சடசட; குட. சட்; Skt. caṭacaṭā

*[சடசட + எனல்]*

**சடத்துவம்** *šaḍattuvam,* பெ. (n.) சடத்தன்மை; lifeless nature.

*[சடம் → சடத்துவம்]*

**சடநிறம்** *šaḍa-niṟam,* பெ. (n.) கருமைநிறக்கல் (யாழ்.அக.); a kind of blackstone.

*[சடம் + நிறம்]*

**சடப்பால்** *šaḍa-p-pāl,* பெ. (n.) முலைப்பால் (மூ.அ.); mother's milk.

*[சடம் + பால்]*

**சடப்பொருள்** *šaḍa-p-poruḷ,* பெ. (n.) சடம்[1] பார்க்க; see *šaḍam[1].*

*[சடம் + பொருள். சடப்பொருள் அழியும் இயல்பின.]*

**சடபம்** *šaḍabam,* பெ. (n.) 1. அறுகு; cynoden grass. 2. புல்; grass (சா.அக).

*[சடம் → சடபம்]*

**சடபதார்த்தம்** *šaḍa-padārttam,* பெ. (n.) சடம்[1] -1 பார்க்க; see *šaḍam[1]* (செ.அக.).

*[சடம் + பதார்த்தம்]*

**சடபரதன்** *šaḍa-paratan*, பெ. (n.) அறிவிலி போன்று திரிந்து கொண்டிருந்த ஒரு முனிவன்; a sage who was wandering about like an idiot. 'ஓதுஞ் சடபரதன்றனை யுணராதவ னிலனே' *(பிரபோத. 5: 33).*

*[சட(ம்) + பரதன்]*

**சடபுட-த்தல்** *šaḍapuḍa-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* சடசடவென்னும் ஒலியுண்டாதல்; to make a crackling sound. *2.* மிகுதியும் பரபரப் படைதல்; to be inordinately hasty (செஅக.).

மறுவ. சடபுடாவெனல், சடபுடெனல்

*[சட + புட-,]*

**சடபுடெனல்** *šaḍa-puḍeṉal*, பெ. (n.) *1.* ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of crackling noise, etc. *2.* மிகுவிரைவுக் குறிப்பு (உ.வ.); expr. signifying inordinate or feverish haste (செஅக.).

ம. சடபுட, சடபடெ, சடபிட; க., து. சடபட; Skt. caṭapaṭa

*[சட + புட + எனல்]*

**சடம்**[1] *šaḍam*, பெ. (n.) *1.* அறிவில் பொருள் (பிங்.); inanimate, lifeless matter. *2.* உடல்; body. 'சடங்கொள் சீவரப் போர்வையர்' *(தேவா. 805,10).* *3.* வயிறு; stomach.

*[சட்டம் → சடம்; ஒ.நோ. பட்டம் → படம். (மு.தா. 109)]*

த. சடம் → Skt. jaḍa, jala, cold, rigid, chilly; cold, frost, winter; water. D. caḷi, taṇ etc. for water D. jani might be thought of. -jaḍa, jala, senseless, stupid, apathetic, etc. i. caḷi, (jada and jala have been referred to the Indo-European languages by eminent scholars; the comparison with D. is only suggestive). (K.K.E.D. XXVI).

**சடம்**[2] *šaḍam*, பெ. (n.) *1.* பொய் (பிங்.); falsehood, illusion. *2.* ஏமாற்று (சூடா.); deception, fraud. *3.* கொடுமை (பிங்.); cruelty, savageness. *4.* சோம்பல் (பிங்.); idleness. *5.* பிறக்கும்போது ஆதனிடம் (ஆன்மாவிடம்) மோதி அதன் நல்லறிவைக் கெடுப்பதாகக் கருதப்படும் ஒரு வகைக் காற்று; evil humour of the body that destroys the innate wisdom of the soul at birth.

*[சட்டம் → சடம்]*

**சடம்**[3] *šaḍam*, பெ. (n.) ஆறு (அகநி.); river.

*[சட்டம் → சடம்]*

**சடம்**[4] *šaḍam*, பெ. (n.) அறியாமை; spiritual. ignorance. "சான்று வேண்டுஞ் சடத்தை யறிந்திலேன்" *(மேருமந். 257.).*

*[சட்டம் → சடம்]*

**சடம்பு** *šaḍambu*, பெ. (n.) சணல் (இ.வ.); sunn-hemp.

ம. சடம்பு

*[சடை → சடம் → சடம்பு (மு.தா. 139)]*

**சடமுல்லாசம்** *šaḍamullāšam*, பெ. (n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water-root (சாஅக.).

**சடர்** *šaḍar*, பெ. (n.) அறிவில்லாதவர்; ignorant person.

*[சடம் → சடன் → சடர்]*

**சடரச்சுவாலை** *šaḍara-c-cuvālai*, பெ. (n.) சடராக்கினி பார்க்க; see *šaḍarākkiṉi*.

*[சடரம் + சுவாலை]*

**சடரம்** *šaḍaram*, பெ. (n.) வயிறு; belly. 'முடிகென்று சடரத்தை..... தமிழ்வல்ல முனி தடவலும்' *(கந்தபு. வில்வலன்வாதாபிவ. 31).*

*[சடம் → சடர் → சடரம்]*

**சடரயாதனை** *šaḍarayādaṉai*, பெ. (n.) பேறுகால வலி; labour pain.

*[சடம் → சடர்(வயிறு) + ஆதனை]*

**சடராக்கினி** *šaḍarākkiṉi*, பெ. (n.) வயிற்றுத்தீ (சாடராக்கினி) (யாழ். அக.); gastric fire.

மறுவ. சடரச்சுவாலை

*[சடம் → சடர் + அக்கினி]*

**சடராமயம்** *šaḍarāmayam*, பெ. (n.) ஒரு நோய்; a disease.

*[சடர் + ஆமயம்]*

**சடரி** *šaḍari*, பெ. (n.) சிதைவு (யாழ். அக.); being broken or spoilt.

*[சடம் → சடரி]*

**சடரூபம்** *šaḍarūbam*, பெ. (n.) அறிவற்ற பொருள்; matter.

*[சடம் + ரூபம்]*

த. உருவம் → Skt. rūpa → த. ரூபம்

**சடலட்சணம்** *šaḍa-laṭcaṇam,* பெ. (n.) *சடவியல்பு பார்க்க;* see *šaḍa-v-iyalbu.*

*[சட(ம்) + லட்சணம்]*

Skt. lakshṇa → த. லட்சணம்

**சடலபுடலம்** *šaḍala-puḍalam,* பெ. (n.) **பருத்திருப்பது** *(யாழ்அக.);* that which is big and stout.

*[சடலம் + புடலம். எதுகைநோக்கி வந்த மரபிணைமொழி]*

**சடலம்** *šaḍalam,* பெ. (n.) உடல் (சூடா.); body.

*[சடம் → சடலம் = உடம்பு. இது உலக வழக்கு. ஒ.நோ. படம் → படலம். சடலம் என்னும் வடிவம் வடமொழியில் இல்லை. சடலம் → சதரம் = உடம்பு (நெல்லை வழக்கு). சதரம் → சதிரம் (கொச்சைத் திரிபு) (வ.வ. 135, 136).]*

வடவர் குளிர்மை என்பதை மூலக்கருத்தாக வைத்துக் குளிர், சில்லெனல், விறைப்பு, மரப்பு, அசைவின்மை, உணர்வின்மை, உணர்ச்சியின்மை, மயக்கம், திமிர், மடமை, மந்தம், உயிரின்மை, அறிவின்மை என்று முறையே பொருள் வளர்ப்பர். அறிஞர் இதன் பொருந்தாமையை அறிந்து கொள்க. குளிர்மைப் பொருளில் வரும் ஜட என்பது சளி என்னும் தென்சொல் திரிபாகலாம்.

**சடலை**[1] *šaḍalai,* பெ. (n.) சடலபுடலம் பார்க்க (யாழ். அக.); see *šaḍala-puḍalam.*

*[சடல் → சடலை]*

**சடலை**[2] *šaḍalai,* பெ. (n.) **வீண்செயல்;** useless act. 'இந்தச் சடலைகள் வேண்டுமோதான்' *(பாடு. 71, சந்தியாசம்).*

*[சடல் → சடலை]*

**சடவத்து** *šaḍavattu,* பெ. (n.) *சடம்*[1] *பார்க்க;* see *šaḍam*[1].

*[சடம் + வத்து]*

Skt. vastu → த. வத்து

**சடவியல்வு** šaḍaviyalvu, பெ. (n.) **தன்னையும், தலைவனையும் அறிந்திருக்கும் மாயை யாக்கையின் இயல்பு;** nature of 'māyā yākkai' which knows him and God.

*[சட(ம்) + இயல்வு]*

**சடவுப்பு** *šaḍa-v-uppu,* பெ. (n.) *1.* **ஒரு வகை உப்பு;** a kind of salt. *2.* **அமரியுப்பு;** salt from urine.

*[சடம் + உப்பு]*

**சடவேர்** *šaḍavēr,* பெ. (n.) **மல்லிகை;** jasmine *(சா.அக.).*

*[சடை → சட + வேர்]*

**சடன்** *šaḍan,* பெ. (n.) **மூடன், அறிவிலி;** fool, block head. "தேகமிறு மென்றுசடர் தேம்புவதேன்" *(தாயு. பராபரக். 181).*

*[சடம் → சடன். 'ன்' – ஆ. பா. ஈறு]*

**சடாக்காரி** *šaḍā-k-kāri,* பெ. (n.) **நீர்;** water *(சா.அக.).*

**சடாகம்** *šaḍagam,* பெ. (n.) **அருநெல்லி;** star goose-berry - Phyllanthus distichus *(சா.அக.).*

**சடாகுடம்** *šaḍākuḍam,* பெ. (n.) **சடாமுடி, சடை** (இ.நு.த.); matted hair.

*[சடை→ சடா + குடம்]*

த. சடை → Skt. jaḍā

**சடாங்கன்** *šaḍāṅgaṉ,* பெ. (n.) **சடைமுடியை யுடையவன், சிவன்;** one who has matted hair, Śivaṉ.

*[சடை → சடா + அங்கன்; Skt. aṅga → த. அங்கம், அங்கம் → அங்கன்]*

**சடாடவி** *šaḍāḍavi,* பெ. (n.) **அடர்ந்த முடி;** thick matted hair. 'கமலைப்பிரான் செஞ்சடாடவிதான்' *(தனிப்பா. 1. 71:141).*

*[சடை → சடா + அடவி. அடு → அடர் → அடர்வி → அடவி = மரமடர்ந்த காடு. சடை யடர்ந்த முடி சடாடவி எனப்பட்டது.]*

த. அடவி → Skt. aṭavi

**சடாதரம்** *šaḍādaram,* பெ. (n.) **அருநெல்லி;** star goose-berry *(செ.அக.).*

**சடாதரன்** *šaḍā-daraṉ,* பெ. (n.) *1.* **சடை யுடையவன், சிவன்;** Śivaṉ, as having matted hair. *2.* **வீரபத்திரன்** (பிங்.); Virabhadran.

*[சடை → சடா + தரன்]*

Skt. dhara → த. தரன்

**சடாதரி**[1] *šaḍā-dari,* பெ. (n.) **சடையை யுடையாள், மலைமகள்** (பார்வதி); Pārvadi.

*[சடை → சடா + தரி]*

Skt. dhari → த. தரி

**சடாதரி**[2] *šaḍā-dari,* பெ. (n.) *1.* சவுரிக்கொடி; virginian silk - Peripioca asclepidoe. *2.* சவுக்கு; whip tree - Casuariana litoralis *(சா.அக.).*

*[சடை → சடா + தரி. சடை முடியைப் போன்ற நீண்ட இலைகளையுடையது.]*

**சடாதலிகம்** *šaḍādaligam,* பெ. (n.) *1.* மகிழமரம்; ape-face flower - Mimusops elengi. *2.* மொந்தன் வாழை; large plantain tree *(சா.அக.).*

**சடாதாரி** *šaḍādāri,* பெ. (n.) *1.* சடைமுடி உடையவன்; a person with matted hair. *2.* சிவன்; Śivan̲. "தாமமே தந்து சடாதாரி நல்கானேல்" *(பதினொ. திருக்கைலா. ப. 40). 3.* வரிக்கூத்து வகை *(சிலப். 3: 13, உரை);* a masquerade dance. *4.* அம்மையார் கூந்தல் *(மலை.);* Seeta's thread.

*[சடை → சடா + தாரி]*

Skt. dhāri → த. தாரி

**சடாநாதர்** *šaḍānādar,* பெ. (n.) ஆனந்தத் தாண்டவபுரம் என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டருளிய சிவன்; Lord Śiva of Ananda Thandavapuram.

*[சடை → சடா + நாதர்]*

**சடாபடம்** *šaḍāpaḍam,* பெ. (n.) எருக்கு; madar *(செ.அக.).*

**சடாபலம்** *šaḍāpalam,* பெ. (n.) பனை *(மூ.அ.);* palmyra tree.

*[சடை → சடா + பலம்]*

**சடாபாரம்** *šaḍā-bāram,* பெ. (n.) சடைக்கற்றை; heavy matted hair, as of Sanyasin *(செ.அக.).*

*[சடை → சடா + பாரம்]*

Skt. bhāra → த. பாரம்

**சடாபூதம்** *šaḍābūdam,* பெ. (n.) சடாமாஞ்சில்; Indian spikenard - Valeriana jatamansi *(சா.அக.).*

*[சடை → சடா + பூதம்]*

**சடாமகுடப்பெருமாள்** *šaḍā-maguḍa-p-perumāḷ,* பெ. (n.) நெல்லை மாவட்டம், பெருங் குளத்தில் உள்ள திருவழுதீசுவர ஆலயத்தின் வழிபாட்டுக் கடவுள்; presiding deity of the temple Tiruvaḻudīšvara in Peruṅgulam in Tirunelvēli district. "திருவழுதி வளநாட்டுப் பெருங்குளத்துத் திருவழுதீஸ்வரத்து ஜடாமகுடப் பெருமாளுக்கு வேண்பு நாட்டு நால்வர்" *(தெ. க. தொ. 14. கல். 59. 2).*

*[சடைமகுடம் → சடாமகுடம் + பெருமாள்]*

**சடாமகுடம்** *šaḍā-maguḍam,* பெ. (n.) சடைமுடி; matted hair coiled into a crown. "சடா மகுடத்திலே கங்கை யடங்கும்" *(தனிப்பா. 1, 5:23).*

*[சடை → சடா + மகுடம்]*

**சடாமகுடன்** *šaḍā-maguḍan̲,* பெ. (n.) சிவன்; Lord Śivan̲.

*[சடை → சடா + மகுடன். மகுடம் → மகுடன்]*

**சடாமாஞ்சி** *šaḍāmāñji,* பெ. (n.) செடி வகை *(வின்.);* spikenard herb, Nardostachys jatamansi.

மறுவ. சடாமாஞ்சில்

ம. சடாமாஞ்சி

*[சடை→ சடா + மாஞ்சி]*

**சடாமாஞ்சில்** *šaḍāmāñjil,* பெ. (n.) நமத்தம் என்கிற புல்லினம்; valarian or Indian spikenard - Valerian jatamansi *(சா.அக.).*

மறுவ. சடாசஞ்சி, சடாமாசி. பெருங்கோரைக் கிழங்கு, பெருங்கோரை

*[சடை→ சடா + மாஞ்சில்]*

இது ஒரு கடைச் சரக்கு; சடையுடன் இருக்கும்; சற்று மஞ்சள் சாயலான கறுப்பு நிறம் உடையது; காரம் நிறைந்தது.

**சடாமுடி** *šaḍā-muḍi,* பெ. (n.) சடாமகுடம் பார்க்க; see *šaḍā-maguḍam.* "மின்னெறி சடாமுடி" *(நன்னெறி, காப்பு).*

*[சடை → சடா + முடி]*

**சடாமுனி** *šaḍā-mun̲i,* பெ. (n.) பேய் வகை; a kind of demon *(செ.அக.).*

*[சடை → சடா + முனி]*

**சடாமூலம்** *šaḍā-mūlam,* பெ. (n.) சடாவேரி பார்க்க; see *šaḍā-vēri.*

*[சடை → சடா + மூலம்]*

**சடாய்**[1]**-த்தல்** *šaḍāy-,* 4 செ.குவி. (v.i.) செழித்தல் *(வின்.);* to grow thick, bushy, leafy.

க. சடாயுத, சடாயித, சடாய்த (மிகுதியாதல்)

*[சடை → சடாய்-,]*

**சடாய்**[2]**-த்தல்** *šaḍāy-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* துமுக்கி (துப்பாக்கி) கெட்டித்தல்; to load, as a gun. *2.* அதட்டுதல்; to rebuke, to chide.

*[சடாய் → சடாய்த்தல் (வ.வ. 137)]*

**சடாய்³-த்தல்** *šaḍāy-, 4* செ.கு.வி. (v.i.) பெருமிதமாய் பேசுதல்; to talk tall, to boast.

*[சடாய்-² → சடாய்-³]*

**சடாய்⁴** *šaḍāy,* பெ. (n.) சடாயு பார்க்க; see *šaḍāyu.* 'புறங்கண்ட சடாயென்பான்' *(தேவா. 159, 6).*

**சடாயு** *šaḍāyu,* பெ. (n.) இராம கதையில் கூறப்படும் ஒரு கழுகு வேந்தன் *(கம்பரா.);* a vulture-king who figures in Ramayana.

*[சடை → சடா → சடாயு]*

த. சடாயு → Skt. jaḍāyu

**சடாயுபுரம்** *šaḍāyu-puram,* பெ. (n.) புள்ளிருக்குவேளூர் (வைத்தீசுவரன் கோயில்) என்னும் திருத்தலத்தின் மறுபெயர்; one of the name of Vaittīsvaraṉ koil.

*[சடை → சடா → சடாயு + புரம்]*

**சடார்புடாரெனல்** *šaḍārbuḍār-eṉal,* பெ. (n.) விரைவை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying hasteness.

*[சடார் + புடார் + எனல்]*

**சடாரட்டியெனல்** *šaḍār-aṭṭi-y-eṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr. signifying haste.

*[சடார் + அட்டி + எனல்]*

**சடாரி¹** *šaḍāri,* பெ. (n.) *1.* சடகோபன்; a Vaiṣṇava saint. *2.* சடகோபம் பார்க்க; see *šaḍagōbam* (செ.அக.).

*[சடை → சடாரி]*

**சடாரி²** *šaḍāri,* பெ. (n.) கவசம் (சூடா.); coat of mail.

*[சடை → சடா → சடாரி]*

**சடாரிடல்** *šaḍāriḍal,* பெ. (n.) சடாரெனல் பார்க்க (வின்.); see *šaḍār-eṉal.*

மறுவ. சடாரெனல்

*[சடார் + இடல்]*

**சடாரெனல்** *šaḍār-eṉal,* பெ. (n.) *1.* ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying crackling sound. *2.* திடீரென நிகழ்வதைக் குறிக்கும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying all at once, suddenly, used of rising or a sneezing etc.

க. சடக்கனெ

*[சடார் + எனல்]*

**சடாலம்¹** *šaḍālam,* பெ. (n.) ஆலமரம் (சங்.அக.); banyan tree.

*[சடை → சடா + ஆலம்]*

த. சடாலம் → Skt. jatāla

**சடாலம்²** *šaḍālam,* பெ. (n.) தேன்கூடு (சங்.அக.); honey comb.

*[சடை → சடா → சடாலம்]*

**சடாலு** *šaḍālu,* பெ. (n.) செண்பகப்பூ; champak flower - Michelia champaca (சா.அக.).

*[சடை → சடா → சடாலு]*

**சடாவல்லவன்** *šaḍā-vallavan,* பெ. (n.) சடை முறையில் மறைப்பகுதிகளைச் சொல்வதில் வல்லவன்; one clever at reciting Vēdic texts according to jaṭā arrangement. இவன் சடாவல்லவனென்பான் *(பிரபோத. 11: 5).*

*[சடை → சடா + வல்லவன்]*

**சடாவு** *šaḍāvu,* பெ. (n.) ஏற்றம் (P.T.L.); ascent, increase.

H. chaṭā

*[சடைத்தல் = அடர்ந்து வளர்தல். சடை→ சடா; சடாய்த்தல் = செழித்தல். அடர்ந்து வளர்தல். சடா → சடாவு = வளர்ச்சி, ஏற்றம்]*

**சடாவேரி** *šaḍāvēri,* பெ. (n.) தண்ணீர்விட்டான்; a common climber with many thick fleshy roots (செ.அக.).

*[சடை → சடா + வேரி. வேர்+இ = வேரி]*

**சடி** *šaḍi,* பெ. (n.) *1.* சடை; matted lock of hair. *2.* துப்பட்டி; sheet of cloth.

*[சடைத்தல் = நெருங்குதல், அடர்தல், நெருங்கிக்கிடத்தல். சடை → சடா. சடாய்த்தல் = அடர்ந்து வளர்தல். சடா→ சடி = சடை, அடர்த்தியாக நூலிழையால் நெய்த போர்வை]*

**சடிதி¹** *šaḍidi,* கு.வி.எ. (adv.) விரைவாக; quickly, instantly, at once. "வையமேற் சடிதி வீழ்ந்து" *(சேதுபு. சீதைகுண். 20).*

*[சடுதி → சடிதி]*

**சடிதி²** *šaḍidi,* பெ. (n.). சடிதிவு பார்க்க (வின்.); see *šaḍidivu.*

*[சடி → சடிதி]*

**சடிதியம்** *šadidiyam,* பெ. (n.) குறிஞ்சான்; Indian ipecacuauha - Tylophora asthamatica *(சா அக.).*

**சடிதிவு** *šadidivu,* பெ. (n.) ஏலத்தோல் *(வின்.);* cardamom husk.

*[சடி → சடிதிவு]*

**சடிபஞ்சு** *šadipañju,* பெ. (n.) மாதுளை; pomegranate - Punica granatum *(சா அக.).*

**சடிரை** *šadirai,* பெ. (n.) வெண்தகரை; white senna; sulphur-flowered senna - Cassia glauca *(சா அக.).*

**சடிலம்**[1] *šadilam,* பெ. (n.) அரிமா; lion.

*[சடைத்தல் = அடர்ந்து கிளைத்தல். சடை= கற்றை, இயற்கையான மயிர்க்கற்றை. சடை → சடி → சடிலம். சடிலம் = நெருக்கம், நெருங்கிய பிடரி மயிரினையுடையது]*

**சடிலம்**[2] *šadilam,* பெ. (n.) *1.* செறிவு *(திவா.);* closeness, thickness, denseness, as of hair, foliage. *2.* சடை[4] பார்க்க; see *šadai*[4]. "வெண்பிறைச் சடிலக்கோவே" *(தாயு. சொல்லற் கரிய. 5). 3.* குதிரை *(பிங்.);* horse, as having a mane. *4.* வேர்; root. "உத்தாமணிச் சடிலத்தோடு" *(தைலவ. தைல. 93).*

*[சடு → சடி → சடிலம்]*

**சடிலமஞ்சில்** *šadilamañjil,* பெ. (n.) சடாமாஞ்சில் பார்க்க; see *šadāmāñjil* (சா அக).

*[சடாமாஞ்சில் → சடிலமஞ்சில்]*

**சடிலாகியம்** *šadilāgiyam,* பெ. (n.) மூக்கொற்றிப் பூடு; pointed-leaved hogweed *(சா அக.).*

**சடிலை** *šadilai,* பெ. (n.) சடாமாஞ்சி (தைலவ. தைல. 14); spikenard.

*[சடிலமஞ்சில் → சடிலை]*

த. சடிலை → Skt. jaṭila

**சடினம்** *šadinam,* பெ. (n.) *1.* வசம்பு (மலை.); sweet flag. *2.* நெட்டிவேர் (மூ அ.); root of the sola-pith.

*[சடை → சடி → சடினம்.]*

**சடு**[1] *šadu,* பெ. (n.) வயிறு (யாழ். அக.); belly.

*[சடம் → சடு]*

**சடு**[2] *šadu,* பெ. (n.) ஆய்வு; examination, inspection.

*[அடுதல் = கருதுதல். அடு → சடு]*

**சடுக்கா** *šadukkā,* பெ. (n.) *1.* சடுக்கா வண்டி; juṭkā, a small cart. *2.* விரைவு; quickness, swiftness.

*[சடு → சடுக்கா (மு. தா. 62)]*

**சடுகுடு** *šadugudu,* பெ. (n.) சிறுவர் விளையாட்டு (G.Tn.D.I. 105); a boy's game.

ம. சடுகுடு

*[சடு + குடு. ஒலிக்குறிப்புச் சொல், அவ்வாறு சொல்லிக் கொண்டு ஆடும் விளையாட்டு]*

ஆடுவாருள் ஒவ்வொருவனும் எதிர்க்கட்சியின் எல்லைக்குட் சென்று, சடுகுடு என்று சொல்லியாடும் ஆட்டு, சடுகுடு எனப்பட்டது. இது பாண்டி நாட்டில் குடட்டி என்றும், வடசோழ நாட்டில் பலிச்சப்பிளான் அல்லது பலீன் சடுகுடு என்றும் பெயர்பெறும். சடுகுடு என்பது தென் சோழ நாட்டிலும் கொங்கு நாட்டிலும் இதற்கு வழங்கும் பெயராம்.

ஆடுவாரெல்லாரும், உத்திகட்டிச் சமத் தொகையான இரு கட்சியாகப் பிரிந்து கொள்வர். இரு கட்சியார் இடத்திற்கும் இடையில் ஒரு குறுக்குக் கோடு கீறப்பெறும். சோழ நாட்டார் இதை உப்புக்கோடு என்பர்.

முதலாவது எந்தக் கட்சியார் பாடிவருவது என்று ஏதாவதொரு வகையில் தீர்மானிக்கப் பெறும். அங்ஙனம் தீர்மானிக்கப்பெற்ற கட்சியாருள் ஒருவன் உப்புக் கோட்டைத் தாண்டி எதிர்க்கட்சி யெல்லைக்குட் புகுந்து 'சடுகுடு சடுகுடு' என்றோ "சடுகுடு குடு குடு குடு" என்றோ 'பலீஞ் சடுகுடு' என்றோ, இடைவிடாது பாடிக்கொண்டு எதிர்க்கட்சியாருள் ஒருவனையோ, பலரையோ தொட்டுவிட்டு அவனிடமேனும் அவரிடமேனும் பிடி கொடாது தன் கட்சி எல்லைக்குள் வந்துவிட வேண்டும். அங்ஙனம் வரும்வரை பாடுவதை நிறுத்தக்கூடாது. அவனால் தொடப்பட்ட வரெல்லாம் தொலைந்துவிடுவர். அவர் ஆட்டிற் கலவாது ஒரு புறமாய்ப் போயிருத்தல் வேண்டும். அதன்பின், தொடப்பட்ட கட்சியருள் ஒருவன் இங்ஙனமே எதிர்க் கட்சியெல்லைக்குட் புகுந்து ஆடிச் செல்ல வேண்டும்.

சடுகுடு என்னும் விளையாட்டு, வெட்சிப் போரினின்று தோன்றியதாகத் தெரிகின்றது. இரு கட்சியாரும் வெட்சி மறவரும் கரந்தை மறவரும் போல்வர். இடைக்கோடு, அவ்விரு சாரார் நாட்டிற்கும் இடைப்பட்ட எல்லைப் புறம் போன்றது. 'பலிஞ்சடுகுடு' என்று பாடுவது, காளிக்குப் பலியிடுவதையும் துடி

கொட்டுவதையும் குறிப்பது. (துடிப்பறையின் சிறியவகை சடுகுடுக்கை அல்லது குடுகுடுப்பை என்று பெயர் பெற்றிருத்தல் காண்க). இரு கட்சியாரும் தத்தம் எதிர்க்கட்சியாரைப் பிடித்து நிறுத்துவது நிரை கவர்தலையும் நிரை மீட்டலையும் நிகர்ப்பது.'பட்டுப்போதல்' என்னும் வழக்கு வெட்சிப்போரில் வீழ்ந்திறத்தலைக் குறிப்பது. (த. வி. 57-60).



சடுகுடு விளையாட்டு

**சடுத்தக்காரன்** *šaḍutta-k-kāraṉ*, பெ. (n.) கட்டாயப்படுத்துவோன் (வின்.); one who urges or compels one who is importunate.

*[சடுத்தம் + காரன்]*

**சடுத்தம்**[1] *šaḍuttam*, பெ. (n.) 1. போட்டி (வின்.); rivalry, competition. 2. போராட்டம்; dispute. சடுத்தத்திலே வந்து விழுந்தது. 3. பூட்கை; challenge. "ஒருவருக்கொருவர் சடுத்தம் பேசி" (இராமநா. உயுத். 16). 4. கட்டாயப்படுத்துகை (வின்.); compelling, urging, importuning, being obstinate.

*[சடு → சடுத்தம்]*

**சடுத்தம்**[2] *šaḍuttam*, பெ. (n.) விரைவு, உடனடித் தேவை; urgency.

*[சடு → சடுதி → சடுத்தம்]*

**சடுத்தம்பூட்டு-தல்** *šaḍuttam-pūṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) வலக்காரமாகப் புகுத்துதல்; to thrust by force.

*[சடுத்தம் + பூட்டு-,]*

**சடுத்தி** *šaḍutti*, பெ. (n.) ஆய்வு (இ.வ.); examination, inspection, review, search.

*[சடு → சடுத்தி]*

**சடுதி**[1] *šaḍudi*, பெ. (n.) சடுத்தி பார்க்க (கொ.வ.); see *šaḍudi*.

*[சடுத்தி → சடுதி]*

**சடுதி**[2] *šaḍudi*, கு.வி.எ. (adv.) சடிதி[1] பார்க்க (கொ.வ.); see *šaḍidi*.

*[சடு → சடுதி (முதா. 62)]*

**சடுதிபார்-த்தல்** *šaḍudi-pār-*, 4 செகுன்றாவி. (v.t.) தேர்வு பண்ணுதல்; to review, muster as forces as inspect, examine accounts.

*[சடுதி + பார்-,]*

**சடுதியாக** *šaḍudi-yāga*, வி.எ. (adv.) விரைவாக; quickly, fast. இந்த வேலையைச் சடுதியாக முடித்துவிட்டு வீட்டுக்குப் போகலாம்.

*[சடுதி + ஆக]*

**சடுலம்**[1] *šaḍulam*, பெ. (n.) நடுக்கம் (யாழ்.அக.); trembling, shaking.

*[சடு = விரைவு. சடு → சடுலம். தொடர்ந்து இயங்கிக் கொண்டிருப்பது. இயங்குவது போல் அசையும் நடுக்கம்]*

த. சடுலம் → Skt. caṭula

**சடுலம்**[2] *šaḍulam*, பெ. (n.) சடுலை பார்க்க; see *šaḍulai* (செ.அக.).

*[சடு = விரைவு. சடு → சடுலம் = மிக வேகமாக பாய்வது, அவ்வாறு பாயும் மின்னல்]*

**சடுலவாரவம்** *šaḍula-v-āravam*, பெ. (n.) சடுலவோசை பார்க்க; see *šaḍula-vōšai*. "கழை முதலிய தருக்களின் சடுலவாரவ மிஞ்சி" (பாரத. காண்டவ. 25).

*[சடுலம் + அரவம்]*

**சடுலவோசை** *šaḍula-vōšai*, பெ. (n.) தீக்கொழுந்து முதலியவற்றின் அசைவினால் எழும் ஒலி; tremulous sound, as of leaves in a forest flames of fire, etc. "வெடித்தெழு சடுல வோசையின்" (பாரத. காண்டவ. 20).

*[சடுலம் + ஓசை]*

**சடுலை** *šaḍulai*, பெ. (n.) மின்னல் (யாழ்.அக.); lightning.

*[சடுலம் → சடுலை]*

**சடை**[1]**-தல்** *šaḍai-*, 2 செகு.வி. (v.i.) 1. சோர்வடைதல் (இ.வ.); to become weary, disheartened, dispirited. 2. உள்ளடங்குதல் (வின்.); to be shut in. 3. பயிர் முதலியன நறுங்கிப் போதல், வளர்ச்சி தடைபட்டுப் போதல்; to be stunted in growth, as trees, plants.

ம. சடயுக

*[சட்டு → சடை (முதா. 117)]*

**சடை²-தல்** *šaḍai-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஆணி முதலியன தறைதல்** (வின்.); to flatten, as the head or point of a nail by repeated blows; to clinch, rivet. *2.* தடுத்தல் (யாழ்ப்.); to stop the progress, to interrupt, arrest, check, prevent, hinder.

*[(சுட்டு) → சட்டு → சடை]*

**சடை³-த்தல்** *šaḍai-*, 4 செ.குவி. (v.i.) **சடை¹-1** பார்க்க; see *šaḍai¹*-1. "கொடுக்கக் கை சடைப் பாரில்லை" (குற்றா. தல. தக்கன் வேள்விச். 80).

*[சுட்டு → சட்டு → சடை → சடைதல் (மு.தா. 117)]*

**சடை⁴-த்தல்** *šaḍai-*, 4 செ.குவி. (v.i.) *1.* **அடர்ந்து கிளைத்தல்** (யாழ்.அக.); to grow densely and luxuriantly. *2.* **பெரியதாதல்;** to grow big.

*[சடாய் → சடை → சடைதல் (வ.வ. 138)]*

**சடை⁵** *šaḍai*, பெ. (n.) *1.* **நெட்டி** (பிங்.); sola pith. *2.* **அடைப்பு;** stopper of a bottle, cork.

*[சடாய் → சடை (வ.வ. 138)]*

**சடை⁶** *šaḍai*, பெ. (n.) *1.* **சடையாக அமைந்த மயிர்முடி;** matted locks of hair. "விரிசடைப் பொறையூழ்த்து" (பரிபா. 9:5). "சடைத் தம்பிரானுக்குச் சாதம் இல்லாதபோது மொட்டைத் தம்பிரானுக்கு மோர் எங்கே கிடைக்கும்' (பழ.). *2.* **பின்னிய கூந்தல்** (பிங்.); plaited hair. *3.* **அடர்ந்த மயிர்;** bushy, shaggy or thick hair. *4.* **வேர்;** roots fibrous roots, as in a moss. "கடும்பழிச் சடையலைந்து" (கல்லா. 82. 3). *5.* **விழுது** (இலக்.அக.); aerial roots. *6.* **இலாமிச்சை** (தைலவ.தைல. 98); cuscus-grass. *7.* **வெட்டிவேர்** (தைலவ. தைல. 98); black cuscus-grass. *8.* **சடாமாஞ்சி** (தைலவ. தைல. 6) பார்க்க; see *šaḍāmāñji*. *9.* **ஆறாவது விண்மீன்** (பரிபா. 11:2, உரை); the sixth nakṣatra. *10.* **ஆடவை ஓரை** (பரிபா. 11: 2, உரை); Gemini. *11.* **மறையோதும் முறைகளுள் ஒன்று;** a method of recitting the Vēdā in which a pair of words is repeated thrice, one repetition being in inverted order. "சுரம்பதங் கிரமஞ் சடை" (பிரபோத. 11:4). *12.* **கற்றை;** thick bunch. *13.* **ஆணியின் கொண்டை** (யாழ்ப்.); flat head of a nail. *14.* **பெரியது;** which is big (செ.அக.).

**மறுவ.** குடிலம், வேணி, கோடீரம், பின்னல், சடிலம்

ம. சட, சட; க. சடெ, சடெ; தெ. சட; து. சடெ, செடெ; குட., பட. சடெ; கோத. செட்வ்

*[சள்ளுதல் = சிக்குதல். சழிதல் = நெருங்குதல், அடர்தல், நெருங்கிக் கிடத்தல். "திங்கட் டொல்லரா கழிந்த சென்னி" (தேவா. 980: 6). சடாய்த்தல் = செழித்தல், அடர்ந்து கிளைத்தல். சடாய் → சடை = கற்றை, இயற்கையான மயிர்க் கற்றை, கற்றையான சடைப்பின்னல். சடை = சடாய். சடைச் சம்பா, சடைச் சாமை, சடைப்பயறு, சடைப் பருத்தி, சடையவரை என்பன கற்றையான அல்லது கொத்தான பொருள்களை உணர்த்தும். சடைமுடி, சடைவிழுதல் சடையாண்டி, சடையன் என்னும் சொற்களில், சடை என்பது இயற்கையாகவோ எண்ணெய் தேய்க்காமையாலோ ஏற்படும் மயிர்க்கற்றையைக் குறிக்கும்.*

*வடவர் ஜட் (**jaṭ**) என்னும் சொல்லை மூலமாகக் காட்டுவர். அது சிக்கற் பொருளையுணர்த்துதலால் சடாய் என்பதன் திரிபே. (வ.வ. 136)]*

**சடை⁷** *šaḍai*, பெ. (n.) **400 இழைகள் கொண்ட நூற்றொகுதி** (செங்கை.); skein of thread.

மறுவ. சிலுப்பை

*[சடாய் → சடை = கற்றை, நூற்றொகுதி]*

**சடைக்கஞ்சா** *šaḍai-k-kañjā*, பெ. (n.) **கஞ்சா வகை** (சங்.அக.); a variety of Bengal hemp.

*[சடை + கஞ்சா]*

**சடைக்கட்டை** *šaḍai-k-kaṭṭai*, பெ. (n.) சடைகட்டை பார்க்க; see *šaḍai-kaṭṭai*.

*[சடை + கட்டை]*

**சடைக்கணவாய்** *šaḍai-k-kaṇavāy*, பெ. (n.) **கணவாய் மீன்வகை** (வின்.); a species of cuttle-fish.

*[சடை + கணவாய்]*

**சடைக்கந்தம்** *šaḍai-k-kandam*, பெ. (n.) *1.* **வசம்பு;** sweet flag. *2.* **கந்தகம்;** sulphur.

*[சடை + கந்தம்]*

**சடைக்கரப்பான்** *šaḍai-k-karappāṉ,* பெ. (n.) ஒரு வகைக் கரப்பான் நோய்; a crowded skin eruption - Strophulous confertus *(சா.அக.).*

*[சடை + கரப்பான்]*

**சடைக்காந்தாரி** *šaḍai-k-kāndāri,* பெ. (n.) காட்டுச்சாரணை பார்க்க; see *kāṭṭu-c-cāraṇai (சா.அக.).*

*[சடை + காந்தாரி]*

**சடைக்கால்** *šaḍai-k-kāl,* கொடிக்காற்பயிர் அழிபட்டு வரும் நிலம் (W.G.); land of an abandoned betel-garden.

*[சடை¹ + கால்]*

**சடைக்கிரந்தி** *šaḍai-k-kirandi,* பெ. (n.) கரப்பான் வகை *(தஞ்.சர.* iii. *92);* a kind of eruption.

*[சடை + கிரந்தி]*

**சடைக்குச்சு** *šaḍai-k-kuccu,* பெ. (n.) தலை மயிரோடு பின்னித் தொங்கவிடுவதாய் இரண்டு மூன்று குச்சுக்களை உடைய அணி; hair-ornament with pendants composed of two or three small gold cups *(செ.அக.).*

க. சடெகுச்சு

*[சடை + குச்சு]*



சடைக்குச்சு

**சடைக்குஞ்சம்** *šaḍai-k-kuñjam,* பெ. (n.) சடைக்குச்சு பார்க்க (இ.வ.); see *šaḍai-k-kuccu.*

*[சடை⁶ + குஞ்சம்]*

**சடைக்குட்டம்** *šaḍai-k-kuṭṭam,* பெ. (n.) யானைக் குட்டம்; a kind of leprosy with thickening of the skin *(சா.அக.).*

*[சடை² + குட்டம். குள் → குட்டு → குட்டம் = குட்டை, குட்டி, விரல்களும் மூக்கும் அழுகிக் குட்டையாகும் நோய்]*

த. குட்டம் → Skt. kuṣṭa

**சடைக்குலம்** *šaḍai-k-kulam,* பெ. (n.) வெள்ளைக் குந்திரிக்கம்; white dammer - Valeria indica *(சா.அக.).*

*[சடை + குலம்]*

**சடைக்குழல்** *šaḍai-k-kuḻal,* பெ. (n.) இரட்டை எருதுகளால் இழுக்கப்படும் ஏர் வகை; seed-drill or drill-plough drawn by a pair of the bullocks *(செ.அக.).*

*[சடை + குழல். சதை → சடை]*

**சடைக்குறண்டி** *šaḍai-k-kuṟaṇḍi,* பெ. (n.) சுமாலிக் குறண்டி; a species of caranday - Lepidagathis genus *(சா.அக.).*

*[சடை + குறண்டி]*

**சடைக்கை** *šaḍai-k-kai,* பெ. (n.) இலைக் கள்ளி; leaf-spurge - Euphorbia neirirfolia *(சா.அக.).*

*[சடை + கை]*

**சடைக்கொடி** *šaḍai-k-koḍi,* பெ. (n.) நெட்டி; pith plant *(சா.அக.).*

*[சடை⁵ + கொடி]*

**சடைக்கோங்கு** *šaḍai-k-kōṅgu,* மஞ்சட் கோங்கு *(சித். அக);* a species of common caung.

*[சடை⁴ + கோங்கு]*

**சடைகட்டு-தல்** *šaḍai-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) பின்னிய சடைமுடியைத் தூக்கிக் கட்டுதல்; to plait tresses.

க. சடெகட்டு

*[சடை⁶ + கட்டு]*

**சடைகட்டை** *šaḍai-kaṭṭai,* பெ. (n.) மீன்பிடி வலையுடன் அடையாளத்தின் பொருட்டு கட்டப்பட்டிருக்கும் மிதவை *(செங்கை);* floating log tied with fishing net.

*[சடை + கட்டை]*

**சடைச்சம்பா** *šaḍai-c-cambā,* பெ. (n.) கற்றை கற்றையாகக் காய்க்கும் சம்பா நெல் வகை; a variety of šambā paddy bearing grains in thick clusters *(செ.அக.).*

ம. சடச்சம்பா

*[சடை + சம்பா]*

**சடைச்சி** *šadaicci,* பெ. (n.) *1.* நெட்டி *(மலை.);* sola pith. *2.* கீரிப்பூண்டு *(L.);* Indian snake-root. *3.* புளியாரை *(மூஅ.);* yellow wood-sorrel. *4.* பாசிவகை *(பிங்.);* a kind of moss. *5.* மரவகை; common Indian linden. *6.* பொன்னிமிளை என்னும் செவ்வெண்மையான கல்வகை *(வின்.);* a mineral.

ம. சடச்சி

[சடை$^5$ → சடைச்சி]

**சடைச்சிகை** *šadai-c-cigai,* பெ. (n.) மீன்கொல்லி; fish-killer - Anamirta cocculus *(சாஅக.).*

**சடைச்சிகி** *šadai-c-cigi,* பெ. (n.) நீர்ச்சுண்டி floating sensitive plant - Neptunia oberacca *(சாஅக.).*

**சடைச்சிகிரி** *šadai-c-cigiri,* பெ. (n.) மிளகாய்; chilli - Capsicum fruitescens *(சாஅக.).*

**சடைச்சிவேர்** *šadaiccivēr,* பெ. (n.) பூடுவகை *(சங். அக.);* a plant - Achyranthes corymbosa.

[சடை → சடைச்சி + வேர்]

**சடைச்செந்நெல்** *šadai-c-cennel,* பெ. (n.) சடைச்சம்பா பார்க்க; see *šadai-c-cambā.* 'சடைச்செந்நெல் பொன்விளைக்கும்... நாடு' *(நள. சுயம்வர.. 68).*

[சடை + செந்நெல்]

**சடைத்தும்பி** *šadai-t-tumbi,* பெ. (n.) பெரிய தும்பி இன மீன் *(மீனவ.);* a large kind of tumbi (scatish) fish.

[சடை + தும்பி]

**சடைத்தும்பை** *šadai-t-tumbai,* பெ. (n.) முடித் தும்பை; a kind of leuces plant with thick set of flowers *(சாஅக.).*

[சடை + தும்பை]

**சடைத்தேங்காய்** *šadai-t-tēngāy,* பெ. (n.) நார் மிகுந்த தேங்காய் *(யாழ்ப்.);* coconut whose husk abounds in fibres.

[சடை + தேங்காய்]

**சடைநவ்வல்** *šadai-navval,* பெ. (n.) நரிநவ்வல் அல்லது சிறுநாவல்; ruddy black plum - Eugenia rubicunda *(சாஅக.).*

[சடை + நவ்வல்]

**சடைநாகம்** *šadai-nāgam,* பெ. (n.) மகளிர் தலையணி; a woman's hair-ornament *(செஅக.).*

க. சடெநாகர

[சடை + நாகம். நல்லப்பாம்பு படம் பொறித்த பொன்னாலான, சிறுவட்ட வடிவத் தலையணி]

**சடைநாங்கில்** *šadai-nāngil,* பெ. (n.) பெருநாங்கில் என்னும் பெரிய இலைகளையுடைய இருள்மரம்; large-leaved ironwood - Mesua (genus) *(சாஅக.).*

[சடை$^6$ + நாங்கில்]

**சடைநாய்** *šadai-nāy,* பெ. (n.) உடலில் மயிரடர்ந்துள்ள நாய்வகை; a species of dog having shaggy hair.

[சடை$^6$ + நாய்]

**சடைநாரை** *šadai-nārai,* பெ. (n.) தலைப் பகுதியில் சடைபோன்ற நீண்ட இறகுகள் உடைய, செம்மஞ்சள்நிறக் கடற்பறவை *(மீனவ.);* reddish yellow coloured bird, which has matted hair-like portion on top of its wings.

[சடை$^6$ + நாரை]



சடை நாரை

**சடைநெத்திலி** *šadai-nettili,* பெ. (n.) நெத்திலி மீனிற் பெரியது *(மீனவ.);* big nettili fish.

[சடை$^4$ + நெத்திலி]

**சடைப்பயறு** *šadai-p-payaru,* பெ. (n.) பயறு வகை *(L.);* tufted green-gram.

[சடை$^4$ + பயறு]

**சடைப்பருத்தி** *šaḍai-p-parutti,* பெ. (n.) செம்மண்ணில் பயிராகும் அடுக்குப்பருத்தி (G.Sm.D.I.i,226); a superior kind of cotton raised in red loam.

க. சடெகத்தி

[சடை[4] + பருத்தி]

**சடைப்பாசி** *šaḍai-p-pāši,* பெ. (n.) சடைபோல் தடித்திருக்கும் பாசிவகை; a kind of moss.

[சடை[4]+ பாசி]

**சடைப்பில்லை** *šaḍai-p-pillai,* பெ. (n.) சடைவில்லை பார்க்க; see *šaḍai-villai.*

க. சடெபில்லை; தெ. சடபில்ல.

[சடை[6] + பில்லை]

**சடைப்பின்னல்** *šaḍai-p-pinnal,* பெ. (n.) ஒன்றோடொன்று நெருங்கிப்பிணைந்திருப்பது; intertwining like matted locks. 'கொடிகள் சடைப்பின்னலாகக் கிடக்கின்றன' (உ.வ.).

[சடை[6] + பின்னல்]

**சடைப்புகையிலை** *šaḍai-p-pugaiyilai,* பெ. (n.) இலை அதிகமாக வளரும் புகையிலை வகை; a kind of tobacco plant with thick set of leaves (சா.அக.).

[சடை[4] + புகையிலை]

**சடைப்புல்** *šaḍai-p-pul,* பெ. (n.) புல்வகை (M.M. 3ll); hairy grass.

[சடை[4] + புல்]

**சடைப்பூச்சி** *šaḍai-p-pūcci,* பெ. (n.) கம்பளிப் பூச்சி வகை (வின்.); a kind of caterpillar.

[சடை[6] + பூச்சி]

**சடைப்பூம்பாதிரி** *šaḍai-p-pūmbādiri,* பெ. (n.) மிகுதியாய்ப் பூக்கும் பாதிரிமரம்; trumpet flower tree with dense flowers - Sterlospermum chelonoides (சா.அக.).

[சடை + பூம்பாதிரி]

**சடைப்பூரான்** *šaḍai-p-pūrān,* பெ. (n.) பூரான் வகை; a kind of centipede.

[சடை[6] + பூரான்]

**சடைப்பேய்** *šaḍai-p-pēy,* பெ. (n.) சடை முடியுடைய பேய்; devil or goblin which has matted hair.

மறுவ. முனி

[சடை[6] + பேய். பேபே என்பது அச்சக் குறிப்பு. பே = அச்சம். பே → பேம் = அச்சம். பே → பேய் = அச்சம், அஞ்சப்படும் ஆவி]

**சடைப்பொருவா** *šaḍai-p-poruvā,* பெ. (n.) ஒரு வகைக் கடல்மீன்; a kind of sea fish (மீனவ.).

[சடை + பொருவா]

**சடைபற்று-தல்** *šaḍai-paṟṟu-,* 5. செ.கு.வி. (v.i.) அடர்த்தியாதல் (வின்.); to become thick as of hair, leaves, etc.

[சடை[4] + பற்று-,]

**சடைபின்னு-தல்** *šaḍai-pinnu-,* 5 செ.கு.வி. (v.i.) தலைமயிரைப் பிரிவுகளாக்கி அவை ஒன்றுடன் ஒன்று பிணைந்து நிற்குமாறு பின்னுதல்; to plait the hair.

க. சடெயெணெ

[சடை[6] + பின்னு-,]

**சடைபோட்டுக்கொள்(ளு)-தல்** *šaḍai-pōṭṭu-k-koḷ-,* 13 செ.குன்றாவி. (v.t.) 1. தலைமுடியைச் சடையாக்கிக் கொள்ளுதல்; to have one's hair matted by artificial means. 2. தலைபின்னிக் கொள்ளுதல்; to have one's hair well combed and plaited.

[சடை[6] + போட்டுக்கொள்(ளு)-,]

**சடைபோடு-தல்** *šaḍai-p-pōḍu-,* செ.கு.வி. (v.i.) கூரைவீட்டின் முகட்டினைப் புல்லால் பின்னல்போட்டு மூடுதல்; to plait the straws on the gabled of a hut (கட்டட.).

[சடை[6] + போடு-,]

**சடைமாஞ்சம்** *šaḍai-māñjam,* பெ. (n.) மிளகு சாரணைக்கொடி; a creeper of Triantheme (சா.அக.).

[சடை + மாஞ்சம்]

**சடைமாரியாயி** *šaḍai-māri-y-āyi,* பெ. (n.) அம்மை நோய்க்குரிய பெண்தெய்வம் (M.L.); goddess of measles.

[சடை[4] + மாரியாயி. ஒ.நோ. அம்மன் = அம்மைநோய் வகை, காளி]

**சடைமுடி** *šaḍai-muḍi,* பெ. (n.) 1. சடை[6] 1 பார்க்க; see *šaḍai[6] 1.* 2. சடையோடு கூடிய மகுடம்;

matted hair coiled into a crown. "புன்மயிர்ச் சடைமுடிப் புலரா வுடுக்கை" *(சிலப். 25, 126).* **3.** *சரக்கொன்றை (மூ.அ.);* Indian laburnum.

க., தெ. சடெமுடி

*[சடை⁴ + முடி]*

**சடைமுடியோர்** *šaḍai-muḍiyōr,* பெ. (n.) **சடைமுடியுடைய முனிவர்** *(பிங்.);* ascetics, as persons with matted hair.

*[சடை⁴ + முடியோர்]*

**சடையநாயனார்** *šaḍaiya-nāyaṉār,* பெ. (n.) **சுந்தரமூர்த்தி நாயனாரின் தந்தையும் அறுபத்துமூவருள் ஒருவருமான நாயனார்** *(பெரியபு.);* a canonized Šaiva saint, father of Sundaramūrtti Nāyaṉār, one of 63 Nāyaṉārs.

*[சடை⁶ → சடைய + நாயனார்]*

**சடையப்பன்** *šaḍai-y-appaṉ,* பெ. (n.) **1.** **சடைமுடியையுடைய அப்பன்,** சிவன்; lit., the father or lord with matted hair, Šivaṉ. "அப்பார் சடையப்பன்" *(திருவாச. 8, 11).* **2.** **கம்பனுக்கு உதவியளித்தவரும் திருவெண்ணெய்நல்லூரில் வாழ்ந்தவருமான ஒரு வள்ளல்;** patron of Kambaṉ. "வாழ்வார் திருவெண்ணெய் நல்லூரர்ச் சடையப்பன் வாழ்த்துப்பெற" *(கம்பரா. தனியன்).*

*[சடை⁶ + அப்பன்]*

முனிவன்கோலத்திற் சடையுடைமையால், சிவன் சடையன், சடையப்பன் என்றும் பெயர் பெற்றான்.

**சடையன்²** பார்க்க

**சடையவர்மன் இராசராசன் சுந்தரன்** *šaḍaiya-varmaṉ-irāšarāšaṉ-šundaraṉ,* பெ. (n.) **கி.பி. 1310 முதல் 1332 வரை ஆண்ட பாண்டியன்;** a Pāṇḍiya king ruled during 1310 - 1332.

*[சடையவர்மன் + இராசராசன் + சுந்தரன்]*

சடையவர்மன், மாறவர்மன் என்பன தலைமுறைதோறும் மாறிமாறிச் சூடிக் கொள்ளும் பாண்டியர்தம் குலப்பட்டம்.

**சடையவர்மன் உடையார் சிறிவல்லபன்** *šaḍaiya-varmaṉ-uḍaiyar srivallabaṉ,* பெ. (n.) **கி.பி. 1014 முதல் 1031 வரை திருநெல்வேலிப் பகுதியைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்த பாண்டியன்;** a Pāṇḍiyā king ruled during 1014 - 1031.

*[சடையவர்மன் + உடையார் + சிறிவல்லபன்]*

**சடையவர்மன் குலசேகரன்- I** *šaḍaiya-varmaṉ-kulašēgaraṉ-I,* பெ. (n.) **1190 முதல் 1218 வரை ஆண்ட பாண்டிய மன்னன்;** a Pāṇḍiyā king ruled during 1190 - 1218.

*[சடையவர்மன் + குலசேகரன்]*

சோழஅரசுக்குத் திறை செலுத்த மறுத்ததால், சோழன் குலோத்துங்கன் மதுரை மீது படையெடுத்து, குலசேகரனையும், அவன் மனைவி, மகளையும் சிறைவீடு செய்து பின்பு அடி பணிந்த பாண்டியனுக்கு அவன் நாட்டைத் திரும்ப அளித்தான். மதுரை மீனாட்சி கோயிலுக்குப் பல திருப்பணிகள் இம் மன்னன் செய்துள்ளான். சடையவர்மன் குலசேகரன் என்ற பெயரில் சிலர் ஆட்சி புரிந்துள்ளனர்.

**சடையவர்மன் சிறிவல்லபன்** *šaḍaiya-varmaṉ-siṟivallabaṉ,* பெ. (n.) **கி.பி. 1101 – 1124 வரை ஆட்சி புரிந்த பாண்டிய மன்னன்;** a Pāṇḍiyā king ruled during 1104 - 1124.

*[சடையவர்மன் + சிறிவல்லபன்]*

இம் மன்னன் தந்தை மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த இடைக்காலப் பாண்டியன் குலசேகரன்.

இப் பெயரில் பலர் பாண்டிய நாட்டை ஆண்டுள்ளனர்.

**சடையவர்மன் சுந்தரன்-I** *šaḍaiya-varmaṉ-sundaraṉ-I,* பெ. (n.) **கி.பி. 1250 – 1284 வரை ஆட்சி புரிந்த பாண்டிய மன்னன்;** a Pāṇḍiyā king ruled during 1250 - 1284.

சுந்தரன் போசளர்களின் படைத்தலைவனான சிங்கணனைக் கொன்றான். போசளர்களின் கண்ணனூர்க் குப்பத்தைக் கைப்பற்றினான். இலங்கை மன்னனிடம் திறை பெற்றான். கோப்பெருஞ்சிங்கனை வென்று சேந்த மங்கலத்தைப் பிடித்தான். நெல்லூரில் மற முழுக்கும் (வீராபிசேகமும்), வெற்றி முழுக்கும் (விசயாபிசேகமும்) செய்து கொண்டான். சடையவர்மன் சுந்தரன் பெயரில் ஒன்பதின்மருக்குமேல் ஆட்சி புரிந்துள்ளனர்.

**சடையவர்மன் பராக்கிரமன்-I** *šaḍaiya-varmaṉ-parākkiramaṉ-I,* பெ. (n.) **கி.பி. 1315 – 1334 வரை ஆட்சி புரிந்த பாண்டிய மன்னன்;** a Pāṇḍiyā king ruled during 1315 - 1334.

*[சடையவர்மன் + பராக்கிரமன்]*

தில்லி அரசன் அலாவுதீன் கில்சியின் படைத் தலைவன் குசுரூகானையும், அவனது படைகளையும் விரட்டியதால், இவன்

"வாளால் வழி திறந்தான்" என்று அழைக்கப் பட்டான். "வாளால் வழி திறந்தான் பணம்" எனும்பெயரில் உள்ள நாணயம், இம் மன்னன் காலத்தைச் சார்ந்தது.

**சடையவர்மன் விக்கிரமன்-I** *šaḍaiya-varmaṉ-vikkiramaṉ-I,* பெ. (n.) கி.பி. 1241 – 1254 வரை ***ஆண்ட பாண்டிய மன்னன்;*** a Pāṇḍiyā king ruled during 1241 - 1254.

*[சடையவர்மன் + விக்கிரமன்]*

போசள மன்னன் வீரசோமேசுவரனின் சமகாலத்தவன். போசள மன்னனின் மேலாளுமையைப் பாண்டியர்கள் ஏற்று ஆட்சி செய்தனர். இப் பெயரில் பலர் ஆட்சி புரிந்துள்ளனர்.

**சடையவர்மன் வீரன்** *šaḍaiya-varmaṉ-vīraṉ,* பெ. (n.) கி.பி. 1170 – 1195 வரை ஆட்சி புரிந்த ***பாண்டிய மன்னன்;*** a Pāṇḍiyā king ruled during 1170 - 1195.

*[சடையவர்மன் + வீரன்]*

இப் பெயரில் பல பாண்டிய மன்னர்கள் ஆண்டுள்ளனர்.

**சடையவரை** *šaḍai-y-avarai,* பெ. (n.) ***சடை சடையாய்க் காய்க்கும் அவரை;*** a species of bean.

*[சடை⁴ + அவரை]*

**சடையன்¹** *šaḍaiyaṉ,* செ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish (மீனவ.).

*[சடை → சடையன்]*

**சடையன்²** *šaḍaiyaṉ,* பெ. (n.) 1. சிவன் (உரி.நி.); Śivaṉ. 2. ***சடையநாயனாார்;*** a canonized Saiva saint. "என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்" (தேவா. 738. 11). 3. **வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்தவரும், கம்பனுக்கு உதவியளித்தவருமான பெருமகன்;** a patron of Kambaṉ. "வறுமை நோய்க்கு மருந்தன சடையன்" (கம்பரா. வேள்வி. 1).

ம. சடயன்

*[சடை⁴ → சடையன்]*

முழுமுதற்கடவுளுக்குப் பேரண்டத்தையே வடிவமாகக் கூறுவது வழக்கமாதலால், மாலையில் தோன்றும் செவ்வானம் சிவ பெருமானுக்குச் சடையாகவும், செவ்வானத்திற்கு மேலாகத் தோன்றும் பிறையையும், பனிமலையுச்சியில் பிறக்கும் கங்கையையும் அவர் தலையிலணிந்திருப்பதாகவும் உருவகித்துக் கூறினர் முன்னோர் (ஓ.மொ. 56).

**சடையன்³** *šaḍaiyaṉ,* பெ. (n.) கி.பி. 863 – 911 ***வரை ஆண்ட பாண்டிய மன்னன்;*** a Pāṇḍiyā king. "தென்னாட்டுக் கோனாயின சடையந் தனிசெல்க" (பா.செ.ப.)

*[சடை + அன். 'அன்' – ஆ.பா.ஈறு]*

இரண்டாம் வரகுணன் என்று அழைக்கப் பட்டவன். சிறந்த சிவனடியான்.

**சடையன்மூலி** *šaḍaiyaṉ-mūli,* பெ. (n.) நார் அல்லது மயிரடர்ந்த பூடுகள்; any plant grown with thick set of fibres or hairs (சா.அக.).

*[சடையன் + மூலி. மூல → மூலி = மருந்திற்குரிய வேர்ச்செடிகொடி]*

**சடையன் வீரநாராயணன்** *šaḍaiyaṉ-vīra-nārāyaṇaṉ,* பெ. (n.) கி.பி. 866 – 911 வரை ஆண்ட பாண்டியமன்னன்; a Pāṇḍiyā king.

*[சடையன் + வீரநாராயணன்]*

முற்காலப்பாண்டிய மன்னன்.

**சடையன் வீரபாண்டியன்** *šaḍaiyaṉ-vīra-pāṇḍiyaṉ,* பெ. (n.) கி.பி. 938 – 959 வரை ***ஆண்ட பாண்டியன்;*** a Pāṇḍiyā king.

*[சடையன் + வீரபாண்டியன்]*

**சடையனேரி** *šaḍaiyaṉ-ēri,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tañjāvūr District.

*[சடையன் + ஏரி. சடையன் வெட்டிய ஏரி]*

ஏரின் உதவி கொண்டு செய்யப்படும் பயிர்த் தொழில் வளர்ச்சிக்குப் பயன்படும் நீரைத்தேக்கி வைப்பதற்கு உருவாக்கப்படும் ஏரி. ஆழ்ந்தகன்ற நீர்நிலை.

**சடையாண்டி** *šaḍai-y-āṇḍi,* பெ. (n.) ***சடை வளர்த்த ஆண்டி;*** religious mendicant with matted hair.

*[சடை⁶ + ஆண்டி]*

**சடையாணி** *šaḍai-y-āṇi,* பெ. (n.) **ஆணிவகை** (பிங்.); flat-headed nail.

*[சடை² + ஆணி]*

**சடையெருமை** *šaḍai-y-erumai,* செ. (n.) மயிர் அடர்ந்த எருமை; a species of buffalo with thick hairs (சா.அக.).

*[சடை + எருமை]*



சடையெருமை

**சடையுளுவை** *šaḍai-y-uḷuvai,* செ. (n.) சடை போலும் நீண்ட இழைகளையுடைய உளுவை மீன் (தஞ்சை. மீனவ.); 'uḷuvai' fish which has matted hair like long strings.

*[சடை + உளுவை]*

**சடையோன்** *šaḍaiyōṉ,* பெ. (n.) 1. சிவன்; Śiva. "பொன்னார் சடையோன் புலியூர்" (திருக்கோ. 89). 2. சிவனின் தானைத்தலைவன் (சூடா.); Virabhadra.

ம. சடயன்

*[சடை⁴ → சடையோன்]*

**சடைராகி** *šaḍai-rāgi,* பெ. (n.) நீண்ட விரிந்த கதிர்களைக் கொண்ட கேழ்வரகு (கோவை.); a kind of ragi.

*[சடை + ராகி. இறகி → இரகி → ராகி]*

**சடைவாறு-தல்** *šaḍai-vāṟu-,* 5. செ.கு.வி. (v.i.) இளைப்பாறுதல் (நெல்லை); to have rest or relief.

*[சடைவு + ஆறு-,]*

**சடைவில்லை** *šaḍai-villai,* பெ. (n.) தலைப் பின்னலிற் பெண்கள் செருகியணியும் தலையணி வகை; gold disc worn on the hair-plait, a woman's ornament.

*[சடை⁶ + வில்லை]*

**சடைவிழு-தல்** *šaḍai-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மயிர்ச்சடையாகப் பற்றுதல்; to get matted or entangled, grow shaggy or bushy as the hair. 2. பயன்படாது போதல்; to become useless.

*[சடை⁶ + விழு-,]*

**சடைவு** *šaḍaivu,* பெ. (n.) 1. மனத்தளர்ச்சி; wearisomeness, depression of spirits, dejection. அவனுக்குச் சடைவு அதிகம். 2. ஆணி முதலியன தறைகை; rivetting.

ம. சடவு

*[சடை¹ → சடைவு]*

**சடைவுதீர்-த்தல்** *šaḍaivu-tīr-,* 4 செ.கு.வி. (v.i.) சோம்பல் முறித்தல்; to stretch or twist oneself of cast off laziness.

*[சடைவு + தீர்-,]*

**சடைவெளவால்** *šaḍai-vauvāl,* பெரிய வெளவால் மீன் (மீனவ.); a large portrait sea-fish.

*[சடை + வெளவால்]*

**சண்டகி** *šaṇḍagi,* பெ. (n.) பெருமுத்தக் காசு; a big variety of koray root - Cyperus pertenui (சா.அக.).

**சண்டகோபி** *šaṇḍa-kōbi,* பெ. (n.) கடுஞ்சினம் உடையவன்; person of violent anger. "சண்டகோபி... துருத்தேவதை" (யசோதர. 1, 14).

*[சண்ட(ம்)² + கோபி]*

த. கோபி → Skt. kōpi

**சண்டதாண்டவம்** *šaṇḍa-tāṇḍavam,* பெ. (n.) காளியோடு சிவன் ஆடிய கூத்து (சங்.அக.); dance of Śivaṉ with Kāḷi.

*[சண்ட(ம்)² + தாண்டவம்]*

**சண்டநாயகன்** *šaṇḍa-nāyagaṉ,* பெ. (n.) சண்டேசுரநாயனார்; a canonized Śaiva saint. "சண்டநாயகனுக் கருள் செய்தவன்" (தேவா. 237, 8).

*[சண்ட(ம்)² + நாயகன்]*

**சண்டப்பிரசண்டம்** *šaṇḍa-p-pirašaṇḍam,* பெ. (n.) 1. மிகு கடுமை; wild fierceness, extreme violence. "மண்டிவரு சண்டப் பிரசண்ட மாருதமான" (திருவேங். சத. 48). 2. ஆர்ப்பாட்டம்;

boisterousness, turbulence, often applied to persons. *தட்டிக்கேட்க ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டம் செய்வான்.*

*[சண்டம் + பிரசண்டம். எதுகை நோக்கி வந்த இணைமொழி]*

**சண்டப்பிரசண்டர்** *šaṇḍa-p-pirašaṇḍar,* பெ. (n.) திருமால் கோயிலுள்ள வாயிற்காப்பாளர் (M.E.R. 634 of 1919); deities guarding the inner shrine of Tirumāl (Viṣṇu) temples.

*[சண்டப்பிரசண்ட(ம்) + அர்]*

**சண்டப்பிரசண்டன்** *šaṇḍa-p-pirašaṇḍaṉ,* பெ. (n.) *மிகுதியாகப் பேசுபவன்;* one who talks boisterously.

*[சண்டப்பிரசண்டம் → சண்டப்பிரசண்டன்]*

*சண்டப்பிரசண்டம் பார்க்க*

**சண்டப்பை** *šaṇḍa-p-pai,* பெ. (n.) *கருப்பம்;* uterus, womb. *"சண்டப்பைக்குள்ளிருந்து" (தனிப்பா. 1, 120, 4).*

*[அண்டப்பை → சண்டப்பை]*

**சண்டம்**[1] *šaṇḍam,* பெ. (n.) *1. உறைப்பு;* pungency. *2. எருது;* ox. *3. கருப்பம்;* pregnancy.

*[சண்டு → சண்டம்]*

**சண்டம்**[2] *šaṇḍam,* பெ. (n.) *1.* சினம் (சங்.அக.); anger. *2.* கொடுமை; fierceness. *"சண்ட மன்னனைத் தாடொழுது" (சீவக. 430). 3.* விரைவு (சூடா.); speed, rapidity, swiftness. *4.* வலிமை; strength, power. *"பல்லாயிரகோடி சண்ட தூணங்கள் போன்றன" (பாரத. காண்டவ. 38). 5.* ஒருவகை நிரையம் (சிவதரு. சுவர்க்க. நரக. 108); a kind of hell.

*[சள்ளெனல் = சினந்து விழுதல், சள் → சள்ளை = தொந்தரவு. சள் → சண்டு → சண்டை = சச்சரவு. சள் → சளம் = கடுஞ்சினம். சண்டு → சண்டம் = சினம், கொடுமை (வ.வ. 138)]*

**சண்டம்**[3] *šaṇḍam,* பெ. (n.) பெருமை (அக.நி.); greatness.

*[சடு → சண்டு → சண்டம்]*

**சண்டமற்கடி** *šaṇḍa-maṟkaḍi,* பெ. (n.) பூனைக்காய்ஞ்சொறி; climbing nettle mercuty-Tragia involucrats (annebina) (சா.அக.).

**சண்டமாருதம்** *šaṇḍa-mārudam,* பெ. (n.) பெருங்காற்று; hurricane, wind-storm *'சண்ட "மாருதத்திற்குமுன் சருகோட்டம் போல" (பழ.).*

*[சண்டம்*[2] *+ மாருதம்]*

Skt. mārudha → த. மாருதம்

**சண்டவேகம்** *šaṇḍa-vēgam,* பெ. (n.) மிகுவிரைவு; great, excessive or headlong speed impetuosity. *"தேருமெதிர் நடத்தினர் சண்ட வேகமொடு' (பாரத. பன்னிரண்டாம். 22).*

*[சண்டம்*[2] *+ வேகம்]*

**சண்டன்**[1] *šaṇḍaṉ,* பெ. (n.) *1.* கடுஞ்சினத்தன்; violent-tempered person. *2.* கூற்றுவன் (திவா.); Yama. *"சண்டன்போ யெட்டித் தொடுமுன்" (தேவை. 70). 3.* காலன் (திவா.); a messenger of Yamaṉ. *4.* கதிரவன் (பிங்.); Sun, as the source of heat. *5.* உருத்திரருள் ஒருவர் (சி.போ.பா.2., ப. 24); a Rudraṉ. *6.* சிவன் (வின்.); Šivaṉ. *7.* சண்டேசுர நாயனார்; a canonized Saiva saint. *"சண்டன்றேர் பின்னூர" (தேவை. 109).*

*[சண்டம் → சண்டன் (வ.வ. 138)]*

த. சண்டன் → Skt. caṇḍa

**சண்டன்**[2] *šaṇḍaṉ,* பெ. (n.) புளியமரம் (மலை.); tamarind tree.

*[சள் → சண → சண்டன்]*

**சண்டா** *šaṇḍā,* பெ. (n.) அலரி; oleander - nerium odorum (சா.அக.).

**சண்டாதகம்** *šaṇḍādagam,* பெ. (n.) சண்டாதம் பார்க்க; see *šaṇḍādam* (சா.அக.).

*[சண்டாதம் → சண்டாதகம்]*

**சண்டாதம்** *šaṇḍādam,* பெ. (n.) அவுரி; indigo plant - indigofera tinctoria (சா.அக.).

**சண்டாளப்பேறு** *šaṇḍāḷa-p-pēṟu,* பெ. (n.) வரிவகை (S.I.I.V., 139); a tax.

*[சண்டாளம் + பேறு]*

**சண்டாளம்** *šaṇḍāḷam,* பெ. (n.) *1.* இழிந்ததன்மை; baseness, vileness, sinfulness. *2.* பேய்; demon.

*[சள்ளெனல் = சினந்து விழுதல். சள் → சள்ளை = தொல்லை. சள் → சண்டு → சண்டம் = சினம், கொடுமை. சண்டம் → சண்டாளம்]*

த. சண்டாளம் → Skt. caṇḍāla

**சண்டாளர்** *šaṇḍāḷar,* பெ. (n.) கொலைஞர் *(திவா.);* murderer, assassin.

மறுவ. குணங்கர், வங்கர், கவுண்டர், இழிஞர், புலைஞர், கொலைஞர் (ஆ.நி.)

*[சண்டாளம் → சண்டாளர்]*

**சண்டாளன்** *šaṇḍāḷaṉ,* பெ. (n.) 1. கொடுமை யானவன்; low, degraded man, villain, sinner. 2. பார்ப்பனிக்கும் தொழும்பனுக்கும் (சூத்திரன்) பிறந்தவன்; person of the degraded caste, born of the brahmin woman and a sudra father. 3. வசைமொழிக்குப் பயன்படுத்தும் சொல்; vile traitor, a term of reproach. சண்டாளன் என் பிழைப்பைக் கெடுத்துவிட்டான்.

க. சாண்டால, சண்டால; து. சண்டாலெ, சாண்டாலெ (தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவன்)

*[சண்டாளம் → சண்டாளன் (வ.வ. 138]*

த. சண்டாளம் → Skt. caṇḍāla

**சண்டாளி** *šaṇḍāḷi,* பெ. (n.) 1. கொடியவள், கொடுமையான பெண்; low, degraded woman, sinful woman. "சண்டாளி சூர்ப்பனகை" *(தனிப்பா. 1, 95, 15).* 2. புலைச்சி; woman of the most degraded caste.

*[சண்டாளன் (ஆ.பா.) - சண்டாளி (பெ.பா.) (வ.வ. 138)]*

த. சண்டாளி → Skt. caṇḍāḷi

**சண்டி**[1] *šaṇḍi,* பெ. (n.) சண்டித்தனம் பார்க்க; see *šaṇḍi-t-taṉam.*

க. சண்டி

*[(சன்) → சண்டு → சண்டி]*

**சண்டி**[2] *šaṇḍi,* பெ. (n.) 1. கொடியவன்; wicked. "ஒளித்த தேதடா அடசண்டி" *(இராமநா.).* 2. இடக்குச் செய்-பவன்-வது; any obstinate, perverse person or animal. சண்டிமாடு. 'சண்டிக்குதிரைக்கு நொண்டிச் சாக்கு' *(பழ.)* 3. அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்; a canonized Šaiva saint, one of 63 Nāyaṉmārs. "அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்" *(தேவா. 736, 3).*

க. சண்டிக

*[(சன்) → சண்டு → சண்டி (வ.வ. 138)]*

த. சண்டி → Skt. caṇḍi

**சண்டி**[3] *šaṇḍi,* பெ. (n.) 1. கொடியவள்; wicked woman. "பிணக்கிடுஞ் சண்டிகள்" *(திருப்பு. 13).* 2. காளி (பெருஞ்சினமுள்ளவள்); Durgā, as furious.

மறுவ. கொற்றவை, அம்மை, மாயோள், காளி, அங்காளம்மை, மாரி, பிடாரி, கன்னி, குமரி, பகவதி

ம. சண்டி; க. சண்டி, சண்டெ (காளி); து. சண்டி

*[(சன்) → சண்டு → சண்டி (வ.வ. 138)]*

த. சண்டி → Skt. caṇḍi

**சண்டி**[4] *šaṇḍi,* பெ. (n.) 1. மானமற்றவன் *(யாழ். அக.);* shameless person. 2. ஒரு வகைச் சீமை மரம்; lettuce tree.

ம. சண்டிச்சி (கொடியவள்)

*[சண்டி[1] → சண்டி[3]]*

**சண்டிக்கடா** *šaṇḍi-k-kaḍā,* பெ. (n.) 1. சண்டித்தனமுள்ள எருமைக்கடா; lit., stubborn he-buffalo. 2. ஒட்டாரஞ் செய்யும் சோம்பேறி எருமைக்கடா; indolent, obstinate person. "சோம்பலொடு பெரியோர் சபைக்குட் படுத்திடுந் தூங்கலே சண்டிக்கடா" *(குமரேச. சத. 40).*

*[சண்டி[1] + கடா]*

எருமைக்கடாவின் சண்டித்தனத்தை அவ்வியல்புடையோன் மீது ஏற்றிக் கூறுவது.

**சண்டிக்கார்** *šaṇḍi-k-kār,* பெ. (n.) கார் நெல் வகை; a kind of kār paddy.

ம. சண்டிக்காடு

*[சண்டி + கார்]*

**சண்டிக்கீரை** *šaṇḍi-k-kīrai,* பெ. (n.) ஊதை நோய், இடுப்புவலி முதலியவற்றிற்கு மருந்தாகப் பயன்படும் சீமைக்கீரையினம்; lettuce - leaves of a tree which is used in cases of rheumatic complaints, gout, lumbago etc. (சா.அக.).

*[சண்டி[4] + கீரை]*

**சண்டிகை** *šaṇḍigai,* பெ. (n.) காளி (பிங்.); Durgā.

*[சண்டி → சண்டிகை]*

**சண்டிசெய்-தல்** *šaṇḍi-sey-, 1* செ.குவி. (v.i.) **ஒட்டாரம் செய்தல்;** to become passionate, obstinate.

க. சண்டி கொள்ளு

*[சண்டி + செய்-,]*

**சண்டித்தனம்** *šaṇḍi-t-taṉam,* பெ. (n.) ஒட்டாரம்; obstinacy, stubbornness, perversity.

ம. சண்டித்தனம், சண்டித்தரம், சண்டித்தம்; ச. சண்டிதன; தெ. சண்டிதரம்.

*[சண்டி → சண்டித்தனம்]*

**சண்டிமாடு** *šaṇḍi-māḍu,* பெ. (n.) இணக்கமாகச் செல்லாத மாடு; obstinate ox.

*[சண்டி + மாடு. சளம் → சண்டு → சண்டம் = சினம், கொடுமை, சண்டன் = கடுஞ்சினத்தன், கூற்றுவன், கொடியவன். சண்டன் → சண்டி = கொடியவன், காளி, இடக்குப் பண்ணும் விலங்கு]*

**சண்டியர்** *šaṇḍiyar,* பெ. (n.) சண்டையை மூட்டுபவன், பெரும் முரடன்; rowdy, rogue. அந்தப் பேட்டைக்கு அவன்தான் சண்டியர்.

*[சண்டி → சண்டியர்]*

**சண்டியன்** *šaṇḍiyaṉ,* பெ. (n.) பிடிவாதமுள்ள சோம்பேறி (யாழ்ப்.); obstinate, indolent person.

*[சண்டி → சண்டியன்]*

**சண்டிலன்** *šaṇḍilaṉ,* பெ. (n.) *1.* சிவன்; Šivaṉ. *2.* முடிதிருத்துவோன்; barber.

*[சண்டி → சண்டிலன்]*

**சண்டிவாளம்**[1] *šaṇḍi-vāḷam,* பெ. (n.) ஒப்பந்தத்தை நீக்கவோ ஒன்றை மீட்கவோ கொடுக்கும் பணம் (வின்.); money given to dissolve a bargain or to redeem anything.

க. சண்டிவாள

*[சண்டி + வாளம்]*

**சண்டிவாளம்**[2] *šaṇḍi-vāḷam,* பெ. (n.) கால் விலங்கு (இ.வ.); fetters for the legs.

*[சண்டி' + வாளம். வள் → வாள் → வாளம் = வளைவு, வட்டம், வட்ட வடிவிலமைந்த விலங்கு]*

**சண்டினி** *šaṇḍiṉi,* பெ. (n.) விளக்கு; lamp. "மகர பூசத்துநாள் திருமலையில் சண்டினி குடத்தபடி தம்மிட அதிரசப்படி அமுது செய்" *(திருப். க. தொ.1, கல். 230.3)*

**சண்டீசர்** *šaṇḍīsar,* பெ. (n.) சண்டேசுர நாயனார் பார்க்க; see *šaṇḍēsura-nāyaṉār.*

க. சண்டேச (சிவன்)

*[சண்டர் + ஈசர் - சண்டேசர் → சண்டீசர்]*

**சண்டீனம்** *šaṇḍīṉam,* பெ. (n.) பறவைகள் பறக்கும் முறை; one of the modes of flight, peculiar to birds. "சண்டீன முட்டீனம்" *(காசிக. திரிலோ. 6).*

*[சண்டு + இனம்]*

**சண்டு**[1]**-தல்** *šaṇḍu-, 5* செ.குன்றாவி. (v.t.) அளவுக்கு அதிகமாக உண்ணுதல்; to eat to excess, to be gluttonous.

*[சள் → சண்டு-,]*

**சண்டு**[2] *šaṇḍu,* பெ. (n.) *1.* பதர்; chaff. *2.* கூளம்; broken chips of spoilt straw. *3.* பயிரில் விழும் வண்டுவகை; an insect damaging growing crops. *4.* புகைபிடிக்கும் பிசினி (அபினி) உருண்டை; a preparation of opium used for smoking. *5.* எல்லையில் நடப்படும் கோல்; pole, as a boundary mark.

ம. சண்டட; க. சரட, சட்ட; பட. சண்டு; Skt. caṇḍu

*[சுள் → சள் → சண்டு (வே.க. 213)]*

**சண்டுசருகு** *šaṇḍu-sarugu,* பெ. (n.) காய்ந்த தாள்களும் இலைகளும்; dried leaves.

*[சண்டு + சருகு]*

மோனை நோக்கி வந்த மரபிணைமொழி. சண்டு = காய்ந்த தாளும் தோகையும்; சருகு = காய்ந்த இலை.

**சண்டுசருவை** *šaṇḍu-saruvai,* பெ. (n.) கடலடிக்கூலம் (முகவை.); grains of sea.

*[சண்டு + சருவை]*

**சண்டேசுரநல்லூர்** *šaṇḍēsura-nallūr,* பெ. (n.) சிதம்பரத்திற்கு அருகில் உள்ள சிற்றூரின் பண்டைய பெயர்; an ancient village near Chidambaram. "இவூர் பிடாகை சண்டேசுர நல்லூரில் குலோத்துங்க சோழயிரமாராயன்" *(தெ. க. தொ. 12: க. 151: 5-6)*

*[சண்டேசுவரம் + நல்லூர்]*

**சண்டேசுரநாயனார்** *šaṇḍēsura-nāyaṉār,* பெ. (n.) *சிவனடியார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு);* a canonized Šaiva saint, one of 63 Nāyaṉmārs.

*[சண்டேசுவரம் + நாயனார்]*

**சண்டேசுரப்பெருவிலை** *šaṇḍēšura-p-peruvilai,* பெ. (n.) கோயிலுக்குச் சொந்தமான நிலத்தை வாங்க, விற்க, மதிக்கப்படும் விலை; temple land amount. "இவ்வூர் எங்கள் பிரம்மசேத்திரம் என்றும் சண்டேசுரப் பெருவிலை கொள்ளக் கடவல்ல என்றும்" *(தெ.க. தொ. 7: க. 759:1).*

*[சண்டேசு வரம் + பெருவிலை]*

நிலமாவது இறைவனது பெயரிலேயே இருக்கும். அந்நிலத்தை வாங்க, விற்க உறுதிப்படும்விலை சண்டேசுரப்பெருவிலை. ஆதிசண்டேசுரப்பெருவிலை.

**சண்டேசுரவாய்க்கால்** *šaṇḍēšura-vāy-k-kāl,* பெ. (n.) நீர்ப்பாசன வாய்க்காலின் பெயர்; name of a irrigation channel. "இச்செயும் இதுக்குப் பாயும் சண்டேஸ்வர வாயிக்காலும் இறையிலி" *(தெ. க. தொ. 3: க. 73:24)*

*[சண்டேசுவரம் + வாய்க்கால்]*

**சண்டை** *šaṇḍai,* பெ. (n.) *1.* பூசல்; quarrel. *2.* முரண்பாடு; conflict. *3.* போர்; war. நாடுகளுக்கிடையே நிகழும் சண்டை பேரழிவைத் தரும்.

ம. சண்ட; க. தண்டெ; தெ. தண்ட; து. சண்டெ, தண்டெ; பட. சண்டெ

**சண்டை வகை:** சண்டை - இருவர் செய்யும் போர்; மல் - இருவர் தம் வலிமை காட்டச் செய்யும் போர்; கலாம் - பலர் செய்யும் போர்; போர் - இரு நாட்டார் அல்லது அரசர் செய்யும் போர்; பூசல் - போர் ஆரவாரம்; சமர் - இருபடைகள் கலந்து செய்யும் போர்; ஞாட்பு செறிந்து செய்யும் போர்; மலைவு - பூச்சூடிச் செய்யும் போர்; செரு - பகைவரை அழிக்கும் போர் *(சொ.க. 55, 56).*

*[சள்ளெனல் = சினந்துவிழுதல். சள் = தொல்லை. சள்ளை = தொல்லை. சள் → சண்டு → சண்டை = பூசல், போர்.]*

**சண்டை**[2] *šaṇḍai,* பெ. (n.) *இசைக்கருவி வகை; (S.I.I.V. 308);* a musical instrument.

ம. சண்ட

*[சள் → சண்டு → சண்டை. சள் - ஒலிக்குறிப்புச் சொல்]*

**சண்டைக்கப்பல்** *šaṇḍai-k-kappal,* பெ. (n.) போரிடுவதற்குப் பயன்படுத்தும் கப்பல், போர்க்கப்பல்; warship, privateer.

*[சண்டை + கப்பல்]*

**சண்டைக்காரன்** *šaṇḍai-k-kāraṉ,* பெ. (n.) *1.* சண்டையிடுங் குணமுள்ளவன்; quarrelsome person. *2.* பகைவன்; enemy. அவன் என் சண்டைக்காரன் *(உ.வ.).*

ம. சண்டார் (பகைவர்); க. சகலிகண்ட

*[சண்டை + காரன்]*

**சண்டைக்காரி** *šaṇḍai-k-kāri,* பெ. (n.) சண்டையிடும் இயல்பினள்; a quarrlesome woman.

க. சகளிகாதி

*[சண்டை + காரி]*

**சண்டைக்கிழு-த்தல்** *šaṇḍai-k-kiḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) சண்டைபோடச் செய்தல்; to pick a quarrel.

க. சகளதெகெ

*[சண்டை + கு + இழு-]*

**சண்டைக்குநில்-தல் (சண்டைக்கு நிற்றல்)** *šaṇḍai-k-ku-nil-,* 14 செ.குவி. (v.i.) போராடுதல்; to pick a quarrel, to fight.

*[சண்டைக்கு + நில்-,]*

**சண்டைப்புழு** *šaṇḍai-p-puḻu,* பெ. (n.) புழுவகை *(பரராச. 2, 216);* a kind of worm.

*[சண்டை + புழு]*

**சண்டைபிடி**[1]**-த்தல்** *šaṇḍai-piḍi-,* 4. செ.குவி. (v.i.) போரிடுதல்; to quarrel, fight.

ம. சண்டபிடிக்குக

*[சண்டை + பிடி-,]*

**சண்டைபிடி²-த்தல்** *šaṇḍai-piḍi*, 4 செ. குன்றாவி. (v.t.) கடிந்துகூறுதல் (இ.வ.); to chide, rebuke.

*[சண்டை + பிடி-,]*

**சண்டைபோடு-தல்** *šaṇḍai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) போராடுதல்; to pick quarrel, fight.

*[சண்டை + போடு-,]*

**சண்டைமூட்டு-தல்** *šaṇḍai-mūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. சினமூட்டும் செய்திகளைக் கூறிச் சண்டைக்குத்தூண்டுதல்; to bring the news of some quarrel before others, generally as a complaint and with the purpose of rousing a quarrel. 2. இருதரப்பினர்க்கிடையே சண்டை உருவாக்குதல்; to create quarrel or fight between two parties.

*[சண்டை + மூட்டு-. முள் → மூள். மூளுதல் = பொருந்துதல், கூடுதல். மூள் (த.வி.) - மூட்டு (பி.வி.)]*

**சண்டைமூள்(ளு)-தல்** *šaṇḍai-mūḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) (நாடுகளுக்கிடையே) போர் தொடங்குதல்; to start fighting, generally between two countries.

*[சண்டை + மூள்-,]*

**சண்ணக்கடா** *šaṇṇa-k-kaḍā*, பெ. (n.) 1. தின்று கொழுத்த கடா; a well-fed fat ram. 2. பொலி கடா; bull kept for covering.

ம. சண்ணக்கிடாவு

*[சுண் → சண். சண்ணுதல் = புணர்தல். சண் → சண்ணம் + கடா. குல் → குள் → குழு → குழ → குட → குடம் = திரட்சி. குடத்தல் = கூடுதல், திரளுதல். குட → கட → கடா = உருண்டு திரண்ட விலங்கு (வ.வ. 137)]*

**சண்ணத்துருக்கவேம்பு** *šaṇṇa-t-turukka-vēmbu*, பெ. (n.) செவ்வத்தை; globular flowered neem.

*[சண்ணத்துருக்க + வேம்பு]*

**சண்ணநெல்** *šaṇṇa-nel*, பெ. (n.) சன்னவரிசி தரும் நெல்; the paddy of šaṇṇarisi.

க. சண்ணநெல்லு

*[சல் → சள் → சண் + நெல்]*

**சண்ணம்** *šaṇṇam*, பெ. (n.) ஆண்குறி; penis. "சிறுச்சண்ணந் துள்ளஞ்சோர" (திவ். பெரியாழ். 1, 7, 10).

ம. சண்ண, சண்ணி; குட. சன்னெ (பிட்டம்); பட. துண்ணெ.

*[சுண் → சண். சண்ணுதல் = புணர்தல். சண் → சண்ணம். சண்ணக்கடா = பொலிகடா. துளைத்தற்பொருளுள்ள šisna என்னும் சொல்லை வடவர் மூலமாகக் காட்டுவர். சுண்ணம் → Skt. šisna. (வ.வ. 137)]*

**சண்ணரிசி** *šaṇṇariši*, பெ. (n.) சிறிய அளவு நெல்மணி, உயர்வகை அரிசி; small grained, good variety.

க. சண்ணக்கி

*[சல் → சன் → சண் + அரிசி. அரி → அரிசி]*

**சண்ணாரம்** *šaṇṇāram*, பெ. (n.) குடைசெய்யுந் தொழில் (நீலகேசி, 280); umbrella-making.

*[சள் → சண் → சண்ணாரம்]*

**சண்ணி-த்தல்** *šaṇṇi-*, 4. செ.குன்றாவி. (v.t.) 1. பூசுதல்; to smear, as with sacred ashes. "வெண்ணீறு சண்ணித்த மேனி" (தேவா. 697. 1). 2. சார்ந்திருத்தல், to dwell in, inhabit. "ஆமாத்தூர் சண்ணிப் பானை" (தேவா. 1020, 8).

*[சள் → சண்ணி]*

**சண்ணு¹-தல்** *šaṇṇu-*, 4. செ.குன்றாவி. (v.t.) 1. தாக்குதல்; to attack. "தட்டாரப் பைய லரிகர புத்ரனைச் சண்ணினானே" (தனிப்பா. 1, 223, 13). 2. நீக்குதல், to remove, cure. "கீழாநெல்லி...... காமாலைகளைச் சண்ணும்" (பதார்த்த. 300). 3. அளவுக்கு அதிகமாக உண்ணுதல்; to eat to excess, to be gluttonous. சண்ணியிழுத்தான். 4. செய்து முடித்தல்; to accomplish, execute, effect, used sarcastically. அவர் சண்ணுகிறதைப் பார்ப்போம் (உ.வ.).

*[சள் → சண்ணு. சள்ளுதல் = இளகுதல்]*

**சண்ணு²-தல்** *šaṇṇu-*, 5. செ.குன்றாவி. (v.t.) புணர்தல்; to copulate.

*[சுண் → சண் → சண்ணு-, (வ.வ.139)]*

**சண்பகப்பாலை** *šaṇbaga-p-pālai,* பெ. (n.) *மரவகை (L.);* common Ceylon laurel.

*[சண்பகம் + பாலை]*

**சண்பகநாவல்** *šaṇbaga-nāval,* பெ. (n.) *மணமுள்ள நாவல் பழம்;* a fragrant jamboon fruit - Eugenia jambosa *(சா.அக.).*

மறுவ. பித்திகை, சாதி, கருமுகை, மாலதி (ஆநி.).

*[சண்பகம் + நாவல்]*

**சண்பகம்** *šaṇbagam,* பெ. (n.) திருமால் கோயில்களில் வளர்க்கப்படும் மரவகை; campak tree. "மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்" *(பரிபா. 12:77).*

*[செம் → சம் → சம்பகம் → சண்பகம்]*

சம்பகம் → Skt. campaka

தேனீக்கள் மொய்க்காததும், மிகுந்த மணமுள்ளதும், மஞ்சள் மலர்களைக் கொண்டதும், 30 அடி முதல் 40 அடி வரை வளரக்கூடியதுமான இம்மரத்தின் வேர், பட்டை, பூ ஆகிய அனைத்தும் மருந்தாகப் பயன்படும் சிறப்புடையன. இதன் வகைகள்:

1 நீலமலைச் சண்பகம்; Nilgiri champak - michelia Nilagirica.

2. நாற்றச் சண்பகம்; foetid champak - mappia foetida - tomentosa.

3. காட்டுச் சண்பகம்; white champak - michelia genus.

4. சிறு சண்பகம்; a tree with small flowers.

5. நாகச்சண்பகம்; variety of champak (சா.அக.)

**சண்பங்காறை** *šaṇbaṅkāṟai,* பெ. (n.) சண்பகப்பூவின் வடிவிலைமைக்கப்பட்ட பொற்பூக்கள் கோத்த காறை என்னும் கழுத்தணி வகை; 'kāṟai' neck ornament which has beads designed like campaka flower. "மாணிக்கத்தின் தாலி பொன்னின் சண்பங்காறை சிறியது" (S.I.I. ii, 396, 140).

*[சண்பகம் + காறை]*

**சண்பங்கோரை** *šaṇbaṅ-gōrai,* பெ. (n.) சம்பங்கோரை (மதுரைக். 172, உரை); elephant grass.

*[சண்பகம் + கோரை]*

**சண்பசாதிப்பிரண்டை** *šaṇbasādi-p-piraṇḍai,* பெ. (n.) *முப்பிரண்டை;* a species of adamantine creeper having three corners or faces - Vitex genus *(சா.அக.).*

*[சண்பகசாதி + பிரண்டை]*

**சண்பணி** *šaṇbaṇi,* பெ. (n.) காளியின் ஏவல் பூதம்; an attendant of Kāḷi.

*[சண்டி = காளி. பணி = பணிப்பெண். சண்டிபணி → சண்பணி]*

**சண்பு** *šaṇbu,* பெ. (n.) 1. சம்பங்கோரை; elephant-grass. "சண்பமன் றூர்தர" *(மதுரைக். 172.).* 2. கோரைவகை; a species of sedge-grass.

*[சம்பு → சண்பு]*

**சண்பை**[1] *šaṇbai,* பெ. (n.) நெல்லை மாவட்டத்தில் தென்காசி வட்டத்திலுள்ள சண்பகக்காடாகிய திருக்குற்றாலம்; Tiruk-kuṟṟālam of Nellai district, Teṉkāsi taluk, where champak trees are more.

*[சண்பகம் → சண்பை (மரூஉ.)]*

சண்பகம் + அடவி (காடு) = சண்பகாடவி. இதனை சண்பகாதேவி எனத் தவறாகக் கருதி திருக்குற்றாலத்தில் அப்பெயர் தாங்கிய அம்மன்கோயில் ஒன்று எழுப்பப்பட்டுள்ளது.

**சண்பை**[2] *šaṇbai,* பெ. (n.) திருக்காழி (சீர்காழி); Sīrkāḻi. "சண்பைத் திகழுஞ் சம்பந்தன்" *(தேவா. 436. 11).*

*[சண்பு → சண்பை]*

**சண்பை**[3] *šaṇbai,* பெ. (n.) விழுப்புரம் மாவட்டம் பெண்ணையாற்றின் வடகரையில் உள்ள சம்பை என்ற ஊரின் பழைய பெயர்; an ancient village in Viḻupuram district. "வாணகப்பாடி ராசேந்திர வளநாட்டுப் பெண்ணை வடகரைச் சண்பை" *(தெ.க.தொ. 22: க. 68-8).*

*[சண்பு → சண்பை - பாய் முடையப் பயன்படும் சண்பு விளைந்த ஊர்]*

**சண்பையர்கோன்** *šaṇbaiyarkōṉ,* பெ. (n.) சிவனியரான திருஞானசம்பந்தர்; a šaiva saint, Tiru-ñāṉa šambandar.

*[சண்பையர் + கோன்]*

சண்பையர் - சண்பை என்னும் திருக்காழியில் வாழ்வோர்.

**சணகம்**[1] *šaṇagam,* பெ. (n.) கடலை (சங். அக.); Bengal gram.

க. சணகெ, சணங்க, சணங்கி, சணக, சணகி, சணிகி, சன்னங்கி, சாணங்கி; Skt. caṇaka

[சள் → சண் → சணம் → சணகம்]

**சணகம்**[2] *šaṇagam,* பெ. (n.) புளியாரை, பூடுவகை (வின்.); yello wood-sorrel.

[சள் → சண் → சணம் → சணகம்]

**சணகம்**[3] *šaṇagam,* பெ. (n.) சணல் (தத்துவ. 156. உரை); hemp.

[சணம் → சணகம்]

**சணகி** *šaṇagi,* பெ. (n.) மூங்கில்; bamboo - Bambusa arundinacea (சா.அக.).

[சணம் → சணகி]

**சணச்சிச்சாரம்** *šaṇacci-c-cāram,* பெ. (n.) சணகம்[2] பார்க்க; see *šaṇagam*[2] (சா.அக.).

[சணச்சி + சாரம்]

**சணப்பங்கோழி** *šaṇappaṅgōḻi,* பெ. (n.) கோழி வகைகளுள் ஒன்று; a kind of hen. சணப்பங் கோழி போலத் தொண தொணக்கிறான் (உ.வ.).

[சணப்பு + கோழி]

ஒரே ஓசையை, அடிக்கடி தொடர்ந்து வெளி யிடும் தன்மையால் 'அரிக்குரல்' எனப்பட்டது. இக்கோழி ஆண்பெண் இணைபிரியாது வாழும் தன்மையுடையது.



சணப்பங்கோழி

**சணப்பநார்** *šaṇappa-nār,* பெ. (n.) சணல்நார்; fibres of flax.

தெ. சநபநார

[சணப்பம் + நார்]

**சணப்பன்** *šaṇappaṉ,* பெ. (n.) சணலில் நாருரிக்கும் குலத்தான்; member of a Telugu caste whose profession was flax-dressing. சணப்பன் வீட்டுக் கோழி தானே விலங்கு மாட்டிக் கொண்டது (பழ.).

[சணப்பு → சணப்பன் (வ.வ. 139)]

**சணப்பு** *šaṇappu,* பெ. (n.) 1. சணல்[2] (பதார்த்த. 250) பார்க்க; see *šaṇal.* 2. கஞ்சா (M.M.); Indian hemp.

ம. சணம்பு; க. சணம்பு

[சணம்பு → சணப்பு (வ.வ. 139)]

**சணப்புக்குஞ்சம்** *šaṇappu-k-kuñjam,* பெ. (n.) மருள்; bowstring - hemp - Sansiviera roxburghiana (சா.அக.).

[சணப்பு + குஞ்சம்]

**சணப்புப்புளிச்சை** *šaṇappu-p-puḷiccai,* பெ. (n.) புளிச்சை வகை; Indian brown hemp.

[சணப்பு + புளிச்சை]

**சணப்பை** *šaṇappai,* பெ. (n.) சணல்[1] பார்க்க; see *šaṇal.*

[சணப்பு → சணப்பை (வ.வ. 139)]

**சணம்** *šaṇam,* பெ. (n.) சணல் (மூ.அ.) பார்க்க; see *šaṇal.*

[சடம் → சணல் (வ.வ. 139)]

**சணம்பு** *šaṇambu,* பெ. (n.) சணல்[1] பார்க்க; see *šaṇal.* "சணம்போடு பருத்தி" (காசிக. பிரமச. 14).

[சணம் → சணம்பு (வ.வ. 139)]

**சணமம்** *šaṇamam,* பெ. (n.) சணகம்[3] பார்க்க; see *šaṇagam* (சா.அக.).

[சணகம் → சணமம்]

**சணமாலி** *šaṇamāli,* பெ. (n.) இலவு; silk cotton- Bombax malabaricum (சா.அக.).

**சணல்**[1] *šaṇal,* பெ. (n.) பழுப்புநிற நாரினால் திரிக்கப்பட்ட சிறுகயிறு; cord made by twisting together strands of jute.

[சள் → சண் → சணல்]

**சணல்**[2] *šaṇal,* பெ. (n.) செடிவகை; sunn-hemp.

ம. சண, சணம்; H., Mar. saṇa; Beng., Guj., Skt. šaṇa

*[சள்ளுதல் = சிக்குதல். சடாய்த்தல் = அடர்ந்துவளர்தல். சடை = நார். சடைத் தேங்காய் = நார்த்தேங்காய். சடை → சடம் → சடம்பு = நாருள்ள சணற் செடி. சடம் → சணம் = சணல். சணம் → சணம்பு = சணல். சணப்பு = சணல். சணப்பு → சணப்பை = சணல். சணம் → சணல் (வ.வ. 137)]*

த. சணல் → Skt. śaṇa

**சணல்நார்** *šaṇal-nār,* பெ. (n.) *1.* புளிச்சைக் கீரையிலிருந்து எடுக்கும் ஒருவகை நார்; fibres taken out from sour green or chicori plant. *2.* சணப்பு; fibres of Chennai hemp (சா.அக.).

மறுவ. காசினிக்கீரை

ம. சணநாரு

*[சணல் + நார்]*

**சணல்நூல்** *šaṇal-nūl,* பெ. (n.) சணல் நாரினால் செய்த நூல்; thread made of jute fibre.

ம. சணநூல்

*[சணல் + நூல்]*

**சணல்வலை** *šaṇal-valai,* பெ. (n.) சணல் நாராலான வலைவகை; a hemp net to catch big fishes.

*[சணல் + வலை]*

**சணல்வித்து** *šaṇal-vittu,* பெ. (n.) சணலரிசி பார்க்க; see *šaṇalariši.*

ம. சணவித்து

*[சணல் + வித்து]*

**சணலரிசி** *šaṇalarisi,* பெ. (n.) *1.* சணல் செடியின் விதை; seed of jute plant. *2.* ஒரு வகை நெல்; a kind of paddy.

ம. சணயரி

*[சணல் + அரிசி. அரி → அரிசி]*

**சணற்சரடு** *šaṇaṟ-šaraḍu,* பெ. (n.) சணல்நூல் கொண்டு செய்த சரடு; cord made of jute threads.

ம. சணச்சரடு

*[சணல் + சரடு]*

**சணற்பநார்** *šaṇaṟpa-nār,* பெ. (n.) சணல்நார்; fibres of flax.

தெ. சனபநார

*[சணல் → சணப்பு → சணற்ப + நார்]*

சணப்பநார் பார்க்க

**சணற்புரி** *šaṇaṟ-puri,* பெ. (n.) சணற்கயிறு; flax cord, hempen rope.

*[சணல் + புரி]*

**சணாய்[1]-த்தல்** *šaṇāi-,* 4 செ.கு.வி. (v.i.) காமங்கொள்ளுதல்; to be inflammed with passion or lust.

*[சண்ணு → சணாய்-,]*

**சணாய்[2]** *šaṇāy,* பெ. (n.) கடலை (சங்.அக.); Bengal gram.

ம. சணாயி

*[சணகம் → சணாய்]*

**சணாவு** *šaṇāvu,* பெ. (n.) கையாந்தகரை (மலை); a plant growing in wet places - Eclipta alba.

*[சள் → சதுப்பு = சேற்று நிலம். சள் → சண் → சணவு → சணாவு = நீர்கோத்த நிலத்தில் வளர்வது]*

**சணை-த்தல்** *šaṇai-,* 4 செ.கு.வி. (v.i.) கொழுத்தல் (யாழ்ப்.); to grow luxuriant, as trees; to become stout, as persons.

*[சினை → சனை → சணை-,]*

**சணைப்பு** *šaṇaippu,* பெ. (n.) *1.* கிளைப்பு; branching. *2.* செழிப்பு; flourishing.

*[சணை → சணைப்பு]*

**சத்தக்கட்டை** *šatta-k-kaṭṭai,* பெ. (n.) குறைவான வண்டிக்கூலி முதலியன; low cartage, low hire.

*[சத்தம் + கட்டை. சத்தம் = வண்டிகூலி, வாடகை]*

**சத்தக்காரன்** *šatta-k-kāraṉ,* பெ. (n.) *1.* கூலிக்காரன்; wage earner. *2.* வண்டிக்காரன்; cart owner (சேரநா.).

ம. சத்தக்காரன்

*[சத்தம் + காரன்]*

**சத்தக்கூலி** *šatta-k-kūli,* பெ. (n.) நெல் முதலிய பொருள்களை ஓரிடத்திலிருந்து எடுத்துச் செல்வதற்கு மாட்டுவண்டிக்குரியவன் பெறும் கூலி; cartage. "நிசதம் பதின்கலமாக ஏழு நாளைக்கு எழுபதின் கலம் சத்தக் கூலியுட்பட" *(தெ.க.தொ. 19: க. 194).*

மறுவ. வண்டிச் சத்தம்

ம. சத்தக்கூலி

*[சத்தம் + கூலி]*

**சத்தகம்**[1] *šattagam,* பெ. (n.). சிறுகத்திவகை *(யாழ்ப்.);* curved knife, small bill-hook.

*[சட்டு → சட்டகம் → சத்தகம்]*

சத்தகம் → Skt. śastraka

**சத்தங்கேள்-தல் (சத்தங்கேட்டல்)** *šattaṅ-gēḷ-* 16 செகுவி. (v.i.) வண்டிவாடகை பேசுதல் (இவ.); to settle cartage.

*[சத்தம் + கேள்-,]*

**சத்தசா** *šattasā,* பெ. (n.) மகிழம்பூ; ape-face flower - Mimusops elengi *(சா.அக.).*

**சத்தசாதாரணை** *šattasādāraṇai,* பெ. (n.) சத்தசாரணை பார்க்க; see *šatta-šāraṇai.*

*[சத்தசாரணை → சத்தசாதாரணை]*

**சத்தசாரணை** *šattašāraṇai,* பெ. (n.) ஒரு வகை மூலிகை *(M.M.893);* a medicinal plant.

*[சத்து → சத்த + சாரணை]*

**சத்தபேதி** *šattapēdi,* பெ. (n.) கொடுக்காய்ப் புளி; Malabar tamarind - Gareinia gambogia *(சா.அக.).*

**சத்தபரியாயம்** *šatta-pariyāyam,* பெ. (n.) பெருவேம்பு; large neem or mountain neem - Melia composita *(சா.அக.).*

**சத்தம்** *šattam,* பெ. (n.) 1. வண்டிக்கூலி; cartage. 2. வாடகை (உ.வ.); hire. 'ஊருக்குப் போக வர வண்டிச் சத்தம் 2 உருபாய்' *(உ.வ.).*

ம. சத்தம்

*[சாத்து : பண்டங்களைக் கொண்டுவிற்கும் வணிகர் கூட்டம். சாத்து வண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் → சத்தம். சத்தம் = வண்டிக்கூலி]*

**சத்தமார்க்கம்** *šatta-mārkkam,* பெ. (n.) கமுகு; areca-nut tree - Acaciacatechu *(சா.அக.).*

**சத்தயோனி** *šatta-yōṉi,* பெ. (n.) மலைமகள் *(கூர்மபு. திருக்கலியாண. 23);* Pārvadi.

**சத்தறை** *šattaṟai,* பெ. (n.) திருவள்ளூர் மாவட்டத்தில் அமைந்துள்ள ஊர்; a village in Tiruvaḷḷūr district.

*[சாய் → சா → சத்து + அறை]*

**சத்தன்** *šattaṉ,* பெ. (n.) 1. ஆற்றலுள்ளவன்; able energetic person. 2. உருவிலியான சிவன்; the formless Sivaṉ, as the embodiment of energy. "சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே" *(சி.சி. 2. 76).*

*[சத்து → சத்தன்]*

**சத்தி**[1] *šatti,* பெ. (n.) 1. ஆற்றல் (பிங்.); ability, power, strength, energy. 2. சிவன் அருள்; grace of Sivaṉ. "ஈசன்றன் சத்தி தோய" *(சி.சி. 4, 40);* 3. உமை, மலைமகள்; Pārvadi, Śivaṉ's energy. "சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகும்" *(சி.சி. 1, 62).* 4. வேல்; spear, dart. "தாமேற் றழுத்திய சத்தி வாங்கி" *(பெருங். மகத. 20, 63).* 5. சூலம்; trident. "வித்தகக் கைவினைச் சத்தி" *(பெருங். மகத. 14, 153).* 6. சொல்லாற்றல் (பி.வி. 18, உரை); signification of a word. 7. கந்தகம் (வின்.); sulphur. 8. நெல்லிக்காய்க் கந்தகம் (தைலவ.தைல. 69); myrobalan sulphur. 9. வழலை; soap. 10. நிமிளை (மூ.அ); bismuth pyrites. 11. நீர்முள்ளி (மலை.); white long-flowered nail-dye. 12. குடை; umbrella. 13. இசைச் செய்யுள் (அக.நி.); a melodious verse.

*[சத்து → சத்தி]*

**சத்தி**[2] *šatti,* பெ. (n.) விருந்து; feast (இட.வ.).

*[சொல் + தி = சொன்றி → சொந்தி → சொதி → சதி = சோறு. சதி → சத்தி = சோற்றுடன் கூடிய விருந்து]*

**சத்திக்குடம்** *šatti-k-kuḍam,* பெ. (n.) மாளிகை மேல் வைக்கப்படும் சூலம் நாட்டிய குடம்; a metal vessel with a javelin or trident fixed in it placed on the terrace of a building. "சத்திக்குடத் தொடு தத்துற லோம்பி" *(பெருங். இலாவாண. 20, 111).*

*[சத்தி + குடம்]*

**சத்திக்கூற்றோன்** *šatti-k-kūṟṟōṉ,* பெ. (n.) நவச்சாரம் (சங்.அக.); sal-ammoniac.

*[சத்தி + கூற்றோன்]*

**சத்திக்கொடி**[1] *šatti-k-koḍi,* கொம்மட்டிக் கொடி; creeper of water-melon (சா. அக.).

*[சத்தி + கொடி]*

**சத்திக்கொடி**[2] *šatti-k-koḍi,* தாடிமஞ்சம் என்னும் கொடி வகை (பிங்.); a kind of creeper.

*[சத்தி + கொடி]*

**சத்திகம்** *šattigam,* பெ. (n.) குதிரை (சது.); horse.

*[அதி = மிகுந்த. அதி → அதிகம் → சதிகம் → சத்திகம் = மிகுந்த வேகத்துடன் ஓடக் கூடியது]*

**சத்திகர்** *šattigar,* பெ. (n.) தேவதூத வகையினர் (R.C.); celestial powers.

*[சத்தி → சத்திகர்]*

**சத்திகா** *šattigā,* பெ. (n.) கொம்மட்டி; water-melon (சா.அக.).

*[சத்தி → சத்திகா]*

**சத்திகாட்சி** *šatti-kāṭci,* பெ. (n.) வலம்புரிக் கொடி; twisted-horn -helicteres isora alias isoria corylifolia (சா.அக.).

*[சத்தி + காட்சி]*

**சத்திகீலம்** *šatti-kīlam,* பெ. (n.) வீணையின் முறுக்காணி; violin's peg of stringed instrument.

*[சத்தி + கீலம்]*

**சத்திகுருநாதன்** *šatti-kurunādaṉ,* பெ. (n.) கஞ்சா (வின்.); Indian hemp.

**சத்திகோணம்** *šatti-kōṇam,* பெ. (n.) மலைமகளைக் குறிப்பதாக வரையும் கோணம் (சௌந்தர்ய. 11, உரை); a mystic diagram believed to represent Pārvadi.

*[சத்தி + கோணம். கொள் → கோள் → கோண் → கோணம்]*

**சத்திச்சாரம்** *šatti-c-cāram,* பெ. (n.) காந்தாரியுப்பு (வின்.); an acrid salt.

**சத்திசடாமூலி** *šatti-šaḍā-mūli,* சிற்றாமணக்கு; small-seeded castor plant - Ricinus communis (சா.அக.).

*[சத்தி + சடாமூலி]*

**சத்திசாரணை** *šatti-sāraṇai,* பெ. (n.) 1. காரீயத்தைப் பொடியாக்கும் மூக்கிரட்டை; spreading hog-weed - Boerhaavia repens alias B. procumbens. 2. வெள்ளைச் சாரணை; trianthema - Trianthema decandra (சா.அக.).

*[சத்தி + சாரணை]*

**சத்திதரன்** *šatti-daraṉ,* பெ. (n.) வேற்படையுடைய முருகன்; Murugan, as having javelin.

*[சத்தி + தரன்]*

**சத்திதீபம்** *šatti-dībam,* பெ. (n.) கோயில் விளக்குவகை (பரத. 4, ஒழி, பி.2, உரை); a kind of temple lamp.

*[சத்தி + தீபம். தீவம் → தீபம்]*

**சத்திநாகம்** *šatti-nāgam,* பெ. (n.) நீர்முள்ளி; water-thistle (சா. அக.).

*[சத்தி + நாகம்]*

**சத்திநாகிதம்** *šatti-nāgidam,* பெ. (n.) சங்கஞ்செடி பார்க்க; see *šaṅgañjeḍi* (சா. அக.).

**சத்திநாதம்** *šatti-nādam,* பெ. (n.) 1. பொன்னிறம்; golden colour. 2. பொன்னிமிளை; bismuth of a golden colour. 3. காக்காய்ப் பொன் (சங்.அக.); yellow mica.

*[சத்தி + நாதம்]*

**சத்திநாதனார்** *šatti-nādaṉār,* பெ. (n.) குறுந்தொகை 119ஆவது பாடலின் ஆசிரியர்; a saṅgam poet, author of Kuṟundogai-119.

*[சத்தி + நாதனார்]*

**சத்திநாயனார்** *šatti-nāyaṉār,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் (பெரியபு.); a canonized šaiva saint, one of 63.

*[சத்தி + நாயனார்]*

**சத்திபாசம்** *šatti-pāsam,* பெ. (n.) சிறு தும்பை; small leucas (சா.அக.).

*[சத்தி + பாசம்]*

**சத்திமான்** šattimāṉ, பெ. (n.) துணை வலிவு (ஆதரவு) உள்ளவன்; one endowed with power or strength. "சத்தி யனேகமாகிற் சத்திமானும் அனேகமாய்" (சி.சி. 1, 61, சிவாக்.).

*[சத்தி + மான். மகன் → மான்]*

**சத்திமுகம்** *šatti-mugam,* பெ. (n.) *அரசனின் ஆணை ஆவணம்;* royal mandate. "*சாலா போகமும் தேவதானமும் சத்திமுகமின்றி விலக்கப் பெறார்" (T.A.S. i, 9).*

ம. சத்திமுகம்

*[சத்தி + முகம்]*

**சத்திமுத்தம்** *šatti-muttam,* பெ. (n.) சத்திமுற்றம் பார்க்க; see *šatti-murram.*

*[சத்திமுற்றம் → சத்திமுத்தம். சத்திமுற்றம் = சத்தியின் பரப்பு]*

சத்தியாகிய உமையம்மை சிவனுக்கு முத்தம் கொடுத்த இடம் என்னும் பழங்கதை யடிப்படையில் பெயர் பெற்ற ஊர் என்பர்.

**சத்திமுற்றம்** *šatti-murram,* பெ. (n.) சோழ நாட்டில் தேவாரப் பாடல்பெற்ற தென்கரை ஊர்களுள் பட்டீச்சுரத்தின் மேற்பாலுள்ள திருச்சத்திமுற்றமெனும் ஊர்; a village near Pattišvaram. "தழற்கைத் தேவா திருச்சத்திமுற்றத் துறையும் சிவக்கொழுந்தே" *(தேவா. 4, 1).*

*[சத்தி + முற்றம்]*

**சத்தியம்** *šattiyam,* பெ. (n.) குறிஞ்சா (மூ.அ.); a species of sammony swallow-wort.

**சத்தியாசிரியன்** *šatti-y-āširiyan,* பெ. (n.) மேலைச் சாளுக்கிய நாட்டை ஆண்டவன்; a king of Mēlai-cāḷukkiya.

*[சத்தி + ஆசிரியன்]*

**சத்தியான்** *šattiyān,* பெ. (n.) முருகக் கடவுள்; god Murugan. "சத்தியான் றாடொழா தார்க்கு" *(இன். நாற். 1).*

*[சத்தி → சத்தியான் = வேற்படையையுடைய முருகன்]*

**சத்தியுடகூறு** *šatti-y-udakūru,* பெ. (n.) இருள் மரம்; serpent champak - Mesua ferrea *(சா.அக.).*

**சத்தியுப்பு** *šatti-y-uppu,* பெ. (n.) பூரவுப்பு (மூ.அ.); a kind of acrid salt.

*[சத்தி + உப்பு]*

**சத்தியுருவம்** *šattiyuruvam,* பெ. (n.) சிவனது அருள் வடிவம்; the manifested form of Šivan's grace.

*[சத்தி + உருவம். உரு → உருவம்]*

**சத்திரசாதி** *šattira-šādi,* பெ. (n.) சாதிபத்திரி; mace or pulp of nutmeg - Myristica fragrans *(சா.அக.).*

**சத்திரசாமம்** *šattira-šāmam,* பெ. (n.) இலந்தை; Indian almond - Zizyphus jujubi *(சா.அக.).*

**சத்திரப்பாடி** *šattira-p-pādi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Thanjavur district.

*[சத்திரம் + பாடி]*

'பாடி' என்பது முல்லை நிலச் சிற்றூர். மன்னர், குறுநிலத் தலைவர் ஆகியோர் படைவீடு கொண்ட இடம், பெருநகரம்.

**சத்திரபேட்சம்** *šattira-pētsam,* பெ. (n.) பேயத்தி; devil's fig - ficus hispida *(சா.அக.).*

**சத்திரம்**[1] *šattiram,* பெ. (n.) பயணிகள் தங்குமிடம் (பிங்.); choultry, rest-house. "சத்திர முதலான சாலைகளிலே" *(சிலப். 4: 180, அரும்.).*

க. சக்ர; தெ. சத்ரமு

*[சாத்து → சாத்திரம் → சத்திரம் = வழிச் செல்வோர் தங்குமிடம்]*

சாத்து = வணிகர் கூட்டம். முற்காலத்தில் அயலிடச் செலவு மேற்கொண்டோர் சாத்துகள் ஆகையால் அவர்கள் தங்கிய இடம் சத்திரமாயிற்று.

**சத்திரம்**[2] *šattiram,* பெ. (n.) 1. கவிழ்தும்பை; a low annual flourishing in dry lands. 2. தும்பை; white dead-nettle.

**சத்திராட்சி** *šattirātci,* பெ. (n.) அரத்தை (வின்.); galangal.

*[சத்திராத்தி → சத்திராட்சி]*

**சத்திராத்தி** *šattirātti,* பெ. (n.) அரத்தை (மலை.); galangal.

*[சத்திரத்தை → சத்திராத்தை → சத்திராத்தி]*

**சத்திராபாவம்** *šattirā-bāvam,* பெ. (n.) நாகமுட்டி; frog - creeper - Tiliacora racemos *(சா.அக.).*

**சத்திரி** *šattiri,* பெ. (n.) யானை (சங்.அக.); elephant.

*[சத்து → சத்திரி]*

**சத்திரூபம்** *šatti-rūpam,* பெ. (n.) சத்தியுருவம் பார்க்க; see *šatti-y-uruvam.*

*[சத்தி + ரூபம். உருத்தல் = தோன்றுதல். உரு = தோற்றம், வடிவம், வடிவுடைப் பொருள், உடல். உரு → உருவு → உருவம்]*

த. உருவம் → Skt. rūpa → த. ரூபம்

**சத்திலி** *šattili,* பெ. (n.) கருப்பூரம்; camphor.

*[சத்து + இலி]*

**சத்திவட்டம்** *šatti-vaṭṭam,* பெ. (n.) விருந்தின் உணவுவகைகள் (நாஞ்.); viands of a feast.

*[சத்தி² + வட்டம்]*

**சத்து**[1] *šattu,* பெ. (n.) *1.* சாரம் (தைலவ. பாயி. 30); essence, as of medicines. *2.* அறிவு (வின்.); wisdom. *3.* மெய்யுணர்வாளன் (ஞானி); sage. *4.* நன்மை; virtue, goodness, moral excellence.

*[அள் → சள் → சழி. சழிதல் = நெருங்கிக் கிடத்தல், அள்ளுதல்= செறிதல். சள் → (சண்) → சத்து = நெருக்கிப் பிழிவதால் கிடைக்கும் சாரம், நிறைந்திருக்கும் பொறியுணர்வு, அத் தன்மை கொண்டவர், அவ்வறிவால் கிடைக்கும் நன்மை.]*

**சத்து**[2] *šattu,* பெ. (n.) *1.* கருப்பூரசிலாசத்து (சங்.அக.); a variety of gypsum. *2.* துத்தம் (பைஷஜ.86.); sulphate of zinc.

*[சள் → (சண்) → சத்து]*

**சத்து**[3] *šattu,* பெ. (n.) அமைதியாயிருக்க வழங்குங் குறிப்புச் சொல் (கோயிலொ.); onom. expr. signifying silence.

க., தெ. சத்து

**சத்து**[4] *šattu,* பெ. (n.) ஒரு வகைச் செய்நஞ்சு (மூ.அ.); a mineral poison.

**சத்து**[5] *šattu,* வி.எ. (part.) இறந்து; having died.

*[சாய் → சா. சாதல் = இறத்தல். சா → சத்து. நெடில் வினைமுதல் இறந்தகால வினையில் குறுகும். ஒ.நோ. காண்→ கண்டான், கண்டு]*

ša or šag-u, to die; Tel. chachu (base cha). Comp. samōiede chawe and chabbi, dead (C.G.D.F.L. 619).

**சத்துக்கொடு-த்தல்** *šattu-k-koḍu-,* 4 செ.குவி. (v.i.) வலிமையுண்டாக்குதல்; to communicate power, strength, tone.

*[சத்து + கொடு-,]*

**சத்துகம்** *šattugam,* பெ. (n.) வன்னிமரம்; Indian mesquit, Arjuna's penance tree - Prosopis spicigera (சா.அக.).

*[சத்து → சத்துகம்]*

**சத்துச்சாரணை** *šattu-c-cāraṇai,* பெ. (n.) சத்திசாரணை (யாழ். அக.) பார்க்க; see *šatti-šāraṇai.*

*[சத்து + சாரணை]*

**சத்துணவு** *šattuṇavu,* பெ. (n.) உடலுக்கு வளர்ச்சியும் வலிமையும் அளிக்கக்கூடிய சத்துள்ள பொருட்களால் சமைக்கப்பட்ட உணவு; nutritious meal. முதலமைச்சர் சத்துணவுத் திட்டம்.

*[சத்து + உணவு]*

**சத்துப்பு** *šattuppu,* பெ. (n.) கறியுப்பு (மூ.அ.); common salt.

*[சத்து + உப்பு]*

**சத்துப்பை** *šattu-p-pai,* பெ. (n.) சத்துமா முதலியன வைக்கும் பை; bag for flour of parched grain.

*[சத்து + பை. பொய் → (பய்) → பை = உட்டுளையுடையது]*

**சத்துமத்து** *šattumattu,* பெ. (n.) அடிப்படைக் காரணம் (வின்.); seed or originating principle.

*[சத்து + மத்து. எதுகை நோக்கி வந்த இணைமொழி]*

**சத்துமா** *šattu-mā,* பெ. (n.) பொரித்த அரிசியின் மா, நோன்புக் கால ஊட்ட உணவு; flour of parched grain, especially rice, generally used in time of fasting.

*[சத்து + மா]*

**சத்துமொத்தெனல்** *šattu-motteṉal,* பெ. (n.) திரும்பத் திரும்ப அடித்தலை உணர்த்தும் ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying repeated sound, as of kicking, beating, pounding grain.

*[சத்து + மொத்து + எனல்]*

**சத்துரு** *šatturu,* பெ. (n.) தண்ணீர்விட்டான் கிழங்கு; water root - Asparagus racemoses (சா.அக.).

**சத்துருவாசம்** *šatturu-vāsam,* பெ. (n.) *காணம் அல்லது கொள்;* horse-gram.

**சத்துவக்கு** *šattu-vakku,* பெ. (n.) மலை விராலி; fish poison cedar tree - Walsura piscidia *(சா.அக.).*

**சத்துவகம்** *šattu-vagam,* பெ. (n.) *கருவாகை;* Fragrant acacia - Mimosa marginata *(சா.அக.).*

**சத்துவகர்** *šattuvagar,* பெ. (n.) இறும்பூதுகளை (அற்புதங்களை) நிகழ்த்தவல்ல தேவதூதர் (R.T.); angels gifted with the power of performing miracles, a celestial order.

*[சத்து → சத்துவகர்]*

**சத்துவகுணம்** *šattuva-kuṇam,* பெ. (n.) முக்குணங்களுள் சிறந்ததாய் நற்செயல் களிலேயே நோக்கம் உண்டாக்குவதான குணம் (குறள், கடவுள். பரி.); goodness or virtue, one of mu-k-kuṇam.

*[சத்து → சத்துவம் + குணம். கொள்ளுதல் = கொண்டிருத்தல், உடையனாயிருத்தல். கொள் → கொள்கை = இயல்பு. கொள் → கோள் = தன்மை. கொள் → (கொண்) → (கொணம்) → குணம் = கொண்ட தன்மை, தன்மை]*

**சத்துவம்** *šattuvam,* பெ. (n.) 1. *சாரம்;* essence, essential principle. 2. வலிமை (சூடா.); strength, power, ability, vigour. 3. *உளதாந்தன்மை;* existence.

*[சத்து → சத்துவம்]*

**சத்துவலாகம்** *šattuvalāgam,* பெ. (n.) *மலை வன்னி மரம்;* penance tree on hill-tops - Prosopis spicigera *(சா.அக.).*

**சத்துவளையன்** *šattu-vaḷaiyan,* பெ. (n.) திகைப்பூச்சி; an insect inducing perplexity of mind when coming in contact *(சா.அக.).*

மறுவ. குழியானை

*[சத்து + வளையன்]*

**சத்துவாச்சேரி** *šattuvā-c-cēri,* பெ. (n.) வேலூருக்கு அருகிலுள்ள ஊர் (தெ. க. தொ. 1: க. 47. 22.); name of a village in Vēlūr.

**சதக்கல்** *šadakkal,* பெ. (n.) சதுப்பு நிலம்; marsh, mire.

*[சள் → சது → சதுப்பு. சள் → சத+கால் – சதக்கால் → சதக்கல்]*

**சதக்காசிதம்** *šadakkāšidam,* பெ. (n.) முல்லைப் பூ; smooth jasmine - Jasminum Trichotomum *(சா.அக.).*

**சதக்காரை** *šadakkārai,* பெ. (n.) ஒருவகைக் *காரைச் செடி;* a kind of webera- Canthium genus *(சா.அக.).*

**சதகம்** *šadagam,* பெ. (n.) தான்றி; bellerie myrobalan.

**சதகரம்** *šadagaram,* பெ. (n.) *சாதிக்காய்;* nutmeg - Myristica fragrans *(சா.அக.).*

**சதகுப்பி** *šadakuppi,* பெ. (n.) 1. மருந்தாகப் பயன்படும் மூலிகை (M.M. 852); dill. 2. ஓமம் (வின்.); bishop's weed.

மறுவ. சோகிக்கீரை

*[சதகுப்பை → சதகுப்பி]*

**சதகுப்பிசக்களவன்** *šadakuppi-šakkaḷavan,* பெ. (n.) காட்டுச் சதகுப்பை என்னும் ஒரு வகைக் கடைச்சரக்கு; a wild plant akin to common dill - Anethum graveolens, a bazaar drug *(சா.அக.).*

*[சதகுப்பை → சதகுப்பி + சக்களவன்]*

**சதகுப்புகம்** *šadakuppugam,* பெ. (n.) முருங்கை; Indian horse radish - Moringa pterygosperma *(சா.அக.).*

**சதகுப்பை** *šadakuppai,* பெ. (n.) மென்மையான இலைகளையும் வெளிர் மஞ்சள் நிற விதைகளையும் கொண்ட ஒரு வகைச் சிறுசெடி; the medicinal herb, dill.

**சதங்கை** *šadaṅgai,* பெ. (n.) 1. கிங்கிணி; string of small metal bells. 2. பெண்களும் குழந்தைகளும் அணிந்து கொள்ளும் ஓரணி, சலங்கை; string of small silver or gold bells, worn by children and women as an ornament for the feet or waist. "பரியகம் நூபுரம் பாடகஞ் சதங்கை" (சிலப். 6, 84, உரை).

மறுவ.. கிண்கிணி, சிறுமணி

ம. சதங்க

*[சல் → சல → சலங்கை → சதங்கை. ஒ.நோ: கல் → கல → கலம்பு → கலம்பம் → கதம்பம். ல → த. பேரலி (வ.வ. 125)]*

சதங்கை → Skt. sruṅkhala

**சதங்கைக்கொதி** *šadangai-k-kodi,* பெ. (n.) உலைநீரின் ஒருவகைக் கொதிப்பு; boiling of water or liquid-food characterised by bubbling.

*[சலங்கை → சதங்கை + கொதி]*

சலங்கை ஒலியைப் போல் இயைபுடன் ஒலி உண்டாக்கும் கொதிப்பு.

**சதங்கைத் தாமம்** *šadangai-t-tāmam,* பெ. (n.) ஒருவகைப் பூமாலை; a kind of garland. "மதங்கமழ் நறுமலர்ச் சதங்கைத் தாமமும்" (பெருங். மகத. 9, 45).

*[சதங்கை + தாமம். தாம்பு = கயிறு. தாம்(பு) → தாமம்]*

**சதங்கைப்பூரம்** *šadangai-p-pūram,* பெ. (n.) சதங்கைப்பூரான் (வின்.) பார்க்க; see *šadangai-p-pūrān.*

ம. சதங்கப்பூரம்

*[சதங்கை + பூரம்]*

**சதங்கைப்பூரான்** *šadangai-p-pūrān,* பெ. (n.) பூரான் வகை; a large species of centipede.

ம. சதங்கப்பூரம்

*[சதங்கை + பூரான்]*

**சதங்கைமாலை** *šadangai-mālai,* பெ. (n.) 1. ஒருவகைக் கழுத்தணி; a kind of neck-ornament. 2. மாலை வகை; a kind of garland. 3. எருது குதிரைகளின் கழுத்தணி; a string bells for the neck of cattle and horses.

ம. சதங்கமால

*[சதங்கை + மாலை]*



சதங்கை மாலை

**சதச்சதம்** *šada-c-cadam,* பெ. (n.) 1. வெண்ணாரை; white cormorant. 2. தச்சன் குருவி; wood-pecker (சா.அக.).

**சதசத-த்தல்** *šada-šada-,* 4 செ.கு.வி. (v.i.) ஈரப் பற்றாயிருத்தல்; to be damp, wet.

*[சதசதம் = ஒலிக்குறிப்புச் சொல். சதசதம் → சதசதத்தல்]*

**சதசதப்பு** *šadašadappu,* பெ. (n.) மண், மணல், களிமண் முதலியவற்றில் நீர்பட்டுக் குழைவாக இருக்கும் நிலை; wetness, sogginess. இந்தச் சதசதப்பில் வெறுங்காலோடு நடந்தால் சேற்றுப்புண் வரும்.

பட. சொதசொத

*[சதசதம் → சதசதப்பு. 'பு' -பெ.ஆ.ஈறு]*

**சதசதெனல்** *šadašadenal,* பெ. (n.) அழுகுதற் குறிப்பு; expr. of rotting. "சதசதென் றழுகுதுர்க்கந்த சாக்கடையான சமுசாரமதி லுழல்வனோ" (மஸ்தான். 130).

*[சதசத + எனல்]*

**சதபருவம்** *šada-paruvam,* பெ. (n.) 1. நீர்முள்ளி; blue-flowered water-thistle. 2. கறுப்பறுகு; dark panic grass - Cynodon genus (சா.அக.).

**சதபுட்பம்** *šada-putpam,* பெ. (n.) சதகுப்பி (மலை.) பார்க்க; see *šadakuppi.*

**சதபுட்பி** *šada-putpi,* பெ. (n.) சதகுப்பி (தைலவ. தைல. 59) பார்க்க; see *šadakuppi.*

**சதம்** *šadam,* பெ. (n.) சந்தனமரம்; sandal wood tree (சா.அக.).

*[சந்தனம் → சந்தம் → சதம்]*

**சதமூலம்** *šada-mūlam,* பெ. (n.) சதமூலி பார்க்க; see *sada-mūli* (சா.அக.)

**சதமூலி** *šada-mūli,* பெ. (n.) தண்ணீர்விட்டான் கிழங்கு; water-root - asparagus racemoses (சா.அக.).

*[சதமூலம் → சதமூலி]*

**சதமூலை** *šada-mūlai,* பெ. (n.) மிக ஒதுக்கமான மூலை (இ.வ.); remote corner.

**சதர்ச்சி** *šadarcci,* பெ. (n.) சதுரக்கள்ளி; square purge - Euphorbium antiguorum (சா.அக.).

*[சதுரம் → சதுர்ச்சி → சதர்ச்சி]*

**சதரம்** *šadaram,* பெ. (n.) சடலம் பார்க்க; see *šaḍalam.*

*[சடலம் → சதரம். சதரம் கொச்சைத் திரிபாகச் சதிரம் என்றும் வழங்குகிறது.]*

**சதரி** *šadari,* பெ. (n.) நாட்டு அதிமதுரம்; Indian or country liquorice - Abrus prešatorius *(சா.அக.).*

**சதவல்** *šadaval,* பெ. (n.) 1. சதுப்புநிலம் *(சங்.அக.);* damp, swamp, marshy land. 2. குப்பை; rubbish.

ம. சதவல்

*[சத → சதவல்]*

**சதவீரியம்** *šada-vīriyam,* பெ. (n.) வெள்ளறுகு *(மலை.);* white bermuda grass.

**சதவீரு** *šadavīru,* பெ. (n.) மல்லிகை *(மலை.);* Arabian jasmine.

**சதவீருகம்** *šada-vīrugam,* பெ. (n.) முந்திரிப் பருப்பு; cashew-nut - Anacardium occide.

**சதவேலி** *šadavēli,* பெ. (n.) சதாமூலம் பார்க்க; see *šadā-mūlam (சா.அக.).*

*[சதாவேரி → சதாவேலி]*

**சதளக்காரன்** *šadaḷa-k-kāraṉ,* பெ. (n.) பெருங்குடும்பக்காரன் *(இ.வ.);* man of large family.

*[சதளம் + காரன்]*

**சதளம்** *šadaḷam,* பெ. (n.) கூட்டம்; multitute. சனசதளம் *(ராட்.)*

*[அதித்தல் = மிகுதல். அதி + அனம் - அதனம் = அதிகம், மிகுதி, மிகை. அதனம்→ சதனம் → சதளம்]*

**சதாப்பன்** *šadāppaṉ,* பெ. (n.) எருக்கு; madar-plant - Caltropis gigantea *(சா.அக.).*

**சதாப்பு** *šadāppu,* பெ. (n.) துளசி போன்ற சிறுசெடி; a little plant.

இதன் இலை காரமும் மணமும் உடையது; இருமலைக் கண்டிக்கவும், கறி சமைக்கவும் பயன்படும்.

**சதாமூலம்** *šadā-mūlam,* பெ. (n.) ஒரு வகைத் தண்ணீர்விட்டான் கிழங்கு; a kind of water-root.

**சதாமூலி** *šadā-mūli,* பெ. (n.) ஒருவகைப் பழம்; melon fruit *(சா.அக.).*

*[சதமூலி → சதாமூலி. மூல் → மூலி]*

**சதாரம்** *šadāram,* பெ. (n.) 1. இடி; thunderbolt. 2. நூறுகோடி; one hundred crores.

**சதாரை** *šadārai,* பெ. (n.) சதுரமான ஒருவகை ஆரைக்கீரை; a kind of water plant called sweet green-Marsilea quadirfolia *(சா.அக.).*

*[சதுர(ம்) + ஆரை→ சதுராரை→ சதாரை]*

**சதாவரி** *šadāvari,* பெ. (n.) பாம்பு கொல்லி; plant curing snake bites *(சா.அக.).*

**சதாவரிக்கிழங்கு** *šadā-vari-k-kiḻaṅgu,* நிலப்பனைக் கிழங்கு; root of ground palm.

*[சதாவரி + கிழங்கு]*



சதாவரிக்கிழங்கு

**சதாவளி** *šadāvaḷi,* பெ. (n.) வெள்ளைக் காக்கணம்; white-flowered mussell - shell creeper - Clitoria ternatea *(சா.அக.).*

**சதாவு-தல்** *šadāvu-,* 5 செ.கு.வி. (v.i.) பழுதாதல்; to be shattered or broken; to be rotten; to be decayed. "அனைத்துருஞ் சதாவியிட" *(பாரத. பன்னிரண்டாம். 23)*

*[சதசதப்பு → சதவு → சதாவு]*

**சதாவேதி** *šadā-vēdi,* பெ. (n.) சுக்கான் கீரை; a kind of soursorrel - Rumex vesicarius *(சா.அக.).*

**சதாவேரி** *šadāvēri,* பெ. (n.) சதாமூலம் பார்க்க; see šadā-mūlam.

ம. சதவேரி

**சதானம்** *šadāṉam,* பெ. (n.) பருத்தி; cotton-tree-Gossypium herbaceum *(செ.அக.).*

**சதி[1]-த்தல்** *šadi-,11* செ. குன்றாவி. (v.t.) அழித்தல்; to destroy, kill. "மாயனை...... சதிப்பதே கருமம்" (பாரத. கிருட். 178).

[அழி → சழி → சதி-,]

**சதி[2]-த்தல்** *šadi-,11* செகுன்றாவி. (v.t.) ஏமாற்றுதல்; to deceive. 'சூதுகொண்டு சதிப்பதே கருமமென்றான்' (பாரத. சூது. 24) 2. மறைத்தல், மந்தணமாகச் செயற்படுதல்; to conceal. 3. முட்டாளாக்குதல்; to be fool, to play a wilful act of trickery, to deceive by artifices.

ம. சதிக்குக; து., குட. சதி.

[அழி → சழி → சதி]

**சதி[3]** *šadi,* பெ. (n.) ஏமாற்றம் (வஞ்சனை); treachery, perfidy, wiles.

ம. சதி; க. சத்தக.

[சதி[2] → சதி]

**சதி[4]** *šadi,* பெ. (n.) சோறு (பிங்.); cooked rice.

[சொல் + தி → சொன்றி → சொந்தி → சொதி → சதி]

**சதி[5]** *šadi,* பெ. (n.) தீக்கடை கோல்; fire-producing mechanism. "சதி கொண்ட சாக்கி யெரியின் வடிவாம்" (திருமந். 1653)

மறுவ. ஞெலிகோல்

[சுழி = சுழற்றுதல், கடைதல். சுழி → சுதி → சதி]

**சதி[6]** *šadi,* பெ. (n.) விரைவு; haste, speed, quickness. சதியாய் வா.

[சடுதி → சதி]

**சதி[7]** *šadi,* பெ. (n.) வட்டம் (பிங்.); circle, periphery.

[சுல் → சுள் → சுளி → சளி. சளிதல் = ஒரு பக்கம் சரிதல். சளி → சதி]

**சதி[8]** *šadi,* பெ. (n.) தாளவொத்து; agreement of time in music and dancing. "நன்மாதர் சதிபட மாநட மாடி" (தேவா. 118, 3)

[சுதி → சதி]

**சதிக்குற்றம்** *šadi-k-kurram,* பெ. (n.) ஏமாற்றிய குற்றம்; crime of deceit.

ம. சதிக்குற்றம்

[சதி + குற்றம்]

**சதிகாரன்** *šadikāran,* பெ. (n.) ஏமாற்றுபவன்; treacherous, decitful person, traitor.

ம. சதிக்காரன். தெ. சித்துலவாடு

[சதி + காரன்]

**சதிகொலை** *šadi-kolai,* பெ. (n.) படுகொலை; assassination, deliberate murder.

[சதி + கொலை]

**சதிங்கி** *šadiṅgi,* பெ. (n.) கப்பற்பாயின் மூலைகளைப் பாய்மரத்தின் மேலாக இழுத்துக் கட்டுதற்கு உதவுங்கருவி; clew-line.

[சழி → சதி → சதிங்கி]

**சதித்திட்டம்** *šadi-t-tiṭṭam,* பெ. (n.) ஏமாற்றுவதற்காகப் போடும் திட்டம்; plan to deceit, treachery.

[சதி + திட்டம்]

**சதிநாகம்** *šadi-nāgam,* பெ. (n.). மூங்கிலரிசி; bamboo sago-Bambusa arundinacea (சா.அக.).

**சதிபாய்-தல்** *šadi-pāy-,* 2 செ.கு.வி. (v.i.). நாட்டியமாடுதல்; to dance. "தாளத்திற் கொக்கச் சதி பாயுங் குதிரை" (பு.வெ. 6, 18, உரை).

[சதி[8] + பாய்-,]

**சதிமகள்** *šadimagaḷ,* பெ. (n.) இந்திரன் மனைவி (இந்திராணி); Indira's wife.

[சதி + மகள்]

**சதியம்பு** *šadiyambu,* பெ. (n.) மறை விடத்திலிருந்து விடும் அம்பு; a treacherous arrow, an arrow shot from ambush. (சேரநா.)

ம. சதியம்பு

[சதி + அம்பு]

**சதியன்** *šadiyan,* பெ. (n.) ஏமாற்றுப் பேர்வழி; a deceiver, cheat, crook.

ம. சதியன்

[சதி + அன்]

**சதிர்[1]-த்தல்** *šadir-,* 11 செ.கு.வி. (v.i.) வலிமை பெறுதல்; to gain strength or power. "அன்பனா யடியேன் சதிர்த்தேன்" (திவ்.கண்ணிநுண்.5).

ம. சதிர்

[சதுர் → சதிர்]

**சதிர்**[2] *šadir,* பெ. (n.) *1.* திறமை; ability, skill, dexterit. *2.* பெருமை; greatness, excellency. "சனகன் சதிருரையாதவர்" (பிரபோத. 5, 32). *3.* பேறு; fortune, blessing. "மா சதிரிது பெற்று" (திவ். திருவாய். 2, 7,1). *4.* அழகு; beauty, loveliness. "சதிரா யிருந்த ரதி" (தனிப்பா. 8, 10, 1). *5.* நிலைமை; state, condition. "தவிர்ந்த சதிர் நினைந்தால்" (திவ். திருவாய். 8, 10, 1).

[சதுர் → சதிர்]

**சதிர்**[3] *šadir,* பெ. (n.) *1.* குறைந்த விலை; low price, cheapness. சதிராய்க் கொண்டான் (வின்.) *2.* செட்டு; economy, frugality.

ம. சதிர்

[சதுர் → சதிர்]

**சதிர்**[4] *šadir,* பெ. (n.) எல்லை (இ.வ.); boundary, limit.

ம. சதிர்

[சதுர் → சதிர்]

**சதிர்**[5] *šadir,* பெ. (n.) நடனம் (நாட்டியம்); nautch.

[சதுர் → சதிர்]

**சதிர்**[6] *šadir,* பெ. (n.) பெரும்பயன் அளிக்குஞ் சிறு முயற்சி (ஈடு. 9,1,4); slight effort which produces great results.

[சதுர் → சதிர்]

**சதிர்க்கச்சேரி** *šadir-k-kaccēri,* பெ. (n.) நடன அரங்கு; nautch party.

[சதிர்[2] + கச்சேரி]

**சதிர்க்கிராமம்** *šadir-k-kirāmam,* பெ. (n.) எல்லைப்புறத்துள்ள சிற்றூர்; frontier town.

[சதிர் + கிராமம்]

**சதிர்த்தேங்காய்** *šadir-t-tēṅgāy,* பெ. (n.) நேர்த்திக் கடனாகவாவது கண்ணேறு கழிக்கவாவது சிதறவுடைக்கும் தேங்காய் (இ.வ.); coconuts thrown down and broken on special occasions in fulfilment of a vow or for averting an evil eye.

ம. சதிர்தேங்காய்

[சிதறு → சிதர் → சதிர் + தேங்காய்]

**சதிர்நெல்லி** *šadir-nelli,* பெ. (n.) சேலம் அருகிலுள்ள தீவட்டிப்பட்டியிலுள்ள கயிலாயமுடையார் கோயிலுக்கு இறையிலி நிலமாக வழங்கப்பட்ட சிற்றூர்; the name of a village gifted tax free to Kailāya muḍaiyār temple at Theevaṭṭipaṭṭi near Salem (ஆவணம் 1991-5).

[சதிர் + நெல்லி]

**சதிரக்கள்ளி** *šadira-k-kaḻḻi,* பெ. (n.) சதுரக்கள்ளி (பதார்த்த. 121) பார்க்க; see *šadura-k-kaḻḻi.*

ம. சதிரக்கள்ளி

[சதுரக்கள்ளி → சதிரக்கள்ளி]

**சதிரக்கோல்** *šadira-k-kōl,* பெ. (n.) நிலத்தை அளக்கப் பயன்பட்ட கோல்; land measured pole. "ஆதி.......... மகள் பேரில் சதிரக்கோலாய் ஐஞ்னூறு" (தெ.க.தொ. 12, க. 228: 3).

[சதுரம் → சதிரம் + கோல்]

**சதிரம்**[1] *šadiram,* பெ. (n.) கக்கரிவகை (மலை.); a kind of country melon.

**சதிரம்**[2] *šadiram,* பெ. (n.) நேர்கோணமுள்ளதும் அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான உருவம்; square. "சதிரத்திண்ணைத் தண்பூம் பந்தர்" (பெருங். இலாவாண, 2, 69)

ம. சதிரம்

[சதுரம் → சதிரம்]

**சதிராகூலி** *šadirā-kūli,* பெ. (n.) ஆவாரை; tanner's cassia - Cassia auriculata (சா.அக.).

**சதிராசா** *šadirāsā,* பெ. (n.) பார்ப்பை அல்லது பரம்பை மரம்; suma tree - Prosopis spicigera (சா.அக.).

**சதிராட்டம்** šaḍir-āṭṭam, பெ. (n.) நடனக் காட்சி; nautch performance.

[சதிர் + ஆட்டம். ஆடு → ஆட்டம்]

**சதிரி**[1] *šadiri,* பெ. (n.) திறமையுடையவள்; skilful or dexterous woman. "சத்தி சதிரி" (திருமந். 1194).

[சதிர் → சதிரி. 'இ' - பெ. பா. ஈறு]

**சதிரி**[2] *šadiri,* பெ. (n.) செம்பை; sesbane- Sesbania aegyptiaca (சா.அக.).

**சதிருக்குவா-தல்** (சதிருக்குவருதல்) *šadirukku-vā-,* 18 செ.கு.வி. (v.i.) வெளிப்படையாதல்; to appear before the public, to be made public.

*[சதிர் + கு + வா-,]*

**சதீலிகி**[1] *šadīlagi,* பெ. (n.) மூங்கில்; bamboo (சா.அக.).

**சதீலிகி**[2] *šadīligi,* பெ. (n.) முள்ளுக்கத்திரி; prickly brinjal - Solanum xanthocarpum (சா.அக.).

**சது**[1] *šadu,* இடை. (int.) ஓசையிடாதிருக்க வேண்டும் என்பதைக் குறிக்குஞ் சொல் (இவ.); an exclamation meaning silence.

**சது**[2] *šadu,* பெ. (n.) சதுர்[1] பார்க்க; see sadur[1] "சதுமுகமாகச் சேனை__ தலைப்பெய்க" (சீவக. 766).

*[சதுர் → சது]*

**சதுக்கத்தார்** *šadukkattār,* பெ. (n.) ஒரு குறிப்பிட்ட நிலப்பேரெல்லைக்குள் அடங்கிய ஊர்ப்பகுதியில் வாழ்பவர் (ஐந்து வட்டத்தார், ஏழு வட்டத்தார்); residents of few hamlets which come under a larger circle "வீரவல்லி சோலை பிரான் இரமவித்த னுள்ளிட்ட சதுக்கத்தார்க்குட்பட்ட ஐஞ்சாம் பாடகம்" (தெகதொ. 19. க. 222).

*[சதுக்கம் + அத்து + ஆர்]*

**சதுக்கப்பூதம்** *šadukka-p-pūdam* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்ததாகக் கூறப்பெறும் ஒரு பூதம்; a mythical devil mention in Šilappadigāram at Kāvirippūm paṭṭinam.

*[சதுக்கம் + பூதம். ஊது → பூது → பூதம் = பருத்தது, பெரியவுடம்பினைக் கொண்டது]*

தெருச் சந்தியில் இருக்கும் பூதம். பொய் புனை வாளரை (வேடத்தினரை)த் தன் கையிலுள்ள கயிற்றினால் பற்றி அடித்துத் தின்னும் என்கிறது சிலம்பு.

**சதுக்கப்பூதர்** *šadukka-p-pūdar,* பெ. (n.) நாற்சந்திக்கண் குடிகொண்டுள்ள பூதங்கள். demons having their abode at the junction of four roads. "சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து" (சிலப். 28: 147)

*[சதுக்கம் + பூதர். பூதம் → பூதர். 'ர்' – ப.பா. ஈறு]*

**சதுக்கம்**[1] *šadukkam,* பெ. (n.) 1 நான்கின் கூட்டம்; that which consists of anything four. 2. நான்கு தெருக்கள் கூடுமிடம், நாற்சந்தி; junction where four roads meet. "சதுக்கமுஞ் சந்தியும்" (திருமுரு. 225). 3. சந்து (சூடா.); lane, narrow street. 4. மேடை (தைலவ. பாயி. 44); plat-form. 5. தலையிற் கட்டும் உருமால் (யாழ்ப்.); square cloth, large kerchief for the head. 6. நான்கு தூண்கள் கொண்ட மண்டபம்; yard, which has four pillars.

க. சதுக

*[சது → சதுக்கம்]*

த. சதுக்கம் → Skt. catuṣka

**சதுக்கம்**[2] *šadukkam,* பெ. (n.) இறந்த தலைவரின் நினைவாக எழுப்பப்படும் சதுர வடிவான மேடையுடன் கூடிய நினைவுச் சின்னம்; memorial for great leaders with a raised square. அண்ணா சதுக்கம்.

க. சதுக்கு (நான்கு தூண்களைக் கொண்ட மண்டபம்)

*[சது → சதுக்கம்]*

**சதுக்கல்** *šadukkal,* பெ. (n.) வழுக்கல்; slipperness.

*[சறுக்கல் → சதுக்கல்]*

**சதுக்கினி** *šadukkiṉi,* பெ. (n.) இசங்கு; four-spined moratia - Azema tetracantha (சா.அக.).

*[சதுர் → சதுர்க்கினி → சதுக்கினி]*

**சதுகம்** *šadugam,* பெ. (n.) பெருங்காயம் (யாழ். அக.); asafoetida.

**சதுகளவி** *šadugaḷavi,* பெ. (n.) திருகுக் கள்ளியின் புல்லுருவி; a parasite grown on twisted spurge - Euphorbia tiricalli (சா.அக.).

**சதுட்கம்** *šaduṭkam,* பெ. (n.) நான்கு (யாழ். அக.); four.

*[சதுர்க்கம் → சதுட்கம்]*

**சதுட்டம்** šaduṭṭam, பெ. (n.) வால் மிளகு; tail-pepper - Piper cubeba (சா.அக.).

**சதுட்பாதம்** *šaduṭpādam,* பெ. (n.) 1. நாற் காலுள்ளது; quadruped. 2. நாய்; dog.

*[சதுர்பாதம் → சதுட்பாதம். பதி → பதம் → பாதம் = நிலத்திற் பதியும் காலடி]*

**சதுடகம்** *šadudagam,* பெ. (n.) நான்கு *(யாழ்அக.);* four.

*[சதுரகம் → சதுடகம்]*

**சதுத்தரவு** *šaduttaravu,* பெ. (n.) நன்மையளிக்கும் கட்டளை; (P.T.L. 174) favourable order.

*[சத்து → சதுத்தரவு]*

**சதுப்பன்னி** *šadu-p-panni,* பெ. (n.) ஆரை *(நாமதீப.);* ārai, an aquatic plant.

**சதுப்பு** *šaduppu,* பெ. (n.) சதுப்புநிலம் பார்க்க; see *šaduppu-nilam.*

ம. சதுப்பு; து. சண்டி, தண்டி (ஈரமான, நனைந்த)

*[சுது → சது → சதுப்பு = சேற்றுநிலம்]*

**சதுப்புநிலம்** *šaduppu-nilam,* பெ. (n.) சேற்று நிலம்; bog, marshy ground, swamp.

ம. சதுப்பு நிலம்

*[சதுப்பு + நிலம்]*

**சதுப்புமான்** *šaduppu-mān,* பெ. (n.) நாவலந் தீவில் (இந்தியாவில்) மட்டும் காணப்படும் மான் வகை; swamp deer.

*[சதுப்பு + மான்]*




**சதுப்புயன்** *šadu-p-puyan,* பெ. (n.) சதுர்ப்புயன் பார்க்க; see *šadur-p-puyan.* "சதுப்புயன்றாளில்" *(திவ். பெரியாழ். 4, 7, 3).*

*[சதுர்ப்புயன் → சதுப்புயன்]*

**சதும்பை** *šadumbai,* பெ. (n.) பேய்மருட்டி *(வின்.);* a very soft woolly plant.

*[சது → சதும்பை]*

**சதுமணி** *šadumani,* பெ. (n.) கழலை (தைலவ. தைல. 71); goitre.

**சதுமுகன்** *šadumugan,* பெ. (n.) *1.* சதுர்முகன் பார்க்க; see *šadur-mugan.* "சதுமுகன் கையில்" *(திவ். பெரியாழ். 4, 7, 3). 2.* அருகன் (சூடா.); Arhat. "சங்கர னீசன் சயம்பு சதுமுகன்" *(சிலப். 10: 186)/.*

ம. சதுமுகன்

*[சதுர் = நான்கு. சதுர் → சது + முகன். முகம் → முகன்]*

**சதுர்**[1] *šadur,* பெ. (n.) *1.* நான்கு; four, used only in compounds. "சதுர்முகன்" *2.* நாற்கோணம்; square, tetragon. *3.* நாற்புறம்; square.

க. சதுர், சதுரு, செதுரு; தெ. சதுரு; து. சதுர.

*[சட்டம் → சடம் → சடல் → சதர் → சதுர் (வ.வ. 288)]*

சதுரம்[1] பார்க்க

**சதுர்**[2] *šadur,* பெ. (n.) *1.* திறமை; ability, skill. dexterity. "ஆலால முண்டா னவன் சதுர்தா னென்னேடி" *(திருவாச. 12, 8). 2.* வழிவகை; means, contrivance. "பொருடருமச் சதுரெப்படி" *(அரிச். பு. காசிகா. 18). 3.* மலிவு; cheapness. 'சதுராய் அந்தப் பண்டத்தைக் கொண்டான்' *(வின்.)*

*[சதுரம் → சதுர்]*

**சதுர்க்கட்டு** *šadur-k-kattu,* பெ. (n.) கட்டுடம்பு *(உ.வ.);* square built, well built, physique.

மறுவ. கட்டுடல்

*[சதுரம் + கட்டு → சதுரக்கட்டு → சதுர்க்கட்டு]*

**சதுர்க்கதி** *šadur-k-kadi,* பெ. (n.) ஆமை *(யாழ்.அக.);* tortoise.

*[சதுர் + கதி]*

**சதுர்க்கோணம்** *šadur-k-kōnam,* பெ. (n.) நாற் கோணமுள்ள வடிவம்; quadranglular figure, tetragon.

*[சதுர் + கோணம். கோள் → கோண் → கோணம்]*

**சதுர்க்குணம்** *šadur-k-kunam,* பெ. (n.) நாற்குணம்; four qualities.

*[சதுர் + குணம். கொள் → (கொண்) → (கொணம்) → குணம்]*

பெண்டிர்க்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும்

*ஆடவர்க்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் நாற்குணங்களையும் சிறப்பாகக் குறிப்பிடுவதே சதுர்க்குணமென்க.*

**சதுர்குணி** *šadur-kuṇi,* பெ. (n.) நான்கு குணம் உடையவன்; one who has four qualities.

*[சதுர்குண(ம்) + இ. 'இ' உடைமை குறித்த ஈறு]*

**சதுர்காணு-தல்** *šadur-kāṉu-,* 16 செ.கு.வி. (v.i.) விலை மலிவாதல் (வின்.); to be cheap, to be obtained at a low price.

*[சதுர் + காணு-,]*

**சதுர்கூலி** *šadur-kūli,* பெ. (n.) ஆவிரை (மலை.); tanner's cassia.

**சதுர்த்தம்** *šadurttam,* பெ. (n.) 1. நான்காவது; fourth. "கூட சதுர்த்தம்" (தண்டி. 95). 2. நான்கு குரல் அளவுள்ள (சுரமுள்ள) பண். (சிலப். 13: 106, உரை).

*[சதுர் → சதுர்த்தம்]*

**சதுர்த்தர்** *šadurttar,* பெ. (n.) நான்காம் குலத்தார் (சூத்திரர்); sūdras, as the fourth caste. 'சதுர்த்தர் செய்ய பாதபங்கயத்தி லீன்றான்." (கூர்மபு. வருணாச். 11)

*[சதுர் → சதுர்த்தர்]*

**சதுர்த்தளம்** *šadur-t-taḷam,* பெ. (n.) ஆரைக்கீரை; a water plant called sweet green (சா.அக.)..

மறுவ. சதாரை

*[சதுர் + தளம். சதுர வடிவ இலைகளைக் கொண்டது]*

**சதுர்த்தி**[1] *šadurtti,* பெ. (n.) பேராமல்லி; long-tubed Arabian jasmine - Jasminum sambac (heyneana) (சா.அக.).

**சதுர்த்தி**[2] *šadurtti,* பெ. (n.) 1. காருவா, வெள்ளுவாவையடுத்த நான்காம் நாள்; the fourth tidi in a lunar fortnight. "விநாயக சதுர்த்தியில்" (விநாயகபு. 38, 9). 2. நான்காம் வேற்றுமை (பி.வி. 6, உரை); dative case. 3. மணம்புரிந்த நான்காம் நாளில் மேற்கொள்ளும் நோன்பு; an observance on the fourth day of wedding. "சதுர்த்தி யிருந்து கதிர்த்த காப்பொடு" (பெருங். இலாவாண. 3, 131).

ம. சதுர்த்தி; து. சதுர்தி

*[சதுர் → சதுர்த்தி]*

**சதுர்த்தி**[3] *šadurtti,* பெ. (n.) ஒருவரின் பாவன்மையை அறியக் குறிப்பாக (சமசையாக)க் கொடுக்கும் நான்காம் அடி (யாழ். அக.); line of stanza, usually the fourth or last line, set for a person to complete, as a test of his poetic skill.

*[சதுர் → சதுர்த்தி]*

**சதுர்த்திகை** *šadurttigai,* பெ. (n.). 1. காற்பலம் (தைலவ. தைல. 28); a weight = $^1/_4$ palam. 2. காருவா, வெள்ளுவாவையடுத்த நான்காம் நாள்; the fourth tidi in a lunar fortnight.

*[சதுர் → சதுர்த்தி → சதுர்த்திகை]*

**சதுர்த்தியறை** *šadurtti-y-aṟai,* பெ. (n.) திருமணத்தின் நான்காம் நாளிரவு மணமகனும் மணமகளுங் கூடியுறையும் அறை (அகநா. 86, உரை); bed-room in which consummation takes place on the forth night of marriage.

*[சதுர்த்தி + அறை. அறு → அறை]*

**சதுர்ப்பதம்** *šadur-p-padam,* பெ. (n.) சதுர்ப் பாதம் பார்க்க; see *šadur-p-pādam.* "சதுர்ப்பத நாகங் கிந்துக்கின மென்று" (விதான. பஞ்சாங்க. 28).

*[சதுர் + பதம். பதி → பதம்]*

**சதுர்ப்பரணி** *šadur-p-paraṇi,* பெ. (n.) புளியாரை; sour-sorrel - Oxalis pussilla (சா.அக.).

**சதுர்ப்பலன்** *šadur-p-palaṉ,* பெ. (n.). நற்பயன் (வின்.); privilege good fortune.

*[சதுர் + பலன்]*

**சதுர்ப்பாகம்** *šadur-p-pāgam,* பெ. (n.) 1. செலுத்தற்குரிய அரசிறையிற் காற்பகுதி செலுத்தித் துய்க்கும் மானிய நிலம் (C.G.93); land held on favourable tenure paying only one fourth of the revenue due to government. 2. வரியில் நாலில் ஒரு பாகத்தை அரசிடமிருந்து பெறும் இலவயம் (R.T.); a grant or alienation of one-fourth share of government revenue.

*[சதுர் + பாகம். பகு → பாகு → பாகம்]*

**சதுர்ப்பாடு** *šadur-p-pāḏu,* பெ. (n.) சதுரப்பாடு' பார்க்க; see *šadura-p-pāḏu.*

*[சதுர் + பாடு. படு → பாடு]*

**சதுர்ப்பாதம்** *šadur-p-pādam,* பெ. (n.) **சிவாகமங்களிற் கூறப்படும் தொண்டு, பூசனை, ஓகம், மெய்யறிவு (சரியை, கிரியை, யோகம், ஞானம்) என்னும் நான்கு பகுதிகள்;** four major sections of šivāgamas relating to šariyai, kiriyai, yōgam, ñāṉam.

[சதுர் + பாதம்]

**சதுர்ப்புயன்** *šadur-p-puyaṉ,* பெ. (n.) 1. நான்கு **தோள்களையுடைய திருமால்;** Tirumāl (Viṣṇu). 2. **சிவன்;** Šivaṉ (யாழ். அக.).

ம. சதுர்ப்புயன்

க., து., சதுர்புச; தெ. சதுர்புசுடு.

[சதுர் + புயன்]

**சதுர்ப்பேதி** *šadur-p-pēdi,* பெ. (n.) சதுர்வேதி பார்க்க; see *šadur-vēdi.* 'இருபதின்மர் சதுர்ப் பேதிகளுக்குப் பிரமதேயங் கொடுப்பதற்கும்' (*S.I.I. i, 151*).

[சதுர் + பேதி. வேதி → பேதி]

**சதுர்முகம்** *šadur-mugam,* பெ. (n.) நான்கு **முகம்;** four faces. நான்முகன்.

[சதுர் + முகம்]

**சதுர்முகவேதி** *šadur-muga-vēdi,* பெ. (n.) **செப்புச் சதுரக்கள்ளி;** a red variety of square-spurge (சா.அக.).

[சதுர் + முகம் + வேதி. பொன்னாக்கத் (இரசவாதம்)திற்குப் பயன்படுவது]

**சதுர்முகன்** *šadur-mugaṉ,* பெ. (n.) 1. நான்கு **முகங்களையுடைய நான்முகன்;** Brahmāṉ. "சதுர் முகன் றாதையென் றுந்தீபற" (திருவாச. 14,6). 2. **அருகன்** (சூடா.) Arhat.

ம. சதுர்முகன்; க. சதுர்முக; து. சதுர்முக, சதுரானனெ.

[சதுர் + முகன். முகம் → முகன்]

திசைகளைத் தெய்வத்திற்கு முகங்களாகவும் கைகளாகவும் கூறுவது வழக்கம். அவ் வகையில் பிரம்மாவை நான்முகன் என்றது திசைபற்றியதே. எனினும் படைப்புக் கடவுளாகக் கருதப்படும் பிரம்மாவுக்கும் அவர் படைப்புகளான நால்வகைக் குலத்திற்கும் தொடர்பு கொள்வதால் குலப் பிரிவு பற்றியதாக இருக்கவும் இடமுண்டு.

**சதுர்மூலி** *šadur-mūli,* பெ. (n.) **பருத்தி;** herbaceous cotton (சா.அக.).

[சதுர் + மூலி. மூல் → மூலி]

**சதுர்வேதம்** *šadur-vēdam,* பெ. (n.) நான்கு **மறைகள்** (இருக்கு, எசுர், சாமம், அதர்வணம்); the four vedas viz., ṛg-vēda, yajur-vēda, sāma-vēda and atharava-vēda.

க. சதுர்வேத

[சதுர் + வேதம்]

விழித்தல் = பார்த்தல், காணுதல், அறிதல். விழி = அறிவு, ஓதி (ஞானம்) 'தேறார் விழியிலா மாந்தர்' (திருமந். 177), விழி; L. vide-vise; Skt. vid - veda ஒ.நோ. குழல் → குடல்; ஒடி → ஒசி. தமிழ் வேதம் ஆரியத்திற்கு முந்தியதாயிருப்ப தோடு, வேதப் பெயர்களே தமிழ்ச் சொற்களின் திரிபாகவுமிருக்கின்றன. (ப. ப. 8).

**சதுர்வேதிபட்டர்கள்** šadur-vēdi-paṭṭargaḷ, பெ. (n.) **இருக்கு முதலானநான்மறைகளையும் முறையாகக் கற்றுச் சொல்லும் மறையவர்கள்;** Brahmins who are well versed in four vedas. "ஆயிரத் தெண்பது சதுர்வேதி பட்டர்கட்குப் பிரமதேய இறையிலியாக" (கரந்தைச் செப்பேடுகள்)

து. சதுர்வேதி

[சதுர்வேதி + பட்டர்கள்]

**சதுர்வேதிமங்கலம்** *šadur-vēdi-maṅgalam,* பெ. (n.) **நான்மறையிலும் ஆறு உறுப்புகளிலும் (அங்கங்களிலும்) வல்ல பார்ப்பனர்கள் (பிராமணர்கள்) வாழ்தற்கேற்ற வண்ணம் அரசர்களால் இறையிலியாகக் கொடுக்கப் பட்ட தனியூர் அல்லது சிலவூர் சேர்ந்த பகுதி;** village or villages alloted to Brahmins who have well versed in vēdas and vedāṅgās by kings. 'ஜயங் கொண்ட சோழ மண்டலத்து காலியூர் கோட்டத்துத் தனியூர் உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம்' (தெ.க. தொ.க.3:1).

[சதுர்வேதி + மங்கலம். மங்கு → மங்கல் → மஞ்சள் = மங்கலான நிறம். அந்நிறக் கிழங்கு. மங்கல் → மங்கலம் = மஞ்சளால் அல்லது மஞ்சள் நீரால் குளிக்கப் பெறும், நன்னிலைமை, நன்மை]

**சதுரக்கம்பம்** *šadura-k-kambam,* பெ. (n.) நாற்கோணமாயமைந்த தூண் வகை; (C.G.); square pillar.

*[சதுரம் + கம்பம். கம்பு → கம்பம்]*

**சதுரக்கம்பி** *šadura-k-kambi,* பெ. (n.) நான்கு பக்கமும் ஒத்த அகலமுள்ள இரும்புக் கம்பி; square iron-bar.

*[சதுரம் + கம்பி]*

**சதுரக்கல்** *šadura-k-kal,* பெ. (n) *1.* சதுர வடிவான செங்கல்; square brick. *2.* சதுர வடிவான கல்; square stone.

*[சதுரம் + கல்]*

**சதுரக்கள்ளி** *šadura-k-kaḷḷi,* பெ. (n.) கள்ளி வகை (பதார்த்த. 367); square spurge.

ம. சதுரக்கள்ளி, சதிரக்கள்ளி; க. சதரக்கள்ளி, சதுரக்கள்ளி

*[சதுரம் + கள்ளி. கள்ளுதல் – வடிதல். ஒடித்தால் பால் வடியும் நிலைத்திணை. (கள்ளிப்பால்) சிலவகைக் கள்ளி முள்ளுடைமையால் அப்பெயர் பெற்றன. கள் = முள். கள் → கள்ளி = முட்புதர் வகை. சதுரக்கள்ளி. சதுரவடிவான தண்டினைக் கொண்டது.]*




**சதுரக்கால்** *šadura-k-kāl,* பெ. (n.) சதுரமான அமைப்புடைய கல்தூண்; square pillar (கட்டட).

*[சதுரம் + கால்]*

**சதுரகராதி** *šadur-agarādi,* பெ. (n.) பெயர், பொருள், தொகை, தொடை என்ற நாற் பிரிவுகளுடையதாய், 18ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் இயற்றிய தமிழ் அகரமுதலி; Tamil dictionary by Beschi in the 18th c. consisting of 4 parts,viz., peyar-agarādi, poruḷ-agarādi, togai-y-agarādi, toḍai-y-agarādi.

*[சதுர் + அகராதி. அகரம் + ஆதி – அகராதி]*

அகராதி சொல்லடிப்படையில் வண்ண மாலை ஒழுங்கை (அகர வரிசையை) முதன்மை படுத்திச் சொற்பொருளை உணர்த்தும் அதன் அடிப்படைப் பயன்பாட்டை வழிப் பொருளாக்கிவிடுகிறது. சொல்லுக்குப் பொருள்தருவது அகரமுதலியின் முதன்மையான பயன்பாடு. வண்ணமாலை வரிசையில் அமைவது அகரமுதலியைப்படுத்துவதற்கு எளிமையாய் அமையும். ஆயின் வண்ண மாலை வரிசை அமைவது அகரமுதலிக்குக் கட்டாயம் என்று சொல்வதற்கில்லை.

தமிழில் சிதம்பர ரேவண சித்தர் தொகுத்த அகராதி நிகண்டே (கி.பி. 1594) முதன் முதலாக வண்ணமாலை வரிசையில் தொகுக்கப் பட்டது. இதிலும் முதல் எழுத்துமட்டும் வண்ணமாலை வரிசைக்குக் கொள்ளப் பட்டுள்ளது. இங்கு அகராதி, நிகண்டிற்கு அடையாக வந்துள்ளது. அகராதி பின்னர் தனிப்பெயராக வழக்கூன்றிவிட்டது. பொதிகை நிகண்டில் முதலிரு எழுத்துகள் வண்ணமாலை வரிசைக்குக் கொள்ளப் பட்டுள்ளது. 18ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு அகராதி என்னும் பெயர் பெருவழக்கெய்தியது. ஆதி தூயதென்சொல்லன்று எனக் கருதியதால் பாவாணர் அதற்கு மாறாக அகரமுதலி எனப் பெயரிட்டார்.

**சதுரங்கச்சேனை** *šaduraṅga-c-cēṉai,* பெ. (n.) சதுரங்கப்படை பார்க்க; see *šaduraṅga-p-paḍai.*

ம. சதுரங்கசேன; து. சதுரங்கசைனோ.

*[சதுரங்க + சேனை]*

**சதுரங்கப்பட்டினம்** *šaduraṅga-p-paṭṭinam,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Kāñjipuram district.

மறுவ. சதுரை

*[சதுரங்கம் + பட்டினம்]*

இவ்வூர் பாலாறு கடலில் கலக்கும் இடத்திற்கு அருகே உள்ளது. கடற்கரை அருகே அமைந்த ஊராகையால் பட்டினம் எனப் பெயர் பெற்றது. இவ்வூர் சதுர அமைப்பில் இருந்ததால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.

**சதுரங்கப்பலகை** *šaduranga-p-palagai,* பெ. (n.) *சதுரங்கமணை பார்க்க;* see *šaduranga manai.*

ம. சதுரங்கப் பலகை

*[சதுரங்கம் + பலகை]*

**சதுரங்கப்படை** *šaduranga-p-padai,* பெ. (n.) **யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நான்கு பகுதிகளையுடைய படை;** a complete army consisting of four divisions, viz., elephants, chariots, cavalry and infantry.

து. சதுரங்க

*[சதுரங்கம் + படை]*

**சதுரங்கபந்தம்** *šaduranga-bandam,* பெ. (n.) **சதுரங்கக் கட்டத்தில் எழுத்துகள் முறைப்படி அமையப் பாடப்பெறும் மிறைப்பாவகை** *(மாறனலங். 299, உரை.);* a fantastic verse whose letters are arranged in the diagrammatic form of a chessboard.

*[சதுரங்கம் + பந்தம்]*

Skt. anka → த. அங்கம்

**சதுரங்கம்**[1] *šadurangam,* பெ. (n.) *1.* **சதுரங்கப் படை** பார்க்க; see *šaduranga-p-padai.* "தனியானை முதலினவாஞ் சதுரங்க மிறந்தொழிய" *(உபதேசகா. விபூதி. 54)* 2. **குறிப்பிட்ட முறைகளின் படி கறுப்பு வெள்ளைக் கட்டங்களில் காய்களை நகர்த்தி இருவர் மட்டுமே ஆடும் விளையாட்டு;** chess, as played with pieces representing the four constitutent parts of an army. "சூது சதுரங்கம் பொருது" *(ஈடு. 5,8,4)*

ம. சதுரங்கம், சதுரங்கக்களி; க. சதுரங்க; தெ. சதுரங்கமு

*[சதுரம் → சதுரங்கம்]*

64 சதுரக்கட்டங்களைக் கொண்ட பலகையில் இரண்டு அரசர்கள் தம் படைகளுடன் போரிடுவதாகக் கொண்டு, யானை, குதிரை, தேர், காலாட்களாகக் காய்களை வைத்து ஆடும் விளையாட்டு.

**சதுரங்கம்**[2] *šadurangam,* பெ. (n.) நாற் கோணம் *(யாழ்.அக.);* quadrilateral, quadrangle.

*[சதுரம் + அங்கம்]*

**சதுரங்கமணை** *šaduranga-manai,* பெ (n.) **சதுரங்கக் கட்டம் வரைந்த பலகை;** chess - board made of wooden plank.

*[சதுரங்கம் + மணை]*

**சதுரங்குலம்** *šadurangulam,* பெ. (n.) கொன்றை; common cassia - Catharto carpus fistula alias cassia fistula *(சா.அக.).*

**சதுரச்சக்கரம்** *šadura-c-cakkaram,* பெ. (n.) *சித்திரப்பா வகை (யாப்.வி.497);* a variety of metrical composition, fitted into fanciful figures.

*[சதுரம் + சக்கரம்]*

**சதுரச்சந்தி** *šadura-c-candi,* பெ. (n.) நாற்சந்தி; junction of four roads. *'சதுரச் சந்திச் சமழ்ப்பில் கலாபத்து' (பெருங். உஞ்சைக். 50, 7)*

*[சதுரம்' + சந்தி. அந்து → அந்தி → சந்தி. நான்கு சாலைகள் கூடுமிடம் சதுரச் சந்தி]*

**சதுரச்சாகன்** *šadura-c-cāgan,* பெ. (n.) தாமரை மலர்; lotus flower *(சா.அக.).*

**சதுரச்சாலை** *šadura-š-šālai,* பெ. (n.) நாற்சார் வீடு *(யாழ்.அக.);* quadrangular house.

*[சதுரம்' + சாலை]*

**சதுரசிரம்** *šaduraširam,* பெ. (n.) நடன மெய்ப்பாட்டு முத்திரை; a hand-pose in dancing.

*[சதுரம் + சிரம்]*

**சதுரசுக்கிலம்** *šadura-šukkilam,* பெ. (n.) வெள்ளை ஆமணக்கு; moghul castor oil plant-Jatropha curcas *(சா.அக.).*

**சதுரடி** *šaduradi,* பெ. (n.) **சதுரவடி;** square root.

*[சதுரம் + அடி]*

**சதுரத்தூண்** *šadura-t-tūn,* பெ. (n.) **சதுரக்கம்பம்** பார்க்க; see *šadura-k-kambam.*

*[சதுரம் + தூண்]*

**சதுரப்பட்டை** *šadura-p-pattai,* பெ. (n.) **கூரை வேயும்போது கிடுகு, புல் முதலியவற்றைத் தட்டிச் சரிசெய்யப் பயன்படும் மரப்பலகை**

(செங். வழ.); a square plank used to press braided coconut leaf, hay etc.

[சதுரம் + பட்டை]

**சதுரப்பலகை**[1] *šadura-p-palagai,* பெ. (n.) தச்சுத் தொழிற் கருவிகளுள் ஒன்று (குமரி.); a kind of carpenters tool.

[சதுரம் + பலகை]

**சதுரப்பலகை**[2] *šadura-p-palagai,* பெ. (n.) சதுரங்கமாடும் பலகை; chess-board.

ம. சதுரங்கப்பலக

[சதுரம் + பலகை]

**சதுரப்பாடு**[1] *šadura-p-pāḍu,* பெ. (n.) 1. திறமை; dexterity, cleverness, ability. 'சதுரப்பாடுடையார்' (குறள். 235, உரை). 2. பகுத்தறிவு, அறிவு; sagacity, discretion, wisdom. 3. உடலுழைப்பு; hard toil, bodily exertion.

[சதுரம்[3] + பாடு. படு → பாடு]

**சதுரப்பாடு**[2] *šadura-p-pāḍu,* பெ.. (n.) நேர்கோணமுள்ளதும், அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான வடிவம்; square. "வட்டமுஞ் சதுரமும்" (பெருங். உஞ்சைக். 42, 29).

[சதுரம்[1] + பாடு]

**சதுரப்பாலை** *šadura-p-pālai,* பெ.. (n.) பாலையாழ் வகை நான்கனுள் ஒன்று (சிலப். 17, உரை, பக்.453); one of the four modes of the pālai class of melody-type.

[சதுரம்[1] + பாலை]

**சதுரப்பிரண்டை** *šadura-p-piraṇḍai,* பெ.. (n.) பிரண்டை வகை (மூ.அக.); square-stalked vine.

[சதுரம் + பிரண்டை]



சதுரப்பிரண்டை

**சதுரப்புளி** *šadura-p-puḷi,* பெ. (n.) தமரத்தை; square tamarind - Auerrnoa carambola (சா.அக.).

மறுவ. தம்பரத்தை

[சதுரம்[1] + புளி]



சதுரப்புளி

**சதுரம்**[1] *šaduram,* பெ. (n.) 1. நேர்கோண முள்ளதும், அளவொத்த நான்கு எல்லை வரம்புடையதுமான உருவம்; square. "வட்டமுஞ் சதுரமும்" (பெருங். உஞ்சைக். 42, 29). 2. சதுரக்கள்ளி (மலை); square spurge. 3. நீள்சதுரவடிவம்; rectangular shape.

ம. சதுரம்; க. சதுர, சதர, சதரு, சதுரு; தெ. சதுரமு; து. சதீர், சத்ர

[சதரம் → சதுரம்]

வட்டம் என்பது போன்றே சதுரம் என்பதும் தூய தென்சொல். ஆயின், வடநூல்களில் ஆளப்பெற்றிருப்பது பற்றி, சதுரம் என்பதைப் போன்றே வட்டம் என்பதையும் வடசொல்லென வலிப்பர் வடவர். த. வட்டம் → பிரா. வட்ட. முறையைத் தலைக்கீழாய் காட்டுவர் அவர். சதுரம் என்னும் வடிவம் வடமொழியில் இல்லை.

வ. சதுர்அச்ர = நாற்கோணம்.

மேலையாரியத்தில் நான்கு என்னும் எண்ணுப் பெயர் முன்னொட்டுப் பெற்றே சதுரத்தைக் குறிக்கின்றது.

L. quatuor = four; exquadra; of esqharre; E. square.

வடமொழியில் அது பின்னொட்டுப் பெற்றுக் குறிக்கின்றது. சதுர் என்னும் பெயர் இயல்பாக நின்று நான்கு என்னும் எண்ணுப்பெயரையே உணர்த்துகின்றது. சதுரிகா, சதுஷ்க, சதுஷ்டய என்னும் வடிவங்களும்

பிற்காலத்திலேயே சதுர வடிவையும் உணர்த்தினதாகத் தெரிகின்றது.

அச்ர = கோணம், மூலை.

சதுரம் என்னும் வடிவக் கருத்து நான்மூலைச் சட்டத்தொடு மட்டுமின்றிக் கட்டடம்பொடும் தொடர்பு உடையதாகத் தெரிகின்றது.

கட்டடம்பின் அமைப்பைச் சதுர்க்கட்டு என்பது உலக வழக்கு. ஆங்கிலத்தில் square-built, a man of square frame என்று வழங்குதல் காண்க. *(வ.வ. 141, 288).*

**சதுரம்**[2] *šaduram,* பெ. (n.) சிறுவிரல் பின்பாக நிமிரப் பெருவிரல் அகம்வர மற்றை மூவிரல்களும் தம்முட் சேர்ந்து இறைஞ்சி நிற்கும் இணையா வினைக்கை *(சிலப். 3: 18, உரை.);* hand pose in dancing with the little finger raised back, the thumb closed in and the other three fingers bent, one of 33 iṇaiyā-viṉaikkai.

ம. சதுரம்

*[சதுர் → சதுரம்]*

**சதுரம்**[3] *šaduram,* பெ. (n.) *1.* திறமை; dexterity, cleverness, ability, *2.* பகுத்தறிவு, அறிவு; sagacity, discretion, wisdom. "சதுரப்பெருமான்" *(திருவாச. 24 : 3)/* *3.* நாகரிகம் (வின்.); doecorum, polished manners.

ம., து. சதுர; தெ. சதுருடு

*[சதிரம் → சதுரம்]*

**சதுரமாடம்** *šadura-māḍam,* பெ. (n.) நான்கு பக்கமும் அளவொத்த மாடப்புரை; square niche in a wall.

ம. சதுரமாடம்

*[சதுரம் + மாடம்]*

**சதுரமுகம்** *šadura-mugam,* பெ. (n.) சதுர்முகம் பார்க்க; see *šadur-mugam.*

*[சதுரம் + முகம்]*

**சதுரமோட்டு-தல்** *šaduram-ōṭṭu-,* 5 செ.குவி. (v.i.) பரம்பு ஓட்டுதல், பரம்பால் உழுதநிலத்தைச் சமன் செய்தல்; to level ploughed land by 'Parambu'.

*[சதுரம் + ஓட்டு-,]*

பரம்பு = 9 அடி நீளமும் 1[1]/2 அடி அகலமும் கொண்ட பலகை *(செங்கை).*

**சதுரர்** *šadurar,* பெ. (n.) *1.* அறிஞர்; learned person. *2.* திறமுடையோர்; efficient person. *3.* பேராசைக்காரர்; greedy person.

ம. சதுரன்

*[சதுர் → சதுரர்]*

**சதுரவடி** *šadura-vaḍi,* பெ. (n.) பக்கங்கள் (எதிரெதிர் பக்கங்கள்) ஒரே அளவுடைய சதுரத்தின் (சதுரம், நீள்சதுரம், சாய்சதுரம்) பரப்பைக் குறிக்கும் அலகு; square root.

மறுவ. சதுரவளவு

க. சதுரடி.

*[சதுரம் + அடி]*

**சதுரவரம்** *šadura-v-aram,* பெ. (n.) அரவகை (C.E.M.); square file.

*[சதுரம் + அரம்.]*

**சதுரவலை** *šadura-valai,* பெ. (n.) வலை வகை; a kind of net.

*[சதுரம்+ வலை.]*

**சதுரவளவு** *šadura-v-aḷavu,* பெ. (n.) அகலத்தையும் நீளத்தையும் பெருக்கி வந்த அளவு; square measure.

*[சதுரம் + அளவு]*

**சதுரவிட்டம்** *šadura-viṭṭam,* பெ. (n.) சுவர் மூலைகளை இணைக்கும் விட்டம்; beam which connects corners of a building.

*[சதுரம் + விட்டம்]*

**சதுரவோடு** *šadura-v-ōḍu,* பெ. (n.) சதுரமான தட்டையோடு; square flat tiles.

*[சதுரம் + ஓடு]*

**சதுரன்**[1] *šaduraṉ,* பெ. (n.) *1.* திறமையானவன்; able, clever person. "சதுரன் பெருந்துறை யாளி" *(திருவாச. 43, 10);* *2.* நகரவாசி (பிங்.); townsman, man of polished manners.

ம. சதுரன்; து. சதுரை

*[சதுரம் ³ → சதுரன்]*

**சதுரன்**[2] *šaduraṉ,* பெ. (n.) பேராசைக்காரன் (யாழ். அக.); avaricious man.

ம. சதுரன் (ஏமாற்றுக்காரன்)

*[சதுர் → சதுரன்]*

**சதுரன்சேரமாந்தான்குழி** *šaduran-šēramāndān-kūli,* பெ. (n.) சோழர் ஆட்சியின் நில அளவைப் பெயர்; Cholā's land measure name. "ஸ்ரீ புகலூர் குளித்தாள் குழி சதுரன் சேரமாந்தான் குழி" *(தெ. க. தொ. 17: க. 624: 3)*

*[சதுரன் + சேரமாந்தான் + குழி]*

**சதுரானனன்** *šadurāṉaṉaṉ,* பெ. (n.) நான்கு முகங்களையுடைய நான்முகன்; Brahmā. "சதுரானனனுந் திருநெடு மாலும்" *(திருக்கருவை. கலித். 11)*

*[சதுரம் → சதுர் + ஆனனன்]*

**சதுரி-த்தல்** *šaduri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சதுரமாக வடித்தல், நாற்கோணமாக்குதல்; to cut or make a square figure. 2. மரம் முதலியவற்றை நான்கு பட்டையாகச் செதுக்குதல்; to size wood, etc., square-wise. 3. கட்டடத்தின் அமைப்பெல்லையை நிலத்தில் வரையறுத்துக் குறித்தல்; to fix boundary lines on the ground for the erection of a new building. 4. எண்ணைக் குழியாக்குதல் (வர்க்கமாக்குதல்); to square a number.

*[சதுரம் → சதுரி-]*

சதுர என்னும் பெயரினின்று தோன்றிய சதுரி என்னும் வினை வடமொழியிலில்லை. சதுரித்தல் = நாற்கோணமாக்குதல், குழித்தல் (வருக்கமாக்குதல்). சரியான சதுரத்தைக் குறிக்கும் சச்சதுரம் என்னும் இரட்டித்த வடிவும் வடமொழியிலில்லை *(வ.வ. 140).*

**சதுரித்திரு-த்தல்** *šadurittiru-,* 3 செ.கு.வி. (v.i.) விழிப்பாயிருத்தல் (நாஞ்சில்.); to be cautious.

*[சதுர்² → சதுரித்து + இரு-,]*

**சதுரூடியங்கள்** *šadurūḍiyaṅgaḷ,* பெ.. (n.) யானை, தேர், குதிரை, காலாள் ஆகிய நான்கு வகைப் படைகள்; the four main divisions of a king's army, viz., elephants, chariots, cavalry and infantry. "ஒப்பத் திரண்டதளமுள்ள சது ரூடியங்கள் முப்பத் திரண்டுபெற்ற மொய்ம்பனே" *(விறலிவிடு. 1086).*

*[சதுர் + ஊடியங்கள். ஊழியங்கள் → ஊடியங்கள்]*

**சதுரை** *šadurai,* பெ. (n.) சதுரங்கப்பட்டினம் பார்க்க; see *šaduraṅga-p-paṭṭinam.*

*[சதுரங்கப்பட்டினம் → சதுரை (மரூஉ.)]*

**சதுரோடு** *šadur-ōḍu,* பெ. (n.) சதுரவோடு பார்க்க; see *šadura-v-ōḍu.*

*[சதுரவோடு → சதுரோடு]*

**சதுவகை** *šadu-vagai,* பெ. (n.) நால்வகை; four kinds. 'சதுவகை வேதமும்' *(பெருங். வத்தவ. 3: 62)*

*[சதுரம் → சதுர் → சது + வகை]*

**சதுவல்** *šaduval,* பெ. (n.) சதசதப்பு நிலம் (வின்.); swampy ground.

ம. சதவல்

*[சதுக்கல் → சதுவல்.]*

**சதுனி** *šaduṉi,* பெ. (n.) வௌவால்; bat.

ம. சதுனி; Skt. jatuni

*[சளி → சதி → சது → சதுனி.]*

துவளும் உடலமைப்பைக் கொண்ட பறவை

**சதூதலம்** *šadū-alam,* பெ. (n.) ஆரைக் கீரை; a kind of four-leaved marseila - Marseila quadrifolia (சா.அக.).

*[சது → சதூதலம்]*

**சதை¹-த்தல்** *šadai-,* 4 செ.கு.வி. (v.i.) சதைப்பற்றுதல் (வின்.); to grow stout or fat.

*[தசை → சதை-,]*

**சதை²-த்தல்** *šadai-,* 4 செ.கு.வி. (v.i.) நெரிதல்; to be bruised, crushed.

ம. சதயுக; க. சதெ

*[சிதை → சதை-,]*

**சதை³-த்தல்** *šadai-,* 4 செ.குன்றாவி. (v.t.) நெரித்தல்; to crush, bruise, mash "சதைத்தனன் ......... தகர்த்தனன்" *(கந்தபு. காவலாளர்வதை. 21)*

ம. சதய்க்குக; க. சதகு, சதெ, சதி; தெ. சதியு; கோத. சச். (அடித்தல்); துட. தொந்தக; து. சச்சுனி.

*[சிதை³ → சதை³-,]*

**சதை⁴** *šadai,* பெ. (n.) 1. மேல் தோலுக்குக் கீழ் எலும்பைச் சுற்றியுள்ள அரத்தமும் கொழுப்பும் நிறைந்த மென்மையான, உடலுக்கு வடிவமைப்பையும் அழகையும் தருகின்ற பகுதி; flesh muscle. 2. காய்கள் அல்லது பழங்களின் தோல் அல்லது ஓட்டுக்குக் கீழ் அமைந்திருக்கும் மென்மையான பகுதி; fleshy part of fruit. 'சதைப்பற்றுள்ள மாம்பழமாக

வாங்கி வா'. 'சதையுள்ள இடத்திலேதான் கத்தி நுழையும்' (பழ.). 3. உடைமை, செல்வம்; property. 'சதையான ஆள், அவனிடம் மோதாதே'.

ம. சத

[தசை → சதை. சதை வளப்பத்தைக் குறிக்கும் தன்மைபற்றிச் செல்வத்தையும் குறித்தது]

**சதை**[5] *šadai,* பெ. (n.) இணை; pair.

[சொதை → சதை (மு.தா. 192). சொதை = குழாம், கூட்டம் (மு.தா. 171)]

**சதைக்கன்று-தல்** *šadai-k-kaṉṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சதையில் அரத்தங் கட்டுவதால் கன்றிப் போதல்; to contuse of the skin as by blow (சா.அக.).

[சதை + கன்று-,]

**சதைக்காய்** *šadai-k-kāy,* பெ. (n.) காய் மட்டும் சதைப்பற்று மிகுந்து பருப்பு சிறியதாக இருப்பது; fleshy fruit which has thin kernel. 'உளுந்து பூரா சதக்காய் விழுந்து வம்பாப் போச்சி' (கோவை.).

[சதை + காய். கள் → காள் → காழ் → காய். காய்த்தல் = காய் காய்த்தல்]

**சதைக்குந்தம்** *šadai-k-kundam,* பெ. (n.) கரு விழியின் மேல் படரும் நோய்வகை (சீவரட்.); fleshy growth affecting the pupil of the eye.

[சதை + குந்தம்]

**சதைக்குமிளம்** *šadai-k-kumiḷam,* பெ. (n.) வெள்விழியில் கருத்த கொப்புளத்தை எழுப்பும் ஒருவகைக் கண்ணோய்; a disease of the eye characterised by the appearance of a black boil on the white or the sclerotic portion of the eye (சா.அக.).

[சதை + குமிளம்]

**சதைக்குவை** *šadai-k-kuvai,* பெ. (n.) 1. கடைக் கண்ணில் கருப்பு குன்றிமணியைப் போல் சதையை வளர்ப்பித்துத் துன்புறுத்தும் ஒரு வகைக் கண்ணோய்; a disease developing black or dark tubercle on the corner of the eye. 2. சதை வளர்ந்த வெள்விழி நோய்; a disease of the white of the eye marked by a morbid growth of flesh (சா.அக.).

[சதை + குவி – சதைக்குவி → சதைக் குவை]

**சதைக்கொழுப்பு** *šadai-k-koḻuppu,* பெ. (n.) 1. உடம்பில் சதையையடுத்த கொழுப்பு; the fat portion which surrounds the muscles or the flesh. 2. உடம்பு தடித்திருக்கை; fatness, stoutness. 3. தடித் தன்மை; hardihood, audacity.

[சதை + கொழுப்பு. குள் → கொழு → கொழுமை. கொழு → கொழுப்பு]

**சதைகரண்டிப்பூடு** *šadaikaraṇḍi-p-pūḍu,* பெ. (n.) கோடக சாலை (மூ.அ.); a small plant.

[சதைகரண்டி + பூடு]

**சதைகழப்புணித்தனம்** *šadai-kaḻappuṇi-t-taṉam,* பெ. (n.) சதைகழிப்புணித்தனம் பார்க்க; see *šadai-kaḻippuṇi-t-taṉam.*

[சதை + கழப்புணித்தனம். கழிப்புணித்தனம் → கழப்புணித்தனம்]

**சதைகழிப்புணித்தனம்** *šadai-kaḻippuṇi-t-taṉam,* பெ. (n.) சோம்பல்; slothfulness, lethargy, laziness.

[சதை + கழிப்புணித்தனம்]

சுறுசுறுப்பாக இயங்குபவரின் சதை முறுக்கேறி இறுக்கமாக இருக்கும். உழைப்பில்லாமல் இருப்போரின் உடற்சதை தளர்வுற்றிருக்கும். அவ் வகையில் சதை கழலுவது போன்று தளர்வுற்றிருக்கும் நிலை சோம்பலைக் குறித்தது.

**சதைகுத்தி** *šadai-kutti,* பெ. (n.) சங்கின் சதையைக் குத்தி எடுப்பதற்கு உதவும் கத்தி ((மீனவ.); knife used to take fleshy parts of conch.

[சதை + குத்தி. குத்து → குத்தி = குத்தி வெட்டும் அல்லது அறுக்குங்கருவி]



சதைக்குத்தி

**சதைநிறம்** *šadai-niṟam,* பெ. (n.) ஒருவகைச் செந்நிறம் (புதுவை.); carnation.

[சதை + நிறம்.]

**சதைப்படர்த்தி** *šadai-p-padartti,* பெ. (n.) கண்நோய் வகை (இங்.வை. 363); pterygium, a disease of the eye.

*[சதை + படர்த்தி]*

**சதைப்படலம்** *šadai-p-padalam,* பெ. (n.) கண்ணில் விழும் பூநோய் வகை (இங்.வை. 363); pannus, opacity of the cornea, usually caused by granulation of the eyelids.

*[சதை + படலம். படர் → படல் → படலம்]*

**சதைப்பதுமம்** *šadai-p-padumam,* பெ. (n.) இமையில் ஏற்படும் நோய் வகை (சீவரட்.); a disease of the eye lids.

*[சதை + பதுமம்]*

**சதைப்பற்று**[1] *šadai-p-parru,* பெ. (n.) *1.* உடம்பிற் சதைப்பகுதியின் மிகுதி; corpulerey. *2.* உடம்பின் ஏதாவது ஓர் உறுப்பில் மிகுதியாக வளர்ந்த சதை; fleshy growth on some organ of the body.

ம. சதப்பற்று, சதப்பற்றல்

*[சதை + பற்று]*

**சதைப்பற்று**[2]**-தல்** *šadai-p-parru-,* 5 செ.குன்றாவி. (v.i.) சதைப்போடு-தல் பார்க்க; see *šadai-p-pōdu-.*

ம. சதப்பற்று, சதப்பற்றல்

*[சதை → பற்று-,]*

**சதைப்பற்று**[3] *šadai-p-parru,* பெ. (n.) உடைமை (இ.வ.); property, possessions. சதைப்பற்றுக் காரணமாகவே அவன் பேச்சு பகட்டாக இருக்கிறது.

*[சதை + பற்று]*

**சதைப்பிடிப்பு**[1] *šadai-p-pidippu,* பெ. (n.) சதைப் பற்று[1] பார்க்க; see *šadai-p-parru*[1].

*[சதை + பிடிப்பு]*

**சதைப்பிடிப்பு**[2] *šadai-p-pidippu,* பெ. (n.) சதையில் ஏற்படும் வலி; pain in muscles. 'சதைப்பிடிப்பினால் இன்று வேலைக்குச் செல்லவில்லை' (உ.வ.).

*[சதை + பிடிப்பு]*

**சதைப்பு** *šadaippu,* பெ. (n.) மேல்தோல் சிதைந்ததாலுண்டாங் காயம்; bruise. "தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்தி" (இரக்ஷணிய. 100).

*[சதை → சதைப்பு]*

**சதைப்புற்று** *šadai-p-purru,* பெ. (n.) வெள்ளை விழியிற் காணும் நோய்வகை (சீவரட்.); inflammation of the cornea.

*[சதை + புற்று]*

**சதைப்பொருத்தி** *šadai-p-porutti,* பெ. (n.) நீர்ப்பூடு வகை (யாழ்.அக.); an aquatic plant.

*[சதை + பொருத்தி]*

**சதைப்போடு-தல்** *šadai-p-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* பருத்தல்; to stout. *2.* குண்டாதல்; to plump. ஆடு நன்கு சதைபோட்டிருக்கு, கொழுப்பு அதிகமிருக்கும்.

*[சதை + போடு-,]*

**சதைமுள்ளிப்பூடு** *šadai-mulli-p-pūdu,* பெ. (n.) யானை நெருஞ்சில்; crow-thorn - Pedalium murex (சா.அக.).

*[சதைமுள்ளி + பூடு]*

**சதைமூடித்தோல்** *šadai-mūdi-t-tōl,* பெ. (n.) *1.* தோலின் வெளிப்புறத்தை மூடியிருக்கும் மெல்லிய தோலுறை; the outer covering of the skin; scarf-skin. *2.* பீத்தோல்; the epidermis (சா.அக.).

*[சதை + மூடி + தோல்]*

**சதைமூர்க்கம்** *šadai-mūrkkam,* பெ. (n.) சதை அதிகமாக வளர்ந்திருத்தலால் உண்டான தடித்தனம்; hardihood, audacity.

*[தசை + மூர்க்கம்]*

**சதையடைப்பன்** *šadai-y-adaippan,* பெ. (n.) மாடுகளுக்கு உண்டாகும் நோய் வகை (மாட்டு வா. 68); a kind of cattle disease.

*[சதை + அடைப்பன். உல் → உல. உலத்தல் = காய்தல். உல் → உலை = நெருப்படுப்பு. உல் → எல் → எர் → எரி = நெருப்பு. உல் → அல் → அல → அலத்து → அலத்தி = ஒளிவிடுவது. உல் → அல் → அன் → அண் → அடை → அடைப்பன் = வெக்கை நோய்]*

**சதையண்டம்** *šadai-y-aṇḍam,* பெ. (n.) ஆணுக்கு விதைப் பகுதியில் உண்டாகும் நோய் வகை (M.L.); scrotal elephantiasis.

*[சதை + அண்டம்]*

**சதையம்** *šadaiyam,* பெ. (n.) சதயம் பார்க்க; see *šadayam* "சதையமீன் கடவுளும்" *(பாரத. குருகுல. 72)*

*[சதயம் → சதையம்]*

**சதையல்** *šadaiyal,* பெ. (n.) மூங்கிற் பிளாச்சு (நாஞ்.); bamboo splits.

*[சதை³ → சதையல்]*

**சதையழிபுண்** *šadai-y-aḻi-puṇ,* பெ. (n.) தசையழுகிய நாற்றப் புண்; a gangrenous sore-Corious ulcer (சா.அக.).

*[சதை + அழி + புண்]*

**சதையன்பாக்குவெட்டி** *šadaiyaṉ-pākku-veṭṭi,* பெ. (n.) பாக்கைச் சீவாது நொறுக்கும் பாக்கு வெட்டி (நாஞ்.); crushing nut-crackers, dist. fr. veṭṭu -p- pākkuveṭṭi.

*[சதையன் + பாக்குவெட்டி]*

**சதையிழுப்பு** *šadai-y-iḻuppu,* பெ. (n.) *1.* தசையிழுத்தபடி வலிக்கும் நோய்; twitching of the muscles. *2.* குறக்கு வலி; cramp (சா.அக.)

*[சதை + இழுப்பு]*

**சதையொட்டி** *šadai-y-oṭṭi,* பெ. (n.) பூடுவகை (சங்.அக.); a plant.

*[சதை¹ + ஒட்டி]*

**சதைவலி** *šadai-vali,* பெ. (n.) தசையில் வலியுண்டாக்கும் நோய் வகை (M.L.); muscular rheumatism, myalgia.

ம. சதவலி

*[சதை⁴ + வலி]*

**சதைவளர்ச்சி** *šadai-vaḷarcci,* பெ. (n.) சதை வளரும் நோய் வகை (M.L.); polypus.

*[சதை + வளர்ச்சி]*

**சதைவளர்ப்பு** *šadai-vaḷarppu,* பெ. (n.) சதைப் படர்த்தி (M.L.) பார்க்க; see *šadai-p-paḍartti.*

*[சதை + வளர்ப்பு]*

**சதைவுகாயம்** *šadaivu-kāyam,* பெ. (n.) நசுங்கலால் உண்டாகுங் காயம் (இங். வை. 311); contusion.

*[சதை³ → சதைவு + காயம்]*

**சதைவை-த்தல்** *šadai-vai-, 4* செ.கு.வி. (v.i) சதைப்போடு-தல் பார்க்க; see *šadai-p-pōḍu-.*

*[சதை + வை-,]*

**சதைவைத்தவள்** *šadai-vaittavaḷ,* பெ. (n.) மலடானவள் (இ.வ.); a barren woman.

*[சதை¹ + வைத்தவள். சூல் கொள்ளாது வயிறு பருத்தவள்]*

**சந்தக்கவி** *šanda-k-kavi,* பெ. (n.) சந்தப்பாட்டு பார்க்க; see *šanda-p-pāṭṭu.* "சொன்ன சந்தக்கவி யாவருஞ் சொல்லுவர்" *(தனிப்பா. 1, 176, 24).*

*[சந்தம்⁴ + கவி]*

**சந்தக்குழம்பு** *šanda-k-kuḻambu,* பெ. (n.) மணமூட்டிக் குழைத்த சந்தனம்; scented sandal paste. "சந்தக்குழம்பி னிலூறு கஞ்சத்தியல்பின்" *(கொக்கோ. பாயி. 5).*

*[சந்தம்³ + குழம்பு]*

**சந்தக்குழிப்பு** *šanda-k-kuḻippu,* பெ. (n.) சந்தச் செய்யுளின் ஓசை வாய்பாடு; rhythmic movement of a stanza expressed in conventional symbols.

*[சந்தம் + குழிப்பு]*

**சந்தக்கேடு** *šanda-k-kēḍu,* பெ. (n.) மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று; a flaw of rubies. "நீள்வெய்ய கீற்றென்ன வகைபடு குற்றம்" *(திருவாலவா. 25: 14).*

*[சந்தம் + கேடு. கெடு → கேடு]*

**சந்தகம்¹** *šandagam,* பெ. (n.) இடியப்பம் (வின்.); a kind of pastry cooked in steam and forced like vermicelli through a mould.

தெ. சந்திக

*[சந்து → சந்தகம்]*

**சந்தகம்²** *šandagam,* பெ. (n.) மகிழ்ச்சி (யாழ். அக.); delight, joy.

**சந்தகம்³** *šandagam,* பெ. (n.) சந்தனம்; sandal-wood (சா.அக.).

*[சாந்து → சாந்தனம் = சந்தனம். சாந்து → சந்து = சந்தனமரம். சந்து → சந்துகம் → சந்தகம்]*

**சந்தகாரிகம்** *šandagārigam,* பெ. (n.) கல்லத்தி; stone-fig - Ficus excelsa alias F.tomentosa *(சா.அக.).*

**சந்தகெந்தம்** *šanda-kendam,* பெ. (n.) வெண்கடுகு; white mustard *(சா.அக.).*

**சந்தகை** *šandagai,* பெ. (n.) இடியப்பக்குழல்; mould or colander for iḍi-y-appam.

மறுவ. சந்தகைப் பலகை

*[சந்து → சந்தகை]*

**சந்தகைப்பணியாரம்** *šandagai-p-paṇiyāram,* பெ. (n.) இடியப்பம்; a baked rice-cake forced or squeezed out from the hand-press made of wood or iron *(சா.அக.)*

*[சந்தகை + பணியாரம்]*

**சந்தகைப்பலகை** *šandagai-p-palagai,* பெ. (n.) *1.* மாப் பண்டங்களை இழையைப் போல திரட்டுவதற்காக, வரிவரியாக ஆழமாய்ச் செதுக்கியெடுத்த பலகை; a plank containing grooves for rolling flour of wheat or other grains and then drawing out fibre-like substances as vermicelli. *2.* இடியப்பக்குழல்; a wooden or iron tube full of little holes through which the rice-paste is pressed out while making a rice-cake *(சா.அக).*

*[சந்தகை + பலகை]*

**சந்தடி** *šandaḍi,* பெ. (n.) *1.* விழா நிகழுமிடத்திலும், மாநகர வீதியிலும் பல்வேறுபட்ட மக்கள் தொழிலால் உண்டாகும் ஒலி, இரைச்சல்; bustle, stir, clamour, tumult, uproar. ஊரிலே சந்தடியடங்கவில்லை *(உ.வ.).* 'சந்தடிச் சாக்கிலே கந்தப்பொடி காற்பணம்' *(பழ.).* *2.* கூட்டம்; dense crowd of people, throng. "மாதர் சந்தடியில்" *(குற்றா. குற. 20).*

தெ. சந்தடி

*[அத்துதல் = ஒட்டுதல். அத்து → அந்து → அந்தி. அந்தித்தல் = நெருங்குதல், கூடுதல், ஒன்று சேர்தல். அந்தி → சந்தி → சந்தடி = மக்கள் கூடுதலால் ஏற்படும் ஆரவாரம், இரைச்சல்]*

**சந்தடைப்பன்** *šandaḍaippaṉ,* பெ. (n.) மாட்டு நோய் வகை (மாட்டுவா. 69); a disease of cattle.

*[சந்து + அடைப்பன்]*

**சந்தணி** *šandaṇi,* பெ. (n.) சந்தனம்[1] (மலை) பார்க்க; see *šandaṉam.*

*[சந்தனம் → சந்தணி]*

**சந்ததவாரி** *šandada-vāri,* பெ. (n.) நிலாவிரை; Tinnevelly senna - Cassia augustifolia *(சா.அக.).*

**சந்ததோரு** *šanda-dōru,* பெ. (n.) நீர்முள்ளி; water-thistle - Hygraphila spinosa *(சா.அக.).*

**சந்தநாடகம்** *šanda-nāḍagam,* பெ. (n.) கருவூரார் செய்த தமிழ் மருத்துவ நூல்; a medical treatise in Tamil compiled by Karuvoorar, a Siddhar.

**சந்தநாதி** *šanda-nādi,* பெ. (n.) வேங்கை மரம்; kino tree - Ptero-carpus bilobus *(சா.அக.).*

**சந்தப்பா** *šanda-p-pā,* பெ. (n.) சந்தப்பாட்டு பார்க்க; see *šanda-p-pāṭṭu.* "சந்தப்பா விருத்தப்பா கலிப்பா வெண்பா" *(தனிப்பா. ii, 239, 564).*

*[சந்தம் + பா]*

**சந்தப்பாட்டு** *šanda-p-pāṭṭu,* பெ. (n.) *1.* நான்கெழுத்து முதல் இருபத்தாறெழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை (திவா.); stanza of four lines with four to twenty-six syllables to a line. *2.* ஆசிரிய மண்டிலம் பார்க்க; see *āširiya-manḍilam.*

*[சந்தம் + பாட்டு]*

**சந்தப்பாணம்** *šanda-p-pāṇam,* பெ. (n.) புண்கட்டிக்கு இடும் ஒருவகைக் கூட்டு மருந்து (யாழ்ப்.); a kind of salve applied to boils or tumours.

**சந்தம்[1]** *šandam,* பெ. (n.) *1.* அழகு (சூடா.); beauty. *2.* நிறம்; colour. "சந்தமேகலை யாட்கு" *(திருக்கோ. 211).* *3.* வடிவு; shape, form. "நிமிர்ந்த தொார் சந்தமாயவனே" *(தேவா. 1016, 9).* *4.* மகிழ்ச்சி (பிங்.); pleasure, happiness. *5.* பழக்கம் (யாழ்ப்.); manners, habits.

ம. சந்தம்; க. சந்த, செந்த; தெ. சந்தமு (முறை, அழகு); து. சந்த.

*[அம் = அழகு. அம் → அந்து → அந்தம். அந்தம் → சந்தம்]*

கன்னடமொழியில் அந்த(ம்), சந்த(ம்) என்னும் இரண்டு சொற்களும் அழகுப் பொருள் படுவதையும் அவ்விரு சொற்களும் இணைந்து அந்தசந்த என்று இணை மொழியாக ஆளப்படுவதையும் காண்க.

**சந்தம்**[2] *šandam,* பெ. (n.) *சந்தனம்[1] (பிங்) பார்க்க;* see *šandanam.*

*[சந்தனம். → சந்தம்]*

**சந்தம்**[3] *šandam,* பெ. (n.) *துளை;* hole. *"கன்னசந் தங்களி னிந்கவி யாப்பைக் கடாவுவனே" (தனிப்பா. 1, 171: 24).*

*[சந்து → சந்தம்]*

**சந்தம்**[4] *šandam,* பெ. (n.) *1. செய்யுள் (சூடா.);* stanza, verse. *2. சந்தப்பாட்டு; šanda-p-pāṭṭu. "பண்பாய பகர்சந்தம்" (யாப். வி. 94, பக். 447). 3. கருத்து;* opinion, view. *"அவனுடைய சந்தத்தைப் பின் செல்லுமதாயிருக்கும்" (ஈடு. 11:4).*

*[அம் → அந்து → அந்தம் = இயைந்து செல்வது, அழகு. அந்தம் → சந்தம் = ஓசை இயைந்து செல்லும் பாவகை]*

**சந்தம்**[5] *šandam,* பெ. (n.) *கற்பரிச்செய்நஞ்சு (யாழ். அக.);* a mineral poison.

**சந்தமாமா** *šanda-māmā,* பெ. (n.) *1. நிலவு;* uncle moon. *2. தேவரடியார் தங்கள் தொழிலுக்கு உதவியாயிருப்பவனைக் குறிக்கும் சொல்;* a term used by dancing girls in addressing the pimp who helps them in their profession. *3. கூத்திற் கோமாளி தன்னோடு பேசுபவரை விளித்தற்குக் கூறும் சொல்;* a term used by clown on stage in addressing a person with whom he converses.

தெ. சந்தமாம; க. சந்தமாமா

*[சந்தம் + மாமா]*

**சந்தமிக்காசு** *šandamikkāšu,* பெ. (n.) *பழைய காசுவகை (பணவிடு. 115);* an ancient coin.

**சந்தர்த்தாரை** *šandar-t-tārai,* பெ. (n.) *இடைவிடாத மழை (இ.வ.;* incessant rain, continuous down-pour.

*[சந்து + அற்ற + தாரை = சந்தற்றதாரை → சந்தர்த்தாரை. தாரை = பெருமழை]*

**சந்தரி** *šandari,* பெ. (n.) *துளசி (மலை.);* basil.

**சந்தவடி** *šanda-vaḍi,* பெ. (n.) *நான்கு முதல் இருபத்தாறு வரையும் உள்ள எழுத்துகளால் இயன்ற மண்டிலப்பாவின் அடி (யாப். வி. 95, பக். 455).;* a metrical line in which the letters may range in number from four to twenty six.

*[சந்தம் + அடி]*

**சந்தவாக்கு** *šanda-vākku,* பெ. (n.) *1. இயற்கையான குணம்;* peculiar characteristics, habits and tendencies. *2. இழிந்த பழக்கம் (யாழ்ப்.);* low habits, meanness of disposition or manners, as in person of low descent.

*[சொந்தம் → சந்தம் + வாக்கு]*

**சந்தவிருத்தம்** *šanda-viruttam,* பெ. (n.) *சந்தக் குழிப்பின்படி அமைந்த செய்யுள்;* stanza in *viruttam* metre with a uniform rhythmic movement.

*[சந்தம் + விருத்தம்]*

**சந்தன்**[1] *šandan,* பெ. (n.) *1. வெண்சந்தனம்;* white sandal - santanum album. *2. சங்கு;* four-spined monetia - Azema-tetracantha *(சா.அக.).*

ம. சந்தனக்கட்ட

*[சந்தனம் → சந்தன்]*

**சந்தன்**[2] *šandan,* பெ. (n.) *இடையெழு வள்ளல்களில் ஒருவன் (பிங்.);* a liberal chief, one of seven 'iḍai-vaḷḷalgaḷ'.

ம. சந்தன் (அழகன்)

**சந்தனக்கட்டை** *šandana-k-kaṭṭai,* பெ. (n.) *அரைத்துப் பயன்படுத்தும் சந்தன மரக் கட்டை;* block of sandalwood.

*[சந்தனம் + கட்டை]*

**சந்தனக்கல்** *šandana-k-kal,* பெ. (n.) *சந்தனம் அரைக்கப் பயன்படுங்கல்;* stone for grinding sandal.

மறுவ. சந்தனச்சாணை

ம. சந்தனக்கல்

*[சந்தனம் + கல்]*

**சந்தனக்களி** *šandana-k-kaḷi,* பெ. (n.) *சந்தனக் குழம்பு;* sandal paste. *"சந்தனக் களியும் பூவும்" (சீவக. 1719).*

மறுவ. சந்தனக்குழம்பு

*[சந்தனம் + களி]*

**சந்தனக்காப்பு** *šandana-k-kāppu,* பெ. (n.) *சந்தனத்தைக் கடவுளின் திருமேனியில் வழிபாட்டுக்காகப் பூசுகை;* anointing an idol with sandal paste.

ம. சந்தனக்காப்பு

*[சந்தனம் + காப்பு]*

**சந்தனக்கிண்ணம்** *šandaṉa-k-kiṇṇam*, கரைத்த சந்தனம் வைத்தற்குரிய ஏனவகை; cup, used for distributing sandal paste.

ம. சந்தனக்கிண்ணம்

*[சந்தனம் + கிண்ணம்]*

**சந்தனக்கிண்ணி** *šandaṉa-k-kiṇṇi*, சந்தனக் கிண்ணம் பார்க்க; see *šandaṉa-k-kiṇṇam*.

மறுவ. சந்தனக்கிண்ணம்

*[சந்தனம் + கிண்ணி]*

**சந்தனக்குடம்** *šandaṉa-k-kuḍam*, திருவிழாக் காலங்களில் சந்தனம் கரைத்த நீர் நிறைந்த குடத்தை ஊர்வலஞ் செய்வித்து ஐயனார் முதலிய தெய்வங்கட்கும் முகமதியப் பெரியோர் கல்லறைகட்கும் செய்யும் நீராட்டு; ceremony of anointing a Hindu idol as Šāsta, or the grave of a Muhammadan saint with sandal paste, the pot containing it being carried to the place in procession.

மறுவ. சந்தனக்கூடு

ம. சந்தனக்குடம்

*[சந்தனம் + குடம். குள் → குண் → குணம் = குடம். குணம் → குடம் = உருண்ட கலம்]*

**சந்தனக்கும்பம்** *šantaṉa-k-kumbam*, பெ. (n.) சந்தனக்கும்பா பார்க்க; see *šandaṉa-k-kumbā*.

*[சந்தனம் + கும்பம்]*

**சந்தனக்கும்பா** *šantaṉa-k-kumbā*, பெ. (n.) சந்தனம் வைக்கும் பெரிய ஏனம்; a big vessel for keeping sandal.

*[சந்தனம் + கும்பா. கும் → கும்பு → கும்பம் = உருண்டு திரண்ட கலம். கும்பம் → கும்பா]*

**சந்தனக்குழம்பு** *šandaṉa-k-kuḻambu*, பெ. (n.) அரைத்த சந்தனக் கூட்டு; sandal paste. "வரைச் சந்தனக் குழம்பும்" *(திவ். இயற். 2: 76)*.

மறுவ. சந்தனக்களி, சந்தனச்சோறு, சந்தனத் தேய்வை

ம. சந்தனக்குழம்பு

*[சந்தனம் + குழம்பு]*

**சந்தனக்குறடு** *šandaṉa-k-kuṟaḍu*, பெ. (n.) *1.* சந்தனக்கட்டை பார்க்க; see *šandaṉa-k-kaṭṭai*. *2.* தெய்வத் திருமேனிக்குச் சந்தன நீராட்டு செய்யும் மேடை; platform where idol is anointed with sandal paste. *3.* உருட்டி விழுந்த இலக்கத்தைக் கொண்டு புத்தகத்தில் குறி பார்க்குமாறு நான்கு பக்கங்களிலும் 3, 12, 10, 100 என்ற எண்கள் முறையே எழுதப் பெற்றுக் கனவடிவாயமைந்த சந்தனக்கட்டை (வின்.); cubical or oblong block of sandalwood marked with the number 3, 12, 10, 100. one of the each side, the number which turns up when it is thrown being looked for in a book for divining the future.

ம. சந்தனக்குறடு

*[சந்தனம் + குறடு. குள் → குறு → குறள் → குறண்டு. குறண்டுதல் = வளைதல், சுருண்டு கொள்ளுதல். குறள் → குறடு = வளைந்த பற்றுக்கருவி. குறடு, இங்கு இலை, தளிர் இல்லாமல், வெட்டப்பட்ட கட்டையைக் குறித்தது]*

**சந்தனக்குறை** *šandaṉa-k-kuṟai*, பெ. (n.) மணப் பொருள்கள் சேர்த்துச் செய்யப்படும் கலவைச் சாந்தில் பயன்படுத்தும் சந்தனக்கட்டைத் துண்டு; small blocks of sandalwood used in preparing scented paste. "சந்தனக் குறையொடு சாந்திற்குரியவை" *(பெருங். மகத. 17: 139)*.

*[சந்தனம் + குறை]*

**சந்தனக்கூட்டு** *šandaṉa-k-kūṭṭu*, பெ. (n.) கலவைச் சந்தனம்; perfumery ground with sandal.

மறுவ. சந்தனச்சாந்து

ம. சந்தனக்கூட்டு

*[சந்தனம் + கூட்டு]*

**சந்தனக்கூடு** *šantaṉa-k-kūḍu*, பெ. (n.) முகமதியப் பெரியவர்களுக்காக நடத்தப்படும் திருவிழாவில் சிறு தேரின் நடுவில் வைத்து எடுத்துச் செல்லும் சந்தனக் குடம்; a small pot filled with sandal paste kept in a temple chariot taken act in procession in honour of Muslim saints. நாகூர்ச் சந்தனக்கூடு திருவிழா சிறப்பாக இருக்கும்.

*[சந்தனம் + கூடு]*

**சந்தனக்கோரை** *šandaṉa-k-kōrai,* பெ. (n.) சந்தன மணம் வீசும் கோரை வகை (யாழ்ப்.); a kind of fragrant sedge.

*[சந்தனம் + கோரை]*

**சந்தனக்கோபம்** *šandaṉa-k-kōbam,* பெ. (n.) ஒருவகைச் சாமை; a kind of millet - Ichnocarpus genus (சாஅக.).

*[சந்தனம் + கோபம். சந்தன நிறமுள்ளது]*

**சந்தனக்கோல்** *šandaṉa-k-kōl,* பெ. (n.) சந்தனக் குச்சி; stick. "சந்தனக்கோல் குறுகியவிடத்து பிரப்பங் கோலாகாது" (தொல். எழுத்து. மொழி. 34. இளம்.).

*[சந்தனம் + கோல்]*

**சந்தனச்சாணை** *šandaṉa-c-cāṇai,* பெ. (n.) சந்தனக்கல் பார்க்க; see šandaṉa-k-kal.

மறுவ. சந்தனக்கல்

*[சந்தனம் + சாணை]*

**சந்தனச்சாந்து** *šandaṉa-c-cāndu,* பெ. (n.) சந்தனக்கூட்டு பார்க்க; see šandaṉa-k-kūṭṭu. "சந்தனச் சாந்திட் டன்ன" (பெருங். மகத. 7: 109).

மறுவ. சந்தனக்கூட்டு

*[சந்தனம் + சாந்து]*

**சந்தனச்சாரல்** *šandaṉa-c-cāral,* பெ. (n.) சந்தன மரங்கள் அடர்ந்த மலைச்சரிவு; mountain slope or hilly tract noted for sandalwood trees. "சந்தனச்சாரற் பெருவரை யடுக்கத்து" (பெருங். இலாவாண. 20: 44).

*[சந்தனம் + சாரல். சார் → சாரல் = மலைச் சரிவு, மலைப்பக்கம்]*

**சந்தனச்சேறு** *šandaṉa-c-cēṟu,* பெ. (n.) சந்தனக் குழம்பு பார்க்க; see *šandaṉa-k-kuḻambu.* "சந்தனச்சே றாடிய மேனி" (பரிபா. 7: 74, உரை).

மறுவ. சந்தனக்குழம்பு

*[சந்தனம் + சேறு]*

பண்டைத் தமிழகத்தில் சந்தனச் சேற்றாலும், வண்ணச் சாந்தாலும் இருபாலாரும், சிறப்பாகப் பெண்டிர், மேனி முழுவதும் பல்வேறு ஓவியம் வரைந்து கொள்வதும், நிலையாயிருக்குமாறு பல்வகை உருவங்களைப் பச்சை குத்திக்கொள்வதும் பெருவழக்காய் இருந்தது.

**சந்தனச்சோலை** *šandaṉa-c-cōlai,* பெ. (n.) சந்தன மரங்கள் நிறைந்த சோலை; grove of sandalwood trees. "சந்தனச்சோலைப் பந்தா டுகின்றார்" (திருக்கோ. 107).

*[சந்தனம் + சோலை]*

**சந்தனஞ்சாத்து-தல்** *šandaṉañ-jāttu-,* 5 செ.குவி. (v.i.) 1. கடவுள் திருமேனிக்குச் சந்தனக் காப்பிடுதல்; to anoint with sandal paste, as an idol. 2. உடலிற் சந்தனம் பூசுதல்; to besmear the body with sandal paste.

ம. சந்தனஞ்சாத்து

*[சந்தனம் + சாத்து-,]*

**சந்தனத்தழை** *šandaṉa-t-taḻai,* பெ. (n.) சந்தன இலை; sandal leaf.

*[சந்தனம் + தழை]*

சந்தனத்தழை தகாதென்று மறுத்தல் போன்ற அகப்பொருட்டுறைகள் (தழை கொண்டு சேறல், தழையெதிர்தல், தழையேற்பித்தல், தழை விருப்புரைத்தல்) மக்கள் குறிஞ்சித் திணையில் தழையுடையணிந்திருந்ததைக் காட்டும்.

**சந்தனத்திரணை** *šandaṉa-t-tiraṇai,* பெ. (n.) சந்தனக்கட்டி (வின்.); lump of sandal paste.

*[சந்தனம் + திரணை]*

**சந்தனத்திரி** *šandaṉa-t-tiri,* பெ. (n.) சந்தனம் முதலிய மணப்பொருள்களால் செய்யப்படும் மணத்திரி (ஊதுவத்தி) (யாழ்ப்.); wick or thin stick coated with sandal or other perfumed paste for diffusing odour while buring, joss-stick.

ம. சந்தனத்திரி

*[சந்தனம் + திரி]*

**சந்தனத்தூள்** *šandaṉa-t-tūḷ,* பெ. (n.) சந்தனப் பொடி பார்க்க; see *šandaṉa-p-poḍi.*

மறுவ. சந்தனப்பொடி

*[சந்தனம் + தூள். துகள் → தூள்]*

**சந்தனத்தேய்வை** *šandaṉa-t-tēyvai,* பெ. (n.) சந்தனக்குழம்பு பார்க்க; see *šandaṉa-k-kuḻambu.* "சாதிலிங்கமுஞ் சந்தனத் தேய்வையும்" (பெருங். உஞ்சைக், 41, 130).

மறுவ. சந்தனக்குழம்பு

*[சந்தனம் + தேய்வை. தேய் + வை. 'வை' - பெயராக்க ஈறு]*

**சந்தனத்தேவன்மடம்** *śandaṉa-t-tēvaṉ-maḍam,* பெ. (n.) சிவகங்கை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Sivagangai district.

*[சந்தனத்தேவன் + மடம்]*

சிவகங்கை மாவட்டத்தில் நாட்டரசன் கோட்டைக்கும் சிவகங்கைக்கும் இடையில் இவ்வூர் உள்ளது.

சந்தனத்தேவன் 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கொள்ளைக்காரன். இருப்பவர்களிடம் எடுத்து இல்லாதவர்களுக்குக் கொடுக்கும் இயல்பினன். இவ்வியல்பின் காரணமாக இவன் பெயரில் அமைந்த ஊர் சந்தனத் தேவன் மடம் எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர் (தஊ.பெ.).

**சந்தனதி** *śandaṉadi,* பெ. (n.) வெட்டிவேர்; cuscus root - Vetivera odarata (சா. அக.).

*[சந்தனம் → சந்தனதி]*

**சந்தனநலங்கு** *śandaṉa-nalaṅgu,* பெ. (n.) திருமணத்திற்கு முன்னால் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் அவரவர் வீடுகளில், அரைத்த சந்தனம் முதலியவற்றைப் பூசி நலங்கு வைக்கின்ற சடங்கு; a ceremony prior to marriage in which 'nalaṅgu' is performed in the respective houses of the bride and bridegroom.

*[சந்தனம் + நலங்கு]*

**சந்தனநறுநீர்** *śandaṉa-naṟu-nīr,* பெ. (n.) சந்தனங் கலந்த பனிநீர்; scented rose-water mixed with sandal paste. "சந்தன நறுநீர் மண்ணுறுத் தாட்டி" (பெருங். உஞ்சைக் 34: 188)

*[சந்தனம் + நறுநீர்]*

**சந்தனநீராட்டு** *śandaṉa-nīrāṭṭu,* பெ. (n.) கடவுள் திருமேனிக்குச் சந்தனக் குழம்பால் செய்யும் நீராட்டு; anointing an idol with sandal paste.

*[சந்தனம் + நீர் + ஆட்டு]*

**சந்தனப்பலகை** *śandaṉa-p-palagai,* பெ. (n.) சந்தன மரத்தாலான மணைப் பலகை; well-polished seats made of sandal-wood. "சந்தனப் பலகையுஞ் சந்தப் பேழையும்" (பெருங். உஞ்சைக். 57: 34).

மறுவ. சந்தனப் பீடிகை

*[சந்தனம் + பலகை]*

**சந்தனப்பில்லை**[1] *śandaṉa-p-pillai,* பெ. (n.) 1. மாடுகளிற் காணப்படும் ஒருவகை மங்கல் நிறம்; light yellow colour of cattle. 2. புகர் நிறமுள்ள மாட்டு வகை; cattle having light yellow colour.

ம. சந்தனப்புல்ல

*[சந்தனம் + பில்லை]*

**சந்தனப்பில்லை**[1] *śandaṉa-p-pillai,* பெ. (n.) சந்தனவில்லை பார்க்க; see *śandaṉa-villai.*

*[சந்தனம் + பில்லை. வில்லை → பில்லை]*

**சந்தனப்பீடிகை** *śandaṉa-p-pīḍigai,* பெ. (n.) சந்தனப்பலகை பார்க்க; see *śandaṉa-p-palagai.* "சந்தனப்பீடிகைச் சார்வணை யேறி" (பெருங். உஞ்சைக். 37: 15).

மறுவ. சந்தனப்பலகை

*[சந்தனம் + பீடிகை]*

**சந்தனப்புல்லை** *śandaṉa-p-pullai,* பெ. (n.) மங்கலான மஞ்சள் நிறம் (பெரிய மாட். 13); light yellow colour, as of cattle.

மறுவ. சந்தனப்பில்லை

*[சந்தனம் + புல்லை]*

**சந்தனப்பூச்சு** *śandaṉa-p-pūccu,* பெ. (n.) உடலிற் சந்தனம் பூசுகை; smearing the body with sandal paste.

*[சந்தனம் + பூச்சு. பூசு → பூச்சு]*

**சந்தனப்பொட்டு** *śandaṉa-p-poṭṭu,* பெ. (n.) சந்தனக் குழம்பால் நெற்றியில் வைக்கும் பொட்டு; a circular mark of sandal paste, worn on the forehead.

ம., க., தெ. சந்தனப்பொட்டு

*[சந்தனம் + பொட்டு]*

**சந்தனப்பொடி** *śandaṉa-p-poḍi,* பெ. (n.) நறுமணச் சந்தனத் தூள்; sweet-scented sandalwood powder.

*[சந்தனம் + பொடி]*

**சந்தனம்**[1] *śandaṉam,* பெ. (n.) 1. சந்தனமரம்; sandalwood tree. "வெறிகமழ் சந்தனமும் வேங்கையும்" (நாலடி, 180). 2. அரைத்த சந்தனக் குழம்பு; sandal paste. "சீதச் சந்தனந் தாதோ டப்ப" (பெருங். இலாவாண. 9, 157). 'சந்தனம் தெளித்த கையாலே சாணி தெளித்தல் ஆச்சுது' (பழ.).

ME., L. sandulum

*[சார் → சார்த்து → சாத்து. சாத்துதல் = பூசுதல், திருமண் காப்பிடுதல், சந்தனம் பூசுதல். சாத்து → சாந்து = சுண்ணாம்புச் சேறு, அரைத்த சந்தனம், சந்தனமரம், நெற்றிப் பொட்டுப்பசை, எட்பசை. சாந்து → சந்து = சந்தனமரம். சந்து → சந்தனம் (வே. க. 146).]*

த. சந்தனம் → Skt. candana

கிழக்கிந்தியா அல்லது ஆத்திரேலியாவினின்று வந்த மணமுள்ள மரம் (scented wood esp. from E. India. or Australia) என்று எருதந்துறை அகரமுதலி குறித்திருப்பதும் இந்தைரோப்பிய மொழிகளில் சந்தனத்தைக் குறிக்க சொல் இன்மையும் சந்தனம் தென்னாட்டைச் சார்ந்த மரம் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

**சந்தனம்**[2] *šandanam*, பெ. (n.) தேர்; car, chariot. "மணிச்சந்தனத் தேற்றியே" *(பாரத. குருகுல. 124).*

**சந்தனமண்டபம்** *šandana-maṇḍapam*, பெ. (n.) சந்தனம் அரைப்பதற்காகக் கற்கள் பதித் திருக்குங் கோயில் மண்டபம்; temple-room where stones are fixed for grinding sandal.

*[சந்தனம் + மண்டபம்]*

**சந்தனமரம்** *šandana-maram*, பெ. (n.) இந்தியா முழுமையும் வளரும் மரவகை; sandal-wood tree - Santalum album.

ம. சந்தனவல்லி

*[சந்தனம் + மரம்]*

சந்தன மரம் 4000 அடி உயரத்தில் வளரும்; இதன் சாந்து மணமாக இருப்பதுடன் குளிர்ச்சியையும் தரும். பல நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும்.

**வகைகள் :**

1. செஞ்சந்தனம்.
2. வெண்சந்தனம்.
3. அரிச்சந்தனம்.
4. சிறு சந்தனம்.
5. கோபிச்சந்தனம்.
6. காட்டுச் சந்தனம்.
7. கருப்புச் சந்தனம் (கிருட்டிணச்சந்தனம்) (சா. அக.).

**சந்தனமலை** *šandana-malai*, பெ. (n.) மலேயாத் தீவிலுள்ள, மிகச் சிறந்த வகைச் சந்தன மரங்கள் வளரும் மலை; sandalwood mountain in Malaya, so called from it yielding superior sandal trees *(சா.அக.).*

ம. சந்தனகிரி

*[சந்தனம் + மலை]*

**சந்தனமாமணி** *šandana-māmaṇi*, பெ. (n.) நறுவிலி; oblong feather-nerved sebesten.

*[சந்தனம் + மாமணி]*

**சந்தனமிடு-தல்** *šandanam-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) அரைத்த சந்தனக் குழம்பைப் பூசுதல்; to apply sandal paste.

ம. சந்தனமிடுக

*[சந்தனம் + இடு-,]*

**சந்தனமிழை-த்தல்** *šandanam-ilai-*, 4 செகுன்றாவி. (v.t.) சந்தனம் அரைத்தல்; to grind sandal.

*[சந்தனம் + இழை-,]*

**சந்தனமுழுக்கு** *šandana-mulukku*, பெ. (n.) இறைவன் திருமேனிக்குச் சந்தனத்தில் செய்யும் முழுக்கு; anointing an idol with sandal paste.

*[சந்தனம் + முழுக்கு]*

**சந்தனவத்தர்** *šandana-v-attar*, பெ. (n.) சந்தனக் கட்டையிலிருந்து இறக்கிய நறுமணநீர்; sandal attar.

*[சந்தனம் + அத்தர்]*

**சந்தனவிரை** *šandana-virai*, பெ. (n.) தேவதாளி (L.); langsat of the Ānaimalai hills.

*[சந்தனம் + விரை]*

**சந்தனவில்லை** *šandana-villai*, பெ. (n.) சந்தன உருண்டை; sandal tablet, small cake of sandal paste.

*[சந்தனம் + வில்லை]*

**சந்தனவுருண்டை** *šandana-v-uruṇḍai*, பெ. (n.) சந்தனவில்லை பார்க்க; see *šandana-villai.*

*[சந்தனம் + உருண்டை. உருள் → உருண்டை]*

**சந்தனவெண்ணெய்** *šandana-v-eṇṇay*, பெ. (n.) சந்தனத்தினின்று எடுக்கும் எண்ணெய்; sandal wood oil.

ம. சந்தனதைலம்

*[சந்தனம் + எண்ணெய்]*

**சந்தனவெற்பு** *šandaṉa-veṟpu,* பெ. (n.) சந்தன மரங்கள் வளரும் பொதிய மலை (திருவிளை. பழியஞ். 23); Podiya-malai, as the mountain noted for sandal trees.

*[சந்தனம் + வெற்பு]*

**சந்தனவேங்கை** *šandaṉa-vēṅgai,* பெ. (n.) செஞ்சந்தன மரவகை; red sanders.

*[சந்தனம் + வேங்கை]*

**சந்தனவேம்பு** *šandaṉa-vēmbu,* பெ. (n.) கட்டட வேலைக்குப் பயன்படும் வேம்பு மரவகை (கட்டட.); kind of neem tree.

*[சந்தனம் + வேம்பு]*

**சந்தனவேலன்** *šandaṉa-vēlaṉ,* பெ. (n.) குடைவேல்; umbrella-thorn - Acacia planifrons (சா. அக.).

**சந்தனவைரி** *šandaṉa-vairi,* பெ. (n.) தேவதாளி; langsat of Annamalai hill - Lansium anamallayanum (சா. அக.).

*[சந்தனம் + வைரி]*

**சந்தனாகரு** *šandaṉākaru,* பெ. (n.) சந்தன மரவகை; a kind of sandalwood. "சந்தனா கருவின் றூபம்" (பாரத. இந்திர. 41.).

*[சந்தனம் + ஆகரு]*

**சந்தனாதி** *šandaṉādi* பெ. (n.) வேங்கை மரம் (மலை.); Indian kino tree.

*[சந்தனம் → சந்தன் + ஆதி]*

**சந்தனாதித்தைலம்** *šandaṉādi-t-tailam,* பெ. (n.) சந்தனாதியெண்ணெய் பார்க்க; see *šandaṉādi-y-eṇṇey.*

ம. சந்தனதைலம்

*[சந்தனாதி + தைலம்]*

**சந்தனாதியுண்டை** *šandaṉādi-y-uṇḍai,* பெ. (n.) சந்தனம் மிகுதியாகச் சேர்த்துச் சிற்றுண்டையாகச் செய்யப்பட்ட ஒருவகை மருந்து (வின்.); a medicinal pill having sandal as the essential ingredient.

*[சந்தனம் + ஆதி + உண்டை. உருள் → உருண்டை → உண்டை]*

**சந்தனாதியெண்ணெய்** *šandaṉādi-y-eṇṇey,* பெ. (n.) சந்தனம் முதலிய மணப்பொருள்களினின்று வடிக்கும் நெய்மம்; fragrant medicated oil having sandal as the chief ingredient.

*[சந்தனம் + ஆதி + எண்ணெய்]*

**சந்தனாபிடேகம்** *šandaṉābiḍēgam,* பெ. (n.) சந்தனமுழுக்கு பார்க்க; see *šandaṉa-muḻukku.*

*[சந்தனம் + அபிடேகம்]*

Skt. abiṣēga → த. அபிடேகம்

**சந்தனி** *šandaṉi,* பெ. (n.) வெண்சந்தனம்; common white sandalwood - Santanum album (சா.அக.).

*[சந்தனம் → சந்தனி]*

**சந்தாடகம்** *šandāḍagam,* பெ. (n.) வட்டக் கிலுகிலுப்பை; fox-frightener - Crotolaria verrucosa (சா.அக.).

**சந்தாணி** *šandāṇi,* பெ. (n.) வெங்காரம்; borax (சா.அக.).

**சந்தாதிகம்** *šandādigam,* பெ. (n.) வசம்பு; sweet-flag - Acorus calamus (சா.அக.).

**சந்தாம்மியம்** *šandāmmiyam,* பெ. (n.) அறுகு; cynodon or couch grass - Cynodon dactylon (சா.அக.).

**சந்தாமணி** *šandāmaṇi,* பெ. (n.) எருக்கு; madar plant - Calotropis gigantea (சா.அக.).

**சந்தாளர்** *šandāḷar,* பெ. (n.) திரவிட மொழியாகிய மாலத்தம் மொழியைப் பேசுபவரும் இராசமகால் குன்றுகளில் வாழ்பவருமான ஓர் இனத்தவர்; Santals a tribe inhabiting the skirts of the Rajmahal hills and speaking Malto language, a north Dravidian group.

க. சந்தாள

**சந்தானக்கூர்மை** *šandāṉa-k-kūrmai,* பெ. (n.) அட்டுப்பு (யாழ்.அக.); salt produced by evaporation.

*[சந்தானம் + கூர்மை]*

**சந்தானகரணி** *šandāṉa-karaṇi,* பெ. (n.) இலுப்பை மரம்; honey tree - Bassia longifolia (சா.அக.).

**சந்தானகாருணி** *šandāṉa-kāruṇi,* பெ. (n.) பேரறுகு; a kind of bermuda grass (சா.அக.).

**சந்தானகுரவர்** šandāṉa-kuravar, பெ. (n.) சிவனியக் கொண்முடிபைப் (சைவ சித்தாந்தத்தைப்) பரவச்செய்த மெய்கண்ட தேவர், அருணந்திசிவாசாரியதார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் என்ற ஆசிரியர் நால்வர்; the four Šaiva Ācāryās who promulgated the Saiva Siddhānda philosphy, viz., Meykaṇḍa-dēvar, Aruṇandi-šivāšāriyar, Maraiñāṉa-šambandar, Umābadi-šivašāriyar, as tracing their succession from šiva.

**சந்தானதீபிகை** *šandāṉa-dībigai,* பெ. (n.) ஒரு கணிய நூல்; treatise on astrology.

[சந்தானம் + தீபிகை]

இதன் ஆசிரியர் இராமலிங்க முனிவர். கணியத்தில் பிள்ளைகளைப் பற்றிக் கூறும் நூல்.

**சந்தானவஞ்சி** *šandāṉa-vañji,* பெ. (n.) செவ்வாழை; red plantain - Musa sapientum (rubra) (சா.அக.).

**சந்தானிகச்சிலந்தி** *šandāṉiga-c-cilandi,* பெ. (n.) கடித்தவிடத்துத் குத்துதலையும், காயத்தையும் உண்டாக்கும் ஒருவகைச் சிலந்திப் பூச்சி; an insect like spider, developing blisters or boils attended with unbearable burning pain, when coming in contact with the body (சா.அக.).

[சந்தானிகம் + சிலந்தி]

**சந்தானிகை** *šandāṉigadi,* பெ. (n.) பாலேடு; cream of milk (கழ.அக.).

**சந்தி**[1] *šandi,* பெ. (n.) 1. கூடுகை; meeting, union, combination. 2. பல தெரு கூடுமிடம்; the cross roads, junction of three or more roads. "சதுக்கமுஞ் சந்தியும்" (திருமுருகு. 225). 'சந்தியிலே அடித்ததற்குச் சாட்சியா' (பழ.) 3. இணைப்பு, இசைப்பு; joint, joining. 4. பல பொருத்து அல்லது கணுவுள்ள மூங்கில் (பிங்.); bamboo, as having joints. 5. நட்பாக்குகை (குறள், 633, உரை); reconciliation alliance, one of arašar-aruguṇam. 6. தறுவாய்; crisis, critical point of time. நல்ல சந்தியில் வந்தான். 7 ஒரு பெரும்பண் (பிங்.); a primary melody-type. 8. நாடகச்சந்தி (சிலப். 3: 13, உரை); division of a drama. 9. வரிக் கூத்துவகை (சிலப். 3: 13, உரை); a masquerade dance.

[உத்து (ஒத்து) → அத்து. அத்துதல் = ஒட்டுதல், பொருத்தித் தைத்தல். அத்து → அந்து → அந்தி. அந்தித்தல் = 1. நெருங்குதல் "வேதமந்தித்து மறியான்" (திருவிளை. நகர. 106). 2. கூடுதல், ஒன்று சேர்தல்]

இனி, உம் → உந்து → அந்து → அந்தி என்றுமாம். இரவும் பகலும் அல்லது பகலும் இரவும் கலக்கும் இடைவேளையே கால வகையில் அந்தியெனப்பட்டது. காலையில் நிகழ்வது காலையந்தியென்றும் மாலையில் நிகழ்வது மாலையந்தியென்றும் சொல்லப் பெறும். "காலை யந்தியும் மாலை யந்தியும்" (புறம். 34).

காலையந்திக்கு முன்னந்தி, வெள்ளந்தி யென்றும், மாலையந்திக்குப் பின்னந்தி, செவ்வந்தியென்றும் பெயருண்டு. அந்தி யென்னும் பொதுச்சொல் சிறப்பாக ஆளப் பெறும்போது மாலையந்தியையே குறிக்கும் என்பது, அந்திக்கடை, அந்திக் காப்பு, அந்தி மல்லிகை, அந்திவண்ணன், அந்திவேளை முதலிய சொல் வழக்கால் அறியப்படும்.

இடவகையில் அந்தி என்பது முத்தெருக்கள் கூடுமிடத்தைக் குறிக்கும். "அந்தியுஞ் சதுக்கமும் ஆவண வீதியும்" (சிலப், 14, 213).

பிற்காலத்தில் அந்தி என்னும் சொல் சகரமெய் முன்னிடம் பெற்றுச் சந்தி என்றாயிற்று. ஒ.நோ: இளை → சிளை; உதை → சுதை; ஏண் → சேண்.

சந்தி :

1. காலை அல்லது மாலை வழிபாடு. "சந்தி செயத்தாள் விளக்க" (நள. கலிதொ.32).

2. மாலை (சூடா.) 'சந்திக்காப்பு' (உ.வ.), அந்திசந்தி = காலை மாலை

3. முத்தெருக் கூடுமிடம். "சதுக்கமுஞ் சந்தியும்" (திருமுருகு. 225)

அந்தி அல்லது சந்தி என்னுஞ் சொல் தலைக் கூடுதற் பொருளில் பண்டையிலக்கியத்தில் அருகியே வழங்கியமையாலும் சொற் புணர்ச்சியைக் குறிக்கச் சந்தி என்னும் சொல் வடமொழியிலேயே ஆளப் பெறுவதாலும், தமிழ்ப்பற்றுள்ள பெரும் புலவரும் சந்தி என்பது வடசொல்லென்றே மயங்கி வருகின்றனர். ஆயின், ஆய்ந்து பார்க்குங்கால், இதன் தென்சொல் மூலம் வெளிப்படுவது வியக்கத்தக்கதா யிருக்கின்றது.

இச் சொல் முதலில் தமிழில் வழங்கிய வடிவம் அந்து என்பதே. அந்துதல் = கூடுதல். அந்து → அந்தி = கூடியது, கூடிய நேரம் அல்லது

இடம். அந்து - சந்து (முதனிலைத் தொழிற் பெயர்) 1. பொருத்து (பிங்.), 2. உடற்பொருத்து (பிங்.), தொடைப் பொருத்து, இடுப்பு. 3. இரு பகைவர் பொருந்துதல் (ஒப்புரவாதல்) 'உயிரனையாய் சந்துபட வுரைத்தருள்" *(பாரத. கிருட்டிணன்.)*. "நடுநின்றா ரிருவருக்குஞ் சந்து சொல்ல" *(சிலப். 8: 101 உரை)*. 4. பலவழி கூடுமிடம். *"சந்து நீவி" (மலைபடு. 393)*. சந்து → சந்தை = பல கடைகள் கூடுமிடம். *(வ.வ.68, 69)*.

வடமொழியாளர் சந்தி என்னுஞ் சொல்லை ஸம்+ தி (sam + dhi) என்று பிரித்து ஸம் + தா (sam + dhā) என்றுங் கூட்டுச் சொல்லினின்று திரிப்பர். ஸம் = உடன், கூட, together, தா = (dhā) இடு, வை, to put. ஸம்தா (samdhā) = என்பது அவர் காட்டும் மூலம் (செல்வி. மே. 78, பக். 429-431).

**சந்தி**[2] šandi, பெ. (n.) *நிலைமொழியின் ஈற்றெழுத்தும் வருமொழியின் முதலெழுத்தும் இணையும் போது ஏற்படும் மாற்றம்;* the change, etc. that results when the last letter of a word combines with the first letter of the following word; sandhi *(கிரியா)*.

*[அந்து → அந்தி → சந்தி]*

சந்தி என்னும் வடிவமும் ஓசையும் ஆராய்ச்சி யில்லாத் தமிழ்ப் புலவரை மயக்கலாம். இதற்கொத்த வடிவும் பொருளுமுள்ள சொற்கள், ஏனைச் சொல்முதல் மெய்களைக் கொண்டும் தமிழில் அமைந்திருத்தல் காண்க.

கும் → குத்து → கொத்து = குலை, குடும்பம், திரள். கும் → கம் → கத்து = உடற்கந்து (திவா.), மாடு பிணைக்குந் தும்பு. கத்துவான் = மாடு பிணைக்குங்கயிறு. கந்துகளம் = நெல்லும் பதருங்கலந்த களம். கந்து மங்கல் = கப்பும் மங்கலுங் கலந்த சாயம். கந்து மாறுதல் = நுகத்திற் பூட்டிய எருதுகளை வலமிடம் மாற்றிக் கட்டுதல்.

சந்தி என்னும் சொல், சொற்புணர்ச்சி என்னும் பொருளில் எவ்வகைத் தமிழ் வழக்கிலும் இதுகாறும் இடம்பெறாமற் போயினும் தெருப்புணர்ச்சி என்னும் பொருளில் சந்திக்கிழுத்தல், சந்தி சிரித்தல், சந்தியில் நிற்றல், சந்தி மறித்தல், சந்தியில் விடுதல் என்று உலக வழக்கிலும், "சந்தி மிதித்தல்" *(திருவிளை. உக்கிர 27)*, "சதுக்கமுஞ் சந்தியும்" என்று செய்யுள் வழக்கிலும், ஊன்றி யிருத்தல் காண்க. சந்திக் கோணம் என்பது ஒரு தேருறுப்பு *(பெருங். உஞ்சைக். 58: 51)*.

அந்து, சந்து என்னும் வினைமுதலிகள் இகரவீறு பெற்று உண்ணி, கொல்லி என்பன போல் செய்வான் பெயர்களாகிப் பின்னர் அஞ்சிக்கை, இரட்டித்தல் என்பன போல் மீண்டும் முதனிலைகளாய்ப் புடைபெயர்ந்தன என அறிக.

அந்து → சந்து; அந்து → அந்தி; சந்து → சந்தி; அந்தி → அந்திப்பு; சந்தி → சந்திப்பு *(வ.வ. 70,71)*

இரண்டு உருபன்கள் ஒன்று சேர்வது புணர்ச்சி. இது சந்தி என்றும் அழைக்கப்படும். அந்தித்தல் = ஒன்று சேர்தல். அந்தி → சந்தி. புணர்ச்சி, சந்தி ஆகிய இரு சொற்களும் சேர்தல் அல்லது கூடுதல் என்னும் பொருளைக் குறிக்கும் ஒரு பொருட்பன்மொழிகளாம். மூன்று தெருக்கள் கூடுமிடத்தை முச்சந்தி எனவும், நான்கு தெருக்கள் கூடுமிடத்தை நாற்சந்தி எனவும் அழைப்பதை ஒப்பு நோக்குக. சந்தியென்னும் சொல் சமற்கிருதத்திலும் மேலைநாட்டார் எழுதிய மொழியியல் நூல்களிலும் வழங்கப்படுகிறது. தமிழ்வழக்கில் புணர்ச்சியே பெரும்பான்மை.

பொருள் மயக்கத்தைத் (ambiguity) தவிர்ப் பதற்கும், உருபனமைப்புக் கட்டுப்பாடுகள் மீறுவதைத் தவிர்ப்பதற்கும், சொல்லின் எல்லையைக் (word - boundary) குறிப்பதற்கும் சந்தி வேறுபாடு உதவுகிறது.

சந்தி பெயர், வினை, இடை, உரி ஆகிய நால்வகைச் சொற்களும் நிலைமொழியாகவும் வருமொழியாகவும் நின்று சேர்க்கும் சேர்க்கையினைக் குறிக்கும்.

சந்தியை அகச்சந்தி (ஒரு சொல்லுக்குள் அமையும் சந்தி), புறச்சந்தி (ஒரு சொல்லுக்கும் இன்னொரு சொல்லுக்கும் இடையில் ஏற்படும் சந்தி) என்றும் வேற்றுமைச் சந்தி, அல்வழிச் சந்தி என்றும் பிரித்து விளக்குவர்.

"இருசொற் புணர்வது புணர்ச்சி. மொழி பொதுமக்களால் ஆக்கப் பெற்றதாகலின், அதன் புணர்ச்சியும் அவரது அமைப்பே. கவனித்தறியப்பெறாது ஏற்கெனவேயிருந்த சொற்கூட்டு நெறிமுறைகளையே, புணர்ச்சி நெறிமொழிகள் (விதிகள்) என எடுத்துக் கூறினர் இலக்கணியர். இயல்பு புணர்ச்சி, திரிபு புணர்ச்சி எனப் புணர்ச்சி இரு வகைப்படும். ஒரு வகை வேறுபாடுமின்றி இயல்பாயிருப்பது இயல்பு புணர்ச்சி. ஏதேனுமொரு வகையில் திரிவது திரிபு புணர்ச்சி. திரிதல் வேறுபடுதல். அது தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகைப்படும். முன் இல்லாத எழுத்தோ அசையோ தோன்றுவது தோன்றல்; ஒரெழுத்து மற்றோரெழுத்தாக மாறுவது திரிதல்; முன்னுள்ள எழுத்தோ அசையோ மறைவது கெடுதல்.

புணர்ச்சியிற் புதிதாய்த் தோன்றும் அசை, இருசொற்களை அல்லது ஒரு சொல்லையும் ஒரு சொல் உறுப்பையும் சார்ந்து நின்று இயைப்பதால் (இசைப்பதால்) சாரியை எனப்படும்" *(த.வ. 115, 116).*

வடமொழியில் சந்திகளைக் குணசந்தி, தீர்க்கசந்தி, விருத்தி சந்தி என மூவகையாகப் பிரிப்பர். அகர ஆகார இறுதியின் முன்னர் இகர ஈகாரம் வரும்போது அவை ஏகாரமாக மாறுவது குணசந்தி.

அகர ஆகாரங்கள் தம்முள் புணரும்போது ஆகாரமாகவும், இகர ஈகாரங்கள் தம்முன் புணரும்போது ஈகாரமாகவும் உகர ஊகாரங்கள் தம்முள் புணரும்போது ஊகாராமாகவும் மாறுவது தீர்க்கசந்தி.

அகரம் அல்லது ஆகாரமும் ஏகாரம் அல்லது ஐகாரமும் சேர்ந்து ஐகாரமாகத் திரிவது விருத்தி சந்தி. அகரம் அல்லது ஆகாரமும் ஓகாரம் அல்லது ஔகாரமும் சேர்ந்து ஔகாரமாக மாறுவதும் விருத்திசந்தி.

**சந்தி**[3] *šandi,* பெ. (n.) **பகலும் இரவும் பிரியும் அல்லது சந்திக்கும் நேரம், விடியல் அல்லது மாலைப்பொழுது;** twilight, the time just before dawn or just after sunset, dawn or dusk. இறந்தவரை நினைத்துக் காலையில் அழுவது சந்தியழுகை.

*[அந்தி → சந்தி]*

**சந்தி**[4]**-த்தல்** *šandi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. **இணைத்தல்;** to join, conjoin. "சந்தித்த கோவணத்தர்" *(தேவா. 16, 9).* 2. **எதிர்தல்;** to meet. "சந்தித்திடற் கெளிதோ விந்தவாழ்வு" *(திருக்கருவை. கலித். 75).* 3. **கண்டு கொள்ளுதல்;** to visit, have an interview with. "மயில் வாகனனைச் சந்திக்கிலேன்" *(கந்தரலங். 60).*

*[உம் → உந்து → அந்து → அந்தி → சந்தி]*

**சந்தி**[5]**-த்தல்** *šandi-,* செ.குன்றாவி. (v.t.) **எய்தல்** *(சங்.அக.);* to shoot an arrow.

*[சந்து → சந்தி-,]*

**சந்தி**[6] *šandi,* பெ. (n.) 1. **காலை உச்சி மாலை யெனப்படும் நாள் பிரிவுகளுள் ஒன்று;** one of the three divisions of the day, viz., kālai, ucci, mālai. "சந்தி யொன்றுக்குத் திருவமு தரிசி" *(S.I.I. iii, 138).* 2. **மாலை** *(சூடா.);* evening, dusk. 3. **வணக்கம்;** worship. "வானவர்கள் சந்திசெய்ய நின்றான்" *(திவ். அமலனாதி. 3).* 4. **திருவிழா** *(கல்வெட்டு);* festival. 5. **கோயிற் கட்டளை** *(S.I.I. v, 92);* provision for daily worship in a temple.

*[அந்தி → சந்தி]*

**சந்தி**[7] *šandi,* பெ. (n.) **பகுசொல்லுறுப்புகள் ஆறனுள் ஒன்று** (இலக்); one of constituent parts of divisible word.

*[அந்தி → சந்தி]*

பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, வேறுபாடு (விகாரம்) ஆகிய ஆறு பகுபத வுறுப்புகளுள் சந்தி முழுச்சொல்லும் இடைச்சொல்லும் சேரும்போது அவற்றை இணைப்பதற்காக நிற்கும் எழுத்து. அது வேறுபாடு (விகாரம்) படுதலும் உண்டு.

நட + த் + த் + அன் + அன் (நடந்தனன்) என்னும் சொல்லில் 'த்' என்ற சந்தி நடந்தனன் என்பதில் ந் என வேறுபாடு (விகாரம்) பட்டமையைக் காண்க.

**சந்தி**[8] *šandi,* பெ. (n.) **பாடை;** bier. "சந்தியில் வைத்துக் கடமைசெய்து" *(பதினொ. காரைக் காலம். திருவால. மூத்த. 10).*

*[அந்தி → சந்தி]*

**சந்தி**[9] *šandi,* பெ. (n.) 1. **தக்க சமயம்;** favourable opportunity. "சந்தி கண்டுதான் சந்தடி விலக்க" *(பஞ்ச. திருமுக. 19).* 2. **கோயிற் காலபூசை;** worship at stated hours in a temple. "வீரபாண்டியன் சந்தி" (S.I.I. viii, 107).

*[அந்தி → சந்தி]*

**சந்திக்கரை** *šandi-k-karai,* பெ. (n.) **தெரு, ஆறு முதலியன கூடுமிடம்;** junction where several roads or rivers meet.

*[சந்தி' + கரை. கடை = இடம். கடை → கரை. ஓ.நோ: அடுப்பங்கடை → அடுப்பங்கரை]*

**சந்திக்கறுப்பன்** *šandi-k-kaṟuppaṉ,* பெ. (n.) **தெருச் சந்திகளில் வைத்து வணங்கும் சிறு தெய்வம்** *(உ.வ.);* a minor deity worshipped at the crossing of roads.

*[சந்தி + கறுப்பன்]*

**சந்திக்காப்பு** *šandi-k-kāppu,* பெ. (n.) **குழந்தைகளுக்கு அந்திப் பொழுதிற் செய்யுங் காப்புச் சடங்கு;** a mystic rite performed in the evenings for child's welfare.

*[சந்தி + காப்பு]*

**சந்திக்காலம்** *šandi-k-kālam,* பெ. (n.) *மாலை நேரம்;* evening dusk.

*[அந்தி → சந்தி + காலம்]*

**சந்திக்கிழு-த்தல்** *šandi-k-kilu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *மானக்கேடு உண்டாக்கும் நோக்கத்தோடு ஒருவரின் குறைகளைப் பலரும் அறியச்செய்தல்;* to expose to public (lit.), ridicule, drag somebody through the mud. 'அவனிடம் ஒழுங்காக நடந்து கொள். இல்லையேல் சந்திக்கிழுத்து மானத்தை வாங்கி விடுவான்'.

மறுவ. சந்தியிலிழு

*[சந்திக்கு + இழு-,]*

**சந்திக்குனிப்பம்** *šandi-k-kunippam,* பெ. (n.) கோயிலில் தேவரடியார் நடிக்கும் நடனம் (M.E.R. 1912, p. 127); a kind of dance by dancing girls in temple.

*[சந்தி + குனிப்பம்]*

**சந்திக்கூத்தன்** *šandi-k-kūttan,* பெ. (n.) தெருவில் நாடகம் நடத்துபவன்; street dancer. "நிவந்தஞ்செய்ய. நம் வாய்கெழ்விப்படி சந்திக்கூத்தன் திருவாளன் திருமுதுகுன்றனான விஜயராஜேந்திர ஆச்சாரியனுக்கும்" *(தெ. க. தொ. 2:3, 68-1).*

*[சந்தி + கூத்தன்]*

**சந்திக்கூத்து** *šandi-k-kūttu,* பெ. (n.) *1.* திருவிழாவில் கோயிலின் முன்பாகப் பெண்பாலர் ஆடும் கூத்துவகை (I.M.P. pd. 389, 390); a dance performed by women in front of a temple during festivals. *2.* தெருச்சந்தியில் ஆடும் ஆட்டம்; dance performed at cross roads.

*[சந்தி + கூத்து]*

**சந்திக்கோணம்** *šandi-k-kōnam,* பெ. (n.) தேருறுப்புக்களுள் ஒன்று; an ornamental piece in a chariot. "சந்திக்கோணமு மந்திர வாணியும்" *(பெருங். உஞ்சை. 58: 51).*

*[சந்தி + கோணம். கோள் → கோணம்]*

**சந்திகம்** *šandigam,* பெ. (n.) உடம்பில் கீல் மூட்டுகளைத் தளரச் செய்யும் ஒருவகை ஊதை நோய்; a rheumatic affection usually marked by looseness of the joints of the body (சா.அக.).

*[சந்து → சந்தி → சந்திகம்]*

**சந்திகமாலைக்கண்** *šandiga-mālai-k-kan,* பெ. (n.) மாலைப் பொழுதில் கண்பார்வையை மறைக்கும் ஒருவகைக் கண்ணோய்; a degeneration of the retina in which the vision fails at twilight or sunset; failure of vision at night or in a dimlight - Nyctalopia (சா.அக.).

*[சந்திகம் + மாலைக்கண்]*

**சந்திகவூதை** *šandiga-vūdai,* பெ. (n.) சந்திகம் பார்க்க; see *šandigam* (சா.அக.).

*[சந்திகம் + ஊதை]*

**சந்திகெந்தம்** *šandi-kendam,* பெ. (n.) கிச்சிலிக் கிழங்கு; orange root - Hedycharum spicatum (சா.அக.).

**சந்திகை** *šandigai,* பெ. (n.) பணிகார வகை (இந்துபாக. 59); a confection.

தெ. சந்திகா

**சந்திகையுரல்** *šandigai-y-ural,* பெ. (n.) சந்திகை பிழியுங் கருவி (இந்துபாக. 59); a colander for preparing sandigai.

*[சந்திகை + உரல்]*

**சந்திசிரி-த்தல்** *šandi-širi-,* 4 செ.கு.வி. (v.i.) தெருச்சந்தியில் மக்கள் பழித்தல்; to ridicule one at cross-road.

*[சந்தி + சிரி-. சந்தி ஆகுபெயராய்ச் சந்தியில் உள்ள மக்களைக் குறித்தது.]*

**சந்திதம்** *šandidam,* பெ. (n.) கோக்கப்பட்டது (இராட்.); that which is strung or combined.

*[சந்தி → சந்திதம்]*

**சந்திப்பாடு** *šandi-p-pādu,* பெ. (n.) தெருச் சந்தியிலுள்ள பேய்களால் ஏற்படும் கோளாறு (வின்.); mishap supposed to be caused by a demon at the junction of streets and other haunted places.

*[சந்தி + பாடு. படு → பாடு]*

**சந்திப்பு** *šandippu,* பெ. (n.) *1.* எதிர்கை; meeting, visiting. *2.* ஆறு, தெரு, பாதை முதலியன கூடுமிடம்; junction of rivers, streets, roads, etc., *3.* இரண்டிற்கும் மேற்பட்ட தொடர் வண்டிப் பாதை இணையும் நிலையம்; railway station where more than two rail roads join.

திருச்சிராப்பள்ளிச் சந்திப்பில் உனக்காகக் காத்திருக்கிறேன். 4. பெரியோரைச் சென்று காண்கை; visiting to elders etc., 4. காணிக்கை; visiting presents. 'அரசனுக்கு என்ன சந்திப்புக் கொண்டு செல்லுகிறாய்' (வின்.).

ம. சந்திப்பு

*[சந்தி → சந்திப்பு. 'பு' சொ.ஆ.ஈறு]*

சந்திப்பைக்குறிக்கும் junction அல்லது juncture என்னும் ஆங்கிலச்சொல்லின் முதனிலையான join என்பதும் jungere என்னும் இலத்தீன் சொல்லின் திரிபாம். அவ் விலத்தீன் சொல் jugare என்பதன் திரிபாம். L. jugare = E. join; L. jugam = E. yoke. ஆகவே சந்திப்பைக் குறிக்கும் இலத்தீன் சொல்லும், சமற்கிருதச்சொல்லினின்று வேறுபட்ட தனிச்சொல் என்பதை அறிக (வ.வ. 70).

**சந்திப்பெலியார்** *šandi-p-peliyār,* பெ. (n.) கோயில்அறங்காவலர்; person incharge of the conduct of ceremonies in the temple. 'சந்திப் பெலியார் திரிபுவன மாதேவிச் சதுர் வேதிமங் கலத்து" (தெ. இ. க. தொ. 12: 58: 3).

*[சந்திப்பு + பெரியார் → சந்திப்புப்பெரியார் → சந்திப்பெரியார் → சந்திப்பெலியார்].*

**சந்திபண்ணு-தல்** *šandi-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i) காலை, உச்சி, மாலை ஆகிய வேளைகளில் வணங்குதல் (சந்தியாவந்தனஞ் செய்தல்) (சிலப். 13: 43, அரும்.); to perform morning, noon, evening prayers.

*[சந்தி + பண்ணு-. அந்தி → சந்தி = கூடுமிடம், இரவும்பகலும் சேரும்பொழுது. அப் பொழுதில் செய்யும் வணக்கம், சந்தி பண்ணுதல்].*

**சந்திபந்தம்** *šandi-pandam,* பெ. (n.) பொருத்து; joint.

*[சந்தி + பந்தம்]*

Skt. bandh → த. பந்தம்

**சந்திமறித்தல்** *šandi-marittal,* பெ. (n.) கொள்ளை நோய்க் காலங்களில் தெருச்சந்திகளிற் கொடை கொடுத்துத் தீய தெய்வங்களின் சினந்தணிக்கை; averting the displeasure of malignant deities in times of epidemics by making offerings at the cross roads.

*[சந்தி + மறித்தல்]*

**சந்திமான்** *šandimāṉ,* பெ. (n.) இடையெழு வள்ளல்களுள் எழுவருள் ஒருவன் (பிங்.); a chief noted for his liberality, one of seven 'iḍai-vaḷḷalgaḷ'.

*[அந்தம் → சந்தம் = அழகு, மேன்மை. சந்தம் → சந்தி + மான். மகன் → மான். சந்திமான் = மேன்மை பொருந்தியவன்]*

**சந்திமிதி-த்தல்** *šandi-midi,* 4 செ.கு.வி. (v.i) 1. நான்காம் மாதக் குழந்தையைத் நல்லோரையில் தெருச்சந்திக்குத் தூக்கிச் செல்லுதல்; to take a child to the cross roads in an auspicious time in its fourth month. "நாலாகு மதியிற் சந்தி மிதிப்பது நடத்தி" (திருவிளை. உக்கிர27). 2. அம்மைநோய் நீங்கிப் பின் தெருச்சந்தியில் முதன்முதலாக வந்து மிதித்தல்; to step on the cross roads in an auspicious time, when first going out after sickness, especially small-pox

*[சந்தி + மிதி-,]*

**சந்தியக்கரம்** *šandi-y-akkaram,* பெ. (n.) இரண்டு உயிரெழுத்துகள் கூடி அமைவனவாகிய, ஐ, ஔ என்னும் கூட்டெழுத்துகள் (பி.வி. 5, உரை); diphthongs, viz., 'ai' and 'au'.

*[சந்தி + அக்கரம்]*

Skt. akṣara → த. அக்கரம்

அளபுவகையில்
"ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எ(ன்) னும் அப்பால் ஏழும் ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப" (4)
என்றும், அமைப்புவகையில்
'அகர இகரம் ஐகார மாகும்' (54)
'அகர உகரம் ஔகார மாகும்' (55)
என்றும், தொல்காப்பியங் கூறுவதால், அகர இகரம் சேர்ந்து ஐகாரமும், அகரவுகரம் சேர்ந்து ஔகாரமும், புணரொலிகளாய்த் (diphthongs) தோன்றினவென அறியலாம். இகரம் உகரத்தினும் முந்தியதாதலின், இகரக் கூறுள்ள ஐகாரம், உகரக்கூறுள்ள ஔகாரத்தினும் முந்தித் தோன்றியிருத்தல் வேண்டும்.

வடநூலார் புணர்ச்சித்திரிபைப் பற்றுக் கோடாகக் கொண்டு, ஏகார ஓகாரங்களையும் புணரொலிகளாகக் கொள்வர். அக் கொள்கை தமிழுக்கு ஏற்காது. அவை மோனைத் திரிபாய் எழுந்தவையே. (த. வ. 133)

**சந்தியாகாலம்** *šandiyā-kālam,* பெ. (n.) சந்திக்காலம் பார்க்க; see *šandi-k-kālam.*

*[அந்தி → சந்தி. சந்தி → சந்தியா + காலம்]*

வடவர் காட்டும் வரலாறு வருமாறு: ஸம் + தா (dhā) - ஸந்தா. ஸம் = கூட. தா = வை, போடு (to place or put)

ஸந்தா = 1. (வி.) கூடு, ஒன்றுசேர், புணர், ஒப்புரவாகு முதலியன. 2. (பெ.) கூட்டம், சேர்க்கை, புணர்ச்சி, உடன்பாடு, கலவை முதலியவை.

ஸம் + தி (dhi) - ஸந்தி = கூட்டமுள்ளது, கூட்டம், கூடுகை, கூட்டு, இணைப்பு, சேர்க்கை, ஒன்றியம், அவை, உடன்பாடு அந்தி, புணர்ச்சி, சொற்புணர்ச்சி முதலியன.

ஸம் + த்யா (dhyā) - ஸந்த்யா = ஒன்று சேர்க்கை, கூட்டம், கூடுகை, ஒன்றியம், காலையந்தி, மாலையந்தி முதலியன.

இதினின்று அறியக் கூடியவை

1. சந்தி என்னும் தென்சொல்லும், ஸந்தா என்னும் வடசொல்லும், வெவ்வேறு மூலத்தன.

2. ஸம் என்னும் வடமொழி முன்னொட்டு கும் என்னும் தென்சொற்றிரிபு.

3. தி (dhi), த்யா (dhyā) என்னும் ஈறுகள் தா (dhā) என்னும் முதனிலையொடு தொடர்பு உடையனவல்ல. கன்னி என்பதைக் கன்யா என்று திரித்தது போல், சந்தி என்பதைச் சந்த்யா என்று திரித்திருக்கின்றனர் *(வ.வ. 69).*

**சந்தியாதீபம்** *šandiyā-dībam,* பெ. (n.) சந்தி விளக்கு பார்க்க; see *sandi-viḷakku.* "சந்தியாதீபம் ஐஞ்சினுக்கு நிசதம் நெய் உழக்காக" *(தெ.க.தொ 5: க. 724)*

*[சந்தி → சந்தியா + தீபம். தீய்தல் = எரிதல், விளங்குதல். தீய் → தீய்வு → தீவு → தீவம் = விளக்கு. தீவம் → தீபம்]*

த. தீபம் → Skt. dīpa

**சந்தியாவந்தனம்** *šandiyā-vandaṉam,* பெ. (n.) சந்திவணக்கம் பார்க்க; see *sandi-vaṇakkam.*

*[சந்தி → சந்தியா + வந்தனம்]*

Skt. vandana → த. வந்தனம்

**சந்தியாவிளக்கு** *šandiyā-viḷakku,* பெ. (n.) சந்தி விளக்கு பார்க்க; see *sandi-viḷakku.*

*[சந்திவிளக்கு → சந்தியா விளக்கு]*

**சந்தியிசை** *šandi-y-išai,* பெ. (n.) செய்யுட் குற்றங்களுளொன்று *(யாப்.வி.);* a defect in versification.

*[சந்தி + இசை]*

**சந்தியில்நில்-தல் (சந்தியில் நிற்றல்)** *šandiyil-nil-,* 14 செ.கு.வி. (v.i.) கிளைகளின்றித் (பற்றுக் கோடின்றித்) தெருச்சந்தியில் நிற்றல்; lit. to stand at the cross roads, to be in a forlorn condition.

*[சந்தி + இல் + நில்-]*

**சந்தியில்போடு-தல்** *šandiyil-pōḍu-,* 19 செகுன்றாவி. (v.t.) சந்தியிலிழு-த்தல் பார்க்க. see *šandiyil-iḻu-.*

*[சந்தி + இல் + போடு-,]*

**சந்தியில்விடு-தல்** *šandiyil-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) ஒருவன் குடும்பத்தைப் போக்குப்புகலில்லாதவாறு செய்தல்; தெருச் சந்தியில் ஒருவனை விடுதல்; lit., to leave one at the cross roads, to desert, as one's family.

*[சந்தி + இல் + விடு-,]*

**சந்தியில்வை-த்தல்** *šandiyil-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.) சந்தியில்விடு-தல் பார்க்க; see *šandiyil-viḍu-.*

*[சந்தி + இல் + வை-,]*

**சந்தியிலிழு-த்தல்** *šandiyil-iḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒருவனது குற்றங்குறைகளை வெளிப்படுத்திப் பலர் பழிதூற்றுமாறு செய்தல்; lit., to drag one to the cross roads, to expose publically to ridicule and shame.

*[சந்தி + இல் + இழு-,]*

வீட்டிற்கு வெளியே நடப்பது பலருக்கும் தெரியுமாகையால் சந்தியிலிழுத்தல் என்பது குற்றங்குறைகளை வெளிப்படுத்துவதாக ஆளப்பட்டுள்ளது.

**சந்தியிற்கொண்டுவா-தல் (சந்தியிற்கொண்டு வருதல்)** *šandiyiṟ-koṇḍu-vā-,* 15 செ.குன்றாவி. (v.t.) சந்தியிலிழு-த்தல் பார்க்க; see *šandiyil-iḻu-.*

*[சந்தி + இல் + கொண்டு + வா-,]*

**சந்தியெழுத்து** *šandiyeḻuttu,* பெ. (n.). **இரண்டு உயிரெழுத்துகள் கூடி அமைவனவாகிய ஐ, ஔ என்னும் கூட்டெழுத்துகள்** *(பி.வி. 5, உரை);* diphthongs, viz 'ai' and 'au'.

*[சந்தி + எழுத்து]*

அகரமும், இகரமும் யகரமும் ஒத்திசைக்கும் பொழுது ஐ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும். அகரமும் உகரமும் வகரமும் ஒத்திசைக்கும்பொழுது ஔ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும்.

தமிழ் உயிரெழுத்துகளுள் ஐ, ஔ இரண்டு மட்டுமே கூட்டெழுத்துகள் வடமொழியில் இவற்றுடன் ஏ, ஓ ஆகிய இரண்டும் சந்தியெழுத்துகள்.

**சந்திரகம்** *šandiragam,* பெ. (n.) *1.* **மயிற்றோகைக் கண்** *(யாழ்.அக.);* eye-like spot in a peacock's tail. *2.* **மயிற்றோகை** *(பிங்.);* peacock's tail. *3.* **ஓலையின் உறைச்சுருள்** *(விற்.);* ola envelope of an ola letter in the form of a ring. *4.* **வெள்ளைமிளகு** *(சங்.அக.);* white pepper. *5.* **உகிர் (நகம்)** *(யாழ்.அக.);* nail.

க. சந்திரிகெ; தெ. சந்திரிக

*[சந்திரம் → சந்திரகம்]*

**சந்திரகற்கம்** *šandira-kaṟkam,* பெ. (n.) **பெருங் கம்பிப் பூடு;** cumby resin tree - Gardenja cumbifera *(சா.அக.).*

**சந்திரகாய்** *šandira-kāy,* பெ. (n.) **பேய்ப்புடல்;** wild snake-gourd - Trichosanthus cucumerina *(சா.அக.).*

**சந்திரகாயணி** *šandira-kāyaṇi,* பெ. (n.) **பேய்ப் பீர்க்கு;** bitter luffa creeper - Luffa acutangulans *(சா.அக.).*

மறுவ. சந்திரகாயம்

**சந்திரகாயம்** *šandira-kāyam,* பெ. (n.) சந்திரகாயணி பார்க்க; see *šandira-kāyaṇi (சா.அக.).*

**சந்திரகாவி** *šandira-kāvi,* பெ. (n.) *1.* **செங்காவி மண்;** reddish ochre. *2.* **சிவப்புச் சாய வகை;** reddish colour made from the śendurukkam flower. *3.* **புடைவை வகை;** a kind of reddish cloth.

ம., க. சந்திரகாவி; தெ. சந்துரகாவி.

*[செந்திறம் → செந்திரம் → சந்திரம் + காவி]*

**சந்திரகாவிச்சேலை** *šandira-kāvi-c-cēlai,* பெ. (n.) **ஒரு வகைப் புடைவை;** a kind of reddish cloth. "சந்திர காவிச்சேலை வல்லவாட்டுக் குட்டதும்பி" *(தனிப்பா. i. 260: 1)*

*[சந்திரகாவி + சேலை. சீரை → சீலை → சேலை]*

**சந்திரகாவியுறுமாலை** *šandira-kāvi-y-uṟu-mālai,* பெ. (n.) **சிவப்புச் சாயமேற்றிய கைக்குட்டை வகை** *(வின்.);* kerchief dyed red.

*[சந்திரகாவி + உறுமாலை]*

**சந்திரகாளிந்தி** *šandira-kāḷindi,* பெ. (n.) **சிவதை;** Indian jalap - Jpomaea turpethum *(சா.அக.).*

**சந்திரகிரி**[1] *šandira-giri,* பெ. (n.) **திண்டிவனம் வட்டத்திலுள்ள ஊர்;** a village in Tiṇḍivaṉam taluk. "பெருமுக்கல் திருமலைமேல் உடைய நாயனாற்கு சந்திரகிரி துற்காதிபதியான ஏத்தப்ப நாயக்கர்" *(த.நா. தொ. ஆய்வு. தொடர் எண் 84/ 1992, கல் 1/6-2*

*[சந்திரன் + கிரி]*

Skt. giri → த. கிரி

**சந்திரகிரி**[2] *šandira-giri,* பெ. (n.) **விசயநகர மன்னர் காலத்தில் திருமலைக் கோட்டத்தில் இருந்த ஊர்;** an ancient village in Tirumalai-k-kōṭṭam. "சந்திரகிரியில் தேவரசர் மகனார் மல்லண்டையர்க்கு திருமலையில் தானத் தாரொம் சிலாசாசனம் பண்ணிக் குடுத்தப் படி" *(திருப்ப. கல். தொ. 1. கல் 197-2)*

*[சந்திரன் + கிரி]*

Skt. giri → த. கிரி

**சந்திரகிரியான்** *šandira-kiriyāṉ,* பெ. (n.) **சந்தன நிறமுடைய மாடு;** sandal colour cow.

**சந்திரசேகரவாய்க்கால்** *šandira-šēgara vāykkāl,* பெ. (n.) **கோனேரிராசபுரம் கோயிலுக்கு வழங்கப்பட்ட நிலத்தின் எல்லையில் இருந்த வாய்க்கால்;** a channel on one side of a land given to the temple at kōnērirajapuram. "சந்திரசேகர வாய்க்காலுக்கு வடக்கு" *(தெ.க.தொ. 26 674-10)*

*[சந்திரசேகரன் + வாய்க்கால்]*

**சந்திரணி** *šandiraṇi,* பெ. (n.) **சுக்கு;** dry ginger *(சா.அக.).*

**சந்திரதிலகம்** *šandira-tilagam,* பெ. (n.) *சந்தனம்;* sandal wood *(சா.அக.).*

*[செந்திறம் → செந்திரம் → சந்திரம் + திலகம்]*

Skt. tilaka → த. திலகம்

**சந்திரநாகம்** *šandira-nāgam,* பெ.. (n.) ஒரு *மருந்துச் சரக்கு (மூ.அ.);* a drug.

**சந்திரநாடி** *šandira-nāḍi,* பெ. (n.) பெண்குறி வாயினிற் படிந்திருக்கும் மெல்லிய தோல் *(இங்.வை.);* nymphae, labia.

**சந்திரபரணி** *šandira-paraṇi,* பெ. (n.) *கற்பூரவல்லி;* country lavendar - Anisochilus carnosus *(சா.அக.).*

**சந்திரபலை** *šandira-palai,* பெ. (n.) *ஏலம்;* cardamom-Ellecteria cardamomum *(சா.அக.).*

**சந்திரபிரபர்** *šandira-pirabar,* பெ. (n.) அமண (சமண)க்குரு இருபத்து நால்வருள் ஒருவர் *(திருக்கலம். காப்பு. உரை);* a Jaina Arhat, one of 24 tirttaṅgarar.

**சந்திரபிரபை** *šandira-pirabai,* பெ. (n.) *காட்டுச் சீரகம்;* wild cumin - Vernonia anthelmintica *(சா.அக.).*

*[சந்திரன் + பிரபை]*

Skt. prabha → த. பிரபை

**சந்திரபுட்பம்** *šandira-putpam,* பெ. (n.) *ஆணைச் சுண்டை;* hairy nightshade Solanum ferox. *2. சீந்தில்;* moon creeper - Cocculus cordifolia *(சா.அக.).*

**சந்திரபுருடம்** *šandira-puruḍam,* பெ. (n.) *பிள்ளை மருது;* white murdah - Terminalia paniculana *(சா.அக.).*

**சந்திரபூரம்** *šandira-pūram,* பெ. (n.) பச்சைக் கருப்பூரம் *(மூ.அ.);* a superior kind of camphor.

**சந்திரபூரயம்** *šandira-pūrayam,* பெ. (n.) *கள்ளி முளையான்;* spurge sprout - Caralium adscerdens *(சா.அக.).*

**சந்திரம்** šandiram, பெ. (n.) *1. கருப்பூரம் (மூ.அ.);* camphor, gum camphor. *2. பொன்;* gold. "சுற்பம் பூரி சந்திரம் பொருவல்" *(ஞானா. 68: 15).* *3.* இரவின் *15* கூறுகளுள் (முகூர்த்தங்களுள்) ஒன்பதாவது கூறு *(விதான. குணாகுண. 73, உரை);* the ninth of the 15 divisions of night. *4.* மாழ்கு *(மிருகசீரிடம்) (விதான. குணாகுண. 73, உரை.);* the fifth nakṣatra. *5.* நீர் *(யாழ்.அக.);* water.

**சந்திரமல்லிவேர்** *šandira-malli-vēr,* பெ. (n.) *கழிச்சல் (பேதிக்) கிழங்கு;* a purgative root; true jalap - Ipomaea purga *(சா.அக.).*

*[சந்திரமல்லி + வேர்]*

**சந்திரமுத்து** *šandira-muttu,* பெ. (n.) ஒருவகை *முத்து;* a kind of pearl *(சா.அக.).*

*[சந்திரம் + முத்து. முள் → முட்டு → முத்து]*

**சந்திரமூலிகை** *šandira-mūligai,* பெ. (n.) *கிச்சிலிக் கிழங்கு;* camphor root plant - Koemferia galanga *(சா.அக.).*

**சந்திரலேகைச்சதுர்வேதிமங்கலம்** *šandira-lēgai-c-cadur-vēdi-maṅgalam,* பெ. (n.), தஞ்சைக்கு வடமேற்கே உள்ள *ஊர்;* a village in Tañjāvūr district.

*[சந்திரலேகை + சதுர்வேதி மங்கலம்]*

இவ்வூர் இன்று செந்தலை என்று வழங்கப் படுகிறது. முத்தரையர்கள் என்னும் குறுநில மன்னர்களின் தலைநகராக இருந்தது. *(பிற்.சோ.வ. ப. 14).*

**சந்திரவல்லாரி** *šandira-vallāri,* பெ. (n.) பாம்புக் *கொல்லி;* commonrue Ruta graveolens *(சா.அக.).*

**சந்திரவாலை** *šandira-vālai,* பெ. (n.) பேரேலம் *(யாழ்.அக.);* greater cardamom.

**சந்திரவிகம்** *šandira-vigam,* பெ. (n.) *சிற்றேலம்;* small cardamom - Elletoria cardamomum (minor) *(சா.அக.).*

**சந்திரன்தங்கச்சி** *šandiraṉ-daṅgacci,* பெ. (n.) *செவ்வகத்தி;* red sesbane - Seabania grandiflora (coccinea) *(சா.அக.).*

**சந்திரா** *šandirā,* பெ. (n.) *1. ஏலம்;* cardamom. *2. காட்டுச்சீரகம்;* wild cumin seed-Vernonia anthelmintica. *3. சீந்தில்;* moon-creeper-Cocculus cordifolia. *4. நெய்ச்சிட்டி;* kinka oil plant - Serratula anthelmintica *(சா.அக.).*

**சந்திராதம்** *šandirādam,* பெ. (n.) *தாளகம்;* orpiment-yellow sulphuret of arsenic *(சா.அக.).*

**சந்திராபரணம்** *šandirābaraṇam,* பெ. (n.) ஒரு பழைய கணியநூல் *(சீவக. 621, உரை);* an ancient treatise on astrology.

Skt. ābharaṇa → த. *ஆபரணம்*

**சந்திராபாலை** *šandirā-pālai,* பெ. (n.) ஏலம் அல்லது சிற்றேலம்; cardamom or small cardamom *(சா.அக.).*

**சந்திரிகை** *šandirigai,* பெ. (n.) ஓலைச்சுருள்; roll of ōla. "காதிற் சொருகு சந்திரிகை" *(அழகர்கலம்.26).*

*[சந்து + திரிகை. திரி → திரிகை = கிரித்தது, சுருள்]*

**சந்திரேகம்** *šandirēgam,* பெ. (n.) கார்போகரிசி *(மலை.);* seed of scurfy pea.

**சந்தில்**[1] *šandil,* பெ. (n.) காரி (சனி) *(திவா.);* saturn.

**சந்தில்**[2] *šandil,* பெ. (n.) மூங்கில் *(மலை.);* bamboo.

*[சந்து[1] + இல். சந்து இல்லாதது. கணுக்களால் ஆங்காங்கே அடைபட்டது.]*

**சந்திலகம்** *šandilagam,* பெ. (n.) இந்துப்பு *(மூ.அ.);* rock-salt.

**சந்திலாதகம்** *šandilādagam,* பெ. (n.) மூங்கில்; bamboo - Bambusa arundinacea *(சா.அக.).*

*[சந்தில் → சந்திலாதகம்]*

**சந்திவணக்கம்** *šandi-vaṇakkam,* பெ. (n.) காலையிலும் உச்சிவேளையிலும், மாலையிலும் செய்யும் வழிபாடு; morning, noon and evening prayers.

*[சந்தி + வணக்கம்]*

**சந்திவிக்கிரகப்பேறு** *šandi-vikkiraga-p-pēṟu,* பெ. (n.) வரிவகை; a tax (தெ. க. தொ. ii. 115).

*[சந்தி + விக்கிரகம் + பேறு]*

**சந்திவிளக்கு** *šandi-viḷakku,* பெ. (n.) கோயிலில் மாலைக்காலத்து ஏற்றும் விளக்கு (தெ. க. தொ. i. 143); evening lamp in a temple.

*[சந்தி + விளக்கு]*

**சந்திவீரப்பன்** *šandi-vīrappaṉ,* பெ. (n.) ஒரு சிறுதெய்வம்; a malignant deity. "சந்தி வீரப்பன் முன்னே தாண்டினான்" *(விறலிவிடு. 895).*

*[சந்தி + வீரப்பன்]*

**சந்திவேளை** *šandi-vēḷai,* பெ. (n.) சாயுங்காலம்; evening time.

*[சந்தி + வேளை]*

**சந்தீபம்** *šandībam,* பெ. (n.) இளியின் ஐந்தாவது இசைப் பிரிவு *(பரத. இராக. 44);* a division of the fifth note of gamut.

*[அய்ந்து → சய்ந்து → சந்தீபம்]*

**சந்து**[1] *šandu,* பெ. (n.) 1. பொருத்து, மூட்டு (பிங்.); joint. சந்து சந்தாகப் பிய்த்துவிட்டான். 2. உடற் பொருத்து (பிங்.); joint of the body. "வளைந்த சந்துகளாற் பொலிந்த ...... தாள்" *(புறநா. 78, உரை).* 3. இருதொடைச் சந்தான இடுப்பு; hips.

ம. சந்து; பட., க., து., சந்து

*[அந்து → சந்து. உம் → அம் → அந்து]*

**சந்து**[2] *šandu,* பெ. (n.) 1. பலவழி கூடுமிடம்; crossing of many roads. "சந்து நீவி" *(மலைபடு. 393).* 2. முடுக்கு; narrow street, lane. 3. பிளவு; gap, cleft, crack.

மறுவ. அந்தி, கவலை, வரி, அரி, அந்தில், சந்தி, சதுக்கம்

ம. சந்து; தெ., க., து. சந்து

*[அந்து → சந்து]*

அமர், அமை, அமையம் என்னும் சொற்கள் போன்றே அந்து என்னும் சொல்லும் சகரம் பெற்றுச் சந்து என்றாயிற்று.

சிறுசந்து - முடுக்கு; தெருவின் கிளை - சந்து; சிறுவீதி - தெரு; போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி - மறுகு; கடைத் தெரு - ஆவணம்; அகன்ற மறுகு - அகலுள்; பெருவழி (road) - சாலை.

**சந்து**[3] *šandu,* பெ. (n.) 1. தூது; message, errand. "சந்து பொருந்தா தெய்துமோ" *(பிரபுலிங். பிரபுதே. 49).* 2. தூதன்; messenger. "அவளைக் கொணர்வான் சந்தாகிலை" *(கந்தபு. காசிபன்பு. 6).* 3. மாறுபட்ட இருவரை ஒன்று சேர்க்கை, அமைதி, உடன்பாடு; reconciliation, peace. "உயிரனையாய் சந்துபட வுரைத்தரு ளென்றான்" *(பாரத. கிருட்டிணன்றூ. 6).* 4. தக்க தறுவாய்; opportunity.

ம., க., து. சந்து

*[அந்து → சந்து]*

**சந்து**[4] *šandu,* பெ. (n.) சந்தன மரம்; sandal wood tree. "கமலங்கலந்த வேரியுஞ் சந்தும்" (திருக்கோ. 301).

[சாந்து → சந்து (வ.வ. 148)]

**சந்து**[5] *šandu,* பெ. (n.) இசை; rhythm, melody "சந்துலாந் தமிழ்" (தேவா. 797, 11).

[அந்து → சந்து]

**சந்துக்கட்டு** *šandu-k-kattu,* பெ (n.) 1. செயல் நிகழுங் காலம்; period, duration. "கிரகணச் சந்துக்கட்டு" (C.G.) 2. நெருக்கடியான நேரம்; crisis, critical juncture.

ம., க., தெ., து. சந்து கட்டு.

[சந்து + கட்டு]

**சந்துக்காறை** *šandu-k-kārai,* பெ. (n.) ஒருவகைக் கைவளை (சிலப். 6: 92, அரும்.); a kind of bracelet.

[சந்து + காறை]

**சந்துகி** *šandugi,* பெ (n.) துளசி; holy basil - Ocimum sanctum (சா.அக.).

**சந்துகித்தான்** *šandugittān,* பெ. (n.) தூதுவளை; three-lobed nightshade - Solanum trilobatum (சா.அக.).

**சந்துசெய்-தல்** *šandu-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. பொருத்துதல்; to join one with another. 2. பிணங்கிய இருவரைச் சேர்த்து வைத்தல்; to mediate.

[சந்து + செய்-,]

அதியமானின் தூதுவராகத் தொண்டைமானிடம் ஔவையார் சென்றதும் (புறநா. 95). உறையூரை முற்றுகை யிட்டிருந்த சோழன் நலங்கிள்ளியையும் அடைபட்டிருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் சந்து செய்ததும் (புறநா. 45) சந்துசெய்தலுக்கு நிற்கும் பண்டை இலக்கியச் சான்றுகளாகும். சந்துசெய்தலில், தலைவன் தலைவியர் பிணக்குத் தீர்த்தலும் அடங்கும்.

**சந்துசொல்(லு)-தல்** *šandu-sol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) பிணங்கியவரை இணைக்கத் தூதாகிச் செய்தி சொல்லுதல்; to mediate; to act as a messenger. "நடுநின்றா ரிருவருக்குஞ் சந்து சொல்ல" (சிலப். 8: 101, உரை)

[சந்து + சொல்-,]

**சந்துடி** *šandudi,* பெ. (n.) ஏலம் (சங்.அக.); cardamom.

**சந்துநயத்தான்** *šandu-nayattān,* பெ. (n.) தூதுவளை (மலை.); three-lobed nightshade.

**சந்துபதி-தல்** *šandu-padi-,* 2 செ.குன்றாவி. (v.t.) சந்துபிசை-தல் பார்க்க; see *šandu-pisai-.*

[சந்து + பதி-,]

**சந்துபரணி** *šandu-parani,* பெ. (n.) நேர்வாளம்; croton seed- croton tigilium (சா.அக.).

**சந்துபலம்** *šandu-palam,* பெ. (n.) வன்னிமரம்; Arjuna's penance tree - Prospis spicigera (சா.அக.).

**சந்துபார்-த்தல்** *šandu-pār-,* 4 செ.கு.வி. (v.i.) தக்க நேரம் பார்த்தல்; to watch for an opportunity, choose a fitting time.

[சந்து + பார்-,]

**சந்துபிகி-தல்** *šandu-pigi,* 4 செ.குன்றாவி. (v.t.) சந்துபிசை-தல் பார்க்க; see *šandu-pišai-.*

[சந்து + பிகி-,]

**சந்துபிசை-தல்** *šandu-pišai-,* 2 செ. குன்றாவி. (v.t.) தளவரிசை முதலியவற்றில் கல்லுக்குக் கல் இடைவெளிபடாமல் சுண்ணாம்பு முதலியன பூசுதல்; to point, as the floor.

[சந்து + பிசை-,]

**சந்துபூசு-தல்** *šandu-pūšu-,* 6 செ. குன்றாவி. (v.t.) சந்துபிசை-தல் பார்க்க; see *šandu-pišai-.*

[சந்து + பூசு-,]

**சந்துபொதி-தல்** *šandu-podi-,* 2 செ.குன்றாவி. (v.t.) சந்துபிசை-தல் பார்க்க; see *šandu-pišai-*

[சந்து + பொதி-,]

**சந்துபொந்து** *šandu-pondu,* பெ. (n.) 1. மூலை முடுக்கு; nook and corner. 2. பொந்துபுடைகள்; interstices.

[சந்து + பொந்து]

**சந்துபோ-தல்** *šandu-pō-,* 8 செ.கு.வி. (v.i.), பிணங்கியவரை இணைக்கத் தூதுபோதல்; to proceed on an embassy or errand.

[சந்து + போ-,]

**சந்துபோனவன்** *šandu-pōṉavaṉ,* பெ. (n.) உறுப்புக் கட்டில்லாதவன், முடவன்; maimed person, as without joints.

*[சந்து + போனவன்]*

**சந்துமந்து** *šandumandu,* பெ. (n.) *1.* முடுக்கு; alley, narrow street. *2.* குழப்பம்; confusion, disturbance. *3.* தடுமாற்றம்; inconvenience from want of adaptation or fitting, as of joints; difficulty from multiplicity of engagements.

*[சந்துபொந்து → சந்துமந்து]*

**சந்துமுட்டு** *šandu-muṭṭu,* பெ. (n.) காலந்தவறி வரும் மாதவிலக்கு; menses at irregular intervals.

தெ., து. சந்துமுட்டு

*[சந்து + முட்டு]*

**சந்துமுந்து** *šandu-mundu,* பெ. (n.) சந்துமந்து (யாழ்ப்.) பார்க்க; see *šandu-mandu.*

*[சந்துமந்து → சந்துமுந்து]*

**சந்துமூட்டி** *šandu-mūṭṭi,* பெ. (n.) பிரண்டை; bone-setter-vitis quadrangularis *(சா.அக.).*

*[சந்து + மூட்டி]*

**சந்துயிர்** *šanduyir,* பெ. (n.) எலும்பு (யாழ்.அக.); bone.

*[சந்து + உயிர்]*

**சந்துவரிதகி** *šandu-varidagi,* பெ. (n.) கடுக்காய்; gall-nut, ink-nut - Terminalia chebula *(சா.அக.).*

**சந்துவலை** *šandu-valai,* பெ. (n.) வலையில் படுகிற மீனை வெளியிற் செல்லவிடாமல் தடுக்குமொரு வலைக்கூறு (மீனவ.); a part of fishing net which prevents the fishes escaping from main net.

*[சந்து + வலை]*

**சந்துவாசல்** *šandu-vāšal,* பெ. (n.) திட்டி வாசல்; postern-gate, back-door.

தெ. சந்துவாகிலி

*[சந்து + வாசல்]*

**சந்துவாதம்** *šandu-vādam,* பெ. (n.) இடுப்பு, தொடைகளில் வரும் ஊதை(வாத)நோய் (வின்.); sciatica.

க., து. சந்துவாத

*[சந்து + வாதம்]*

Skt. vāta → த. வாதம்

**சந்துவாய்**[1] *šandu-vāy,* பெ. (n.) *1.* மூட்டுவாய்; joint. *2.* இடைப்பிளவு (வின்); cleft, opening.

*[சந்து + வாய்]*

**சந்துவாய்**[2] *šandu-vāy,* பெ. (n.) வேட்டி, சேலை ஆகியவற்றில் ஒவ்வொன்றையும் தனித்தனியே அறுத்து எடுப்பதற்கு விடப்படும் இடைவெளி (செங்கை.); a technical word in loom.

*[சந்து + வாய்]*

**சந்துவாயு** *šandu-vāyu,* பெ. (n.) சந்துவாதம் பார்க்க; see *šandu-vādam.*

து. சந்துவாயு

*[சந்து + வாயு]*

**சந்துவிக்கிரகப்பேறு** *šandu-vikkiraga-p-peṟu,* பெ. (n.) அரசு பெறும் வரிகளுள் ஒன்று; a kind of tax. "வெட்டிப்பாட்டம் பஞ்சுபீலி சந்து விக்கிறகப் பெறு இலாஞ் சினைப்பெறு" *(தெ.க தொ. 4: 348/1986).*

*[சந்து + விக்கிரகப்பேறு]*

**சந்துவிடு-தல்** *šandu-viḍu-, 20* செ.கு.வி. (v.i.) நெக்குவிடுதல்; to crack or get disjointed.

க. சந்துவிடு

*[சந்து + விடு-,]*

**சந்துவிப்புருதி** *šandu-vippurudi,* பெ.. (n.) இடுப்பிலுண்டாகும் புற்றுநோய்க் கட்டி வகை (வின்.); cancer at the hip-joint.

*[சந்து + விப்புருதி]*

**சந்தை** *šandai,* பெ. (n.) *1.* குறித்த காலங்களில் பொருள்களை விற்கவும் வாங்கவும் பலரும் கூடுமிடம்; shandy, fair, a market functioning on specified occasion. "தந்தைதாய் தாரம் மகவெனு மிவையெலாம் சந்தையிற் கூட்டம்" *(தாயு. தேசோ. 3).* 'சந்தை இரைச்சலிலே குடியிருந்து கெட்டேன்" 'சந்தைக் கூட்டம் கொம்மல் ஆட்டம்' *(பழ.).* *2.* கூட்டம்; multitude, herd, flock, swarm. "தண்ணுறு நந்தனம் வண்டின் சந்தையே" *(பிரபுலிங் கொக்கி. 6).* *3.* இருபுருவமுங் கூடுமிடம்; the mid-point between the eye-brows. "சந்தையில் வைத்துச் சமாதிசெய்" *(திருமந். 1201).* *4.* கடைத் தெரு (யாழ்.அக.); bazar.

ம. சந்த; க. சந்தெ; து. சந்தெ, சத்தெ; பட. சத்தே; Skt. san-dhā.

*[அந்து → அந்தி. அந்தித்தல் = நெருங்குதல், கூடுதல், ஒன்றுசேர்தல். அந்து → சந்து → சந்தை = பல கடைகள் கூடுமிடம். ஓ.நோ : மந்து → மந்தை]*

இச் சொல் வடமொழியில் இல்லை. *சந்தைக்காரன், சந்தைக்கூட்டம், சந்தைமடம், சந்தைவெளி என்னும் வழக்குச் சொற்களும் 'இந்த மடம் போனாற் சந்தைமடம்', 'சரக்கு மலிந்தாற் சந்தைக்கு வரும்' என்னும் பழமொழிகளும் இச்சொல்லின் பெரு வழக்கைக் காட்டுகின்றன.*

**சந்தைக்கடை** *šandai-k-kaḍai,* பெ. (n.) *1.* சந்தையில் இருக்கும் கடை; shop at market place. *2.* இரைச்சல்; tumult. *மாணவர்கள் சந்தைக்கடை போல் கூச்சல் போடுவது நன்றன்று (உ.வ.).*

*[சந்தை + கடை]*

**சந்தைக்காரன்** *šandai-k-kāraṉ,* பெ. (n.) *சந்தையில் பொருள் விற்போன்;* marketeer.

*ம. சந்தக்காரன்.*

*[சந்தை + காரன்]*

**சந்தைக்குப்பம்** *šandai-k-kuppam,* பெ. (n.) செங்கல்பட்டு அருகில் உள்ள ஊர்; a village near Šeṅgalpaṭṭu. *'சந்தைக்குப்பம் உள்ளவரைக் கட்டளை இடுகையில்" (தெ. க. தொ. 6:273-2)*

*[சந்தை + குப்பம்]*

**சந்தைக்கூட்டம்** *šadai-k-kūṭṭam,* பெ. (n.) பெருங் *கூட்டம்;* promiscuous crowd, as in a shandy.

*ம. சந்தக்கூட்டம்; க. சந்தெகூட்ட*

*[சந்தை + கூட்டம்]*

**சந்தைகூட்டு-தல்** *šandai-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) பெருங்கூட்டம் கூடிப் பேராரவாரஞ் செய்தல்; lit. to attract a large gathering, to create a hubbub. *சந்தை கூட்டி மானத்தை வாங்காதே.*

*[சந்தை + கூட்டு-,]*

**சந்தைகூடு-தல்** *šandai-kūḍu-,* 5 செ.கு.வி. (v.i.); பொருள்களை விற்க ஓரிடத்தில் கூடுதல்; to assemble in a particular place to sell goods. *அறிவன் (புதன்)தோறும் மாட்டுச் சந்தை கூடுகிறது (உ.வ.).*

*ம. சந்தகெட்டுக; க. சந்தெகட்டு, சந்தெகூடு*

*[சந்தை + கூடு.]*

**சந்தைச்சரக்கு** *šandai-c-carakku,* பெ. (n.) *சந்தையில் உள்ள விற்பனைப்பொருள்;* marketable goods.

*ம. சந்தக்கூட்டம்; க. சந்தெகூட்ட*

*[சந்தை + சரக்கு. சர் → சரகு → சரக்கு = காய்ந்த பண்டம், வணிகப் பண்டம்]*

**சந்தைமுதல்** *šandai-mudal,* பெ. (n.) *சந்தை வணிகரிடம் பெறும் வரி* (I.M.P. Cg. 689); market-fees collected from traders at shandy.

*[சந்தை + முதல்]*

**சந்தையிரைச்சல்** *šandai-y-iraiccal,* பெ. (n.) சந்தையில் கூட்டத்தால் ஏற்படும் பேரொலி; confused din, tumult, uproar, as in a fair. *சந்தையிரைச்சலிலே குடியிருந்து கெட்டேனே (பழ.).*

*ம. சந்தயிரப்பு*

*[சந்தை + இரைச்சல்]*

**சந்தையேற்று-தல்** *šandai-y-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) *கடைகள் அமைத்துச் சந்தை கூடச் செய்தல் (வின்.);* to set up a fair.

*க. சந்தெகட்டு*

*[சந்தை + ஏற்று-,]*

**சந்தைவிலை** *šandai-vilai,* பெ. (n.) *சந்தையில் பொருள் விற்கும் விலை;* market-price.

*ம. சந்தவில*

*[சந்தை + விலை]*

**சந்தைவெளி** *šandai-veḷi,* பெ. (n.) *சந்தை கூடும் வெளியிடம்;* open place where fairs are held.

*[சந்தை + வெளி.]*

**சந்தோரு** *šandōru,* பெ. (n.) நீர்முள்ளி; water-thistle - Hygrophila spinosa *(சா.அக.).*

**சந்நசாலம்** *šannasālam,* பெ. (n.) வெண்கடுகு; white mustard *(சா.அக.).*

**சந்நிநாயகம்** *šanni-nāyagam* பெ. (n.) *1.* கருஞ்சீரகம்; black cumin seed. *2.* தும்பைப் பூடு; leucas flower plant - Leucas aspera. *3.* கரிய போளம்; black myrrh *(சா.அக.).*

**சந்நியாசிவெள்ளாடு** *šanniyāši-veḷḷāḍu,* பெ. (n.) எல்லா நிறமும் கலந்திருக்கும் வெள்ளாடு *(செங்கை);* a multy colour of goat.

*[சந்நியாசி + வெள்ளாடு]*

**சப்சப்பெனல்** *šapšap-p-enal,* பெ. (n.) *1. சுவையின்மைக் குறிப்பு;* onom. expr. signifiying insipidity. *2. அதட்டல்குறிப்பு (வின்.);* rebuke, reproof. *3. ஒலியைக் குறைத்தற் குறிப்பு (வின்.);* silence, hush.

*[சப்சப் + எனல்]*

**சப்பங்கி** *šappaṅgi,* பெ. (n.) மந்தன் *(யாழ்ப்.);* slow, dull person.

*[சப்பு → சப்பங்கி (மு. தா. 120)]*

**சப்பட்டை** *šappaṭṭai,* பெ. (n.) *1. தட்டை;* flatness. *2. தட்டையானது;* anything flat. *3. உள்ளீடின்மை;* emptiness, hollowness. *4. பதர் (வின்.);* chaff, empty grains. *5. மடையன்;* empty, shallow person. *6. கெட்டவன்-வள்-;* bad person or thing. *7. சிறகு;* wing. *8. சப்பை*[1], *6 பார்க்க;* see *šappai*[1]*,6.*

*ம. சப்பட்ட; க. சப்பட்டெ, சப்படெ, சப்படி, சப்படெ;* தெ. *சப்ப;* து. *சப்படெ;* கோத. *சப், சபீள்ய; குட. சப்பெ; பர். சப்ரெ; பட. சப்பட்டெ;* Mar. capaṭā, cāpaṭ, sāpaṭ; Skt. carpaṭa.

*[சப்பு → சப்பட்டை (மு.தா.)]*

*சப்பட்டை தட்டையாய் இருப்பதால், உள்ளே எதுவும் இருப்பதற்கு இடமில்லை. ஆகையால் உள்ளீடின்மையும் அறிவாகிய உள்ளீடு இல்லாமல் இருப்பதால், மடையனையும், அறிவிலி கெட்டவனாக இருப்பதால் கெட்டவனையும் குறித்தது.*

**சப்பட்டைக்கள்ளி** *šappaṭṭai-k-kaḷḷi,* பெ. (n.). *முக்கோணக் கள்ளி;* the triangular spurge *(சா.அக.).*

*க. சப்படெகள்ளி*

*[சப்பு → சப்பட்டை + கள்ளி]*

**சப்பட்டைமட்டம்** *šappaṭṭai-maṭṭam,* பெ. (n.) *சுவரின் அடிப்படை மட்ட அளவு* (கோவை.); foundation level *(கட்டட.).*

*[சப்பட்டை + மட்டம்]*

**சப்பட்டைமூக்கு** *šappaṭṭai-mūkku,* பெ. (n.). *சப்பைமூக்கு பார்க்க;* see *šappai-mūkku.*

*க. சப்பட்டெ மூகு*

*[சப்பட்டை + மூக்கு]*

**சப்பட்டையரம்** *šappaṭṭai-y-aram,* பெ. (n.) *தட்டையான ஒருவகை அரம்* (C.E.M.); flat file.

*[சப்பட்டை + அரம்]*

**சப்பட்டையாகு-தல்** *šappaṭṭai-y-āgu-,* 7 செ.கு.வி. (v.i.) *சப்பையாதல், தட்டையாதல்;* to flatten *(சா.அக.).*

*க. சப்பட்டெ யாகு*

*[சப்பட்டை + ஆகு-,]*

**சப்பட்டைவாக்கு**[1] *šappaṭṭai-vākku,* பெ. (n.) *தட்டையான பக்கம் (வின்.);* flat side, as of a plank.

*[சப்பட்டை + வாக்கு]*

**சப்பட்டைவாக்கு**[2] *šappaṭṭai-vākku,* பெ. (n.). *அவையில் சொல்லத்தகாத சொல் (நாஞ்.);* indecent talk.

*[சப்பட்டை + வாக்கு. சப்பை → சப்பட்டை = தட்டையானது, உள்ளீடற்றது, அவையல் கிளவி]*

**சப்பட்டைவாகு** *šappaṭṭai-vāgu,* பெ. (n.) *சப்பட்டைவாக்கு*[1] *பார்க்க;* see *šappaṭṭai-vākku.*

*[சப்பட்டை வாக்கு → சப்பட்டைவாகு]*

**சப்படி** *šappaḍi,* பெ. (n.) *1. தட்டையானது;* anything flat. "திருவொன்றிற் கட்டின வயிரஞ் சப்படியும் உருளையும்" *(தெ.க.தொ.2, 170: 35).* *2. வயிரக்குற்றங்களுள் ஒன்று (சிலப். 14: 180, உரை);* a flaw in diamonds.

*க. சப்படி*

*[சப்பு → சப்படி. (மு. தா. 120)]*

**சப்பணங்கட்டு-தல்** *šappaṇaṅ-gaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *சப்பணங்கூட்டு-தல் பார்க்க;* see *šappaṇaṅ-gūṭṭu-.*

*[சப்பணம் + கட்டு-,]*

**சப்பணங்கால்** *šappaṇaṅ-gāl,* பெ. (n.) *சப்பணம் பார்க்க;* see *šappaṇam.*

*[சப்பணம் + கால்]*

**சப்பணங்கூட்டு-தல்** *šappaṇaṅ-gūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *அட்டணைக்காலிடுதல்;* to sit cross-legged.

*[சப்பணம் + கூட்டு-,]*

**சப்பணங்கோலு-தல்** *šappaṇaṅ-kōlu-*, 5 செ.கு.வி. (v.i.). சப்பணங்கூட்டு-தல் பார்க்க; see *šappaṇaṅ-gūṭṭu-*.

*[சப்பணம் + கோலு-,]*

**சப்பணம்** *šappaṇam*, பெ. (n.) அட்டணைக் காலிடுகை (வின்.); act of sitting flat and cross-legged.

ம. சப்பணம்

*[சப்பு → சப்பணம்]*

**சப்பணியம்** *šappaṇiyam*, பெ. (n.) இனிப்புச் சுவையுடைய தின்பண்டம் (மீனவ.); a kind of sweet meat.

*[சப்பண்ணியம் → சப்பணியம். சப்பையாகச் செய்த இனிப்புச் சுவைப் பணியாரம்]*

**சப்பத்தி** *šappatti*, பெ. (n.) ஒரு புறம் அகன்றும் மறுபுறம் குவிந்தும் சிறிது தட்டையாகவும் அமைந்த முத்துவகை; flat pearl. "கோத்தமுத்து சப்பத்தி ஒன்றும்" (தெ. க. தொ. 2, 396: 70).

*[சப்பு → சப்பத்தி (மு.தா.120)]*

**சப்பரக்கத்தரி** *šappara-k-kattari*, பெ. (n.) பந்தற் கத்தரிக்காய்; chupper brinjal - Lycopersicum esculentum (சா.அக.).

*[சப்பரம் + கத்திரி]*

**சப்பரச்சாதியார்** *šappara-c-cādiyār*, பெ. (n.) தேவாங்க இனத்தாருள் உறவினரல்லாதரோடு மணவுறவு கொள்ளும் ஒரு பிரிவுனர் (E.T.II.16); an exogamous sub-sect of Dēvāṅga caste.

*[சப்பரம் + சாதியார்]*

**சப்பரத்தவரை** *šapparattavarai*, பெ. (n.) ஒரு வகை அவரை; shed-bean, chupper bean - Cyomopsis posrolioides (சா.அக.).

*[சப்பரம் + அத்து + அவரை. 'அத்து' சாரியை]*

**சப்பரம்** šapparam, பெ. (n.) 1. மொட்டையான எடுப்புத்தேர்; conopied car-like vehicle in which idols are carried during festivals. 'சப்பரத்து முன்னே வந்தியா? பின்னே வந்தியா?' (பழ.). 2. கடவுள் திருமேனியைக் கொண்டு செல்லுதற் குரியதும் முகப்பில் கோபுரம் போன்று அழகு செய்யப்பட்டதுமான சிறு வகைத் தேர் (வின்.); a small car on wheels in which idols are carried. 3. சப்பரமஞ்சம் பார்க்க; see *šappara-mañjam*.

க., பட. சப்பரம்; து. சப்பர, சப்பர்,

*[சப்பு → சப்பரம் (மு.தா. 120)]*

உருளையின்றி ஒற்றைத் தட்டுள்ள சப்பை (மொட்டை)த் தேர்.

**சப்பரமஞ்சம்** *šappara-mañjam*, பெ. (n.) சப்பிரமஞ்சம் பார்க்க; see *šappira-mañjam* "சப்பிரமஞ்சத் தரனு முமையுந் துஞ்சி" (சிவரக.பசாசு. 16).

ம. சப்ரமஞ்சம்; க. சப்பரமஞ்ச; து. சப்பரமஞ்ச

*[சப்பரம் + மஞ்சம்]*

**சப்பரை** *šapparai*, பெ. (n.) மூடன் (ஈடு, 4. 8:8,ஜீ.); block-head, dolt.

ம. சப்பர

*[சப்பு → சப்பரை (மு.தா. 120)]*

சப்பரை → Skt. sambara

**சப்பல்**[1] *šappal*, பெ. (n.) உணவின் எச்சில் (யாழ்ப்.); refuse of food, leavings.

*[சப்பு → சப்பல்]*

**சப்பல்**[2] *šappal*, பெ. (n.) தட்டை, தட்டையானது; anything flat.

*[சப்பு → சப்பல் (மு. தா. 120)]*

**சப்பளக்கட்டை** *šappaḷa-k-kaṭṭai*, பெ. (n.) இசையுடன் கதைகூறுவோர் நான்கு விரல்களில் ஒன்றும் கட்டைவிரலில் ஒன்றுமாகக் கோத்துக் கொள்ளும், சிறு மணிகள் இணைக்கப்பட்ட தாளக்கட்டை; being held in between the fingers, pair of wooden pieces with tiny bells for marking time by the performers of religious songs.

*[சப்பளம் + கட்டை (மு.தா.120)]*



சப்பளக்கட்டை

**சப்பளஞ்சி** *šappaḷañji,* பெ. (n.) காஞ்சிபுரத்தை அடுத்துள்ள சப்பளம் என்னும் ஊரில் நெய்யும் ஆடை; cloth from Sappalam near Kanjipuram.

*[சப்பளம் → சப்பளஞ்சி]*

**சப்பளம்** *šappaḷam,* பெ. (n.) சப்பணம் பார்க்க; see *šappaṇam.*

*[சப்பணம் → சப்பளம்]*

**சப்பளாக்கட்டை** *šappaḷā-k-kaṭṭai,* பெ. (n.) சப்பளக்கட்டை பார்க்க; see *šappaḷa-k-kaṭṭai.*

ம. சப்பளாக்கட்டை, க. சப்படெ, சப்பளெ, சப்பாளெ; தெ. சப்பட்டல்; மால. சீப்ளீ

*[சப்பளக்கட்டை → சப்பளாக்கட்டை]*

**சப்பளாம்** *šappaḷām,* பெ. (n.) சப்பணம் பார்க்க; see *šappaṇam.*

*[சப்பணம் → சப்பளம் → சப்பளாம்]*

**சப்பளி[1]-தல்** *šappaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) சப்பையாதல், தட்டையாதல்; to flatten, to be crushed, pressed out of form; to be jammed. 'சப்பளிந்த முகம்' (உ.வ.).

க. சப்பழி, சாபளி (தட்டையானது)

*[சப்பு → சப்பளி (மு.தா. 120)]*

**சப்பளி[2]-த்தல்** *šappaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* அடியிற் சப்பையாக உட்கார்தல்; to sit flat and cross-legged. *2.* தட்டையாக்குதல்; to flatten, to make oblate.

*[சப்பு → சப்பளி. (மு.தா. 120)]*

**சப்பளி[3]** *šappaḷi,* பெ. (n.) கைகொட்டுகை; clapping the hands.

க. சப்பளி; து. சப்பளி, சப்பாள்; பட. சப்பட்டெ

*[சப்பு → சப்பளி]*

**சப்பளித்திரு-த்தல்** *šappaḷittiru-,* 3 செ.கு.வி. (v.i.) கால்மடக்கி உட்காருதல் (இ.வ.); to sit flat and cross-legged.

*[சப்பளி[2] → சப்பளித்து + இரு-,]*

**சப்பன்** *šappaṉ,* பெ. (n.) பயனற்றவன்; worthless person, good-for-nothing man.

ம. சப்பன்.

*[சப்பு → சப்பன் (மு.தா.120); சப்பு = தட்டையானது, வலுவற்றது, பயனற்றது.]*

**சப்பாங்கு** *šappāṅgu,* பெ. (n.) முள் நிறைந்த மரம்; sappan wood a thorny tree - Caesalpinia sappan (சா.அக.).

*[சரம் → சரப்பாங்கு → சப்பாங்கு.]*

**சப்பாணி[1]** *šappāṇi,* பெ. (n.) நிலத்திற் சப்பையாயிருக்கும் முடவன்; cripple, lame person.

ம. சப்பாணி, சப்பணி

*[சப்பு → (சப்பளி) → சப்பாணி (மு.தா. 120)]*

**சப்பாணி[2]** *šappāṇi,* பெ. (n.) நிலத்திற் சப்பையாய் அமர்ந்திருக்கும் முடவனைப் போல் குழந்தை அமர்ந்திருந்து கைதட்டும் நிலை; child by sitting flat and cross-legged like a lame person and clapping hands. "மதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டியருளே" (மீனாட். பிள்ளைத். சப்பாணி-1), "செங்கீரைதால் சப்பாணி" (இலக். வி. 806). 'சப்பாணிக்கு நொண்டி சண்டப் பிரண்டன்' (பழ.), 'சப்பாணி மாப்பிள்ளைக்குச் சந்தொடிந்த பெண்சாதி' (பழ.).

ம. சப்பாணி. தெ. சப்பட்லு, க. சப்படி; பட. சப்படெ; கோத. சபட்; Skt. šapēṭa

*[சப்பு → சப்பாணி (மு.தா. 120)]*

**சப்பாணிகொட்டு-தல்** *šappāṇi-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கை சேர்த்துக் கொட்டுதல்; to clap hands, as infants in play. "மதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டி யருளே" (மீனாட். பிள்ளைத். சப்பாணி-1).

க. சப்பளெயிக்கு, சப்பளிக்கு, சப்பாளெயாக்கு, தப்பணெகுட்டு, தப்பளெகுட்டு, தப்பளிக்கு; து. சப்பளிபு, சப்பானெ தட்டு; பட. சப்படெ குட்டு

*[சப்பாணி[2] + கொட்டு-,]*

**சப்பாணிதட்டு-தல்** *šappāṇi-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சப்பாணிகொட்டு-தல் பார்க்க; see *šappāṇi-koṭṭu-.*

*[சப்பாணி + தட்டு-,]*

**சப்பாணிப்பருவம்** *šappāṇi-p-paruvam,* பெ. (n.) பிள்ளைத்தமிழில் இலக்கியத்துக்கு உரிமை பூண்ட குழந்தையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம்; section of piḷḷai-t-tamiḻ, which describes the stage when a child begins to clap hands.

*[சப்பாணி[2] + பருவம்]*

**சப்பாணிமாடன்** *šappāṇi-māḍaṉ,* பெ. (n.) நொண்டிப்பேய் வகை (யாழ்ப்.); a demon.

*[சப்பாணி + மாடன்]*

**சப்பாத்தி**[1] *šappātti,* பெ. (n.) சப்பாத்துக்கள்ளி பார்க்க; see *šappāttu-k-kaḻḻi.*

தெ. சபாது

*[சப்பாத்து → சப்பாத்தி. (மு.தா.120); வடவர் தட்டையான அப்ப (ரொட்டி) வகையைச் சப்பாத்தி என்பது கவனிக்கத் தக்கது]*

**சப்பாத்தி**[2] *šappātti,* பெ. (n.) சப்பாத்திச்சங்கு பார்க்க; see *šappātti-c-caṅgu.*

*[சப்பு → சப்பாத்தி]*

**சப்பாத்திக்கள்** *šappātti-k-kaḷ,* பெ. (n.) கள்ளியிலிருந்து வடித்தெடுக்கும் கழிச்சல் மருந்துவகை; purgative prepared from prickly-pear.

*[சப்பாத்தி + கள்]*

**சப்பாத்திக்கள்ளி** *šappātti-k-kaḻḻi,* பெ. (n.) சப்பாத்துக்கள்ளி பார்க்க; see *šappāttu-k-kaḻḻi.*

ம. சப்பாத்திக்கள்ளி; க. சப்பாத்திகள்ளி; தெ. சப்பாது; Port. sabot.

*[சப்பாத்தி + கள்ளி]*



சப்பாத்திக்கள்ளி

**சப்பாத்திச்சங்கு** *šappātti-c-caṅgu,* பெ. (n.) அகன்று பெரியதாக இருக்கும் ஒருவகைக் கடற்சங்கு (நெல்லை.); a kind of sea conch.

*[சப்பாத்தி + சங்கு]*

**சப்பாத்திப்பூ** *šappātti-p-pū,* பெ. (n.) செம்பரத்தம் பூ; changeable rose - Hibiscus mutabilis (சா.அக.).

*[சப்பாத்தி + பூ. செம்பரத்தம் → சம்பரத்தம் → சப்பரத்தம் → சப்பாத்தி]*

**சப்பாத்து**[1] *šappāttu,* பெ. (n.) தட்டையான செருப்பு; flat shoe.

ம. சப்பாத்து; Port. Šapato.

*[சப்பு → சப்பாத்து. (மு.தா.120); அகன்ற அடியுள்ளது]*

**சப்பாத்து**[2] *šappāttu,* பெ. (n.) செம்பரத்தைச் செடி; china rose - Hibiscus rosasinensis.

ம. சப்பாத்து

*[செம்பரத்தம் → சம்பரத்தம் → சப்பரத்தம் → சப்பாத்து]*

**சப்பாத்து**[3] *šappāttu,* பெ. (n.) சப்பாத்துக்கள்ளி பார்க்க; see *šappāttu-k-kaḻḻi.*

ம. சப்பாத்து

*[சப்பு → சப்பாத்து]*

**சப்பாத்துக்கட்டை** *šappāttu-k-kaṭṭai,* பெ. (n.) கட்டையாலான காலணி; wooden sandals.

*[சப்பாத்து + கட்டை]*

**சப்பாத்துக்கள்ளி** *šappāttu-k-kaḻḻi,* பெ. (n.) 1. தட்டையான இலையுடைய கள்ளி வகை; common prickly pear. 2. மஞ்சள் நிறமுடைய பூவைக்கொண்ட கள்ளிவகை (L.); prickly-pear with yellow and crimson flowers.

ம. சப்பாத்திக்கள்ளி

*[சப்பாத்து + கள்ளி. கள் → கள்ளி = முள்ளுடையது]*

**சப்பாத்துச்செடி** *šappāttu-c-ceḍi,* பெ. (n.) செம்பரத்தம் பூச்செடியில் ஒருவகை; chinese shoe plant - Hibiscus rosasinensis (சா.அக.).

*[சப்பாத்து + செடி. சப்பாத்து = தட்டையான செருப்பு. செருப்புகளுக்குக் கருப்பு நிறம் கொடுக்க இதன் பூவைக் கசக்கிப் பூசுவதால் இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**சப்பாத்துப்புழு** *šappāttu-p-puḻu,* பெ. (n.) இந்திரக் கோபப்பூச்சி; cochineal.

தெ. சப்பாதிபுருகு

*[சப்பாத்து + புழு]*

**சப்பாதிகம்** *šappādigam,* பெ. (n.) அமலைப் பூடு எனும் நெல்லி; Indian gooseberry - Phyllanthus emblica (சா.அக.).

**சப்பி**[1] *šappi,* பெ. (n.) பதர் *(யாழ்ப்.);* chaff.

து. சப்பு

*[சப்பு → சப்பி]*

**சப்பி**[2] *šappi,* பெ. (n.) சப்பி உண்கின்றவன்; eater, who makes sucking sound while eating.

*[சப்பு → சப்பி]*

**சப்பிக்கொடு-த்தல்** *šappi-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தாய், உணவை வாயிலிட்டுப் பதப் படுத்திக் குழந்தைக்குக் கொடுத்தல் *(வின்.);* to chew food and give it to a child, as a mother.

*[சப்பி + கொடு-,]*

**சப்பிட்டுப்போ-தல்** šappiṭṭu-p-pō-, 8 செ.கு.வி. (v.i.) *1.* சுவையற்றுப் போதல்; to become insipid or stale. *2.* ஊக்கமற்றுப் போதல்; to become disheartened.

*[சப்பை → சப்பிட்டு + போ-,]*

**சப்பிரம்** *šappiram,* பெ. (n.) சப்பரம் பார்க்க; see *šapparam.*

*[சப்பரம் → சப்பிரம்]*

**சப்பிரமஞ்சம்** *šappira-mañjam,* பெ. (n.) மேற்கட்டமைந்த கட்டில்; testered bedstead. "சப்பிரமஞ்ச கோளகைமீ திருந்து" *(தனிப்பா. i, 385: 36).*

*[உ → உம் → உம்பர் → உப்பர் → உப்பரம் → சுப்பரம் → சப்பரம் → சப்பிரம் + மஞ்சம்]*

**சப்பு**[1]**-தல்** *šappu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* உண்ணும் போது நாக்கினால் அல்லது உதடுகளால் 'சப்' என்று ஒலி உண்டாக்குதல்; to make sound 'sap' either with tongue or lips while eating. *2.* புகையிலை மெல்லுதல்; to masticate, chew, as betel or tobacco. *3.* குதப்புதல்; to mumble in eating; to munch. *4.* சுவைத்து ஒன்றன் சாற்றை உறிஞ்சிக் குடித்தல்; to sip, suck

ம. சப்புக; க. சப்பரிசு, சப்படிசு, சப்பளிசு, தப்படிசு; தெ. சப்பரிஞ்சு, சப்பு; து. சப்பரிபுனி; கோத. சப்; துட. செப்; குட. சப்பெ, சபெ; நா. சவ்ல்; பர். சவ்ல், சல்; மா. சொப்ப; பட. சப்பு; Pāli. cappeti; E. sup

*[(சுப்பு) → சப்பு. ஒன்றை மெல்லாது நாவிற்கும் அண்ணத்திற்கும் இடையில் இட்டு நெருக்கி, அதன் சாற்றை மெல்ல மெல்ல உறிஞ்சுதல் அல்லது அப்பொருளைச் சிறிது சிறிதாகக் கரைத்தல் (தமி.வ. 105)]*

**சப்பு**[2]**-தல்** *šappu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* அதுங்குதல்; to be bent, pressed in, to become flat. ஏனம் (பாத்திரம்) சப்பிவிட்டது. *2.* சுருங்குதல்; to be reduced; to subside. 'வீக்கம் சப்பிவிட்டது' *(உ.வ.)*

U. capṭā

*[(சுப்பு) → சப்பு. சப்புதல் = அடித்தல், தட்டுதல்]*

சப்பு என்பது ஒரு நெகிழ் பொருள் ஏதேனும் ஒன்றை முட்டலைக் குறிக்குஞ் சொல். சாணமும் களிமண்ணும் பழச்சதையும் போற் குழைந்த பொருள்களை, நிலத்திற் போடும் போதும், சுவரில் எறியும்போதும் சப்பு என்ற ஒலி கேட்கும். அதனால் "சப்பென்று விழுந்தது" என்பர். அவ்வொலியெழப் போடப்பட்ட குழைபொருட்கள் தட்டையான வடிவங்கொள்ளும். அதனால் சப்பு என்னும் ஒலிக்குறிப்பினின்று தட்டையாதற் கருத்து உணர்த்தும் பல சொற்கள் பிறக்கும் *(மு.தா. 119).*

**சப்புக்கொட்டு-தல்** *šappu-k-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* இனிப்புச்சுவை மிக்க தின்பண்டங்களைச் சுவைக்கும்போது நாக்கினால் ஒலி எழுப்பிச் சுவையின் அருமையை வெளிப்படுத்துதல்; to relish a dish or an item of food by making a click. தாத்தாவைப் பார், இனிப்பை எத்தனை அளவு சுவைத்துச் சப்புக்கொட்டிக் கொண்டு சாப்பிடுகின்றார்! *2.* மீண்டும் நுகர ஆசைப் படுதல்; to nurture a desire where it is unbecoming. 'கிழவர் இளமைக்குச் சப்புக் கொட்டுகிறார் போலிருக்கிறது!' *(உ.வ).*

*[சப்பு + கொட்டு-,]*

**சப்புச்சவறு** *šappu-c-cavaṟu,* பெ. (n.) பயனின்றிக் கழிக்கப்பட்ட பொருள் (இ.வ.); refuse, rubbish.

ம. சப்பு; க. சப்பு, சொப்பு (பச்சை இலை); கோத. சொப் (கஞ்சிக்குப் பயன்படுத்தும் இலை); துட. தும் (மரவிலை); து., பட. சொப்பு, சொப்பு (இலை); குட. சப்பல் (இலை).

*[சப்பு + சவறு. சப்பு = பயனற்றது; சப்புச்சவறு = மோனை நோக்கி வந்த இணைமொழி]*

**சப்புரி** *šappuri,* பெ. (n.) பாவுக்குள் ஊடுருவிச் செல்லும் இழை; weaving thread.

*[சப்பு + புரி]*

**சப்புரித்தடை** *šappuri-t-tadai,* பெ. (n.) இழைகளின் தொகுப்பு; texture.

*[சப்புரி + தடை]*

**சப்புரிப்பட்டு** *šappuri-p-pattu,* பெ. (n.) பாவில் ஊடிழையாகப் பயன்படுத்துவதற்குரிய பட்டு (செங்கை.); a kind of silk cotton thread.

*[சப்புரி + பட்டு]*

**சப்பெனல்**[1] *šap-p-enal,* பெ. (n.) 1. சுவையின்மைக் குறிப்பு; onom. expr. signifying insipidity. தலைவரின் இன்றைய பேச்சு சப்பென்றிருந்தது. 2. முற்றிலும் நீங்குதலைக் குறிக்கும் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying complete removal. வீக்கம் சப்பென்று குறைந்துவிட்டது.

*[சப்பு + எனல்]*

**சப்பெனல்**[2] *šap-p-enal,* பெ. (n.) அடித்தல் குறிப்பு; onom. expr. signifying beating. 'சப்பென்று அறைந்து விட்டான்' (உ.வ.).

க. சப், சப்பனெ

*[சப் + எனல்]*

**சப்பை**[1] *šappai,* பெ. (n.) 1. சப்பட்டையானது; that which is flattened. 2. சுவையற்றது; that which is insipid or tasteless. 3. வலியற்றது (வின்.); that which is weak, lean, emaciated. 4. பயனற்றது; that which is useless. 'அவன் பேச்சுச் சப்பையாயிருந்தது' (உ.வ.). 5. தாழ்ந்தது (இ.வ.); that which is despicable, mean or low. 6. இடுப்பு, தோள் இவற்றின் சந்து; hips, haunch, shoulder-blade. 'சப்பை கழன்று போயிற்று' (உ.வ.).

ம. சப்ப; க.,பட., சப்பெ; தெ. சப்பு; து. சப்பு, சப்பெ

*[சுப்பு → சப்பு → சப்பை (மு.தா.119)]*

**சப்பை**[2] *šappai,* பெ. (n.) 1. தேரின் சக்கரம் தரையிற் புதையாமலோடும்படி அதனடியில் இடப்படும் மரத்துண்டு; a spar of wood placed for the wheels of a car to run smooth in a sandy road. 2. வீட்டின் கூரைக்கைம்மரம்; rafter. 3. மரத்திற் பிளந்தெடுத்த துண்டு; a chip of wood.

தெ. சப்ப

*[தக்கை → சக்கை → சப்பை]*

**சப்பை**[3] *šappai,* பெ. (n.) முத்திரை; a seal.

க., து. சப்பெ; தெ. சப்ப

*[சப்பு → சப்பை]*

சப்பை → U. chāpā.

**சப்பைக்கட்டு-தல்** *šappai-k-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) சப்பைக்கட்டுக்கட்டு-தல் பார்க்க; see *šappai-k-kattu-k-kattu-.*

*[சப்பை + கட்டு-,]*

**சப்பைக்கட்டுக்கட்டு-தல்** *šappai-k-kattu-k-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) குற்றங்குறைகளைத் தாங்கிப் பேசுதல்; to defend and support a person, especially when his actions or words are open to criticism.

*[சப்பைக்கட்டு + கட்டுதல். சப்பை = சுவையற்றது, வலுவற்றது, பயனற்றது, குற்றமுடையது]*

**சப்பைக்கட்டை** *šappai-k-kattai,* பெ. (n.) வலைமிதவைக் கட்டை (மீனவ.); floating log of fishing net.

*[சப்பை + கட்டை. சப்பை = தட்டை]*

**சப்பைக்கத்தலை** *šappai-k-kattalai,* பெ. (n.) ஒருவகைக் கடல்மீன் (மீனவ.); a kind of sea fish.

*[சப்பை + கத்தலை]*

**சப்பைக்கல்**[1] *šappai-k-kal,* பெ. (n.) கட்டடச் சுவரில் தரணியை யொட்டி அமைந்த கல்; stone adjacent to cordon of a building (கட்டட).

*[சப்பை + கல்]*



சப்பைக் கோலா



சப்பையிரால்



சப்பைக் கத்தலை



சப்பையுளுவை



சப்பைத் திருக்கை

**சப்பைக்கல்**[2] *šappai-k-kal,* பெ. (n.) *கூலங்களை அரைப்பதற்கு உதவுங் கல்;* a flat grinding stone.

க. சப்படி

*[சப்பை + கல்]*

**சப்பைக்கழி** *šappai-k-kaḻi,* பெ. (n.) மாட்டு வண்டிப் பாரின் வலமும் இடமுமான இரு பக்க முனையொடும் மூக்கணை மரத்தொடும் பொருத்திக் கட்டும் மூங்கில் பிளாச்சு; lath of bamboo fastened in either side of driver's seat (long bar which is attached the yoke) with the front portion of a cart.

*[சப்பை + கழி]*

**சப்பைக்காய்** *šappai-k-kāy,* பெ. (n.) தட்டையான மாங்காய் முதலியன (யாழ்ப்.); flat fruit, as some mangoes.

*[சப்பை + காய்]*

**சப்பைக்கால்** *šappai-k-kāl,* பெ. (n.) வளைவான கால்; club-foot. "சப்பைக்கா லண்ணன் பெருவயிறன்" (தனிப்பா. 1, 35: 66).

*[சப்பை + கால்]*

**சப்பைக்கோடரி** *šappai-k-kōḍari,* பெ. (n.) தட்டையாய் அமைந்திருக்கும் ஒருவகைக் கோடரி; flat-axe.

க. சப்பகொடலி, சபகொடலி

*[சப்பை + கோடரி. கோடு + அரி = கோடரி]*



சப்பைக்கோடரி

**சப்பைக்கோலா** *šappai-k-kōlā,* பெ. (n.) கடல் மீன்வகை; halfbeak, sea fish, silvery, striped (செ.அக.).

*[சப்பை + கோலா]*

**சப்பைகொட்டு-தல்** *šappai-koṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) *சப்புக்கொட்டுதல்;* to smack the lips.

து. சப்பரிபு, சப்பலிப்பு, சப்லிப்பு

*[சப்பை + கொட்டு-,]*

**சப்பைச்சலங்கை** *šappai-c-calaṅgai,* பெ. (n.) குழந்தைகள் அணியும் சதங்கை யணிவகை (நாஞ்.); an ornament of tiny bells for children.

*[சப்பை + சலங்கை]*

**சப்பைத்திருக்கை** *šappai-t-tirukkai,* பெ. (n.) கடல்மீன் வகை; sea-fish, olive, disc twice as broad as long.

*[சப்பை + திருக்கை]*

**சப்பைத்துணி** *šappai-t-tuṇi,* பெ. (n.) மட்டமான துணி (இ.வ.); coarse or inferior cloth (செ.அக.).

ம. சப்பத்துணி

*[சப்பை + துணி. சப்பை = சுவையற்றது, அழகற்றது, நேர்த்தியற்றது, மட்டமானது]*

**சப்பைநிலம்** *šappai-nilam,* பெ. (n.) பயனற்ற பாழ்நிலம் (கொ.வ.); barren tract of land.

*[சப்பை + நிலம். சப்பை = உள்ளீடற்றது, வளமற்றது.]*

**சப்பைநோய்** *šappai-nōy,* பெ. (n.) ஈராண்டு அகவையுள்ள மாடுகளைத் தாக்கும் ஒரு வகைத் தொற்று நோய்; black quarter.

*[சப்பை + நோய்]*

**சப்பைநோவு** *šappai-nōvu,* பெ. (n.) சப்பைவீக்கம் பார்க்க; see *šappai-vīkkam* (செ.அக.).

*[சப்பை + நோவு]*

**சப்பைப்பிடிப்பு** *šappai-p-piḍippu,* பெ. (n.) இடுப்புப் பக்கத்தில் உண்டாகும் ஊதைவகை (கொ.வ.); rheumatism in the hips, hip-gout.

*[சப்பை + பிடிப்பு. சப்பை = இடுப்பு]*

**சப்பைமூக்கன்** *šappai-mūkkan̲,* பெ. (n.) தட்டையான மூக்கையுடையவன்; a flat-nosed man.

க. சப்படெ மூகினவனு

*[சப்பை + மூக்கன்]*

**சப்பைமூக்கு** *šappai-mūkku,* பெ. (n.) தட்டையான மூக்கு; flat - pug - nose.

க. சப்படெமூகு, சப்பட்டெமூகு; பட. சப்பெமூக்கு

*[சப்பை + மூக்கு]*

**சப்பைமூஞ்சி** *šappai-mūñji,* பெ. (n.) தட்டையான முகமுள்ளவன்-வள்-து (கொ.வ.); person or animal with flat or unshappy face.

*[சப்பை + மூஞ்சி]*

**சப்பையா-தல்** *šappaiyā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. தட்டையாதல்; to become flattened. 2. சுவையற்றுப் போதல்; to become insipid or tasteless. 3. வலுகுறைதல்; to become weak.

க. சப்பலர், சப்பலரு; து. ஆபுனி

*[சப்பை + ஆ-,]*

**சப்பையாள்** *šappaiyāḷ,* பெ. (n.) பயனற்றவன்; a worthless person.

ம. சப்பன்; து. சப்படெ

*[சப்பை + ஆள்]*

**சப்பையிறால்** *šappai-y-irāl,* பெ. (n.) கல்லிறால் மீன்; a kind of sea-lobster fish - Squash or squat lobster (சா.அக.).

*[சப்பை + இறால்]*

**சப்பையுழுவை** *šappai-y-uḻuvai,* பெ. (n.) உழுவை மீன் வகையுள் ஒன்று (மீனவ.); a kind of uḻuva fish.

*[சப்பை + உழுவை]*

**சப்பையெலும்பு** *šappai-y-elumpu,* பெ. (n.) இடுப்பெலும்பு; hip-bone (செ.அக.).

*[சப்பை + எலும்பு. எல் → எலும்பு]*

**சப்பைவாக்கு** *šappai-vākku,* பெ. (n.) சப்பட்டைவாக்கு[1] பார்க்க (இ.வ.); see *šappaṭṭai-vākku[1].*

*[சப்பை + வாக்கு]*

**சப்பைவாய்** *šappai-vāy,* பெ. (n.) உதடுகள் சிறிது உள்ளடங்கிய வாய் (கொ.வ.); mouth with lips short or shrunk.

*[சப்பை + வாய்]*

**சப்பைவீக்கம்** *šappai-vīkkam,* பெ. (n.) கால்நடை நோய்வகை; anthrax fever.

*[சப்பை + வீக்கம்]*

**சப்பைவேலை** *šappai-vēlai,* பெ. (n.) இழிவானதாகக் கருதப்படும் பணி; work of inferior quality.

து. சப்பட்கெலச

*[சப்பை + வேலை]*

**சபகம்** *šabagam,* பெ. (n.) மூங்கில்; bamboo-Bambusa arundinacea (சா. அக).

*[சபம்[2] → சபகம்]*

**சபடம்** *šabaḍam,* பெ. (n.) அறுகு; cynodon grass-Cynodon dactylon (சா.அக).

**சபத்திரகம்** *šabattiragam,* பெ. (n.) பெருங்கம்பிப் பூடு; large cape jasmine - Gardenia latifolia (சா.அக.).

**சபதம்[1]** *šabadam,* பெ. (n.) மூங்கில்; bamboo - Bambusa arundinacea (சா. அக).

*[சபம்[2] → சபதம்]*

**சபதரி-த்தல்** *šabadari-,* 11 செ.கு.வி.. (v.t.) 1. சவதரி பார்க்க (வின்.); to acquire. 2. ஆதரித்தல் (யாழ். அக.); to support, maintain.

*[சவதரித்தல் → சபதரித்தல்]*

**சபதன்** *šabadaṉ,* பெ. (n.) செம்பருத்தம்பூ; chinese rose mallow. hibiscusrosa - Sinensis (சா.அக.).

**சபதாகிதம்** *šabadā-gidam,* பெ. (n.) அடப்பன்கொடி; goat's foot creeper - ipomaea bilopus (சா. அக.).

**சபதி** *šabadi,* கு.வி.செ. (adv.) உடனடியில் (யாழ்.அக.); instantaneously.

Skt. sabadi

*[சடுதி → சபதி]*

**சபம்[1]** *šabam,* பெ. (n.) 1. குதிரைக் குளம்பு; horse's hoof. 2. ஆலமரம் முதலியவற்றின் விழுது (யாழ். அக.); aerial roots, as of banyan.

Skt. šapha

**சபம்[2]** *šabam,* பெ. (n.) மூங்கில் (பிங்.); bamboo.

ம. சபம்; க. சப; து. தெக்.

*[ஆவம் → சாவம் → சாபம் = வில். சாபம் → சபம். இனி சவள் → சவம் → சபம் = வளையும் தன்மை கொண்டது என்றுமாம்]*

**சபம்**[3] *šabam,* பெ. (n.) பிணம் (இ.வ.); corpse (செ. அக.).

*[சவம் → சபம்]*

த. சபம் → Skt. šava

*சவம்[1] பார்க்க*

**சபலம்**[1] *šabalam,* பெ. (n.) 1. இதளியம் (இரசம்); quicksilver.

*[சவளுதல்= வளைதல், துவளுதல் → சவள் → சவல் → சபலம்]*

**சபலம்**[2] *šabalam,* பெ. (n.) பாக்கு; arecanut - Acacia catechu (சா.அக.).

**சபலம்**[3] *šabalam,* பெ. (n.) சபலை (வின்.) பார்க்க; see *šabalai.*

Skt. šapalā

**சபலா** *šabalā,* பெ. (n.) திப்பிலி (மலை.); long-pepper.

**சபலோத்தமா** *šabalōttamā,* பெ. (n.) 1. புளி முந்திரிகை; sour grapes - Vitis vinifera. 2. புளிப்பு முந்திரிப்பழம்; sour cashew apple-ancardium occidentale (சா.அக.).

**சபவலம்** *šabavalam,* பெ. (n.) கழற்சிக்காய்; bonduc nut - Caesal - pinia bonducella (சா.அக.).

**சபளவெலி** *šabala-veli,* பெ. (n.) கடித்தால் கழித்தல் (வாந்தி), மயக்கம், நீர்வேட்கை முதலியவற்றை உண்டாக்குவதும் பல வண்ணங்கள் கொண்டதுமான ஒரு வகை எலி; a species of rat with varied colours and its bite causes derangement of the three humours, vomitting, swoon; intense thirst etc. in the human system (சா.அக.).

**சபாபதங்கம்** *šabā-badańgam,* பெ. (n.) பெருங்காயம்; asafoetida - Ferula asafoetida (சா.அக.).

**சபாலு** *šabālu,* பெ. (n.) குறிஞ்சா; Indian ipecacuantra - Tylophora asthmatica (சா.அக).

**சபாலுகம்** *šabālugam,* பெ. (n.) வில்வம்; bael tree - Aegia marmelos alias Crataava marmelos (சா.அக).

**சபூகவன்னிகம்** *šabūga-vannigam,* பெ. (n.) தீமுறிப்பூடு; a plant counteracting the effects of fire (சா.அக.).

**சபை** *šabai,* பெ. (n.) 1. கூட்டம் (பிங்.); assembly, meeting, congregation, society, association. 2. அவைமண்டபம் (கொ.வ.); assembly room, public hall. 3. அம்பலம்; common meeting place. 'சபையிலே நக்கீரன் அரசிலே விற்சேரன்' (பழ.). 4. சிவபெருமான் நடனமாடுங்கூடம்; temble-halls in which Šiva performs His dance, as the kanaga-šabai at Chidambaram. 5. திருச்சபை; church congregation (Chr.).

*[அவை → சவை → சபை. அமைதல் = நெருங்குதல், கூடுதல். அமை = கூட்டம். அமை → அவை]*

த. சபை → Skt. sabha

*சவை[2] பார்க்க*

**சபைக்கட்டு** *šabai-k-kattu,* பெ. (n.) கிறித்துவ அவைக்குரிய சட்டம்; obligatory rules of a church (Chr.).

*[சவை → சபை + கட்டு; கள் → கட்டு = ஒழுங்கு, முறைமை, சட்டம்.]*

**சபைக்காரன்** *šabai-k-kāran,* பெ. (n.) கிறித்துவ ஏற்பாட்டைத் தழுவியவன் (R.C.); a member of a recognised church.

*[சவை → சபை + காரன். கிறித்துவக் கோயில், பலர்கூடும் சபை இடமாகக் கருதப்பட்டதால் 'சபைக்காரன்' கிறித்துவக் கோயில் உறுப்பினரைக் குறித்தது.]*

**சபைக்குச்சமைதல்** *šabaikku-c-camaidal,* பெ. (n.) அவைக்கு ஒத்துப்போகை, அவைக்கு இசைகை; co-operation to assembly. "சருப்பேதி மங்கலத்து ஸபைக்கு ஸமைந்து கண்டேற்று" (ஆவ: 10-17:2. பக். 41).

*[சபை → சபைக்கு + சமைதல்.]*

**சபைக்குப் புறத்தாக்கு-தல்** *šabaikku-p-purattākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) மதத்தினின்று விலக்குதல் (R.C.); to expel or excommunicate as from a religious society.

*[சபை + கு + புறத்து + ஆக்கு-. ஒரு மதத்தினர் அனைவரும் ஒரு கூட்டமாகக் கருதப்பட்டதால், சபைக்குப் புறத் தாக்குதல், மதத்திலிருந்து விலக்கிவைக்கும் பொருளில் ஆளப்பட்டது.]*

**சபைக்கூச்சம்** *šabai-k-kūccam,* பெ. (n.) புதிதாக அவை ஏறும் ஒருவர்க்குக் கூட்டத்தினரைக் கண்டு எழும் அச்சம் அல்லது கூச்சம்; stage fright. அவனுக்கு அது முதல் மேடை, சபைக் கூச்சம் கொஞ்சமும் இல்லை (உவ.).

*[அவை → சவை → சபை + கூச்சம். ஒ.நோ. அமர் → சமர். உருவு → உருபு.]*

**சபைக்கோழை** *šabai-k-kōlai,* பெ. (n.) அவைக்கு நடுங்குவோன்; one who is nervous on facing an audience.

*[சவை → சபை + கோழை]*

**சபைக்கூட்டு-தல்** *šabai-k-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) கூட்டங்கூட்டுதல் (கொ.வ.); to convene an assembly.

*[சவை → சபை + கூட்டு-,]*

**சபைக்கூடு-தல்** *šabai-k-kūḍu-,* 5 செ.கு.வி. (v.i.) அவை கூடுதல்; to assemble, as of committee.

*[சவை → சபை + கூடு-,]*

**சபைத்தலைவன்** *šabai-t-talaivan,* பெ. (n.) அவைத்தலைவன்; president of an assembly.

*[சவை → சபை + தலைவன்]*

**சபைநடுக்கம்** *šabai-naḍukkam,* பெ. (n.) சபைக்கூச்சம் பார்க்க; see *šabai-k-kūccam.*

*[சவை → சபை + நடுக்கம்]*

**சபைப்பிரிவினை** *šabai-p-pirivinai,* பெ. (n.) கொள்கை மாறுதலால் நேரும் திருச்சபையின் பிளவு (கிறித்.); schism, split.

*[சபை + பிரிவினை]*

**சபைப்பொது** *šabai-p-podu,* பெ. (n.) ஊரவைக்குப் பொதுவான ஒன்று; common one of the village assembly. "வடபாற் கெல்லை சபைப்பொதுவான அப்பன்குழிக்கு தெற்கு" (தெ.க.தொ. 13:99-7).

*[சபை + பொது]*

**சபையார்** *šabaiyār,* பெ. (n.) 1. மன்றத்தினர் (சங்கத்தினர்); members of an assembly or society. 2. வடமப் பிராமணருள் ஒருசாரார் (G,Tj.D.I. 78); a class of vaḍama brahmins. 3. திருச்சபையார்; members of a church (Chr.).

*[சபை + ஆர். 'ஆர்' ப. பா ஈறு]*

**சபையார்பக்கல்கொண்டநிலம்** *šabaiyār-pakkal-koṇḍa-nilam,* பெ. (n.) அவையார்க்கு ஒதுக்கப்பட்ட நிலம்; reserved land for assembly members. "ஸ்ரீ வெங்கட கொட்டத்து திருக்குடவூர்நாட்டு திருச்சுகனூர் சபையார் பக்கலும், மடமுடைய இலக்குமணநம்பிபக்கலும் பொன்குடுத்து விலைகொண்டு திருவிளக்கோயில் பெருமாளுக்கும் பொன்குடுத்து இறைஇழித்திக் கொண்ட நிலமும் சபையார்பக்கல் கொண்ட நிலமும்" (திருப்ப. க. தொ. 1. 8-4).

*[சபையார் + பக்கல் + கொண்ட + நிலம்.]*

**சபையிருத்து-தல்** *šabai-y-iruttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தகுதிக்குத்தக்கபடி அவையினரை உரிய இடத்தில் அமர்த்துதல் (வின்.); to seat a company properly in order of rank. 2. அவையை ஒழுங்குபடச்செய்தல்; to keep an assembly in order (செ.அக.).

*[சபை + இருத்து-,]*

**சபையிற்சேர்-தல்** *šabai-y-iṟ-šēr-,* செ.கு.வி. (v.i.) அறிவு முழுக்குப் பெற்றுக் கிறித்துவ மதத்தைத் தழுவுதல்; to become member of a church by baptism, etc. (R.C.) (செ.அக.).

*[சபை + இல் + சேர். சபை மதக் கூட்டமாகக் கருதப்பட்டதால், மதத்திற் சேர்தல் மதத்தைத் தழுவுதல் பொருளில் வந்தது.]*

**சபையுள்ளார்** *šabai-y-uḷḷār,* பெ. (n.) நாடக வரங்கில் இசைபாடுவோர் (யாழ்.அக.); band of singers in a dramatic representation.

*[சவை → சபை + உள்ளார்]*

**சபையேறு-தல்** *šabai-y-ēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அவைக்குமுன் வருதல்; to appear before an assembly, to appear, as a performer. 2. அரங்கேறுதல்; to be presented before a learned body for approval. 3. திருட்டு முதலிய தீவழியாற் பேரெடுத்தல் (கொ.வ.); to gain notoriety as a thief or a habitual offender.

*[சவை → சபை + ஏறு-,]*

**சபையொழுக்கம்** *šabai-y-oḻukkam,* பெ. (n.) மரியாதை முறை (இ.வ.); etiquette (செ. அக..).

*[சவை → சபை + ஒழுக்கம்]*

**சபைவண்மை** *šabai-vaṇmai,* பெ. (n.) சபை வளமை பார்க்க; see *šabai-vaḷamai* (செ.அக..).

*[சவை → சபை + வண்மை]*

**சபைவளமை** *šabai-vaḻamai,* பெ. (n.) சபைக்குரிய அதிகாரம்; the authority of public assembly (செ.அக.).

[சவை → சபை + வளமை]

**சபைவழங்கல்** *šabai-vaḻaṅgal,* பெ. (n.) ஊர் மன்றம் செய்யும் பொதுச் செலவினங்கள்; expenditure on common purpose incurred by the village assembly.

[சவை → சபை + வழங்கல்]

**சபைவினியோகம்** *šabai-viṉiyōgam,* பெ. (n.) சபைவழங்கல் பார்க்க; see *šabai vaḻaṅgal.* 'முன் சபை விநியோகத்துக்கு அழித்துகொண்ட பொன்' (தெ. க. தொ. 13.6.115-2).

[சபை + வினியோகம்]

Skt. viniyōga → வினியோகம்

**சம்பகம்**[1] *šambagam,* பெ. (n.) சண்பகமரம்; champak. "சம்பக நறும் பொழில்"(கம்பரா. தைல. 15).

[செம் → சம் → சம்பகம்]

த. சண்பகம் → Skt. campaka.

**சம்பகம்**[2] *šambagam,* பெ. (n.) சம்பம்[3] (இ.வ.) பார்க்க; see *šambam*[3].

[செம் = சிவப்பு. செம் → சம் → சம்பகம்= சிவப்பு, இளஞ்சிவப்பு, மஞ்சள்.]

*campaka, campa, kanaka,* a tree bearing a yellow fragrant flower, Michelia Campaka; its flower. Gt. (p . 518) is right in deriving campaka from D. can.l, etc., redness, golden colour, as the flower at once suggests that derivation. This is corroborated by kanaka which comes from that D. root in its form of ken, etc., (K.K.E.D XXIII).

*champaka,* the Michelia champaka, a tree with a yellow fragrant flower. Also jambu, the rose-apple: Drav. šembu, red (C.G.D.F.L.577).

**சம்பங்கி** *šambaṅgi,* பெ. (n.) 1. கொடிச் சம்பங்கி; cowslip creeper. 2. சம்பகம்[1] (மலை.) பார்க்க; see *šampagam.*

[சம்பகம் → சம்பங்கி]

**சம்பங்கிக்காசு** *šambaṅgi-k-kāšu,* பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 114); an ancient coin.

[சம்பங்கி + காசு]

**சம்பங்கிப்பூ** *šambaṅgi-p-pū,* பெ. (n.) சண்பகப்பூ; champak flower.

[சம்பங்கி + பூ]

சம்பங்கி வகை:

1. மரச்சம்பங்கி - tree champak- Michelia champaca.
2. நிலச்சம்பங்கி - ground champak.
3. அகச்சம்பங்கி - Indian champak.
4. காட்டுச்சம்பங்கி - wild champak.
5. சிறுசம்பங்கி - cananga flower tree.
6. கொடிச்சம்பங்கி - creeper champak.
7. நாகச்சம்பங்கி - white champak.

**சம்பங்கிவிசிறி** *šambaṅgi-višiṟi,* பெ. (n.) புடைவை வகை (இ.வ.); a woman's cloth.

[சம்பங்கி + விசிறி]

**சம்பங்குடலை** *šambaṅ-guḍalai,* பெ. (n.) சம்பங்கூடு (கொ. வ.) பார்க்க; see *šambaṅ-gūḍu.*

[சம்பம் + குடலை]

**சம்பங்கூடு** *šambaṅ-gūḍu,* பெ. (n.) சம்பங் கோரையாற் செய்த கொங்காணி (வின்.); a covering for the head and shoulders made of plaited sedge.

[சம்பு + அம் + கூடு. பின்னர் தென்னங் கீற்றால் செய்த கூட்டையும் குறித்தது]

**சம்பங்கூடை** *šambaṅ-gūḍai,* பெ. (n.) 1. சம்பங்கூடு பார்க்க; see *šambaṅ-gūḍu.* 2. சம்பங்கோரையாற் செய்த கூடை வகை (வின்.); a kind of basket made of rushes (செ.அக.).

[சம்பு + அம் + கூடை. சம்பு = சம்பங் கோரை]

**சம்பங்கோரை** *šambaṅ-gōrai,* பெ. (n.) கோரை வகை; elephant grass (செ.அக.).

க. சம்புகுல்லு

[சம்பு + அம் + கோரை]

**சம்பங்கோழி** *šambaṅ-kōḻi,* பெ. (n.) *காட்டுக் கோழி (திவா.);* grey jungle fowl.

மறுவ. கம்புள்

*[சம்பு + அம் + கோழி. குள் → கொழு → கோழி = நிலத்தையும் குப்பையையும் கிளைக்கும் பறவை]*



சம்பங்கோழி

**சம்படம்**[1] *šambaḍam,* பெ. (n.) கூறை (பிங்.); cloth.

மறுவ. கோடி, கோடிகம், படாம், கோசிகம், பஞ்சி, சாடி, நீவியம், சீரை, கரை, கலிங்கம், சூடி, காடிகம், புட்டம், தூசு, காழகம், வட்டம், தானை, அறுவை, அம்பரம், ஆவரணம், ஆசாரம்.

ம. சம்பட

*[அம்பரம் → சம்பரம் → சம்படம்]*

**சம்படம்**[2] *šambaḍam,* பெ. (n.) ஒரு பழைய வரி (I.M.P. Cg. 1095); an ancient tax.

*[சம்புடம் → சம்படம்]*

**சம்படம்**[3] *šambaḍam,* பெ. (n.) சோம்பல் (யாழ்ப். அக.); indolence, sluggishness.

க. சம்பு, சொம்பு

*[சுப்பு → சும்பு → சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல், வாடுதல், ஒடுங்குதல், குவிதல். சும்பு → சம்பு → சம்படம்]*

சம்படம் → Skt. lampaṭa

**சம்படம்**[4] *šambaḍam,* பெ. (n.) சம்பளம்; salary. "முற்பகுதிக்கும் செலவாகி கையிடு கொண்டு எல்லாவழி சம்படம் ஊதாகி குடுக்கும் காசாயம் பதினேழாவது ஆடிமாதம்" (தெ. க. 4: 434/1986).

*[சம்பளம் → சம்படம்]*

சம்பளம்[1] பார்க்க

**சம்படி-த்தல்** *šambaḍi-,* 4 செ.குவி. (v.i.) பயிர் செய்யுங்காலத்து இரண்டாமுறை உழுதல்; to plough field a second time during the season of cultivation.

*[சம்பு + அடி-,]*

**சம்பந்தசரணாலயர்** *šambanda-šaraṇālayar,* பெ. (n.) 1. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரின் நல்லம்மான்; maternal uncle of Tiru-ñāṉa-sambanda-mūrtti-nāyaṉār. 2. கி.பி. 16ஆம் நூற்றாண்டில் கந்தபுராணச் சுருக்கம் இயற்றிய ஆசிரியர்; the author of kanda-purāṇa-c-curukkam.

**சம்பந்தர்** *šambandar,* பெ. (n.) தேவாரம் பாடிய மூவருள் ஒருவரான திருஞானசம்பந்தர்; Tiru-ñāṉa-šambandar, one of the three celebrated authors of Tēvāram.

*[சம்பந்தம் → சம்பந்தர்]*

**சம்பந்தவிளாகஞ்சேரி** *šambanda-viḷāgañjēri,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்தில் உள்ள நன்னிலத்தை உள்ளடக்கிய ஊர்; a village in Tiruvārūr district. "திருவமுதுந் திருவிளக்கும் செலுத்துவதற்குந் நிலன் சம்பந்தவிளாகஞ்சேரி நீங்கலாக நிலன்னொன்றே" (நன்னி.க. தொ. 2 கல். 2. தொ. எண். 254-26).

*[சம்பந்தவிளாகம் + சேரி]*

Skt. bandha → த. பந்தம்

**சம்பந்தி** *šambandi,* பெ. (n.) துவையல் வகை; a kind of contiment used as a relish in food.

ம. சம்மந்தி

*[சம்பல் → சம்பந்தி]*

**சம்பம்** *šambam,* பெ. (n.) எலுமிச்சை (தைலவ.); acid lime.

*[சம்பு → சம்பம்]*

சம்பளம்[2] பார்க்க

**சம்பம்புல்** *šambam-pul,* பெ. (n.) கூரை வேயப் பயன்படும் புல்வகைகளில் ஒன்று; a kind of hay used to thatch roof (கட்டட).

*[சம்பு + அம் + புல்]*

**சம்பரம்**[1] *šambaram,* பெ. (n.) நீர் (பிங்.); water.

*[அம் = நீர். அம் → அம்பு = நீர், கடல். அம்பு → அம்பரம் = கடல், வாரி. அம்பரம் → சம்பரம் = நீர்.]*

சம்பரம் → Skt. šambara

**சம்பரம்**[2] *šambaram,* பெ. (n.) ஆடை; cloth, garment.

*[அம்பரம் → சம்பரம்]*

**சம்பரி** *šambari,* பெ. (n.) நேர்வாளம் (மலை.); croton.

**சம்பரித்தணக்கு** *šambari-t-taṇakku,* பெ. (n.) வெண்டாளி மரம் (L.) ; white catamaran tree.

*[சம்பரி + தணக்கு]*

**சம்பல்**[1] *šambal,* பெ. (n.) *1.* மலிவு; cheapness. *2.* விலையிறக்கம் (இ.வ.); fall in price.

*[சும் → சும்பு = வாடிச்சுருங்குதல்; சும்பு → சம்பு → சம்பல்]*

**சம்பல்**[2] *šambal,* பெ. (n.) தேங்காய், மிளகாய், புளி முதலியவற்றைச் சேர்த்து அரைத்த துவையல்; a kind of tuvaiyal. 'இடியாப்பத்திற்குச் சம்பல் நன்றாக இருக்கும்.' (இலங்.).

கூட்டுப் பொருள்களை வதக்கி அரைக்கும் துவையல்

**சம்பல்**[3] *šambal,* பெ. (n.) மிளகாய் வற்றல்; dried chilly pieces processed by drying.

*[சும் → சம் → சம்பல்]*

**சம்பலச்சீரம்** *šambala-c-cīram,* பெ. (n.) எருக்கம்பால்; a milk of madar plant - Calotropis giganta (சா.அக.).

*[சம்பலம் + சீரம்]*

**சம்பலம்** *šambalam,* பெ. (n.) *1.* எலுமிச்சை; lime fruit - Citrus medica. *2.* எருக்கு; madar plant (சா.அக.).

*[சம்பு → சம்பலம்]*

**சம்பவை** *šambavai,* பெ. (n.) கொற்றவை; goddess Pārvati. as the Šakti of Sambhu. "பகவதி சம்பவை மகிடவாகனி" (கூர்மபு. திருக்கலி. 23).

*[சாம்பவை → சம்பவை]*

த. சம்பவை → Skt. Šāmbhavi

**சம்பளக்காரன்** *šambaḷa-k-kāraṉ,* பெ. (n.) சம்பளமாகக் கூலி பெறுபவன் (இ.வ.); salaried person, one receiving fixed periodical wages (சொ. க. 19).

*[சம்பு + அளம் + காரன்]*

**சம்பளத்துக்கிரு-த்தல்** *šambaḷa-t-tukkiru-, 3* செ.கு.வி. (v.i.) மாதச்சம்பளத்திற்கு வேலை செய்தல் (கொ.வ.); to be engaged or serve for a salary or monthly pay (செ.அக.).

*[சம்பளம் + அத்து + கு + இரு]*

**சம்பளந்தின்னு-தல்** *šambaḷan-tiṉ-, 3* செ.கு.வி. (v.i.) கூலிபெறுதல்; to enjoy the benefit of a salary. சம்பளந் தின்னுவதற்கு உழைத்துத் தான் தீரவேண்டும்.

*[சம்பளம் + தின்னு. துன்னு → தின்னு]*

**சம்பளநத்தம்** *šambaḷa-nattam,* பெ. (n.) தஞ்சை மாவட்ட ஊர்; a village in Tanjavoor district.

*[சம்பளம் + நத்தம். நந்து → நந்தம் → நத்தம் = மேடான நிலம். சுடுகாட்டிற்குப் போய்த் திரும்பியோர் ஒன்றுகூடி சம்பளம் வழங்கிய மேடான பகுதி, இடம் சம்பளநத்தம்]*

ஊர்ப்பொதுவிடம் நத்தம் எனப்படும். பார்ப்பனர் அல்லாதார் வாழும் பகுதி என்றும் பொருள் உண்டு. மேய்ச்சல்நிலமும் அப் பெயர் பெறும். தற்போது நத்தம் என்பது, சிறுபான்மையோர் வாழும் இடத்திற்கு வழங்கப்பட்டு வருகிறது.

**சம்பளப்பட்டி** *šambaḷa-p-paṭṭi,* பெ. (n.) சம்பளக் கொடுப்பினை பற்றிய விளக்கம் அடங்கிய பொத்தகம் (இ.வ.); pay bill, acquittance roll.

*[சம்பளம் + பட்டி]*

**சம்பளப்பிடித்தம்** *šambaḷa-p-piḍittam,* பெ. (n.) *1.* உரிய சம்பளத்தைக் கொடாது நிறுத்திக் கொள்கை; with holding payment of wages. *2.* சம்பளக் குறைவு; deduction in wages.

*[சம்பளம் + பிடித்தம்]*

**சம்பளம்**[1] *šambaḷam,* பெ. (n.) *1.* வழியுணவு (பிங்.); food for journey. *2.* வழிப்பொருள் (வின்.); stock for travellors. *3.* செய்த வேலைக்குப் பெறும்

கூலி; salary. "பண்பிலுக்குஞ் சம்பள மாதர்" (திருப்பு. 22). 'சம்பளம் அரைப் பணமானாலும் சளுக்கு முக்காற்பணம்' (பழ.). 4. கரை (சங்.அக.); shore, bank.

ம. சம்பளம், க. சம்பள; தெ. சம்பளமு; பட. சம்புவ

[சம்பு + அளம்]

பழங்காலத்தில் சம்பளம் கூலமும் உப்புமாகக் கொடுக்கப்பட்டது. கூலம் தானியம். (கூலமாகக் கொடுக்கப்படுவது கூலி). கூலத்திற் சிறந்தது நெல்லாதலின் நெல்வகையிற் சிறந்த சம்பாவின் பெயராலும், உப்பின் பெயராலும் சம்பளம் என்னும் பெயர் உண்டாயிற்று. சம்பும் அளமும் சேர்ந்தது சம்பளம். சம்பு என்பது சிறந்த நெல்வகைக்கும் சிறந்த கோரைவகைக்கும் பொதுப்பெயர்.

ஓங்கி வளர்ந்த சம்பாநெற்பயிரும் சம்பங் கோரையும் ஒத்ததோற்றமுடையனவா யிருத்தல் காண்க. நெல்லைக் குறிக்கும் சம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகின்றது. வகரவீற்றுச் சொற்கள் ஆகார வீறு பெறுவது இயல்பே. எ.டு: கும்பு → கும்பா; தூம்பு → தூம்பா; குண்டு → குண்டா.

அளம் என்பது உப்பு. உப்பு விளைப்போர் அளவர் எனப்படுதல் காண்க.

அளம் என்னும் சொல் தன் பொருளிழந்து ஈறாக மாறியபின் உப்பைக்குறிக்க, உம்பளம் என்றொரு சொல் வேண்டியதாயிற்று. உப்பைச் சம்பளப்பகுதியாகக் கொடுக்கும் வழக்கம் நின்றுவிடவே, உம்பளம் என்னும் சொல்லும், அப்பொருளில் வழக்கு வீழ்ந்தது, மானியமாகக் கொடுக்கும் நிலத்திற்குப் பெயராக ஆளப்பட்டது. உம்பு = உப்பு.

'உப்புக்கு உழைத்தல்', 'உப்பைத்தின்னுதல்' என்னும் வழக்குகளையும். 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்னும் பழமொழியையும் நோக்குக.

"salary (soldier's pay, which was given partly in salt) wages" (English work-book, p. 90.) (சொ. க. 121).

த. சம்பளம் → Skt. šambala

**சம்பளம்**[2] *šambaḷam,* பெ. (n.) எலுமிச்சை (பிங்.); sour lime.

[சம்பலம் → சம்பளம்]

**சம்பளம்**[3] *šambaḷam,* பெ. (n.) கல்வி நிறுவனங்களில் படிப்பதற்குக் குறிப்பிட்ட காலத்திற்கு ஒருமுறை என்ற வகையில் கட்டும் கட்டணம்; tuition fee in educational institutions. பள்ளிக்குச் சம்பளம் கட்ட இன்றே கடைசி நாள்.

[சம்பு + அளம்]

**சம்பளம்**[4] *šambaḷam,* பெ. (n.) செம்மறிக்கடா; he-goat.

[கம்பளம் → சம்பளம்]

**சம்பளம்போடு-தல்** *šambaḷam-pōḍu-,* 2 செ.குன்றாவி. (v.i.) 1. கூலி வரையறுத்தல்; to fix wages or salary. 2. கூலி கொடுத்தல்; to pay wages.

[சம்பளம் + போடு-,]

**சம்பளவாள்** *šambaḷa-v-āḷ,* பெ. (n.) கூலிக்கு அமர்த்தப்பட்ட வேலையாள்; labourer or servant on fixed salary.

[சம்பளம் + ஆள்]

**சம்பளி** *šambaḷi,* பெ. (n.) 1. வெற்றிலைப் பை (யாழ்ப்.); betel pouch. 2. பொருளிடும் பை (வின்.); bag, wallet (செ.அக.).

க. சம்பளிகெ; தெ. சம்பெள

[சம்பரம் = துணி. சம்பரம் → சம்பளம் → சம்பளி]

**சம்பன்னகரணி** *šambaṉṉa-karaṇi,* பெ. (n.) காயம் தீர்க்கும் மருந்துவகை (வின்.); a medicament that cures slashes or serious sword-cuts (செ.அக.).

[சம்பன்னம் + கரணி]

**சம்பன்னம்** *šambaṉṉam,* பெ. (n.) நிறைவு (யாழ்.அக.); completeness, perfection.

[அம் → அமல் = நிறைவு. அமல் → சமல் → சம்பல் → சம்பன்னம்]

அமல் பார்க்க

**சம்பன்னன்** *šambaṉṉaṉ,* பெ. (n.) 1. செல்வன் (சம்பத்துள்ளவன்); prosperous or wealthy man. "நரராய்ப் பிறந்து பின் சம்பன்னராய்" (பட்டினத். திருவேகம்ப. 21). 2. நிறைந்தவன்; one well endowed as with good qualities - usually last member in compound words. சகலகுண சம்பன்னன்.

[சம்பன்னம் → சம்பன்னன்]

**சம்பனசாரம்** *šambana-šāram*, பெ. (n.) ஏழிலைப் பாலை; seven leaved milky plant - Alstonia scholaris (சா.அக.).

**சம்பா**[1] *šambā*, பெ. (n.) பூவன்வாழை (வங்காள வழக்கு); a kind of banana (Poovan).

*[சம்பு → சம்பா]*

**சம்பா**[2] *šambā*, பெ. (n.) *1.* பெரும்பாலும் சுறவ (தை) மாதம் அறுவடையாகும், ஐந்துமாதக் கால நெற்பயிர்; a crop of paddy of five months duration harvested sometime in 'thai'. 'சம்பா விளைந்து சாய்ந்து கிடக்குது உண்பாரில்லாமல் ஊர்க்குருவி மேயுது' (பழ.). *2.* மிளகு சீரகங் கலந்து இறைவர்க்குப் படைக்கும் அமுது; boiled rice mixed with pepper powder, cumin, etc., offered to deity in temples.

ம. சம்பா, சம்பாவு, செம்பாவு; க. சம்பெ; தெ. சம்பாவுலு

*[சம் → சம்பா]*

தமிழ்நாடு எத்துணைப் பொருள் வளமுடைய தென்பது அதன் விளைபொருள் வகைகளை நோக்கினாலே விளங்கும். குறிப்பாகத் தமிழ்நாட்டு நெல்லில், செந்நெல், வெண்ணெல், கார்நெல் என்றும் சம்பா, மட்டை, கார் என்றும் பலவகைகள் இருப்பதுடன் அவற்றுள் சம்பாவில் மட்டும் ஆவாரம்பூச் சம்பா, ஆனைக்கொம்பன் சம்பா, குண்டுச் சம்பா, குதிரைவாலிச்சம்பா, சிறுமணிச்சம்பா, சீரகச்சம்பா முதலிய அறுபது உள்வகைகள் உள்ளன. இவற்றோடு வரகு, காடைக்கண்ணி, குதிரைவாலி முதலிய சிறுகூலங்கள் தமிழ்நாட்டிலன்றி வேறெங்கும் விளைவதில்லை. தமிழ்நாட்டுள்ளும், தென்னாட்டிலேயே அவை விளைகின்றன. பழங்காலத்தில் விளைந்த அளவு பொன்னும், மணியும், முத்தும், பவழமும் இன்று தென்றமிழ் நாட்டில் விளைந்து வருவது கண்கூடு (சொ. க. 69, 70).

**சம்பா**[3] *šambā*, பெ. (n.) *1.* வட்டமாகக் கோடு கிழித்து நான்குசிப்பிகளைக் கொண்டு ஆடும் ஒருவகை விளையாட்டு; a game with four little shells on circles drawn on board or on the ground. *2.* ஆட்டக்காயின் தாயவகை; one of the falls of shells in the šambā game. *3.* நால் விரலளவு; breadth of four fingers, hand breadth (செ.அக.). "மலைகிளிய நின்றாற்காலால் சம்பா அமுதுபடி னாலு மரக்காலும். இந்த திருப்போநகம் கொத்ததெருக்கைக்கு வடிதயிர் அமுதும்" (திருப். க. தொ. 2. கல் 38-7).

*[சம்பு → சம்பா]*

**சம்பாக்கட்டளை** *šambā-k-kaṭṭaḷai*, பெ. (n.) கோயிலில் சம்பா நெற்சோறு கொண்டு கடவுளுக்குப் படைக்கச்செய்யும் ஏற்பாடு (இ.வ.); provision for oblations of šambā rice in a temple.

*[சம்பா + கட்டளை]*

**சம்பாகம்**[1] *šambāgam*, பெ. (n.) நன்றாய்ச் சமைத்தது (வின்.); that which is properly cooked.

*[சமை + பாகம் → சமைபாகம் → சம்பாகம்]*

த. சம்பாகம் → Skt. sam-pāka.

**சம்பாகம்**[2] *šambāgam*, பெ. (n.) நாடு (யாழ். அக.); country.

*[சம + பாகம் - சமபாகம் → சம்பாகம்]*

**சம்பாகம்**[3] *šambāgam*, பெ. (n.) மரவகை (சுக்கிர நீதி. 228); a kind of tree.

*[சம்பு + பாகம் - சம்புபாகம் → சம்பாகம்]*

த. சம்பாகம் → Skt. sam-pāka.

**சம்பாட்டம்** *šambāṭṭam*, பெ. (n.) சம்பா[3] பார்க்க; see šambā[3].

*[சம்பா + ஆட்டம்]*

**சம்பாடம்** *šambāḍam*, பெ. (n.) அணிகலனை அதனிடமுள்ள அரக்கு முதலியவற்றோடு நிறுக்கை (இ.வ.); weighing a jewel with inlaid lac, precious stone. etc.

தெ. சம்பாடமு.

**சம்பாத்தியம்** *šambāttiyam*, பெ. (n.) பொருளீட்டுகை; acquisition, earnings.

*[சம்பாரித்தல் → சம்பாரித்தம் → சம்பாரத்தியம் → சம்பாத்தியம்]*

நெல்லை அறுவடை செய்தல் எனப் பொருள்படும் சம்பா அரித்தல் என்பது சம்பாரித்தல் என்றாகிப் பொருளீட்டுதலைக் குறித்தது.

**சம்பாதனம்** *šambādanam*, பெ. (n.) சம்பாத்தியம் பார்க்க; see *šambāttiyam*.

**சம்பாதனை** *šambādanai,* பெ. (n.) சம்பாத்தியம் (இ.வ.) பார்க்க; see *šambāttiyam* (செ.அக.).

*[சம்பாதி → சம்பாதனை]*

**சம்பாதி[1]-த்தல்** *šambādi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தேடிப் பெறுதல்; to earn, acquire, secure.

*[சம்பாரி → சம்பாதி]*

சம்பாத்தியம் பார்க்க

**சம்பாதி[2]** *šambādi,* பெ. (n.) அருணனது மூத்த புதல்வனும் சடாயுவின் தமையனுமாகிய கழுகரசன்; a vulture-king - elder son of Aruṇan and brother of Jaḍāyu. "சம்பாதியிருந்த சம்பாதி வனமும்" (மணிமே. 3:54).

*[சம் → சம்பாதி]*

**சம்பாதிபுரம்** *šambādi-puram,* பெ. (n.) சம்பாதியாற் பூசிக்கப்பெற்ற புள்ளிருக்கு வேளூர் என்னுஞ் சிவத்தலம் (சங்.அக); Puḷḷirukku vēḷūr, a Siva shrine in Tañjāvūr District, named after Sampādi who worshipped Siva at this place.

மறுவ. வினைதீர்த்தான் கோயில், வைத்தீசுவரன் கோயில்

*[சம்பு → சம்பாதி + புரம்]*

**சம்பாப்பட்டம்** *šambā-p-paṭṭam,* பெ. (n.) கடக மாதத்தில் விதைத்துத் தொடங்கும் பயிர்ச் செலவு (ஆடிப் பட்டம்); cultivation season in the month of Āḍi. 2. நெல் பயிர் செய்யும் காலம்; paddy cultivation period.

*[சம்பா + பட்டம்]*

**சம்பாபதி** *šambā-padi,* பெ. (n.). 1. சம்புத் தீவைக் காவல் செய்யும் பெண்தெய்வம்; the tutelary goddess of Jambūdvīpa 'சம்பாபதிதன் னாற்ற றோன்ற' (மணிமே. 6: 190). 2. சம்பாபதியின் இருப்பிடமான காவிரிப்பூம்பட்டினம் (மணிமே. பதி. 8); Kāviri-p-pūm-paṭṭinam, as the abode of Šambāpadi.

*[சம்பு[4] → சம்பா + பதி]*

**சம்பாபுரம்** *šambā-puram,* பெ. (n.) அங்க நாட்டின் தலைநகரம் (யாழ்அக.); the capital of the Aṅga country.

*[சம்பா + புரம்]*

ஒவ்வொரு தீவிற்கும் ஊருக்கும் ஒரு காவல் தெய்வம் இருந்தது. நாவலந்தீவிற்குச் 'சம்பாபதி' என்னும் நாவல் மகளும், மதுரைக்கு மதுராபதியும் காவல் தெய்வம். நாவல் தெய்வ இருக்கை காவிரிப்பூம் பட்டினமென்று மணிமேகலை கூறுவதால் சோழநாடு முதற்காலத்திற் பனிமலை வரை பரவியிருந்தமை உய்த்துணரப்படும் (தமி29).

**சம்பாமிளகாய்** *šambā-miḷagāy,* பெ. (n.) மிளகாய் வகையுள் ஒன்று (செங்கை.); a kind of chilly.

*[சம்பா + மிளகாய்]*

**சம்பாரங்கூட்டு-தல்** *šambāraṅ-kūṭṭu-,* 5 செகுவி. (v.i.) கறிக்குக் கூட்டுப் பொருள்களைச் சேர்த்தல் (இ.வ.); to mix curry stuffs.

*[சம்பாரம் + கூட்டு]*

**சம்பாரப்பயிர்கள்** *šambāra-p-payirgaḷ,* பெ. (n.) உணவுப்பொருள்களுக்கு மணமும், சுவையும் அளிக்கும் மிளகாய், இஞ்சி, மிளகு, மல்லி போன்றவை; the spices, chillies, ginger, coriander, pepper etc. which give good taste and nice odour.

*[சம்பாரம் + பயிர்கள்]*

**சம்பாரப்புல்** *šambāra-p-pul,* பெ. (n.). 1. சுக்கு நாறிப்புல்; ginger grass. 2. ஒரு மணப்புல்; any fragrant grass as kuskus etc., 3. கற்பூரப்புல்; lemon grass - Andropogen aromaticus (சா.அக.).

*[சம்பாரம் + புல்]*

**சம்பாரப்பொடி** *šambāra-p-poḍi,* பெ. (n.) கறிக் கூட்டுப் பொடி; curry powder.

*[சம்பாரம் + பொடி]*

**சம்பாரம்[1]** *šambāram,* பெ. (n.) 1. கூட்டுப்பொருள்கள்; curry-stuffs. "சம்பாரங்கனக்க விட்ட நாய்க்கறியும்" (தனிப்பா. ii, 19. 41). 2. நீர்மோர்; spiced and diluted butter milk, used as a drink.

*[அம்பர் → அம்பரம் = மஞ்சள், மஞ்சள் நிறமுள்ளது. அம்பரம் → சம்பரம் = சம்பாரம்]*

**சம்பாரம்[2]** *šambāram,* பெ. (n.) 1. மாட்டு வண்டியில் பொருட்களைத் தாங்கும் பகுதி (முகவை.); the axle portion of an bullock cart. 2. கைமரந்தாங்கி; beam supporting the rafters (கட்டட.).

*[சமம் + பாரம் → சமபாரம் → சம்பாரம்]*

**சம்பாரவல்லி** *šambāra-valli,* பெ. (n.) *1.* ஒருவகைக் கொடி முந்திரி; Indian grape vine - Vitis indica. *2.* காட்டுக்கொடிமுந்திரி; Indian wild grape vine - Vitis rugosa alias Vitis latifolia *(சா.அக.).*

*[சம்பாரம் + வல்லி]*

**சம்பாரி[1]-த்தல்** *šambāri-,* 4 செ.குன்றாவி. (v.t.) பொருளீட்டுதல்; to earn.

*[சம்பா + அரி - சம்பாரி. சம்பா = நெல். அரித்தல் = அறுத்தல், நெல் அறுவடை, பின்னர் பொருளீட்டுதலுக்கு ஆயிற்று]*

**சம்பாரி[2]** *šambāri,* பெ. (n.) *1.* சம்பன் என்ற அசுரனைக் கொன்றவனாகிய, இந்திரன்; Indra, as the vanquisher of an Asura named Jambha. *2.* நெருப்புக்கடவுள் *(யாழ்.அக.);* Agni, the fire god.

*[சம்பன் → சம்பாரி]*

**சம்பால்** *šam-pāl,* பெ. (n.) பச்சடி வகை *(வின்.);* a kind of savoury dish or preparation.

தெ. சம்பாரு

*[சம்பல்[2] → சம்பால்]*

**சம்பாலம்** *šambālam,* பெ. (n.) ஆட்டுக்கடா *(யாழ்.அக.);* he-goat.

*[சம்பளம்[4] → சம்பலம் → சம்பாலம்]*




**சம்பாவாலுகி** šambā-vālugi, பெ. (n.) வாலுளுவை; spindle tree - Celastrus paniculata *(சா.அக.).*

**சம்பாளி** *šambāḷi,* பெ. (n.) ஒருவகை நெல்; a variety of paddy.

ம. சம்பாளி.

*[சம்பா[1] → சம்பாளி]*

**சம்பான்** *šambāṉ,* பெ. (n.) தோணி; skiff. "குரைகடலுக்கொரு சம்பானாய் வருவடிவேலா" *(பஞ்ச. திருப்பு.).*

Chin. san-pan

*[அம் = நீர். அம் → அம்பு = நீர், நீர்நிலை, நீர்த்தொடர்பு கொண்டது. அம்பு → அம்பி → அம்பான் → சம்பான் = நீரில் செல்வது, தோணி]*

**சம்பானோட்டி** *šambāṉ-ōṭṭi,* பெ. (n.) தோணி நடத்துவோன் *(வின்.);* master of a skiff, pilot.

*[சம்பான் + ஓட்டி]*

**சம்பிகபாகம்** *šambiga-bāgam,* பெ. (n.) கொன்றை; common cassia - Cassia fistula *(சா.அக.).*

**சம்பிகோ** *šambigō,* பெ. (n.) எலுமிச்சை; lime- Citrus medica acida *(சா.அக.).*

*[சம்பு[6] → சம்பிகோ]*

**சம்பிளி** *šampiḷi,* பெ. (n.) சம்பளி *(யாழ்ப்.)* பார்க்க; see *šambaḷi.*

*[சம்பளி → சம்பிளி]*

**சம்பீரம்[1]** *šambīram,* பெ. (n.) *1.* எலுமிச்சை; lime - Citrus medica acida. *2.* கிச்சிலி; jambiri orange - Citrus aurantium nobilis (jambira) *(சா.அக.).*

**சம்பீரம்[2]** *šambīram,* பெ. (n.) நாவல்; jaumoon plum.

*[சம்பு[4] → சம்பீரம்]*

சம்பு[4] பார்க்க.

**சம்பு[1]-தல்** *šambu-,* 5 செ.கு.வி. (v.i.) கூம்புதல்; to lose zeal or enthusiasm 'மனஞ் சம்பித் திரியாமல்' *(தஞ்சை. சர. ii, 119).*

*[சும் → சம் → சம்பு. சும் = சுருங்குதல், குறுகுதல். சும் → சுண்டு = நீர்வற்றுதல், குறைதல். சும் → சும்பு = வாடிச்சுருங்குதல். சும்பு → சம்பு]*

**சம்பு[2]-தல்** *šambu-,* 5 செ.கு.வி. (v.i.) விலை குறைதல்; to fall in price.

*[சும் → சும்பு = வாடிச் சுருங்குதல், விலைக் குறைதல். சும்பு → சம்பு]*

**சம்பு**[3] *šambu,* பெ. (n.) *சம்பங்கோரை;* elephant grass. "சம்பறுத்தார் யாக்கைக்கு" *(நல்வழி, 38).* 2. நெட்டி *(அக.நி.)* sola pith.

க. சம்பு; தெ. சம்பு, சம்ம

*[சம் → சம் → சம்பு]*

**சம்பு**[4] *šambu,* பெ. (n.) *1.* நாவல் *(பிங்.);* jaumoon plum. *2. சம்புத்தீவு;* one of the annular continents. *3.* **சம்பாதி**[2] *பார்க்க;* see *sampādi.* "சம்பு வென்பாள் சம்பாபதியினள்" *(மணிமே. பதி. 8).* 4. **சம்புநதி** (சங். அக.) பார்க்க; see *šambu-nadi.*

மறுவ. சாட்டுலம்

*[யா = கருமைக்கருத்து வேர். யாமரம் = கரிய அடிப்பகுதியை உடைய மரம். யா → யாம்பு → சாம்பு → சம்பு]*

இந்தியா என்னும் நாவலம் பொழில், பழங் காலத்தில் நாவல் மரத்தால் சிறப்புற்றிருந்தமை யால், "நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குற" *(மணிமே. 22, 29)* எனப்பட்டது. 'கருங்கனி நாவல்" *(புறம். 177:1, மலை. 135).* "இருங்கனி" *(நற். 35:2)* எனக் கருமையுணர்த்தும் அடைகளுடன் வந்துள்ளமை, கருமை யடிப்படையில் நாவல் பெயர் பெற்றமை விளங்கும். 'சம்பு'வும் கருமைக்கருத்தினின்று வளர்ந்திருப்பது, அது நாவலின் ஒரு பொருட் பன்மொழியாய் விளங்குவதை, உறுதிப் படுத்துதல் காண்க.

jambu, the rose-apple; Drav. sembu, red (C.G.D.F.L. 577).

த. சம்பு → Skt. jambu

**சம்பு**[5] *šambu,* பெ. (n.) **சம்புகம்** (பிங்.) பார்க்க; see *šambugam.*

**சம்பு**[6] *šambu,* பெ. (n.) *எலுமிச்சை;* sour lime.

*[சம் → சம்பு]*

**சம்பு**[7] *šambu,* பெ. (n.) **செய்யுளும் உரை நடையும் கலந்து வரும் சிற்றிலக்கிய வகை;** a literary composition in mixed prose and verse.

*[அம் → சம் → சம்பு]*

த. சம்பு → Skt. šampā

**சம்புகம்** *šambugam,* பெ. (n.) *நரி;* fox, jackal. "பல சம்புகங்க டுதிசொல்ல" *(பாரத. வேத். 53).*

*[சம்பு → சம்புகம்]*

**சம்புச்சயனம்** *šambu-c-cayanam,* பெ. (n.) ஆல் *(மூ.அ.),* **திருமாலின் படுக்கை;** banyan as the couch of Tirumāl *(செ.அக.).*

*[சம்பு + சயனம்]*

**சம்புசம்பல்** *šambu-sambal,* பெ. (n.) சதகுப்பை; dili-seed - Anethum graveolens *(சா.அக.).*

*[சம்பு → சம்பல்]*

**சம்புடம்** *sambuḍam,* பெ. (n.) *1.* **சிறுசெப்பு;** small round metal casket. *2.* **புத்தகப்பகுதி;** volume, part of a book. *3.* **நாட்டியத்தில் இருக்கை ஒன்பதனுள் ஒன்று** *(சிலப். 8: 25);* a posture in sitting one of nine irukkai.

*[செம்படம் → செம்புடம் → சம்புடம்]*

**சம்புத்தீவு** *šambu-t-tīvu,* பெ. (n.) நாவலந்தீவு *(மணிமே. 17: 62.);* one of the annular continents.

*[சம்பு + தீவு. தீர்வு → தீவு]*

**சம்புநதி** *šambu-nadi,* பெ. (n.) மேருமலைக்கு வடக்கில் ஓடும் நதி; a river believed to flow north of mt. Mēru.

*[சம்பு + நதி. சம்புச் (நாவல்)சாறு ஆறாக ஓடுகிறது என்னும் கருத்தடிப்படையில் பெற்ற பெயர்]*

**சம்புநாவல்** *šambu-nāval,* பெ. (n.) காட்டில் வளரும் பெருநாவல் மரம்; large - fruited jaumoon or East Indian rose-apple - Eugenia jambos.

மறுவ. பன்னீர் பழமரம்.

*[சம்பு + நாவல்]*

இதன் பழம் சிறிய அரத்திப்பழம் (ஆப்பிள்) போலிருக்கும்; சுவை குறைந்தது. பன்னீர் மணமுடையது. இதிலிருந்து பன்னீர் எடுக்கலாம். இம் மரத்தின் பட்டை, கொட்டை முதலியவை மருத்துவக் குணமுடையன *(சா.அக.).*

**சம்புப்பூசி** *šambu-p-pūši,* பெ. (n.) வரிக் கடுக்காய்; yellow-striped gall-nut *(சா.அக.).*

**சம்புப்பெட்டி** *šambu-p-peṭṭi,* பெ. (n.) மீனைச் சேர்த்து வைக்கும், சம்பங்கோரையால் முடையப்பட்ட கூடை *(மீனவ.);* a kind of box made of rushes.

[சம்பு + பெட்டி. பிள் → பிளா → பிழா = வாயகன்ற ஓலைக்கொட்டான். பிள் → (பெள்) → பெட்டி]

**சம்புப்பொற்சரம்** *šambu-p-porcaram,* பெ. (n.) சரக்கொன்றை; common cassia - Cassia fistula (சா. அக.).

[சம்பு → சம்பை = செழித்து வளர்வது. சம்பு + பொற்சரம். செழிப்பான பூக்களைக் கொண்டது. ஒ.நோ: சர் = நேராக விரைந்து செல்லும் குறிப்பொலி. சர் → சரம் + கொன்றை - சரக்கொன்றை = நேர் (நீண்டு) மலர்த்தொடையாகப் பூக்கும் கொன்றை]

**சம்புமலாக்கா** *šambu-malākkā,* பெ. (n.) நாவல் வகை; Malay apple - Eugenia malaccēnsis.

[சம்பு + மலாக்கா]

**சம்புராகம்** *šambu-rāgam,* பெ. (n.) கொன்றை; cassia - Cassia fistula (சா.அக.).

[சம்பு → சம்புராகம்]

**சம்புரோதம்** *šambu-rōdam,* பெ. (n.) முள்வெள்ளரி; foreign cucumber - cucumis sativus (சா.அக.).

**சம்புவராயர்** *šambuvarāyar,* பெ. (n.) வன்னியர், கள்ளர்களின் பட்டப்பெயர்; a title among the vanniya and kaḷḷa caste.

**சம்புவன்னி** *šambu-vanni,* பெ. (n.) மரபுவழி மரம்; Arjuna's penance tree - Prosopis spicigera (சா.அக.).

**சம்புவிரதி** *šambu-viradi,* பெ. (n.) நாவல் நட்டுப் பிற மதத்தினரைச் சொற்போருக் கழைத்து வெல்ல உறுதி கொண்டவன்-ள்; religious debator who has taken the vow of challenging heretics to a disputation, by planting a branch of nāval tree. "வென்றாள் மற்றிவள் சம்புவிரதியாய்த் திரிந்தெங்கும்" (நீலகேசி, 286).

[சம்பு + விரதி]

**சம்புளி** *šambuḷi,* பெ. (n.) சம்பளி (யாழ்ப்.) பார்க்க; see *šambaḷi.*

[சம்பளி → சம்புளி]

**சம்பூ** *šambū,* பெ. (n.) நாவற்பழம்; jaumoon plum (சா.அக.).

[சம்பு → சம்பூ]

சம்பு[4] பார்க்க

**சம்பூகம்** *šambūgam,* பெ. (n.) 1. நாவல்; jaumoon plum. 2. நரி; jackal.

[சம்பு → சம்பூ → சம்பூகம்]

**சம்பூகம்** *šambūgam,* பெ. (n.) கிளிஞ்சல் வகை; a bivalue shell.

[சங்கு → சம்பு → சம்பூகம்]

**சம்பூதம்** *šambūdam,* பெ. (n.) பிறப்பு; birth.

**சம்பூலமாலிகை** *šambūla-māligai,* பெ. (n.) புது மணவாட்டிக்கும், மணவாளனுக்கும், பெண்ணின் தோழிகள் எழுதும் புதுமையான ஒப்பனை எழுத்து (யாழ்.அக.); a kind of fancy letter written by bride's friends to the bridegroom and bride.

**சம்பை[1]** *šambai,* பெ. (n.) சண்பை[1] பார்க்க; see *šaṇbai[1].*

[சண்பை → சம்பை]

**சம்பை[2]** *šambai,* பெ. (n.) சம்பங்கோரை; elephant grass.

[சம்பு → சம்பை]

**சம்பை[3]** *šambai,* பெ. (n.) 1. சம்பைச்சரக்கு பார்க்க; see *šambai-c- carakku.* 2. மீன் (நாஞ்.); fish.

[சாம்பு → சம்பை]

**சம்பை[4]** *šambai,* பெ. (n.) மின்னல் (பிங்); lightning.

மறுவ. சவலை, சபலை, சஞ்சாலை

**சம்பை[5]** *šambai,* பெ. (n.) சம்பைத்தாளம் பார்க்க; see *šambai-t-tāḷam.* "சம்பைக்கு லகுவநு துரிதந் துரிதமாம்" (பரத. தாள. 21).

[சம்பைதாளம் → சம்பை (மரூஉ.)]

**சம்பை[6]** *šambai,* பெ. (n.) செழிப்பு; luxuriant growth.

[சம்பு → சம்பை]

**சம்பை**[7] *šambai,* பெ. (n.) கருவாடு (மீனவ.); salted and dried fish.

*[சம் → சும்பு → சும்புதல் = நீர் வற்றுதல். சம் → சம்பை → சம்பை]*

**சம்பைக்குத்தகை** *šambai-k-kuttagai,* பெ. (n.) மீன் குத்தகை (வின்.); fish lease.

*[சம்பை + குத்தகை]*

**சம்பைக்கொங்காணி** *šambai-k-kongāṇi,* பெ. (n.) சம்பங்கோரையாற் பின்னிய மழை தாங்கும் கூடு (வின்.); rain-proof covering made of elephant grass.

மறுவ. சம்பங்கூடு

*[சம்பு[1] → சம்பை + கொங்கணி]*

**சம்பைச்சரக்கு** *šambai-c-carakku,* பெ. (n.) 1. மட்டச்சரக்கு (வின்.); inferior or rejected goods. 2. எளிதில் அழியக்கூடிய பண்டங்கள் (இ.வ.); perishable articles.

*[சும்பு → சம்பு. சம்புதல் = விலைகுறைதல். சம்பு → சம்பல் = விலையிறக்கம், மலிவு. சம்பு → சம்பை + சரக்கு]*

**சம்பைத்தாளம்** *šambai-t-tāḷam,* பெ. (n.) எழுவகைத் தாளத்தொன்று; a variety of time-measure, one of seven-tāḷam. (செ.அக.).

*[சம்பை + தாளம்]*

**சம்மட்டி**[1] *šammaṭṭi,* பெ. (n.) 1. குதிரையோட்டுங் கருவி (பிங்.); horsewhip. 2. சுத்தியல்வகை (பிங்.); smith's large hammer, sled.

ம., பட. சம்மட்டி; க. சம்மட்டிகெ, சம்மடிகெ; தெ. சம்மெட; து. சம்மடிக; துட. சொமொட்ய்; E. hammer; AS. hamor; G. hammer; Ical. hamarr (a tool for beatings; E. smith (one who smites); Skt. sam - mardani

*[சமட்டி → சம்மட்டி. சமட்டுவது சமட்டி[*



சம்மட்டி

**சம்மட்டி**[2] *šammaṭṭi,* பெ. (n.) ஒருவகைப் பூடு; a plant (செ.அக.).

**சம்மட்டிக்கூடம்** *šammaṭṭi-k-kūḍam,* பெ. (n.) மாழைகளை அடித்துத் தகடாக்கும் சுத்தியல் வகை (கொ.வ.); hammer for beating metal into plates or thin leaves.

ம. சம்மட்டிக்கூடம்

*[சம்மட்டி + கூடம்]*

**சம்மட்டிமக்கள்** *šammaṭṭi-makkaḷ,* பெ. (n.) உறவினரல்லாதாரோடு மணம் புரிந்து கொள்ளும் கள்ளர் இனம் (சம்மட்டியைக் கொண்டவர்) (E.T.vi. 291); lit., hammer-men. an exogamous sect of kaḷḷar caste.

*[சம்மட்டி + மக்கள்]*

**சம்மணங்கால்** *šammaṇangāl,* பெ. (n.) சம்மணம் பார்க்க; see *šammaṇam.*

து. சக்கப்ப, சக்ரமட்டெ

*[சம்மணம் + கால்]*

**சம்மணங்கால்போடு-தல்** *šammaṇangāl-pōḍu-,* 20 செகுவி. (v.i.) இரு காலையும் மடக்கி நிலத்தில் உட்காருதல்; to squat down with folded legs.

து. சக்கப்ப குள்ளுனி, சக்க மக்க குள்ளுனி; பட. சக்கரமள்ளு ஆக்கி குளி

*[சம்மணம் + கால் + போடு-,]*



சம்மணங்கால் போடுதல்

**சம்மணம்** *šammaṇam,* பெ. (n.) சப்பணம் (இ.வ.); a cross-legged sitting posture. சம்மணம் போட்டுக்கொண்டு சாப்பிடு.

ம. சம்மணம்; தெ. சம்மணம்; Pkt. sammaṇa

*[சப்பளி → சப்பளம் → சப்பணம் → சம்மணம் (மு.தா.120)]*

**சம்மாட்டி** *šammāṭṭi,* பெ. (n.) 1. கட்டுமரச் சொந்தக்காரன்; owner of catamaran. 2. வள்ளத்தின் உரிமையாளன்; owner of boat. 3. மீன்பிடிகலத்தின் சொந்தக்காரன் (மீனவ.); owner of fishing vessel.

**சம்மாடி** *šammāḍi,* பெ. (n.) வள்ளத்தின் (படகின்) தலைவர்; leader of a boat (மீனவ.).

[சம்மாட்டி → சம்மாடி]

**சம்மாணம்** *šammāṇam,* பெ. (n.) சம்மணம்; squatting. 'சம்மாணங் கொட்டுமாப் போலே' (தத்துவப்பிர. 108, உரை. பக்.101).

[சம்மணம் → சம்மாணம்]

**சம்மாதம்** *šammādam,* பெ. (n.) 1. ஒரு பழைய வரி (I.M. P. Cg. 835); an ancient tax. 2. ஆய ஒப்பந்தம் முதலியவற்றில் அரசினரோடு வணிகர் செய்துகொள்ளும் ஒப்பந்தம் (வின்.); a contract or commutation made by a merchant with the officers of excise.

**சம்மான்** *šammāṉ,* பெ. (n.) தோணி (இ.வ.); skiff.

[கம் → கம்மம் → கம்மான் → சம்மான்– தோண்டிச் செய்யப்பட்டது. கம் = செய்]

**சம்மானம்** *šammāṉam,* பெ. (n.) சம்மான் (இ.வ.) பார்க்க; see *šammāṉ.*

[சம்மான் → சம்மானம்]

**சம்மியம்** *šammiyam,* பெ. (n.) கூத்தின் வகை (யாழ்.அக.); a kind of dance.

**சம்மியாகம்** *šammiyāgam* பெ. (n.) கொன்றை (மலை.); Indian laburnum.

**சம்மெனல்** *šam-m-eṉal,* பெ. (n.) இறுமாப்பு (கம்பீர)க் குறிப்பு (கொ.வ.); onom. expr. signifying majestic bearing. அவன் பல்லக்கேறிச் சம் மென்று புறப்பட்டுப் போனான் (செ.அக.).

க. சம்மனெ; பட. சம்மன

[சம் + எனல்]

**சமஅகவை** *šama-agavai,* பெ. (n.) ஒத்த பருவம்; equal age.

து. சமகட்டுநெல

[சமம் + அகவை]

**சமக்கட்டுநிலம்** *šama-k-kaṭṭu-nilam,* பெ. (n.) சமநிலம்[1] (இ.வ.) பார்க்க; see *šama-nilam*[1].

து. சமகட்டுநெல

[சமம் + கட்டு + நிலம்]

**சமக்கிராமம்** *šama-k-kirāmam,* பெ. (n.) 1. ஒத்த வருமானமுள்ள ஊர் (வின்.); a village having equal revenues as another. 2. அடுத்த ஊர்; neighbouring village (செ.அக.).

[சமம் + கிரமம்]

**சமக்கோடு** *šama-k-kōḍu,* பெ. (n.) சமமானது என்பதைக் காட்டும் சிறு இணைகோடுகள் (=); the symbol (=) which shows equal.

[சமம் + கோடு]

**சமகம்** *šamagam,* பெ. (n.) சிவனைப் போற்றிப் பாடும் மந்திரம்; a vēdic hymn in praise of Šiva 'நமகார் சமகம்' (சேதுபு. இராமநா.47).

[சமம் → சமகம்]

**சமகரி-த்தல்** *šamagari-,* 4 செ.குன்றாவி. (v.t.) அளந்து கட்டுதல்; to survey. 'ராஜராஜதேவர் பொது ஊர் சமகரிக்கிற காலத்து' (S.I.I. vi, 181).

[சம(ம்) + கரி–,]

**சமகன்** *šamagaṉ,* பெ. (n.) சந்துசெய்விப்போன்; middle men, one who incharge in reproachment.

[சமம் → சமகன்]

**சமகன்னி** *šama-kaṉṉi,* பெ. (n.) பக்குவமான பெண் (யாழ்ப்.அக.); a girl who has attained puberty.

[சமை + கன்னி – சமைகன்னி → சமகன்னி]

**சமகாலம்** *šama-kālam,* பெ. (n.) 1. தான் வாழும் காலம், ஒருவர் வாழ்ந்த, தோன்றிய காலம்; contemporary period. 'சமகால இலக்கியங்களைப் பாடமாக வைக்க வேண்டும்' (உ.வ.). 2. ஒரே காலம்; same period or time.

க. சமகால

[சமம் + காலம்]

**சமகோணம்** *šama-kōṇam,* பெ. (n.) ஒத்த கோணங்களையுடைய வடிவம் (வின்.); equiangular figure.

[சமம் + கோணம். கோண் = வளைவு, வளைந்த முனை. கோண் = கோணம்]

**சமங்காலிகம்** *šamangāligam,* பெ. (n.) மஞ்சிட்டி; a plant, madder of Bengal - Bixa orallena *(சா.அக).*

**சமங்கி** *šamangi,* பெ. (n.) *சமங்கை[2] பார்க்க;* see *šamangai.*

**சமங்கை[1]** *šamangai,* பெ. (n.) தொட்டாற்சுருங்கி; a sensitive plant.

**சமங்கை[2]** *šamangai,* பெ. (n.) ஆடுதின்னாப் பாலை; Indian worm killer.

*[சமங்கை[1] → சமங்கை]*

த. சமங்கை → Skt. samanga



சமங்கை

**சமச்சக்கரம்** *šama-c-cakkaram,* பெ. (n.) நில நடுக்கோடு *(வின்.);* equator, as being equidistant from the poles.

*[சமம் + சக்கரம்]*

**சமச்சதுரம்** *šama-c-caduram,* பெ. (n.) ஒத்த அளவுள்ள நாற்கோணம்; square.

ம. சமசதுரம்; தெ. சமசதுரச்ரமு

*[சமம் + சதுரம். சது → சதுர் → சதுரம்]*

**சமச்சாதி** *šama-c-cāti,* பெ. (n.) ஒத்த இனத்தார் *(இ.வ.);* homogeneous race, identical caste.

ம., க. சமசாதி

*[சமம் + சாதி]*

சமசாதி → Skt. sama-jāti

**சமசந்தத்தாண்டகம்** *šamašanda-t-tāṇḍagam,* பெ. (n.) (செய்யுள்) சந்தவடியுந் தாண்டக வடியும் ஒத்து வரும் பாவினம் *(யாப். வி. 94, பக். 456);* variety of verse in which šandam lines and tāṇḍagam lines are balanced.

*[சமம் + சந்தம் + தாண்டகம்]*

**சமசந்தி** *šama-sandi,* பெ. (n.) இயைபு *(வின்.);* concord, correspondence.

*[சமம் + சந்தி. அந்தி → சந்தி]*

**சமசந்திரன்** *šama-sandiran,* பெ. (n.) கோள் மறைப்பின் (கிரகணத்தின்) நடுக்காலத்தைக் காட்டும் நிரைகோடு (சாதிரஸ்புடம்) *(வின்.);* moon's true langitude at middle of an eclipse.

*[சமம் + சந்திரன்]*

**சமசித்தத்துவம்** *šama-šittattuvam,* பெ. (n.) எல்லாவற்றையுஞ் சமமாகக் கருதும் மனநிலை *(மணிமே. 30:253, உரை);* mental attitude of viewing all things alike, impartiality.

*[சமம் + சித்தத்துவம்]*

**சமசியை** *šamašiyai,* பெ. (n.) சமசை பார்க்க; see *šamašai.*

*[சமசை → சமசியை]*

**சமசுரம்** *šama-šuram,* பெ. (n.) (இசை) நடுவ இசைக் குறியீடு (மத்திமஸ்வரம்); middle note. "இளியென்னும் நரம்பு சமசுரமாக" *(சிலப். 17, கூத்துள். 7, உரை).*

*[சமம் + சுரம்]*

**சமசை** *šamašai,* பெ. (n.) பாடிமுடிக்கும்படி ஒருவனுக்குக் கொடுக்குங் பாவுறுப்பு; word phrase or idea proposed by one person to be incorporated in a stanza by another, as in a trial of poetic skill. "நீரோ சமசை நிலையிட்டீர்" *(தனிப்பா. i, 18,30).*

*[சமம் → சமசை. இனி, சய்யல் → சச்சம் → சமசம் → சமசை என்றுமாம்]*

**சமசோடி** *šama-šōḍi,* பெ. (n.) சமவிணை பார்க்க; see *šamaviṇai (செ.அக.).*

*[சமம் + சோடி. சுவள் → சுவடி → சோடி = இணை]*

**சமஞ்சகம்** *šamañjagam,* பெ. (n.) பொருத்தம்; propriety, fitness *(செ.அக.).*

*[சமம் → சமஞ்சகம்]*

**சமஞ்செய்-தல்** *šamañjey-,* 1 செ.குன்றாவி. (v.t.) *1.* மேடுபள்ளம் அற்றதாக்குதல்; to make even. *2.* தட்டையாக்குதல்: to make flat. *3.* சரியளவின

தாக்குதல்; to make equal to *4.* ஒழுங்காக்குதல்: to put in order. *5.* நல்லதாக்குதல் அல்லது உரியதாக்குதல்; to make nice or proper.

க. சமமாடு, சமகொளிசு; தெ. சமமுசேயு; பட. சமமாடு

*[சமம் + செய்-,]*

**சமட்டி**[1] *šamaṭṭi,* பெ. (n.) எல்லாம்; all.

*[சவட்டு → சமட்டு → சமட்டி]*

**சமட்டி**[2] *šamaṭṭi,* பெ. (n.) தொகுதி; aggregate, total. 'வீரியமிகு சமட்டி' *(கைவல். தத்துவ. 43).*

*[சவட்டு → சமட்டு → சமட்டி (ஒ.மொ.377)]*

**சமட்டு-தல்** *šamaṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) *1.* காலால் துவைத்தல் (இ.வ.); to tread, trample. *2.* அடித்தல்; to strike.

ம. சவிட்டு; E. smite (to strike); AS. smiten; Du. smijten

*[சவட்டு → சமட்டு → சமட்டுதல் (ஒ.மொ.377)]*

**சமட்டுச்சக்கரம்** *šamaṭṭu-c-cakkaram,* பெ. (n.) மலையாளத்தில் வழங்கும் நீரிறைக்கும் பொறிவகை (இ.வ.); a mechanism for baling out water, turned by treading, used in the west coast (செ.அக.).

*[சமட்டு + சக்கரம்]*

**சமட்டுப்படி** *šamaṭṭu-p-paḍi,* பெ. (n.) வண்டியில் ஏறியிறங்க அமைக்கும் படி (நாஞ்.); footboard in a carriage.

*[சமட்டு + படி]*

**சமட்டுவண்டி** *šamaṭṭu-vaṇḍi,* பெ. (n.) *1.* இரு கால்களால் மாறிமாறி அழுத்தி இயக்கும் வகையில் அமைந்த இரு சக்கரங்களைக் கொண்ட வண்டி; bicycle. *2.* முச் சக்கரங்களைக் கொண்ட மிதியிழுவை; cycle rickshaw.

மறுவ. மிதிவண்டி

ம. சவிட்டுவண்டி

*[சமட்டு + வண்டி]*

கால்களால் துவைத்தல் என்னுமடிப்படையில் சமட்டுதல் மிதிவண்டிக்கு ஆயிற்று.



சமட்டுவண்டி

**சமண்** *šamaṇ,* பெ. (n.) *1.* அருகமதம்; jainism. "தருக்கினாற் சமண் செய்து" *(திவ். பெரியதி. 2, 1,7).* *2.* அம்மணம்; nudity. "சமணே திரிவார்கட்கு" *(தேவா. 552, 10).*

Pkt. samaṇa

*[அமண் → சமண்]*

**சமண்டலை** *šamaṇḍalai,* பெ. (n.) சவண்டிலை (யாழ்ப்.) பார்க்க; Trincomalee red wood.

**சமண்மை** *šamaṇmai,* பெ. (n.) குறை (யாழ்.அக.); defect.

*[சமழ்மை → சமன்மை → சமண்மை]*

**சமணம்** *šamaṇam,* பெ. (n.) சமண் பார்க்க; see *šamaṇ.*

*[அமண் → சமண் → சமணம்]*

**சமணர்** *šamaṇar,* பெ. (n.) அருகமதத்தினர் (சைனர்); Jains. "சமணருஞ் சாக்கியரும்" *(திவ். திருவாய். 4, 10, 5).*

*[அமணர் → சமணர்]*

**சமணர்திடல்** *šamaṇar-tiḍal,* பெ. (n.) புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Pudukkōṭṭai district.

*[சமணர் + திடல்]*

சமணர்கள் அதிகம் வாழ்ந்த ஊர். இப் பகுதியில் காணப்படும் கல்வெட்டில் திருவெண்ணாயில் ஐஞ்நூற்றுவப் பெரும்பள்ளி திருத்தல மாடம் என்று குறிக்கப்பட்டுள்ளது. அதனால் அப்பகுதியில் அக்காலத்தில் ஐந்நூற்றுவப் பெரும்பள்ளி என்னும் சமணக் கோயிலும் மடமும் இருந்திருத்தல் வேண்டும். அதன் காரணமாக அப்பகுதியில் தோன்றிய ஊர் சமணர் திடல் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும் என்று மயிலை சீனி வேங்கடசாமி கருதுவர் *(த.ஊ.பெ.).*

**சமணி** *šamaṇi*, பெ. (n.) இலவு மரம் (வின்.); silk-cotton tree.

**சமத்தன்** *šamattan*, பெ. (n.) வல்லவன்; clever, skillful person.

*[சமர் → சமர்த்து → சமர்த்தன் = திறமையானவன். சமர்த்தன் → சமத்தன்]*

**சமத்தாதிரி** *šamattādiri*, பெ. (n.) கீழ்க்காய் நெல்லி; feather-foil - Phyllauthus polyphyllus alias Pniruri (சா.அக.).

**சமத்தார்** *šamattār*, பெ. (n.) நாட்டின் உட்பகுதிக்குரிய அதிகாரி (C.G.); petty revenue official in charge of a sub-division.

*[சமம் → சமத்தார்]*

**சமத்தி**[1] *šamatti*, பெ. (n.) முட்பலாசு; common coral tree - Erythrina indica (சா.அக.).

**சமத்தி**[2] *šamatti*, பெ. (n.) கெட்டிக்காரி (கொ.வ.); clever woman (செ.அக.).

*[சமத்தன் (ஆ.பா.) → சமத்தி (பெ. பா.)]*

**சமத்திலை** *šamattilai*, பெ. (n.) பெருங் கரணை அல்லது சேனைக் கிழங்கு; elephant yam - arum campanulatum alias Otaheita salap (சா.அக.).

**சமத்து**[1] *šamattu*, பெ. (n.) 1. திறமை (சிலப். 5: 74,அரும்.); ability skill, cleverness. 2. திறமையுள்ளவன்-ள் (Brah.); clever person.

*[சமர்த்து → சமத்து]*

**சமத்து**[2] *šamattu*, பெ. (n.) நாட்டின் உட்பிரிவு (C.G.); a division of a district or taluk.

**சமத்து**[3] *šamattu*, பெ. (n.) தேங்காய் மட்டை யினாற் செய்யப்பட்ட தூரிகை (இ.வ.); a small brush made of coconut husk.

**சமத்துக்காரம்** *šamattu-k-kāram*, பெ. (n.) 1. பேச்சுத்திறமை; cleverness, skill in speaking. 2. செய்யுணயம்; poetic charm. 3. தோற்றம்; aspect, manifestation.

து. சமத்கார

*[சமத்து + காரம்]*

**சமத்துக்காரன்** *šamattu-k-kāran*, பெ. (n.) திறமையாளன் (வின்.); a clever man.

*[சமத்து + காரன்]*

**சமத்துத்தச்சம்** *šamattu-t-taccam*, பெ. (n.) இலைக்கள்ளி; leaf spurge-Euphorbia neirifolia (சா.அக.).

**சமத்துவம்** *šamattuvam*, பெ. (n.) உலக மக்கள் அனைவரும் சமம் என்றும் அவர்களுக்குச் சம வாய்ப்புகள் கிடைக்க வேண்டும் என்றும் கூறும் கொள்கை; equality; egalitarianism. 'சமத்துவம் பேசுவது எளிது, கடைப்பிடிப்பது கடினம்'.

தெ. சமத்வமு

*[சமம் + அத்துவம் - சமத்துவம்]*

Skt. atva → த. அத்துவம்

**சமதரிசனம்** *šama-darisanam*, பெ. (n.) சமப் பார்வை பார்க்க; see *šama-p-pārvai* (செ.அக.).

*[சமம் + தரிசனம்]*

Skt. daršana → த. தரிசனம்

**சமதலம்** *šamatalam*, பெ. (n.) சமதளம் பார்க்க (கொ.வ.); see *šama-taḷam*.

*[சமதளம் → சமதலம்]*

**சமதலை** *šama-talai*, பெ. (n.) புடைவையின் உள்தலைப்பு; inner end of a woman's cloth.

*[சமம் + தலை]*

**சமதலைப்பு** *šama-talaippu*, பெ. (n.) இரு தலைப்புகளிலும் ஒத்த கரையுள்ள புடைவை (இ.வ.); saree with ends of same pattern.

*[சமம் + தலைப்பு]*

**சமதளம்** *šama-taḷam*, பெ. (n.) மேடுபள்ளம் இல்லாமல் ஒரே சீராக இருக்கும் நிலம்; level; evenness. 'சமதளமாகப் பார்த்து வீட்டைக் கட்டு'.

*[சமம் + தளம்]*

**சமதனம்** *šamadanam*, பெ. (n.) 1. மருக்காரை; common emetic nut; poison fruit - Randia dumetorum - alias R. floribunda. 2. முள்ளம்பன்றி; porcupine (சா.அக.).

**சமதாடு** *šamatāḍu,* பெ. (n.) *1.* உடைவாள் (இவ.); sword, cutlass, a sword worn as an insignia of royalty. *2.* பட்டாக்கத்தி; a dagger.

ம. சமதாடு; க. சமதாடெ; தெ. சமுதாடு

*[சமர் → சமர்த்து + ஆடு - சமர்த்தாடு → சமதாடு]*



சமதாடு

**சமதாடுக்கப்பல்** *šamadāḍu-k-kappal,* பெ. (n.) நாட்டுப் புகையிலை வகை (இ.வ.); an indigenous variety of tobacco.

**சமதாளம்** *šamatāḷam,* பெ. (n.) ஒன்பான் தாளத்தொன்று (திவா.); a variety of time measure, one of nava tāḷam.

*[சமம் + தாளம்]*

**சமதி** *šamadi,* பெ. (n.) ஒப்பு; conformity.

க. சமதெ.

*[சமம் → சமதி]*

**சமதை** *šamadai,* பெ. (n.) *1.* ஒப்பு; equality, similarity. *2.* வன்மை, மென்மை, இடைமை இம்மூன்றுஞ் சமமாகக் கலந்துவரத் தொடுக்கும் செய்யுட்குணம் (தண்டி. 17.); harmonious blending of hard, soft and medial letters in a verse, a metrical a poetic composition. *3.* நடுநிலைமை; fairness, impartiality.

க. சமதெ.

*[சமம் → சமதை]*

**சமந்தகூடம்** *šamanda-kūḍam,* பெ. (n.) இலங்கைத் தீவிலுள்ள ஒருமலை; Adam's Peak in Ceylon.

**சமந்தம்** *šamandam,* பெ. (n.) சமந்தகூடம் பார்க்க; see *šamanda-kūḍam.* "ஓங்குயர் சமந்தத் துச்சி மீமிசை" (மணிமே. 11: 22).

**சமந்தன்** *šamandaṉ,* பெ. (n.) சாமந்தன்[1] பார்க்க; see *šāmandaṉ*[1].

*[அம் → அமை. அமைதல் = பொருந்துதல். அமை → அமைச்சன். த. அமைச்சன் → Skt. amātya அமை → சமை → சமைந்தன் → சமந்தன்]*

**சமந்தி** *šamandi,* பெ. (n.) ஊதையடக்கி (வாத மடக்கி); wind-killer, Cleodendron phlomoides (சா.அக.).

*[சமம் → சமந்தி = சமமாக்குவது, ஊதையை அடக்கிச் சமப்படுத்துவது]*

**சமநிலம்**[1] *šama-nilam,* பெ. (n.) மேடு பள்ளமில்லாமல் சமமாக இருக்கும் நிலம்; plain country, level ground.

ம. சமநிலம்

*[சமம்[2] + நிலம்]*

**சமநிலம்**[2] *šama-nilam,* பெ. (n.) போர்க்களம் (வின்.); battle-field.

*[சமர்[3] + நிலம் → சமர்நிலம் → சமநிலம். அமர் → சமர் = போர்]*

**சமநிலை**[1] *šama-nilai,* பெ. (n.) *1.* நடுவு நிலைமை; fairness, impartiality. *2.* சரிநிகர்வு; equality. *3.* ஒப்பு; sameness. *4.* சமதை பார்க்க; see *šamadai. 5.* நிறையொத்த நிலை; equilibrium.

*[சமம்[1] + நிலை]*

**சமநிலை**[2] *šama-nilai,* பெ. (n.) *1.* அமைதி நிலை (சாந்த நிலை); sentiment of tranquillity. 'மற்றிவ்வெட்டனோடுஞ் சமநிலைகூட்டி' (தொல். பொருள். 251, உரை). *2.* உள்ளச் சமநிலை; equanimity.

*[சமம்[1] + நிலை]*

**சமநிலை**[3] *šama-nilai,* பெ. (n.) *1.* ஏற்றத்தாழ்வு, வேறுபாடு ஆகியவை இல்லாத ஒப்பான நிலை; equal footing, equality. தலைவராயிருந்தாலும் தொண்டராயிருந்தாலும் சமநிலையில் வைத்துத் தான் பேசுவார். *2.* விளையாட்டுகளில் வெற்றி தோல்வியைக் கணிக்க முடியாத நிலை; draw, tie. 'நேற்றைய மட்டைப்பந்து (கிரிக்கெட்) ஆட்டம் சமநிலையில் முடிந்தது'.

ம. சமநில

*[சமம்[2] + நிலை]*

**சமநிலை**[4] *šama-nilai,* பெ. (n.) ஐவகைக் காலடிகளுள் (பாதங்களுள்) ஒன்று (சிலப். பக்.81); a pose, one of 'aivagai-p-pādam'.

*[சமம்² + நிலை]*

**சமநிலையாளர்** *šama-nilai-y-āḷar,* பெ. (n.) நிலை, மதிப்பு, தன்மை, அகவை போன்ற வற்றில் ஒத்த தன்மையுள்ளவர்; equal.

*[சமநிலை + ஆளர்]*

**சமநிலைவஞ்சி** *šama-nilai-vañji,* பெ. (n.) இருசீரடியால் வரும் வஞ்சிப்பாட்டு (தொல். பொருள். 354, உரை); a vanji stanza having two feat in each line.

*[சமம்² + நிலை]*

(எ-டு.) அன்னைபோ லினியாய் !
வன்னிசேர் சடையாய் !
இன்னல்சூழ் வினைதீர்!
உன்னுவா ரமுதே! (தண்டி. பக்.252)

**சமநிலைவெண்பா** *šama-nilai-veṇbā,* பெ. (n.) சவலைவெண்பா (சங். அக.) பார்க்க; see *šavalai-veṇbā.*

*[சமநிலை + வெண்பா]*

**சமநிறை** *šama-niṟai,* பெ. (n.) சமன் தூக்கிய நிலை (புதுவை); equilibrium.

*[சமம் + நிறை]*

**சமநோக்கு** *šama-nōkku,* பெ. (n.) சமப்பார்வை பார்க்க; see *šama-p-pārvai.*

*[சமம் + நோக்கு]*

**சமப்படுத்து-தல்** šama-p-paḍuttu-, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மேடுபள்ளத்தை நீக்கி மட்டமாக்கு; to make level. தோட்டத்தைச் சமப்படுத்த வேண்டும். 2. ஒழுங்குபடுத்து; to put in order. மழைக்குமுன் ஆற்றுக்காலைச் சமப்படுத்த வேண்டும். 3. தக்கதாக்கு, நல்லதாக்கு; to make proper or nice.

க. சமகொளிசு; பட. சமமாடு

*[சமம் + படுத்து-,]*

சமன்படுத்து-தல் பார்க்க

**சமப்பார்வை** *šama-p-pārvai,* பெ. (n.) எல்லாவற்றையும் ஒரேமாதிரியாக நோக்குகை; impartial view; a impartial attitude, considering all things alike.

தெ. சமத்ருஷ்டி

*[சமம் + பார்வை]*

**சமப்பார்வையன்** *šama-p-pārvaiyaṉ,* பெ. (n.) பொதுநோக்குடையவன்; one who views impartially.

*[சமம் + பார்வையன்]*

**சமப்பால்** *šama-p-pāl,* பெ. (n.) வன்பாலும், மென்பாலுமின்றி இடைத்தரமாயுள்ள நிலம், முல்லை நெய்தனிலங்கள் (திவா.); sylvan or maritime tract, as mid-way between vaṉpāl and meṉpāl.

*[சமம்² + பால்]*

**சமபந்தி** *šama-pandi,* பெ. (n.) 1. விருந்தில் ஒரே வரிசை; same row at a feast. "சமபந்தியினோர்க்கு" (சேதுபு. தனுக்.10). 2. ஒரே பந்தியில் உணவு கொள்ளும் உரிமை; right of taking meals at the same table, commensality. 'அவனுக்குச் சமபந்தியில்லை' (உ.வ.).

*[சமம்² + பந்தி]*

**சமபாகம்** *šama-bāgam,* பெ. (n.) ஒத்த பங்கு; an equal share.

க. சமபாக

*[சமம் + பாகம்]*

**சமபாதவிருத்தம்** *šama-pāda-viruttam,* பெ. (n.) இசைப்பா வகை (சிலப். 6: 35, உரை); a musical composition.

*[சம்பாதம் + விருத்தம்]*

**சமபாவு** *šama-bāvu,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

ம. சம்பாவு, செம்பாவு

*[சம்பு → சம்பா. ஒ.நோ: கும்பு → கும்பா, தும்பு → தும்பா. குண்டு → குண்டா. சம்பு என்பது சிறந்த நெல்வகைக்கும் சிறந்த கோரைவகைக்கும் பொதுப்பெயர். சம்பா → சம்பாவு → சமபாவு]*

**சமபூமி**[1] *šama-būmi,* பெ. (n.) சமநிலம்[1] பார்க்க; see *šama-nilam.*

க. சமபூமி

*[சமம் + பூமி]*

**சமபூமி**[2] *šama-būmi,* பெ. (n.) போர்க்களம்; battle field.

*[சமர் + பூமி - சமர்பூமி → சமபூமி]*

Skt. bhūmi → த. பூமி

**சமபோகம்** *šama-bōgam,* பெ. (n.) சம விளைவு பார்க்க; see *šama-viḷaivu.*

*[சமம் + போகம். பூ → பூகம் → போகம்]*

**சமம்**[1] *šamam,* பெ. (n.) மனவமைதி; peace of mind. "படர்ந்ததச் சமதமப் பதாதி" *(பிரபோத. 29, 27).*

*[உம் → அம் → சம் → சமம்]*

**சமம்**[2] *šamam,* பெ. (n.) *1.* ஒப்பு *(பிங்.);* likeness, similarity, equality. *2.* ஒத்தபொருள்; equal or similar object. *3.* நடுவுநிலை; impartiality, free from passion, fairness. "செல்சம முருக்கி" *(திருமுரு. 99). 4.* இரட்டையான எண்; even number. "சமநிலையாயின்" *(பன்னிருபா. 140). 5.* ஏற்றத்தாழ்வின்மை, ஒரே சீரான தன்மை, மாறுபாடற்ற தன்மை; evenness, levelness. *6.* ஒத்த அடிகளையுடைய மண்டிலம் (விருத்தம்) *(வீரசோ.யாப். 33, உரை);* stanza in which all the lines have the same number of feet.

ம. சமம்; க., பட. சம; தெ. சமமு; L. similis; E. semblance, simile

*[உம் → அம். அம்முதல் = பொருந்துதல். அம் → சம் → சமம் = ஒப்பு]*

த. சமம் → Skt. šama

**சமம்**[3] *šamam,* பெ. (n.) போர்; war, battle. "ஒளிறுவா ளருஞ்சம முருக்கி" *(புறநா. 382).*

*[உம் → அம் → சம் → சமம் (வ.வ. 142)]*

ஒப்புப் பொருளிலிருந்தே பொருதற்பொருள் தோன்றும். ஒ.நோ: பொருதல் = ஒத்தல், போர்செய்தல்.

**சமம்**[4] *šamam,* பெ. (n.) முதுவேனில் *(பிங்.);* mid-summer.

*[சமர் → சமரம் → சமம். சமர் = போர், சீற்றம், வெப்பம்]*

**சமம்பாவி-த்தல்** *šamam-bāvi-,* 4 செ.குவி. (v.i.) சமமாதற்கு முயலுதல்; to emulate, vie.

*[சமம்*[2] *+ பாவி-,]*

**சமமழை** *šama-maḻai,* பெ. (n.) நடுத்தரமான மழை; moderate rain.

*[சம(ம்) + மழை]*

**சமமாக்கு-தல்** *šamamākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) சமஞ்செய்-தல் பார்க்க; see *šamañ-jey-.*

க., பட. சமமாடு.

*[சமம் + ஆக்கு-,]*

**சமமாகக்கருது-தல்** *šamamāga-k-karudu-,* 12 செ.குன்றாவி. (v.t.) ஒன்றாகநினைத்தல்; to equate.

*[சமமாக + கருது-,]*

**சமமாகு-தல்** *šamamāgu-,* 6 செ.கு.வி. (v.i.) ஒரேயளவினதாகுதல்; to become equal.

க. சமவெழ், சமபெழ்

*[சமம் + ஆகு-,]*

**சமமாயிரு-த்தல்** *šamam-āy-iru-,* 3 செ.கு.வி. (v.i.) *1.* ஒருநிகராயிருத்தல்; to equal. *2.* நடு நிலையுடன் இருத்தல்; to be impartial.

*[சமம் + ஆய் + இரு-,]*

**சமயக்கட்டு** *šamaya-k-kaṭṭu,* பெ. (n.) மதக் கட்டுப்பாடு; religious obligation.

*[சமயம் + கட்டு. கள் → கட்டு]*

**சமயக்கணக்கர்** *šamaya-k-kaṇakkar,* பெ. (n.) சமயநூல் வல்லார்; exponents of various religious systems. "சமயக்கணக்கர் தந்திறங் கேட்டதும்" *(மணிமே. பதி.88)*

*[சமயம் + கணக்கர்]*

**சமயக்கவடன்** *šamaya-k-kavaḍan,* பெ. (n.) சமையக்கவடன் பார்க்க; see *šamaiya-k-kavaḍan.*

*[சமையம் → சமயம் + கவடன்]*

**சமயக்காட்சியர்** *šamaya-k-kāṭciyar,* பெ. (n.) மதத்தை உணர்ந்தவர்; those who are proficient in a religious system. "சமயக் காட்சிய ரன்பிற் கலந்த வின்பக் கட்டுரை" *(பெருங். மகத. 18, 93).*

*[சமயம் + காட்சியர்]*

**சமயக்காரர்** *šamaya-k-kārar,* பெ. (n.) மதத்தைப் பின்பற்றுபவர்; followers of a religion.

*[சமயம் + காரர். 'காரர்' உடைமை குறித்த ஈறு]*

**சமயக்குரவர்** *šamaya-k-kuravar,* பெ. (n.) மதத்தை நிலைநிறுத்திய பெரியோர்; great man who established a religion.

*[சமயம் + குரவர்]*

குரு → குரவன் = பெரியோன். அரசன், ஆசிரியன், தந்தை, தாய், தமையன் என்னும் ஐவரும் ஐங்குரவர் எனப்படுதலையும் இருபெற்றோரும் இருமுதுகுரவர் எனப்படுதலையும் நோக்குக.

திருநாவுக்கரசர், சுந்தரர், திருஞானசம்பந்தர், மாணிக்கர் ஆகிய நால்வரும் சமயக்குரவர் என்று சிறப்பித்துக் கூறப்பெறுவர்.

**சமயக்கொள்கை** *šamaya-k-kolgai,* பெ. (n.) சமயக்கோட்பாடு பார்க்க; see *šamaya-k-kōṭpāḍu.*

*[சமயம் + கொள்கை]*

**சமயக்கோட்பாடு** *šamaya-k-kōṭpāḍu,* பெ. (n.) மதக்கொள்கை; religious beliefs, tenets, doctrines.

*[சமயம் + கோட்பாடு]*

**சமயகி** *šamayagi,* பெ. (n.) நேர்வாளம்; croton seed-croton tigilium *(சா.அக.).*

**சமயங்கடத்து-தல்** *šamayaṅ-kaḍattu-,* 5 செ.குவி. (v.i.) சமையங்கடத்து-தல் பார்க்க; see *šamaiyaṅ-kaḍattu-.*

*[சமையம் → சமயம் + கடத்து-,]*

**சமயச்சந்துக்கட்டு** *šamaya-c-candu-k-kaṭṭu,* பெ. (n.) சமையச்சந்துக்கட்டு பார்க்க; see *šamaiya-c-candu-k-kaṭṭu-.*

*[சமயம் + சந்துக்கட்டு]*

**சமயசாத்திரம்** *šamaya-šāttiram,* பெ. (n.) சமயநூல் பார்க்க; see *šamaya-nūl.*

*[சமயம் + சாத்திரம்]*

**சமயத்தலைவர்** *šamaya-t-talaivar,* பெ. (n.)
1. ஒரு மதத்தின் தலைவர்; head of a religion.
2. மடத்துத்தலைவர்; head of a mut.

*[சமயம் + தலைவர்]*

**சமயத்தார்** *šamayattār,* பெ. (n.) ஒரு மதத்தைச் சார்ந்தவர்; followers of a religious system. "அன்றென்ப வாறு சமயத்தார்" *(வள்ளுவமா. 9).*

*[சமயம் + அத்து + ஆர்]*

*'அத்து' சாரியை. 'ஆர்' பலர்பாலீறு.*

**சமயதத்துவம்** *šamaya-tattuvam,* பெ. (n.) சமயமெய்ப்பொருள் *(மணிமே. 10: 80, உரை)* பார்க்க; see *šamaya-mey-p-poruḷ.*

*[சமயம் + தத்துவம்]*

Skt. tatuva → த. தத்துவம்

**சமயதருமம்** *šamaya-darumam,* பெ. (n.) சமயமெய்ப்பொருள் பார்க்க; see *šamaya-mey-p-poruḷ.*

*[சமயம் + தருமம்]*

Skt. dharma → த. தருமம்

**சமயதி** *šamayadi,* பெ. (n.) எல்லா அடிகளும் ஒத்த அளவினதாய் வரும் இசைப்பாட்டு வகை; a metrical composition in which all the lines are of uniform length.

*[சமம் → சமயத்தி → சமயதி]*

**சமயதிவாகரர்** *šamaya-divāgarar,* பெ. (n.) நீலகேசியென்னும் சைனநூலின் உரைகாரராகிய வாமன முனிவர்; Vāmaṉa-muṉivar, commentator on Nīlakēši, a jaina work in Tamil.

*[சமயம் + திவாகரர்]*

**சமயநிலை** *šamaya-nilai,* பெ. (n.) சமயக் கோட்பாடு பார்க்க; see *šamaya-k-kōṭpāḍu.*

*[சமயம் + நிலை]*

**சமயநூல்** *šamaya-nūl,* பெ. (n.) மதத்தைப் பற்றிய நூல்; sacred book of a religion.

*[சமயம் + நூல்]*

**சமயநெறி** *šamaya-neṟi,* பெ. (n.) மதக் கொள்கை; creed or religious system.

*[சமயம் + நெறி]*

**சமயப்பற்று** *šamaya-p-paṟṟu,* பெ. (n.) மதத்தின்மேல் ஒருவன் கொள்ளும் அன்பு; love of one's own religion.

*[சமயம் + பற்று]*

**சமயப்பொறை** *šamaya-p-poṟai,* பெ. (n.) அனைத்துச் சமயங்களிடமும் காட்டும் பொதுநோக்கு; religious tolerence.

*[சமயம் + பொறை. பொறு → பொறை]*

**சமயப்போர்** *šamaya-p-pōr,* பெ. (n.) மதத்திற்குள் ஏற்படும் சண்டை, குழப்பம், மாறுபாடு; religious controversy.

*[சமயம் + போர்]*

**சமயப்போலி** *šamaya-p-pōli,* பெ. (n.) போலியான மதம் (வின்.); a travesty of religion.

*[சமயம் + போலி]*

**சமயபத்திரம்** *šamaya-pattiram,* பெ. (n.) உடன்படிக்கை ஆவணம்; deed of agreement 'என்று பண்ணின தர்மத்தாபன சமயபத்திரம்' (தெ.க.தொ.I:84).

*[சமயம் + பத்திரம்]*

Skt. patra → த. பத்திரம்.

**சமயபுரம்** *šamaya-puram,* பெ. (n.) திருச்சிராப்பள்ளிக்கு அருகே உள்ள ஓர் ஊர்; a village near Tirichirappaḻḻi.

மறுவ. கண்ணபுரம், விக்கிரபுரம், மாகாளிபுரம்

*[சமயம் + புரம்]*

**சமயபேதம்** *šamaya-bēdam,* பெ. (n.) சமய வேறுபாடு பார்க்க; see *šamaya-vēṟupāḍu.*

*[சமயம் + பேதம்]*

Skt. bhēda → த. பேதம்

**சமயபேதி** *šamaya-pēdi,* பெ. (n.) புறச் சமயத்தான் (யாழ்.அக.); heretic, schismatic.

*[சமயம் + பேதி]*

Skt. bhēdin → த. பேதி

**சமயபோதனை** *šamaya-pōdaṉai,* பெ. (n.) *1.* மதக் கொள்கைகளை உணர்த்துகை; religious instruction. *2.* சமயக்கோட்பாடு பார்க்க; see *šamaya-k-kōṭpāḍu.*

*[சமயம் + போதனை]*

Skt. bodhana → த. போதனை

**சமயம்**[1] *šamayam,* பெ. (n.) *1.* மதம்; creed or religious system. "சாங்கிய சமயந் தாங்கிய பின்னர்" (பெருங். உஞ்சை. 36, 252). *2.* மதநூல் (திவா.); text-book as of a religion.

*[சமை → சமையம் → சமயம்]*

"மதம், சமயம் என்னும் இரு சொல்லும் ஒரு பொருளனவாயினும், தம்முள் நுண்பொருள் வேறுபாடுடையன. ஒரு தெய்வத்தை அல்லது இறைவனை மதித்து வழிபடுவது மதம்; இறைவனை இம்மையிலேனும் மறுமையி லேனும் அடைவதற்குச் சமைவது சமயம்' (த.ம.3).

சமை → சமையம் = பதனடைந்த அல்லது நுகர்ச்சிக்கேற்ற நிலை, வினைக்குத்தக்க வேளை.

சமையம் → சமயம் = ஆதன் (ஆன்மா) அல்லது மாந்தன், இறைவன் திருவடிகளை அல்லது வீட்டின்பத்தை அடையச் சமைவாகும் (தகுதியாகும்) நிலைமை; அந் நிலைக்குரிய ஒழுக்கநெறி. நேரத்தைக் குறிக்குஞ் சொல்வடிவுகளில் மகர ஐகாரமும், மதத்தைக் குறிக்குஞ் சொல்வடிவில் மகரமும், வரல் வேண்டுமென வேறுபாடறிக.

வடமொழியில் மகரமுள்ள வடிவேயுண்டு. அமையம் என்னும் மூலச்சொல்லும் அங்கில்லை. வடமொழியாளர், சமயம் என்ற தென்சொல்லை 'ஸமய' என்று திரித்தும் ஸம் + அய எனப் பிரித்தும், உடன்வருதல் (to come together) அல்லது ஒன்று சேர்தல் என்று பொருள் காட்டுவர். அங்ஙனம் காட்டிய பின்பும்,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (குறள், 380)

என்னுந் திருவள்ளுவர் திருவாய்மொழிக் கேற்ப, அவ்வடசொல் தென்சொற்றிரிபே யாதல் காண்க.

ஸம் = உடன், கூட. அய = செல்கை, வருகை.

'அய' என்னும் சொற்கு, 'அய்' என்பதை அடியாகவும் 'இ' என்பதை வேராகவும் காட்டுவர். இ → அய் → அயன = செலவு.

தமிழில், கூடுதலைக்குறிக்கும் அடிச் சொற்களுள் 'கும்' என்பது ஒன்று.

கும்முதல் = கூடுதல், குவிதல்.

கும் → கும்மல். கும் → கும்பு → கும்பல்.

கும்மல் - L. cumulus = heap; cumulare = to heap up. E. cumulate, accumulate.

கும் → கும்ம (நிகழ்கால வினையெச்சம் - infinitive mood) = கூட, கூடுதல் = ஒன்று சேர்தல், மிகுதல்.

கூட (together) என்னும் (நிகா.) வினையெச்சம் உடன் (together, with) என்று பொருள்படும் போது, மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சி யுருபாகவும், முன்னொட்டாகவும் (prefix) ஆளப்படும்.

எ-டு: தந்தை கூட வந்தான் = தந்தையுடன் வந்தான். கூடப்பிறந்தவன் = உடன்பிறந்தான்.

கூடுதலைக் குறிக்கும் கும் என்னும் வினைச் சொல் உ→ அ திரிபு முறைப்படி கம் என்று திரியவுஞ் செய்யும்.

"கமம் நிறைந் தியலும்" (தொல்.சொல். 355)
நிறைதல் = நிரம்புதல், மிகுதல், கூடுதல்.

cum என்னும் இலத்தீன் அடிச்சொல்லும், முன்னொட்டாகும்போது com என்று திரிந்து, வருஞ்சொன் முதலெழுத்திற்கேற்ப con, col, cor என்று ஈறுமாகும். சில எழுத்துகளுக்கு முன் co என்று ஈறு கெடவுஞ் செய்யும். இங்ஙனமே ஆங்கிலத்திலும்.

இங்ஙனம் இலத்தீனத்தில் கும் → கொம் என்றும், ஆங்கிலத்திற் கம் என்றும் திரியும் முன்னொட்டு, கிரேக்கத்தில் ஸூம் (sum) என்றும் ஸிம் (sym) என்றும், சமற்கிருதத்தில் ஸம் (sam) என்றும் திரியும். கிரேக்க முன்னொட்டும், இலத்தீன் முன்னொட்டுப் போற் பின்வரும் எழுத்திற்கேற்ப, சின் (syn), சில் (syl) என்றும் திரியும். சமற்கிருத முன்னொட்டு ஈறுகெட்டு ஸ (sa) என்றும் நிற்கும். இவற்றிற்கெல்லாம், கூட (உடன்) என்பதே பொருள்.

கூட என்பதற்கு நேரான கும்ம என்னும் தென்சொல்லே, முன்னொட்டாகிக் கும் என்று குறுகியும் கும் → கொம் → கம், கும் → ஸூம், ஸூம் → ஸிம் → ஸம் என்று திரிந்தும், ஆரிய மொழிகளில் வழங்கும் என அறிக. அதன் முதன்மெய், ஐரோப்பாவின் வடமேற்குப் பகுதியிலும், மேற்குப் பகுதியிலும் இயல்பாகவும், அதன் தென்கிழக்குப் பகுதியிலும் இந்தியாவிலும் ஸகரமாகத் திரிந்தும் வழங்குவதை ஊன்றி நோக்கி வரலாற்றுண்மை தெளிக.

இனி, இந்திய ஆரியத்தில் (வேத மொழியிலும் சமற்கிருதத்திலும்) செல்லுதலைக் குறிக்கும் 'இ' என்னும் வேரும் 'அய்' அடியுமாகிய வினைச் சொற்களும், உய் தென்சொல்லினின்று திரிந்தவையே.

ஊ அல்லது உ, இதழ் குவிந்தொலித்து முன்னிடத்தை அல்லது முன்னிற்பதைச் சுட்டும் முன்மைச் சுட்டு.

ஊ → ஊன் = நீ (முன்னிலையொருமைப் பெயர்)
ஊ → உ → உந்து. உந்துதல் = முன்தள்ளுதல்
உ → உய். உய்தல் = முன்செல்லுதல், செல்லுதல்
உய்த்தல் = முன் செலுத்துதல், செலுத்துதல்.
உய் → இய் → இயவு = 1. செலவு
"இடைநெறிக் கிடந்த இயவுக்கொண் மருங்கில்" (சிலப். 11:168)

2. வழி.
இயவு → இயவுள் = எல்லா வுயிர்களையும் வழி நடத்தும் இறைவன்.
இ → இயல் = செலவு
"புள்ளியற் கலிமா" (தொல்.பொருள். 184)
இயலுதல் = செல்லுதல், நடத்தல்.
"அரிவையொடு மென்மெல வியல" (ஐங். 175)
இய → இயங்கு → இயக்கு → இயக்கம்.
இயங்குதல் = செல்லுதல், நடத்தல், அசைதல்.
இய் → வ. அய். இனி, உய் என்பதும் அய் என்று திரிந்திருக்கலாம்.

தமிழ் ஆரியத்திற்கு முந்தியது என்னும் வரலாற்றுண்மையையும், மேற்காட்டிய சொல் வரலாறுகளையும், நடுநிலையாக நோக்குவார்க்கு மதம், சமயம் என்னும் இரு சொல்லும் தென்சொல்லேயென்பது, தெற்றெனத் தெரியாமற் போகாது (த.ம. 3-7).

**சமயம்**[2] *šamayam,* பெ. (n.) **1. உடன்படிக்கை;** agreement, contract. சமயப்பத்திரம். **2. மரபு;** established usages, convention. 'கவிசமயம்'.

*[அமை → அமையம் → சமையம் → சமயம்]*

**சமயம்பார்-த்தல்** *šamayam-pār-,* 4 செ.கு.வி. (v.i.) **தக்க காலத்தை எதிர்ப்பார்த்திருத்தல்;** to watch for a suitable opportunity. சமயம் பார்த்துப் போர் தொடுப்பது பகை நாட்டரசின் வாடிக்கை.

*[சமயம் + பார்-,]*

**சமயமதம்** *šamaya-madam,* பெ. (n.). மதவெறி; bigotry, fanaticism.

*[சமயம் + மதம். மதம் = செருக்கு, வெறி]*

**சமயமானம்** *šamaya-mānam,* பெ. (n.) **சமயப்பற்று** பார்க்க; see *šamaya-p-parru.* "சன்னியாசிக்குஞ் சாதிமானஞ் சமயமானம் விடாது" (வின்.).

*[சமயம் + மானம்]*

**சமயமிரு-த்தல்** *šamayam-iru-,* 3 செ.கு.வி. (v.i.) **ஓலக்கமிருத்தல்;** to sit in state, as a king. "பெண்சாராத தெனவே சமயமிருக்கும் மண்டபமாம்." (சீவக. 2370, உரை.)

*[சமையம் → சமயம் + இரு-,]*

**சமயமுதல்வி** *šamaya-mudalvi,* பெ. (n.) **சத்தி மதத்தின் தலைவியாகிய மலைமகள்** (பிங்.); Pārvadi, as the supreme being of the Šāktas.

*[சமயம் + முதல்வி]*

**சமயமெய்ப்பொருள்** *šamaya-mey-p-poruḷ*, பெ. (n.) மதத்தின் அடிப்படை உண்மைகள்; the fundamental doctrines of a religion.

*[சமயம் + மெய்ப்பொருள்]*

**சமயலங்கனம்** *šamaya-laṅgaṉam*, பெ. (n.) மதக் கோட்பாட்டை மீறுகை; transgression of religious principles. "சமயலங்கனமுந் தெய்வ நிந்தையுஞ் செய்தனர்" (பெரியபு. திருநாவுக். 83).

*[சமயம் + லங்கனம்]*

Skt. laṅghana → த. லங்கனம்

**சமயவாசிரியர்** *šamayavāširiyar*, பெ. (n.) சமயக்குரவர் பார்க்க; see *šamaya-k-kuravar.*

*[சமயம் + ஆசிரியர்]*

**சமயவாதம்** *šamaya-vādam*, பெ. (n.) மதம் பற்றிய ஏரணம்; religious disputation or controversy.

*[சமயம் + வாதம்]*

**சமயவாதி** *šamaya-vādi*, பெ. (n.). தன் மதத்தை நிறுவும் பொருட்டு வழக்காடுபவன்; exponent of a religion. "சமயவாதிக டத்த மதங்களை" (திருவாச. 4, 52).

*[சமயம் + வாதி]*

Skt. vādin → த. வாதி

**சமயவாற்றல்** *šamaya-v-āṟṟal*, பெ. (n.) சொல்லாற்றல் (தொல். சொல். 1 சேனா.); force of a word, signification.

*[சமயம் + ஆற்றல்]*

**சமயவிகற்பம்** *šamaya-vigaṟpam*, பெ. (n.) சமய வேறுபாடு பார்க்க; see *šamaya-vēṟupāḍu.* "சலசல மிழற்றுஞ் சமய விகற்பமும்" (பெருங். உஞ்சைக். 32, 4).

*[சமயம் + விகற்பம்]*

Skt. vikalpa → த. விகற்பம்

**சமயவுசிதம்** *šamaya-v-ušidam*, பெ. (n.) நேரத்துக்குப் பொருத்தம்; suitability to occasion.

*[சமயம் + உசிதம்]*

Skt. ucita → த. உசிதம்

**சமயவேறுபாடு** *šamaya-vēṟupāḍu*, பெ. (n.) மத வேறுபாடு; diversity of religion.

*[சமயம் + வேறுபாடு]*

**சமயவொழுக்கம்** *šamaya-v-oḻukkam*, பெ. (n.) ஒரு சமயத்தைப் பின்பற்றும் ஒழுக்கம்; religious discipline.

*[சமயம் + ஒழுக்கம்]*

**சமயாசமயம்**[1] *šamayā-šamayam*, பெ. (n.) உரிய காலம்; proper time. சமயாசமயத்துக்கு உதவ வேண்டும்.

*[சமையம் → சமயம் + சமயம். அடுக்குத்தொடர்]*

**சமயாசமயம்**[2] *šamayā-šamayam*, பெ. (n.) தக்கதும் தகாததுமான காலங்கள்; proper and improper time. சமயாசமயந் தெரிந்து நடக்க வேண்டும்.

*[சமையம் → சமயம் + அல் + சமயம்]*

**சமயாசாரம்** *šamayā-šāram*, பெ. (n.) மதத்திற்குரிய ஒழுக்கம்; systematised religious practice, ritual.

*[சமயம் + ஆசாரம்]*

Skt. ācāra → த. ஆசாரம்

**சமயாசாரியர்** *šamayāšāriyar*, பெ. (n.) சிவனிய மதத்தை நிலைநாட்டின அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சிவனடியார்கள்; great men who established a religion, especially the four saivaite saints, viz, Appar, Sambandar, Sundarar and Māṇikka vāšagar.

*[சமயம் + ஆசாரியர். ஆசிரியர் → ஆசாரியார்]*

**சமயாதீதம்** *šamayādītam*, பெ. (n.) சமயம் கடந்த பரம்பொருள்; the Supreme Being as transcending all religions. "சமயாதீதப் பழம்பொருளை" (தாயு. காடுங்கரையும். 2).

*[சமயம் + அதிதம்]*

Skt. atita → த. அதிதம்

**சமயி** *šamayi*, பெ. (n.) மதத்தைச் சார்ந்தவன்; religionist, sectarian. "தக்க சமயிகள் தந்திறங் கேட்டதும்" (மணிமே. 28:86).

*[சமய(ம்) → சமயி]*

'இ' உடைமை குறித்த ஈறு

**சமயோசிதம்** *šamayōšidam,* பெ. (n.) சமயவுசிதம் பார்க்க; see *šamaya-v-ušidam.*

*[சமயம் + உசிதம்]*

Skt. ucita → த. உசிதம்

**சமர்**[1] *šamar,* பெ. (n.) போர் (திவா.); war, battle, fight.

ம. சமர். Skt. šamar

*[சமம் → சமர் (வ.வ. 143)]*

ஒ.நோ: களம் → களர். சமம் = ஒப்பு. இனி, அமர் → சமர். அமர் என்பது சமர் என்பதன் திரிபன்று; சமர் என்பதே அமர் என்பதன் முதன்மிகையான திரிபு. ஒ.நோ: அமை → சமை. ஒப்புப் பொருளிலிருந்து பொருதல் பொருள் தோன்றும். ஒ.நோ: சமம் = ஒப்பு, போர்; பொருதல் = ஒத்தல், போர்செய்தல்.

**சமர்**[2]**-தல்** *šamar-,* 11 செ.கு.வி. (v.i.) பொருதல்; to fight, make war. 'சமர்க்க வல்லாயேல்" (விநாயகபு. 74, 249).

*[அமர் → சமர்-,]*

**சமர்**[3] *šamar,* பெ. (n.) சமரம்[2] பார்க்க; see *šamaram*[2].

*[சம் → சமர்]*

**சமர்க்களம்** *šamar-k-kaḷam,* பெ. (n.) போர்க்களம்; battle-field, arena.

*[சமர் + களம். கள்ளுதல் = கலத்தம், கூடுதல். கள் → களம் = கூட்டம், கூடுமிடம், போர்க்களம். போரிடுவதற்காகக் கூடுமிடம். இனி, அமர்க்களம் → சமர்க்களம்]*

**சமர்த்தன்** *šamarttaṉ,* பெ. (n.) திறமையானவன்; clever, capable man. "சமர்த்தர்த முரத்து விடுவார்" (இரகு. மீட்சி, 23). 'சமர்த்தன் பெண்சாதியும் சோரம் போவாள்' (பழ.)

*[சமர் → சமர்த்து → சமர்த்தன்]*

த. சமர்த்தன் → Skt. samartha

**சமர்த்தாளி** *šamarttāḷi,* பெ. (n.) சமர்த்தன், திறமையானவன்; clever man.

*[சமர்த்து + ஆளி]*

**சமர்த்தி**[1]**-த்தல்** *šamartti-,* 4 செ. குன்றாவி. (v.t.) பொருந்துமாறு காட்டுதல்; to justify and establish, as a theory.

*[சமர் → சமர்த்தி]*

**சமர்த்தி**[2] *šamartti-,* பெ. (n.) நிறைவு; fulness, plentitude.

*[சமர் = பொருந்துதல், மிகுதல். சமர் → சமர்த்தி.]*

**சமர்த்தி**[3] *šamartti-,* பெ. (n.) 1. வல்லவள், திறமையானவள்; clever, capable woman. 2. சமைந்த அல்லது பக்குவமடைந்த பெண்; a girl who has attained the age of puberty. 'சமர்த்தி என்ன பெற்றாள்? தலைச்சன் பெண்ணுப் பெற்றாள்' (பழ.)

*[சமர் → சமர்த்தன் (ஆ.பா.) - சமர்த்தி (பெ.பா.).]*

**சமர்த்தி**[4] šamartti-, பெ. (n.) சமசை (யாழ்.அக.) பார்க்க; see *šamašai.*

*[சமர் → சமர்த்தி.]*

**சமர்த்து** *šamarttu,* பெ. (n.) போர்த்திறமை, திறமை; ability, skill. "சமர்த்தாற்று மாற்றால்" (அரிச்பு. இந்திர. 46). 'சமர்த்துள்ள சேவகனுக்குப் புல்லும் ஆயுதமாம்' (பழ.).

*[சமர் → சமர்த்து]*

த. சமர்த்து → Skt. samartha

வடவர் ஸம் + அர்த்த என்று பகுத்து, ஒத்த அல்லது தகுந்த நோக்கங் கொள்ளுதல், தகுந்த நிலைமை பெறுதல், வலிமையடைதல் என்று பொருள் பொருத்துவர் (வ.வ. 141).

போருக்கு வலிமை வேண்டுமாதலின் போரென்னும் சொல் (சமர்) வலிமை அல்லது திறமையையும் உணர்த்தும்.

**சமர்நிலம்** *šamar-nilam,* பெ. (n.) போர்க்களம்; battle-field.

*[சமர் + நிலம்.]*

**சமரகேசரி** *šamara-kēšari,* பெ. (n.) பெருவீரன், போரில் அரிமா போன்றவன்; a great warrior, as lion in battle. 'சமரகேசரித் தெரிஞ்ச கைக்கோளரில் கூத்தன் நிகளங்கனும்' (தெக. தொ. 5: 233).

*[சமரம் + கேசரி.]*

Skt. kēsarin → த. கேசரி

**சமரகோலாகலநல்லூர்** *šamara-kōlākala-nallūr,* பெ. (n.) காஞ்சிபுரம் வட்டத்திலிருந்த பண்டைய ஊர்; an ancient village in

Kāñjipuram taluk. "பாண்டி மண்டலத்து வீரநாராயணவள நாட்டுச் சமரகொலாகல நல்லூர் உடையார் ஏகாம்பர நாதனுக்கும்" *(தெக. தொ. 4: 348/1986)*

*[சமரம் + கோலாகல + நல்லூர்]*

**சமரகோலாகலன்** *šamara-kōlāgalan*, பெ. (n.) *சமரவிருப்பன்* பார்க்க (கல்.); see *šamara-viruppan*.

*[சமரம் + கோலாகலன்.]*

Skt. kōlāhala → த. கோலாகலம் → கோலாகலன்

**சமரங்கபூபதி** *šamaranga-pūbadi*, பெ. (n.) *பல போரில் வென்ற அரசன்;* winner of many battle, hero of many fights.

*[சமர் + அங்கம் + பூபதி.]*

**சமரங்கம்** *šamarangam*, பெ. (n.) *சமர்க்களம்* பார்க்க; see *šamar-k-kaḷam*.

*[சமர் + அங்கம்]*

Skt. anka → த. அங்கம்

**சமரசம்** *šamarašam*, பெ. (n.) *ஒற்றுமை;* equality, harmony, identity. "வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே" *(தாயு. பரிபூரணா. 5).* 2. *நடுநிலைமை;* impartiality. 3. *சமாதானம்;* reconciliation, compromise.

*[சமம் + ரசம்]*

Skt. rasa → த. ரசம்

**சமரசமாய்** *šamarašamāy*, வி.அ. (adv.) 1. *மன நிறைவாக;* satisfactorily. அவர்கள் வழக்கு சமரசமாய் முடிந்தது. 2. *சமாதானமாய்;* reconciliable.

*[சமரசம் + ஆய்]*

**சமரசர்** *šamarašar*, பெ. (n.) 1. *நண்பர்;* companion, friends. 2. *ஒருபக்கம் சாயாத நடுநிலையாளர்;* impartial arbiter.

*[சமரசம் → சமரசர்]*

Skt. rasa → த. ரசம்

**சமரதன்** *šamaradan*, பெ. (n.) *பிறிதொரு தேர் வீரனொடு சளைக்காமற் போர் புரியவல்ல தேர்வீரன்;* warrior in chariot who engages another warrior in an equal fight, one of four tēr-vīrar. "சமரதப் பதிகள்" *(பாரத. அணிவ. 2).*

*[சமம் + ரதன்]*

Skt. ratha → த. ரதம்

**சமரபீரு** *šamara-pīru*, பெ. (n.) *போரில் புறங்காட்டி ஓடல்;* running away from fight atter acknowledge of defeat. 'கடுமுரட் சாங்க மய்யனு முதலினர் சமரபீரு வொத்துடைய' *(முதல் இராசாதிராசன், மெய்க்கீர்த்தி).*

*[சமர் → சமரபீரு]*

**சமரபுரி** *šamara-puri*, பெ. (n.) *தொண்டை நாட்டிலுள்ள திருப்போரூர்;* Tiru-p-pōrūr in Tonḍainādu. "சமரபுரியாய் தாலேலோ" *(திருப்போ. சந். பிள்ளைத். தாலப். 1).*

*[சமரம் + புரி]*

**சமரம்**[1] *šamaram*, பெ. (n.) *போர்;* battle, fight. "இலங்கையி லெழுந்த சமரமும்" *(சிலப். 26: 238)*

ம. சமர்; தெ. சமரமு

*[சமர் → சமரம்]*

த. சமரம் → Skt. šamara

இருவர் அல்லது இரு படைகள் போர் செய்யும் போது ஒன்றுகலத்தலால், கலத்தல் அல்லது ஒன்றாதற் கருத்தினின்று போர்க் கருத்துப் பிறந்தது.

எ-டு : கல → கலாம், கலகம். கைகலத்தல் = சண்டையிடுதல். பொரு = ஒத்தல், போர் செய்தல். பொரு → போர் = பொருத்து, சமர்.

இங்ஙனமே ஒப்பைக் குறிக்கும் சமம் என்னும் சொல்லினின்றும் போரைக் குறிக்கும் சொற்கள் பிறந்துள்ளன. சமம் = போர். "ஒளிறுவா ளருஞ்சம முருக்கி" *(புறம். 382).* சமம் → சமர் = போர் (திவா.).

ஒ.நோ: *களம் → களர்*

*சமர்த்தல்* = பொருதல். "சமர்க்க வல்லாயேல்" *(விநாயகபு. 74:249).*

போருக்கு வலிமை வேண்டுமாதலின், போர் என்னும் சொல் வலிமை அல்லது திறமையையும் உணர்த்தும்.

போர் = வலிமை. சமர்த்து = திறமை. சமர் → சமரம் = போர். "இலங்கையி லெழுந்த சமரமும்" *(சிலப். 26, 238).* சமர் → அமர் = போர் 'ஆரமர் ஓட்டலும்' *(தொல். 1006).* சமரம் → அமரம் = போர். தெ. அமரமு. அமர்த்தல் = மாறுபடுதல். "பேதைக் கமர்த்தன கண்" *(குறள், 1086)*

வடமொழியில் சமர என்னும் வடிவே உள்ளது. சமம், சமர், அமர், அமரம் என்னும் வடிவுகள் இல்லை.

வடவர் ஸமர என்னும் சொல்லை ஸம் + ரு என்று பிரித்து ஒன்றுகூடு, மாறுபடு, போர்செய் என்று பொருள் காட்டுவர் *(வ.வ. 140, 141).*

**சமரம்**[2] *šamaram,* பெ. (n.) முள்ளம்பன்றி (நிகண்டு); porcupine.

**சமரம்**[3] *šamaram,* பெ. (n.) நீண்ட மயிரும், மயிரடர்ந்த வாலும் உள்ள விலங்கு, கவரிமான்; yak. *2.* சாமரை; a kind of fly, flapper, chowry.

Skt. šamara; க. சமர

*[கவரி → சவரி → சவரம் → சமரம்]*

**சமரசவாசனி** *šamarasa-vāšani,* பெ. (n.) பாதிரி; trumpet flower - Stereosperumum chelonoides (சா.அக.).

**சமரவிருப்பன்** *šamara-viruppan,* பெ. (n.) போர் செய்வதில் விருப்பமுள்ளவன்; one who revels in battle.

*[சமர் → சமர + விருப்பன்]*

**சமராத்திரம்** *šamarāttiram,* பெ. (n.) சமவிரவு பார்க்க; see *šama-v-iravu.*

*[சமம் + ராத்திரம்]*

Skt. rātram → த. ராத்திரம்

**சமரி**[1] *šamari,* பெ. (n.) போருக்குரிய தெய்வமான கொற்றவை (துர்க்கை) (பிங்.); Durga, as the goddess of war.

மறுவ. அமரி, எண்டோளி, பாலைக்கிழத்தி, குமரி, சக்கரபாணி.

*[அமர் = போர். அமர் → அமரி = போர்த் தெய்வமான காளி. அமரி → சமரி]*

அமரி [2] பார்க்க.

**சமரி**[2] *šamari,* பெ. (n.) பாம்பு (யாழ்.அக.); snake.

க. சம்மளி

*[அமரி = நஞ்சு. அமரி → சமரி = நஞ்சுடையது]*

**சமரிகம்** *šamarigam,* பெ. (n.) *1.* மலையத்தி; mountain fig; downy climbing cluster fig - ficus macrocarpa. *2.* மலையகத்தி; bitter sesban (சா.அக.).

**சமருகாச்சி** *šamaru-kācci,* பெ. (n.) பேரீச்சம் பழம்; Arabian date fruit-phoenix dactylifera (சா.அக.).

**சமரரேகை** *šama-rēgai,* பெ. (n.) சமவரிகை பார்க்க; see *šama-varigai.*

*[சமம் + ரேகை.]*

Skt. rēkhā → த. ரேகை

**சமருடச்சிவரம்** *šamaruḍa-c-civaram,* பெ. (n.) வரகு; milliet - Panicum maliaceum (சா.அக.).

**சமவணி** *šama-v-aṇi,* பெ. (n.) ஒருவகை அணியிலக்கணம்; a kind of rhetoric.

*[சமம் → அணி]*

**சமவயசு** *šama-vayacu,* பெ. (n.) சரியகவை பார்க்க; see *šari-y-agavai* (செ.அக.).

*[சமம் + வயசு]*

Skt. vayas → த. வயசு

**சமவயது** *šama-vayadu,* பெ. (n.) சரியகவை பார்க்க; see *šari-y-agavai.*

*[சமம் + வயது]*

Skt. vayas → த. வயசு → வயது

**சமவர்த்தி** *šamavartti,* பெ. (n.) நடுநிலையில் இருப்பவன், கூற்றுவன் (யாழ்.அக.); Yama, as impartial.

மறுவ. காலன்

*[சமம்+ வர்த்தி]*

த. வட்டம் → Skt. vartti → த. வர்த்தி

**சமவரிகை** *šama-varigai,* பெ. (n.) நிலநடுக்கோடு (பூமத்தியரேகை); equatorial line.

*[சமம் + வரிகை]*

**சமவலிமை** *šama-valimai,* பெ. (n.) இணையான ஆற்றல் அல்லது திறமை; equal strength.

*[சமம் + வலிமை]*

**சமவாசம்** *šama-vāšam,* பெ. (n.) நட்பு; association. friendship. intercourse.

*[சமம் + வாசம்]*

**சமவாதசைவம்** *šama-vāda-šaivam,* பெ. (n.) முத்தி நிலையில் சிவமும் ஆன்மாவும் ஒக்குமெனக் கொள்ளும் சிவனிய வேறுபாடு (பேதம்) (சி.சி. 67. சிவஞான.); a Šaiva sect which holds that a liberated soul becomes equal to Šivan̲.

*[சமவாதம் + சைவம்]*

**சமவாயம்** *šama-vāyam,* பெ. (n.) ஒத்த கூட்டம் *(சூடா.);* assemblage, collection, aggregate.

*[சமம் + ஆயம் → சமவாயம்]*

சமவாயம் → Skt. sam-avāya

**சமவாயிகாரணம்** *šamavāyi-kāraṇam,* பெ. (n.) முதற்காரணம் *(சி.சி. 1, 18 ஞானப்.);* material cause.

**சமவிணை** *šama-v-iṇai,* பெ. (n.) சரியான இணை; proper match.

*[சமம்² + இணை]*

**சமவிரவு** *šama-v-iravu,* பெ. (n.) பகலிரவுகள் நாழிகையளவில் ஒத்த நாள் *(வின்.);* equinox, time when day and night are equal.

*[சமம்² + இரவு]*

**சமவிருட்டி** *šama-viruṭṭi,* பெ. (n.) சமமழை பார்க்க; see *šama-maḻai (சா.அக.).*

*[சமம்² + விருட்டி]*

Skt. viruṣṭi → த. விருட்டி

**சமவிலை** *šama-vilai,* பெ. (n.) ஏற்றமில்லாத நடுத்தர விலை *(வின்.);* moderate price.

*[சமம்² + விலை]*

**சமவிளைவு** *šama-viḷaivu,* பெ. (n.). இரண்டு அறுவடையிலும் ஒத்த விளைச்சல்; equal yield in the two cultivation seasons.

*[சமம்² + விளைவு]*

**சமவுவமை** *šama-v-uvamai,* பெ. (n.). சமவணி பார்க்க; see *šama-v-aṇi (கழ.அக.).*

*[சமம் + உவமை]*

**சமவுரிமை** *šama-v-urimai,* பெ. (n.) இணையான உரிமை; equal rights. பெண்ணுக்குச் சமவுரிமை தர வேண்டும் *(உவ.).*

*[சமம் + உரிமை]*

**சமவெடுப்பு** *šama-v-eḍuppu,* பெ. (n.) குரலும் தாளமும் ஒப்பத் தொடங்கும் எடுப்பு வகை; a variety of eḍuppu, in which the song begins on the principal beat of the time-measure.

*[சமம் + எடுப்பு]*

**சமவெண்** *šama-v-eṇ,* பெ. (n.) *2, 4, 6, 8, 10* போன்று வரும் இரட்டை எண்களின் வரிசைத் தொடர்; series of even numbers, like 2, 4, 6, 8, 10 etc.,

*[சமம் + எண்]*

**சமவெளி** *šama-veḷi,* பெ. (n.) *1.* மேடு பள்ளமற்ற நிலப்பகுதி; plain. சமவெளிப்பகுதியில் வேளாண்மை நடைபெறும். *2.* ஆறுகள் பாயும் நிலப்பகுதி; valley. கங்கைச் சமவெளி.

*[சமம் + வெளி]*

**சமவேதம்** *šama-vēdam,* பெ. (n.) பிறிதோடு நீக்கமின்றியிருக்கும் பொருள்; inseparably associated object. முதல்வன் ........ சற்சித்தியோடு சமவேதமாய் நிற்பன் *(சி.போ.சிற். 2,4).*

*[சமம் + வேதம்]*

**சமவொப்பு** *šama-v-oppu,* பெ. (n.) ஒப்பு; conformity, resemblence.

*[சமம் + ஒப்பு]*

**சமழ்¹-தல்** *šamaḻ, 4* செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to be distressed. தையலாய் சமழாதுரை யென்றதே *(சீவக. 1000).*

*[சவள் → சமழ்]*

**சமழ்²-த்தல்** *šamaḻ-, 11* செ.குன்றாவி. (v.t.) *1.* வருந்துதல்; to grieve, to be in distress. "அம்மையிற் செய்தன விம்மை வந்து சந்தித்த பின்னைச் சமழ்ப்ப தென்னே" *(தேவா. 1200, 4).* *2.* நாணுதல் *(திவா.);* to be ashamed. "முடித்தனனென்று சமழ்த்தன னோக்கி" *(பெருங். மகத. 27, 186)* *3.* தாழ்தல்; to get worsted; to suffer in comparison. "மலர் நிறஞ் சமழ்க்கு மன்றே" *(கம்பரா. நாடவி. 65).*

*[சமழ் → சமழ்²]*

**சமழ்ப்பு** *šamaḻppu,* பெ. (n.) *1.* வருத்தம் *(சூடா.);* distress. *2.* நாணம், வெட்கம்; shame. "கள்வன் சமழ்ப்பு முகங்காண்மின்" *(பரிபா. 20, 36).* *3.* சமழ்மை பார்க்க; see *samaḻmai.*

*[சமழ் → சமழ்ப்பு]*

**சமழ்மை** *šamaḻmai,* பெ. (n.) இழிவு; dishonour, disgrace. "பொங்கு நீர் ஞாலஞ் சமழ்மையாக் கொண்டு விடும்" *(நாலடி, 72).*

*[சமழ் → சமழ்மை]*

**சமற்காரம்** *šamarkāram,* பெ. (n.) சமத்துக்காரம் பார்க்க; see *šamattu-k-kāram* (செ.அக.).

*[சமத்துக்காரம் → சமற்காரம்]*

**சமன்**[1] *šaman,* பெ. (n.) 1. சமம்[2] பார்க்க; see *šamam*[2]. "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல்" (குறள், 118); 2. இசை நூலில் வருந் தான நிலை மூன்றனுள் ஒன்று; middle tone (mus.). " வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம்" (சிலப். 2: 93). 3. பக்கம் (அக.நி.); nearness.

*[சமம் → சமன்]*

**சமன்**[2] *šaman,* பெ. (n.) கூற்றுவன் (பிங்.); Yama the god of death.

மறுவ. காலன்

*[சமம் → சமன் = நடுநிலை தவறாதவன்]*

**சமன்கட்டு-தல்** *šaman-kaṭṭu-,* 5 செ.குவி. (v.i.) 1. கயிற்றுக்கோலின் வரையில் கயிற்றை நிறுத்துதல்; to tie a cord on the mark of a steelyard for equipoising. 2. துலாக்கோலின் தட்டுகள் இரண்டும் ஓரளவில் நிற்கும்படி நிறையைச் சேர்த்தல்; to counterpoise with a like weight or quantity.

*[சமன் + கட்டு-,]*

**சமன்சங்கலிதம்** *šaman-šaṅgalidam,* பெ. (n.) சமவெண் பார்க்க; see *šama-v-eṇ.*

*[சமன் + சங்கலிதம்]*

Skt. saṅ-kalita → த. சங்கலிதம்.

**சமன்செய்-தல்** *šaman-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) சமஞ்செய்-தல் பார்க்க; see *šamañ-jey-.*

*[சமன் + செய்-,]*

**சமன்தொடர்** *šaman-toḍar,* பெ. (n.) சமன்பாடு பார்க்க; see *šaman-pāḍu.*

*[சமன் + தொடர்]*

**சமன்படுத்து-தல்** *šaman-paḍuttu-,* 5 செ.குவி. (v.i.) 1. நிரவுதல், மேடுபள்ள மற்றதாக்குதல்; to equalize. 2. பண்படுத்துதல்; to make right.

*[சமன் + படுத்து-,]*

சமப்படுத்து-தல் பார்க்க

**சமன்பாடு** *šamanpāḍu,* பெ. (n.) 1. ஒன்றுக் கொன்று சமநிலையில் இருக்கும் அல்லது ஒத்துப்போகும் தன்மை; balance. கல்விக்கும் தொழில் வளர்ச்சிக்கும் சமன்பாடு இருந்தால்தான் வேலையில்லாநிலை நீங்கும்; 2. இரு அளவுகள் சமம் எனக் காட்டும் குறியீட்டு வடிவிலான கூற்று; mark of an equation; a+b= 9 என்பது ஒரு சமன்பாடு.

ம. சந்து

*[சமம் → சமன் + பாடு]*

**சமன்மை** *šamanmai,* பெ. (n.) இணையான தன்மை; equal state (செ.அக.).

*[சமன் + மை. 'மை' பண். பெ. ஈறு]*

**சமனகாரி** *šamana-gāri,* பெ. (n.) நோய்களைத் தணித்து உடலைக் குளிரும்படிச் செய்யும் மருந்து (பைஷஜ.); sedative.

*[சமன் → சமனகாரி = சமன் செய்வது]*

**சமனப்பாளை** *šamana-p-pāḷai,* பெ. (n.) பங்கம் பாலை அல்லது ஆடுதின்னாப் பாலை; worm-killer - Aristolochia Indica (சா.அக.).

*[சமன் + அ + பாளை]*

**சமனப்பூடு** *šamana-p-pūḍu,* பெ. (n.) செங்குன்றி; red bead vine - Abrus precatorius (typica) (சா.அக.).

**சமனபுரி** *šamana-puri,* பெ. (n.) காலனூர் (இயமபுரம்); Yama's city.

*[சமம் → சமன் → சமன + புரி]*

**சமனம்** *šamanam,* பெ (n.) 1. தணியச் செய்கை; calming, subsiding, soothing, allaying. 2. மறைப்பு (திரோபவம்) (வேதா.சூ. 47); Śiva's function of veiling, designed to keep the souls engrossed in the experiences of the world. 3. வசம்பு (மலை.); sweet flag. 4. ஆடுதின்னாப் பாலை (மலை.); worm-killer.

*[சமம் → சமன் → சமனம்]*

**சமனாகத்தாக்கு-தல்** *šamanāga-t-tākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) (இசை) யாழிற் பண்களை வலியவும் மெலியவுமாகத் தாக்காது அளவொத்த ஓசையெழும்படிச் செய்தல் (பரிபா. 19, 42, உரை); to produce a uniformly mellow tone on a musical instrument.

*[சமம் → சமன் + ஆக + தாக்கு-,]*

**சமனாதம்** *šamaṉādam*, பெ. (n.) உவர்மண் (வின்.); brackish soil.

*[உவர் → சவர் → சமன் → சமனாதம்]*

**சமனி-த்தல்** *šamaṉi-*, 4 செ.குன்றாவி. (v.t.) அமைதிப்படுத்துதல்; to pacify, soothe. "சமனிக்கு முறையாற் சபையெலா மடங்க" (குற்றா. குற. 48).

*[சமன் → சமனி-. 'இ' வினையாக்க ஈறு]*

**சமனிகை** *šamaṉigai*, பெ. (n.) இடுதிரை (வின்.); screen, curtain.

*[சமன் → சமனிகை = சமமாகக் காட்டும் திரை]*

**சமனிசை** *šamaṉ-išai*, பெ. (n) 1. நடு (மத்திம) விசை (பிங்.); middle tone. 2. சமநிலை[1] (வின்.) பார்க்க. see *šamanilai*[1].

*[சமன் + இசை]*

**சமனியகரணி** *šamaṉiya-karaṇi*, பெ. (n.) வெட்டுப் புண்ணையும் தழும்பையும் நீக்கும் மருந்து (பிங்.); medicament which removes scars, tumours, etc.,

*[சமன் → சமனியம் + கரணி]*

**சமனியம்** *šamaṉiyam*, பெ. (n.) பொது (சாமானியம்); generality. விசேட சமனியத் தியாதில் (ஞானா. 50, 13).

*[சமம் = ஏற்றத்தாழ்வற்றது, உயர்வு தாழ்வில்லாதது. சமம் → சமன் + இயம்]*

**சமனிலைமருட்பா** *šamaṉilai-maruṭpā*, பெ. (n.) வெண்பாவடியும் ஆசிரியப்பாவடியும் ஒத்து வரும் மருட்பா வகை (இலக்.வி. 749, உரை); variety of maruṭpā in which the lines in veṇbā and āširiyam metres are balanced.

*[சமம் + நிலை + மருட்பா]*

**சமனிலைவஞ்சி** *šamaṉilai-vañi*, பெ. (n.) சமநிலைவஞ்சி பார்க்க (தொல்.பொருள். 354, உரை); see *šamanilai-vañji*.

*[சமனிலை + வஞ்சி]*

**சமனை** *šamaṉai*, பெ. (n.) ஆதன் (ஆன்மா) பெரு (பெத்த) நிலையிலடையக் கூடிய உயர்ந்த பதவி (சிவசம. 35); highest stage in spiritual development of the soul when it is in bondage. 2. சிவை (சிவசத்தி) (சதாசிவ. 26); Šiva's šakti.

**சமனொளி** *šamaṉ-oḷi*, பெ. (n.) இலங்கையில் புத்தத் திருத்தலமாயுள்ள ஒரு மலை; Adam's peak in Ceylon, held sacred by Buddhists. "இலங்காதீவத்துச் சமனொளி யென்னுஞ் சிலம்பினை" (மணிமே. 28: 107).

**சமாதிகம்** *šamādigam*, பெ. (n.) ஊமத்தை; datura fastuosa (சா.அக.).

**சமாதிமூலி** *šamādi-mūli*, பெ. (n.) கருங்குன்றி; black jeweller's bead - Abrus genus (சா.அக.).

**சமாது** *šamādu*, பெ. (n.) 1. ஊமத்தை (மலை.); thorn apple. 2. கருவூமத்தை (L); purple stramony.

**சமாயிதம்** *šamāyidam*, பெ. (n.) உடன்படுகை; agreement.

*[சமம் → சமாயிதம்]*

**சமாலம்** *šamālam*, பெ.(n.) மயிற்றோகை, peacock feather. 2. விசிறி; fan.

*[அம்முதல் = பொருந்துதல். அம் → அமல் = நிறைவு. அமல் → சமல் → சமாலம் = நிறைந்து இருக்கும் மயிற்றோகை, அதுபோல் இருக்கும் விசிறி]*

**சமாலி**[1] *šamāli*, பெ. (n.) பூச்செண்டு; a kind of bouquet.

*[அம் → அமல் → சமல் → சமாலி]*

**சமாலி**[2] *šamāli*, பெ. (n.) சடைக்குறண்டி; a kind of thorny shrub - Lepidagathis scariosa (சா.அக.)

**சமாலி**[3]**-த்தல்** *šamāli-*, 4 செ.கு.வி. (v.i.). சமாளி-த்தல் (யாழ். அக.) பார்க்க; see *šamāḷi-*

க. சமாளிசு

*[சமாளி → சமாலி-,]*

**சமாலுகம்** šamālugam, பெ. (n.) குறிஞ்சா (மலை.); species of scammony swallowwort.

**சமாளம்** šamāḷam, பெ. (n.) களிப்பு (யாழ்ப்.); mirth, hilarity.

தெ. சுமாளமு

**சமாளி-த்தல்** *šamāḷi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. இருக்கும் ஏந்துகளைக் கொண்டு ஒன்றைத் தீர்த்தல் அல்லது ஒருவரை எதிர்கொள்ளுதல், ஈடுகொடுத்தல்; to cope with. manage, handle. அரசு, வறட்சியைச் சமாளிக்க நடவடிக்கை

எடுத்துள்ளது. 2. வெட்க உணர்வு அல்லது குற்ற உணர்வு தரக்கூடிய நிலையில் அதனின்று விடுபட முயலல்; to save oneself from the situation retrieve, gloss over. நாங்கள் நம்பாமதத்தார் என்று சொல்லிக் கொண்டிருந்த போது 'நேற்று வீட்டில் கடவுளைக் கும்பிட்டோம்' என்று பையன் சொல்லச் சமாளிக்க வேண்டியதாயிற்று.

க. சமாளிசு

*[சமை(யம்) + அளி – சமையளி → சமாளி. சமையம் = தக்க காலநிலை. அளித்தல் = தகுதிபற்றிக் கொடுத்தல். சமாளித்தல் சமையம் அல்லது நேரம் பார்த்து அதற்கேற்றவாறு இயங்குதல்]*

கொடுந்தமிழ் நிலங்களில் தனிச்சிறப்பாக வழங்கும் சொற்களுள் கன்னடச் சொல் சமாளி, பெருவழக்கூன்றிய திசைச்சொற்களுள் ஒன்றாகும்.

**சமான்குடைஊசி** šamān-kuḍai-y-ūsi, பெ. (n.) கிடுகு, புல் முதலியவற்றைக் கூரையாக வேயப் பயன்படும் ஊசி (செங்கை.); pecking-needle for tying grass etc., for roof formation of hut. etc.

*[சமம் → சமன் → சமான் + குடை + ஊசி]*

**சமானம்**[1] *šamāṉam,* பெ. (n.) உவமை; simile.

தெ. சமானமு

*[சமம் → சமானம்]*

உவமைப்படுத்துவது ஒப்புமை, அதாவது சமத்தன்மை பற்றியமைவதால் சமத்தினின்று திரிந்த சமானம் உவமைப் பொருளுக்காயிற்று என்க.

த. சமானம் → Skt. šamāna

**சமானம்**[2] *šamāṉam,* பெ. (n.) 1. ஒப்பு; likness, equality. 2. ஒத்துள்ளது; that which is equal or similar.

ம. சமானம்; தெ. சமானமு

*[சமம் = ஒப்பு. சமம் → சமானம்]*

த. சமானம் → Skt. samāna

**சமானன்**[1] *šamāṉaṉ,* பெ. (n.) உண்ட உணவைச் செரிக்கச் செய்யும் ஒருவகைக் காற்று; a vital air of the body, causing digestion.

தெ. சமடு

*[சமம் → சமானன் = உண்ட உணவினைச் சமம் ஆக்குவது, அதாவது ஆற்றலாக ஆக்குவது]*

சமானன் → Skt. samāna

**சமானன்**[2] *šamāṉaṉ,* பெ. (n.) ஒத்தவன், ஒப்பானவன்; person of equal rank.

*[சமானம் → சமானன்]*

**சமானி**[1]**-த்தல்** *šamāṉi-,* 4 செ.குன்றாவி. (v.t.). ஒப்பிட்டுக் கூறுதல்; to compare, to liken; to treat alike.

*[சமானம் → சமானி-,]*

**சமானி**[2] *šamāṉi,* பெ. (n.) ஒப்பானவன் (யாழ். அக.); equal.

*[சமம் → சமானன் → சமானி. 'இ' உடைமை குறித்த ஈறு]*

**சமானியம்** *šamāṉiyam,* பெ. (n.) பொது; general.

*[சமம் → சமானம் → சமானியம்]*

**சமி**[1]**-த்தல்** *šami-,* 4 செ.குன்றாவி. (v.t.) பொறுத்தல் (பிங்.); to endure, to forgive.

*[உம்முதல் = பொருந்துதல், கூடுதல். உம் → அம். அம்முதல் = பொருந்துதல். அம் → அமை. அமைதல் = பொருந்துதல், தாங்குதல். அமை → சமை → சமி.]*

சமி → Skt. kṣam

**சமி**[2]**-த்தல்** *šami-,* 4 செ.கு.வி. (v.i.) நடத்தல் (பிங்.); to go, walk.

*[சல் → (சன்) → சனி → சமி.]*

**சமித்திகா** *šamittigā,* பெ. (n.) கஞ்சா; an Indian hemp - Caunabis sativus (சா.அக.).

*[சமித்து → சமித்திகா]*

**சமித்து** *šamittu,* பெ. (n.) கஞ்சா (மலை.); a Indian hemp.

**சமிதம்**[1] *šamidam,* பெ. (n.) அமைதி; calmness, equanimity. "உள்ளார்வம் பொறை சமிதம்" (குற்றா. தல. வடவருவி. 50).

*[சமம் → சமி → சமிதம்]*

**சமிதம்**[2] *šamidam,* பெ. (n.) 1. தீ; fire; 2. போர்; war.

*[சமர் → சமிர் → சமிர்தம் → சமிதம்]*

**சமிந்தனன்** *šamindanan,* பெ. (n.) விறகு; fire-wood.

*[சமிதம் → சமிந்தனன் = தீப்பற்றி எரிவது]*

**சமிப்பாகம்** *šamippāgam,* பெ. (n.) வேல மரம்; acacia genus. *(சா.அக.)*

**சமிபாகம்** *šamibāgam,* பெ. (n.) கொன்றை *(மலை);* laburnum.

**சமிரகம்** *šamiragam,* பெ. (n.) உப்பறுகு; a species of Bermuda grass found grown in saline soils *(சா. அக.).*

**சமிரம்** *šamiram,* பெ. (n.) சிறு வன்னி; a small species of suma tree - Prosopis spicigera *(சா.அக.).*

**சமிலாகி** *šamilāgi* பெ. (n.) திப்பிலி *(மலை.);* long pepper.

**சமிலாகிகம்** *šamilāgigam,* பெ. (n.) திப்பிலி; long pepper - piper longum *(சா. அக.).*

*[சமிலாகி → சமிலாகிகம்]*

**சமிலாதி** *šamilādi* பெ. (n.) திப்பிலி வேர்; root of long - pepper *(சா. அக.).*

*[சமிலாகி → சமிலாதி]*

**சமீலகம்** *šamīlagam,* பெ. (n.) மஞ்சட் கடுக்காய்; fully - riped yellow gall - nut *(சா. அக.).*

**சமுகம்** *šamugam,* பெ. (n.) *1.* கூட்டம்; crowd. *2.* ஓர் இனத்தார்; a communal group.

*[கும் → குமுகம் → சமுகம்]*

**சமுகவளை** *šamuga-vaḷai,* பெ. (n.) தைவேளை; vailay plant - Cleome pentaphylla.

**சமுச்சயம்** *šamuccayam* பெ. (n.) தொகுதி; collection. "சமுச்சாயவுவமை" *(தண்டி. 30)*

**சமுத்திராந்தம்** *šamuttirāndam,* பெ. (n.) *1.* சிறுகாஞ்சொறி *(மலை.);* small climbing nettle. *2.* பருத்தி *(வின்.);* Indian cotton plant. *3.* சாதிக்காய்; nutmeg.

**சமுத்திரார்த்தம்** *šamuttirārttam,* பெ. (n.) சிறுநாகப்பூ *(மரவகை);* Ceylon iron - wood - Mesua ferrea (typica).

**சமுதாடை** *šamudāḍai,* பெ. (n.) தாள் அகலமாக இருக்கும் புகையிலை வகை; a kind of tobacco which has bigger leaves.

**சமுதாய்-த்தல்** *šamudāy-, 4* செ.குன்றாவி. (v.t.) *1.* சமாளித்தல் *(இ.வ.);* to manage with economy. *2.* சமாதானப்படுத்துதல் *(யாழ்ப்.);* to reconcile.

*[சமாளி → சமதாயி → சமுதாய்]*

**சமுதாயக்கிராமம்** *šamudāya-k-kirāmam,* பெ. (n.) *1.* குடிகள் பொதுவாகப் பயன்படுத்தும் நிலவருவாயுள்ள ஊர் (R.T.); village held in common. *2.* நிலக்கிழாரும் குடிகளும் நிலத்தின் வருவாயைச் சரிபாதியாக துய்க்கும் ஊர் *(வின்.);* village,whose produce is divided equally between the the proprietor and the cultivators.

*[சமுதாயம் + கிராமம்]*

**சமுதாயக்கூடம்** *šamudāya-k-kūḍam,* பெ. (n.) ஊர்மக்கள் அனைவரும் பயன்படுத்தும் பொருட்டு அமைக்கப்பட்ட பொதுக்கூடம்; community hall.

*[சமுதாயம் + கூடம்]*

**சமுதாயகாரியம்** *šamudāya-kāriyam,* பெ. (n.) பொதுச்செயல் *(வின்.);* public business.

*[சமுதாயம் + காரியம்]*

**சமுதாயச்சீர்திருத்தம்** *šamudāya-c-cīrtiruttam,* பெ. (n.) குமுகாயத்தின் வழக்கவொழுக்கங்களை முன்னேற்றத்தின் பொருட்டுத் திருத்துகை *(இக்.வ.);* social reform. தந்தை பெரியார் சமுதாயச் சீர்திருத்தத்தைத் தம் வாழ்நாள் பணியாகச் செய்தார்.

*[சமுதாயம் + சீர்திருத்தம்]*

**சமுதாயச்சோபை** *šamudāya-c-cōbai,* பெ. (n.) உறுப்புகள் தனித்தனியாகவன்றி ஒருங்கு கூடுதலால் தோன்றும் அழகு *(சீவக. 1357, உரை);* beauty of an object viewed as a whole.

*[சமுதாயம் + சோபை]*

**சமுதாயநிலம்** *šamudāya-nilam,* பெ. (n.) ஊர்ப் பொதுவாக இருந்து பயன்படுத்தும் நிலம்; land held in common by the villagers.

*[சமுதாயம் + நிலம்]*

**சமுதாயம்** *šamudāyam,* பெ. (n.) *1.* மக்களின் திரள்; company, assembly. *2.* பெருந்திரள் *(சூடா.);* collection as of things. *3.* கோயில் ஆளுமை அதிகாரிகளின் கூட்டம் (I.M.P. Trav. 99); managing committee of a temple.

4. பொதுவானது; that which is public, common to all. 5. பொதுவாகவேனும் அவ்வவர்க்குரிய பங்குப்படி பிரித்தேனும் நுகரப்படும் ஊர்ப் பொதுச்சொத்து (இ.வ.); tenure by which the members of a village community hold the village lands, funds, etc. in common or by which they divide them according to their shares. 6. உடன்படிக்கை (யாழ்ப்.); mutual agreement, compromise.

*[கும் → கும்மல் → குமியல் → குவியல் = குவிந்திருப்பது. கும் → கும்பு → கும்பல் = குவியல், திரள். கும்பு → குப்பு → குப்பல்= குவியல், கூட்டம். குப்பு → குப்பை = குவியல். கும்பு → கும்பை = சேரி. இச்சொற்கள் குவிதற்கருத்தோடு கூடற் கருத்தையும் கொண்டன. கும் → சம் → சம் + உத்து + ஆயம் - சமுதாயம். உம் → உத்து = பொருந்துதல். ஆயம் = கூட்டம். சம் என்னும் பொருந்துதல் கருத்துவேர் சம் → சமஸ் → சமஸ்த்து என வடசொற் திரிபெய்தியமையாகப் பாவாணர் கருதியதால் இச் சொல்லைத் தவிர்த்துக் குமுகாயம் என்னும் சொல்லைப் புனைந்து வழங்கினார்]*

சமுதாயம் → Skt. sam-ud-āya

**சமுப்பவம்** *šamuppavam,* பெ. (n.) தைவேளை (மலை.); a sticky plant growing in sandy places.

**சமுர்ப்பன்னம்** *šamurppannam,* பெ. (n.) ஊசிப் பாலை; rosy-milk wort - Uystelma coculantum (சா.அக.).

**சமுள்** *šamul,* பெ. (n.) சவண்டலை (மலை.); Trincomalee red wood.

**சமுனம்** *šamunam,* பெ. (n.) தேக்கு; teak - wood - Teotona graudis (சா.அக.).

**சமை[1]-தல்** *šamai-,* 4 செ.குவி. (v.i.) 1. அமைதல்; to be made, constructed, formed. 2. அணியமாதல்; to get ready, to prepare. "வனஞ் செல்வதற்கே சமைந்தார்க டம்மை" (கம்பரா. நகர்நீ.143). 3. பொருத்தமாதல்; to be suitable. "என்றிவை சமையச் சொன்னான்" (கம்பரா. அங்கத. 8).

*[அமை → சமை-,]*

**சமை[2]-தல்** *šamai-,* 4 செ.குன்றாவி. (v.t.) தொடங்குதல்; to commence. "உரை செயச் சமைந்தான்" (கம்பரா. யுத்த. மந்திரப் 118).

*[அமை → சமை-,]*

**சமை[3]-தல்** *šamai-,* 2 செ.குவி. (v.i.) 1. நிரம்புதல்; to mature. "மலர்ந்து சமைந்த தில்லைகாண்" (திருவிருத். 68, வியா. 357) 2. பூப்பு அடைதல்; to attain puberty, as a girl. "மகள் சமையவில்லை" (தனிப்பா. 1, 389, 44). 3. புழுங்குதல்; to be sultry, hot and close. இந்தக் கூட்டத்திற் சமைந்து விடுகிறது. 4. அழிதல்; to be consumed, destroyed. "ஐவர் தலைவருஞ் சமைந்தார்" (கம்பரா. பஞ்சசே. 67).

*[அமை → சமை, சமைதல் = சோறாதல், பெண்பூப்படைதல், மணஞ்செய்யத் தகுதியாதல், தகுதியாதல் (செல்வி, மே, 1978, பக். 425)]*

**சமை[4]-தல்** *šamai-,* 2 செ.குன்றாவி (v.t.) முடித்தல்; to finish. "திருமாலையைப் பாடிச் சமைந்து" (ஈடு, 69:3).

*[அமை → சமை-,]*

**சமை[5]-தல்** *šamai-,* 2 செ.கு.வி. (v.i.) திடீரென்று ஏற்படும் அதிர்ச்சி, வியப்பு முதலியவற்றால் செயலற்ற நிலைக்கு உள்ளாதல்; to be dazed when one is shocked or taken aback. தலைவர் நேர்ச்சியில் (விபத்தில்) இறந்து விட்டார் என்று கேட்டதும் கல்லாய்ச் சமைந்து போனேன்.

*[அமை → சமை-,]*

**சமை[6]-த்தல்** *šamai-,* 4 செ. குன்றாவி (v.t.) 1. படைத்தல்; to create. "ஊர்வவெல்லாஞ் சமைக்குவென்" (கம்பரா. மிதிலை. 117). 2. செய்தல்; to do, perform. "சமைப்பது கொலையலாற் றக்க தியாவதோ" (கம்பரா. வீபீடண.41) 3. அணிய மாக்குதல்; to get ready, prepare. "நிலத்தைச் சமைத்துக் கொண்டீரேல்" (கலிங். 547).

*[அமை → சமை → சமைத்தல். (செல்வி, மே, 1978, பக்.425)]*

**சமை[7]-த்தல்** *šamai-,* 4 செ.குன்றாவி (v.t.) சமையல் செய்தல், பாகஞ் செய்தல்; to cook; "சமைக்கப் படைக்கத் தெரியாமற் போனாலும் உடைக்கக் கவிழ்க்கத் தெரியனும்" (பழ.).

ம. சமெ

*[அமை → சமை-,]*

**சமை**[8] *šamai,* பெ. (n.) ஆண்டு (பிங்.); year.

*[அமை → அமைதி = நிறைவு. அமை → சமை]*

**சமை**[9] *šamai,* பெ. (n.) சமம்[1] பார்க்க; see *šamam*[1] "உட்கரண மடக்கல் சமை" *(வேதா. சூ.11).*

*[அமை → சமை]*

**சமை**[10] *šamai,* பெ. (n.) பொறுமை; patience, fortitude. "சமையுளா ருணரு மெங்க டம்பிரான்" *(பிரபுலிங். வசவண்ணர்க. 40).*

*[அமை → அமைதி = பொறுமை. அமை → சமை]*

த. சமை → Skt. ksamā

**சமைகடை** *šamai- kaḍai,* பெ. (n.) முடிவு *(யாழ்.அக.);* close, end.

*[சமை + கடை]*

**சமைந்த** *šamainda,* பெ. எ. (adj.) *1.* உடன் பட்ட; agreeing. *2.* ஆளுமை செய்ய அமைக்கப் பெற்ற; constituting for administration. *3.* திட்டப்படி அமைந்த; being according to plan. 'சமைந்த வாரியத்தார்' *(தெ. 7:96)* "இவை நாட்டுக்கு சமைந்த நாட்டுக் கணக்கு" *(தெ.க.தொ. 7:106)*

*[அமை → சமை → சமைந்த]*

**சமைந்தவடைப்பு** *šamainda-v-aḍaippu,* பெ. (n.) *1.* தகுதிவாய்ந்த சான்று; proper witness. *2.* செப்பேடு போன்றவற்றில் சான்றாகக் கையொப்பமிடுதற்குத் தகுதியுடையாராக அவையோரால் குறிக்கப்பட்ட ஊர்ப்பெருமக்கள்; village elders for attesting witness. "இவ்வூருக்கு சமைந்த அடைப்பு கவுணியந் திருமாலிருஞ் சோலை ஸ்ரீ கிருஷ்ண பட்டனும் ஆக இவ்வனையோம்" *(தெ.க.தொ. 8:290).*

*[சமைந்த + அடைப்பு]*

**சமைப்பு**[1] *šamaippu,* பெ. (n.) *1.* உழைப்பு; exertion, toil. *2.* ஊக்கம்; zeal, impulse.

*[அமை → அமைதி = செயல். அமை → சமை → சமைப்பு]*

**சமைப்பு**[2] *šamaippu,* பெ. (n.) முயற்சி; action, effort. "சமைப்பாற் சமர்த்தாற்று மாற்றல்" *(அரிச். பு. இந்தி. 46).*

*[அமை → சமை → சமைப்பு]*

**சமைப்பு**[3] *šamaippu,* பெ. (n.) அறக்கொடை (தருமக் கொடை) (S.I.I.vii.55); gift to a charity.

*[அமை → சமை → சமைப்பு]*

**சமையக்கவடன்** *šamaiya-k-kavaḍaṉ,* பெ. (n.) நேரத்திற்கேற்றபடி நடக்கும் ஏமாற்றுக்காரன் (வஞ்சகன்); a hypocrite who acts as occasion suits him; time-server.

*[சமையம் + கவடன். கவை → கவடு → கவடன் = மனம் ஒன்றிச் செயல்படாதவன், இருமனத்தன், அவ்வப்போது மாறும் இயல்பினன் ]*

சமயக்கவடன் பார்க்க

**சமையங்கடத்து-தல்** *šamaiyaṅ-kaḍattu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* வீணே காலம் போக்குதல்; to while away time. *2.* செயலைச் செய்து முடிக்காமல் நாள்கடத்துதல்; to be postponing.

*[சமையம் + கடத்து-,]*

**சமையச்சந்துக்கட்டு** *šamaya-c-candu-k-kaṭṭu,* பெ. (n.) நெருக்கடியான நேரம்; நெருக்கடியான காலம்; critical time; unlucky conjunction of circumstances; time of difficulty.

*[சமையம் + சந்து + கட்டு]*

**சமையணன்** *šamaiyaṇaṉ,* பெ. (n.) ஒரு (ஊர்த்) தெய்வம்; a village deity. தள்ளற வூர் காக்குஞ் சமையணனே *(பஞ்ச. திருமுக. 656).*

*[சமை(யம்) + அணன்]*

**சமையத்தறுவாய்** *šamaya-t-taṟuvāy,* பெ. (n.) தகுந்தகாலம்; the most proper occasions, critical junction.

*[சமையம் + தறுவாய்]*

**சமையத்தார்** *šamaiyattār,* பெ. (n.) கோயிலில் பணிபுரிவோர்; temple servants. "தேவன் மிகளோம் பதிபாதமூலத்தோமும் பட்டுடை யோமும் சமையத்தோம் மற்றும் இத்தளி பங்குடையோம்" *(தெ.க.தொ. 3:236-3)*

*[சமையம் → சமையத்தார்]*

**சமையபேதம்** *šamaiya-bēdam,* பெ. (n.) சமயவேறுபாடு பார்க்க; see *šamaya-vēṟupāḍu.*

*[சமையம் + பேதம்]*

**சமையம்** *šamaiyam,* பெ. (n.) 1. பதனடைந்த அல்லது நுகர்ச்சிக்கேற்ற நிலை; suitable or proper opportunity. 2. வேளை, காலம்; time. 'சமையம் வாய்த்தால் களவு செய்வான்' *(பழ.)* 'சமையம் வாய்த்தால் நமனையும் பலகாரம் செய்வான்' *(பழ.)*

ம. சமயம்; க. சமய; தெ. சமயமு; து. சமய, சமய

*[உத்தல் = பொருந்துதல். உத்தி (உ+தி) = பொருத்தம், நூற்குப் பொருந்தும் முறை, விளையாட்டிற் கன்னை (கட்சி) பிரிக்க, இருவர் இணைதல்.*
*உத்தம் = பொருத்தம். உத்தம் = வ. யுக்த. உத்தி → வ. யுக்தி*
*உ → ஒ. ஒத்தல் =பொருந்துதல், போலுதல்*
*உ → உம். உம்முதல் = பொருந்துதல், கூடுதல், எண்ணும்மை யிடைச்சொல்லானது இதுவே. உம் → அம் = பொருந்தும் நீர், நீரோடு நீரும் நிலத்தொடு நீரும் ஆகப் பொருந்துதல் இரு வகைத்து*
*அம் → அமர். அமர்தல் = பொருந்துதல், அன்பால் உள்ளம் ஒன்றுதல்*
*அம் → அமை. அமைதல் = பொருந்துதல், அடங்கியிருத்தல், கூடுதல், நெருங்குதல், நுகர்ச்சிக் கேற்றதாதல், தக்கதாக வாய்த்தல்.*
*அமை → அவை = கூட்டம்.*
*அமை → அமையம் = பொருந்தும் நேரம், ஏற்றவேளை, தக்கசெவ்வி, வினைநிகழும் சிறுபோது. (த.ம.4)*

*சமை + அம் = (சமையம்) → சமயம். சமைதல் = பக்குவமாதல். பெண்டிர் பூப்படைதலையும் அரிசி சோறாதலையும் சமைதல் என்று சொல்லுவதும் பக்குவமாதல் என்னுங் கருத்துப் பற்றியே. மதம் ஆதனை வீடுபேற்றிற்குப் பக்குவப் படுத்தலால், சமயம் எனப்பட்டது. சமையம் → பக்குவமான வேளை, வேளை, சமயம் பக்குவமாக்கும் நெறி அல்லது கொள்கை. வேளையைக் குறிக்கும் சமையம் என்னும் சொல், மதத்தைக் குறித்தற்கு ஐகாரம் அகரமாயிற்று. ஒருசொல் பொருள் வேறுபடுதற்கு எழுத்து மாறுவது ஒரு சொல்லியல்நூல் நெறிமுறையாகும்.*

*கா: பழைமை (தொன்மை) → பழமை (புராணம்). முதலியார் → முதலியோர் நொடிப்பழமை, பழமைபேசுதல் என்னும் வழக்குகளை நோக்குக.*

*ஒருவினைக்குத் தகுந்த சமையம் நல்ல கருத்தில் செவ்வி என்றும், தீயகருத்தில் அற்றம் என்றும் கூறப்படுகின்றன (ஒ.மொ. 19)]*

**சமையம்பார்-த்தல்** *šamaiyam-pār-,* 4 செ.கு.வி. (v.i.) வினைக்குத் தக்க வேளையை எதிர்பார்த்தல்; to watch for a suitable opportunity.

*[சமையம் + பார்-,]*

**சமையமண்டபம்** *šamaiya-maṇḍabam,* பெ. (n.) அரசன் காட்சியளிக்கும் மண்டபம்; audience chamber of a king. "சமைய மண்டப நிறைந்திருந்த திரிசங்கு மைந்தனை" *(அரிச். பு. வேட்டஞ்செய். 16).*

*[சமையம் + மண்டபம்]*

**சமையமந்திரி** *šamaiya-mandiri,* பெ. (n.) சமையவமைச்சர் பார்க்க; see *šamaiya-v-amaiccar* (தெ.க. தொ-5 க. 51 - 6 பக்-516).

*[சமையம் + மந்திரி]*

**சமையல்** *šamiyal,* பெ. (n.) 1. சமைக்கை; cooking. 2. சமைத்த உணவு; cooked food. 'சமையல் தரமாயிருந்தது' *(உ.வ.).*

*[சமை → சமையல் (செல்வி. மே.78, பக்.425)]*

**சமையல்வளி** *šamaiyal-vaḷi,* பெ. (n.) மிகக் குறைந்த அழுத்தத்தில் வளியாக மாறிவிடும் தன்மைகொண்ட நீர்மநிலையில் உள்ள கன்னெய், எரிபொருள்; cooking gas; liquefied petroleum gas.

*[சமையல் + வளி. வள் → வளி = வளைந்தடிக்கும் காற்று, காற்றுத் தன்மையிலுள்ள எரிபொருள்]*

**சமையல்வாயு** *šamaiyal-vāyu,* பெ. (n.) சமையல்வளி பார்க்க; see *šamaiyal-vaḷi.*

*[சமையல் + வாயு]*

**சமையலறை** *šamaiyal-aṟai,* பெ. (n.) சமையற்கட்டு பார்க்க; see *šamaiyaṟ-kaṭṭu.*

மறுவ. அடுக்களை, மடைப்பள்ளி

*[சமையல் + அறை]*

**சமையலேனம்** *šamaiyal-ēṉam,* பெ. (n.) சமைப்பதற்குப் பயன்படும் ஏனம் (பாத்திரம்); cooking vessel.

*[சமையல் + ஏனம்]*

**சமையவேறுபாடு** *šamaiya-vēṟupāḍu,* பெ. (n.) *1.* காலமல்லாக் காலம், பொருத்தமற்ற காலம்; unreasonableness, inopportune moment. *2.* துன்பமான காலம்; evil time.

*[சமையம் + வேறுபாடு]*

**சமையற்கட்டு** *šamaiyaṟ-kaṭṭu,* பெ. (n.) உணவு சமைக்கும் அறை, சமையலறை; kitchen.

*[சமையல் + கட்டு]*

**சமையற்குறிப்பு** *šamaiyaṟ-kuṟippu,* பெ. (n.) ஒரு குறிப்பிட்ட உணவு சமைக்கத் தரப்படும் செய்முறை விளக்கம்; recipe, tips for cooking. நேற்றுத் தொலைக்காட்சியில் சொன்ன சமையற் குறிப்பு நன்றாக இருந்தது.

*[சமையல் + குறிப்பு]*

**சமையற்கூடம்** *šamaiyaṟ-kūḍam,* பெ. (n.) சமையற்கட்டு பார்க்க; see *šamaiyaṟ-kaṭṭu.*

*[சமையல் + கூடம்]*

**சமையசமையம்**[1] *šamaiya-šamaiyam,* பெ. (n.) தக்கதும் தகாததுமான காலங்கள்; proper and improper time.

*[சமை + அல் + சமையம். 'அல்' எ.ம. இடைநிலை]*

**சமையாசமையம்**[2] *šamaiyā-šamaiyam,* பெ. (n.) உரியகாலம்; proper time. சமையா சமையத்துக் குதவ வேண்டும்.

*[சமையா + சமையம்]*

**சமையற்சோடாஉப்பு** *šamaiyaṟsōḍā-uppu,* பெ. (n.) சமைக்கும்போது பருப்பு முதலியவற்றை வேகவைப்பதற்குப் பயன்படுத்தும், ஒரு வேதியல் உப்பு; baking soda; sodium bicarbonate.

*[சமையல் + சோடா + உப்பு]*

**சமையற்புரை** *šamayaṟ-purai,* பெ. (n.) சமையற்கட்டு (இ.வ.) பார்க்க; see *šamaiyaṟ-kaṭṭu.*

*[சமையல் + புரை]*

**சமைவு**[1] *šamaivu,* பெ. (n.) நிலைமை; state, situation. "தம்பியுந் தானுநிற்பதர்யினான் சமைவீது" *(கம்பரா. அணிவ. 7).*

*[சமை → சமைவு]*

**சமைவு**[2] *šamaivu,* பெ. (n.) அழிவு; destruction. "சமைவில் வெம் மிடற்றானை" *(இரகு. குறைகூறு. 51).*

க. சமெ.

*[சமை → சமைவு]*

**சமைவு**[3] *šamaivu,* பெ. (n.) சமை[9] பார்க்க; see *šamai*[6]. "முனிவர்கள் சமைவொடும் வழிபட" *(தேவா. 35., 7).*

*[சமை → சமைவு]*

**சய்யல்** *šayyal,* பெ. (n.) சாயல்; resemblance.

*[சாயல் → சய்யல்]*

**சய்யாளம்** *šayyāḷam,* பெ. (n.) நேர்வாளம்; croton seed - Croton tiglium *(சா.அக.).*

**சய்யை** *šayyai,* பெ. (n.) செய்யுட் போக்கு; flow as of a stanza. பாட்டின் சய்யை நன்றாகவுள்ளது.

*[இணை → சியை → சய்யை]*

**சய** *šaya,* பெ. (n.) கழித்தல் குறி (–); minus sign (இலங்.) பத்து சய ஐந்து சமன் ஐந்து.

**சயகண்டி** *šayakaṇḍi,* பெ. (n.) சேகண்டி; gong. "சங்கமொடு சயகண்டி டக்கை" *(திருவேங். சத. 66).*

*[சேகண்டி → சயகண்டி. குண்டு → குண்டலம் = வட்டம், வளையம். குண்டு → குண்டை = உருண்டுதிரண்ட காளை. குண்டை → கண்டை = வட்டமான அல்லது திரண்ட மணி (வட. வர. 104). கண்டை → கண்டி]*

கண்டை → Skt. ghanta

**சயகண்டை** *šaya-kaṇḍai,* பெ. (n.) சயகண்டி பார்க்க (வின்.); see *šaya-kaṇḍi.*

*[சயகண்டி → சயகண்டை]*

**சயகம்** *šayagam,* பெ. (n.) பூவரும்பு (யாழ்.அக.); flower-bud.

*[அகைதல் = தளிர்தல்; அகை → அகையம் → அகயம் → சகயம் → சயகம்]*

**சயதரு** *šayadaru,* பெ. (n.) *பாதிரி மலர்;* trumpet flower - streos - Permum chelonoides *(சா.அக.).*

**சயதாளம்** *šaya-tāḷam,* பெ. (n.) *ஒன்பான் தாளத்தொன்று (திவா.);* a variety of time-measure, one of nava-tāḷam.

**சயந்தகம்** *šayandagam,* பெ. (n.) *சாதிலிங்கம்;* vermilion - bisul - pheret of mercury *(சா.அக.).*

**சயந்தம்** *šayandam,* பெ. (n.) *1. இறந்துபட்ட ஒரு நாடகத் தமிழ்நூல்' (சிலப். உரைப்பாயிரம்);* a Nāṭya work in Tamil, not now extent. *2. இணைக்கை வகையுளொன்று (சிலப். 3; 18, உரை);* arihand posture.

*[சயம்² → சயந்தம்]*

**சயந்தமாலை** *šayanda-mālai,* பெ. (n.) *ஒரு கணிய நூல் (வின்.);* an astronomical treatise in Tamil.

*[சயந்தம் + மாலை]*

**சயந்தன்** *šayandan,* பெ. (n.) *இந்திரனின் மகன்;* Indra's son. "இந்திரச் சிறுவன் சயந்த னாகென" *(சிலப். 3:119).*

**சயந்தனம்** *šayandanam,* பெ. (n.) *தேர்;* chariot, car. "ஆடகத் தசும்புறு சயந்தனம்" *(கம்பரா. கரன். 53).*

*[அயர்தல் = தேர் செலுத்துதல். அயர் → சயர் → சயர்த்தல் → சயர்த்தனம் → சயர்ந்தனம் → சயந்தனம்]*

**சயந்திகம்** *šayandigam,* பெ. (n.) *இருவாட்சி (ஒருவகை மல்லிகை);* a kind of jasmine - Jasminum sambuc flower monorae plant *(சா.அக.).*

**சயநீர்** *šaya-nīr,* பெ. (n.) *செயநீர் (இ.வ.);* medicinal preparation of lime and sal-ammoniac *(செ.அக.).*

*[செய் + நீர் = செயநீர் → சயநீர்]*

**சயபாளம்** *šayapāḷam,* பெ. (n.) *நேர்வாளம்;* croton seed - Croton tigilium *(சா.அக.).*

**சயம்¹** *šayam,* பெ. (n.) *1. கூட்டம் (உரி.நி.);* collection, assembly. *2. மாலை (அக.நி.);* garland.

*[கள் = கூடுதல். கள் → கள → கய → கயம் = பெருமை, பெரியது. கயம் → சயம்]*

**சயம்³** *šayam,* பெ. (n.) *சருக்கரை (சூடா.);* sugar.

*[விசயம் = கருப்பஞ்சாறு, கருப்புக்கட்டி, பாகு. பிழி → விழி → விசி → விசையம் → விசயம் → சயம்]*

**சயம்³** *šayam,* பெ. (n.) *ஆம்பல் (மூ.அ.);* Indian water lily.

*[அயம் = பள்ளம், குளம், சுனை, நீர், சேறு. அயம் → சயம் = நீர் நிலையில் வளர்வது, ஆம்பல்]*

**சயரிதம்** *šayaridam,* பெ. (n.) *தழுதாழை;* wind killer - Cleodendron phlomoides *(சா.அக.).*

**சயரோவரம்** *šayarōvaram,* பெ. (n.) *வெந்தயம்;* fenugreek or dill-seed - trigonella fenugraecum *(சா.அக.).*

**சயலாதி** *šayalādi,* பெ. (n.) *திப்பிலி;* long-pepper - Piper longum *(சா.அக.).*

**சயா** *šayā,* பெ. (n.) *1. வாதமடக்கி (மலை.);* wind killer. *2. கடுக்காய் (தைலவ. தைல. 125;* chebulic myrobalan.

**சயாகம்** *šayāgam,* பெ. (n.) *குறிஞ்சா;* scammony swallow-wort - Secamony emetica *(சா.அக.).*

**சயாலு** *šayālu,* பெ. (n.) *தூங்குமூஞ்சியன் (யாழ். அக.);* idle or sleepy fellow.

**சயிக்கம்** *šayikkam,* பெ. (n.) *மென்மை (யாழ். அக.);* fineness, thinness. *சயிக்கச் சிலை.*

தெ. சைகமு

*[ஐ = நுண்மை, மென்மை. ஐ → அய் → அயில் → சயில் → சயிக்கம்]*

**சயிக்கர்** *šayikkar,* பெ. (n.) *அரசு (மலை.);* pipal.

**சயிக்கா** *šayikkā,* பெ. (n.) *அரசமரம்;* peepal tree - Ficus religiosa *(சா.அக.).*

*[சயிக்கர் → சயிக்கா]*

**சயிக்காரி** *šayikkāri,* பெ. (n.) bastard kino - Butea frondosa *(சா.அக.).*

**சயிக்கினை** *šayikkinai,* பெ. (n.) *சைகை;* significant gesture, as with hands.

*[சயிக்கை → சயிக்கினை]*

**சயிக்கை** *šayikkai,* பெ. (n.) சயிகை (இ.வ.) பார்க்க; see *šayigai.*

*[செய் + கை = செய்கை → சைகை → சயிகை → சயிக்கை]*

**சயிகை** *šayigai,* பெ. (n.) கையால் காட்டும் குறியீடு, சைகை; significant gesture, as with hands.

*[செய் + கை = செய்கை → சைகை → சயிகை]*

**சயித்தியக்கட்டி** *šayittiya-k-katti,* பெ. (n.) தொண்டைக் கட்டி (கண்டக்கிரந்தி) (இங்.வை.); tonsilitis, quinsy.

*[சயித்தியம் + கட்டி]*

**சயித்தியம்** *šayittiyam,* பெ. (n.) *1.* குளிர்ச்சி; coldness, chillness. *2.* குளிர்ந்தகாலம்; cold season. "சயித்தியத்தி லம்பின் முழுகி" *(உத்தரரா. இராவணன் பிற. 24).* 3. ஒருநோய் (M.L.); coma.

*[சனி → சயி → (சயித்தம்) → சயித்தியம்]*

த. சயித்தியம் → Skt. šaitya. வடசொல் šaitya வுக்கு šita என்னும் வேர் மூலத்தைக் காட்டுகிறது மா.வி. அகரமுதலி. ஆயின் அச் சொல் நீரம் → ஈரம் → (சீரம்) → சீதம் என வடிவு பெற்றமையைக் காண்க.

**சயிதகம்** *šayidagam,* பெ. (n.) எருக்கு; madar plant - Calotropis gigantea *(சா.அக.).*

**சயிந்தவம்**[1] *šayindavam,* பெ. (n.) *1.* குதிரை *(பிங்.);* horse. *2.* சயிந்தவலவணம் (சூடா.); a kind of rock-salt.

**சயிந்தவம்**[2] *šayindavam,* பெ. (n.) தலை (சூடா.); head.

**சயிரியம்** *šayiriyam,* பெ. (n.) செம்முள்ளி; thorny nail-dye - barleria prionitis *(சா.அக.).*

*[அள் = கூர்மை. அள் → அய் → அயல்= கூர்மை, கூரியபொருள். அயில் → அயிர் → சயிர் → சயிரியம்]*

**சயிலந்தம்** *šayilandam,* பெ. (n.) சாதிலிங்கம் (மூ.அ.); vermilion.

**சயினி** *šayini,* பெ. (n.) திப்பிலி (மலை.; long pepper.

**சயூனி** *šayūni,* பெ. (n.) சயினி (சங்.அக.) பார்க்க; see *šayini.*

**சயை** *šayai,* பெ. (n.) முன்னை (தைலவ. தைல. 72); firebrand teak.

**சர்க்கம்**[1] *šarkkam,* பெ. (n.) சருக்கம் பார்க்க; see *šarukkam [1].*

*[சருக்கம் → சர்க்கம்]*

**சர்க்கம்**[2] *šarkkam,* பெ. (n.) படைப்பு; creation. "நிலவிய சர்க்கம்" *(மச்சபு. நைமி. 37).*

*[சருக்கம் → சர்க்கம்]*

த. சருக்கம் → Skt. sarga

சருக்கம்[2] பார்க்க

**சர்க்கரை** *šarkkarai,* பெ. (n.) சருக்கரை[1] பார்க்க; see *šarukkarai [1].*

*[சருக்கம் → சருக்கரை → சர்க்கரை]*

**சர்க்கரைக்கதளி** *šarkkarai-k-kadaḷi,* பெ. (n.) சருக்கரைக்கதளி பார்க்க; see *šarukkarai-k-kadaḷi.*

ம. சக்கரக்கதளி

*[சருக்கரை → சர்க்கரை + கதளி. குதலி → கதலி = சிறுவாழைக்காய். கதலி → கதளி]*

**சர்க்கரைக்கிழங்கு** *šarkkarai-k-kiḻaṅgu,* பெ. (n.) சருக்கரைவள்ளி பார்க்க; see *šarukkarai-vaḷḷi.*

*[சருக்கரை → சர்க்கரை + கிழங்கு = சர்க்கரைக் கிழங்கு = சருக்கரை போல் இனிக்கும் கிழங்கு]*

**சர்க்கரைக்கேளி** *šarkkarai-k-kēḷi,* பெ. (n.) சருக்கரைக்கதளி பார்க்க (இ.வ.); see *šarukkarai-k-kadaḷi.*

**சர்க்கரைக்கொடி** *šarkkarai-k-koḍi,* பெ. (n.) சருக்கரைக்கொடி பார்க்க (G.Sm.D.T.I, *215);* see *šarukkarai-k-koḍi.*

*[சருக்கரை → சர்க்கரை + கொடி. சர்க்கரை வெள்ளை நிறமுடையது. சர்க்கரை = வெள்ளை]*

**சர்க்கரைக்கொம்மட்டி** *šarkkari-k-kommaṭṭi,* பெ. (n.) சருக்கரைக்கொம்மட்டி பார்க்க (மூ.அ.); see *šarukkarai-k-kommaṭṭi.*

ம. சக்கரக்கும்மட்டி

*[சருக்கரை → சர்க்கரை + கொம்மட்டி]*

**சர்க்கரைநாரத்தை** *šarkkarai-nārattai,* பெ. (n.) சருக்கரைநாரத்தை பார்க்க (யாழ்.அக.); see *šarukkarai-nārattai.*

*[சருக்கரை → சர்க்கரை + நாரத்தை]*

**சர்க்கரைநோய்** *šarkkarai-nōy,* பெ. (n.) நீரிழிவு நோய்; diabetes.

*[சருக்கரை → சர்க்கரை + நோய். நுள் → நொள் → நோள் → நோய்]*

கணையச்சுரப்பி போதிய அளவு சுரக்காததால் உண்ணும் உணவிலுள்ள சர்க்கரைப் பகுதிகளை, ஆற்றல் பொருளாக மாற்றி, உடலுறுப்புகளுக்குக் கொண்டு செல்வது குறைவதால், ஏற்படும் நோய்.

**சர்க்கரைப்பயிர்கள்** *šarkkarai-p-payirgaḷ,* பெ. (n.) சருக்கரை எடுக்கப் பயன்படும் கரும்பு, தென்னை, பனை, ஈந்து முதலியவை; sugar contended crops such as sugarcane, coconut, palm, datepalm.

*[சருக்கரை → சர்க்கரை + பயிர்கள்]*

**சர்க்கரைப்பருப்பு** *šarkkarai-p-paruppu,* பெ. (n.) சிற்றுண்டிவகை (பணிகாரவகை) (புதுவை.); a confectionary.

*[சருக்கரை → சர்க்கரை + பருப்பு]*

**சர்க்கரைப்பறங்கி** *šarkkarai-p-paṟaṅgi,* பெ. (n.) சருக்கரைப்பூசணி பார்க்க; see *šarukkari-p-pūšaṇi.*

*[சர்க்கரை + பறங்கி]*

**சர்க்கரைப்பாகு** *šarkkarai-p-pāgu,* பெ. (n.) சருக்கரைப்பாகு பார்க்க; see *šarukkarai-p-pāgu*

ம. சக்கரப்பாவு

*[சருக்கரை → சர்க்கரை + பாகு]*

**சர்க்கரைப்பாறை** *šarkkarai-p-pāṟai,* பெ. (n.) சருக்கரைப்பாறை பார்க்க; see *šarukkarai-p-pāṟai.*

ம. சக்கரப்பாற

*[சருக்கரை → சர்க்கரை + பாறை]*

**சர்க்கரைப்பானை** *šarkkarai-p-pāṉai,* பெ. (n.) சர்க்கரைப்பாகினை வைக்கும் மட்கலம்; an earthern vessel used for preserving 'šarkkarai-p-pāgu'.

ம. சர்க்கரைப்பான, சக்கரப்பாடம்

*[சருக்கரை → சர்க்கரை + பானை]*

**சர்க்கரைப்புகையிலை** *šarkkarai-p-pugaiyilai,* பெ. (n.) சருக்கரைப்புகையிலை பார்க்க; see *šarukkarai-p-pugaiyilai.*

ம. சக்கரப்புகயில

*[சருக்கரை → சர்க்கரை + புகையிலை]*

**சர்க்கரைப்பூசணி** *šarkkarai-p-pūsaṇi,* பெ. (n.) சருக்கரைப்பூசணி பார்க்க (M.M.129.); see *šarukkarai-p-pūšaṇi.*

ம. சக்கரச்சுர, சர்க்கரமத்தன்

*[சருக்கரை → சர்க்கரை + பூசணி]*

**சர்க்கரைப்பூந்தி** *šarkkarai-p-pūndi,* பெ. (n.) சருக்கரைப்பூந்தி பார்க்க (இந்துபாக.); see *šarukkarai-p-pūndi.*

*[சருக்கரை → சர்க்கரை + பூந்தி]*

**சர்க்கரைப்பேச்சு** *šarkkarai-p-pēccu,* பெ. (n.) சருக்கரைப்பேச்சு பார்க்க; see *šarukkarai-p-pēccu.*

ம. சக்கரவாக்கு

*[சருக்கரை → சர்க்கரை + பேச்சு]*

**சர்க்கரைப்பேரி** *šarkkarai-p-pēri,* பெ. (n.) சருக்கரைப்பேரி பார்க்க (இ.வ.); see *šarukkarai-p-pēri.*

*[சருக்கரை → சர்க்கரை + பேரி]*

E. pear → த. பேரி

**சர்க்கரைப்பொங்கல்** *šarkkarai-p-poṅgal,* பெ. (n.) சருக்கரைப் பொங்கல் (பதார்த்த. 1403) பார்க்க; see *šarukkarai-p-poṅgal* (செ.அக.).

ம. சக்கரச் சோறு

*[சருக்கரை → சர்க்கரை + பொங்கல்]*

**சர்க்கரைப்பொன்னாச்சி** *šarkkarai-p-poṉṉācci,* பெ. (n.) சருக்கரைப்பொன்னாச்சி பார்க்க (இ.வ.); see *šarukkari-p-poṉṉācci* (செ.அக.)

*[சருக்கரை → சர்க்கரை + பொன்னாச்சி]*

**சர்க்கரைமா** *šarkkarai-mā,* பெ. (n.) சருக்கரைமா பார்க்க; see *šarukkarai-mā.*

ம. சக்கரமாவு

*[சருக்கரை → சர்க்கரை + மா]*

**சர்க்கரைலாடு** *šarkkarai-lāḍu,* பெ. (n.) இனிப்பு வகை (இந்துபாக. 311); a kind of sweet confection.

*[சருக்கரை → சர்க்கரை + லாடு]*

Skt. laḍḍu → த. லட்டு → லாடு

**சர்க்கரைவட்டு** *šarkkarai-vaṭṭu,* பெ. (n.) சருக்கரைவட்டு பார்க்க (S.I.I. vii, 311); see *šarukkarai-vaṭṭu.*

*[சருக்கரை → சர்க்கரை + வட்டு. வட்டு = வட்டமான கருப்புக்கட்டி]*

**சர்க்கரைவர்த்தி** *šarkkarai-vartti,* பெ. (n.) பூடுவகை (வின்.); a plant - Chenopodium album. (செ.அக.)

*[சருக்கரை → சர்க்கரை + வர்த்தி]*

**சர்க்கரைவழங்கு-தல்** *šarkkarai-vaḻaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மகிழ்ச்சிக்குறியாகச் சருக்கரை கொடுத்தல் (கொ.வ.); to distribute sugar, as a token of rejoicing.

*[சருக்கரை → சர்க்கரை + வழங்கு-,]*

**சர்க்கரைவள்ளி** *šarkkarai-vaḷḷi,* பெ. (n.) சருக்கரைவள்ளி பார்க்க; see *šarukkarai-vaḷḷi.*

ம. சக்கரவள்ளி

*[சருக்கரை → சர்க்கரை + வள்ளி]*

**சர்க்கரைவள்ளிக்கிழங்கு** *šarkkarai-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ. (n.) சருக்கரைவள்ளி பார்க்க; see *šarukkarai-vaḷḷi.*

ம. சக்கரவள்ளி

*[சருக்கரை → சர்க்கரை + வள்ளி + கிழங்கு]*

**சர்க்கரைவாயன்** *šarkkarai-vāyaṉ,* பெ. (n.) 1. இனிமையாகப் பேசுபவன்; one who trades in sweet words, one having sweet tongue. 2. உள்ளத்தில் உள்ளதை மறைத்து இனிமையாகப் பேசுபவன்; one who utters pleasing but insincere words.

ம. சக்கரவாயன்

*[சருக்கரை → சர்க்கரை + வாயன்]*

**சர்க்கரைக்கல்** *šarkkarai-k-kal,* பெ. (n.) பனங்கற்கண்டு; sugar - candy from palm toddy (சேரநா.).

ம. சக்கரக்கல்லு

*[சர்க்கரை + கல்]*

**சர்க்கரைக்கள்** *šarkkarai-k-kaḷ,* பெ. (n.) சருக்கரை உண்டாக்குவதற்குப் பயன்படுத்தும் இனிப்புக்கள்; the sweet toddy from which jaggery is produced.

ம. சக்கரக்கள்ளு

*[சர்க்கரை + கள்]*

**சர்ச்சரை**[1] *šarccarai,* பெ. (n.) சருச்சரை (சூடா.); roughness, as of bark.

*[சரசரப்பு → ஒலிகுறிப்புச்சொல். சரசர → சர்ச்சரை = சரசரப்பு, சரசரப்பானது]*

**சர்ச்சரை**[2] *šarccarai,* பெ. (n.) சச்சரவு (இ.வ.); quarrel.

*[சச்சரவு → சர்ச்சரை]*

**சர்ச்சை** *šarccai,* பெ. (n.) 1. ஆராய்ச்சி; inquiry, critical study. 'சர்ச்சையில்லாமையால் செய்தி (விஷயம்) மறந்துவிட்டது' (உ.வ.). 2. சொற்போர்; discussion, debate.

Skt. šarcā

**சர்ப்ப** *šarppa,* ஏ.வி. (v.imp.) விரைந்து நட; run, hurry up. "ஏகுமின் சர்ப்ப வென்றான்" (திருவிளை. இந்திரன். 64).

*[சர் → சர்ப்ப → விரைந்து நட என்னும் பொருளில் வந்த ஒலிக்குறிப்புச் சொல். இது முக்காலங்களிலும் புடைபெயர்ச்சி கொள்ளாமல் ஏவல்வினை வடிவத்தில் மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது]*

**சர்ப்பக்கடி** *šarppa-k-kaḍi,* பெ. (n.) பாம்புக்கடி; snake-bite.

*[சர்ப்பம் + கடி]*

**சர்ப்பக்காவடி** *šarppa-k-kāvaḍi,* பெ. (n.) கடவுள் திருமுன்பு திருமுழுக்குப்பொருளாக மாறி வியப்பு (அதிசயம்) விளைக்கக்கூடியபடி நல்லபாம்பைக் கலத்திலிட்டு எடுக்குங் காவடி; a serpent taken to a temple in a kāvaḍi under a vow, the serpent miraculously transforming into an agreeable offering in the presence of the deity.

*[சர்ப்பம் + காவடி]*

**சர்ப்பக்காவு** *šarppa-k-kāvu,* பெ. (n.) நாகங்கள் இருப்பதற்கு அமைந்த தோட்டம் (இ.வ.); serpent's grove, considered a sacred place.

*[சர்ப்பம் + காவு]*

**சர்ப்பசயனம்** *šarppa-šayanam,* பெ. (n.) திருமாலின் பாம்பணை; Visṇu's serpent couch.

[சர்ப்பம் + சயனம்]

Skt. šayana → த. சயனம்

**சர்ப்பசாந்தி** *šarppa-šānti,* பெ. (n.) குழந்தை பிறந்து இறந்திடாமல் நீண்ட ஆயுளோடு வாழவேண்டித் தாம் முற்பிறவியில் நல்ல பாம்பைக் கொன்றதனாலுண்டான தீவினையை நீக்கும் சடங்கு; rites in expiation of the sin of cobra - killing in past births, performed with a view to beget long-lived offspring.

[சர்ப்பம் + சாந்தி]

Skt. šandi → த. சாந்தி

**சர்ப்பசாவம்** *šarppa-šāvam,* பெ. (n.) முற்பிறப்பில் நல்லபாம்பைக் கொன்றதனால் பிறங்கடையற்றுப் போம்படி நேருஞ் சாவம்; curse of childlessness resulting from cobra killing in former births (செ.அக.).

[சர்ப்பம் + சாவம்]

**சர்ப்பசிரம்** *šarppa-širam,* பெ. (n.) பாம்பின் படம் போல ஐந்து விரல்களையும் நெருக்கி உள்வளைக்கும் முத்திரை(அபிநய) க்கை (பரத. பாவ.23); a hand pose which consists in joining the five fingers of a hand and blending them in the form of serpent's hood.

[சர்ப்பம் + சிரம்]

Skt. širas → த. சிரம்

**சர்ப்பதட்டம்** *šarppa-taṭṭam,* பெ. (n.) சர்ப்பக்கடி பார்க்க; see *šarppa-k-kaḍi.*

[சர்ப்பம் + தட்டம்]

Skt. dasṭa → த. தட்டம்.

**சர்ப்பம்** *šarppam,* பெ. (n.) 1. பாம்பு (பிங்.): snake. 'சர்ப்பத்தின் வாய்த் தவளை போல' (பழ.) 2. பகல் முழுத்தம் (முகூர்த்தம்) பதினைந்தனுள் இரண்டாவது (விதான. குணாகுண.73, உரை.); the second of 15 divisions of day.

[சர்ரெனல் = விரைந்து செல்லுதலை உணர்த்தும் ஒலிக்குறிப்புச் சொல். சர் → சருப்பம் → சர்ப்பம். மாந்தன் பார்வையினின்று மிக விரைந்து (சர்ரென்று) மறையும் இயல்பினைக் கொண்டது. sarpa ஊர்ந்து செல்லுதல் என்னும் பொருளையுடைதாக மா.வி. அகரமுதலி காட்டும். ஊர்ந்துசெல்லும் உயிரிகள் பல் இருப்பதையும், ஊர்ந்துசெல்லுதல் என்பதனைக் காட்டிலும் விரைந்து மறையும்தன்மை பொருத்தமாக இருப்பதையும் கண்டுகொள்க.]

சருப்பம் → Skt. sarpa.

சருப்பம் பார்க்க

**சரக்க** *šarakka,* கு.வி.எ. (adv.) விரைவாக; quickly, speedily. "சரக்க விக்கதவந் திறப்பிம்மினே" (தேவா. 843:10).

[சர் → சரக்க = ஒலிக்குறிப்புச் சொல்]

**சரக்கட்டை** *šara-k-kaṭṭai,* பெ. (n.) தேர் செல்லும் போது திசைதிருப்பவும் நிறுத்தவும் பயன்படும் கட்டை; log used to turn direction of a car.

[சரம் + கட்டை]




**சரக்கவிழ்-த்தல்** *šara-k-kaviḻ-,* 4 செ.கு.வி. (v.i.) பொய்யான செய்திகளைக் கூறுதல் (கொ.வ.); lit., to spread out one's wares to make false statements.

[சரக்கு + அவிழ்-,]

மூட்டையை அவிழ்த்துப் பொருள்களைக் காட்டுவதுடன், உள்ளத்துள் நினைத்து வைத்துள்ள பொய்ச்செய்திகளைக் காட்டுவதை, ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளதன் பேரிலேயே, "சரக்கவிழ்த்தல்" பொய்யான செய்திகளைக் கூறுவதற்கு ஆளப்பெற்றுள்ளது.

**சரக்கறை** *šarakkaṟai,* பெ. (n.) 1. பண்டங்கள் வைக்குமிடம்; store house. "எல்லாஞ் சாலக்கிடக்குஞ் சரக்கறையோ" (தேவா. 1198:5).

2. **பொன்னறை;** treasury. "சரக்கறையிற் புக்கு வேண்டு மொண்கனக மெடுத்திட்டு" (திருவாலவா. 39:4). 3. **அணிகலன்கள் (ஆபரணங்கள்) வைக்கும் அறை** (சிலப். 5:7, உரை.); jewel house locker.

[சரக்கு + அறை]

**சரக்காள்** *šarakkāḷ,* பெ. (n.) **பொதுச்செய்தி பலவுந் தெரிந்தவன்** (கொ.வ.); a well - infomed person.

[சரக்கு + ஆள்]

சரக்கு = காய்ந்தபொருள். பொருள்கள் இருத்தல் போல், செய்திகள் பலவற்றைக் கொண்டவன் சரக்காள் எனப்பட்டான்.

**சரக்காளி**[1] *šarakkāḷi,* பெ. (n.) சரக்காள் பார்க்க (க.வ.); see *šarakkāḷ.*

[சரக்காள் → சரக்காளி]

**சரக்காளி**[2] *šarakkāḷi,* பெ. (n.) **மிகுதி;** excess. 'ரசத்தில் புளிப்புச் சரக்காளியா யிருக்கிறது' (இவ.).

[சரக்கு + ஆளி]

**சரக்காறு** *šarakkāṟu,* பெ. (n.) **அறுவகைச் சரக்குகள்;** the six kinds of drugs.

[சரக்கு + ஆறு]

ஒவ்வொரு பகுதிக்கும், வெவ்வேறு வகையான பொருள்கள் முதன்மையான பொருள்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. அவற்றுள் சில பகுதிகளின் முதன்மையான ஆறு சரக்குகளைப் பற்றிச் சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி குறித்துள்ளது.

(அ) வங்காள நாட்டின் அறுவகைச் சரக்குகள்:
1. இலிங்கம்; cinnabar
2. பச்சைக் கருப்பூரம்; crude camphor
3. குங்குமப்பூ,; European saffron.
4. படிகாரம்; alum.
5. சாரம்; sal ammoniac.
6. சுக்கு; dried ginger.

(ஆ) மலையாள நாட்டின் அறுவகைச் சரக்குகள்:
1. கொச்சிவீரம்; Cochin corrosive sublimate
2. மிளகு; black pepper
3. திப்பிலி,; long pepper.
4. ஏலம்; cardamon.
5. கிராம்பு; clove.
6. சிற்றரத்தை; lesser galangal.

(இ) கிழக்குக்கடற்கரையில் விளையும் அறுவகைச் சரக்குகள்:
1. கல்லுப்பு; insoluble sea - salt
2. இந்துப்பு; sindh salt
3. பொட்டிலுப்பு; nitre
4. அப்பளாகாரம்; sub-carbonate of soda
5. பலகறை; cowry
6. கடல்நுரை; sea - froth

(ஈ) வடமேற்குக் கடற்கரையில் விளையும் அறுவகைச் சரக்குகள்:
1. கோதளங்காய்; fruit of common Indian rak
2. கடுக்காய்; gallnut
3. சீயக்காய்; soap - pad
4. பொன்னங்காய்; soap - nut
5. தேற்றான்கொட்டை; water clearing nut
6. வலம்புரிக்காய்; Indian sarew tree (right)

(உ) உள்ளூரின் (அ) நமது நாட்டின் அறுவகைச் சரக்குகள்:
1. சவுரிப்பழம்; shavari fruit
2. தூதளம்பழம்; fruit of prickly shoonday
3. பிரண்டைப்பழம்; cissus fruit
4. கண்டங்கத்திரிப்பழம்; fruit of prickly brinjal
5. கோவைப்பழம்; red bitter - melon fruit
6. இந்திரகோபப்பூச்சி; leady's fly (சா. அக.)

**சரக்கியங்கி** *šarakkiyaṅgi,* பெ. (n.) சரக்குந்து பார்க்க; see *šarakkundu.*

[சரக்கு + இயங்கி]

**சரக்கு** *šarakku,* பெ. (n.) 1. **வணிகப்பண்டம்;** goods, articles of merchandise. "இலச்சினை யொற்றிய தலைச்சுமைச் சரக்கினர்" (பெருங். மகத. 17,152). 'சரக்குக் கண்ட இடத்திலே பிள்ளைக்கு அவிழ்தம் கொடுக்க நினைக்கிறது' (பழ.). 2. **பொன்** (பிங்.); gold. 3. **விரிந்த கல்வியறிவு முதலியவற்றால் ஏற்படுந் தகுதி அல்லது திறமை;** solid worth, ability. 4. **சம்பாரச் சரக்கு முதலியன;** curry-stuffs, spices, etc. 5. **மருந்துப் பண்டம்;** medicinal substance, especially arsenic alkalies and acids. 'சரக்குக்கண்ட இடத்திலே பிள்ளை பெறுகிறது' (பழ.).

ம. சரக்கு; க. சரகு, சர்கு; தெ., து. சரக்கு.

[சர் → சரகு → சரக்கு = காய்ந்தபண்டம் காய்ந்த வணிகப்பண்டம், வணிகப் பண்டம், கல்வியறிவு (வே.க.213)]

**சரக்கு**[2] *šarakku,* பெ. (n.) 1. தென்னை, பனை, அரிசி, வெல்லம் முதலியவற்றிலிருந்து வடிக்கப்படும் புளிப்பேறிய மதுவகை (இ.வ.); arrack. 2. குடிதேறல்; liquor. 3. கள்; toddy.

*[அரக்கு → சரக்கு]*

இனி, குழூஉக்குறியாகப் பண்டம் என்னும் பொருள்படுஞ் சரக்கு, சாறாயம், வெறிநீர் ஆகியவற்றிற்குப் பயன்பட்டதென்றுமாம்.

**சரக்கு**[3] *šarakku,* பெ. (n.) முண்டைநோய் (கொ.வ.); venereal discase.

*[சரக்கு[2] → சரக்கு = இடக்கரடக்கலாய்க் குறிக்கப்பட்டது]*

**சரக்குக்கட்டு-தல்** *šarakku-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சரக்குப்பிடி-த்தல் பார்க்க; see *šarakku-p-piḍi-.* 2. வணிகத்துக்குப் பண்டம் அனுப்புதல்; to pack and forward merchandise. 3. இதள் (இரசம்) முதலியவற்றை இறுக்கிக்கட்டியாகச் செய்தல்; to solidify liquids as mercury, for medicinal purposes.

*[சரக்கு + கட்டு-,]*

**சரக்குக்கடை** *šarakku-k-kaḍai,* பெ. (n.) கள்ளுக்கடை (இ.வ.); toddy-shop.

*[சரக்கு + கடை]*

**சரக்குக்கூடம்** *šarakku-k-kūḍam,* பெ. (n.) சரக்கறை பார்க்க; see *šarakkaṟai.*

*[சரக்கு + கூடம்]*

**சரக்குச்சுண்ணம்** *šarakku-c-cuṇṇam,* பெ. (n.) சவ்வீரம் (வின்.); peroxide compound of mercury, sulphur, etc.

மறுவ. வீரம்

*[சரக்கு + சுண்ணம். சுள் → சுண் → சுண்ணம்]*

**சரக்குந்து** *šarakkundu,* பெ. (n.) பண்டங்களை ஏற்றிச்செல்லும் இயங்கி; lorry.

*[சரக்கு + உந்து]*

**சரக்குப்பண்ணு**[1]**-தல்** *šarakku-p-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வெயிலிற் காயவைத்தல் (யாழ்ப்.); to dry in the sun.

*[சரக்கு + பண்ணு. சர் → சரகு → சரக்கு = காய்ந்த பண்டம். சரக்குப் பண்ணு-தல் = பண்டத்தைக் காயவைத்து உலர்ந்ததாக (சரக்காக) ஆக்குதல்]*

**சரக்குப்பண்ணு**[2]**-தல்** *šarakku-p-paṇṇu-,* 15 செ.குன்றாவி. (v.t.) நன்குமதித்தல் (வின்.); to regard or esteem.

*[சரக்கு + பண்ணு. சர் → சரகு → சரக்கு= காய்ந்த பண்டம், பண்டம். சரக்குப் பண்ணுதல் = பண்டம் உருவாக்குதல், மதிப்புக் கூட்டுதல், நன்குமதித்தல்]*

**சரக்குப்பறி-த்தல்** *šarakku-p-paṟi-,* 14 செ.கு.வி. (v.i.) பண்டங்களைக் கப்பலினின்று இறக்குதல்; to unload cargo. "சரக்குப் பறித்தற்குக் கடலில் நின்ற மரக்கலங்கள்" (மதுரைக். 85, உரை.).

*[சரக்கு + பறி-,]*

**சரக்குப்பிடி-த்தல்** *šarakku-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வணிகத்துக்குப் பண்டங்களை மொத்தமாக வாங்குதல்; to buy up goods wholesale for trade. 'மண்டிக் கணக்கப்பிள்ளை சரக்குப் பிடிக்கச் சென்றுள்ளார்' (உ.வ.).

*[சரக்கு + பிடி-,]*

**சரக்குப்புரக்கெனல்** *šarakku-p-pura-k-kenal,* பெ. (n.) 1. கிரீச்சொலி, புதுச்செருப்பொலியைக் காட்டும் ஒலிக்குறிப்பு; creaking sound as of shoes. 2. எடுப்பான நடைக்குறிப்பு (இ.வ.); brisk, bustling walk.

*[சரக்கு + புரக்கு + எனல்]*

**சரக்குமண்டி** *šarakku-maṇḍi,* பெ. (n.) சரக்கறை, பண்டங்கள் வைக்குமிடம்; warehouse (செஅக.).

*[சரக்கு + மண்டி. மண்டுதல் = நெருங்குதல், நிறைதல், நிறைந்து கூடுதல். மண்டு → மண்டி = பொருள்கள் நிறைந்த இடம், சரக்கறை]*

**சரக்குமாறு-தல்** *šarakku-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பண்டமாறுதல்; to barter goods.

*[சரக்கு + மாறு-,]*

**சரக்குறடு** *šara-k-kuṟaḍu,* பெ. (n.) நெருப்பில் காய்ந்து சூடான உளியைத் தட்டிக் கூராக்கப் பிடித்துக் கொள்ளப் பயன்படும் கம்மியக் கருவி; forcep.

*[சரம் + குறடு]*

**சரக்கெனல்** *šarakenal,* பெ. (n.) ஆணி, தூவல் (பேனா) முதலியவற்றாற் கீறுதல், புல்லை வேகமாக வெட்டுதல், காய்கறிகளை நறுக்குதல் ஆகியவற்றை உணர்த்தும் ஒலிக் குறிப்புச்சொல்; the sound rending, of scratching with nails or with a pen, or cutting the grass and of mincing vegetables.

க. சரக்கென

*[சரக்கு + எனல்]*

**சரக்கேற்றிப்பறித்தல்** *šarakkēṟṟi-p-paṟittal,* தொ.பெ. (vbl.n.) ஆழமில்லாத துறை முகங்களுக்கு வந்த சரக்கேற்றிய கப்பலைக் கடலில் தொலைவிலேயே நிறுத்திப் படகு மூலம் சரக்கை இறக்குதலும் ஏற்றுதலும் (மீனவ.); unloading or loading cargo.

*[சரக்கு + ஏற்றி + பறித்தல்]*

**சரக்கேற்று-தல்** *šarakkēṟṟu-,* 15 செ.கு.வி. (v.i.) வண்டியிலும் கப்பலிலும் வணிகப் பண்டம் ஏற்றுதல்; to load goods in carts, ships.

*[சரக்கு + ஏற்று. ஏறு → ஏற்று-,]*

**சரக்கொட்டகை** *šara-k-koṭṭagai,* பெ. (n.) பூ மாலைகளால் அழகுபடுத்தப்பட்ட கொட்டகை (இ.வ.); a pandal decorated with festoons (செ.அக.).

*[சரம் + கொட்டகை. சர் → சரம் = நீண்ட அல்லது நேரான மணிக்கோவை அல்லது மலர்த்தொடை]*

**சரக்கொன்றை** *šara-k-koṉṟai,* பெ. (n.) நேர் நேராகப் (சரஞ்சரமாகப்) பூக்கும் கொன்றை வகை (பதார்த்த. 204); Indian laburnum.

*[சரம் + கொன்றை]*

**சரக்கொன்றைப்புளி** *šara-k-koṉṟai-p-puḷi,* பெ. (n.) சரக்கொன்றைப் பழத்தின் உள்ளீடு; pulp of Indian labournam, used as medicine.

*[சரக்கொன்றை + புளி]*

**சரகண்டம்** *šara-gaṇḍam,* பெ. (n.) நில நடுக்கோட்டு (பூமத்தியரேகை)க்கும் குறிப்பிட்ட இடத்திற்குமுள்ள கோள்களின் உச்சவேறுபாடு; ascensional difference between the equator and the place in question.

*[சரம் → சரகண்டம்]*

த. சரகண்டம் → Skt. šarakhaṇḍa

**சரகத்து** *šaragattu,* பெ. (n.) எல்லை; boundary.

*[சரகம் → சரகத்து]*

சரகம்[1] பார்க்க

**சரகதி** *šaragadi,* பெ. (n.) அம்பு போற் செல்வதாகிய குதிரை (அசுவகதி) வகை; a horse's pace resembling arrow's fight, one of five ašuva-kadi.

*[சரம் + கதி]*

**சரகம்[1]** *šaragam,* பெ. (n.) 1. எல்லை; boundary. 2. நாட்டின் பகுதி; region, quarter, district.

*[சுல் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சரு → சருகு = சாய்தல், வளைதல். சரு → சருக்கம் = நூற்பிரிவு. சரு → சருகம் → சரகம் = நாட்டின் உட்பிரிவு]*

**சரகம்[2]** *šaragam,* பெ. (n.) 1. தேனீ (பிங்.); bee. 2. வண்டு; beetle.

சரகம் → Skt. šaraghā

**சரகமாதவம்** *šaraga-mādavam,* பெ. (n.) முட்கிளுவை; Indian balm of Gilead - balsmodeudron berryi (சா.அக.).

**சரகாண்டபாடாணம்** *šaragāṇḍa-pāḍāṇam,* பெ. (n.) பிறவிச் செய்நஞ்சு (பாடாணம்) வகை (மூ.அ.); a mineral poison.

**சரகாண்டம்** *šaragāṇḍam,* பெ. (n.) அம்புக் கூடு (வின்.); quiver.

*[சரம் + காண்டம். கள் → கண்டு → கண்டம் = பெருந்துண்டு, பெருநிலப்பிரிவு. கண்டம் → காண்டம் = நூற்பெரும்பிரிவு. அம்புத்தொகுதியை வைக்கும் கூடு.]*

**சரகாதி** *šaragādi,* பெ. (n.) பெருமருந்து; great medicine or Indian birth - wort- aristolochia indica (சா.அக.).

**சரகு** *šaragu,* பெ. (n.) சருகு[1] பார்க்க; see *šarugu*[1].

*[சருகு → சரகு]*

**சரகுண்ணி** *šaraguṇṇi,* பெ. (n.) சிறுவுண்ணி வகை (ஈடு, 1, 5, 5, ஜீ.); a species of small cattle tick.

*[சரகு + உண்ணி. சர் → சர → சருகு = காய்ந்த இலை. சர் → சரகு = காய்ந்தது, சிறியது]*

**சரகூடம்** *šara-kūḍam,* பெ. (n.) பகைவர் படைக்கலந் தாக்காதவாறு அம்பினாற் கட்டும் பந்தல் (சீவக. 1680, உரை); a pandal - like formation of arrows serving as protection from hostile weapons.

[சரம் + கூடம். கூடு → கூடம்]

**சரங்கம்** *šarangam,* பெ. (n.) செய்நஞ்சு (பாடாணை) வகை (வின்.); a kind of arsenic.

**சரச்சிகா** *šaraccigā,* பெ. (n.) குறிஞ்சா; scammony swallow-wort - Scamone ematica (சா.அக.).

**சரச்சிரா** *šaraccirā,* பெ. (n.) கிலுகிலுப்பை; rattle - wort - Crotalaria laburnifolia (சா.அக.).

**சரச்சிறு** *šaracciṟu,* பெ. (n.) குறிஞ்சா (மலை); a species of scammony swallow-wort (செ.அக.).

**சரசகாரி** *šarasakāri,* பெ. (n.) வண்டு கொல்லி அல்லது தேவதாரு; Himalayan deodar; worm - killer - cedrus libani (deodara).

**சரசகாலினி** *šarasa-kāliṉi,* பெ. (n.) தேக்கு; teak wood - Tecona grandis (சா.அக.).

**சரசச்சங்கு** *šarasa-c-cangu,* பெ. (n.) கொம்பு வடிவான சங்கு; horny conch (சா.அக.).

[சரசம் + சங்கு]

**சரசசமுகம்** *šarasa-samugam,* பெ. (n.) ஆசாங் கோரை; white basil - Ocimum album (சா.அக.).

**சரசர-த்தல்** *šarašara-,* 12 செ.கு.வி. (v.i.) 1. சருகு முதலியவை ஒலித்தல் (வின்.); to rustle, as dry leaves. 2. தொடுதற்குச் சுரசுரவென்றிருத்தல்; to be rough of surface.

[சர சர → ஒலிக்குறிப்புச்சொல். சரசர → சரசர-த்தல்]

**சரசரப்பு**[1] *šarašarappu,* பெ. (n.) ஒலிக்கை; rustling.

[சரசர → சரசரப்பு. 'பு' பெயராக்க ஈறு]

**சரசரப்பு**[2] *šarašarappu,* பெ. (n.) 1. மொருமொரு வென்றிருக்கை; rustling, as of starched cloth. 2. சுரசுரப்பு; roughness of surface or edge. "உகிர்.......... சரசரப் பகன்றா லங்கவை நல்ல" (திருவிளை. வேல்வளை.37).

[சுள் → சுர் → சுர. சுரசுர → சுரசுரப்பு = முள்ளுமுள்ளாய் அல்லது கரடுமுடாய் இருத்தல். சுரசுரப்பு → சரசரப்பு]

**சரசரெனல்** *šara-šareṉal,* பெ. (n.) 1. உலர்ந்த இலைகள் அசைவதை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; rustling, as of dry leaves. 2. விரைந்து எளிதிற் செல்லுதற்குறிப்பு; gliding along, moving quickly without resistance.

[சரசர + எனல்]

**சரசாத்திரம்** *šara-šāttiram,* பெ. (n.) மூக்கு (நாசி) வழியாக மூச்சு விடுவதினின்று, குறி சொல்லுவதைப் பற்றிய நூல் (கொ.வ.); art of divination by a study of respiration.

[சர + சாத்திரம். சர் → சர = நடத்தல், செல்லுதல், மூச்சுச் செல்லுதல்]

Skt. sāstra → த. சாத்திரம்

**சரசொத்து** *šara-šottu,* பெ. (n.) அசையும் சொத்து (C.G.) movable property.

[சரம் + சொத்து]

**சரசோதிடம்** *šara-šōdiḍam,* பெ. (n.) சரசாத்திரம் (கொ.வ.) பார்க்க; see *šara-sāttiram.*

[சர + சோதிடம்]

Skt. jyōtisa → த. சோதிடம்

**சரஞ்சரமாய்** *šarañšaramāy,* கு.வி.எ. (adv.) அடுக்கடுக்காய், வரிசைவரிசையாய்; in piles, in tiers. அவரைக்காய் சரஞ்சரமாய்த் தொங்குகிறது.

[சரம் + சரம் + ஆய்]

**சரட்டட்டிகை** *šaraṭṭaṭṭigai,* பெ. (n.) பொற்சரடு செய்து பட்டையாகத் தட்டப்பட்டுப் பதக்கங் கட்டிய கழுத்தணி வகை; necklace of gold threads with a padakkam pendant.

[சரடு + அட்டிகை. ஒட்டு → அட்டு → அட்டி → அட்டிகை]

**சரட்டடைப்பன்** *šaraṭṭaḍaippaṉ,* பெ. (n.) கால்நடை நோய்களுள் ஒன்று (மாட்டுவா. 82); a kind of cattle disease.

[சரடு + அடைப்பன்]

**சரட்டுச்சரட்டெனல்** *šaraṭṭu-c-caraṭṭeṉal,* பெ. (n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr.

swishing, rushing sound, as of air in motion. 2. தாராளமாய் மலங்கழிதற் குறிப்பு (யாழ்ப்.); onom. expr. of free and easy motion without obstruction, as of stools.

[சரட்டு + சரட்டு + எனல்]

**சரட்டுத்தாலி** *šarattu-t-tāli*, பெ. (n.). பொன் சரட்டிற் கோத்தணியும் தாலிவகை (இ.வ.); a kind of wedding badge hung in a gold necklet.

[சரடு + தாலி]

**சரட்டுப்பொருத்தம்** *šarattu-p-poruttam*, பெ. (n.). திருமணப்பொருத்தங்களுள் ஒன்று; a kind of agreement in the horoscopes of the prospective bride and bridegroom.

[சரடு + பொருத்தம்]

**சரட்டுமேனிக்கு** *šarattu-mēṉikku*, கு.வி.எ. (adv.) சகட்டுமேனிக்கு பார்க்க; see šagattu-mēṉikku (செ.அக.).

[சகட்டுமேனிக்கு → சரட்டுமேனிக்கு]

**சரட்டெனல்** *šarattenal*, பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr. of moving quickly.

[சரட்டு + எனல். சர → சரட்டு]

**சரட்டை** *šarattai*, பெ. (n.) 1. சிரட்டை (இ.வ.); coconut shell. 2. மீன்வகை; a fish, Malaeanthus.

ம. சிரட்ட (பெரும்பாலும் கொட்டங்காய்ச் சில்லின் கீழ்ப்பகுதி), சிரட்டி (கொட்டாங் காய்ச்சில்லின் மேற்பகுதி); குட. செரடெ; பட. கரட்டலு.

[சுர் → (சுரடு) → (சுரட்டை) → சிரட்டை = சுரடான கொட்டாங்கச்சி. சிரட்டை → சரட்டை]

**சரடம்**[1] *šaradam*, பெ. (n.) 1. ஓந்தி (திவா.); blood-sucker, a kind of lizard. 2. பச்சோந்தி (பிங்.); chameleon.

[சர → சரடம் = மேல்தோல் சமமில்லாமல் சுரசுரப்பாக இருப்பது.]

த. சரடம் → Skt. sarata

**சரடம்**[2] *šaradam*, பெ. (n.) குசும்பா மரம் (இலக். அக.) (திவா.); a kind of tree.

**சரடு**[1] *šaradu*, பெ. (n.) பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களின் வலிமைக்காக, உள்ளீட்டில் பொருத்தப்படுதவற்குச் செப்புக்கம்பியால் பின்னலிட்டுச் செய்யப்பெறும் கொடி; copper twisted chain to insert inside gold necklace for making it more strength. "கோத்த சரடு நீக்கு" (தெ.க.2:2:5).

[சர → சரடு]

**சரடு**[2] *šaradu*, பெ. (n.) 1. முறுக்குநூல் ; twisted thread, cord twine. "மறை நான்கே வான்சரடா" (திருவாச. 12, 2). 2. பொற்கம்பியினாற் செய்த கழுத்தணி வகை; a necklet of plaited gold thread. பொன் வெள்ளி நூல்களால் ஆகிய சரடு; gold, silver or cotton thread. சரடுஞ் சட்டமு நீக்கி (S. I. I. ll, 161) 4. மூக்கணாங்கயிறு (Tinn.); nose-ring of bullocks. 5. வரிசை, மலைத்தொடர் (வின்.) ; chain, as of mountains, row. 6. கைத்திறம் (தந்திரம்) (வின்.); stratagem, tricks.

ம. சரடு; க. சர; தெ. த்ராடு; கோத. சர்ட்; கொலா. தாட் (கயிறு); நா. தாட்; பட. சரடு

[சர → சரடு]

சரம்[4] பார்க்க

**சரடுதிரி-த்தல்** *šaradu-tiri-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கயிறுதிரித்தல்; to twist yarn or thread. 2. சரடுமுறுக்கு-தல் பார்க்க; see *šaradu muṟukku-*.

[சரடு + திரி-,]

**சரடுமுறுக்கு-தல்** *šaradu-muṟukku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தீயன செய்யத் தூண்டுதல் (வின்.); to instigate. 2. ஒரு செய்தியைப் பொய்யாகக் கற்பித்து வெளியிடுதல் (இ.வ.); to invent a story and circulate.

[சரடு + முறுக்கு-,]

**சரடுவிடு-தல்** *šaradu-vidu-*, 20 செ.கு.வி. (v.i.). 1. பிறர் வாயிலாகத் தன் கருத்தை வெளியிடுதல்; to give out one's idea through an intermediary. 2. மறைமுகமாகப் பேசிப் பிறர் கருத்தை அறியமுயலுதல்; to sound a person's views indirectly. 3. சரடுமுறுக்கு-தல் பார்க்க; see *šaradu-muṟukku-* (செ.அக.).

[சரடு + விடு-,]

**சரண்**[1] *šaraṇ*, பெ (n.) சரணம்[1] பார்க்க; see *šaraṇam*[1]. "தனிச்சரண் சரணாமெனஃ" (திருவாச. 30,6).

*[அரண் → சரண்]*

**சரண்**[2] *šaraṇ*, பெ (n.) அம்மையார் கூந்தல் (தைலவ. தைல. 14); Seeta's thread.

**சரண்டம்** *šaraṇḍam*, பெ (n.) பல்லி; lizard.

*[சர → சரண்டம்]*

**சரண்புகு-தல்** *šaraṇpugu-*, 2 செ.குன்றாவி. (v.t.) அடைக்கலம் புகுதல்; to take refuge in. "அருளின் வேலையைச் சரண்புகுந்தனனென" (கம்பரா. விபீடண. 54).

*[சரம் + புகு-,]*

**சரணக்கமலம்** *šaraṇa-k-kamalam*, பெ. (n.) அடிமலர்; lotus feet. "சரணகமலம் பூண்டார்" (பெரியபு. அப்பூதி. 17).

*[சரணம் + கமலம்]*

Skt. kamala → த. கமலம்

**சரணம்**[1] *šaraṇam*, பெ (n.) 1. வீடு (சங்அக.); house. 2. மருதநிலத்து நகரம் (சூடா.); a town in agricultural tract. 3. அடைக்கலம் (பிங்.); shelter, refuge, asylum. 4. அரசு (மலை.); pipal.

*[உரத்தல் = வலிமையாதல். உரம் = வலிமை. உரம் → அரம் →அரண் = வலிய காப்பு, காப்பான கோட்டை, காப்பான காடு, ஒ.நோ: பரம் → பரண். அரண்மனை = காப்பான அரசன்மாளிகை. அரண் → அரணம் = காப்பு, அந்தளகம் (கவசம்), கோட்டை, மதில், அடவி.*

*அரணம் → சரணம். த. அரணம் → Skt. caraṇa.*

*சரணம் என்னும் வடசொற்குச் சார்தல் (to lean on, rest on) என்று பொருள்படும், "சரி" என்னும் சொல்லை மூலமாகக் காட்டுவர். அது "சார்" என்னும் தென் சொல்லின் திரிபாயிருக்கலாம் (வ.வ. 75)]*

**சரணம்**[2] *šaraṇam*, பெ (n.) 1. மயிற்றோகை (பிங்); peacock's tail. "பச்சைச் சரணமயில் வீரா" (திருப்பு. 1117, புதுப்.). 2. மயில் (யாழ்அக.); peacock.

**சரணம்**[3] *šaraṇam*, பெ (n.) பாதம்; foot (பிங்.).

*[சரண் = அடைக்கலம். சரண் → சரணம்]*

**சரணம்**[4] *šaraṇam*, பெ (n.) யானைத்தோட்டி (பிங்.); elephant goad.

*[சுர் → சுரி → சுரியூசி = பனையேட்டில் துளையிடும் கருவி. சுர் → சுர → சுரசுரப்பு' முட்குத்துவதுபோற் கரடுமுரடாயிருப்பது. சுர் → சுர → சுரணை = குத்தல், குத்தும் மானவுணர்ச்சி. சுர் → சர் → சரணம் = தாற்றுக்கோல்]*

**சரணர்** *šaraṇar*, பெ (n.) வீரச்சிவனிய (சைவ)ப் பெரியோர்; devotees. "நஞ்சோம நாதன் றுதியுளுறு சரணர்" (பிரபுலிங். துதி. 10).

**சரணவாதம்** *šaraṇa-vādam*, பெ. (n.) காலிலுண்டாகும் ஊதை(வாத)ப் பிடிப்பு (யாழ்ப்.); cramp in the legs.

*[சரணம் + வாதம்]*

Skt. vāta → த. வாதம்

**சரணாகசம்** *šaraṇā-gasam*, பெ. (n.) மூக்கிரட்டை; spreading hog-weed - Boerhaavia repens (சா.அக.).

**சரணாகதன்** *šaraṇ-āgadaṉ*, பெ. (n.) அடைக்கலம் புகுந்தோன்; refuge.

*[சரண் + ஆகதன்]*

Skt. āgata → த. ஆகதன்

**சரணாகதி** *šaraṇ-ākadi*, பெ. (n.) அடைக்கலம் புகுகை; taking shelter, seeking refuge. "சரணாகதியாய்ச் சரண்சென் றடைந்தபின்" (மணிமே. 30: 5).

*[சரண் + ஆகதி]*

Skt. āgati → த. ஆகதி

**சரணார்த்தி** *šaraṇ-ārtti*, பெ. (n.) அடைக்கலந் தேடுபவன்; one who seeks shelter or refuge. "உளந்தளர்ந்து சரணார்த்தியென்று சார்ந்தார்க்கும்" (பஞ்சதந். சந்திவிக். 123).

*[சரண் + ஆர்த்தி]*

Skt. ārttin → த. ஆர்த்தி

**சரணாரவிந்தம்** *šaraṇāravindam*, பெ. (n.) சரணக்கமலம் பார்க்க; see *šaraṇa-k-kamalam*. "இராமானுசன் சரணாரவிந்தம்" (திவ். இராமானுச. 1).

*[சரணம் + அரவிந்தம்]*

Skt. aravinda → த. அரவிந்தம்

**சரணிகம்** *šaraṇigam,* பெ (n.) வெள்ளை காக்கணம்; white mussel shell creeper - clitorea ternatea (albiflora) (சா.அக.).

**சரணியன்** *šaraṇiyaṉ,* பெ. (n.) காவலன்; saviour. 'சரணியனாகத் தனை நினைந்து' (அஷ்டப். அழகர். 47).

*[அரண் = காப்பு. அரண் → அரணம் = காப்பு. அரணம் → சரணம் → சரணியன்]*

த. சரணியன் → Skt. śaraṇya

**சரத்தியார்** *šarattiyār,* பெ. (n.) சிறிய தாய் (Brah.); father's younger brother's wife, mother's younger sister (செ.அக.).

*[சிறுதாயார் → சரத்தியார்]*

**சரந்தொடு-த்தல்** *šarandoḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) 1. அம்பெய்தல்; to shoot arrows. 2. மிகுதியாக வைதல்; to shower abuses. அவன் மேல் சரந்தொடுக்கிறான்.

*[சரம் + தொடு-,]*

கூர் அம்பைப்போல் குத்தும் சொற்களால் வைதல் சரந்தொடுத்தல் எனப்பட்டது.

**சரநூல்** *šara-nūl,* பெ. (n.) குறி (நிமித்தம்) பார்க்கும் கலை பற்றிய நூல்; a treatise of omen.

*[சரம் + நூல்]*

**சரப்பட்டிகை**[1] *šara-p-paṭṭigai,* பெ. (n.) கோயிற் றூண்களில் செய்யும் (முத்து மாலை போன்ற) அணிவேலை (கட்டட.); ornamental work of temple pillar.

*[சரம் + பட்டிகை]*

**சரப்பட்டிகை**[2] *šara-p-paṭṭigai,* பெ. (n.) 1. கதவுக்கு மாற்றாக அமைக்கும் செருகு பலகை; wooden plank, used to close door ways. 2. தூண்களுக்கு நடுவில் செல்லும் பலகை (செங்கை.); tie beam.

*[சரம் + பட்டிகை]*

**சரப்பணி** *šara-p-paṇi,* பெ. (n.) வயிரமழுத்தின கழுத்தணி வகை (பிங்.); gold neck-chain inlaid with diamonds.

ம. சரப்பளி; க. சரப்பணி, சரபளி, சர்பளி; தெ. சரபணி, சரபிணி, சரபெணி; து. சரபளி, சரபணி, கர்பளி, சரபொளி; பட. செரபணி; கோத. சர்பெய்ள்க்

*[சரம் + பணி]*

**சரப்பலகை**[1] *šara-p-palagai,* பெ. (n.) கடைகளின் அடைப்புப் பலகை (நெல்லை); a kind of wooden shutter for shops.

*[சரம் + பலகை. சரம்சரமாகப் (அடுத்தடுத்து) போடும் செருகு பலகை]*

**சரப்பலகை**[2] *šara-p-palagai,* பெ. (n.) தூண்களுக்கு நடுவில் செல்லும் பலகை (தஞ்சை.); tie beam.

*[சரம் + பலகை]*

**சரப்பளி** *šara-p-paḷi,* பெ. (n.) 1. சரப்பணி பார்க்க (சிலப். 6:99, உரை); see *šara-p-paṇi.* 2. பொன்னால் இயன்ற கழுத்தணி வகை; gold necklet.

ம., க. சரப்பளி

*[சரப்பணி → சரப்பளி]*

**சரப்பளிச்சம்பா** *šarappaḷi-c-cambā,* பெ. (n.) கடகம் (ஆடி), மடங்கல் (ஆவணி) மாதங்களில் விதைத்து ஆறு மாதங்களில் அறுவடையாகும் சம்பா நெல்வகை (தஞ்சை.); a šambā paddy sown in Āḍi-Āvaṇi and maturing in six months.

*[சரப்பளி + சம்பா]*

**சரப்பாளிச்சம்பா** *šarappāḷi-c-cambā,* பெ. (n.) சரப்பளிச்சம்பா பார்க்க; see *šarappaḷi-c-cambā.*

*[சரப்பளி → சரப்பாளி + சம்பா]*

**சரப்புல்** *šarappul,* பெ. (n.) தண்ணீரில் முளைக்கும் புல்; water grass (சா.அக.).

*[சரம் + புல்]*

**சரப்புளி** *šarappuḷi* பெ. (n.) 1. இரட்டை வடப் பொற்றொடரி; double chain. 2. பெண்கள் அணியும் கழுத்தணி (மீனவ.); a kind of women neck ornament.

*[சரப்பளி → சரப்புளி]*

**சரபடி** *šarapadi* பெ. (n.) *சரவடி* பார்க்க; see *šaravadi*. அந்தச் சரபடியிலே பெண் கொள்ள வேண்டும் (வின்.).

தெ. சரபடி

*[சரவடி → சரபடி]*

**சரபம்**¹ *šarabam* பெ. (n.) *1.* வரையாடு *(பிங்.)*; mountain sheep. *2.* குறும்பாடு *(யாழ். அக.)*: woolly sheep.

*[சுரி → சரி = மலைச்சாரல், மலைவழி. சரி → சர → சரபம் = மலையில் வாழும் ஆடு, குறும்பாடு]*

**சரபம்**² *šarabam* பெ. (n.) *சரவம்*¹ (பிங்.) பார்க்க; see *šaravam*.

*[சுர் → சர் → சரம் = குத்துவது. சரம் → சரபம் = குத்தும் தன்மையுள்ள, கூரிய உகிர் உள்ள பறவை]*

**சரபம்**³ *šarabam* பெ. (n.) *சரவம்*² (பிங்.) பார்க்க; see *šaravam*².

*[சரவம் → சரபம்]*

**சரபாரி** *šarabāri*, பெ. (n.) *கருவேல்;* black acacia-Acacia arabica *(சா.அக.)*.

**சரபாண்டி** *šarabāndi*, பெ. (n.) *தழுதாழை மரம்;* downy glory tree - Cleodendron Phlomoides *(சா.அக.)*.

**சரபிதானி** *šarabidāni*, பெ. (n.) *சண்பக மலர்;* champauk flower - michelia champaca *(சா.அக.)*.

**சரபுங்கு** *šarapuṅgu*, பெ. (n.) *1.* கொள்ளுக்காய் வேளை; wild indigo - Tephrosia purpurea. *2.* கொடிப்புங்கு; hog-creeper - Derris scandens *(சா.அக.)*.

மறுவ. சரபுங்கன்

**சரம்**¹ *šaram*, பெ. (n.) *1.* அசைவு; stirring. *2.* நடை *(பிங்.)*; moving going. *3.* இயங்குதிணை *(பிங்.)*; category of movables. *4.* மூச்சுக்காற்று; breath. *5.* சரராசி *(வானியல்.)*; one of the four signs of the zodiac. 'வில்லுஞ் செழுஞ்சரமும்' *(விதான. தீவினை. 8)*. *6.* அலைவு; restlessness, fickleness. 'மென்மைச் சரங் கொடுஞ்சரம் போற்றைப்பச் சரங் கொண்டாள்' *(திருவாலவா. 57, 31)*. *7.* சரகண்டம் (வின்.); ascensional difference (கணியம்.).

*[சர் = ஓர் ஒலிக்குறிப்பு. சரேரெனல் = விரைவுக் குறிப்பு. சர் → சரம் = அசைதல், நடத்தல், இயங்குதல்.]*

த. சரம் → Skt. šara

**சரம்**² *šaram*, பெ. (n.) *1.* வில்லினின்று எய்யப்படும் கூரியமுனையுள்ள நேரான மெல்லிய படைக்கலம், அம்பு; pointed straight slender, missile shot from bow, arrow. 'குனிசிலைச் சரத்தால்' *(கம்பரா. வேள்வி. 9)*. *2.* ஐந்து (தைலவ. தைல. 85.); five, as the number of Kāma's arrows. *3.* திப்பிலி; long-pepper. 'உபகுஞ்சிகை சரம்' *(தைலவ. தைல. 66)*. *4.* நாணல்; kaus. *5.* கொறுக்கச்சி (பிங்.); European bamboo reed.

மறுவ. கணை, வாளி (பாணம்)

*[சுல் = குத்தற் கருத்துவேர். சுல் → சுர் → சுரம் → சரம் = நேராகச் சென்று குத்தும் இயல்புடைய அம்பு. கூர்முனையுள்ள திப்பிலி, நாணற்புல்]*

த. சரம் → Skt. śara.

**சரம்**³ *šaram*, பெ. (n.) *1.* நீர்; water. 'ஒழியாச் சரமே பொழிந்து' *(சிவப். பிரபந். வெங்கைக்கலம். 84)*. *2.* மணிவடம் (பிங்.); string of pearls, gems, etc. *3.* மாலை (இ.வ.); wreath of flowers. *4.* கொத்து; bunch, cluster. *5.* கூரைச்சரம்; beams in a roof, rafter.

*[சர் → சரம் = நீண்ட அல்லது நேரான மணிக்கோவை அல்லது மலர்த்தொடை. சரஞ்சரமாய்த் தொங்குகிறது என்னும் வழக்கை நோக்குக. சரக்கொன்றை = நேர் மலர்த்தொடையாகப் பூக்கும் கொன்றை. வடவர் காட்டும் ஸ்ரு என்னும் சொற்கு ஒழுகு, ஓடு என்பனவே பொருள் (வ.வ. 42, 43)]*

நீர் பொருள் ஒரு துளையினின்று நேராக விரைந்து ஒழுகுதலை, சர் என்று பாய்கிறது என்று கூறுவது வழக்கம். ஒழுகல் நீட்சிக் கருத்தையுணர்த்தும்.

"வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும்பொருள"
*(தொல். 800)*

**சரம்**[4] *šaram,* பெ. (n.) *நீர்நிலை (வின்.);* a tank, pond, lake.

*[சுல் = துளைத்தற் கருத்துவேர். சுல் → (சுன்) → சுனை = உட்டுளையினின்று நீர் வருவது போன்ற நீரூற்று, நீரூற்றுள்ள பொய்கை. சுல் → (சுர்) → சுர → சுரத்தல். சுல் → (சுர்) → சுர → சுரம் → சரம்.]*

**சரம்**[5] *šaram,* பெ. (n.) இசைச்சுரம்; musical note. 'பாடுமென்மைச் சரங்கொடு' *(திருவாலவா. 57, 31).*

*[சர் → சரி = ஒப்புமையுடையது, இயைபைத் தருவது. சர் → சர → சரம்]*

பாடும்போதும் இசைக் கருவியை மீட்டும் போதும் அடிமணையாக வைத்துக் கொள்ளும் சுரம் கேள்வியெனப்படும். இதை ச்ருதி (சுதி) என்று மொழிபெயர்த்துக் கொண்டனர் வட நூலார். ச்ரு = கேள்.

**சரம்**[6] *šaram,* பெ. (n.) போர் *(சூடா.);* war, battle, fight.

*[சர் → சரி = ஒப்புமையுடையது. ஒப்புப் பொருளிலிருந்து பொருதற்பொருள் தோன்றுவது இயல்பு. ஒ.நோ. பொருதல் = ஒத்தல், போர் செய்தல். சரி → சர → சரம். இனி அமர் → சமர் → சமரம் → சரம் என்றுமாம்.]*

த. சரம் → Skt. śamara

**சரம்**[7] *šaram,* பெ. (n.) தனிமை *(பிங்.);* loneliness.

*[சர் → சரி. சரிதல் = நழுவுதல், பிரிந்து செல்லுதல். சரி → சர → சரம் = தனியாக இருப்பது, தனிமை.]*

**சரம்பரம்** *šarambaram,* பெ. (n.) சரகாண்ட செய்நஞ்சு *(யாழ். அக.);* a mineral poison.

*[சரம் → சரம்பரம்.]*

**சரமண்டலம்** *šaramaṇḍalam,* பெ. (n.) ஓர் இசைக்கருவி; a musical instrument. "தம்புரு வீணை சரமண்டலம்" *(மான்விடு. 24).*

*[சரம் + மண்டலம்.]*

**சரமண்டலி** *šaramaṇḍali,* பெ. (n.) ஒரு வகைத் தேள்; a kind of scorpion *(சா.அக.).*

*[சரம் + மண்டலி. சரம் = குத்தும் அதாவது கொட்டும் இயல்புள்ளது. மண்டு → மண்டலம் → மண்டலி = வட்டமான உறுப்புள்ள தேள்]*

**சரமணி** *šara-maṇi,* பெ. (n.) சிறுமணிகள் கட்டிய அரைப்பட்டிகை *(வின்.);* waist-belt with tinkling tiny bells.

*[சரம் + மணி.]*

**சரமரடம்** *šaramaraḍam,* பெ. (n.) மரவட்டை; wood louse *(சா.அக.).*

**சரமழை** *šaramaḻai,* பெ. (n.) சரமாரி பார்க்க; see *šaramāri.* "சார்ங்க முதைத்த சரமழை போல்" *(திவ். திருப்பா. 4).*

*[சரம் + மழை. சுல் = துளைத்தற் கருத்துவேர். சுல் → (சுர்) → சுர. சுரத்தல் = உட்டுளையினின்று ஊறுதல்போல் பால் சுரத்தல், பால் சுரத்தல்போல் மழை பொழிதல். சுல் → சுர → சர → சரம்]*

**சரமாரி** *šara-māri,* பெ. (n.) 1. அம்புமழை; shower of arrows. "சலமாமுகில் .... சரமாரி பொழிந்த" *(திவ். பெரியாழ். 3, 5, 8).* 2. தொடர்ச்சி; continuity. சரமாரிக் கேள்விக்குத் திகைத்தான்.

*[சரம் + மாரி. மல் → மால் = கருமை, கருமுகில், கரிய திருமால். மால் → மாரி = முகில், மழை. 'சரமாரி' உருவகம்]*

**சரமாரிபெய்-தல்** *šaramāri-pey-,* 1 செ.குவி. (v.i.) அம்புமழை பெய்தல்; to shower arrows.

க. சரள்கறை

*[சரம் + மாரி + பெய்-,]*

**சரமாரியாய்** *šara-māri-y-āy,* கு.வி.எ. (adv.) இடைவிடாமல்; incessantly, as rain; eloquently as speech. 'மழை சரமாரியாய்ப் பெய்தது'. 'சரமாரியாய்ப் பேசாதே' *(உவ.).*

*[சரம் + மாரி + ஆய்]*

**சரமாரியுப்பு** *šaramāri-y-uppu,* பெ. (n.) வழலையுப்பு; a quintessence salt used in alchemy *(சா.அக.).*

*[சரமாரி + உப்பு]*

**சரமாருதம்** *šara-mārudam,* பெ. (n.) பேரரத்தை; greater galangal - alpinia galanga (major) *(சா.அக.).*

**சரமாலை** *šara-mālai,* பெ. (n.) தோரண மாலை *(யாழ். அக.);* festoon.

*[சரம் + மாலை. மால் → மாலை]*

**சரமுல்லை** *šara-mullai,* பெ. (n.) பல் (யாழ்.அக.); tooth.

*[சரம் + முல்லை. 'சரமுல்லை' உருவகம்]*

**சரமூர்த்தி** *šara-mūrtti,* பெ. (n.) சரவுருவத்தார் பார்க்க. see *šara-v-uruvattār.*

*[சரம் + மூர்த்தி]*

Skt. mūrti → த. மூர்த்தி

**சரல்** *šaral,* பெ. (n.) சரளை² (இ.வ.) பார்க்க; see *šaraḷai²*.

ம. சரல்

*[சரளை → சரலை → சரல்]*

**சரலங்கா** *šaralaṅgā,* பெ. (n.) மரவகை; east Indian plum - kāḍar (செ.அக.).

**சரலம்** *šaralam,* பெ. (n.) 1. அறுகு; harialli grass. 2. ஒருவகை மரம்; a kind of tree.

**சரலாந்தல்** *šara-lāndal,* பெ. (n.) கிளைவிளக்கு வகை; lights held in chandelier.

*[சர(ம்) + லாந்தல்; சரம் = சரம்சரமாக இருப்பது, நேராக இருப்பது, பக்கவாட்டில் நேராகக் கிளைகொண்டிருப்பது.]*

E. lantern → த. லாந்தர் → லாந்தல்

**சரலிங்கம்** *šara-liṅgam,* பெ. (n.) சிவனியத் துறவி; veera saiva mendicant, jangama.

*[சரம் = அசைவது, நகர்வது. சரம் + லிங்கம். இலக்கு → இலக்கம் = குறி. இலக்கம் → இலங்கம் → இலிங்கம் → லிங்கம் (கொச்சை). ஓரிடத்தில் தங்காமல் பலவிடங்களுக்குச் செல்லும் இயல்பு பற்றிச் சரலிங்கம் எனப்பட்டார்]*

**சரவட்டை** *šara-v-aṭṭai,* பெ. (n.) கீழ்த்தரமானது (யாழ்ப்.); that which is worthless or inferior.

*[சாவட்டை → சரவட்டை]*

**சரவடி** *šara-vaḍi,* பெ. (n.) 1. தொடரும் தலைமுறை; hereditary. சரவடி சரவடியாக ஊர்க்கணக்கை அக்குடும்பம்தான் பார்க்கிறது. 2. இனம் (வின்.); a tribe, family. இவன் எங்கள் சரவடியைச் சேர்ந்தவன் (செ.அக.).

*[சரம் + அடி. சர் → சரம் = நீண்டு அல்லது நேராக இருப்பது. சரவடி = தலைமுறை கடந்து நீண்ட தொடர்பினைக் கொண்டது அல்லது வழிவழியாக வந்த குழு, இனம்]*

**சரவணம்** *šaravaṇam,* பெ. (n.) 1. நாணற்காடு (பிங்.); thicket of kaus. 2. நாணல் (பிங்.); kaus. 3. கொறுக்கை; european bamboo reed. 'ஊறுநீர்ச் சரவணத்து' (மணிமே. 18: 92.).

*[சரம் → சரவணம்]*

சரம்² பார்க்க

**சரவம்¹** *šaravam,* பெ. (n.) 1. அரிமாவைக் கொல்லவல்லதாகக் கூறப்படும் எண்காற்புள்; fabulous eight-legged bird capable of killing lion. 2. விட்டில்; grass-hopper.

*[சுர் → சர் → சரம் = குத்துவது. சரம் → சரவம் = குத்தும் தன்மையுள்ள கூரிய உகிர் உள்ள பறவை]*

சரம்² பார்க்க

**சரவம்²** *šaravam,* பெ. (n.) ஒட்டகம்; camel.

*[சுர் → சுரம் = பாலை. சுர் → சுரவம் = பாலைவனத்தில் இருப்பது]*

**சரவருடம்** *šara-varuḍam,* பெ. (n.) சரமாரி பார்க்க; see *šaramāri.*

*[சரம் + வருடம்]*

Skt. varṣa (மழை) → த. வருடம்

**சரவல்** *šaraval,* பெ. (n.) சரவை¹ பார்க்க; see *šaravai.* 'சரவலில்லாமல் எழுதிக் கொண்டு வா' (நாஞ்.).

*[சரல் → சரவல்]*

**சரவலி** *šaravali,* பெ. (n.) வரிசை; series.

*[சரம் → சரவலி]*

**சரவழகி** *šara-v-aḻagi,* பெ. (n.) சரவாசி பார்க்க; see *šaravāsi.*

*[சரம் + அழகி]*

**சரவன்** *šaravaṉ,* பெ. (n.) அம்பெய்வோன்; bowman, as having arrows. 'புரமூன்றெரி செய்த சரவா' (தேவா. 112, 1).

*[சரம் → சரவன்]*

**சரவாசி** *šara-vāci,* பெ. (n.) குதிரைப்பல் செய்நஞ்சு (யாழ். அக.); a mineral poison.

*[சரம் = நீண்ட அல்லது நேரான மணிக்கோவை. சரம் → சரவாசி]*

**சரவாணி** *šaravāṇi,* பெ. (n.) சரவன் (யாழ்.அக.) பார்க்க; see *šaravaṉ.*

*[சரம் → ஆணி. ஆளி → ஆணி]*

**சரவியம்** *šaraviyam,* பெ. (n.) அம்பினால் எய்யும் இலக்கு (யாழ். அக.); target or aim of an arrow.

*[சரம் + இயம்]*

த. சரவியம் → Skt. śaravya

**சரவிளக்கு** *šara-viḷakku,* பெ. (n.) ஒன்றன் மேலொன்றாக அடுக்கித் தொங்கவிடும் கோயில் விளக்கு; string of lights usually hung in temples.

*[சரம் + விளக்கு]*



சரவிளக்கு

**சரவீணை** *šara-vīṇai,* பெ. (n.) 1. வீணைவகை (சங்.அக.); a kind of stringed lute. 2. கருவண்டு (வீணைபோல் ஒலி செய்வது) (வின்.); black beetle, as humming like a lute.

*[சரம் + வீணை. விண் → வீணை]*

**சரவு** *šaravu,* பெ. (n.) வயலின் ஒரு பகுதி; a part of field. 'ஒரு சரவு உழவு நடந்துள்ளது'.

*[சரம் → சரவு]*

**சரவுருவத்தார்** *šara-v-uruvattār,* பெ. (n.) சிவனடியார்; śaiva devotee as a moving form of Śiva.

*[சர(ம்) + உருவத்தார். உருவம் + அத்து + ஆர் – உருவத்தார். உருத்தல் = தோன்றுதல். உரு = தோற்றம், வடிவம், வடிவுடைப் பொருள், உடல். உரு → உருவு → உருவம்.]*

**சரவுலைத்துருத்தி** *šaravulai-t-turutti,* பெ. (n.) இரட்டைத்துருத்தி; double bellowes (சா.அக.).

*[சரம் + உலை + துருத்தி. துருத்துதல் = முன் தள்ளுதல். துருத்து → துருத்தி = காற்றை முன்தள்ளும் உலைக்களத் தோற் கருவி]*

**சரவூரகம்** *šaravūragam,* பெ. (n.) கருங்கொடி; common delight of the wood - Hiptage madablota (சா.அக.).

**சரவெலும்பு** *šara-v-elumbu,* பெ. (n.) முன்னங் காலின் வெளிப்பக்கத்து எலும்பு; the outer and lesser bone of the lower leg (சா.அக.).

*[சரம் + எலும்பு. சரம் = நேரானது, நீண்டது. எல் = ஒளி, வெண்மை. எல் → எலும்பு = வெண்மை நிறம் பொருந்தியது]*

**சரவை**[1] *šaravai,* பெ. (n.) 1. மேல்வரிச் சட்டம் (இ.வ.); model writing in an ola copy. 2. தெளிவற்ற எழுத்து; confused, illegible writing.

*[சரம் → சரவை]*

**சரவை**[2] *šaravai,* பெ. (n.) பரும்படி; coarseness, roughness (Pond.).

*[சர → சரசரப்பு = முள்ளுமுள்ளாய் அல்லது கரடுமுரடாய் இருத்தல். சர → சரவை]*

**சரவைக்கணிப்பு** *šaravai-k-kaṇippu,* பெ. (n.) தோராய மதிப்பு; rough estimate.

*[சரவை + கணிப்பு. கணி → கணிப்பு]*

**சரவையிடு-தல்** *šaravai-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) எழுத்துப்பிழை திருத்துதல் (வின்.); to correct spelling mistakes.

*[சரவை + இடு-,]*

**சரவையெழுத்து** *šaravai-y-eluttu,* பெ. (n.) 1. திருத்தப்படாத முதற்படி, கரட்டுப்படி; rough copy, first draft. 2. படியெடுக்கை; copying.

*[சரவை[2] + எழுத்து]*

**சரள்** *šaraḷ,* பெ. (n.) சரளை[2] பார்க்க; see *šaraḷai*[2].

*[சல் → (சுர்) → சுரம் → சரம் = குத்தும் இயல்புடையது. சர் → சரம் → சரல் → சரள் = கரட்டுமண்]*

**சரளங்காய்** *šaraḷaṅgāy,* பெ. (n.) *தாளிச பத்திரி;* east Indian plum - Flacourtia cataphracta *(சா.அக.).*

*[சரள் → சரளம் + காய்]*

**சரளதேவதாரம்** *šaraḷa-dēvadāram,* பெ. (n.) **சீமைத்தேவதாரு** *(தைலவ. தைல. 74, உரை);* long-leaved pine.

*[சரள + தேவதாரம்]*

**சரளம்**[1] *šaraḷam,* பெ. (n.) *1.* **எளிமை;** facility, ease. *2.* **தடையின்மை** *(யாழ்ப்.);* freedom from obstruction. *3.* **ஒழுங்கு** *(சது);* order, regularity. *4.* **சரளதேவதாரம்** பார்க்க; see šaraḷa-dēvadāram. 'மாதவி சரளமெங்கும்' *(பெரியபு. நாட்டு. 29).*

*[சரம் → சராகம் = தடை இல்லாதது. சரம் → சரகம் → சரளம்]*

த. சரளம் → Skt. sarala

**சரளம்**[2] *šaraḷam,* பெ. (n.) *சிவதை (மலை.);* Indian jalap.

**சரளவட்டி** *šaraḷa-vaṭṭi,* பெ. (n.) *1.* **முதற்கு மட்டும் உரிய வட்டி** *(C.G.);* simple interest. *2.* **குறைந்த வட்டி;** rate of interest.

*[சரளம் ' + வட்டி]*

**சரளாகம்** *šaraḷāgam,* பெ. (n.) கருங்கொடி வேலி; black-flowered lead wort - Plumbago gluns *(சா.அக.).*

*[கரு → கரம் = கருத்திருப்பது, நஞ்சு.; கரம் → சரம் → சரள் → சரளகம் → சரளாகம்]*

**சரளி**[1] *šaraḷi,* பெ. (n.) *சரவரிசை;* the seven notes of the gamut in various combinations. 'அமுதரச மொழுகு சரளிகள் பழகு சங்கீத வித்தை' *(திருவேங். சத. 63).*

ம., தெ. சரளி; க. சரளெ

*[சரம் → சரளி]*

**சரளி**[2] *šaraḷi,* பெ. (n.) கோழை *(யாழ்ப்.);* phlegm.

ம., தெ. சரளி; க. சரளெ

*[சளி → சரளி]*

**சரளிகட்டு** *šaraḷi-kaṭṭu,* பெ. (n.) *சளிக்கட்டு (யாழ்ப்.);* collection of phlegm in the chest.

*[சளி → சரளி + கட்டு]*

**சரளிகட்டை** *šaraḷi-kaṭṭai,* பெ. (n.) மேழியின் நுனியில் மாட்டுங்கட்டை; handle of a plough.

*[சரளி + கட்டை]*

**சரளிப்பதம்** *šaraḷi-p-padam,* பெ. (n.) **பண் வரிசை இடையிட்டு வரும்படி பாடும் பாட்டு;** song with the notes of the gamut accompanying.

*[சரளி + பதம்]*

**சரளியலங்காரம்** *šaraḷi-y-alaṅgāram,* பெ. (n.) **(இசை) பண்வரிசைகளைப் பயிலுதற்குரிய ஒருவகை முறை** *(வின்.);* exercising the voice in the seven notes in all their combinations.

*[சரளி + அலங்காரம்]*

Skt. alaṅkara → த. அலங்காரம்

**சரளு** *šaraḷu,* பெ. (n.) *1.* சரலங்கா பார்க்க; see šaralaṅgā. *2.* **எருமையூர் (மைசூர்) மரவகை;** potato plum of Mysore. kāḍār *(செ.அக.).*

**சரளை**[1] *šaraḷai,* பெ. (n.) **தேவதாரு;** deodar - erythroxylon monogynum *(சா.அக.).*

**சரளை**[2] *šaraḷai,* பெ. (n.) **சிறுமணல் சேர்ந்து கெட்டியான கல்வகை** *(இ.வ.);* gravel, laterite.

*[சரள் = மணற்பாறைச்சல்லி, முரம்பு, சரள்→ சரளை]*

**சரளை**[3] *šaraḷai-k-kaṟkuḻi,* பெ. (n.) **சரளைக் கற்கள் கிடைக்கும் குழி;** gravel-pit.

*[சரளை + கல் + குழி]*

**சரளைகட்டி-த்தல்** *šaraḷai-kaṭṭi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **சரற்கல் இடுவித்துப் பாதையைச் செம்மையாக்குதல்** *(C.E.M.);* to metal a road.

*[சரளை + கட்டி-,]*

**சரளைப்பாதை** *šaraḷai-p-pādai,* பெ. (n.) **சரளைக் கல்லிட்ட நடைபாதை;** gravel walk.

*[சரளை + பாதை]*

**சரளையிடு-தல்** *šaraḷai-y-iḍu-,* 20 செ.குவி. (v.i.) **சரளைக் கற்களைப் பரப்புதல்;** to gravel.

*[சரளை + இடு-,]*

**சரன்** *šaran*, பெ. (n.) *1.* ஒற்றன்; spy employed in a state. *2.* தூதன் (யாழ். அக.); royal messenger.

*[சரம் → சரன் = ஓரிடத்தில் தங்காது திரிபவன், விரைந்து செல்பவன், பலவிடங்களுக்கும் சென்று செய்தி திரட்டுபவன், ஓரிடத்துச் செய்தியைப் பிறருக்குத் தெரிவிப்பவன்]*

த. சரன் → Skt. šara.

**சரனகோடரம்** *šaranakōdaram*, பெ. (n.) கருஞ்சிற்றகத்தி; black sesbana - Sesbania genus (சா.அக.).

**சரனமலம்** *šaranamalam*, பெ. (n.) இலவுமரம்; silk cotton tree - Bombax malabaricum (சா.அக.).

**சரா** *šarai*, பெ. (n.) சராய் பார்க்க; see *šaray* 'தலைப்பாகோ டங்கி சரா' (கொண்டல்விடு. 677).

**சராகம்**[1] *šaragam*, பெ. (n.) *1.* தடையின்மை; fluency. *2.* போர்; war.

*[சரி → சரம் → சராகம்]*

**சராகம்**[2] *šaragam*, பெ. (n.) வண்டு; beetle.

*[சரகம்[2] → சராகம்]*

**சராகம்**[3] *šaragam*, பெ. (n.) நேர்பாதை (வின்.); straight road without ramifications or turnings.

*[சர் → சரம் = நேராகப் பாயும் அம்பு. சரம் → சராகம்]*

த. சராகம் → Skt. saraka

**சராகம்**[4] *šaragam*, பெ. (n.) நாட்டின் பகுதி (யாழ்ப்.); region, quarter, district.

*[சரகம் [1] → சராகம்]*

**சராகை** *šaragai*, பெ. (n.) வட்டில் (சது.); metal cup.

க. சரவிகெ; தெ. சரவெ, செரவ, செரிவி.

*[சுர் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல்,. சருவு → சரா → சராகை]*

த. சராகை → Skt. saraka

**சராங்கம்**[1] *šarangam*, பெ. (n.) *1.* நிறைவு; completeness, fulness. *2.* தடையின்மை; fluency. சராங்கமாய்ப் படித்தான்.

*[சராகம் [1] → சராங்கம்]*

**சராங்கம்**[2] *šarangam*, பெ. (n.) நேர்மை (வின்.); straightness, evenness.

*[சராகம் → சராங்கம்]*

**சராசரம்** *šaracaram*, பெ. (n.) *1.* இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்; the categories of movables and immovables. "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" (திவ். பெருமாள் 10,10). *2.* பேரண்டம்; the universe. "புனவமாதி சராசரம் பயந்த தாணு" (கந்தபு. மார்க்கண். 42). *3.* அவுபல செய்நஞ்சு; a mineral poison.

*[சர் → சரம் + அ + சரம். 'அ' மறுதலைப் பொருள் முன்னொட்டு]*

**சராசரி** *šarašari*, பெ. (n.) *1.* நிரலளவு (சரிவீதம்); medial estimate, average. சராசரி மக்கள் அனைவரும் படிக்கும் இயல்பினர். *2.* பொதுப்படையான மதிப்பீடு; generally prevailing rate, degree or amount.

*[சரி + சரி → சரிச்சரி → சராசரி]*

**சராசரிமேரை** *šarašari-mērai*, பெ. (n.) விளைச்சலிற் சிற்றூர்ப் பணியாளர்க்குப் பிரித்துக் கொடுக்கும் பாகம் (W.G.); proportion of the crop set apart for a village servant.

*[சராசரி + மேரை]*

**சராசனம்**[1] *šara-šanam*, பெ. (n.) வில்; bow. ஏற்றிய சராசனம் வணக்கி (பாரத. வாரணாவத. 56).

*[சர(ம்) + ஆசனம். ஆசனம் = இருக்கை. சராசனம் அம்பிற்கு இருக்கையாய் இருப்பது, வில்.]*

Skt. āšana → த. ஆசனம்

**சராசனம்**[2] *šara-šanam*, பெ. (n.) அரசு (மலை.); pipal.

**சராட்டெனல்** *šarattenal*, பெ. (n.) சரேரெனல் பார்க்க; see *šarērenal*.

*[சராட்டு + எனல்]*

**சராடி** *šaradi*, பெ. (n.) பறவை வகை (யாழ்.அக.); a bird.

*[சகடம் → சகடி → சரடி → சராடி]*

சராடி → Skt. śaradi

**சராடிகம்** *šarādigam,* பெ. (n.) *கருஞ்சிந்தில் கொடி;* a black variety of moon creeper - menispermum genus *(சா.அக.).*

**சராத்திரயம்** *šarāttirayam,* பெ. (n.) *அம்புக் கூடு (யாழ்.அக.);* quiver for holding arrows.

*[சரம் + திரயம்]*

Skt. ā-śraya → த. திரயம்

**சராய்** *šarāy,* பெ. (n.) *காற்சட்டை;* trousers.

*[சர் → சரம் = நீண்ட அல்லது நேரான மணிக்கோவை. சரம் → சராய் = நீளவாக்கில் அமையும் காற்சட்டை]*

**சராவம்**[1] *šarāvam,* பெ. (n.) *மெலிதாகவும் நீண்டதாகவும் இருப்பது;* anything long and thin, as a bar, arib.

*[சர் → சரம் → சராவம்]*

**சராவம்**[2] *šarāvam,* பெ. (n.) வாயகன்ற மட்கலம், *அகல்;* shallow wide-mouthed earthern vessel. "பொங்கு சராவத்து நெய்த்துடுப் பெடுத்த" *(பதினொ. ஆளு. 16).*

*[சுர் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சருவு → சருவம் மேல் நோக்கி சரிவான சட்டி. சருவம் → சராவம்]*

**சராளம்** *šarāḷam,* பெ. (n.) *சரளம்*[1] *பார்க்க;* see *šaraḷam*[1]. அந்த வழி சராளம்.

*[சரளம் → சராளம்]*

**சராளி-த்தல்** *šarāḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *கழிச்சல் ஏற்படுதல்;* to have loose motion.

*[சரளம் → சராளி-,]*

**சரி**[1]**-தல்** *šari-,* 4 செ.கு.வி. (v.i.) *1. நழுவுதல்;* to slip away, slide down. சரிந்த துகில் *(திருவிசை. கரு. 5, 10).* 2. *கீழே விழுதல்;* to roll down, tumble down, stumble and fall down from a height. "சரிந்த பூவுள" *(கம்பரா. அயோத். மந்திரப். 56).* 3. *குலைதல்;* to be upset. "சாடிய வேள்வி சரிந்திட" *(திருவாச. 14,5).* 4. *பின்னிடுதல்;* to give way, yield; to be defeated as an army. "நேர் சரிந்தான் கொடிக்கோழி கொண்டான்" *(திவ். திருவாய். 7, 4, 8).* 5. *சாதல்;* to die. 6. *சாய்தல்;* to lean, incline, to fall to one side, decline as a heavenly body. 7. *சரிவாயிருத்தல் (இ.வ.);* to be aslant, to slope. 8. *கூட்டமாய்ச் செல்லுதல்;* to flock to a place, to go in crowd. *அங்கே மக்கள் சரிகிறார்கள். (செ.அக.)*

*ம. சரியுக, சரிக்க (வளைத்தல்); க. சரி, சரி, சருகு; சரிகு; தெ. சரகு, சருகு; து. சரகு; கோத. சர்வ்; கொலா. சரக்; மா. சர்கெ; பட. சாரு*

*[சுரி → சரி (வே.க. 237)]*

**சரி**[2]**-த்தல்** *šari-,* 4 செ.கு.வி. (v.i.) *1. சரிந்து விழச் செய்தல்;* to cause to slip or roll, topple, to pour down. 2. *வெட்டித் தள்ளுதல்;* to cut off, as the head. "தலையைச் சரித்து" *(ஈடு, 1,6,7).* 3. *ஒருபக்கஞ் சாயச்செய்தல்;* to slant, incline.

*ம. சரிப்பிக்க*

*[சரி → சரி-,]*

**சரி**[3]**-த்தல்** *šari,* 4 செ.கு.வி. (v.i.) *1. செல்லுதல் (சஞ்சரித்தல்);* to move about. "பரிதொறுஞ் சரித்தான்" *(கம்பரா. சம்புமா. 33).* 2. *வாழ்தல் (வசித்தல்);* to live, dwell. "காடுகளிற் சரித்தும்" *(சிசி. 10, 5).*

*[சுர் → சர் → சரி]*

**சரி**[4]**-த்தல்** *šari-,* 2 செ.குன்றாவி. (v.t.) *மேற் கொண்டொழுகுதல் (சங்.அக.);* to practise.

**சரி**[5]**-த்தல்** *šari-,* 4 செ.கு.வி. (v.i.) *உணவு செரித்தல் (சீரணித்தல்);* to digest, to be digested.

*[செரி → சரி-,]*

**சரி**[6]**-த்தல்** *šari-,* 4 செ.கு.வி. (v.i.) *அசைதல்;* to move.

*[சர் → சரி]*

சரி → Skt. car.

**சரி**[7] *šari,* பெ. (n.) *1. மலைச்சாரல்;* declivity, slope of a mountain. "சிங்கம் வேட்டந் திரிசரிவாய்" *(திருக்கோ. 156).* 2. *மலைவழி;* mountain way. 3. *வழி;* way, road. "பெருமலைகளிடைச் சரியிற் பெரும் பன்றி புனமேய்ந்து" *(பெரியபு. கண்ணப்ப. 142).* 4. *கூட்டம் (பிங்.);* crowd, flock.

*தெ. சரி.*

*[சுரி → சரி. சரிதல் = சாய்தல், சரிவாயிருத்தல். (வே.க. 237)]*

**சரி**[8] *šari,* பெ. (n.) **வளைவகை;** a kind of bracelet. *"சரியின் முன்கை நன்மாதர்" (தேவா. 118, 3).*

*[சுரி → சரி]*

**சரி**[9] *šari,* பெ. (n.) **நடத்தை;** conduct. *'அவனுடைய சரி நன்றாயில்லை' (உ.வ.).*

*[சுரி → சரி ]*

*சரி* → Skt. caryā

**சரி**[10] *šari,* பெ. (n.) *1.* **ஒப்பு;** similarity. *"மதித்தழும்புக்குச் சரி" (குமரபிர.சிவகாமி. இரட். 16). 2.* **பொருத்தம்;** suitablity, agreement, exactness. சரியான வேலையில் அவர் வந்தார். *3.* **ஒழுங்கு;** rightness, propriety, regularity. *'அவரது பேச்சு சரியில்லை' (உ.வ.). 4.* **சரியளவு;** equal measure of quantity. தந்தைக்குச் சரியாய் பேசுவது முறையன்று. *5.* **ஒப்புதற் குறிப்பு;** a term of approbatium meaning 'yes', 'right' எல்லாவற்றிற்கும் சரி சொல்வது தகுமா?.

*[செறி → சரி ]*

Skt. sadrša; Pkt. rari

**சரி**[11] *šari,* பெ. (n.) *1.* **ஒழுங்காக்கிய அல்லது சரிப்படுத்தப்பட்ட நிலை;** the state or condition of being adjusted. அரசின் நிதிநிலை சரியாகிவிட்டது. *2.* **தகுதி, உரியது;** fitness, properiety, suitableness, rightness. இப்பணிக்கு அவர்தான் சரி. *3.* **திருந்திய தன்மை, வழுவற்ற நிலை;** correctness. *4.* **ஒரு சீரான தன்மை;** evenness. வேளாண் பணி சரியாய் நடக்கிறது. *5.* **ஒரே வகையானதன்மை, ஒரே படித்தான நிலை;** sameness. உத்திபிரிப்பு சரியாய் அமைந்தது. *6.* **சரிநேர்த் தன்மை, பிழைபாடற்ற நிலை;** proper. அவர் செய்ததுதான் சரி. *7.* **நேரான தன்மை, கோணலற்ற தன்மை;** straight. பாதை வளைவு சரிசெய்தபின் போக்குவரத்து நெரிசல் இல்லை.

*[சரி' → சரி]*

**சரிக்கட்டு-தல்** *šari-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒப்பிடுதல்** (வின்.); to compare, show the comparative merits. *2.* **ஒப்பச்செய்தல்;** to rectify, correct, redress. அவரைச் சரிக்கட்டி விட்டால் வெற்றி நமக்குத்தான். *3.* **இணக்குதல்;** to placate, persuade, reconcile. ஆசிரியரைச் சரிக்கட்டப் பெருமுயற்சி தேவைப்பட்டது. *4.* **கடனைத் தீர்த்தல்** (வின்.); to pay discharge. நெல்லை விற்றுத்தான் வங்கிக்கடனைச் சரிக்கட்ட வேண்டும். *5.* **ஈடுசெய்தல்** (வின்.). to adjust, indemnify, reimburse. சென்ற ஆண்டு இழப்பை இதைக் கொண்டு சரிக்கட்ட முடியாது. *6.* **முடிவு படுத்துதல்;** to finish, settle. இயக்குநரால்தான் அலுவலகச்சிக்கலைச் சரிகட்ட முடியும். *7.* **கொல்லுதல்;** to composs one's death, kill. கட்சிப்பேரணி என்ற பெயரில் நால்வரைச் சரிக்கட்டி விட்டனர்.

*[சரி + கட்டு-,]*

**சரிக்கட்டு-தல்** *šari-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **பழிவாங்குதல்** (வின்.); to take revenge, make reprisals. *2.* **இணக்கமாகச் செய்தல்;** to act agreeally. *"எவர்க்குஞ் சரிக்கட்டவோ வெண்ணி" (இராமநா. ஆரணி. 11). 3.* **சரிநிகர்த் தன்மையாதல்;** to make equal, to make one's equal. *4.* **உண்மையாதல்;** to prove. *"என்சொல் லப்போதல்லோ சரிக்கட்டும்" (கவிகுஞ். 5).*

*[சரி + கட்டு-,]*

**சரிக்கோடிடு-தல்** *šari-k-kōḍiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **சரியென்பதற்கான குறியீடு போடுதல்;** to make tick mark.

*[சரி + கோடு + இடு-,]*

**சரிக்கோடு** *šari-k-kōḍu,* பெ. (n.) **சரி என்பதனைக் காட்டும் சிறுகோடு;** tick mark (✓).

*[சரி + கோடு]*

**சரிக்குச்சரி** *šarikku-c-cari,* பெ. (n.) *1.* **நேரொப்பு (பதிலுக்குப்பதில்);** like for like, measure for measure. *2.* **பழிக்குப்பழி;** retaliation, tit for tat.

*[சரிக்கு + சரி]*

**சரிகமபதநி** *šarigamapadani,* பெ. (n.) **ஏழுவகைச் சுரம்;** the seven notes of the gamut. *சரிகமபதநிப் பாடல் (பாரத. இந்திப்பிர.42).*

*[ச + ரி + க + ம + ப + நி]*

ஏழிசைக்குரிய எழுத்துகள் முதற்காலத்தில் ஏழ் உயிர்நெடில்களாயிருந்தன. அவை நிறவாளத்தி என்னும் சிட்டையிசைக்கு ஏற்காமையால் ச ரி க ம ப த நி என்னும் எழுத்துகள் நாளடைவிற் கொள்ளப்பட்டன. இவை சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிசாதம் என்னும் வட

*சொற்களின் முதலெழுத்துகளாகச் சொல்லப் படுகின்றன. இக் கொள்கை மத்தியமம் பஞ்சமம் என்னும் இரண்டிற்கே ஏற்கும். சமன் பட்டடை என்னும் இரு தென்சொற்களின் முதலெழுத்துகளே ச ப என்பது சிலர் கருத்து. இவையிரண்டுமன்றி இசையின்பத்திற்கேற்ற ஏழெழுத்துகள் நாளடைவிற் பட்டறிவினின்று தெரிந்து கொள்ளப்பட்டன என்பதே பெரும்பால் தமிழிசைவாணர் கருத்தாம் (ப. ப. 115, 116).*

*ஏழுசுரங்களின் அடையாளவெழுத்துகளான, ச ரி க ம ப த நி என்பவை, தமிழில் ஏற்பட்ட குறிகளேயென்றும், அவை குறிக்குஞ் சொற்கள் இப்போது வழக்கிழந்துவிட்டன வென்றும், சில காரணங்காட்டிக் கூறுகின்றனர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்கள். இது எங்ஙனமிருப்பினும் ஆரியர் வருமுன்னமே தமிழர்க்கு இசைத்தமிழ் இருந்ததென்பதும் ஆரியர் தமிழரிடமிருந்தே இசையைக் கற்றனர் என்பதும் மட்டும் மிகத் தேற்றம். ச ரி க ம ப த நி, என்பவற்றிற்குப் பகரமாக, தமிழ்ச் சுரப் பெயர்களின் முதலெழுத்துகளையே கு, து, க, உ, இ, வி, த, என்று வைத்துக் கொள்ளினும், அன்றி வேறு இனிய இசைவான எழுத்துகளை (க ச த நி ப ம வ) வைத்துக் கொள்ளினும் ஓர் இழுக்குமில்லை (ஒ. மொ. 194, 195).*

**சரிகாணு[1]-தல்** *šari-kāṇu-, 2* செ.கு.வி. (v.i.) நேரொத்தல் *(வின்.);* to be exactly equal.

*[சரி + காணு-,]*

**சரிகாணு[2]-தல்** *šari-kāṇu-, 2* செ.கு.வி. (v.i.) *1.* சரி பார்த்தல்; to check, examine the accuracy of. *கணக்கைச் சரி காணவேணும். 2.* நிறைவேற்றுதல்; to fulfil. *3.* கொல்வித்தல் *(யாழ்ப்.);* to bring about ones' death.

*[சரி + காணு-,]*

**சரிகை[1]** *šarigai,* பெ. (n.) கூத்தின் உறுப்பு செயற்பாடுகளுள் ஒன்று *(சிலப். 3:12, உரை);* a gesteculation with the limbs in dancing.

*[சரி → சரிகை]*

**சரிகை[2]** *šarigai,* பெ. (n.) ஆடைக்கரை முதலியவற்றிற் சேர்க்கப்படும் பொன் வெள்ளி இழைகள்; gold or silver thread, used as lace. "செம்பொற் சரிகை வேலையிட்டு" *(தனிப்பா. 1 : 260, 1).*

*[சர் → சரம் = நீண்ட அல்லது நேரான மலர்க்கோவை. சரம் → சரகை → சரிகை = ஆடையோரத்தில் சரஞ்சரமாக அமைக்கப்படும் மாழை (உலோக) இழை. சரிகை → U. zari]*

**சரிகைக்கம்பி** *šarigai-k-kambi,* பெ. (n.) ஆடையின் விளிம்புச் சரிகைக்கரை; thin laced border in a cloth *(செ.அக.).*

*[சரிகை + கம்பி = சரிகை இழை மாழையால் ஆனதாகையால் கம்பிப் போல் இருக்கும்.]*

**சரிகைக்கெண்டை** *šarigai-k-keṇḍai,* பெ. (n.) ஆடைக் கரையில் இடும் சரிகைப் பட்டை; cloth-border of braided lace.

*[சரிகை + கெண்டை. கண்டை → கெண்டை]*

**சரிகைத்திம்மை** *šarigai-t-timmai,* பெ. (n.) *சரிகைத்திரி (இவ.) பார்க்க;* see *šarigai-t-tiri.*

*[சரிகை + திம்மை. திம்மை = சரிகைப்பந்து]*

**சரிகைத்திரி** *šarigai-t-tiri,* பெ. (n.) சரிகைக் கற்றை (இ.வ.); skein of gold thread.

*[சரிகை + திரி]*

**சரிகைப்பாண்டி** *šarigai-p-pāṇḍi,* பெ. (n.) பாண்டிவிளையாட்டு வகை; a kind of hop-scotch.

*[சரிகை + பாண்டி]*

பாண்டிவிளையாட்டு, வட்டு என்றும், சில்லி என்றும் சில்லாக்கு என்றும் எறிகருவியாற் பெயர் பெற்றிருப்பதால் ஒருகால் பாண்டி என்பது எறிகருவிப் பெயராய் இருக்கலாம்.

பாண்டில் என்னுஞ்சொல், வட்டம் என்று பொருள்படுவதால், அதன் கடைக்குறையான பாண்டி என்பதும் அப் பொருள்படலாம்.

இருவரிசைக் கட்டங்களில் ஆடப்பெறும். இடவரிசையிற் சில்லியெறியும்போது வல வரிசை வழியாகவும், வலவரிசையிற் சில்லி யெறியும்போது, இடவரிசை வழியாகவும் செல்ல வேண்டும். இடவரிசையுச்சக் கட்டத்தில் காலூன்றிக் கொள்ளலாம் *(த.வி. 101, 108).*

**சரிகைமலை** *šarigai-malai,* பெ. (n.) குடவம் (பித்தளை) மலை *(யாழ்.அக.);* brass mountain.

*[சரிகை + மலை.]*

சரிகை செய்வதற்குப் பெரும்பாலும் குடவம் பயன்படுத்தப்பட்டதால் சரிகை குடவத்தைக் குறித்தது.

**சரிகைவெள்ளி** *šarigai-veḷḷi,* பெ. (n.) வெள்ளிச் சரிகையை யுருக்கியெடுத்த வெள்ளி (பதார்த்த. 82); silver obtained by melting silver-lace.

*[சரிகை + வெள்ளி.]*

**சரிகோணம்** *šari-kōṇam,* பெ. (n.). நேர்கோணம் (யாழ்.அக); right angle.

*[சரி + கோணம். கோண் → கோணம் = வளைவு, மூலை]*

**சரிசம்** *šarisam,* பெ. (n.) செயலை (அசோகு); asoka tree - Saraca Indica (சா.அக.).

**சரிசமம்** *šari-šamam,* பெ. (n.) சரிசமானம் பார்க்க; see *šari-šamāṉam.*

க. சரிசம

*[சரி + சமம்]*

**சரிசமமாக்கு-தல்** *šari-šamam-ākku-,* 6 செ.குன்றாவி. (v.t.) ஒப்பானதாக்கு, சீரான நிலையுடையதாக்கு; to equalize.

*[சரி + சமம் + ஆக்கு-,]*

**சரிசமானம்** *šari-šamāṉam,* பெ. (n.) நேரான ஒப்பு; exact likeness, perfect equality. அவருக்குச் சரிசமானமாய் அமர்வது முறையன்று.

*[சரி + சமானம். சமம் → சமானம்]*

**சரிசயம்** *šari-sayam,* பெ. (n.) சிறு நன்னாரி; small-leaved saraparilla; swallow-work-Hemidesmus indicus (angustifolia) (சா.அக.).

**சரிசாமம்** *šari-šāmam,* பெ. (n.) நள்ளிரவு (நடுச்சாமம்); midnight.

*[சரி + சாமம்]*

Skt. yāma → த. சாமம்

**சரிசு** *šaricu,* பெ. (n.) சரி[8] (யாழ்ப்) பார்க்க; see *šari [8]*.

*[சரி → சரிசு]*

**சரிசெய்-தல்** *šari-sey-,* 1 செ.கு.வி. (v.i.) 1. ஒழுங்காக்குதல்; to rectify. பழுதுபட்ட கடியாரத்தைச் சரிசெய்ய வேண்டும். 2. பொருத்திக் கொள்ளுதல், தக்கவாறு அமைத்துக் கொள்ளுதல்; to adjust. நாளைய நிகழ்ச்சிக்கு அனைத்தையும் சரி செய்ய வேண்டும்.

க. சரிமாடு

*[சரி + செய்-,]*

**சரிசொல்(லு)[1]-தல்** *šari-col-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. இசைதல்; to second, support, as a motion. கேட்டதற்குச் சரி சொல்லாமல் போகிறாயே. 2. உறுதிப்படுத்துதல், மெய்ப்பித்துக் காட்டுதல்; to approve.

*[சரி + சொல்லு-,]*

**சரிசொல்(லு)[1]-தல்** *šari-col-,* 8 செ.குன்றாவி. (v.t.) பொறுப்பேற்றல் (இ.வ.); to answer for, to become responsible.

*[சரி + சொல்லு-,]*

**சரிணம்** *šariṇam,* பெ. (n.) காட்டுத்துளசி; wild basil - Ocimum adscendenn (சா.அக.).

**சரித்தான்பாண்டி** *šarittāṉ-pāṇḍi,* பெ. (n.) பாண்டி விளையாட்டு வகை (இ.வ.); a kind of hop-scotch.

*[சரி + தான் + பாண்டி]*

பாண்டிவிளையாட்டில் கரகத்தில் அல்லது மேற்புற வெளியிற் சில்லியெறிந்து, கண்ணை மூடிக் கொண்டாவது, மேனோக்கிக் கொண்டாவது, ஒவ்வொரு கட்டத்திற் குள்ளும் ஒவ்வோர் எட்டு வைத்து நடந்து சென்று சில்லை மிதிக்க வேண்டும். ஒவ்வோர் எட்டு வைக்கும்போதும் 'சரிதானா' என்று கேட்கவேண்டும். கால்கோட்டில் படாது எட்டுச் சரியாயிருப்பின், எதிரியார் சரித்தான் என்று வழிமொழிவர். சரியில்லாவிடில் சரியில்லை என்பர். ஒவ்வொரு முறையும் சரித்தானா என்று கேட்பதால் இவ் விளையாட்டிற்குச் சரித்தான்பாண்டி என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். சரித்தான் என்பதற்கு மாறாக 'அமரேசா' என்று சொல்வதும் உண்டு. அதற்கு எதிரியார் 'ரேசு' என்று வழிமொழிவர் (த.வி).

**சரித்திரை** *šarittirai,* பெ. (n.) புளியமரம் (மலை); tamarind.

*[சரி + திரை]*

**சரித்து** *šarittu,* பெ. (n.) ஆறு (யாழ். அக.); river.

*[சல் → (சுர்). சுர → சுரம். சரம் = நீர்நிலை. சர → சரி → சரித்து]*

சரித்து → Skt. sarit

**சரித்துடை** *šarittuḍai,* பெ. (n.) புல்லுருவி; a parasitia plant - Loranthus (genus) (சா.அக.).

**சரிதன்** *šaridan,* பெ. (n.) செயலிற் சிறந்தவன்; a man of deed. *"தரும னஞ்சுறு சரிதர்" (கம்பரா. அனுமப். 10).*

*[சரி → சரிதன்]*

**சரிதி** *šaridi,* பெ. (n.) சரிதன் பார்க்க; see šaridan. "நரியினிற்றொகுதி யெல்லா நற்பரித் திரள்க ளாக்குஞ் சரிதி" *(திருவாத. பு. குதிரை. 58).*

*[சரி → சரிதி]*

சரி → Skt. sarit

**சரிநிகர்** *šari-nigar,* பெ. (n.) தன்மை, நிலை, முறை போன்றவற்றில் சமத்தன்மை; equal manner, state or condition. சொல்லாய்வில் தேவநேயர்க்குச் சரிநிகர் யார்?

க. சரிபரி

*[சரி + நிகர்]*

**சரிநிகர்வு** *šari-nigarvu,* பெ. (n.) சரிநிகர் பார்க்க; see *šarinigar.*

*[சரி + நிகர்வு]*

**சரிப்படு-தல்** *šari-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* ஏற்றதாதல்; to be agreeable or satisfactory. தாங்கள் அழைக்கும் நாளில் பொழிவுக்கு வர எனக்குச் சரிப்படும். *2.* மனமொத்தல்; to suit, agree. அவனுக்கும் எனக்கும் சரிப்படாது *3.* நேராதல்; to be right, proper; to come upto the mark or standard. *4.* ஒப்பாதல்; to be similar. *5.* முடிவுபடுதல்; to be finished, settled. செயலெல்லாம் சரிப்பட்டது

தெ. சரிபடு

*[சரி + படு-,]*

**சரிப்படுத்து-தல்** *šari-p-paduttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சரிக்கட்டு-தல் பார்க்க; see *šari-k-kattu-* (செ.அக.).

*[சரி + படுத்து-. படு (த.வி.) → படுத்து (பி.வி.)]*

**சரிப்பி-த்தல்** *šari-p-pi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நடப்பித்தல்; to conduct ceremonies. *"சாத்திரப் படி தப்பாமற் சரிப்பித்து" (உத்தரரா. அசுவ.).*

*[சரி + சரிப்பி-. சரி (த.வி.) → சரிப்பி (பி.வி.)]*

**சரிப்பிடி-த்தல்** *šari-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* பிறனுடன் ஒத்துச்செல்லுதல் (வின்.); to overtake or keep even with one, as in running, learning. *2.* கேடுசூழ்தல் (யாழ்ப்.); to aim at or plot another's ruin.

*[சரி + பிடி-,]*

**சரிப்பேச்சு** *šari-p-peccu-,* பெ. (n.) இணையான பேச்சு; a word equal to uttered from arrogance.

க. சரிமாது

*[சரி + பேச்சு]*

**சரிபம்** *šaribam,* பெ. (n.) அசோகு (மலை.); asoka tree.

**சரிபாசி** *šari-pāsi,* பெ. (n.) சிறு நன்னாரி; country saraparilla (சா.அக.).

மறுவ. சரிசயம்

**சரிபாதி** *šari-pādi,* பெ. (n.) பேர்பாதி; exact half, moiety.

க. சரிபாலு

*[சரி + பாதி]*

**சரிபார்-த்தல்**[1] *šari-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒத்துப்பார்த்தல் (வின்.); to compare, check, as a copy with its original. இவையனைத்தும் சரிபார்த்த மெய்ப்பு.

*[சரி + பார்-,]*

**சரிபார்-த்தல்**[2] *šari-p-pār-,* 4 செ.கு.வி. & 4 குன்றாவி (v.i. & v.t.) கேடு சூழ்தல் (இ.வ.); to plot one's ruin.

*[சரி + பார்-,]*

**சரிபொழுது**[1] *šari-poludu,* பெ. (n.) சாயுங்காலம் (வின்.); evening (செ.அக.).

*[சரி[1] + பொழுது]*

**சரிபொழுது**[2] *šari-poludu,* பெ. (n.) *1.* உரியநேரம்; exact time. *2.* பகல்பொழுது; midday, noon.

மறுவ. உருமம், உச்சிப்பொழுது

க. சரிபகலு, சரிகொத்து

*[சரி + பொழுது]*

**சரிபோ[1]-தல்** *šari-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **ஒத்தல்;** to resemble. "தன்பெருஞ் குணப் பொறையினால் ........ நிலமகட் சரிபோவான்" (உபதேசகா. சிவபுராண.11).

*[சரி + போ-,]*

**சரிபோ[2]-தல்** *šari-pō-*, 6 செ.கு.வி. (v.i.) *1.* **நேர் நடத்தல்;** to progress, as a game. *2.* **அமைதியாதல்** (யாழ்ப்.); to become reconciled, as contending parties. *3.* **மனப்படி நடத்தல்;** to have one's own way. தனக்குச் சரிபோனபடி செலவழிக்கிறான் (வின்.).

*[சரி + போ-,]*

**சரிமணி** *šari-maṇi*, பெ. (n.) **மகளிர் இடையில் அணியும் ஓரணி** (திவா.); a kind of girdle set with gems.

*[சரி + மணி]*

**சரிமணிக்கோவை** *šari-maṇi-k-kōvai*, பெ. (n.) **சரிமணி** (பிங்.) பார்க்க; see *šari-maṇi.*

*[சரி + மணிக்கோவை]*

**சரிமதிப்பு** *šari-madippu*, பெ. (n.) **உரிய மதிப்பு, பொருத்தமான மதிப்பு;** accurate value.

*[சரி + மதிப்பு. மதி → மதிப்பு]*

**சரிமேரை** *šari-mērai*, பெ. (n.) **குடிகளின் உரிமை** (R.T.); established rights or privileges of individual ryot.

*[சரி + மேரை]*

**சரியகவை** *šari-y-agavai*, பெ. (n.) *1.* **ஒத்த அகவை;** same age. 'பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனும் சரியகவையினராக இருக்கலாம்'. *2.* **தகுந்தஅகவை;** suitable age as for marriage. *3.* **நடுஅகவை;** middle age.

*[சரி + அகவை]*

**சரியம்** *šariyam*, பெ. (n.) **சிறுநன்னாரி** (மலை.); a species of sarsaparilla.

Skt. śārihā

**சரியற்றது** *šari-y-aṟṟadu*, பெ. (n.) **ஒழுங்கற்றது;** that is improper etc. 'அவர் பேசியது சரியற்றது' (உ.வ.).

க. சரியல்லாதது

*[சரி + அற்றது]*

**சரியா-தல்** šari-y-ā-, 6 செ.கு.வி. (v.i.) *1.* **சரிவா-தல்** பார்க்க; see *šari-v-ā-*. *2.* **முடிவுறுதல்;** to be spent, as cash, life.

க., தெ. சரியாகு

*[சரி + ஆ-,]*

**சரியாக்கு-தல்** *šari-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒழுங்குபடுத்துதல்;** to make equal. *2.* **முரண்பாடு போன்றவற்றைத் தீர்த்துவைத்தல்;** to resolve the difference of opinion etc., *3.* **உரியதாக்குதல்;** to put in a proper state, to make proper.

க. சரிகொளிசு

*[சரி + ஆக்கு-,]*

**சரியாக** *šari-y-āga*, வி.எ. (adv.) *1.* **தெளிவாக, குழப்பம் இல்லாமல், தவறு இல்லாமல்;** exactly, clearly; correctly. அந்தப் பந்து சரியாக மட்டையில் பட்டுச் சென்றது. செய்வதைச் சரியாகச் செய். *2.* **குறையாமல்;** without wanting. கொண்டுவந்த பொருட்கள் சரியாக இருந்தன. *3.* **போதுமானதாக;** just-enough, exactly. நாள்தோறும் வீட்டுவேலை செய்வதற்குத் தான் நேரம் சரியாக இருக்கிறது. *4.* **ஒழுங்காக, முறையாக, நல்ல நிலைமை;** properly; all right. எனக்கு உடல்நிலை சரியாக இல்லை. *5.* **கடுமையாக; நன்றாக;** soundly, harshly. எனக்கு வந்த சினத்தில் அவனைச் சரியாகத் திட்டிவிட்டேன்.

*[சரி + ஆக-,]*

**சரியான** *šariyāṉa*, பெ.அ. (adj.). *1.* **ஒழுங்கான; முறையான; தெளிவான;** proper. அந்த நிகழ்ச்சி பற்றிச் சரியான செய்தியில்லை. *2.* **தகுந்த; ஏற்ற; பொருத்தமான;** proper; suitable; right. அந்தச் செயலைச் செய்ய அவன் தான் சரியான ஆள். *3.* **கடுமையான; நல்ல;** extreme. இன்றைக்குச் சரியான வெயில்.

*[சரி + ஆன]*

**சரியானஆள்** *šari-yāṉa-āḷ*, பெ. (n.) **தகுதியான வேலையாள்;** a labourer of equal standing. கட்டட வேலைக்குச் சரியான ஆள் தேவை.

க. சரியாளு

*[சரியான + ஆள்]*

**சரியானபேச்சு** *šariyāṉa-pēccu,* பெ. (n.) தக்க பேச்சு; proper speech.

*[சரியான + பேச்சு]*

**சரியானவன்** *šariyāṉavaṉ,* பெ. (n.) உரிய நிலையில் இருப்பவன்; a man of equal standing or position.

க. சரியவனு; பட. சரியானம

*[சரியான + அன்]*

**சரியிடு-தல்** *šari-y-iḍu-,* 8 செ.குன்றாவி. (v.t.) படி முதலியவற்றை மூலத்தோடு ஒப்பிடுதல்; to compare, as a copy with its original (செ.அக.).

க. சரியிடு

*[சரி + இடு-,]*

**சரியில்லாதது** *šari-y-illādadu,* பெ. (n.) சரியற்றது பார்க்க; see *šari-y-aṟṟadu.*

க. சரியில்லாதது

*[சரி + இல்லாதது]*

**சரியீடு** *šari-y-īḍu,* பெ. (n.) 1. சமன்பாடு பார்க்க; see *šamaṉpāḍu.* 2. ஒத்த பருவம்; equal stage.

*[சரி + ஈடு]*

**சரியேசரி** *šari-yē-šari,* பெ. (n.) முழுமையானது, தகுதியானது, உரியது, பொருத்தமானது; very proper indeed. அன்றைய நிலையில் அவர் பேசியது சரியேசரி.

க. சரியேசரி

*[சரி + ஏ + சரி. 'ஏ' தேற்றேகாரம்]*

**சரியை** *šariyai,* பெ. (n.) சரிகை (யாழ்.அக.); lace.

*[சரிகை + சரியை]*

**சரிவயது** *šari-vayadu,* பெ. (n.) சரியகவை பார்க்க; see *šari-y-agavai.*

*[சரிகை + வயது]*

Skt. vayas → த. வயசு → வயது

**சரிவர** *šarivara,* கு.வி.எ. (adv.) 1. ஒழுங்காய்; rightly. 'இந்த வேலையைச் சரிவரச் செய்தால்தான் கூலி கிடைக்கும்'. 2. முழுதும்; wholly, completely. வரவேண்டியது சரிவர வந்துவிட்டது 3. திட்டமாய்; accurately, exactly. சரிவரப் பாகம் பிரி.

க. சரிவரெ

*[சரி + வர]*

**சரிவல்** *šari-val,* பெ. (n.) சரிவு பார்க்க (இ.வ.); see *šarivu.*

*[சரி → சரிவு → சரிவல்]*

**சரிவளை** *šari-vaḷai,* பெ. (n.) வளைவகை; a variety of bangles. (திவ். பெரியாழ். 3, 4, 8, வியா. பக். 618).

*[சரி + வளை]*

**சரிவா-தல் (சரிவருதல்)** *šari-v-ā-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நேர்வருதல்; to prove right or correct, as a mathematical problem, a prediction, an experiment. கணக்கு சரிவந்து விட்டதா? 2. சமமாதல்; to be alike equal. அவன் எனக்குச் சரிவந்தவன் (இவ.); 3. ஒத்துவருதல்; to agree, tally. 4. தீர்தல் (வின்.); to be finished, fulfilled.

*[சரி + வா-,]*

**சரிவாரம்** *šari-vāram-,* பெ. (n.) நிலச் சொந்தக்காரனும் பயிர் செய்வோனும் தமக்குள் விளைவைச் சரியாகப் பங்கிட்டுக் கொள்ளும் பாகம் (I.M.P. Sm. 92); equal division of produce between the landlord and the ryot.

*[சரி → வாரம்]*

**சரிவீதம்** *šari-vīdam,* பெ. (n.) நிரலளவு, பொதுப்படையான கணக்கீடு; medial estimate, average.

க. சரிவார

*[சரி + வீதம்]*

Skt. vihita → த. வீதம்

**சரிவீதமேரை** *šari-vīdamērai,* பெ. (n.) விளைச்சலில் சிற்றூர்ப் பணியார்க்குப் பிரித்துக் கொடுக்கும் பாகம்; proportion of the crop set apart for a village servant.

*[சரிவீதம் + மேரை]*

**சரிவு** *šarivu,* பெ. (n.) 1. சரிந்து விழுகை; sliding, rolling, slipping down. 2. சாய்வு; slope, declivity. 3. நகரம், ஆறு, எல்லை முதலியவற்றின் ஓரம் (இ.வ.); outskirts of a town; riverside; border; margin. 4. மகளிர் முன்கைகளில் அணியும் வளைவகை (இ.வ.); a kind of bracelet worn by women on the fore-arms.

ம. சரிவு; க. சரி, சறி (பள்ளத்தாக்கு); தெ. சருகுடு; து. சரி; E. slow

*[சுரி → சரி → சரிவு]*

**சரிளப்பா** *šariḷappā,* பெ. (n.) வெண்கடுகு (வின்.); white mustard.

**சரு** *šaru,* பெ. (n.) சோறு (பிங்.); boiled rice.

படை. சரு (ஏனம்)

*[சுர் → (சுரு) → சரு = சருவப்பானை, சருவப்பானையில் சமைக்கும் உணவு]*

**சருக்கம்**[1] *šarukkam,* பெ. (n.) *1.* வட்டம்; circle. *2.* நூற்பிரிவு; chapter or section of a literary work. "சருக்கம் இலம்பகம் பரிச்சேத மென்னும்" (தண்டி. 7).

*[சருக்கு → சருக்கம் = வட்டம், நூற்பிரிவு. ஒ.நோ: மண்டலம் = வட்டம், நூற்பிரிவு]*

சருக்கம் → Skt. sarga. வடமொழியாளர் இச் சொல்லை ஸ்ருஜ் என்னும் சொல்லோடு பொருத்திக் காட்டுவர். அதற்கு விடு, எறி, வீசு, வெளிவிடு என்ற பொருள்களே உண்டு (வேக. 239).

**சருக்கம்**[2] *šarukkam,* பெ. (n.) படைப்பு; creation.

*[சருக்கு → சருக்கம்]*

சருக்கு = வட்டம், பிரிவு, பிறப்பு. பல பிறப்புகளின் ஒரு பிரிவு என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் சருக்கம் படைப்பை உணர்த்திற்று.

**சருக்கரச்சரம்** *šaru-k-kara-c-caram,* பெ. (n.) சிறிய சக்கரவடிவில் அமைந்த பொன் தகடுகளைக் கொண்ட கழுத்தணி; a necklace with wheel - shaped golden ringlets.

து. சக்கரசர, சக்கரசரோ

*[சருக்கரம் + சரம்]*

**சருக்கரா** *šaru-k-karā,* பெ. (n.) உடலின் உள்ளுறுப்புகளில் கல்போன்ற தடிப்பு அல்லது கல்லடைப்பு நோய்; calculus.

*[சருக்கு → சருக்கம் = வட்டம், வட்ட வடிவில் அமைந்த சிறுகல்]*

**சருக்கராப்பிரபை** *šarukkarā-p-pirabai,* பெ. (n.) பருக்கைக் கற்களாற் பாவப்பெற்ற நிரய (நரக) வகை (சீவக. 2817, உரை); a hell paved with pointed stones of sugar-loaf shape, one of eḻu-naragam.

*[சருக்கரம் + பிரபை. சருக்கம் → சருக்கரம் = வட்டம், வட்ட வடிவக் கற்கள்]*

**சருக்கரை**[1] *šarukkarai,* பெ. (n.) கரும்பு முதலியவற்றிலிருந்து உண்டாக்கப்படும் இன்பண்டம்; kinds of sweet crystalline substance prepared from various plants esp. the sugarcane, and beetroot for use to cookery, confectionary, brewing, etc. "சருக்கரை செய்யசாலித் தண்டுலம்" (சேதுபு. இராமநா. 63).

E. saccharine, sugar

*[சுர் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சருவு → சருகு. சருகுதல் = சரிதல். சருகு → சருக்கு-. சருக்குதல் = சாய்தல், சரிதல், வளைதல். சருக்கு → சருக்கம் = வட்டம். சருக்கு → சருக்கரம் → சருக்கரை = வட்டமாக வார்க்கப்பட்ட வெல்லக்கட்டி. ஒ.நோ: வட்டு = வட்டமான கருப்புக்கட்டி.]*

சருக்கரை → Skt. šarukkarā

வடமொழியில் சரள், சிறுகல், கூழாங்கல் கற்கண்டு என்று பொருள் தொடர்பு காட்டுவர்.

சருக்கரை பெரும்பாலும் கரும்பினின்று தான் எடுக்கப்படுகிறது. இந்தியாவில் இலுப்பைப் பூ, தென்னை, பனை, ஈஞ்சு முதலிய மரங்களினின்றும் எடுப்பதுண்டு. சப்பான், சீனா, அமெரிக்கா முதலிய நாடுகளில் மரப் பட்டைகளில் இருந்தும் சருக்கரை எடுக்கப்படுகிறது. செருமனியில் 'பீட்ரூட்' என்னும் கிழங்கிலிருந்து சருக்கரை எடுக்கப்படுகிறது.

**வகைகள்**

1. நாட்டுச் சருக்கரை அல்லது சிகப்புச் சருக்கரை; country sugar or brown sugar; bane sugar.
2. பூரா சருக்கரை அல்லது நவாத்துச் சருக்கரை; candy sugar.
3. கள் சருக்கரை; loaf sugar.
4. ஈரச்சருக்கரை; unrefined moist sugar.
5. வெள்ளைச் சருக்கரை, சீனச் சருக்கரை; white refined sugar, China sugar.
6. மணற் சருக்கரை; crystallised sugar.
8. சீந்திற் சருக்கரை; bitter salt extracted from moon-creeper.
8. கண்ட சருக்கரை; sugar candy.
9. கிழங்குச் சருக்கரை; sugar from beet-root.
10. கரும்புச் சருக்கரை; sugar from sugar cane; cane sugar.
11. பழச்சருக்கரை; sugar from fruits. (சா.அக.).

**சருக்கரை**[2] *šaru-k-karai*, பெ. (n.) வெள்ளை நிறம்; white colour. சருக்கரைக் கொடி, சருக்கரைப் பாறை.

*[சருக்கரை¹ → சருக்கரை²]*

சருக்கரை சுவைநோக்கி இனிப்புப்பொருளை உணர்த்துதற்போல அதன் (சீனி) நிறம் நோக்கி வெள்ளைப் பொருளையும் உணர்த்திற்று.

**சருக்கரைக்கட்டி** *šaru-k-karai-k-kaṭṭi*, பெ. (n.) வெல்ல உருண்டை; jaggary lump ball of sugar.

*[சருக்கரை + கட்டி]*

**சருக்கரைக்கத்தி** *šaru-k-karai-k-katti*, பெ. (n.) காய்ச்சிய வெல்லப்பாகினை அச்சுவார்ப்பில் சமப்படுத்துவதற்கு உதவும் கருவி; an instrument like mason's trowel used to spread molasses into jaggery moulding.

*[சருக்கரை + கத்தி]*



சருக்கரைக்கத்தி

**சருக்கரைக்கதளி** *šarukkarai-k-kadaḷi*, பெ. (n.) ஒருவகை வாழை; a variety of plantain tree.

ம. சக்கரக் கதளி

*[சருக்கரை + கதளி. குதலி → கதலி = சிறுகாய் வாழை. கதலி → கதளி. சருக்கரை = இனிப்புச் சுவை]*

**சருக்கரைக்கரண்டி** *šarukkarai-k-karaṇḍi*, பெ. (n.) காய்ச்சிய வெல்லப்பாகினை அச்சில் இடுவதற்குப் பயன்படும் கரண்டி; laddle used to put molasses into jaggery moulding.

*[சருக்கரை + கரண்டி. குறண்டு → கறண்டு = தோண்டுங்கருவி. கறண்டு → கரண்டு → கரண்டி]*

**சருக்கரைக்கிழங்கு** *šaru-k-karai-k-kiḻaṅgu*, பெ. (n.) நிலச்சருக்கரைக் கிழங்கு; ground sugar-root - Merma arenario (சா.அக.).

*[சருக்கரை + கிழங்கு. சருக்கரை = இனிப்புச்சுவை.]*

**சருக்கரைக்குத்தி** *šaru-k-karai-k-kutti*, பெ. (n.) கோணியிலுள்ள சருக்கரையை ஆராயக் குத்தியெடுக்கும் ஊசி; metalic spike to top bales and test the contents.

*[சருக்கரை + குத்தி. குத்து → குத்தி = குத்தியெடுக்கப் பயன்படும் கருவி]*



சருக்கரைக்குத்தி

**சருக்கரைக்கேளி** *šarukkarai-k-kēḷi*, பெ. (n.) சருக்கரைக்கதளி பார்க்க; see *šarukkarai-k-kadaḷi*.

மறுவ. தேன் கதலி

*[சருக்கரை + கேளி. கதளி → கேளி]*

**சருக்கரைக்கொடி** *šarukkarai-k-koḍi*, பெ. (n.) வெள்ளை வெற்றிலைக்கொடி; a white variety of betel.

*[சருக்கரை + கொடி]*

**சருக்கரைக்கொம்மட்டி** *šarukkarai-k-kommaṭṭi*, பெ. (n.) பச்சை நிறமுடையதும் மேற்புறம் வழுவழுப்பானதும் சதைப்பற்றுடையதும், குளிர்ச்சியைத் தந்து நீர்வேட்கையினைப் போக்குவதுமான பழம்; musk melon - Citrullus vulgaris.

மறுவ. தட்பூசணி (தர்பூசினிப்) பழம்

*[சருக்கரை + கொம்மட்டி. சருக்கரை = இனிப்புச்சுவை]*

**சருக்கரைக்கொழுமிச்சை** *šarukkarai-k-kolumiccai*, பெ. (n.) இனிப்பு அல்லது தித்திப்பு நாரத்தை; sathghur orange - Citrus aurantium (citrina) (சா.அக.).

*[சருக்கரை + கொழுமிச்சை. சருக்கரை = இனிப்புச்சுவை]*

**சருக்கரைச்சோறு** *šarukkarai-c-cōṟu*, பெ. (n.) சருக்கரைப்பொங்கல் பார்க்க; see *šarukkarai-p-poṅgal*. (சா.அக.).

*[சருக்கரை + சோறு]*

**சருக்கரைநாரத்தை** *šarukkarai-nārattai*, பெ. (n.) நாரத்தை வகை; a kind of sweet orange.

*[சருக்கரை + நாரத்தை]*

**சருக்கரைப்பட்டை** *šarukkarai-p-paṭṭai*, பெ. (n.) வண்டிச்சக்கரத்தின் வெளிப்புறம் உள்ள இரும்புப்பட்டை; the iron streap around a wheel.

மறுவ. கட்டு

து. சக்ரபட்டி

*[சக்கரம் + பட்டை. பட்டு → பட்டம் = பட்டையான தகடு. பட்டு → பட்டை = தட்டையான பொருள்]*

**சருக்கரைப்பாகு** *šarukkarai-p-pāgu*, பெ. (n.) சருக்கரை அல்லது வெல்லம் உருவாவதற்கு முன்னுள்ள இளகிய பதம்; the inspisated liquid jaggery.

*[சருக்கரை + பாகு]*

**சருக்கரைப்பாறை** *šarukkarai-p-pāṟai*, பெ. (n.) வெள்ளைநிறப் பாறை; clay rock, shale (சேரநா.).

ம. சக்கப்பாற

*[சருக்கரை + பாறை. சருக்கரை = சருக்கரையின் நிறம், வெள்ளை]*

**சருக்கரைப்புகையிலை** *šarukkarai-p-pugai-y-ilai*, பெ. (n.) சில மருந்துப் பொருள்களுடன் நறுமணப் பொருள்கள் சேர்த்துச் சருக்கரைப் பாகில் குழைத்து எடுத்த புகையிலை; tobacco seasoned with jaggery syrup as spices (சேரநா.)

ம. சக்கரப் புகயில.

*[சருக்கரை + புகையிலை]*

**சருக்கரைப்புளி** *šarukkarai-p-puḷi*, பெ. (n.)
1. தித்திப்புப்புளியம்பழம்; sweet tamarind.
2. கொடுக்காய்ப்புளி; sweet babool - Pitheeolobium dulce (சா.அக.).

*[சருக்கரை + புளி. சருக்கரை = இனிப்புச் சுவை]*

**சருக்கரைப்பூசியம்** *šarukkarai-p-pūšiyam*, பெ. (n.) விரிசம் பழம்; assyrian plum cordia myxa (சா.அக.).

*[சருக்கரை + பூசியம்]*

**சருக்கரைப்பூசணி** *šarukkarai-p-pūšaṇi*, பெ. (n.)
1. சருக்கரைக்கொம்மட்டி; musk melon.
2. இனிப்புப் பூசணிக்காய் அல்லது பறங்கிக் காய்; squash gourd - cucurbita maxima (சா.அக.).

*[சருக்கரை + பூசணி. சருக்கரை = இனிப்புச்சுவை. சுள் → சுண் → சுணை = இலை, காய் முதலியவற்றிலுள்ள சிறுமுள். பூ + சுணை = பூசுணை → பூசணி = பூ போன்ற அதாவது மிகச் சிறுமுள் போன்ற அமைப்பினைக் கொண்டது]*

**சருக்கரைப்பூசினி** *šarukkarai-p-pūšiṇi*, பெ. (n.) சருக்கரைப்பூசணி பார்க்க; see *šarukkarai-p-pūsiṇi*.

*[சருக்கரை + பூசினி = பூசணி → பூசனி → பூசினி.]*

**சருக்கரைப்பூந்தி** *šarukkarai-p-pūndi*, பெ. (n.) இனிப்புப்பணியார வகை; a kind of sweet confection.

*[சருக்கரை + பூந்தி]*

U. பூந்தி → த. பூந்தி

**சருக்கரைப்பேச்சு** *šarukkarai-p-pēccu*, பெ. (n.)
1. இனிமை காட்டுஞ்சொல்; honeyed words.
2. போலிப் புகழ்ச்சி; flattery.

*[சருக்கரை + பேச்சு]*

**சருக்கரைப்பேரி** *šarukkarai-p-pēri*, பெ. (n.) பேரி வகை; a kind of pear.

*[சருக்கரை + பேரி]*

E. peri → த. பேரி

**சருக்கரைப்பொங்கல்** *šarukkarai-p-pongal,* பெ. (n.) அரிசியுடன் வெல்லம், பால், கொடி முந்திரிப் பழம், நெய் முதலியவற்றைச் சேர்த்துச் சமைத்த சோறு; a danty preparation of boiled rice mixed with jaggery, milk, dried grapes, ghee etc.

மறுவ. அக்காரவடிசில், அக்காரடலை, அக்காரடியல்

*[சருக்கரை + பொங்கல்]*

**சருக்கரைப்பொன்னாச்சி** *šarukkarai-p-ponnācci,* பெ. (n.) இனிமையாய்ப் பேசுபவள்; honey mouthed woman.

*[சருக்கரை + பொன்னாச்சி]*

**சருக்கரைப்போளம்** *šarukkarai-p-pōḷam,* பெ. (n.) வாலேந்திர போளம்; sweet myrth - Balamo dendron myrrha (சா.அக.).

*[சருக்கரை + போளம்]*

Skt. bōḷa → போளம்

**சருக்கரைமா** *šarukkarai-mā,* பெ. (n.) இனிப்புச் சுவையுடைய பழத்தைத் தரும் மாமரம்; a variety of mango tree yielding fruits as sweet as palmgur.

ம. சக்கரமாவு

*[சருக்கரை + மா]*

**சருக்கரைமாமணி** *šarukkarai-mā-maṇi,* பெ. (n.) கற்கண்டு; sugar-candy. "சருக்கரை மாமணியே...... கச்சியகம்" (யாப்.வி.62).

*[சருக்கரை + மாமணி. மா + மணி → மாமணி = மாணிக்கம், மணிகளுள் சிறந்தது]*

**சருக்கரையமுது** *šarukkarai-y-amudu,* பெ. (n.) சருக்கரைப்பொங்கல் பார்க்க; see *šarukkarai-p-pongal* (சா.அக.).

*[சருக்கரை + அமுது]*

**சருக்கரையெலுமிச்சை** *šarukkarai-y-elumiccai,* பெ. (n.) இனிப்புச் சுவையுள்ள எலுமிச்சை; sweet lime - Citrus medica - lumia (சா.அக.).

*[சருக்கரை + எலுமிச்சை]*

**சருக்கரைவட்டு** *šarukkarai-vaṭṭu,* பெ. (n.); வெல்லக்கட்டி; ball of sugar.

*[சருக்கரை + வட்டு. வள் → வட்டு = வட்டமான அச்சுக் கருப்புக்கட்டி]*

**சருக்கரைவருணி** *šarukkarai-varuṇi,* பெ. (n.) பேய்க்கரும்பு; wild-cane - Sacharum arundinaceum.

*[சருக்கரை + வருணி]*

**சருக்கரைவள்ளி** *šarukkarai-vaḷḷi,* பெ. (n.) வெளிர்ச்சிவப்பு நிறமும் மெல்லியதோலும் இனிப்புச் சுவையும் உடைய ஒருவகைக் கிழங்கு; sweet potato - Ipomaea batatas.

மறுவ. சருக்கரைக்கிழங்கு, மதுரக்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, சீனிக் கிழங்கு

*[சருக்கரை + வள்ளி. வள்ளி என்பது கொடி; வளைந்தது என்னும் பொருளது. வள்ளுதல் = வளைதல். வள் → வள்ளி = கொடி. ஒ.நோ. கொடு → கொடி. கொடுமை = வளைவு. கிழங்கைக் குறிப்பின், வள்ளுதல் = வளமாதல், உருண்டு திரளுதல். வள்ளி = உருண்டு திரண்ட கிழங்கு.]*

**சருக்கரைவள்ளிக்கிழங்கு** *šarukkarai-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ. (n.) சருக்கரைவள்ளி பார்க்க; see *šarukkarai-vaḷḷi.*

*[சருக்கரை + வள்ளி + கிழங்கு]*

**சருக்கரைவாலிகம்** *šarukkarai-vāligam,* பெ. (n.) விளாம்பழம்; wood apple - Feronia elephantum (சா.அக.).

*[சருக்கரை + வாலிகம்]*

**சருக்கரைவேம்பு** *šarukkarai-vēmbu,* பெ. (n.) ஒருவகை வேம்பு; a kind of neem tree - Melia azadirachta (சா.அக.).

*[சருக்கரை + வேம்பு]*

நூறு ஆண்டு நிறைந்த வேம்பின் பட்டை, இலை, பழம் ஆகியன எல்லாம் இனிப்புச் சுவையுடனும், மருத்துவக்குணத்துடனும் இருக்குமாம். இது காயகற்பமூலிகை. இதன் மருத்துவக் குணங்களை

"காய சித்தியாகும் கடிய சிலேட்டுமமறும்
தூய விந்து நாதமிவை சுத்தியாம் - தூயவர்க்கு
எத்திக்குங் கிட்டும் இலையருத்தில் வாயெல்லாம்
தித்திக்கும் வேம்பதையே தேடு" (சா.அக.)

என்னும் பழம்பாடல் ஒன்று குறிப்பிடுகிறது. இவ்வகை வேம்பு, மிக அரிதாகத்தான் காணப்படும்.

**சருக்கால்வேலை** *šarukkāl-vēlai,* பெ. (n.) தாழ்வாரத்தோடு கூடிய கட்டடம் (இ.வ.); building with verandah.

*[சுர் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சரு = சரிவாய் இருக்கும் பகுதி, சரிவாக அமையும் தாழ்வாரத்தோடு ஒட்டிய கட்டடம்]*

**சருக்கி** *šarukki,* பெ. (n.) பாண்டி விளையாட்டு; a children's game, a variety of hop-scotch (சா.அக.).

மறுவ. வட்டு, சில்லி, சில்லாக்கு

*[சருக்கு → சருக்கி = பல கட்டங்களுள்ள தாய் நிலத்திற் கீறப்பட்ட அரங்கினுள் வட்டவடிவச் சக்கைக்கல்லை நொண்டிக் காலால் சறுக்கி விளையாடுவது.]*

**சருக்கிருந்தஊர்** *šarukkirunda-ūr* பெ. (n.) 1. தங்கியிருந்த ஊர்; the village where (one) lived. 2. உறவினரைப் பிரிந்திருந்த ஊர்; village where (one) lived away from (his) relatives. "வாணகோ அரைசரு மருமக்கள் பொற்றொக் கையார் சருக்கிருந்து ஊர்" (செங்கம். நடுகற்கள்)

*[சருக்கி + இருந்து + ஊர்.]*

**சருக்குக்கட்டை** *šarukku-k-kaṭṭai,* பெ. (n.) தேரோட்டத்தை ஒழுங்குபடுத்த தேர்க் காலிலிடும் மரக்கட்டை (நெல்லை.); wooden brake.

*[சருக்கு + கட்டை]*

**சருக்கு-தல்** *šarukku-,* 5 செ.குவி. (v.i.) சறுக்கு; to slip (செ.அக.).

ம. சர்கு; க., தெ. சரூகு; பட. சாரு.

*[சருவு → சருகு, சருகுதல் = சரிதல். சருகு → சருக்கு. சருக்குதல் → சாய்தல், சரிதல், வளைதல், வழுவுதல், வழுக்குதல், சறுக்குதல் (வே.க.239)]*

**சருக்கெனல்** *šarukkeṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; onom. expr. signifying quickness, haste.

*[சருக்கு + எனல்.]*

**சருகட்டை** *šarugaṭṭai,* பெ. (n.) மரவட்டை (இவ.); millipede.

*[சருகு + அட்டை. ஒட்டு → அட்டு → அட்டை]*

**சருகடி-த்தல்** *šarugaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) முந்திரி மரத்தின் அடியில் கிடக்கும் இலைச் சந்தில் மறைந்து கிடக்கும் முந்திரிக் கொட்டைகளை எடுப்பதற்காகச் சிறு கோலால் அடித்தல்; to beat the leaves of cashew nut to pluck the nuts which are hidden under leaves.

*[சருகு + அடி-. அடு → அடி]*

**சருகம்**[1] *šarugam,* பெ. (n.) 1. கடுகு; mustard. 2. கல்லுப்பு; sea-salt (natural).

**சருகம்**[2] *šarugam,* பெ. (n.) மாட்டுநோய் வகையுளொன்று (இ.வ.); a disease affecting cows.

தெ. சருக

**சருகரி-த்தல்** *šarugari-,* 4 செகு.வி. (v.i.) பயனைத் துய்க்க இயலாமல் உழைத்தல்; to toil hard without enjoying the resultant advantage. 'மூத்தாள் சருகரிக்க இளையாள் மகிழ்கிறாள்' (பழ.).

*[சருகு + அரி-,]*

சருகரித்தல் = சருகுகளை ஒன்றாகக் கூட்டுதல். சருகுகளைக் கூட்டும் பணி மிகுதியான உழைப்பைக் கொள்ளும். உழைப்புக்குத் தகுந்தபடி சருகுகளின் சேர்க்கை இருக்காது அதனால் சருகரித்தல் பயனைத் துய்க்க இயலாமல் உழைப்பதை உணர்த்திற்று.

**சருகா-தல்** *šarugā-,* 6 செ.கு.வி. (v.i.) உடல் முதலியன வற்றி மெலிதல் (சருகு போல் ஆதல்); to be dried, emaciated, as body.

*[சருகு + ஆ-. உலர்ந்துவற்றிய இலைபோல் உடல் மெலிதல்]*

**சருகாமை** *šarugāmai,* பெ. (n.) ஆமைவகை(வின்.); black land-turtle.

*[சருகு + ஆமை]*

**சருகு**[1] *šarugu,* பெ. (n.) 1. உலர்ந்து வற்றிய இலை; dried leaf. "ஒலியா லசையச் சருகெழ" (வெங்கைக்கோ. 173). 2. வெற்றிலை (இ,வ.); betel leaf. 3. சிறியது; small.

க. தருகு; பட. சீக்கு

*[சுல் = சுடுதற்கருத்துவேர். சுல் → சுள். சுள்ளெனல் = காய்தல், கடுமையாகச் சுடுதல். சுள் → சள் → சண்டு = காய்ந்த புற்றாள், கூளம். சுர் → சர் → சருகு = காய்ந்த இலை, வற்றியது, சிறியது (வேக. 213)]*

**சருகு**[2] *šarugu*, பெ. (n.) *சரி*[7], *4 (நாஞ்.) பார்க்க;* see *šari*[7], 4 *(செ.அக.).*

*[சரி → சருகு]*

**சருகுச்சட்டி** *šarugu-c-catti*, பெ. (n.) சருவம் *(இந்துபாக. 62) பார்க்க;* see *šaruvam.*

*[சருவச்சட்டி → சருகுச்சட்டி]*

**சருகுசன்னாயம்** *šarugu-šannāyam*, பெ. (n.) இலகுவான இருப்புக்கவசம் *(யாழ்ப்.);* a light coat of mail.

*[சருகு + சன்னாயம். சருகு = காய்ந்தது, வற்றியது, எடை குறைந்தது, இலகுவானது]*

Skt. san-hāha → த. சன்னாயாம்

**சருகுசாதனம்** *šarugu-sādanam*, பெ. (n.) ஓலை யாவணம் *(சாசனம்);* ola document.

*[சருகு + சாதனம். சர் → சர → சருகு = காய்ந்த இலை, ஓலை. சருகுசாதனம் = ஓலையில் எழுதப்பட்ட ஆவணம்.]*

Skt. sāsana → த. சாதனம்

**சருகுண்ணி** *šaruguṇṇi*, பெ. (n.) உண்ணிவகை; wood tick.

*[சருகு + உண்ணி. சர் → சருகு = காய்ந்த இலை, வற்றியது, இலகுவானது, சிறியது. சருகுண்ணி = சிறிய பூச்சிவகை]*

**சருகுணி** *šaruguṇi*, பெ. (n.) சருகுண்ணி பார்க்க; see *šaruguṇṇi.*

*[சருகுண்ணி → சருகுணி]*

**சருகுதிர்-தல்** *šarugudir-*, *2* செ.கு.வி. (v.i.) தோலுதிர்தல் *(வின்.);* to cast off slough, as serpent.

*[சருகு + உதிர்-. சர் → சருகு = காய்ந்த இலை, மரத்தின் காய்ந்த மேற்பட்டை, மேல்தோல்.]*

**சருகுதிரி** *šarugudiri*, பெ. (n.) அம்மை வகை *(வின்.);* a kind of small-pox.

*[சருகு + உதிரி]*

**சருகுபித்தளை** *šarugu-pittaḷai*, பெ. (n.) *1.* மெல்லிய குடவ (பித்தளை)த் தகடு; thin leaf of brass. *2.* ஓயாமற் பேசுபவன் (C.G.); talkative person, chatterbox *(செ.அக.).*

*[சருகு + பித்தளை]*

கனம் குறைந்த குடவத்தை (பித்தளை)த் தட்டியவுடன் ஒலி சிறிது நேரத்திற்குத் தொடர்ந்து ஒலி எழுவது போல் ஓயாமல் பேசுதல் சருகுபித்தளை எனப்பட்டது.

**சருகுபுலி** *šarugu-puli*, பெ. (n.) சிறுத்தை வகை *(யாழ்ப்.);* a small panther.

*[சருகு + புலி. சருகு = உலர்ந்தது, வற்றியது, சிறியது.]*

**சருகுபுளி** *šarugu-puḷi*, பெ. (n.) உலர்ந்த புளி; dried tamarind fruit.

*[சருகு + புளி]*

**சருகுமுயல்** *šarugu-muyal*, பெ. (n.) சருகுகளை உண்ணும் உக்குளான் *(யாழ்ப்.);* a kind of rabit living on dried leaves.

*[சருகு + முயல்]*

**சருகுருட்டிமழை** *šaruguruṭṭi-maḻai*, பெ. (n.) சருகு முதலியவற்றை அடித்துச் செல்லும் அளவிற்குப் பெய்யும் மழை; comparatively heavy rain which drives dried leaves etc., away by it stream.

*[சருகு + உருட்டி + மழை]*

**சருகை** *šarugai*, பெ. (n.) சரிகை *(யாழ்ப்.) பார்க்க;* see *šarigai.*

*[சரிகை → சருகை]*

**சருகொட்டி** *šarugoṭṭi*, பெ. (n.) பறவை வகை *(இ.வ.);* a kind of bird.

*[சருகு → ஒட்டி]*

**சருச்சரை** *šaruccarai*, பெ. (n.) சொரசொரப்பு; roughness, ruggedness. *"களிற்றினது சருச்சரையாற் பொலிந்த கழுத்தகத்தே" (பு.வெ. 12, பெண்பாற். 2, உரை).*

*[சுள் → சுர் → சுரசு → சுரசுரப்பு = முள் முள்ளாய் அல்லது கரடுமுரடாய் இருத்தல், சுரசுர → சரசர → சருச்சரை = சுரசுரப்பு. இனி, சுர் → சுரு → சரு = சருச்சரு → சருச்சரை என்றுமாம் (வே.க. 206)]*

**சருசபம்** *šarucabam*, பெ. (n.) வெண்கடுகு *(மலை.);* white mustard.

Skt. sarṣapa

**சருணி** *šaruṇi,* பெ. (n.) சருகுண்ணி பார்க்க; see *šaruguṇṇi.*

*[சருகுண்ணி → சருணி]*

**சருத்தி** *šarutti,* பெ. (n.) *1.* தேர்க்கொடி *(வின்.)*; streamer or flag of a war. *2.* விருதுக்கொடி; distinguishing banner.

**சருதோபத்திரி** *šarudō-pattiri,* பெ. (n.) வேம்பு; margosa tree - Azadirachta indica *(சா.அக.).*

**சருப்பம்** *šaruppam,* பெ. (n.) கடுகு; mustard *(சா.அக.).*

**சருப்பராச்சியம்** *šaruppa-rācciyam,* பெ. (n.) *சங்கங்குப்பி* (மலை.); smooth volkameria.

**சருப்பராசி** *šaruppa-rāši,* பெ. (n.) நாணல் (மலை.); kaus.

*[சுல் → (சுர்) → சுரம் → சரம் = நாணல், சரம் → சருப்பம் → சருப்பராசி]*

**சருபம்** *šarubam,* பெ. (n.) அறுகங்கட்டை; the stem of sacred grass-Agrostu linearis.

**சருவச்சட்டி** *šaruva-c-caṭṭi,* பெ. (n.) சருவம் பார்க்க; see *šaruvam.*

*[சருவுச்சட்டி → சருவச்சட்டி]*

**சருவந்து** *šaruvandu,* பெ. (n.) தலைக்கவசம்; helmet. "சருவந்து கைக்கொண்டு" *(இரகு. திக்குவி. 232).*

*[சரு → சருவம் = மேல்நோக்கிச் சரிவாக உள்ள சட்டி. சரு → சருவந்து = மேல்நோக்கிச் சரிவாயுள்ள தலைக்கவசம்]*

**சருவப்பானை** *šaruva-p-pāṉai,* பெ. (n.) *சருவம்* பார்க்க; see *šaruvam.*

*[சருவு → சருவம் + பானை]*



சருவப்பானை

**சருவம்** *šaruvam,* பெ. (n.) *1.* மேல்நோக்கி சரிவாக உள்ள ஏனம் (பாத்திரம்); shallow wide-mouthed vessel. *2.* சட்டுவம் *(அக.நி.)*; spatula.

*[சுர் → (சுரு) → சரு → சருவு. சருவுதல் = சாய்தல், சரிதல். சருவு → சருவல் = 1. சாய்வு. 2. சரிவான நிலம். சருவுச்சட்டி மேல் நோக்கிச் சரிவான சட்டி. சருவு → சருவம் = மேல் நோக்கிச் சரிவாகவுள்ள கலம். சருவப்பானை, சருவச்சட்டி என்னுங் கலங்கள் மேனோக்கிச் சரிவாயிருத்தலைக் காண்க (வே.க. 238)]*

த. சருவம் → Skt. śarāva

**சருவல்**[1] *šaruval,* பெ. (n.) *1.* சாய்வு; sloping inclining. *2.* சரிவான நிலம்; slope, declivity.

*[சரிவு → சருவு → சருவல்]*

**சருவல்**[2] *šaruval,* பெ. (n.) *1.* நட்புத்தன்மை; friendly, intercourse. "சருவலொழிந்தென் மனமாம் பாங்கி பகையானால்" *(அருட்பா. iv, தவ்வி வருதல்). 2.* தொந்தரவு (கொ.வ.); mischief.

*[சருவு → சருவல்]*

**சருவானுபூதி** *šaruvāṉupūdi,* பெ. (n.) பேதிக் கிழங்கு (மலை.); jalap.

**சருவு**[1]**-தல்** *šaruvu-,* 5 செ.குன்றாவி. (v.i.) *1.* பழகுதல்; to become familiar. "என்னுள்ளே சருவியெனை யிந்நாளும் வாட்டுமிடர்" *(திருப்போ. சந்நிதி. மாலை. 80). 2.* கொஞ்சிக் குலாவுதல்; to caress amorously. "அங்கவரோடு சருவியும்" *(திருப்பு. 6). 3.* தொல்லைதருதல்; to do mishief. *4.* போராடுதல்; to quarrel, wrangle. "சருவிய சமயிகள்" *(திருப்பு. 928).*

*[சுர் → (சுரு) → சரு → சருவு-,]*

**சருவு**[2]**-தல்** *šaruvu-,* 5 செ.குன்றாவி. (v.i.) சரி[1] பார்க்க (வின்.); see *šari*[1].

*[சுர் → (சுரு) → சரு → சருவு-,]*

**சருவு**[3] *šaruvu,* பெ. (n.) சரிவு (வின்.); declivity, steep side of a rock.

*[சரிவு → சருவு]*

**சருவுசட்டி** *šaruvu-šaṭṭi,* பெ. (n.) சருவம் (இ.வ.) பார்க்க; see *šaruvam.*

*[சருவு + சட்டி = மேல்நோக்கிச் சரிவாக உள்ள கலம் (வே.க. 238)]*

**சரூர்** *šarūr,* பெ. (n.) விரைவு; promptitude, dispatch.

*[சர் - விரைவுப்பொருள் தரும் ஒலிக் குறிப்பு. சர் → சரேரெனல். சர் → சரு → சரூர்]*

த. சரூர் → U. zarūr

**சரேரெனல்** *šarēr-enal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு (திவா.); onom. expr. of suddenness, haste.

*[சரேர் + எனல்]*

**சரேலச்சொரி-தல்** *šarēla-c-cori-,* 2 செ.கு.வி. (v.i.) விரைந்துகொட்டுதல்; to fall or descend in quick succession. "மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்க பூ" (தேவா. 1152, 3).

*[சரேலம் + சொரி-,]*

**சரேலெனல்** *šarēlenal,* பெ. (n.) சரேரெனல் பார்க்க; see *šarērenal.*

*[சரேரெனல் → சரேலெனல்]*

**சரை[1]-த்தல்** *šarai-,* 4 செ.கு.வி. (v.i.) சிரை (இ.வ.) பார்க்க; see *širai* (செ.அக.).

*[சிரை → சரை-,]*

**சரை[2]** *šarai,* பெ. (n.) வாழைச்சருகு முதலியவற்றால் அமைக்கும் மூடிவகை (யாழ்ப்.); cover made of dried plantain leaves, straw or ōla.

*[சரு(கு) → சரை]*

**சரைநெல்** *šarai-nel,* பெ. (n.) நெல்வகை (A.); a kind of paddy.

*[சரை + நெல்]*

**சரைமரம்** *šarai-maram,* பெ. (n.) தூண் முதலியன செய்யப்பயன்படும் மர வகைகளுள் ஒன்று; a kind of wood.

*[சரை + மரம்]*

**சரைமலம்** *šarai-malam,* பெ. (n.) வயிரக் குற்றங்களுள் ஒன்று (சிலப். 14: 180, உரை); a flaw in diamonds.

*[சரை + மலம்]*

**சரையாப்பி-த்தல்** *šarai-yāppi-,* 4 செ.குன்றாவி. (v.t.) உள்ளே செலுத்துதல் (யாழ்.அக.); to thread in, squeeze through, pass through.

*[சரை + ஆப்பி-. சுல் = குத்துதற் கருத்துவேர். சுல் → (சுர்) → சர் → சரை]*

**சல்** *šal,* 13 செ.கு.வி. (v.i.) செல்லுதல்; to go.

குமரிக்கண்டத் தமிழில் 'சல்' என்னும் அடியும் செல்லுதல் வினையைக் குறித்திருத்தல் வேண்டும். இன்று அது அப்பொருளில் வடதிரவிட வழிப்பட்ட இந்தியில் வழங்குகின்றது (த.வ. 77).

**சல்லக்கடுப்பு** *šalla-k-kaḍuppu,* பெ. (n.) சள்ளைக்கடுப்பு (யாழ். அக.) பார்க்க; see *šaḻḻai-k-kaḍuppu.*

*[சளி + கடுப்பு → சளிக்கடுப்பு → சள்ளைக் கடுப்பு → சல்லக்கடுப்பு]*

**சல்லக்குட்டி** *šalla-k-kuṭṭi,* பெ. (n.) சிறிய வெளவால் மீன் (மீனவ.); small bat fish.

*[சல்லம் + குட்டி]*

**சல்லகண்டம்** *šallagaṇḍam,* பெ. (n.) புறா (யாழ்.அக); dove.

*[சல்லம் + கண்டம்]*

**சல்லகம்[1]** *šallagam,* பெ. (n.) 1. முள்ளம்பன்றி (சூடா.); porcupine. 2. நார் (யாழ்.அக.); fibre.

*[சுல் → சல் → சல்லகம் = முள்ளுள்ளது]*

த. சல்லகம் → Skt. sallaka

**சல்லகம்[2]** *šallagam,* பெ. (n.) சல்லெனவொலிக்கும் கைத்தாளம் (யாழ்.அக.); large cymbal.

*[சல் = ஒலிக்குறிப்புச்சொல். சல் → சல்லகம் = சல்லென வொலிக்கும் தாளக்கருவி]*

த. சல்லகம் → Skt. shallaka.

**சல்லகி** *šallagi,* பெ. (n.) 1. சல்லகம்[1], 1 பார்க்க. see *šallagam 1.* 2. வெள்ளைக் குங்கிலியம் (வின்); konkany resin. 3. ஆத்தி (பிங்.) common mountain ebony. 4. முள்ளிலவு (பிங்.) red flowered silk cotton. 5. தேட் கொடுக்கி (மலை) Indian turnsole.

*[சுல் → சல் = குத்துதற்பொருள். சல் → சல்லகி = முள்ளுள்ளது, அல்லது முள் போன்ற வடிவமுள்ளது.]*

**சல்லகு** *šallagu,* பெ. (n.) விளாம்பிசின்; gum of wood apple tree (சா.அக.).

**சல்லடம்** *šalladam,* பெ. (n.) இடுப்பினின்று அடித்தொடை வரை அணியும் காற்சட்டை; short drawers.

ம. சல்லடம்; க. சல்லண, சலண, சல்ண; தெ. சல்லடமு, செட்டி, சல்லாட; து. சல்லண; கோத. சவளம், சள்ம், சொலள, சோளம் (நீர்ச் சீலை); Pkt., Skt. caṅdhātaka; Mar., H. colṇā.

**சல்லடை** *šalladai,* பெ. (n.) தவசம் முதலியன சலிக்குங்கருவி; sieve (செ.அக.).

ம. சல்லட; க. சல்லடி, சல்லாட, சலடெ, சரடெ; தெ. சலட; பட. சாலி.

[சலியடை → சல்லடை]

சல் → சலி. சலித்தல் = அசைதல், மனங்கலங்குதல், சோர்வடைதல், அருவருப்புக் கொள்ளுதல், சல்லடையாற் சலித்தல் அல்லது சுளகால் (முறத்தால்) தெள்ளியெடுத்தல்.



சல்லடை

**சல்லடைக்கட்டில்** *šalladai-k-kattil,* பெ. (n.) மணல், சுண்ணாம்பு முதலியவற்றைச் சலிப்ப தற்குப் பயன்படும் இரும்புக்கம்பி வலையாலான கட்டில்; large sieve for litting sand, lime etc.

[சல்லடை + கட்டில்]



சல்லடைக்கட்டில்

**சல்லடைக்கண்** *šalladai-k-kaṇ,* பெ. (n.) சல்லடையின் துளை; hole of sieve.

[சல்லடை + கண்]

**சல்லடைக்கழிவு** *šalladai-k-kaḻivu,* பெ. (n) கப்பி; coarse grit.

[சல்லடை + கழிவு]

**சல்லடைக்கொப்பு** *šalladai-k-koppu,* பெ. (n) மகளிரணியும் காதணி வகை (வின்.); woman's jewel for the helix.

[சல்லடை + கொப்பு]

**சல்லடைபோட்டுத்தேடு-தல்** *šalladai-pōṭṭu-t-tēḍu-,* 5 செ.கு.வி (v.i.) ஓரிடங்கூட விடாமல் தேடுதல்; to search thoroughly. ஊர் முழுவதும் சல்லடைபோட்டுத் தேடிவிட்டேன். அவனைக் காணவில்லை.

[சல்லடை + போட்டு + தேடு-,]

**சல்லடைமுருகு** *šalladai-murugu,* பெ. (n.) மகளிர் காதணி வகை (இ.வ.); a kind of ear ornament.

[சல்லடை + முருகு. முள் → முரு → முருகு = வளைந்த காதணி]

**சல்லபம்** *šallabam,* பெ. (n.) சல்லகம்[1] 1 பார்க்க. see *šallagam*[1].

[சல்லகம் → சல்லபம்]

**சல்லம்[1]** *šallam,* பெ. (n.) பன்றிமுள் (யாழ்.அக.); porcupine quill.

ம. சல்லம்.

[சுல் → சல் → சல்லம் = முள், பன்றிமுள்.]

த. சல்லம் → Skt. šalalla.

சல்லகம்[1] பார்க்க

**சல்லம்[2]** *šallam,* பெ. (n.) நார் (யாழ்.அக.); fibre.

[சல்லகம் → சல்லம்]

சல்லம் → Skt. šalla.

**சல்லம்[3]** *šallam,* பெ. (n.) சிறியது; that which is small.

[சில் → சல் → சல்லம்]

சல்லம் → Skt. šalla.

**சல்லரி[1]-தல்** *šallari-,* 4 செ.குன்றாவி (v.t.) துண்டு துண்டாக நறுக்குதல் (யாழ்ப்.); to hack, cut into pieces.

*[சில் → சல் + அரி]*

**சல்லரி[2]** *šallari-,* பெ (n.) 1. பறைப்பொது (திவா.); drum. 2. திமிலைப்பறை; a kind of drum. "சல்லரியியாழ் முழவம்" (தேவா. 89, 2).

ம. சல்லரி; க. சல்லரி.

*[சல் → சல்லரி]*

சல்லரி → Skt. jhallarī

**சல்லரி[3]** *šallari,* பெ. (n.) கைத்தாளம் (வின்.) large cymbal.

*[சல் → சல்லரி]*

தாளக்கருவி. வெண்கலத்தினாற் செய்யப் பட்டது. சல் அல்லது சல்லரை என்னும் ஓசையுடைமையால் தாளக்கருவியிற் பெரியது சல்லரி என்றும் சிறியது சாலர் என்றும் பெயர் பெற்றன.

**சல்லரி[4]** *šallari,* பெ. (n.) ஒரு வகை மணி; bell.

*['சல்' = ஒலிக்குறிப்புச் சொல். சல் → சல்லரி = சல் என்று ஒலி எழுப்புவது]*

த. சல்லரி → Skt. jhallarī

**சல்லரிப்பறை** *šallari-p-parai,* பெ. (n.) ஒருவகைப் பறை; a kind of drum.

ம. சல்லரிப்பற

*[சல்லரி + பறை.]*

சல்லரி[2] பார்க்க

**சல்லவட்டம்** *šalla-vaṭṭam,* பெ. (n.) கேடய வகை; a kind of shield. "சல்லவட்ட மெனுஞ் சுளகாற் றவிடுவிடப் புடையீரே" (கலிங். 532).

*[சல்லம் + வட்டம்]*

**சல்லவெளவால்** *šalla-vauvāl,* பெ. (n.) சிறிய வெளவால் மீன் (மீனவ.); a small bat fish.

*[சல்லம் + வெளவால்]*

**சல்லா[1]** *šallā,* பெ. (n.) கடல் மீன் (நெல்லை. மீனவ.); sea fish.

**சல்லா[2]** *šallā,* பெ. (n.) மெல்லிய துணிவகை; muslin. "நடுச்சாமத்திலே சல்லாப்புடவை குளிர் தாங்குமோ" (தனிப்பா. i, 240, 2). 2. இழை நெருக்கமில்லாத் துணி; thin mull of loose texture.

ம. சல்லா; தெ. செல்லா; க. சல்ல; து. சல்லெ.

*[சல் → சல்லடை = துளையுள்ள கருவி. சல் → சல்லா = நெருக்கமில்லா இழையுடைய துணி]*

**சல்லாத்துக்கீரை[1]** *šallāttu-k-kīrai,* பெ. (n.) இலைக்கோசு; cabage.

*[சல்லாத்து + கீரை]*

**சல்லாத்துக்கீரை[2]** *šallāttu-k-kīrai,* பெ. (n.) கச்சுக்கீரை என்று வழங்கும் ஒருவகைச் சீமைக்கீரை; garden lettuce - Lactuca scariola (சா.அக.).

*[சல்லாத்து + கீரை]*

வகை: 1. காட்டுச் சல்லாத்துக்கீரை; wild endive - chieorium endivia.
2. காப்பிரிச் சல்லாத்து; curled endive - chicorium intybus.

**சல்லாபவுப்பு** *šallāba-v-uppu,* பெ (n). பூரணாதி யுப்பு (மூ.அ); a ring of salt.

*[சல்லாபம் + உப்பு]*

**சல்லாபி-த்தல்** *šallābi-,* 4 செ.கு.வி (v.i.) கலந்து பேசுதல்; to chat, converse.

**சல்லாரி[1]** *šallāri,* பெ. (n.) 1. அலசற் சீலை (இ.வ.); cloth of loose texture. 2. பயனற்றவன்; worthless person. 3. வேடக்காரன் (இ.வ..); a person with clownish dress.

*[சல் → சல்லா = இழை நெருக்கமில்லாத் துணி. சல் → சல்லரி → சல்லாரி]*

**சல்லாரி[2]** *šallāri,* பெ. (n.) சல்லரி[2] (வின்) பார்க்க; see *šallari[2]*.

*[சல்லரி → சல்லாரி]*

**சல்லாலி** *šallāli,* பெ. (n.) கோமாளியின் வண்ண ஆடைத் தொங்கல் (வின்.); coloured strips of cloth hanging from buffoon's dress.

**சல்லி[1]** *šalli,* பெ. (n.) எல்லரி (புறநா. 152, உரை); a kind of drum.

*[எல்லரி → சல்லரி → சல்லி]*

**சல்லி**[2] *šalli*, பெ. (n.) *1.* **கல் முதலியவற்றின் உடைந்த துண்டு;** a small pieces of stone or glass. "எறிசல்லி புதுமலர்க ளாக்கினான் காண்" *(தேவா. 596,8.). 2.* **சிறிய கல்;** small chips, as of stone, rubble. *3.* **கிளிஞ்சில் முதலியவற்றின் சிற்றோடு** *(வின்.);* small flat shells used for lime. *4.* **சிறுகாசு** *(இ.வ);* small copper coin, fractional part of a larger coin, 1/12 anna. *5.* **அணிகலன் தொங்கல்** *(சூடா.);* short pendant in ornaments. *"முத்தாலாகிய சல்லியையும்" (மணிமே. 18:46 உரை). 6.* **மெலிந்தவுடலன்;** a thin emaciated person. *'அந்த ஆள் சல்லியாயிருப்பான்' (உ.வ.). 7.* **பொறுப்பற்றவன், இழிந்தவன்;** a mean fellow, a trifler. *8.* **துளை** *(உ.வ);* perforation, hole. *9.* பொய் *(வின்.);* false hood. *10.* போக்கிலி *(உ.வ);* villain, black guard.

ம. சல்லி; க., தெ., பட. சல்லி; து. சல்லி, சல்லி ; பர். சலுப்.

*[சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது, சிறு குருவி. சிட்டு → சீட்டு = ஓலை நறுக்கு. சுல் → சில் = சிறியது, துண்டு. சுல் → சல் → சல்லி = சிறியது. சிறுதுண்டு, சிறுகாசு, ஓட்டாஞ்சல்லி, சல்லிக்கல், சல்லிப்பயல், சல்லிக்கட்டு முதலிய புணை பெயர்களில் சல்லி என்பது சிறுமை குறிக்கும். (மு.தா. 129)]*

**சல்லி**[3] *šalli*, பெ. (n.) சல்லிக்கெண்டை பார்க்க; see *šalli-k-keṇḍai*.

*[சில் → சல் → சல்லி (சு.வி. 19)]*

**சல்லி**[4] *šalli*, பெ. (n.) அதிமதுரம் *(பிங்.);* liquorice plant.

ம. சல்லி; து. சல்லி (ஒரு வகை நீர்ப்புல்)

**சல்லி**[5] *šalli*, பெ. (n.) கொய்சகவேலை *(புதுவை);* moulding work (Arch.).

*[சில் → சல் → சல்லி (சு.வி. 19)]*

**சல்லிக்கட்டு** *šalli-k-kaṭṭu*, பெ. (n.) **முரட்டு எருதுகளைக் கொட்டுமுழக்குடன் வெளியில் விட்டுத் துரத்தி, அவற்றினைத் தழுவிப் பிடிக்கச் செய்யும் ஒரு வீர விளையாட்டு;** bull baiting festival in which the competitors capture fierce bulls let loose on the occasion.

மறுவ. ஏறுகோள், ஏறுதழுவுதல், மஞ்சு வெருட்டு, மாடுபிடி சண்டை, எருதுபிடி, காளைப்போர்.

*[சல்லி + கட்டு. சல்லி என்னும் பெயருடைய ஆயர்குல வீரனால் நடத்தப்பட்ட ஏறுதழுவல் என்னும் வீரவிளையாட்டு]*

இளைஞரின் வலிமையை யறிதற்குச் சல்லிக் கட்டு-கொல்லேற்றைப் பிடித்துநிறுத்தல், அளவையாகக் கொள்ளப்பட்டது. முல்லை நிலத்திலுள்ள ஆயரும், ஏறுதழுவின இளைஞருக்கே பெண் கொடுத்தனர். இது பண்டை முல்லைநில வழக்கம்.

தமிழ்நாட்டின் தென்பாகம் சிறந்ததென்பதற்குக் கூறும் காரணங்களுள் சல்லிக்கட்டு, சிலம்பம் முதலிய மறவிளையாட்டுகள் சிறப்பாய் வழங்குதலைக் காட்டுவர்.



சல்லிக்கட்டு

**சல்லிக்கயிறு** *šalli-k-kayiṟu*, பெ. (n.) **தென்னை நாரினால் செய்த மெலிதான கயிறு;** a thin variety of coir thread.

ம. சல்லிக்கயிறு

*[சல்லி + கயிறு]*

**சல்லிக்கரண்டி** *šalli-k-karaṇḍi*, பெ. (n.) **துளையுள்ள ஒருவகைக் கரண்டி** (இந்துபாக. *58);* a broad perforated ladle.

*[சல்லி + கரண்டி]*



சல்லிக்கரண்டி

**சல்லிக்காசு** *šalli-k-kāšu,* பெ. (n.) சல்லி² 4 பார்க்க; see *šalli*² 4 "சல்லிக்கா சொன்று முனக் கீந்தா தரிப்பவரார்" (விறலிவிடு. 211).

*[சல்லி + காசு]*

**சல்லிக்காரன்** *šalli-k-kāraṉ,* பெ. (n.) பொய்யன் (கொ.வ.); liar, hypocrite.

க. சலிக; தெ. சல்லிகாடு

*[சல்லி + காரன்]*

**சல்லிக்கூடை** *šalli-k-kūḍai,* பெ. (n.) மீனவர் பயன்படுத்தும் கூடை வகையுள் ஒன்று; a kind of basket.

*[சல்லி + கூடை]*




**சல்லிக்கெண்டை** *šalli-k-keṇḍai,* பெ. (n.) பைம்பழுப்புநிறமும், பொன்னிறக்கண்ணும் 25 பவுண்டு நிறையும் உள்ளதாய் நன்னீரில் வாழும் கெண்டைமீன் வகை; a fresh - water fish, greenish - brown, eyes golden, weighing 25 lbs. Barbus carnaticus.

*[சல்லி + கெண்டை]*

**சல்லிக்கொடி** *šalli-k-koḍi,* பெ. (n.) வையக மூலி (மூ.அ.க.); a creeper.

*[சல்லி + கொடி]*

**சல்லிகை** *šalligai,* பெ. (n.) பெரும்பறை வகை; a kind of large drum.

ம. சல்லிக.

*[சல் → சல்லி → சல்லிகை]*

'சல்லிகையென்பது சல்லென்ற ஓசை யுடைமையாற் பெற்ற பெயர் (சிலப். 3: 27, உரை).

**சல்லிசு**¹ *šallišu,* பெ. எ. (adj.) எளிதான; easy, gently.

U. calis

*[சில் → சல் → சல்லிசு]*

**சல்லிசு**² *šallišu,* பெ. (n.) மிகுந்த விலையிறக்கம்; dead cheap. இன்று சந்தையில் கிழங்கு சல்லிசு.

*[சில் → சல் → சல்லிசு]*

**சல்லித்தரை** *šalli-t-tarai,* பெ. (n.) 1. கப்பிப் போட்ட தரை (முகவை.); floor treated with concrete. 2. சரளைக்கல் நிறைந்த தரை (முகவை.); gravel ground.

*[சல்லிசு + தரை]*

**சல்லித்தீவு** *šalli-t-tīvu,* பெ. (n.) நன்னீர்த்தீவை ஒட்டிய நீளுருட்டுக் கல் வளருந் தீவு (மீனவ.); an Island.

*[சல்லி + தீவு. தீர்வு → தீவு]*

**சல்லிநிலம்** *šalli-nilam,* பெ. (n.) சங்கு அதிகமாக உருவாகும் கடலடிப்படுகை; water bed where conch yields are more (மீனவ.).

*[சல்லி + நிலம்]*

சங்கு உருவாகும் இடம் சிறியகற்கள் மிகுதியாக நிறைந்திருக்கும் இடமாக இருப்பதால் அவ்விடம் சல்லிநிலம் என அழைக்கப்பட்டது. சேறு, மணல் உள்ள இடங்களில், சங்கு அதிகம் உருவாவதில்லை.

**சல்லிப்பலகை** *šalli-p-palagai,* பெ (n). கப்பலின் முகப்புப்பலகை; (Naut.); head board.

*[சல்லி² + பலகை]*

**சல்லிப்பாட்டுமடை** *šalli-p-pāṭṭu-maḍai,* பெ. (n.) சல்லிக்கற்கள் மிகுதியாகக் காணப்படும் கடற்பரப்பு (மீனவ.); sea bed where gravels are more.

*[சல்லி + படு + மடை → சல்லிபாட்டு மடை. படு → பாடு → பாட்டு]*

**சல்லிப்பாய்** *šalli-p-pāy,* பெ. (n.) ஒருவகைப் புல்லால் முடையப்பெற்ற பாய்; a kind of mat made of grass (சேரநா.).

ம. சல்லிப்பாய்

*[சல்லி + பாய்]*

**சல்லிப்பொடி**¹ *šalli-p-poḍi,* பெ. (n.) உடைந்த துண்டு (இ.வ.); small piece, fragment, broken shell.

*[சல்லி + பொடி]*

**சல்லிப்பொடி**[2] *šalli-p-podi,* பெ. (n.) சிறுமீன்; little fish.

*[சல்லி + பொடி]*

**சல்லிப்பொதி** *šalli-p-podi,* பெ. (n.) பெரும் பொய்யன் (பொய் மூட்டை) (வின்.); a great liar, as a bag of lies.

*[சல்லி + பொதி]*

**சல்லிமாடு** *šalli-mādu,* பெ. (n.) 1. சல்லிக்கட்டுக் குரிய எருது; bull trained for bull-baiting. 2. பட்டிமாடு; stray cattle.

*[சல்லி + மாடு]*

**சல்லிமாலை** *šalli-mālai,* பெ. (n.) பொங்கல் விழாநாள் முதலியவற்றில் மாடுகட்குக் கட்டும் மாலை; decorative wreath for cattle at poṅgal and on occasions like šalli-k-kaṭṭu.

*[சல்லி + மாலை]*

**சல்லிமேய்ச்சல்** *šalli-mēyccal,* பெ. (n.) புல் அல்லது கிடுகினால் வேயப்படும் கூரை வேய்ச்சல் (மீனவ.); thatching roof with straws or braided coconut leaves.

*[சல்லி + மேய்ச்சல். வேய்ச்சல் → மேய்ச்சல்]*

**சல்லியக்கரு** *šalliya-k-karu,* பெ. (n.) செய்வினை மருந்து வகை (வின்.); a drug used in black magic.

*[சல்லியம் + கரு]*

**சல்லியகரணி**[1] *šalliya-garaṇi,* பெ. (n.) படைக் கலன் தைத்த புண்ணை ஆற்றும் மருந்து (திவா.); medicament which heals wounds caused by weapons.

*[சல்லியம் + கரணி]*

**சல்லியகரணி**[2] *šalliya-garaṇi,* பெ. (n.) எருக்கு (பிங்.); madar.

*[சல்லியம் + கரணி]*

**சல்லியசயம்** *šalli-ya-šayam,* பெ. (n.) மருக்காரை; common enaetic nut-Randia dumetorum (சா.அக.).

**சல்லியடி-த்தல்** *šalli-y-adi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பொய்கூறுதல்; to talk lies or scandals. 2. தரைக்குக் கப்பியடித்தல்; to lay concrete.

*[சல்லி + அடி]*

**சல்லியம்**[1] *šalliyam,* பெ. (n.) 1. அம்பு (பிங்.); arrow. 2. முள்ளம்பன்றி (பிங்.); porcupine. 3. எலும்பு (பிங்.); bone. 4. ஆணி; nail. "நமதூதரறை சல்லிய நிகர்த்த" (இரகு. திக்குவி 95). 5. இருப்புக்கோல்; iron rod. "சல்லியந் தளர வாங்கிற்று..... நலமலி கட்டகம்" (ஞானா. 55:12). 6. படைக்கல நுனி (சங்.அக.); sharp point or head of a weapon. 7. ஈட்டி; spear javelin. 8. தொல்லை; disturbance. trouble, mischief. "சல்லியஞ் செய்யு மந்தத் தாடகை" (இராமநா. பாலகா. 9). 9. நிலத்திற்குக் கீழ் இருப்பனவற்றை அறிவிக்கும் கணியம்; art of divining things underground. "சல்லிய காண்டம்" (சினேந்.). 10. மாயக்காட்சி (வின்.); magical enchantment for warding off missile weapons; black magic. 11. கருநூலுள் ஒன்று (வின்.); a treatise on magic.

*[சுல் = குத்தற்கருத்து வேர். சுல் → சல் = கூரிய முனையுள்ளது, குத்தும் கருவி. சல் → சல்லியம் = கூரிய முனையுள்ள அம்பு, பன்றிமுள், ஆணி, இரும்புக்கோல் படைக்கல நுனி, கூரிய ஆயுதம், அது தருவது போன்ற தொல்லை.]*

சல்லியம் → Skt. šalya.

**சல்லியம்**[2] *šalliyam,* பெ. (n.) செஞ்சந்தனம் (பிங்.); red sandalwood.

*[சுல் → சல் → சல்லியம்]*

**சல்லியர்**[1] *šalliyar,* பெ. (n.) நிலத்திற்குக் கீழ் இருப்பனவற்றைத் தெரிவிக்கும் கணிய (ஆருட) வல்லோர்; the men who knows the art of diving things underground.

*[சல்லியம் → சல்லியர்]*

**சல்லியர்**[2] *šalliyar,* பெ. (n.) மாயக்கலையில் வல்ல இனத்தார் (வின்.); a caste of magicians.

*[சல்லியம் → சல்லியர்]*

**சல்லியள-த்தல்** *šalli-y-aḷa-,* 3 செ.கு.வி. (v.i.) சல்லியடி-த்தல் பார்க்க (கொ.வ.); see *šalli-y-adi-*

*[சல்லியம் → அள]*

**சல்லியன்**[1] *šalliyaṉ,* பெ. (n.) சல்லிக்காரன் பார்க்க; see *šalli-k-kāraṉ.*

*[சல்லி → சல்லியன்]*

**சல்லியன்**[2] *šalliyan*, பெ. (n.) வெள்ளி; the planet śukra. "குரவனாகிக் குறுகிய சல்லியன்" *(கந்தபு. கயமுகனு. 52).*

*[சல்லி → சல்லியன்]*

**சல்லியாதேவி** *šalliyā-dēvi*, பெ. (n.) ஒரு சிறுதேவதை *(யாழ்.அக.)*; a demoness.

*[சல்லியர் → சல்லியா + தேவி]*

**சல்லியுடை--த்தல்** *šalliyuḍai-*, 4 செ.குன்றாவி. (v.i.) கற்களைச் சிறிய அளவினதாக உடைத்தல்; to get small stones break bigger ones 'சல்லியுடைக்கும் வேலைக்கு ஆள் தேவை' *(உ.வ.).*

க. சல்லிசு, சள்ளிசு, செல்லிசு. (துண்டாக்கு, வெட்டு), சல்லி ஒடெ.

*[சல்லி + உடை]*

**சல்லியூஞ்சல்** *šalli-y-ūñjal*, பெ. (n.) வெள்ளை வாகை; white sirrisa - Albizzia procera *(சா. அக).*

*[சல்லி + ஊஞ்சல்]*

**சல்லியூடகம்** *šalli-y-ūḍagam*, பெ. (n.) வெள்ளிய கடல்மீன் வகை; sea fish, silvery.

*[சல்லி + ஊடகம்]*

**சல்லிவெடிப்பு** *šalli-veḍippu*, பெ. (n.) மரம் வெட்டப்பட்டுக் காயும்போது ஏற்படும் வெடிப்பு; cracks found in dried logs.

*[சல்லி + வெடிப்பு]*

**சல்லிவேர்** *šalli-vēr*, பெ. (n.) ஆணிவேரின் கிளையில் கொத்தாக வளரும் வேர் ; root let 'சல்லிவேரறக் கல்லிப் பறிக்கிறது' *(பழ.).*

*[சல்லி + வேர்]*

**சல்லு**[1]**-தல்** *šallu-*, 5 செ.கு.வி. (v.i.) நீர் தெளித்தல் *(வின்.)* ; to sprinkle water.

ம. சல்லுக, க. சல்லிசு; தெ. சல்லின்சு.

*[சல் → சல்லு (ஒ.மொ. 145)]*

**சல்லு**[2]**-தல்** *šallu-*, 5 செ.குன்றாவி. (v.t.) சல்லடையாற் சலித்தல் *(வின்.)*; to sift.

தெ. சல்லிஞ்சு

*[சல் → சல்லு]*

**சல்லூர்** *šallūr*, பெ. (v.i.) திருமயம் வட்டம் வாழைக்குறிச்சியில் உள்ள ஓரிடம்; name of a place in Vālaikurichi in Tirumayam "செம்பியன் (வ)ழை குறி(ச்சி). சல்லூர். *(1. வாழைக்குறிச்சிக் கல்.3.1.2).*

**சல்லைக்குட்டி** *šallai-k-kuṭṭi*, பெ. (n.) சிறு வெளவால் மீன் *(மீனவ.)*; small bat fish.

*[சல்லி → சல்லை + குட்டி. சல்லி = சிறிய]*

**சல்லைவெளவால்** *šallai-vauvāl*, பெ. (n.) சிறிய மீன் *(தஞ்சை.மீனவ.)*; small fish.

*[சல்லை + வெளவால்]*

**சல்லோபில்லோவென்றிரு-த்தல்** *šallō-pillō-v-enriru-*, 3 செ.கு.வி. (v.i.) கூச்சமின்றி எளிதாகப் பழகுதல் *(கொ.வ.)*; to move freely and familiarly.

*[சல்லோ + பில்லோ + என்றிரு-,]*

**சலக்கடுப்பு** *šala-k-kaḍuppu*, பெ. (n.) நீர்க்கடுப்பு; strangury.

*[சலம் + கடுப்பு]*

**சலக்கண்டகம்** *šala-k-kanḍagam*, பெ. (n.) 1. நீர்ப்பூடுவகை *(யாழ்.அக.)*; an aquatic plant. 2. முதலை; crocodile.

*[சலம் + கண்டகம். கள் → கண்டு → கண்டம் → கண்டகம்]*

**சலக்கண்டம்** *šala-k-kanḍam*, பெ. (n.) 1. நீரால் வரும் இழப்பு; danger or accident from water, as inundation, drowning etc., 2. மிக வேர்வை; profuseness of perspiration. சலகண்டமாய் வேர்த்தது *(வின்.).*

*[சலம் + கண்டம். கள் → கண்டு → கண்டம்]*

**சலக்கந்தி** *šala-k-kandi*, பெ. (n.) சகசரபேதி *(மூ.அ.)*; coarse red ochre.

**சலக்கப்புரை** *šalakka-p-purai*, பெ. (n.) 1. கழிவறை (இ.வ); latrine. 2. குளிக்கும் அறை *(வின்.)*; bath-room.

*[சலக்கம் + புரை]*

**சலக்கம்** *šalakkam,* பெ. (n.) சலகம்[2] பார்க்க; see *šalagam*[2].

*[சலகம் → சலக்கம்]*

**சலக்கமனை** *šalakka-maṉai,* பெ. (n.) கழிப்பிடம் (யாழ்.அக.); latrine.

*[சலக்கம் + மனை]*

**சலக்கழிச்சல்** *šala-k-kaḻiccal,* பெ. (n.) நீரிழிவு நோய்; diabetes.

*[சலம் + கழிச்சல். கழி → கழிச்சல். 'சல்" தொ.பெ.ஈறு]*

**சலக்கு** *šalakku,* பெ. (n.) எரியுப்பு (நவச்சாரம்) (வின்.); sal-ammoniac.

**சலக்குடல்** *šala-k-kuḍal,* பெ. (n.) சிறுநீர்ப்பை, மூத்திரப்பை; urinary bladder (செ.அக.).

*[சலம் + குடல்]*

**சலக்கூர்மை** *šala-k-kūrmai,* பெ. (n.) அமரியுப்பு (மூ.அ.); urinary salt.

*[சலம் + கூர்மை]*

**சலக்கெனல்** *šalakkeṉal,* பெ. (n.) தண்டை முதலான காலணிகள் அசையும்போது எழும் பரல்களின் ஓசைக்குறிப்பு; onom. expr. signifying tintling sound of bells of anket etc., "மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" (திருக்கோ. 57).

*[சலக்கு + எனல்]*

**சலக்கோவை** *šala-k-kōvai,* பெ. (n.) 1. நீர்க் கோர்வை; catarrh. 2. வீக்கம்; dropsy.

*[சலம் + கோவை. கோர் → கோ → கோவை]*

**சலகம்**[1] šalagam, பெ. (n.) பொட்டுப்பூச்சி (யாழ்.அக.); spider.

**சலகம்**[2] *šalagam,* பெ. (n.) 1. குளியல்; bath. 2. மலங்கழித்தல்; evacuation of bowels.

க. சலக; தெ. சலகமு

*[சலம் → சலகம்]*

**சலகம்**[3] *šalagam,* பெ. (n.) சங்கு; conch.

*[சலம் → சலகம். நீரில் வளர்வது]*

**சலகற்பம்** *šala-kaṟbam,* பெ. (n.) சேறு; mud.

*[சலம் + கற்பம்]*

**சலகன்** *šalagaṉ,* பெ. (n.) சலகன்பன்றி (வின்.); பார்க்க; see *šalagaṉ-paṉṟi.*

*[சலகு[2] → சலகன்]*

**சலகன்பன்றி** *šalagaṉ-paṉṟi,* பெ. (n.) விதையடித்த பன்றி (யாழ்ப்.); gelded boar.

*[சலகு[2] → சலகன் + பன்றி]*

**சலகாமி** *šala-kāmi,* பெ. (n.) நீரில் பின் வாங்காமற் செல்லுங் குதிரை (வின்.); horse that can go on water, opp. to pū-kāmi.

*[சலம் + காமி]*

Skt. jala-gāmi

Skt. gāmi → த. காமி.

**சலகாரம்** *šalagāram,* பெ. (n.) நீர்வளி; (புதுவை); hydrogen.

*[சலம் + காரம்]*

**சலகு**[1] *šalagu,* பெ. (n.) முத்துச்சிப்பி; pearl-oyster. 'சலகிற் கிடந்த முத்துக்கும்' (ஈடு, 5, 1,5).

*[சலம் + சலகு]*

Skt. jala-ja

**சலகு**[2] *šalagu,* பெ. (n.) 1. விதையடிக்கை; (யாழ்ப்.); castration, gelding. 2. படைப்பயிற்சி; (யாழ்.அக.); military drill.

*[சுல் → சல் → சலகு]*

**சலகுபிடித்-தல்** *šalagu-piḍi-,* 4 செ.குவி. (v.i.) 1. விதையடித்தல் (யாழ்ப்.); to castrate. 2. படைப்பயிற்சி செய்தல் (யாழ்.அக.); to practise drill.

*[சலகு + பிடி-,]*

**சலகை**[1] *šalagai,* பெ. (n.) 1. 60 முதல் 80 படியளவுள்ள ஒரு தவச (தானிய) அளவு; a grain measure = 1/3 poti or a bullock load = 60 to 80 measures. 2. சலகை விதைப்பாடுள்ள நிலம் (I.M.P.Cm.74); land sufficient in extent for sowing one šalagai of paddy.

க. சொலகெ; கெ. சலக

**சலகை**[2] *šalagai,* பெ. (n.) காணிக்கைப் பொருள் (வின்.); visiting presents.

*[சல → சலகு → சலகை]*

**சலகை**[3] *šalagai,* பெ. (n.). *1.* தோணி *(நீரிற் செல்வது);* boat lit., that which goes on water. *2.* தெப்பம் *(சங்.அக.);* raft.

*[சலம் → சலகை]*

**சலகை**[4] *šalagai,* பெ. (n.) வெளிப்பாடு *(யாழ்.அக.);* publicity.

*[சல → சலகை]*

**சலகொதுகு** *šala-kodugu,* பெ. (n.) நீர்க்கொதுகு *(பிங்.);* a kind of gnat infesting water.

*[சலம் + கொதுகு = கொசுரு]*

**சலங்கல்லுமா** *šalan-galluma,* பெ. (n.) காட்டுக் கோங்கு; prussicacid tree *(செ.அக.).*

**சலங்கு** *šalangu,* பெ. (n.) *1.* கட்டுப் படகு (வின்.); small boat, barge, coasting vessel. *2.* முத்துக் குளிக்கப் பயன்படும் படகு (இ.வ.); boat used for pearl-fishing (செ.அக.).

*[சல் → சில் = சிறியது, துண்டு. சல் → சல் → சல்லி. சல் = நறுக்கு. சல் → சலங்கு = சிறுபடகு]*

**சலங்குக்காரன்** *šalangu-k-karan,* பெ. (n.) முத்துக்குளிப்பவன் (இ.வ.); pearl-diver.

*[சலங்கு + காரன்]*

**சலங்குப்படகு** *šalangu-p-padagu,* பெ. (n.) சலங்கு-2 பார்க்க; see *šalanagu-2.*

*[சலங்கு + படகு]*

**சலங்குபறித்-தல்** *šalangu-pari-,* 4 செ.குவி. (v.i.) கப்பற் பொருள் இறக்குதல் (வின்.); to unload a boat.

*[சலங்கு + பறி-,]*

**சலங்கை** *šalangai-,* பெ. (n.) சதங்கை; tiny bells attached to or used as ornaments.

ம. சலங்க, சிலங்க, செலங்க

*[சதங்கை → சலங்கை. நடனத்திலும் பிற ஆட்டங்களிலும் காலில் அணியப் படுவதும் அசையும்போது ஒலியெழுப்பும் வகையில் பல சிறுமணிகள் கட்டியதுமான அணிகலன்]*

**சலங்கைக்காரர்** *šalangai-k-karar,* பெ. (n.) செம்படவர் (இ.வ.); fishermen.

*[சலங்கு + காரர் → சலங்குக்காரர் → சலங்கைக்காரர்]*

**சலங்கைக்கொதி** *šalangai-k-kodi,* பெ. (n.) சலங்கையொலி போன்ற உலைநீரின் கொதிப்பு; boiling of water or liquid - food characterised by bubbling.

*[சலங்கை + கொதி]*

**சலங்கைச்செடி** *šalangai-c-cedi,* பெ. (n.) செடிவகை (சங்.அக.); a plant.

*[சலங்கை + செடி]*

**சலங்கைப்பார்** *šalangai-p-par,* பெ. (n.) பாறை வகைகளுள் ஒன்று; a kind of rock.

*[சலங்கை + பார்]*

**சலங்கைமணி** *šalangai-mani,* பெ. (n.) சிறுமணிகள் கோத்த தோல்பட்டை; bell belt.

*[சலங்கை + மணி. முள் → முட்டு → முத்து = உருண்ட கல் அல்லது விதை. முள் → (மள்) → மண் → மணி = உருண்ட கூலம் அல்லது விதை, உருண்ட பாசி. சலங்கை மணி உருண்ட பாசியோடு கூடிய மணி]*



சலங்கை மணி

**சலங்கைமுன்தாங்கி** *šalangai-mun-tangi,* பெ. (n.) மகளிர், காலின் இரண்டாம் விரலில் அணியும் கணையாழி; a ring worn on the second toe by women, one of ai-varnam.

*[சலங்கை + முன் + தாங்கி]*

**சலங்கோத்தல்** *šalaṅ-gōttal,* பெ. (n.) 1. நீர்கோத்தல் (வின்.); catching cold. 2. சீழ் பிடித்தல்; suppuration.

*[சலம் + கோத்தல்]*

**சலங்கோவை** *šalaṅ-kōvai,* பெ. (n.) உடலில் நீர் வைத்தலாகிய நோய்வகை (இ. வ.); dropsy.

*[சலம் + கோவை. கோர் → கோ → கோவை.]*

**சலசண்டி** *šala-saṇḍi,* பெ. (n.) வளவளவெனப் பொருளின்றிப் பேசுவோர் (மீனவ.); babble, wishy washy talk.

**சலசந்தி** *šala-candi,* பெ. (n.) இரண்டு கடல்களை இணைக்கும் குறுகிய நீர்ப்பகுதி (இக்.வ.); strait.

*[சலம் + சந்தி]*

சலசந்தி → Skt. jala + sandhi

**சலசம்** *šalašam,* பெ. (n.) 1. தாமரை (நீரில் மலர்வது); lit., that which is born in water; lotus, "சலசத்தியுள்...... மலர்ப்பொரியட்ட" (தேவா. 575. 6); 2. முத்து; pearl. "முத்திரண்டு வேறு தலசமே சலசமென்ன" (திருவிளை. மாணிக்க. 53). 3. பாசி (இலக்.அக.); green moss.

*[சலம் + சலசம்]*

**சலசயனம்** *šala-šayanam,* பெ. (n.) நீரிடமாகிய திருமால் படுக்கை (திவா.); bed of water, as of Tirumāl (Viṣṇu).

*[சலம் + சயனம். சாய் = படுக்கை]*

Skt. šayana → த. சயனம்

**சலசர்ப்பிணி** *šala-šarppiṇi,* பெ. (n.) நீரட்டை (நீரிற் செல்வது) (வின்.); leech as creeping in water.

*[சலம் + சர்ப்பிணி]*

**சலசரம்** *šala-šaram,* பெ. (n.) 1. மீன் (உரி. நி); fish. 2. மீன ஓரை (சூடா.); pisces of the zodiac. 3. படகு, தோணி முதலியவை (சிலப். 14:75, உரை.); rafter, boat.

*[சலம் + சரம்]*

**சலசரிமெழுகு** *šala-šari-meḻugu,* பெ. (n.) மருந்து வகை (தஞ்சை.சர.iii.76); a kind of medicine.

*[சலசரி + மெழுகு]*

**சலசல**[1] *šala-šala,* பெ. (n.) 1. ஆற்றுநீர் முதலியன அசைந்து ஓடுதலை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. of purling, as of water. "சலசல மும்மதஞ் சொரிய" (சீவக. 82). 2. உணர்ச்சிவயப்பட்டு மனம் உலைவுறுதலை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying rustle.

ம., தெ., து. சலசல; க. சலசல

*[சல + சல. இரட்டைக்கிளவி]*

**சலசல**[2]**-த்தல்** *šala-šala-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சலசலவென ஒலித்தல்; to rustle "பச்சோலை சலசலத்து" (தமிழ்நா. 50). 2. ஓயாமற் பேசுதல்; to be talking incessantly.

*[சலசல → சலசலத்தல்]*

**சலசலப்பு** *šala-šalappu,* பெ. (n.) 1. நீர் ஓடும் ஓசை; the wash of flowing water. 2. குழப்பம் அல்லது எதிர்ப்பு; ripple, murmur. நான் வீட்டிற்குள் நுழைந்ததும் அங்கு ஏற்பட்ட சலசலப்பு குறைந்தது. 3. அச்சுறுத்தும் பேச்சு; threat. பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது. 4. அசைவு; wavering.

*[சலசல → சலசலப்பு. 'பு' பெயராக்க ஈறு]*

**சலசலெனல்** *šala-šalenal,* பெ. (n.) 1. சருகு முதலியன அசைதலை உணர்த்தும் ஓர் ஒலிக்குறிப்பு (பிங்.); onom. expr. of rustling, as of dried leaves. 2. மழைத்தூரல் ஒலியை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; sounding as of drizzling rain.

*[சலசல + எனல்]*

**சலசாதி** *šala-šādi,* பெ. (n.) நீர்வாழ்வன; aquatic creature. சலசாதி யனைத்தும் (பிங். 8: 247).

*[சலம் + சாதி]*

**சலசூசி** *šala-šūši,* பெ. (n.) நீரட்டை (வின்.); leech.

*[சலம் + சூசி. ஊசி → சூசி = குத்துவது]*

**சலசூத்திரம்** *šala-šūttiram,* பெ. (n.) *நீரிறைக்குங் கருவி (வின்.);* water-pump, hydraulic lift.

*[சலம் + சூத்திரம்]*

**சலசை** *šalacai,* பெ. (n.) *திருமகள் (சூடா.);* Laksmi.

*[சலம் → சலசை]*

**சலஞ்சலம்** *šalañšalam,* பெ. (n.) *வலம்புரி யாயிரஞ் சூழ்ந்த சங்கு ;* a fabulous conch said to be surrounded by 1000 valampuri conches. "வலம்புரி சலஞ்சலம் வளைஇய தொத்தனள்" *(சீவக. 184).*

*[சலம் + சலம்]*

**சலணி** *šalaṇi,* பெ. (n.). *வால் மிளகு (வின்.);* cubeb pepper.

**சலத்தம்பம்** *šala-t-tambam,* பெ. (n.) *சலத்தம்பனம் பார்க்க;* see *šala-t-tambaṉam.*

*[சலம் + தம்பம்]*

Skt. tambam → *த. தம்பம்*

**சலத்தம்பனம்** *šala-t-tambaṉam,* பெ. (n.). *அறுபத்து நான்கு கலையுள் நீரின் ஆற்றலை மாற்றும் கலை;* art of counteracting the natural properties of water by magic, one of aṟubattunāṉgu-kalai.

*[சலம் + தம்பனம்]*

Skt. tambaṉam → *த. தம்பனம்*

**சலத்திரம்** *šalattiram,* பெ. (n.) *ஓலைக்குடை (யாழ்அக.);* umbrella of palmyra leaves.

*[சலம் + திரம். நீரை, மழைநீரைத் தடுப்பது]*

சலத்திரம் → Skt. jala-tra.

**சலத்துவாரம்** *šala-t-tuvāram,* பெ. (n.) *சலத்துளை பார்க்க;* see *šala-t-tuḷai.*

*[சலம் + துவாரம்]*

**சலத்துளை** *šala-t-tuḷai,* பெ. (n.) *1. சிறுநீர் வழி;* urinary passage, urethra. *2. சாய்க்கடை;* drain, conduit.

*[சலம் + துளை]*

**சலத்தொல்லை** *šala-t-tollai,* பெ. (n.) *விரைவாக மலசலம் கழிக்க வேண்டிய கட்டாயத்தால் ஏற்படும் தொல்லை;* discomfort due to urgent need to make water or void excrement.

*[சலம் + தொல்லை]*

**சலதரங்கம்** *šalataraṅgam,* பெ. (n.) *1. நீரலை;* wave. *2. பல கிண்ணங்களிற் பலவளவில் நீர்வார்த்துச் சுருதியமைத்துக் கொண்டு சிறு கோலால் தட்டி இசைக்கும் ஒரு வகை இசைக்கருவி;* musical cups containing varying quantities of water and played with sticks.

*[சலம் + தரங்கம்]*

**சலதரம்** *šala-daram,* பெ. (n.) *1. முகில் (நீரைத் தாங்குவது);* cloud [lit, that which holds water]. "வந்ததா விச்சலதரமே" *(வெங்கைக்கோ. 411).* *2. நீர்நிலை (பிங்.)* pond, lake. *3. கடல் (வின்.)* ocean.

*[சலம் + தரம்]*

**சலதளம்** *šala-taḷam,* பெ. (n.) *அரசு (வின்.);* pipal.

Skt. šala-dala

**சலதாரி** *šala-tāri,* பெ. (n.) *கங்கை நீரை அணிந்தவனான சிவன்;* Šivaṉ, as having the Ganges in His locks. "சலதாரி மணிமிடற் றண்ணற்கு" *(பரிபா. 9,6).*

*[சலம் + தாரி]*

Skt. dhari → *த. தாரி.*

**சலதாரை** *šala-tārai,* பெ. (n.) *சாய்க்கடை;* drainage pipe, sewer, gutter.

மறுவ. அங்கணம், நாம்புவாய், புழல், சுருங்கு

க., தெ. சலதாரி

*[சலம் + தாரை]*

**சலதி**[1] *šaladi,* பெ. (n.) *சலநிதி பார்க்க;* see *šala-nidi.* "தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்" *(கம்பரா. தாடகை. 38).*

*[சலம் + நிதி - சலநிதி → சலதி]*

**சலதி**[2] *šaladi,* பெ. (n.) *பொய் கூறுபவர்;* liar. "சலம்புணர் கொள்கைச் சலதி யொடாடி" *(சிலப். 9:69).*

*[(சுல்) → சல் → சலதி (மு.தா. 263)]*

**சலந்தரம்** *šalan-daram,* பெ. (n.) சலதரம்-2 பார்க்க (உரிநி.); see *šaladaram-2.*

*[சலம் → தரம்]*

**சலந்தரன்** *šalan-daraṉ,* பெ. (n.) சிவனால் மடிந்த அசுரன்; an Asura slained by Šivaṉ. "சலமுடைய சலந்தரன்ற னுடறடிந்த நல்லாழி" (திருவாச. 12:18).

**சலந்தராரி** *šalandarāri,* பெ. (n.) சிவன் வெளிப்பாடுகளுளொன்று (காஞ்சிப். சிவபுண். 22.); a manifestation of Šivaṉ.

Skt. jalandhara.

*[சலம் → சலந்தராரி]*

**சலந்திரட்டி** *šalan-tiraṭṭi,* பெ. (n.) கொற்றான் (சங்.அக.); parasitic leafless plant.

*[சலம் + திரட்டி]*

**சலநாட்டை** *šala-nāṭṭai,* பெ. (n.) (இசை) பண் வகை (பரத.102.); a specific melody type.

**சலநாட** *šala-nāḍa,* பெ. (n.) பண்வகை (மேள கர்த்தாக்களுளொன்று) (சங்.சந்.47); a primary rāga.

*[சலநாட்டை → சலநாட]*

**சலநிதி** *šala-nidi,* பெ. (n.) கடல்; sea, ocean. "தகுசல நிதிநிறை தரத்த தாயினும்" (இரகு. திக்குவி. 29).

*[சலம் + நிதி]*

**சலநோய்** *šalanōy,* பெ. (n.) நீரிழிவுநோய்; diabetes.

*[சலம் + நோய்]*

சர்க்கரைநோய் பார்க்க

**சலப்பிசாசு** *šala-p-pišāšu,* பெ. (n.) சலப்பேய் பார்க்க; see *šala-p-pēy.*

*[சலம் + பிசாசு]*

Skt. pišāca → த. பிசாசு

**சலப்பிரமேகம்** *šala-p-piramēgam,* பெ. (n.) நோய்வகை; a kind of disease.

*[சலம் + பிரமேகம்]*

**சலப்பிரளயம்** *šala-p-piraḷayam,* பெ. (n.) பெருவெள்ளம்; deluge.

*[சலம் + பிரளயம்]*

Skt. piraḷaya → த. பிரளயம்

**சலப்பூ** *šalappū,* பெ. (n.) மீன்; fish.

*[சல(ம்) + பூ]*

**சலப்பேய்** *šalappēy,* பெ. (n.) 1. அடிக்கடி குளித்துக் கொண்டிருக்கும்படிச் செய்யும் பேய்; an evil spirit which causes its viction to bathe frequently. 2. சலப்பேய் பிடித்தவன்; person possessed by šala-p-pēy.

*[சலம் + பேய்]*

**சலப்பை** *šalappai,* பெ. (n.) சிறுநீர்ப்பை, மூத்திரப்பை (வின்.); the urinary bladder.

*[சலம் + பை. பொள் → பொய் → (பய்) → பை = துளை, துளையுள்ளது. சலப்பை = நீர்ப்பை, சிறுநீர் நிரம்பிய பை]*

**சலபத்திரம்** *šala-pattiram,* பெ. (n.) அரசிலை (மூ.அ.); pipal leaf.

*[சலம் + பத்திரம்]*

Skt. patra → த. பத்திரம்

**சலபதி** *šala-padi,* பெ. (n.) கடலரசன், வருணன் (பிங்.); Varuṇaṉ, as sea god.

*[சலம் + பதி]*

Skt. pati → த. பதி

**சலபம்** *šalabam,* பெ. (n.) விட்டில் (பிங்.); grasshopper, locust.

**சலபயரோகம்** *šala-paya-rōgam,* பெ. (n.) சலவச்சநோய் பார்க்க; see *šala-v-acca-nōy.*

*[சலம் + பயம் + ரோகம்]*

Skt. bhaya → த. பயம்; Skt. rōga → த. ரோகம்

**சலபாதை** *šala-pādai,* பெ. (n.) சலத்தொல்லை பார்க்க; see *šala-t-tollai.*

*[சலம் + பாதை]*

Skt. bādhā → த. பாதை

**சலபுட்பம்** *šala-putpam,* பெ. (n.) *சலப்பூ பார்க்க;* see *šala-p-pū.*

*[சலம் + புட்பம்]*

Skt. puṣpa → த. புட்பம்

**சலம்**[1] *šalam,* பெ. (n.) *1.* நீர்; water. "துவர்பல வூட்டிச் சலங்குடைவார்" *(பரிபா. 10:90).* 'சலம் நுழையாத இடத்திலே எண்ணெயும் எண்ணெய் நுழையாத இடத்தில் புகையும் நுழையும்' *(பழ.).* *2.* சீழ்நீர்; pus. *3.* சிறுநீர், மூத்திரம்; urine மலசலம்.

ம. சலம்; க., படு. கீவு (சீழ்); தெ. சீமு; கோண். குலம்; பர். குல்ச; கூய். குல் கனை

*[சல சல → நீரோட்டத்தைக் குறிக்கும் ஒலிக்குறிப்புச் சொல். சல சல → சலம் = சல சல வென்று ஓடுவது, நீர்.]*

த. சலம் → Skt. jala

jala, another Sanskrit word for water, is supposed to have been borrowed from the Pre-Sanskrit northern vernaculars (C.G.D.F.L. 571).

**சலம்**[2] *šalam,* பெ. (n.) *1.* நடுக்கம் (உரி.நி.); trembling quivering, wavering. *2.* அசையும் அம்புக்குறி; moving target for an arrow, one of four ilakku. "இலக்கமவை......... சலநிச் சலமெனச் சொல்வகையே" *(பாரத. வாரணா. 56).* *3.* சுழற்சி; motion, revolution as of a wheel. (கம்பரா. இராவணன் வதை. 63). *4.* இயங்கு திணை (பி.வி.11); the category of movables.

*[உலம் = சுற்று, சுழற்சி. உலம் → அலம் = சுழற்சி. அலம் → சலம் = சுழற்சி, நடுக்கம், அசையும் அம்புக்குறி, இலங்குதிணை]*

**சலம்**[3] *šalam,* பெ. (n.) *1.* தணியாச்சினம்; malice, cherished anger. "சலம்புரிதண்டு" *(பரிபா. 15:58).* *2.* சினம்; anger. "சந்திரற் குவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கி" *(கம்பரா. மாரீச. 240).* *3.* பொய்மை; falsehood. "சலம்புணர் கொள்கை" *(சிலப். 9: 96).* *4.* ஏய்ப்பு; deception, trickery. "சலப்படையா னிரவிற் றாக்கிய தெல்லாம்" *(பரிபா. 6, 57).* *5.* சொல்லுவோனுடைய கருத்துக்கு வேறான பொருளைக் கற்பித்துக்கொண்டு பழித்துரைக்கையாகிய அழிப்பு (நிக்கிர கத்தானம்) *(பிரபோத. 42.5.);* criticism by perverting the sense of a word, ascribing to it a sense not intended by the speaker, one of the sixteen categories of Indian logic. *6.* தீயசெயல்; evil deed. "சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல்" *(குறள், 660).* *7.* மாறுபாடு; hostility, conflict. "சலம்புகன்று சுறவுக்கலித்த" *(மதுரைக். 112).* *8.* போட்டி; competition rivalry. "சலங் கொண்டு மலர் சொரியும்" *(திவ். பெரியதி. 3, 9, 1).* *9.* விடாப்பிடி (வின்.); obstinacy, tenacity. சலம்பிடிக்க. *10.* ஒரு பக்கஞ் சாய்கை; partiality. "சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்" (சி.போ.சிற். 10,2,2).

*[உலம் → அலம் → சலம்]*

த. சலம் → Skt. chala

**சலம்**[4] *šalam,* பெ. (n.) முள்ளம்பன்றியின் முள் *(பிங்.);* porcupine quill.

*['சுல்' குத்தற் கருத்து வேர். சுல் → சல் → சலம்]*

த. சலம் → Skt. šala

**சலம்**[5] *šalam,* பெ. (n.) இலாமிச்சை (தைலவ. தைல. 6.); cuscus.

Skt. šala

*[சலம் → சலம்]*

**சலம்பம்** *šalambam,* பெ. (n.) சிலம்பம் (இ.வ.) fencing.

*[சிலம்பம் → சலம்பம்]*

**சலம்பல்** *šalambal,* பெ. (n.) வாயரட்டை (இ.வ.) a vulgar chatterer.

*[அல் → அல → அலம்பு → அலம்பல் = ஆரவாரம், வீண்பேச்சு. அலம்பல் → சலம்பல்]*

**சலம்பிடி**[1]**-த்தல்** *šalam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சலம்வை-த்தல் பார்க்க; see *šalam-vai-.*

*[சலம் + பிடி]*

**சலம்பிடி**[2]**-த்தல்** *šalam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) விடாப்பிடி செய்தல் (வின்.); to be obstinate, self-willed.

*[சலம்[3] + பிடி-,]*

**சலம்பு-தல்** *šalambu-,* 5 செ.கு.வி. (v.i.) ஓயாமற் பேசுதல் (இ.வ.); to chatter, talk incessantly (செ.அக.).

*[அல் (அலை) → அலம்பு. அலம்புதல் = அலைதல், அசைத்தல், அசைந்து*

*ஒலித்தல். அல் → அலை → அலப்பு. அலப்புதல் = வீண்பேச்சு பேசுதல், பிதற்றுதல். அலம்பு → சலம்பு]*

**சலம்புரி** *šalampuri,* பெ. (n.) சங்கு (யாழ்.அக.); conch.

*[சலம் + புரி; வலம்புரி → சலம்புரி]*

**சலம்விடு-தல்** *šalam-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. குளிக்கப்பண்ணுதல்; to give a bath, as to a convalescent. 2. சிறுநீர்கழித்தல் (வின்.); to pass urine.

*[சலம் + விடு-,]*

**சலம்வை-த்தல்** *šalam-vai-,* 4 செ.கு.வி. (v.i.) சீழ்கோத்தல் (M.L.); to suppurate.

*[சலம் + வை-,]*

**சலமடைப்பு** *šalam-adaippu,* பெ. (n.) நீரடைப்பு (யாழ்.அக.); strangury.

*[சலம் + அடைப்பு]*

**சலமண்டலம்** *šala-mandalam,* பெ. (n.). நச்சுத்தன்மையுள்ள சிலந்தி; tarantula, a large spider.

*[சலம் + மண்டலம்]*

**சலமண்டலி** *šala-mandali,* பெ. (n.) சலமண்டலம் பார்க்க; see *šala-mandalam.*

*[சலம் + மண்டலி]*

**சலமலம்** *šala-malam,* பெ. (n.). 1. நீரும் மனிதக் கழிவும்; urinary and excrement. 2. கடற்பஞ்சு (வின்.); sponge.

*[சலம் + மலம்]*

**சலமறிப்பு** *šala-marippu,* பெ. (n.) சலமடைப்பு (வின்.) பார்க்க; see *šalam-adaippu.*

*[சலம் + மறிப்பு]*

**சலமார்ச்சாரம்** *šala-mārccāram,* பெ. (n.) நீர்ப்பூனை (மூ.அ.); otter, lutra.

*[சலம் + மார்ச்சாரம்]*

Skt.mārjāra → த. மார்ச்சரம்

**சலமானம்** *šala-mānam,* பெ. (n.) செல்லுகை (யாழ்.அக.); going, passing.

Skt. šalamāna

*[செல் → சல் + மானம். 'மானம்' தொ.பெ.வி.]*

**சலமிடு-தல்** *šalamidu-,* 20 செ.கு.வி. (v.i.) நாள்தோறும் நீருக்குப் படையல் செய்தல் (அர்க்கியங் கொடுத்தல்); to offer oblation of water, as in daily rituals or religious exercises. "கிழக்கே சலமிடுவார் தொழுகேதாரம்" (தேவா. 1154, 4).

*[சலம் + இடு-,]*

**சலமூர்த்தி** *šala-mūrtti,* பெ. (n.) உலாவரும் மூலவர் (யாழ்.அக); idol in a temple intended for procession.

*[சலம் + மூர்த்தி]*

Skt.mūrti → த. மூர்த்தி.

**சலமேகம்** *šala-mēgam,* பெ. (n.) நோய் வகை (சங்.அக.); a disease.

*[சலம் + மேகம்]*

**சலயந்திரம்** *šala-yantiram,* பெ. (n.) நீரிறைக்குங் கருவி (யாழ்.அக.); water - lift.

*[சலம் + எந்திரம்]*

**சலரசம்** *šala-rašam,* பெ. (n.) உப்பு; salt.

*[சலம் + ரசம்]*

Skt. raša → த. ரசம்

**சலராகம்** *šala-rāgam,* பெ. (n.) வெண்சிவப்பு (யாழ்.அக.); light red.

Skt. jala + rāga.

**சலராசி** *šala-rāši,* பெ. (n.) கடல் (பிங்.); ocean. 2. கடக மீன முதலிய ஓரை (நீரோடு தொடர்புடையது); signs of the zodiac as kadagam, mīnam, as connected with water.

*[சலம் + ராசி]*

Skt. rāsi → த. ராசி

**சலருகம்** *šala-rugam,* பெ. (n.) தாமரை (மலை.); lotus.

*[சலம் + ருகம்]*

Skt. ruha → த. ருகம்

**சலரோகம்** *šala-rōgam,* பெ. (n.) சலநோய் பார்க்க; see *šala-nōy.*

*[சலம் + ரோகம்]*

Skt. rōga → த. ரோகம்

**சலலம்** *šalalam,* பெ. (n.) முள்ளம்பன்றியின் முள் (பிங்.); porcupine quill.

*[சலம் → சலலம்]*

**சலலி** *šalali,* பெ. (n.) சலலம் (வின்.) பார்க்க; see *šalalam.*

*[சலம் → சலலம் → சலலி]*

**சலலிங்கம்** *šala-liṅgam,* பெ. (n.) உறுப்பி (அங்க) லிங்கம் (சைவச. பொது. 123, உரை); a small liṅga usually worn as a pendant.

*[சலம் + லிங்கம். இலக்கம் → இலங்கம் → இலிங்கம் → லிங்கம் (கொச்சை)]*

த. இலிங்கம் → Skt. liṅga

**சலவகு** *šalavagu,* பெ. (n.) இலவம்பிசின் (மூ.அ.); gum of the red-flowered silk-cotton.

**சலவச்சநோய்** *šalav-a-cca-nōy,* பெ. (n.). நீரினிடத்து அச்சத்தை உண்டாக்கும் நாய்க்கடி நோய் (இங்.வை.); hydrophobia, as causing dread of water.

*[சல(ம்) + அச்சம் + நோய்]*

**சலவர்** *šalavar,* பெ. (n.) நெய்தனில மக்கள் (பிங்.); inhabitants of a coastal district, as sea-faring men.

*[சலம் + அர்]*

**சலவன்**[1] *šalavaṉ,* பெ. (n.) 1. ஏமாற்றுக்காரன்; decitful person. "சலவருட்சாலச் சலமே" (நாலடி. 188). 2. சினமுடையவன்; angry person. 3. பகைவன்; enemy. "அரக்கர்க் கெஞ்ஞான்றுஞ் சலவன்" (திவ். பெரியதி 1.5.3).

*[சலம்[3] + சலவன்]*

**சலவன்**[2] *šalavaṉ,* பெ. (n.) சலகன்பன்றி (யாழ்ப்.) பார்க்க; see *šalagaṉ-paṉṟi.*

*[சலகன் → சலவன்]*

**சலவன்பன்றி** *šalavaṉ-paṉṟi,* பெ. (n.) பெண் பன்றி; sow.

*[சலவன்[2] + பன்றி]*

**சலவாதம்** *šala-vādam,* பெ. (n.) நோய்வகை (கடம்ப. பு. இலீலா. 136); a malady.

*[சலம் + வாதம்]*

Skt. vāta → த. வாதம்

**சலவாதி**[1] *šala-vādi,* பெ. (n.) 1. சினமுள்ளவன் (வின்.); angry person. 2. விடாப்பிடிக்காரன்; obstinate person.

*[சலம்[3] + வாதி]*

**சலவாதி**[2] *šala-vādi,* பெ. (n.) இறப்புச் செய்தி சொல்வோன் (வின்.); person of a servile caste employed to give information of deaths.

தெ. சலவாதி

*[சலம் + வாதி]*

**சலவாதி**[3] *šala-vādi,* பெ. (n.) சலத்தொல்லை பார்க்க; see *šala-t-tollai.*

தெ. சலவாதி

*[சலம் + வாதி]*

**சலவாதை** *šala-vādai,* பெ. (n.) சலத்தொல்லை பார்க்க; see *šala-t-tollai* (செ.அக.).

*[சலபாதை → சலவாதை]*

**சலவாழைக்காய்** *šala-vāḻai-k-kāy,* பெ. (n.) மீன் (நீரிலுள்ள வாழைக்காய்); lit, plantain of the waters, fish.

*[சலம் → வாழைக்காய்]*

**சலவிட்டசாவல்** *šala-viṭṭa-šāval,* பெ. (n.) விதையடித்த சாவல்; capon.

*[சலம் + விட்ட + சாவல்]*

**சலவியன்** *šalaviyaṉ,* பெ. (n.) சினமுள்ளவன்; angry person. "சாலுமவ் வீசன் சலவிய னாயினும் (திருமந். 182).

*[சலம் + இயன்]*

சலவாதி[1] பார்க்க

**சலவியாளம்** *šala-viyāḷam,* பெ. (n.) நீர்ப்பாம்பு; water-snake.

*[சலம் + வியாளம்]*

**சலவு** *šalavu,* பெ. (n.) ஆண்குறி (யாழ்.அக.); membrum virile.

*[சல் → சல் → சலவு]*

**சலவை**[1] *šalavai,* பெ. (n.) 1. ஆடை வெளுக்கை; bleaching or washing of cloth. 2. வெளுத்த துணி; washed cloth. "சலவைசேர் மருங்கில்" (குற்றா. குற. 48). 3. குளிர் (வின்.); low temperature of the body, coldness.

க. சலவெ; தெ. சலவ; து. செலவ.

*[அல் → (அலை) அலம்பு = அசைத்தல். அசைந்து ஒலித்தல், அசைந்து வழிதல், கழுவுதல். அல் → சல் → சல → சலவை = வெளுத்தல். வெளுத்த துணி]*

**சலவை**[2] *šalavai*, பெ. (n.) தொகுதியெண்களுக்குக் குறியாக இடும் உறை (வின்.); symbolic unit in kind to aid reckoning or measuring. 2. வணிகத்தில் கொள்ளும் பிசுறு (இ.வ.); anything extra obtained from a trader as a bargain.

க. சலவெ; தெ. சலக; து. செலவ.

**சலவை**[3] *šalavai*, பெ. (n.) நேரியல்; shawl. (தெய்வச்.விறலிவிடு. 607).

*[சலகு → சலவை]*

**சலவைக்கல்** *šalavai-k-kal*, பெ. (n.) 1. ஒரு வகை வண்ணக்கல்; marble, polished stone. 2. தாதுப் பொருள் வகை (M.M) hornblende. 3. கதிரவக் காந்தக்கல் (வின்.) jasper.

தெ. சலுப

*[சலவை[1] + கல்]*

**சலவைநூல்** *šalavai-nūl*, பெ. (n.). சலவைத் தூள் கலந்த கொதிநீரில் தோய்த்து வெண்மை யாக்கப்பட்ட நூல்; bleached thread.

*[சலவை + நூல்]*

**சலவைப்பற்று** *šalavai-p-paṟṟu*, பெ. (n.) சலவையாளர்களுக்கு அளித்த நிலம்; washerman's tax free land. "அம்மை அப்பநாயன(ர்)க்க (ச)லவைப்பற்று உலக(க)ளந்த வெள்" (தெ.க.தொ. 9).

*[சலவை + பற்று]*

**சலவைமண்** *šalavaimaṇ*, பெ. (n.) சுவரிற் பூசுதற்குரிய மண் (யாழ்.அக.); earth used for plastering walls.

*[சலவை + மண்]*

**சலன்** *šalaṉ*, பெ. (n.) கால் (பிங்.); foot, leg.

*[சலம்[2] → சலன். இயங்குவதற்கு ஏந்தாக இருக்கும் கால்]*

த. சலன் → Skt. šalana

**சலன்சலனெனல்** *šalaṉ-šalaṉeṉal*, பெ. (n.) சதங்கை முதலியவற்றின் ஒலிக்குறிப்பு; onom. expr. of tinkling sound. "சதங்கைகள் சலன்சலனென" (திருவாலவா. 28, 51).

*[சலன் + சலன் + எனல்]*

**சலனகாலம்** *šalaṉa-kālam*, பெ. (n.) துன்பக் காலம் (வின்.); times of hardship, adversity.

*[சலம் → சலன் → சலனம் + காலம். கோல் → கால் = கம்பு, தூண், நீண்டு தொடரும் காலம். கால் + அம் = காலம்.]*

**சலனநரம்பு** *šalaṉa-narambu*, பெ. (n.) சதைகளை எண்ணியபடி அசைவிக்கும் நரம்பு (இங்.வை. 28.); motor nerve.

*[சலனம் + நரம்பு]*

**சலனம்** *šalaṉam*, பெ. (n.) 1. அசைவு; moving, shaking, trembling. "மேருவின் சிகரமுஞ் சலன முற்றிட" (சிவரக. தேவிநாட்.4). 2. மனக்குழப்பம்; mental agitation. "சவலைமனச் சலனமெலாந் தீர்த்து" (அருட்பா, vi, பிரியேனென்றல். 11). 3. துன்பம்; trouble, anxiety, affliction. 4. கால் (சிவன். சூடா.); foot, leg.

*[சலம்[2] → சலன் → சலனம்]*

**சலனன்** *šalaṉaṉ*, பெ. (n.) காற்று (பிங்.); wind.

*[சலம் → சலன் → சலனன் = அசைகை]*

**சலனை** *šalaṉai*, பெ. (n.) சலனம்-3 பார்க்க; see *šalaṉam-3* "சலனை பயன் ஆனாலும்" (ஒழிவி. சத்திநி. 4.).

*[சலனம் → சலனை]*

**சலாக்கு** *šalākku*, பெ. (n.) மாழைகளிற் செய்யும் சித்திரவேலைகளுக்கு உதவுங் கருவி; burin, engraver's tool.

*[சல் → சல் → சலாக்கு]*

**சலாகு** *šalāgu*, பெ. (n.) சலாகை[1] பார்க்க; see *šalāgai*.

*[சல் → சல் → சலாகு]*

**சலாகை**[1] *šalāgai*, பெ. (n.) 1. சிறு எஃகூசி; needle-like tool of steel. "சலாகை நுழைந்த மணித்துளை" (மணிமே. 12:66). 2. காந்தம் (திவா.); magnet.

3. அறுவை மருத்துவக் கருவிவகை (உ.வ.); surgeon's probe. 4. துமுக்கிச்சலாகை (வின்.); ramrod. 5. சவளம் என்னும் ஆயுதம் (பிங்.); spear, javelin. 6. இருப்புக்கம்பி; iron rod or stake. 7. வரிச்சல் (யாழ்ப்.); lath for roofing.

*[சல் → சல் → சலாகை]*

**சலாகை**[2] *šalāgai,* பெ. (n.) 1. நன்மணி; a superior kind of gem. 2. வாகுவலயம் (சீவக. 2696, உரை); an ornament worn on shoulders.

*[சிலாகை = மேலது, உயர்ந்தது. சிலாகை → சலாகை]*

**சலாகை**[3] *šalāgai,* பெ. (n.) பத்து விரலம் நீளமுள்ளதும், இடையே மெல்லியதும், முனைகள் கூர்மையின்றி மழுங்கியதாக வுள்ளதும், அஞ்சனமிடுவதற்கும் மருத்துவத்தில் காயத்தின் ஆழத்தை அறிவதற்கும் பயன்படுத்தும் இரும்பு, செம்பு முதலிய மாழைகளாற் செய்த நீண்ட கருவி; a surgical instrument, made of iron or copper, is about 10 in. in long, slender at the middle, blunt at the two ends, used to probe the depth and extent of wounds and applying collyrium to the eyes.

*[சல் → சலம் → சலாகை = அசைதல், நீளுதல், நீண்டது]*

**வகைகள்**

1. தூண்டில்முள் சலாகை; fish - hook.
2. கரண்டிச்சலாகை; spoon shaped.
3. ஆணிச்சலாகை; nail-shaped probe.
4. அங்குசச்சலாகை; goad probe.
5. அஞ்சனச்சலாகை; collyrium probe.
6. கருப்பச்சலாகை; roetus ortraction probe.
7. பாறைச்சலாகை; half-moon probe urethral bougie.
8. முனைமழுங்கியசலாகை; a probe with a blunt end - Blunt probe.
9. கயிறுகோர்த்தசலாகை; one with a tape near one end - eyed probe.
10. கத்தரிச்சலாகை; a probe with a long pair of scissors - scissors probe.
11. கம்பிச்சலாகை; a probe of steel wire - wire probe.
12. கருப்பஆய்வுச்சலாகை; a probe of uterina exploration.

**சலாகை**[4] *šalāgai,* பெ. (n.) சோழ, பாண்டியர் ஆட்சிக்காலத்தில் வழக்கில் இருந்த சிறு காசு; a small coin, which was vogue during Cōlan̲ and Pāṇḍyan̲ rule. "இவர் பக்கல் நாங்கள் கைக் கொண்ட சிரியக்கி பழஞ்சலாகை அச்சு பத்தும் கைக்கொண்டு இவ்வமுதுபடி செலுத்துவோமாக" (விக்கிரம சோழன். தெ.க.தொ.4:387).

ம. சலாக; Skt. šalākā

*[சிலாகை → சலாகை = மேலானது, உயர்ந்தது, மதிப்புள்ளது]*

இவ்வகைக் காசின் (நாணயத்தின்) ஒருபுறம் "இயக்கி" என்னும் பெண்தெய்வ வடிவம் பொறிக்கப்பட்டிருக்கும். அதனால் இக் காசிற்குச் "சிரி இயக்கிச் சலாகை" என்றும் பெயர் (கட்டட.).

**சலாகை**[5] *šalāgai,* பெ. (n.) தட்டார்கருவி வகை; a goldsmith's tool (செ.அக.).

*[அல் → அலவு → அலகு = பற்றுவது, வளைந்து பற்றுவது, குறடு. அலகு → சலகு → சலாகை]*

**சலாகை**[6] *šalāgai,* பெ. (n.) நிலஅளவு; land measure. "கிறையம் பதிநஞ்சு பொன்கொடுத்து நாம் கொண்ட நிலம் சலாகை மூன்று, மூன்று சலாகைக்கும் ஆயிரம் தென்னம்பழம் போட்டு" (தெ.க.தொ.26:212:12).

**சலாகைப்பாரை** *šalāga-p-pārai,* பெ. (n.) தோண்டுதற்கு உதவும் கூர்முனையுள்ள கருவி (வின்.); sharp pointed implement for digging.

*[சலாகை + பாரை. சுல் → சுர் → சுரி = துளை, ஏட்டில் துளையிடுங் கருவி. சுல் → சுர் → சுர → சுரம் = உட்டுளை. சுல் → சல் → சலகை → சலாகை. பகு + அர் - பகர் → பார் = பிளக்கும் நீளிய மாழைத் தண்டு]*



சலாகைப்பாரை

**சலாகையச்சு** *šalāgai-y-accu,* பெ. (n.) காசு வகை (M.E.R. 585 of 1922); a coin.

*[சலாகை + அச்சு]*

**சலாகையடி-த்தல்** *šalāgai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வரிச்சல்சேர்த்தல் (யாழ்ப்.); to nail on laths, prepare laths.

*[சலாகை + அடி-,]*

**சலாகையாணி** *šalāgai-y-āṇi,* பெ. (n.) வரிச்சலாணி (யாழ்ப்.); lath nail.

*[சலாகை + ஆணி]*

**சலாங்கம்** *šalāṅgam,* பெ (n.) நாரை வகை (யாழ்.அக); a kind of heron.

**சலாங்கு** *šalāṅgu,* பெ. (n.) 1. பொய்யாப்புள் (பிங்.); rail, water-fowl. 2. கொசுகு; gnat, mosquito.

*[சலம் → சலங்கு → சாலங்கு]*

**சலாசயம்** *šalā-šayam,* பெ. (n.) 1. நீர்நிலை (நாஞ்.); reservoir. 2. சிறுநீர்ப்பை (மூத்திரப்பை); urinary bladder.

*[சலம் + ஆசயம்]*

**சலாத்தி** *šalātti,* பெ. (n.) திரைச்சீலை (யாழ்.அக.); a curtain.

**சலாத்து-தல்** *šalāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குலுக்குதல் (இ.வ.); to shake, as liquid in a vessel.

*[சலம் → சலத்து → சலாத்து-,]*

**சலாபக்குளி** *šalāba-k-kuḻi,* பெ. (n.) 1. முத்துக் குளிப்பு (வின்.); pearl-fisher, diving for pearls. 2. ஊதியமுள்ள தொழில்; profitable business, as pearl fishing.

*[சலாபம் + குளி. சலம் = நீர், கடல். சலம் → சலபம் → சலாபம் = கடலில் மூழ்கி யெடுப்பது, முத்துக்குளிக்கை, ஊதியமுள்ள தொழில்]*

**சலாபச்சக்கரம்** *šalāba-c-cakkaram,* பெ. (n.) சித்திரப்பா வகை (யாப்.வி. 497); a kind of poetic composition.

*[சலாபம் + சக்கரம்]*

**சலாபத்துறை** *šalāba-t-tuṟai,* பெ. (n.) முத்துக்குளிக்கும் துறைமுகம்; pearl fishery.

*[சலாபம் + துறை]*

**சலாபம்** *šalābam,* பெ. (n.) 1. முத்துக்குளிக்கை; pearl fishery. 'முத்தின் சலாபமும்' (S.I.I. iii, 145); 2. சலாபத்துறை பார்க்க; see *šalāba-t-tuṟai.* "துறைவாணர் குளிக்குஞ் சலாபக் குவான் முத்தும்" (மீனாட். பிள்ளைத். முத்தப். 5).

*[சலம் → சலபம் → சலாபம் = கடலில் மூழ்கி முத்தெடுக்கை, முத்துக்குளிக்கும் துறை]*

**சலாம்பு-தல்** *šalāmbu-,* 5 செ.கு.வி. (v.i.) மண்ணைவெட்டிப் புரட்டுதல் (இ.வ.); to turn the sod, as with a plough.

*[அல் → அலம்பு = கலத்தல். அலம்பு → சலம்பு → சலாம்புதல்]*

**சலாமணி** *šalāmaṇi,* பெ. (n.) சலாவணி (இ.வ.) பார்க்க; see *šalāvaṇi.*

தெ. செலாமணி

*[செலாவணி → சலாவணி → சலாமணி]*

**சலார்** *šalār,* பெ (n.) 1. விலை (யாழ்ப்.); price. 2. பணம் கொடுக்கை; cash-payment. 3. கொடை; prize, reward.

**சலார்சலாரெனல்** *šalār-šalār-eṉal,* பெ. (n.) 1. சலார்பிலாரெனல் பார்க்க; see *šalār-pilāreṉal.*

*[சலார்சலார் + எனல்]*

**சலார்பிலாரெனல்** *šalār-pilār-eṉal,* பெ. (n.) அணிகலன் அசைதலை உணர்த்தும் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying clinking as of ornaments. "தொடர் சங்கிலிகை சலார்பிலாரென்ன" (திவ். பெரியாழ். 1,7:1).

*[சலார் + பிலார் + எனல்]*

**சலாவணி** *šalāvaṇi,* பெ. (n.) 1. பணப்புழக்கம்; currency, general circulation, as of coin. 2. சாய்கால்; credit, influence. "அவர் பேச்சுக்குச் சலாவணியுண்டு" (இ.வ.).

க., து. செலாவணி; U. šalāōni.

*[செலாவணி → சலாவணி]*

**சலி¹-த்தல்** *šali-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அசைதல்; to shake, to move. "நிலையினிற் சலியா நிலைமையானும்" (கல்லா. 11). 2. மனக்கலக்க மடைதல்; to be trouble in mind, distressed. "சலிக்கு மன்னையும்" (திருவிளை. விருத்த. 9). 3. சோர்தல்; to be weary, tried, to become exhausted. "மூவர்க்குஞ் சலியாத வுரனும்"

*(உபதேசகா. சூராதி. 71).* 4. *அருவருப்புக் காட்டுதல்;* to show or express disgust.

ம. சலிக்குக

*[(சுல்) → சல் → சலி → சலி = தளர்தல், வருந்துதல் (மு.தா. 82)]*

**சலி[2]-த்தல்** *šali-,* 4 செ.குன்றாவி. (v.t.) *வெறுத்தல்;* to hate, to be disgusted with. 'ஒரே வேலையைச் செய்ததனால் சலித்துப் போயிருக்கிறான்' *(உ.வ.).*

ம. சலிக்குக

*[சுல் → சல் → சலி]*

**சலி[3]-த்தல்** *šali-,* 4 செ.கு.வி. (v.i.) *சினங் கொள்ளுதல்;* to get angry. "சாபம்போற் சாருஞ் சலித்து" *(ஏலாதி, 60).*

*[(சுல்) → சல் → சலி]*

**சலி[4]-த்தல்** *šali-,* 4 செ.குன்றாவி. (v.t.) *சல்லடையாற் சலித்தல்;* to shift, to seperate the longer from smaller bodies with the hand, with a sieve or riddle. 'மணலைச் சலிப்பதற்குப் பெரிய சல்லடை வேண்டும்' *(உ.வ.).*

க. சலுசு; பட. சலிசு, சல்சு

*[சல் → சலி]*

**சலி[5]-த்தல்** šali-, 4 செ.கு.வி. (v.i.) *ஒலித்தல் (வின்.);* to sound.

*[சல் → சலி = 'சல்' என ஒலியெழுப்புதல், ஒலித்தல். இனி சிலை (க. கெலெ) → சலை → சலி என்றுமாம்.]*

**சலிக்கி** *šalikki,* பெ. (n.) *சல்லடை (முகவை);* sieve.

*[சலி → சலிக்கி]*

**சலிகை** *šaligai,* பெ. (n.) 1. *செல்வாக்கு;* influence of wealth or office. "ஊர்க்குஞ் சலிகை நம்மோ டொத்தவர்க்கு மெண்ணிக்கை" *(விறலிவிடு. 233).* 2. *பழக்கமிகுதி;* excessive familiarity, intimacy. "பக்கத்திலே சலிகை பாராட்டி" *(விறலிவிடு. 806);* indulgence, indulgent treatment. 4. *ஆதரவு;* patronage, protection.

க., து. சலிகெ; தெ. சலிக.

*[சல் → சலிகை]*

**சலிகைக்காரன்** *šaligai-k-kāran,* பெ. (n.) *சலுகைக்காரன் பார்க்க;* see *šalugai-k-kāran.*

*[சலிகை + காரன்]*

**சலிகைக்கிராமம்** *šaligai-k-kirāmam,* பெ. (n.) *அரசனது நேர்பார்வையிலுள்ள ஊர் (வின்.);* village under the special or immediae protection of a king.

*[சலிகை + கிராமம்]*

**சலிதிப்பலி** *šali-tippali,* பெ. (n.) *நீர்த்திப்பலி (மலை.);* water long pepper.

*[சலம் + திப்பிலி → சலத்திப்பிலி → சலிதிப்பிலி]*

**சலிப்பு[1]** *šalippu,* பெ. (n.) 1. *வெறுப்பு;* dissatisfaction, disgust. "சாரதிப் பெயரோனைச் சலிப்புறா" *(கம்பரா. இராவணன் வதை. 178).* 2. *சோர்வு;* wearness, languor.

ம. சலிப்பு

*[சுல் → சல் → சலி → சலிப்பு. 'பு' தொ.பெ.ஈறு. (மு.தா. 83)]*

**சலிப்பு[2]** *šalippu,* பெ. (n.) *சினம்;* anger.

*[சல் → சலி → சலிப்பு]*

**சலிப்புப்பண்ணு-தல்** *šalippu-p-pannu-,* 5 செ.கு.வி. (v.i.) *தொல்லைபண்ணுதல்; (Pond.);* to give trouble.

*[சலிப்பு + பண்ணு-,]*

**சலியடை** *šali-y-adai,* பெ. (n.) *சல்லடை;* sieve.

*[(சுல்) → சல் → சலி → சலியடை (மு.தா.263)]*

**சலியாமை** *šaliyāmai,* பெ. (n.) *அசையாமை;* immovable or unalterable state.

*[சலி + ஆ + மை; 'ஆ' எ. ம. இடைநிலை]*

**சலிலம்** *šalilam,* பெ. (n.) *நீர்;* water. "வன்னி சலிலம்" *(பாரத. வாரணா. 60).*

*[சலம் → சலலம் → சலிலம்]*

**சலிவன்பெரிநாரணன்** *šalivan-peri-nāranan,* பெ. (n.) *திருக்கோவலூர் அருகிலுள்ள சொரயப்பட்டு என்னும் ஏரியைக்கட்டிய தலைவன்;* donor who had built the lake in Sorayappattu near Thirukkōvalūr. "ஸ்ரீசலிவன் பெரிநாரணந்" *(ஆவணம் 1991-13).*

*[சலிவன் + பெரிநாரணன்]*

**சலினி** *šalini,* பெ. (n.) திப்பிலி (மலை.); long-pepper.

*[சலனி → சலினி]*

**சலு** *šalu,* பெ. (n.) சிறங்கைநீர் (யாழ்.அக.); a handful of water.

*[ஒருகா: ஒல்லுதல் = பொருந்துதல். ஒல் → அல் → அல்கு. அல்குதல் = பொருந்தித் தங்குதல். அல்கு → அலு → சலு = கையில் தங்கும் நீர்]*

**சலுக்குப்பிலுக்கெனல்** *šalukku-p-pilukkenal,* பெ. (n.) சலார்பிலாரெனல் பார்க்க; see *šalār-pilārenal.*

*[சலுக்கு + பிலுக்கு + எனல்]*

**சலுக்குமொலுக்கெனல்** *šalukku-molukkenal,* பெ. (n.) தவசங்களை உலக்கையாற் குத்தும் பொழுது எழும் ஓசைக்குறிப்பு; onom. expr. of thumping sound produced by pestle when husking grain. "தந்தவுலக்கை தனை யோச்சிச் சலுக்குமொலுக்கெனக் குத்திரே" (கலிங். 513).

*[சலுக்கு + மொலுக்கு + எனல்]*

**சலுகை** *šalugai,* பெ. (n.) 1. நெறிமுறைகளைத் தளர்த்தி வழங்கப்படும் விலக்கு; concession, relief. தொழில் முனைவோரை ஊக்குவிக்கும் பொருட்டுப் பல சலுகைகள் வழங்கப்படுகின்றன. 2. நெறி(விதி)முறைகள் தளர்த்தப்படாத நிலையில் ஒருவர் பெறும் தனிப்பட்ட விடுதலை அல்லது உரிமம்; privilege. 'அந்த அதிகாரி அவருக்கு நெருக்கமானவர் என்பதால் அவர் அத்தனை சலுகையும் பெறுகிறார்' (உ.வ.).

*[சலிகை → சலுகை]*

**சலுகைக்காரன்** *šalugai-k-kāran,* பெ. (n.) 1. பாதுகாப்போன் (வின்.); patron, protector. 2. செல்வம் முதலியவற்றால் செருக்குடையவன் (வின்.); person arrogant from office, wealth or high connection. 3. பெருமைபடைத்தவன்; person of wealth and influence. "சலுகைக் காரர்க் காசை யானேன்" (குற்றா. குற. 42).

*[சலுகை + காரன். 'காரன்' உடைமைப் பெயரீறு]*

**சலுகைக்குவா-(வரு)தல்** *šalugai-k-ku-vā-,* 18 செ.கு.வி. (v.i.) பரிந்து பேசுதல் (வின்.); to speak on one's behalf.

*[சலுகைக்கு + வா]*

**சலுகைகாட்டு-தல்** *šalugai-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பெருமையாய் இருத்தல் (வின்.); to carry oneself proudly, on account of office, wealth etc. 2. அதிகாரம் கொள்ளுதல்; to be dictatorial overbearing.

*[சலுகை + காட்டு-,]*

**சலுகைசொல்(லு)-தல்** *šalugai-col-,* 13 செ.கு.வி. (v.i.) பெரியோரிடத்திற் குறை வேண்டுதல் (வின்.); to apply for redress of grievances.

*[சலுகை + சொல்(லு)-,]*

**சலுத்து** *šaluttu,* பெ. (n.) பருமலையையும் பாய் மரத்தையும் சேர்த்துக்கட்டுங்கயிறு; a kind of rope used paravās.

*[சலவர் → பரதவர்; பரதவர் பயன் படுத்துங்கயிறு (மீனவ.)]*

**சலுப்பன்**[1] *šaluppan,* பெ. (n.) ஓயாமற் பேசுபவன் (இ.வ.); talkative person, chatterer.

மறுவ. அலப்பன், அலப்புணி.

ம. அலப்பன்

*[சலுப்பு → சலுப்பன்]*

**சலுப்பன்**[2] *šaluppan,* பெ. (n.) சணப்பன்; member of a caste whose profession is flax-dressing.

*[சணல் → சணப்பு → சணப்பன் = சணலினிற்று நாரெடுப்போன். சணப்பன் → சலப்பன் → சலுப்பன்]*

**சலுப்பு**[1]**-தல்** *šaluppu-,* 5 செ.கு.வி. (v.i.) உளறுதல் (இ.வ.); to prattle.

*[அல் → அல → அலம்பு. அலம்பு (த.வி.) - அலப்பு (பி.வி.) அலப்புதல் = வீண்பேச்சு பேசுதல், பிதற்றுதல். அலப்பு → சலப்பு → சலுப்பு-,]*

**சலுப்பு**[2] *šaluppu,* பெ. (n.) 1. துண்டு (யாழ்ப்.); small fragment, particle, flake. 2. நுனிக் கொம்பு (வின்.); tip of a branch.

*[சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது, சிறு குருவி. சுல் → சில் = சிறியது, துண்டு. சில் → சல் → சல்லி = சிறியது, துண்டு. சல் → சலு → சலுப்பு]*

**சலுப்பு**[3] *šaluppu,* பெ. (n.) சளிப்பிடிக்கை; cold, catarrh.

மறுவ. தடுமண்

தெ. சலுபு

*[சல் → சலம் → சலுப்பு = நீர்க்கோவை]*

**சவ்வரிசி** *šavvariši,* பெ. (n.) சவ்வுமரத்தின் சோற்றைக் காய்ச்சிச் செய்யப்படும் பண்டம் *(பதார்த்த. 824);* sago, farinaceous and glutinous pith taken out of the stem of several species of a particular genus of palm, especially Metroxylon leave.

ம. சவ்வரிசி; க. சாவே, சம்பக்கி; தெ. சம்பு

Mar. šāga, šāgu

*[சவ்வு + அரிசி]*

**சவ்வாயிரு-த்தல்** *šavvāy-iru-,* 5 செ.கு.வி. (v.i.) பிசின் போலாதல் *(வின்.);* to be viscid, viscous.

*[சவ்வு' + ஆயிரு-,]*

**சவ்வாவாரி** *šavvā-vāri,* பெ. (n.) வள்ளத்தில் உயர்த்திய பாய் ஆடாமல் நேராகவும் விறைப்பாகவும் இருக்கும்பொருட்டுச் சேர்த்துக்கட்டப் பயன்படும் பலகை அல்லது கழி *(மீனவ.);* wooden plank or stick used to tie the sail of a country boat.

**சவ்வியபலம்** *šavviya-palam,* பெ. (n.) ஆனைத் திப்பிலி *(சங்.அக.);* elephant pepper.

**சவ்வியம்**[1] *šavviyam,* பெ. (n.) மிளகு; pepper.

**சவ்வியம்**[2] *šavviyam,* பெ. (n.) 1. மிளகுவேர்; root of black-pepper. 2. செவ்வியம் பார்க்க; see *ševviyam* *(சா.அக.).*

**சவ்வியம்**[3] *šavviyam,* பெ. (n.) இடப்பக்கம்; left side.

**சவ்வீரம்** *šavvīram,* பெ. (n.) 1. ஐம்பத்தாறு நாடுகளுள் சிந்து ஆற்றின் கழிமுகத்துக் கருகிலுள்ள நாடு; a country near the mouth of the Indus, one of 56 tēšam. "கற்றவர் புகழ் சவ்வீரம்" *(திருவிளை. நரிபரி. 106.);* 2. இதள் (இரசம்), சினக்காரம் முதலியவற்றாற் செய்த ஒருவகை மருந்து *(வின்.):* strong medicinal compound containing quicksilver, alum, ammonia, etc., sublimated. 3. பறங்கிச் செய்நஞ்சு *(பாடாணம்):* a mineral poison. 4. காடி; vinegar *(தைலவ. தைல. 22.).*

**சவ்வு**[1] *šavvu,* பெ. (n.) 1. கண்முதலியவற்றின் மெல்லிய மூடுதோல்; membrane, as of the diaphragm, the eye. *'கண்ணில் சவ்வு வளர்கிறது' (உ.வ).* 2. புண்ணின் மூடுதோல் *(வின்.);* thin scales, as on a healed wound. 3. புண்சவ்வு; proud flesh in ulcers, scirrhus formation in cancers. *"அந்தப் புண்ணில் சவ்வு வைக்கிறது" (இ.வ.).* 4. பழங்கொட்டை முதலியவற்றை மூடியுள்ள தோல் *(வின்.);* envelope round the pulp of fruit, of a bulbous root, of a bulb, seed pellicle.

ம. சவ்வு; க. சீவு

*[சவ் → சவ்வு (வ.வ. 143)]*

**சவ்வு**[2] *šavvu,* பெ. (n.) மரவகை; sago, fern palm, s.tr., cpycas circinalis.

*[சவ் → சவ்வு]*

**சவ்வெடு-த்தல்** *šav-v-edu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தோலுரித்தல்; to peel off, as the skin from beans, gristly parts from meat. 2. செருக்கு (அகந்தை) முதலியவற்றை அடக்குதல் *(வின்.);* to humble one's pride, nullify one's influence.

*[சவ்வு + எடு-,]*

**சவக்கடல்** *šava-k-kadal,* பெ. (n.) பாலத்தீன நாட்டிலுள்ள ஓர் உப்பு நீரேரி *(இக்.வ.);* the dead sea in Palestine.

*[சவம் + கடல்]*

**சவக்கம்**[1] *šavakkam,* பெ. (n.). சோர்வு *(யாழ்ப்.);* faintness, exhaustion.

*[சவங்கு → சவக்கம்]*

**சவக்கம்**[2] *šavakkam,* பெ. (n.) சதுரவடிவான வயிரம்; square diamond. "சவக்கம் இரண்டும் உட்பட *(S.I.I. II,16).*

*[சவுக்கம் → சவக்கம்]*

**சவக்களி-த்தல்** *šavakkali-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சுவையற்றுப்போதல் *(இ.வ.);* to be insipid, spoiled. 2. கெட்ட சுவையுடையதாயிருத்தல் *(வின்.)* to taste unpleasantly *(செ. அக.).*

*[சவக்கு + அளி-,]*

**சவக்களை** *šava-k-kalai,* பெ. (n.) அச்சம், துன்பம் போன்றவற்றால் பாதிக்கப்படுபவரின் பொலிவிழந்த முகத்தோற்றம்; pallor (as of

death). 'தூக்குத்தண்டனை பெற்றவன் முகம் எப்போதும் சவக்களையுடன் இருக்கும்' (உ.வ.).

*[சவம் + களை. குள் → (கள்) → களை = அழகு, தோற்றம்]*

**சவக்காடு** *šava-k-kāḍu*, பெ. (n.) சுடுகாடு (வின்.); unenclosed burial-ground.

ம. சவப்பறம்பு

*[சவம் + காடு. கடு → காடு]*

**சவக்காரம்** *šava-k-kāram*, பெ. (n.) சவுக்காரம்; soap (செ.அக.).

ம. சவர்க்காரம்; க. சபுகார, சபகார; தெ. சளகார; சௌகார; து. சகபார, சபுகார, சௌகார

*[சவர் + காரம். கரித்தல் = மிகுதல். கரி → காரம் = மிகுதி]*

**சவக்காலை** *šava-k-kālai*, பெ. (n.) கல்லறை (யாழ்ப்.); grave yard.

*[சவம் + காலை. சாலை → காலை]*

**சவக்கிடங்கு** *šava-k-kiḍaṅgu*, பெ. (n.) பிணங்களைக் கெடாமற் காக்கும் அறை; mortuary.

ம. சவக்கிடங்ங்கு

*[சவம் + கிடங்கு]*

**சவக்கிரியை** *šava-k-kiriyai*, பெ. (n.) இறுதிச் சடங்கு; funeral rites.

*[சவம் + கிரியை]*

**சவக்குச்சவக்கெனல்** *šavakku-c-cavakkeṉal*, பெ. (n.) 1. வளைந்து கொடுத்தற்குறிப்பு (வின்.); being flexible or elastic, as a twig. 2. ஈரப்பசையாற் பதங்கெடுதற்குறிப்பு; losing crispness, as fried wafers from moisture or damp.

*[சவக்கு + சவக்கு + எனல்.]*

**சவக்குழி** *šava-k-kuḻi*, பெ. (n.) பிணக்குழி; grave, sepulchre.

ம. சவக்குழி

*[சவம் + குழி. குள் → குழி.]*

**சவகம்** *šavagam*, பெ. (n.) 1. கடுகு; mustard. 2. ஒருவகைச் சீமைமிளகு; moluccus pepper - piper officinarum (சா.அக.).

*[சும் → சுவ். சுவ்வென்று நீரை இழுக்கிறது என்பது வழக்கு. சுவ் → சவ் → சவகம் = நீர் வற்றியது]*

**சவங்கட்டு-தல்** *šavaṅ-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) பிணத்தை ஆடையால் மூடி மூன்று சிறு துணிகளாற் கட்டுதல் (யாழ்ப்.); to tie up a corpse in a winding sheet with three strips of cloth.

*[சவம் + கட்டு-. கள் → கட்டு]*

**சவங்கல்** *šavaṅgal*, பெ. (n.) 1. வலியற்றவன்-ள் (இ.வ.); feeble person; one utterly wanting in energy or spirit. 2. மானமழுங்கினவ-ன்-ள்; one impervious to ridicule; person lost to shame.

*[சவங்கு + அல். 'அல்' தொ.பெ. ஈறு]*

**சவங்கற்பிழைப்பு** *šavaṅgaṟ-piḻaippu*, பெ. (n.) அடிமையாய்ப் பிழைக்கை (வின்.); life of servitude.

*[சவங்கல் + பிழைப்பு]*

**சவங்கு-தல்** *šavaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மனந் தளர்தல்; to become dispirited, disheartened. 2. மானமழுங்கிப் போதல்; to be callous to criticism or ridicule; to be lost to shame. 3. உடல் மெலிதல்; to become lean, emaciated. 4. வீக்கம் வற்றுதல் (இ.வ.); to shrink, subside, as a boil. 5. மயங்கி வீழ்தல், மூர்ச்சைபோதல் (வின்.); to faint, droop, languish.

*[சுள் → சள் → சள்ளல் = சேறு. சுள் → சள். சள்ளுதல் = இளகுதல். சள் → சளை. சளைத்தல் = தளர்தல், சோர்தல். சள் → சழு → சழுங்கு → சழுக்கம் = நெகிழ்ச்சி. சழுங்கு → சவுங்கு → சவங்கு]*

**சவச்சாலை** *šava-c-cālai*, பெ. (n.) கல்லறை; graveyard.

*[சவம் + சாலை. சால் → சாலை = பெருங்கூடம், அகன்ற இடம்]*

**சவச்சேமம்** *šava-c-cēmam,* பெ. (n.) *1.* **பிணத்தைப் புதைக்கை;** burying a dead body. *2.* **பிணத்தை இடுகாட்டிற்கு எடுக்க அணியம் பண்ணுகை;** preparation for taking a corpse to the graveyard.

*[சவம் + சேமம். ஏமம் → சேமம்]*

**சவசவவெனல்** *šava-šava-v-eṉal,* பெ. (n.) *1.* நெருக்கற்குறிப்பு (யாழ்ப்.); onom. expr. signifying being thick, crowded, thronged. *2.* பளபளப்புக் குறிப்பு; onom. expr. signifying being shiny, inflammed, as a boil.

*[சவ + சவ + எனல்]*

**சவட்டு[1]-தல்** *šavaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **வளைவாக்குதல்;** to bend, twist. *அவன் காலைச் சவட்டி நடக்கிறான் (வின்.).*

*[சவள் → சவட்டு-,]*

**சவட்டு[2]-தல்** *šavaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* மெல்லுதல்; to chew, masticate. "பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டி" *(பெரும்பாண். 217).* *2.* விழுங்குதல் (யாழ்ப்.); to swallow down. *3.* வெல்லுதல் (யாழ்ப்.); to get the better of.

*[சவள் → சவட்டு]*

**சவட்டு[3]-தல்** *šavaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **மிதித்தல்;** to tread upon, trample. "தோகைச் செந்நெல் சவட்டி" *(பெருங். மகத. 2,18).* *2.* **காலால் மிதித்துச் சேறு குழைத்தல்;** to mix clay etc., by treading. *3.* **கதிர்களைப் பாதத்தால் மிதித்து தவசங்களைப் பிரித்தல்;** to tread out grains. *4.* **அழித்தல்;** to destroy, ruin, as a town. "மூதூர் தன்னையுஞ் சவட்டி" *(சீவக. 1734).* *5.* கொல்லுதல் (பிங்.); to kill. *6.* **மொத்துதல், அடித்தல்;** to beat, to strike.

ம. சவிட்டுக; குட. சவட்

*[சவள் → சவட்டு-,]*

**சவட்டுக்கால்** *šavaṭṭu-k-kāl,* பெ. (n.) **கெந்துகால்;** lame leg.

*[சவட்டு + கால். சவட்டுதல் = மிதித்தல். மிதிக்கும் அல்லது தத்தும் கால்]*

**சவட்டுக்காலன்** *šavaṭṭu-k-kālaṉ,* பெ. (n.) கெந்துகாலன்; lame person.

*[சவட்டு + காலன். கால் + அன் = காலன். சவட்டுதல் = அடித்தல், உதைத்தல். நிலத்தை உதைப்பது போல் நடக்கும் காலையுடையவன்]*

**சவட்டுக்கூர்மை** *šavaṭṭu-k-kūrmai,* பெ. (n.) **சவட்டு மண்ணுப்பு** (வின்.) பார்க்க; see *šavaṭṭu maṉ-ṇ-uppu.*

*[சவடு + கூர்மை. குள் → குர் → கூர் → கூர்மை]*

**சவட்டுநிலம்** *šavaṭṭu-nilam,* பெ. (n.) **உவர்த் தரை;** saline, barren soil.

*[சவடு + நிலம்.]*

**சவட்டுப்பு** *šavaṭṭuppu,* பெ. (n.) **மண்ணின் மேற்பரப்பில் படியும் உப்பு;** the saline substance or efflorescent salt found deposited on the surface of the earth *(சா.அக.).*

தெ. சவுடுப்பு

*[சவடு + உப்பு]*

இவ்வுப்பு நிலத்தின் தன்மைக்கேற்பச் சுவையில் மாறுபடும். இதில் பலவகை உண்டு.

1. வளையலுப்பு; bangle earth or glass gall.
2. சவர்க்கார உப்பு; carbonate of soda.
3. சோற்றுப்பு; sodium chloride, common-salt.
4. உவர் மண் உப்பு; fuller's earth.
5. வெடியுப்பு; nitre etc, obtained by a simple process of lixiviation.
6. காரம்; salt impregnated with soda, sodium sulphate; any alkali salt.
7. பேதியுப்பு; magnesium sulphate.

என்பன அவற்றுள் சில.

**சவட்டுமண்** *šavaṭṭu-maṉ,* பெ. (n.) **உவர்மண்** (இ.வ.); fuller's earth.

*[சவடு + மண்]*

**சவட்டுமண்ணுப்பு** *šavaṭṭu-maṉ-ṇ-uppu-,* பெ. (n.) **உவர்க்கார(சோடா)வுப்புவகை** (வின்.); carbonate of soda - Sodiac carbons.

*[சவடு + மண் + உப்பு]*

**சவட்டுவண்டி** *šavaṭṭu-vaṇḍi,* பெ. (n.) மிதிவண்டி (இ.வ.); bicycle, as driven by pedalling (செ.அக.).

ம. சவிட்டுவண்டி

[சவட்டு + வண்டி. வள் → வண்டு = வளையல், வட்டமான பூச்சி. வண்டு → வண்டி = சக்கரம், சக்கரத்தையுடைய ஊர்தி]

**சவட்டுவழி** *šavaṭṭu-vaḻi,* பெ. (n.) கால்பாதை; footpath (சேரநா.)

ம. சவிட்டுவழி

[சவட்டு + வழி]

**சவட்டை** *šavaṭṭai,* பெ. (n.) சாட்டை; cat's tail; whip. "முப்பது சவட்டைத் திண்டோளொடுத் திடா வடித்து" (மேருமந். 317).

[சவட்டு → சவட்டை]

**சவடன்** *šavaḍaṉ,* பெ. (n.) பயனற்றவன்; worthless man. "அஞ்சுபூத மடைசிய சவடனை" (திருப்பு. 557).

[சவடு → சவடன். ஒ.நோ: செவிடு → செவிடன்]

**சவடால்** *šavaḍāl,* பெ. (n.) பகட்டு (கொ.வ.); ostentation, foppery.

[சவடன் = பயனற்றவன். சவடன் → சவடாள் = வீண் பகட்டுக் காட்டுபவன். சவடாள் → சவடால்]

த. சவடால் → U. cauṭāl

**சவடாலடி-த்தல்** *šavaḍāl-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பகட்டு (இடம்பங்) காட்டுதல்; to be ostentatious, foppish. 2. வீண் பகட்டாரவாரம் (கருவம்) பாராட்டுதல்; to boast, brag.

[சவடால் + அடி-,]

**சவடி**[1] *šavaḍi,* பெ. (n.) 1. பொற்சரடுகளிற் கொத்தாக அமைந்த கழுத்தணிவகை (சிலப். 6, 100 உரை.); an ornament for the neck consisting of three or more gold cords. 2. பெண்கள் காதணிவகை; ear-ornament worn by women. 3. சவடியெலும்பு பார்க்க (வின்.); see *šavaḍi-y-elumbu.* 4. நச்சுப்பாம்பினுள் ஒருவகை (சித்தர். சிந்து.); a kind of venomous snake.

ம. சவடி.

[சவள் → சவடு. நெருங்கியிருத்தல். சவடு → சவடி = நெருங்கியிருக்கும் கொத்துகளைக் கொண்ட கழுத்தணி]

**சவடி**[2] *šavaḍi,* பெ. (n.) கடலாத்தி (L.); white - flowered fragrant trumpet tree.

[சவள் → சவணி → சவடி]

**சவடிக்கடுக்கன்** *šavaḍi-k-kaḍukkaṉ,* பெ. (n.) பெரிய கடுக்கன் வகை (வின்.); a kind of large ear-ring.

ம. சவடிக்கடுக்கன்

[சவடி + கடுக்கன்]

**சவடிக்கதிர்** *šavaḍi-k-kadir,* பெ. (n.) சவடிமுள் (யாழ். அக.) பார்க்க; see *šavaḍi-muḷ.*

ம. சவடிக்கதிர்

[சவடி + கதிர்]

**சவடிக்கோவை** *šavaḍi-k-kōvai,* பெ. (n.) கழுத்தணி வகை (யாழ்ப்.); a necklace.

[சவடி + கோவை. கோர்வை → கோவை]

**சவடிப்பூணூல்** *šavaḍi-p-pūṇūl,* பெ. (n.) ஒருவகைப் பொற்பூணூல்; ornamental sacred thread of gold. "இட்ட சவடிப் பூணூலும்" (ஈடு, 3,10:5).

[சவடி + பூணூல்]

**சவடிப்பொட்டு** *šavaḍi-p-poṭṭu,* பெ. (n.) தாலிப்பொட்டு (வின்.); round gold appended to the 'savaḍi', used also as a tāli.

[சவடி + பொட்டு]

**சவடிமுள்** *šavaḍi-muḷ,* பெ. (n.) கம்பி பின்னுங் கருவி (யாழ்ப்.); tool for braiding wire.

ம. சவடிமுள்ளு

[சவடி + முள்]

**சவடியெலும்பு** *šavaḍi-y-elumbu,* பெ. (n.) காறையெலும்பு (யாழ்.அக.); collar bone, clavicle.

[சவடி + எலும்பு. எல் (ஒளி, வெண்மை) → எலும்பு]

**சவடு** *šavaḍu,* பெ. (n.) *1.* உவர்மண்; fuller's earth; earth impregnated with soda; alkalines oil. *2.* வண்டல் (வின்.); sediment. *3.* நெரிவு (யாழ்அக.); crumpling.

க. சவுளு; தெ. சவுடு.

*[சவர் → சவடு]*

**சவடுமண்** *šavaḍu-maṇ,* பெ. (n.) சவர்மண் பார்க்க; see *šavarmaṇ.*

க. சவுளுமண்ணு

*[சவர்மண் → சவடுமண்]*

**சவடுப்பு** *šavaḍuppu,* பெ. (n.) சவருப்பு பார்க்க; see *šavaruppu.*

க. சவளுப்பு

*[சவ்ருப்பு → சவடுப்பு]*

**சவண்டலை** *šavaṇḍalai,* பெ. (n.) சவண்டிலை (மூ.அ.) பார்க்க; see *šavaṇḍilai.*

*[சவண்டலை → சவண்டிலை]*

**சவண்டிலை** *šavaṇḍilai,* பெ. (n.) மரவகை (L.); Trincomalee red wood.

*[சவள் = நெளிதல், வளைதல். சவள் → சவண் = நெளியும்தன்மை. சவண்டிலை = நெளியுந்தன்மை கொண்ட இலையை யுடைய மரம்]*

**சவண்டுகொடு-த்தல்** *šavaṇḍu-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.i.) ஒரு செயற்பாட்டை முடிக்கக் கருதி நெளிந்துகொடுத்தல் (உ.வ.); to be yielding pliant, as a person.

*[சவள் → சவண்டு + கொடு-,]*

**சவணம்** *šavaṇam,* பெ. (n.) மாழை (உலோக)க் கம்பிகளை இழுக்க உதவும் கம்மியக்கருவி; an instrument for drawing wire.

ம. சவண்; க. சவணிகெ; து. சவணெ.

*[சவள் → சவண் → சவணம். வளைந்து பற்றுவது]*

**சவணி** *šavaṇi,* பெ. (n.) பலாப்பழச்சுளையைச் சுற்றியுள்ள நார்ப்பகுதி; layers of fibrous filaments enclosing the flesh of the jackfruit (சேரநா.).

ம. சவணி

*[சவள் → சவண் → சவணி]*

**சவந்தாழ்-த்தல்** *šavan-tāḻ-,* 5 செ.கு.வி. (v.i.) பிணத்தைப் புதைத்தல் (வின்.); to inter a corpse.

*[சவம் + தாழ், தாழ் = தாழ்தல், இழிதல். புதைத்தல் பொருளுக்கு ஆளப்பட்டது]*

**சவப்பரிசோதனை** *šava-p-parišōdaṉai,* பெ. (n.) சவவாய்வு பார்க்க; see *šava-v-āyvu.*

*[சவம் + பரிசோதனை]*

Skt. parisōdhana → த. பரிசோதனை

**சவப்பறம்பு** *šava-p-paṟambu,* பெ. (n); இடுகாடு; burial ground (சேரநா.).

ம. சவப்பறம்பு

*[சவம் + பறம்பு]*

**சவப்பெட்டி** *šava-p-peṭṭi,* பெ. (n.) (கிறித்.) பிணவடக்கப் பெட்டி; coffin.

ம. சவப்பெட்டி

*[சவம் + பெட்டி]*

**சவம்**[1] *šavam,* பெ. (n.) *1.* உயிரற்றவுடல்; corpse, dead body, carcass. 'தவத்திற்கு ஒருவர் தமிழுக்கு இருவர் சவத்திற்கு நால்வர்' (பழ.) *2.* பேய்; devil, vampire (செ.அக.).

மறுவ. பிணம், அழனம், களேவரம்

ம. சவம்; க. சவ, சப; தெ. சவமு

*[சாய் = சாய்தல், சாய்ந்து விழுதல். சாய் → சா → சாவு = நேராக நிற்கும் தன்மையற்ற (உயிரற்ற) உடல். சாவு → சாவம் → சவம்]*

த. சவம் → Skt. šava

இறந்தவுடல் பேயாகத் திரியும் என்னும் நம்பிக்கையில், சவம் பேயைக் குறித்தது. வடவர் சூ அல்லது ச்வி என்னும் சொல்லைக் காட்டி, ஊதிப்போனது என்று பொருட் காரணங் கூறுவர்.

ச்வி = ஊது, வீங்கு

šava. šavas, a corpse (šavasāna, a cemetery, probably is the original form of šmašāna). The two words are of doubtful origin in Sk. Sk. verb šav means 'to go' and 'to alter, to change, to destroy (vikāra)'. Could the second meaning rest on the D. roots tavu, tave, savē? and can šava, šavas be derived from the Sk. verb? The second

question, it seems, is to be decided in the negative. Gt. (p.529) and C l. (p.461) think that šava is connected with D. sāy, to die, sāvu, a corpse. Sāy, to die, is say in Tu. (K.K.E.D. XXXVII)

šava, a corpse,

sava adj., relating to a dead body.

these words are said to be derived from sav, to go, but this derivation is surely much less probable than the Dravidian verbal root to die, which is šā in Tam.; chā, Mal.; šā, Can.; sei, Tuḷu; cha - chu, Tel.; Tel. infinitive, chāvaḍama. The vowel of šā is short in Telugu; and in Tamil, Malayāḷam and Canarese is short in the preterite tense, šā is undoubtedly a pure Dravidian root. Compare the Samoīede chawe, dead. Probably also the Sanskrit shei (sāyati), to waste away, and shō, to be destroyed, have some ulterier connection with it *(C.G.D.F.L. 574)*.

**சவம்**[2] *šavam,* பெ. (n.) விரைவு *(சது.);* speed, velocity.

*[சர் → விரைவைக் குறிக்கும் ஒலிக் குறிப்புச் சொல். சர் → சரம் → சவம்]*

**சவம்**[3] *šavam,* பெ. (n.) மூங்கில் *(பிங்.);* bamboo.

*[சவள்தல் = வளைதல். சவள் → சவம் = வளையுந்தன்மை கொண்ட மூங்கில்]*

**சவர்**[1]**-த்தல்** *šavar-,* 4 செ.குன்றாவி. (v.i.) உவர்த்தல்; to be brackish, as a mineral salt.

*[(சுவர்) → சவர் → சவர்த்தல்]*

**சவர்**[2] *šavar,* பெ. (n.) 1. விளையாநிலம் *(பிங்.);* barren land. 2. உவர் *(வின்.);* brackishness.

ம. சவர்; க. சவளு, சவுளு; தெ. சவரு; து. சவுள்.

*[உவர் → சவர் = உப்புமிகுந்த நிலம், விளைச்சலுக்கு ஏற்றதல்லாத நிலம்]*

**சவர்**[3] *šavar,* பெ. (n.) 1. இழிவு; inferiority, lowness, baseness. 2. பெண்கள் காதணிவகை; ear-ornament worn by women. 3. சவடியெலும்பு பார்க்க; see *šavaḍi-y-elumbu.* 4. நச்சுப் பாம்பினுள் ஒருவகை *(சித்தர். சிந்து.);* a kind of venomous snake *(சுழ.அக.).*

*[அவிதல் = வேதல், அழிதல், கெடுதல், அணைதல், சாதல். அவி → அவம் = அழிவு, கேடு. அவம் → சவம் → சவர் = இழிவு, தாழ்வு]*

**சவர்**[4] *šavar,* பெ. (n.) குற்றம்; fault. "சவருடைய மனைவாழ்க்கை" *(நீலகேசி, 279.).*

*[அவம் → சவம் → சவர் = இழிவு, தாழ்வு, குற்றம்]*

**சவர்க்கம்** *šavarkkam,* பெ. (n.) கல்லுப்பு *(யாழ்.அக.);* rock-salt.

*[சவர் = உவர் நிலம். சவர் → சவருகம் → சவர்க்கம்]*

**சவர்க்களி**[1]**-த்தல்** *šavarkkaḷi-,* 4 செ.குன்றாவி. (v.i.) சவக்களி-த்தல்-2 பார்க்க; see *šavakkaḷi-2.*

*[சவக்களி + சவர்க்களி-,]*

**சவர்க்களி**[2]**-த்தல்** *šavarkkaḷi-,* 4 செ.குன்றாவி. (v.i.) உப்புச் சுவையேற்படுதல்; to yield a saline taste.

*[சவர் + களி-,]*

**சவர்க்காரக்கட்டி** *šavar-k-kāra-k-kaṭṭi,* பெ. (n.) சவர்க்காரம் பார்க்க; see *šavarkkāram.*

*[சவர்க்காரம் + கட்டி]*

**சவர்க்காரகம்** *šavar-k-kāragam,* பெ. (n.) வழலை; fuller's earth.

*[சவர் + காரகம். காரம் → காரகம்]*

**சவர்க்காரக்குரு** *šavar-k-kāra-k-kuru,* பெ. (n.) பூநீராற் செய்யப்பட்ட பொன்னாக்கி (இரசவாதம்)க்குப் பயன்படும் மருந்து; a quintessence salt used in alchemy, a calcined compound prepared from fuller's earth.

மறுவ. சவட்டுச்சுண்ணம், வழலைக்குரு

*[சவர்க்காரம் + குரு]*

**சவர்க்காரச்சுண்ணம்** *šavar-k-kāra-c-cuṇṇam,* பெ. (n.) சவர்க்காரக்குரு பார்க்க; see *šavarkkāra-k-kuru.*

*[சவர்க்காரம் + சுண்ணம்]*

**சவர்க்காரநீர்** *šavar-k-kāra-nīr,* பெ. (n.) 1. ஐந்து மாதத் தலைக்கருவின், உப்புச்சத்தையெடுத்துப் பனியில் வைத்து உருவாக்குஞ் செய்நீர்;

a liquid of acid nature obtained by exposing to night dew the salt extracted from the first born foetus 5 month's old. *2. உழமண்ணீர்;* water impregnated with soap and forming a frothy moss.

மறுவ. ஐங்கோலச் செயநீர்

*[சவர்க்காரம் + நீர்]*

**சவர்க்காரநுரை** *šavar-k-kāra-nurai,* பெ. (n.) *சவர்க்காரத்தினாலுண்டாகும் நுரை;* foam or froth made by soap and water. *கடின நீரில் சவர்க்கார நுரை வராது.*

*[சவர்க்காரம் + நுரை]*

**சவர்க்காரநொதி** *šavar-k-kāra-nodi,* பெ. (n.) *சவர்க்காரநுரை பார்க்க;* see *šavar-k-kāra-nurai.*

*[சவர்க்காரம் + நொதி]*

**சவர்க்காரப்போக்கு** *šavar-k-kāra-p-pōkku,* பெ. (n.) *1. வழலையைப் போக்கிக் காரத்தை யுண்டாக்குகை;* conversion into soap effected by the combination of an alkaline base with a fatty acid. *2. பூவழலையினின்று பொன்னாக்கி (இரசவாத) முறையிற் செய்கை;* the conversion of fuller's earth so as to make it useful in the preparation of an alchemical compound.

மறுவ. சவக்காரமுறை

*[சவர்க்காரம் + போக்கு]*

**சவர்க்காரம்** *šavar-k-kāram,* பெ. (n.) *1. அழுக்கு அகற்றும் காரம்;* soap, washing soda, bleaching powder. *2. பூவழலை;* saline efforesence found in the soil of fuller's earth. *3. மருந்து வகையுளொன்று;* a prepared medicine. *4. சவர்க்காரக்குரு பார்க்க;* see *šavar-k-kāra-k-kuru.*

மறுவ. சவட்டுப்பு, வழலையுப்பு

ம. சவர்க்காரம்

*[உவர் → சவர் + காரம்]*

அழுக்கைப் போக்கித் தூய்மையாக இருக்கும் வழக்கம் பழந்தமிழரிடை இயல்பாக இருந்தது. 'கூழானாலும் குளித்துக் குடி, கந்தையானாலும் கசக்கிக் கட்டு' என்னும் பழமொழி இதை உறுதிப்படுத்தக் காணலாம். உடல் அழுக்கைப் போக்கவும் உடுப்பழுக்கை நீக்கவும் முன்னர் உவர்மண் பயன்படுத்தப் பெற்றது பின்னர் உவர்மண் கலப்பாலான சவர்க்காரம் பெரு வழக்கெய்தியது.

**சவர்க்காரவுண்டை** *šavar-k-kāra-v-uṇḍai,* பெ. (n.) *1. உழமண் உருண்டை;* fuller's earth bolus. *2. வழலைக்கட்டி;* soap cake.

*[சவர்க்காரம் + உருண்டை → உண்டை]*

**சவர்ச்சலம்** *šavarccalam,* பெ. (n.) *1. கல்லுப்பு;* insoluble sea-salt. *2. கருப்புப்பு;* black salt.

*[சவர் + சலம்]*

**சவர்ச்சிகாசாரம்** *šavarcciga-šāram,* பெ. (n.) *சவர்ச்சிஇலவணம்;* salt petre.

**சவர்த்திரை** *šavar-t-tirai,* பெ. (n.) *1. உழமண்ணிலம்;* soil of fuller's earth. *2. உப்புநிலம்;* brackish soil.

மறுவ. உவர்நிலம், சவட்டுநிலம், வழலைநிலம்

*[உவர் → சவர் + திரை]*

**சவர்நாயகம்** *šavar-nāyagam,* பெ. (n.) நெல்வகை *(யாழ். அக.);* a kind of paddy.

**சவர்நிலம்** *šavar-nilam,* பெ. (n.) *சவர்த்திரை பார்க்க;* see *šavar-t-tirai.*

*[உவர் → சவர் + நிலம்]*

**சவர்ப்பட்டை** *šavar-p-paṭṭai,* பெ. (n.) *உப்புக் கரிக்கும் பட்டை;* any bark with a saline taste.

*[சவர் + பட்டை]*

**சவர்ப்பலம்** *šavar-p-palam,* பெ. (n.) *நெய்ச்சிட்டி;* ash coloured fie-bane.

**சவர்ப்பு** *šavarppu,* பெ. (v.i.) *உவர்ப்புச்சுவை;* one of the six tastes, astringent taste, astringency.

ம. சவர்ப்பு

*[உவர் → உவர்ப்பு → சவர்ப்பு]*

**சவர்மண்** *šavarmaṇ,* பெ. (v.i.) *உப்புத்தன்மை கொண்ட மண், உவர் மண்;* fullers earth, earth impregnated with carbonate of soda.

மறுவ. சவடு

க. சவுளுமண்ணு

*[சவர் + மண்]*

**சவரணை** *šavaraṇai,* பெ. (n.) *1.* நேர்த்தி (வின்.); elegance, neatness. *2.* முன்னேற்பாடு (ஆயத்தம்) (வின்.); preparedness, readiness. *3.* செல்வநிலை; prosperity, affluent circumstance. 'அவள் சவரணையாயிருப்பவள்' (உவ.). *4.* காப்பாற்றுகை; preservation, maintenance, protection (செ.அக.).

*[அம் = அழகு. அம் → அமல் = நிறைவு. அமல் → அமர் → சமர் → சவர் → சவரணை]*

**சவரம்** *šavaram,* பெ. (n.) *சாமரம்;* chowry. "அருவியை யுவமைகொள் சவரமும்" (பாரத. பதினாறாம், 21).

*[கவரி → சவரி → சவரம்]*

**சவரன்** *šavaraṉ,* பெ. (n.) *1.* காடுமலைகளில் வாழும் வேடன்; mountaineer, hunter. 'சவர்சுணை வாழ்க்கைச் சவரர்' (பெருங். உஞ்சைக். 55, 68). *2.* பாலைநில மக்கள் (திவா.); inhabitants of the desert tract. *3.* பாலைநிலத் தலைவன் (திவா.); a tribal chief of the desert tract.

**மறுவ.** குறவன், மாகுலவன், குன்றவன், மறவன், கானவன், கொலைஞன், குருடன், பொறையிலான், எயினன், வேடன்.

*[கவரி → சவரி]*

த. சவரன் → Skt. Sabara

**சவரி**[1] *šavari,* பெ. (n.) *1.* கவரிமான் (உரி.நி.); yak. *2.* சாமரம் (பிங்.); chowry. *3.* இயற்கைக் கூந்தலுடன் இணைத்து பின்னுதற்குரிய செயற்கை மயிர்க்கற்றை; false hair used by women in toilette. *4.* தென்னைநார்; coir.

**மறுவ.** சீகரம், கவரி

ம. சவரி; க. சவரி, சவலி, சவுரி, சவுலி, சௌலி, சௌரி

*[கவரி → சவரி]*

**சவரி**[2] *šavari,* பெ. (n.) வேடரினப்பெண்; women of the hunting tribe. "சவரி ...... தனபார பூஷண" (திருப்பு. 1254, புதுப்.).

*[சவரன் (ஆ.பா.) → சவரி (பெ.பா.)]*

**சவரி**[3] *šavari,* பெ. (n.) குறட்டை (மலை.); bitter snake-gourd.

*[சவர் → சவரி]*

**சவரிக்கயிறு** *šavari-k-kayiṟu,* பெ. (n.) தேங்காய் நாரினால் பின்னப்பட்ட கயிறு; rope made of coconut fibres.

ம. சகரிக்கயர்

*[சவரி + கயிறு]*

**சவரிக்காய்** *šavari-k-kāy,* பெ. (n.) தேங்காய்; coconut (சேரநா.)

ம. சகரிக்கா(ய்)

*[சவரி + காய்]*

**சவரிக்கிழங்கு** *šavari-k-kiḻaṅgu,* பெ. (n.) குறட்டைக்கிழங்கு; bulbous root of bitter snake gourd - Trichosanthes palmata (சா.அக.).

*[சவரி + கிழங்கு]*

**சவரிக்கொட்டை** *šavari-k-koṭṭai,* பெ. (n.) தாமரைக்கொட்டை (இ.வ.); pericarp of the lotus.

*[சவரி + கொட்டை]*

**சவரிக்கொடி**[1] *šavari-k-koḍi,* பெ. (n.) சவரி[3] பார்க்க; see *šavari*[3].

*[சவரி + கொடி]*

**சவரிக்கொடி**[2] *šavari-k-koḍi,* பெ. (n.) கொடியார்கூந்தல் (மலை.); women's thread.

மறுவ. அம்மையார்கூந்தல்

*[சவரி + கொடி]*

**சவரிநாயகம்** *šavari-nāyagam,* பெ. (n.) கையாந்தகரை (சங்.அக.); a plant.

*[சவரி + நாயகம்]*

**சவரிமாங்காய்** *šavari-māṅgāy,* பெ. (n.) மிகுதியாக நாருள்ள மாங்காய்; a kind of mango having too much fibres (சேரநா.).

ம. சவரிமாங்ங

*[சவரி + மாங்காய்]*

**சவரிமான்** *šavari-māṉ,* பெ. (n.) கவரிமான்; yak.

ம. சமரிமான், சவரி மான்

*[சவரி + மான்]*


சவரிமான்

**சவரிமெத்தை** *šavari-mettai,* பெ. (n.) 1. தென்னைநாரை அடைத்துச் செய்த மெத்தை வகை; coir mattress. 2. கால்மிதி (இ.வ.); door-mate.

*[சவரி + மெத்தை]*

**சவரிலோத்திரம்** *šavari-lōttiram,* பெ. (n.) குறட்டைப்பழம் (வின்.); pulp of the bitter snake-gourd, a powerful purgative.

*[சவரி + லோத்திரம்]*

Skt. lōdhra → த. லோத்திரம்

**சவருப்பு** *šavaruppu,* பெ. (n.) தூய்மையற்ற உவர்க்காரம்; impure soda, soda - saltpetre.

க. சவளுப்பு

*[சவர் + உப்பு]*

**சவரேசம்** *šavarēsam,* பெ. (n.) வெள்ளை வாகை;white sirissa-albizzia procera (சா.அக.).

**சவலம்** *šavalam,* பெ. (n.) 1. அரைக்கால் வராகன் (C.G.); a coin - 1/8 pagoda. 2. சவ்வரிசி; sago fern palm.

க., சவல, சவலி, சௌல, சௌலி; தெ. சவலமு; து. சவலோ.

*[செவளம் → சவலம் = செம்பொற் காசு]*

**சவலை**[1] *šavalai,* பெ. (n.) 1. மனக்குழப்பம்; perplexity, confusion. "சவலைக் கடலுளனாய்" (திருவாச. 11.17). 2. வருத்தம்; pain, distress. "சவலை நோன்புழந்து" (திருவிளைபாண்டியன்.48) 3. தாய்ப்பா லில்லாத குழந்தையின் மெலிவு; leanness of an infant not fed on mother's milk. "சவலைமகவோ சிறிது மறிந்திடாதே" (தண்டலை. சத. 97). 4. சவலைக்குழந்தை பார்க்க; see *šavalai-k-kulandai.* "சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ" (திருவாச. 50, 4). 5. இளமை, இளையது, முதிராதது (வின்.); tenderness, immaturity.

ம. சவல; க. சள்ளு (உள்ளீடு இல்லாதது, பயனற்றது); தெ. சவிலெ; கூய். சடு (பதர்)

*[சவளுதல் = வளைதல், துவளுதல். சவள் → சவல் → சவலை = மெலிவு, தாய்ப் பாலில்லாக் குழந்தையின் மெலிவு]*

**சவலை**[2] *šavalai,* பெ. (n.) 1. மின்னல்; lightning. 2. அடியளவு குறைந்தும் மிக்கும் வரும் பாட்டு (வீரசோ. யாப். 24.); stanza of irregular feet. 3. இசைப்பா வகையுள் ஒன்று (சிலப்.6:35, உரை.); a kind of musical composition.

*[சவள் → சவல் → சவலை]*

**சவலைக்கதிர்** *šavalai-k-kadir,* பெ. (n.) தவசமணி இல்லாத கதிர்; an empty grain of corn (கருநா.).

க. சள்ளுகாழு

*[சவலை + கதிர்]*

**சவலைக்கன்று** *šavalai-k-kanru,* பெ. (n.) இளங்கன்று (யாழ்ப்.); young calf.

*[சவலை + கன்று]*

**சவலைக்குட்டி** *šavalai-k-kutti,* பெ. (n.) விலங்குக் குட்டி (வின்.); young, tender animal.

*[சவலை + குட்டி]*

**சவலைக்குழந்தை** *šavalai-k-kulandai,* பெ. (n.) தாய்ப்பாலின்றி மெலிந்த குழந்தை; sucking child which grows lean for want of mother's milk.

ம. சவலப்பிள்ளை, சவலக்குஞ்ஞு

*[சவலை + குழந்தை]*

**சவலைக்கொட்டு** *šavalai-k-kottu,* பெ. (n.) கழிச்சல் (மலம்), அடிக்கடி நெகிழ்ந்து கழிகை (இ.வ.); loose frequent motion of bowels, in children.

*[சவலை + கொட்டு]*

**சவலைத்தினை** *šavalai-t-tinai,* பெ. (n.) *கருகிய தினைக்கதிர்;* a blasted spike or corn *(கருநா.).*

க. சள்ளுதெனெ

*[சவலை + தினை]*

**சவலைநெஞ்சம்** *šavalai-neñjam,* பெ. (n.) *உறுதியற்ற மனம்;* weak mind. "சவலை நெஞ்சமே சிவனலா துயிர்க்குயிர் தானுமோர் துணையாமே" *(வைராக். சத. 3.).*

*[சவலை + நெஞ்சம்]*

**சவலைநோய்** *šavalai-nōy,* பெ. (n.) *குளிக் குற்றத்தினால் உண்டாவதாகக் கருதும் குழந்தை நோய்வகை (சீவரட். 230);* a child's ailment believed to be the result of kuḷi-dōsam.

*[சவலை + நோய்]*

**சவலைப்பயிர்** *šavalai-p-payir,* பெ. (n.) *கதிர் வராமல் வாடிய பயிர்;* plant which does not give corn.

மறுவ. சாவிய பயிர்

*[சவலை + பயிர்]*

**சவலைப்பிள்ளை** *šavalai-p-piḷḷai,* பெ. (n.) *சவலைக்குழந்தை பார்க்க;* see *šavalai-k-kulandai.*

ம. சவலப்பிள்ள

*[சவலை + பிள்ளை]*

**சவலைப்பேச்சு** *šavalai-p-pēccu,* பெ. (n.) *பயனற்றபேச்சு;* an empty, vain, not trust worthy word or speech *(கருநா.).*

க. சள்ளுமாது

*[சவலை + பேச்சு]*

**சவலைபாய்-தல்** *šavalai-pāy-,* 2 செ.குன்றாவி. (v.i.) *தாய்ப்பாலின்றிக் குழந்தை மெலிதல் (கொ.வ.);* to grow lean from want of mother's milk, as an infant.

*[சவலை + பாய்-,]*

**சவலைமதி** *šavalai-madi,* பெ. (n.) *இளம் பிறை (வின்.);* crescent moon.

*[சவலை + மதி. சவலை = மெலிவு, சிறியது, இளமை. சவலைமதி = வளரும் நிலையுடைய மதி]*

**சவலைரோகம்** *šavalai-rōgam,* பெ. (n.) *சவலைநோய் பார்க்க;* see *šavalai-nōy.*

*[சவலை + ரோகம்]*

Skt. rōga → த. ரோகம்

**சவலைவெண்பா** *šavalai-veṇbā,* பெ. (n.) *தனிச்சொலின்றி இரண்டு குறள் வெண்பாக்களை இணைத்துச்செய்யும் வெண்பா (மாறனலங். 198, உரை);* veṇbā composed of two kuraḷ-veṇbā without an extra detached foot in the middle.

*[சவலை + வெண்பா]*

**சவவறை** *šava-v-aṟai,* பெ. (n.) *பிணக்கிடங்கு, மருத்துவமனைகளில் பிணங்களை வைப்பதற்கு ஒதுக்கப்பட்ட கட்டடம்;* mortuary.

மறுவ. பிணவறை

ம. சவக்கிடங்ஙு

*[சவம் + அறை]*

**சவவாய்வு** *šavavāyvu,* பெ. (n.) *பிணத்தை அறுத்து ஆய்கை;* post-mortem, examination, autopsy.

*[சவம் + ஆய்வு]*

**சவவுசாவு** *šavavusāvu,* பெ. (n.) *பிணந் தொடர்பானவற்றை உசாவுதல்;* coroners inquest.

*[சவம் + உசாவு]*

**சவவூர்தி** *šava-v-ūrdi,* பெ. (n.) *இடுகாட்டிற்குச் சவப்பெட்டியை ஏற்றிச் செல்லும் வண்டி, பிணவூர்தி, அமரர் ஊர்தி;* hearse.

ம. சவவண்டி

*[சவம் + ஊர்தி]*

**சவள்** *šaval,* பெ. (n.) *படகு தள்ளும் துடுப்பு;* a kind of oar.

"தோணியைப் பாருடா ஏலேலோ
அடிப்பான் எண்டு ஏலேலோ
சவளைக் காட்டுறான் ஏலேலோ" *(நாட்டுப்பாடல்)*

*[சுவள் → சவள்]*

சுக்கான் பிடிக்கும்போதும், துடுப்பு வலிக்கும் போதும், துடுப்பு வளைந்து கொடுப்பதால்,

அது சவள் என்ற காரணப்பெயர் பெற்றது (மீனவ.).

**சவள்(ளு)-தல்** *šavaḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) *1.* வளைதல்; to bend. *2.* துவளுதல்; to be supple, flexible, as the arms of a fencer.

ம. சவளுக, சவிளுக

[சுள் → சுளி. சுளிதல் = வளைதல். சுவள் → சவள்]

**சவள்தடி** *šavaḷ-taḍi*, பெ. (n.) *1.* துவளுந்தடி (வின்.); flexible stick. *2.* ஓடக்கோல்; a kind of oar.

க. சள்ளு (நீண்டதும் நெளியும் தன்மை கொண்டதுமான குச்சி அல்லது கம்பி); பட. சல்லு (நீண்ட மரக்கொம்பு)

[சவள் + தடி]

**சவளக்காரர்**[1] *šavaḷa-k-kārar*, பெ. (n.) *1.* மீனவருள் ஒரு பிரிவினர்; a class of fishermen. *2.* ஓடம் விடுபவன்; ferryman.

[சவளம் + காரர்]

**சவளக்காரர்**[2] *šavaḷa-k-kārar*, பெ. (n.) *1.* ஈட்டி பிடிக்கும் போர்வீரர்; lancers. *2.* மாழைத் தாதுகளுள்ள கனிகளில், தோண்டு கருவிகளைக் கொண்டு வேலைசெய்வோர் (வின்.); pikemen.

ம. சவளக்காரன்

[சவளம் + காரர்]

**சவளச்சி** *šavaḷacci*, பெ. (n.) சத்திச்சாரம் (யாழ். அக.); an acrid salt.

[சவள் + சவளச்சி. உவர் → உவள் → சவள்]

**சவளசோழியம்** *šavaḷa-šōḻiyam*, பெ. (n.) *1.* நாகரிகம் (யாழ். அக.); refinement, civilised condition. *2.* நிரம்பிய கல்வியறிவு; profound learning.

**சவளம்**[1] *šavaḷam*, பெ. (n.) குந்தம்; bearded dart or lance; pike. "அடுசவளத் தெடுத்த பொழுது" (கலிங். 424).

ம. சவளம்; க. சபள; தெ. சபளமு; E. javelin

[சுவள் → சவள் → சவளம் (மு.தா. 250)]

த. சவளம் → Pkt. šavvala, Skt. šarvalā

**சவளம்**[2] *šavaḷam*, பெ. (n.) ஒருவகை மீன் (யாழ்.அக.); a kind of fish.

ம. சவளம்

[சுவள் → சவள் → சவளம்]

**சவளம்**[3] *šavaḷam*, பெ. (n.) சங்கச் செய்நஞ்சு (பாடாணம்) (சங்.அக.); a mineral poison.

ம. சவளம்

[சுவள் → சவள் → சவளம்]

**சவளம்**[4] *šavaḷam*, பெ. (n.) புளியின் முற்றிய பழச்சுளை; well-developed or fully ripe condition of tamarind pulp. புளி சவளஞ் சவளமாயிருக்கிறது (இ.வ.).

[சுவள் → சவள் → சவளம்]

**சவளன்** *šavaḷan*, பெ. (n.) வளைந்த காலுள்ளவன்; a bandy or crook - legged man (சா.அக.).

[சவள் → சவளன்]

**சவளி**[1] *šavaḷi*, பெ. (n.) பருத்தியிலைச் சாறு; the fresh juice of the leaves of herbachous cotten tree (சா.அக.).

[சவள் → சவளி]

**சவளி**[2] *šavaḷi*, பெ. (n.) சவண்ட (வளைந்த) கால்களுடைய பெண்; a bandy legged woman. (சா.அக.).

[சவளன் (ஆ.பா.) → சவளி (பெ.பா.)]

**சவளி**[3] *šavaḷi*, பெ. (n.) வேட்டி சீலை முதலிய துணிச்சரக்கு; cloth, piece goods (செ.அக.).

மறுவ. ஆடை, துணி

ம. சவளி; க. சவளி, சவுளி, செளளி; தெ. சவளி; து. சவளி, சவுளி, சொளி.

[சுவள் → சவள் → சவண் → சவளி]

சவண்டிருப்பதால், சவளி என்றுபெயர். சவளுதல் = துவளுதல்.

சவளி என்னும் தமிழ்ச்சொல், த்ஜவுளி என்று தெலுங்கிலும், சவுளி என்று கன்னடத்திலும் எடுப்பொலியுடன் ஒலிக்கப்படுவதாலும் தமிழிலும் அவ்வாறே இற்றைத்தமிழர் ஒலிப்பதாலும் வடசொல்லென்று தவறாகக் கருதப்படுகின்றது. வடமொழியில், இச்சொல் இல்லை.

அறுக்கப்படுவதனால் அறுவை என்றும், துணிக்கப்படுவதனால் துணியென்றும், சவண்டிருப்பதனால் சவளியென்றும், ஆடை பல பொதுப்பெயர் பெறும். சவளுதல் - துவளுதல். மென்காற்றிலும் ஆடுவது (அசைவது) ஆடை.

"சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி
சளிசகடு சட்டை சவளி - சவிசரடு
சந்து சதங்கை சழக்காதி ஈரிடத்தும்
வந்தனவாற் சம்முதலும் வை"

என்னும் மயிலைநாதர் எடுத்துக்காட்டுச் செய்யுளால், சவளி என்பது தூய தென் சொல்லாதல் அறியப்படும். (ப. ப. 43, 44).

**சவளி**[4] *šavaḷi,* பெ. (n.) மகளிர் அணியும் கழுத்தணி வகை; a kind of necklace for woman. "பூசாரி ராயனிட்ட பொற்சவளி" (விறலி விடு.696).

ம. சவளி

*[சுவள் → சவள் → சவளி]*

**சவளிக்கடை** *šavaḷi-k-kaḍai,* பெ. (n.) துணிக் கடை; cloth shop.

க. சவளிய மளிகெ, சவளியங்காடி

*[சவளி + கடை]*

**சவளிக்காரன்** *šavaḷi-k-kāran,* பெ. (n.) துணி விற்போன்; a seller of cloth.

க. சவளிக, சவளிகார

*[சவளி + காரன்]*

**சவளியெடு-த்தல்** *šavaḷi-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) துணிவாங்குதல்; to buy cloths. திருமணத்திற்கான சவளி எடுத்தாகிவிட்டது? (உ.வ).

*[சவளி + எடு-,]*

**சவளை** *šavaḷai,* பெ. (n.) வங்கமணல் (ஈயம் கலந்த மணல்) (மூ.அ.); lead sand.

ம. சவள

*[சுவள் → சவள் → சவளை]*

**சவளைக்காரர்** *šavaḷai-k-kārar,* பெ. (n.) திருநெல்வேலி மாவட்டத்தில் நெசவுத் தொழில் செய்யும் ஒரு சாதியார்; a caste of weavers in Tirunelveli district.

ம. சவளக்காரன்

*[சவளி → சவளை + காரர்]*

**சவற்றிலை** *šavaṟṟilai,* பெ. (n.) உலர்ந்த இலை; dry-leaf (சேரநா.).

ம. சவற்றில

*[சவறு + இலை]*

**சவற்றுக்குழி** *šavaṟṟu-k-kuḻi,* பெ. (n.) குப்பைக் குழி; waste-pit.

ம. சவற்றுகுழி

*[சவறு + குழி]*

**சவறு** *šavaṟu,* பெ. (n.) 1. குப்பை; rubbish, sweepings. 2. பயனற்றவன் (இ.வ.); worthless person.

ம. சவறு.

*[சவடு → சவறு]*

**சவறுவிழு-தல்** *šavaṟu-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) சூல் முற்றாமல் (கருப்பம் நிரம்பாது) வெளிப் படுகை (Nāñ.); abortion (செ.அக.).

*[சவறு + விழு-,]*

**சவனம்**[1] *šavaṉam,* பெ. (n.) வேகம்; speed, quickness. "சவனத்தின் மிகுதுயர முறுவிக்க" (பாரத. பன்னிரண்டாம். 59).

*[சவம் → சவனம்]*

**சவனம்**[2] *šavaṉam,* பெ. (n.) வேள்வி; sacrifice.

*[சாவு → (சாவனம்) → சவனம் = உயிர்க்கொலை (பலி) செய்யும் வேள்வி]*

த. சவனம் → Skt. šavana

**சவனன்** *šavaṉaṉ,* பெ. (n.) வேகமுடையவன் (பிங்.); man of prompt and quick action.

Skt. savana

*[சவம் → சவனம் → சவனன்]*

**சவாரிக்கட்டை** *šavāri-k-kaṭṭai,* பெ. (n.) மரவள்ளி (இ.வ.); bitter cassava plant.

*[சவாரி + கட்டை. சவரி → சவாரி = வள்ளிக் கிழங்கை நோக்க இனிப் பின்மையால் மரவள்ளி உவர்ப்புச் சுவையுடையதாகக் கருதப்பட்டது]*

**சவாலக்கம்** *šavālakkam,* பெ. (n.) வயிரம் உண்டாகும் இடங்களிலொன்று (திருவாலவா. 25, 17.); one of the diamond - producing countries.

**சவி**[1] *šavi,* பெ. (n.) மிளகுக்கொடி; pepper creeper (சா.அக.).

**சவி**[2] *šavi,* பெ. (n.) *1.* **ஒளி;** light, splendour. "சவிகொள் பொன்முத்த மென்கோ" *(திவ். திருவாய். 3.4.4.). 2.* **அழகு** (பிங்.); beauty. *3.* **நேர்மை** (பிங்.); rectitude, propriety, equity. *4.* **வல்லமை;** energy, strength. "அடியிடச் சவியிலாதே முடங்குவன்" *(குற்றா.தலமந்தமா.73). 5.* **சுவை** (பிங்.); taste. *6.* **செவ்வி;** freshness. "சவிமதுத் தாம மார்பின்" *(சீவக. 2292). 7.* **சரமணிக்கோவை;** girdle with strings of beads or bells. "சவி மூன்று வடம் உடையன" (S.I.I. II, *210). 8.* **திருவிழா** (பிங்.); festival.

*[அகைதல் = எரிதல், ஒளிவிடுதல். அகை → அகு → அகி → அவி → சவி]*

அவி பார்க்க

**சவி**[2]**-த்தல்** *šavi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **வசைமொழிதல்;** to curse. "சவித்த முனிபாதந் தலைக்கொண்டு" *(திருவிளை. வெள்ளை. 16). 2.* **திட்டுதல்;** to abuse, revile: "நீங்களே சவியுங்கோள்" *(திவ். பெரியதி. வியா. அவ. பக்.12).*

*[சாய் → சாவு → சாவித்தல் = சாகக் கடவாய் அல்லது அழிவாய் எனக் கூறுதல். சாவி → சவி]*

**சவி**[3]**-த்தல்** *šavi -,* 4 செ.குன்றாவி. (v.t.) **வழிபாடு செய்தல்;** to pray. "என் சவிப்பார் மனிசரே" *(திவ். திருவாய்.3, 5,5).*

**சவிக்கை** *šavikkai,* பெ. (n.) **சுங்கச்சாவடி** (வின்.); custom house (செ.அக.).

ம. சவுக்கை

*[சவுக்கம் → சவுக்கை → சவிக்கை. தெரு கூடுமிடத்தில் அமைந்த சுங்கச்சாவடி]*

த. சவிக்கை → U. cauki

**சவிகம்**[1] *šavigam,* பெ. (n.) **திப்பிலிக்கொடி;** creeper of long pepper (சா.அக.)

*[சவி → சவிகம்]*

**சவிகம்**[2] *šavigam,* பெ. (n.) **கொட்டைக்கரந்தை** (மலை.); Indian globe thistle.

**சவிகி** *šavigi,* பெ. (n.) **சவுக்கை**[1] (வின்.) பார்க்க; see *šavukkai*[1].

Pkt. caukka

*[சதுக்கம் → சவுக்கம் → சவுக்கை → சவிக்கை → சவிகை → சவிகி.]*

**சவிகை**[1] *šavigai,* பெ. (n.) **சவுக்கை**[1] பார்க்க; see *šavukkai*[1].

தெ. சவிகெ.

*[சவுக்கை → சவிகை]*

**சவிகை**[2] *šavigai,* பெ. (n.) **ஆனைத்திப்பிலி** (தைலவ. தைல. 1.); elephant-pepper.

*[சவியம் → சவிகை]*

**சவிசங்கம்** *šavišaṅgam,* பெ. (n.) **ஒருவகை ஊதை(வாத) நோய்** (சங்.அக.); a kind of flatulency.

**சவியம்** *šaviyam,* பெ. (n.) **ஆனைத்திப்பிலி, கொடிவகை;** elephant-pepper, climber.

**சவு-த்தல்** *šavu-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* **விலை நயத்தல்** (வின்.); to fall in price: to become cheap. *2.* **விலைப்படாமலிருத்தல்** (வின்.); to be unsaleable, to have no demand. *3.* **அலுத்துப் போதல்** (யாழ்.அக.); to become tired. *4.* **மெலிதல்** (யாழ்.அக.); to become weak, emaciated. *5.* **விளைவு குன்றிப்போதல்** (இ.வ.); to fail, as a crop. *6.* **சுவையற்றுப்போதல்;** to fall flat as a song. பாட்டுச் சவுத்துப் போயிற்று (வின்.); *7.* **முறுமுறுப்பு அற்றுப்போதல்;** to lose crispness. 'முறுக்கு சவுத்துப்போயிற்று' (இ.வ.).

க. சவுக.

*[தவுதல் = குன்றுதல், குறைதல். தவு → சவு = விலைகுறைதல், குன்றிப் போதல்]*

**சவுக்கடி**[1] *šavukkaḍi,* பெ. (n.) **சாட்டையடி;** the lash, a corporal punishment.

*[சவுக்கு + அடி]*

**சவுக்கடி**[2] *šavukkaḍi,* பெ. (n.) **கடுக்கனில் உள்ள தொங்கல்** (வின்.); pendant of an ear-ring.

தெ. சௌகட்டு.

*[சவுக்களி → சவுக்கடி]*

**சவுக்கடிக்கூடு** *šavukkaḍi-k-kūḍu,* பெ. (n.) **அணிகலனில் (ஆபரணத்தில்) மணி (இரத்தினம்) பதிக்கும் உம்மிசம்** (யாழ்ப்.); socket for gems in ornament.

*[சவுக்கு + அடி + கூடு]*

**சவுக்கண்டி** *šavukkaṇḍi,* பெ. (n.) தோப்பில் கட்டப்படும் கொட்டகை (கொ.வ.); summer-house, quadrangular shed within a garden.

*[சதுக்கம் → சவுக்கம் → சவுக்கண்டி]*

த. சவுக்கண்டி → U. caukkandi.

**சவுக்கப்பட்டை** *šavukka-p-paṭṭai,* பெ. (n.) முத்துகள் கொண்டு கோக்கப்பட்ட அணிகலன்; pearl ornament. *2.* புங்கப்பட்டை; bark of Indian beech. "துலுக்காண(ம்) சவுக்கப்பட்டை" *(தெ.க.தொ.24: க. 442: 3).*

*[சதுக்கம் → சவுக்கம் + பட்டை.பட்டு → பட்டம் = பட்டையான தகடு. பட்டு → பட்டை = தட்டையான பொருள், மரத் தண்டின் பாகத்தைச் சுற்றியுள்ள பட்டையான புறணி]*

**சவுக்கம்** *šavukkam,* பெ. (n.) *1.* சதுரம்; square. *2.* சிறுதுண்டு; square piece of cloth; towel. *3.* இலிங்கப் பெட்டகம் (இ.வ.); small case for keeping liṅgam. *4.* தாளத்தின் விளம்பம்; slow time measure. *5.* பேச்சு முதலியவற்றில் நேர்த்தி; finesse or neatness in language. சவுக்கமாய்ப் பேசுகிறான் (உ.வ.). *6.* கற்றச்சனுடைய உளி (இ.வ.); stone cutter's chisel.

*[சதுக்கம் → சவுக்கம்]*

த. சவுக → Pkt. caukka

**சவுக்கவர்ணம்** *šavukka-varṇam,* பெ. (n.) (இசை) நடனத்திற்குரிய இசைப்பாட்டு வகை; a species of varṇam sung in dances.

*[சவுக்கம் + வர்ணம்]*

**சவுக்களி**[1] *šavukkaḷi,* பெ. (n.) *1.* காதணிவகை; a kind of ear-ring. "சற்று மறுவில்லாச் சவுக்களியும்" *(பணவிடு. 243). 2.* கடுக்கனோடு சேர்க்கும் பொன் தகடு (வின்.); small gold piece appended to ear-rings. *3.* எட்டுப் புடைவை கொண்ட நீண்ட துணி (இ.வ.); a long piece of eight sarees. *4.* ஒருவகைப் புடைவை (இ.வ.); a kind of saree.

ம. சவுக்கிளி; க. சவுகளி; து. சௌகளி

*[சவுக்கு → சவுக்களி]*

**சவுக்களி[2]-த்தல்** *šavukkaḷi-,* 4 செ.குன்றாவி. (v.i.) சவக்களி-த்தல், (இ.வ.) பார்க்க; see *šavakkaḷi-*

*[சவக்களி → சவுக்களி]*

**சவுக்களிக்கடுக்கன்** *šavukkaḷi-k-kaḍukkaṉ,* பெ. (n.) கடுக்கன்வகை (வின்.); ear-ring with šavukkaḷi pendant.

*[சவுக்களி + கடுக்கன்]*

**சவுக்காக்கினை** *šavukkā-k-kiṉai,* பெ. (n.) சாட்டையடித் தண்டனை (Pond.); sentence of whipping.

*[சவுக்கு + ஆக்கினை]*

**சவுக்காரக்கல்** *šavukkāra-k-kal,* பெ. (n.) ஒருவகை மாக்கல் (M.M.*248*); soapstone, a metamorphic rock.

*[சவுக்காரம் + கல்]*

**சவுக்காரப்பிலுக்கு** *šavukkāra-p-pilukku,* பெ. (n.) பகட்டாரவாரம் (இடம்பம்) (இ.வ.); foppery, vanity in dress.

*[சவுக்காரம் + பிலுக்கு]*

**சவுக்காரம்** *šavukkāram,* பெ. (n.) சவக்காரம் பார்க்க; see *šava-k-kāram* "தரைக்குள் வழலையெனப் பேர் வகித்த சவுக்காரம்" *(பதார்த்த. 1106).*

ம. சவர்க்காரம், க. சபுகார, சபகார, சவகார; தெ. சௌகாரமு; து. சபகார, சபுகார சௌகார

*[சவர்க்காரம் → சவுக்காரம்]*

த. சவுக்காரம் → Skt. yavakṣāra

**சவுக்கி** *šavukki,* பெ. (n.) சவிக்கை பார்க்க; see *šavikkai* (செ.அக.).

*[சவிக்கை + சவுக்கி]*

**சவுக்கு**[1] *šavukku,* பெ. (n.) உயரமாக வளரக் கூடியதும் மணற்பாங்கான நிலத்தில் பயிராகக் கூடியதுமான மரவகை; Casuarina pine (சா.அக.).

ம. சவுக்க, சவோக்கு; க சம்புக்கு, சம்பக; தெ. சம்புகு செட்டு

*[சவட்டு → சவட்டை → சாட்டை. சவட்டு → சவக்கு → சவுக்கு]*

**சவுக்கு வகை:**

1. ஆற்றுச் சவுக்கு
2. கோடைச் சவுக்கு
3. சிவப்பாற்றுச் சவுக்கு
4. சிவப்புக் கோடைச் சவுக்கு
5. சிவப்புச் சிறுசவுக்கு
6. சிறுசவுக்கு

**சவுக்கு**[2] *šavukku,* பெ. (n.) குதிரைச்சாட்டை; whip, horse-whip. *"சவுக்கிட்டடிக்கின்ற மன்னர்க்கு" (திருவேங். சத. 46);* 'ஆயிரம் பொன் பெற்ற குதிரைக்கு அரைப்பணத்துச் சவுக்கு' *(பழ.).*

ம. சவுக்கு; து. சபுகு

*[சவட்டு → சவட்டை → சாட்டை. சவட்டு → சவக்கு → சவுக்கு]*

**சவுக்கு**[2] *šavukku,* பெ. (n.) சவுக்கை[2] பார்க்க; see *šavukkai*[2].

*[சதுக்கம் → சவுக்கம் → சவுக்கை → சவுக்கு]*

த. சவுக்கு → Pkt. šavkka

**சவுக்குக்கம்பம்** *šavukku-k-kambam,* பெ. (n.) மிலாறு நீக்கப்பட்ட சவுக்குமரத் துண்டு; cavukku-post.

*[சவுக்கு + கம்பம்]*

**சவுக்குநாற்று** *šavukku-nāṟṟu,* பெ. (n.) சவுக்கு மரம் வளர்ப்பதற்குரிய நாற்று; šavukkai seedlings.

*[சவுக்கு + நாற்று]*

**சவுக்குமிலாறு** *šavukku-milāṟu,* பெ. (n.) சவுக்கு மரத்தின் கிளைப்பகுதி; branches of savukku.

*[சவுக்கு + மிலாறு]*

**சவுக்கை**[1] *šavukkai,* பெ. (n.) வேம்பு, ஆல், புளி போன்ற மரங்களடர்ந்த சோலையில் ஊர்ச் சபை கூடுவதற்காகக் கட்டப்பட்ட சாவடி; village assembly shed *(கட்டட).*

ம. சவுக்க; க. சவுக (சதுரமான துணி)

*[சதுக்கம் → சதுக்கை → சவுக்கை]*

**சவுக்கை**[2] *šavukkai,* பெ. (n.) சதுரத் திண்ணைக் கொட்டகை; square shed, raised square platform for sitting. "என்னைச் சவுக்கையில் வைத்து... வீட்டிற்குட் போய்ப் புகுந்தார்" *(விறலி விடு. 112).*

*[சதுக்கம் → சதுக்கை → சவுக்கை]*

த. சவுக்கை → Pkt. cavkka

**சவுக்கை**[3] *šavukkai,* பெ. (n.) *1.* காவலிடம்; station of a guard or watchman, police station (R.F.). *2.* காவற்கூடம்; lock-up (R.F.). *3.* சுங்கச் சாவடி; custom-house (R.F.).

*[சதுக்கம் → சதுக்கை → சவுக்கை. தெருச் சந்திப் பகுதியில் சுங்கச்சாவடி அமைத்தலை குறித்த இச்சொல் காலப்போக்கில், காவலிடம், காவற்கூடம் ஆகியவற்றையும் குறித்தது]*

சவுக்கை → U. cavuku

**சவுக்கை**[4] *šavukkai,* பெ. (n.) விலைமலிவு *(வின்.);* cheapness.

ம. சவுக்கல்; க. சவுக; தெ. சௌக; Mar. šavanga

*[தவு → சவு. சவு → சவுக்கை]*

**சவுக்கை**[5] *šavukkai,* பெ. (n.) சவுக்கு[1] பார்க்க; see *šavukku*[1].

*[சவுக்கு[1] → சவுக்கை]*

**சவுக்கைதார்** *šavukkai-dār,* பெ. (n.) சவுக்கையிலிருக்கும் பணியாளர்; officer in a šavukkai .

*[சவுக்கை + தார்]*

U. dār → த. தார்

**சவுக்கைமேடை** *šavukkai-mēḍai,* பெ. (n.) சவுக்கை[2] பார்க்க; see *šavukkai*[2].

*[சவுக்கை + மேடை]*

**சவுகந்தி** *šavugandi,* பெ. (n.) வசம்பு *(மலை.);* sweet flag.

*[சௌகந்தம் → சவகந்தம் → சவுகந்தி]*

**சவுங்கல்** *šavuṅgal,* பெ. (n.) சவங்கல் பார்க்க; see *šavaṅgal.* "சன்னை தெரியாதோ சவுங்கலே" *(விறலிவிடு. 762).*

*[சவங்கு → சவங்கல் → சவுங்கல்]*

**சவுங்கு-தல்** *šavuṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மயங்கி விழுதல் (மூர்ச்சையாதல்); to faint, droop.

*[சவங்கு → சவுங்கு]*

**சவுசயம்** *šavušayam,* பெ. (n.) முருக்குமரம் *(மலை.);* Indian coral tree.

**சவுட்டுநிலம்** *šavuṭṭu-nilam,* பெ. (n.) சவுர்நிலம் பார்க்க *(செங்கை.);* see *šavur-nilam.*

*[சவர் → சவடு → சவுடு + நிலம்]*

**சவுட்டுமிதி-த்தல்** *šavuṭṭu-midi-,* 4 செ.குன்றாவி. (v.t.) உப்பு விளைச்சலுக்காக உழவு செய்த பின்னர் வயலில் கிடக்கும் சிறுசிறு கட்டிகளை மிதித்தல் *(மீனவ.);* to break clods into pieces.

*[சவுட்டு + மிதி-,]*

**சவுடு** *šavudu,* பெ. (n.) *சவடு (வின்.);* sediment.

தெ. சவுடு; க. சவுளு

*[சவடு → சவுடு]*

**சவுண்டிகன்** *šavuṇḍigaṉ,* பெ. (n.) *கள் விற்போன் (சௌண்டிகன்) (வின்.);* vendor of spirituous liquors.

Skt. saunḍika

**சவுத்தி** *šavutti,* பெ. (n.) *சதுர்த்தி (இ.வ.);* fourth day of a lunar fortnight.

Pkt. šavutthī; Skt. Caturthī

*[சதுரம் → சதுர்த்தி → சவுத்தி]*

**சவுத்து** *šavuttu,* பெ. (n.) *முன்வகை;* manner, method. *"இவற்றுணோக்குஞ் சவுத்தறிவான்" (சினேந். பாயி. 4).*

தெ. சவது

**சவுதம்**[1] *šavudam,* பெ. (n.) *1. விலைமலிவு (இ.வ.);* lowness of market price, cheapness. *2. விற்பனையாகாமல் கட்டுக்கிடையாக இருக்கும் பொருள் (வின்.);* old stock of goods lying unsold. *3. சோர்வு (யாழ்ப்.);* tiresomeness fatigue, as of mind. *4. இளைப்பு (யாழ்ப்.);* weakness, emaciation.

*[சம்புதல் = விலைகுறைதல். சம்பு → சம்பல் = விலையிறக்கம், மலிவு. சம்பு → சவு → சவுதம்]*

**சவுதம்**[2] *šavudam,* பெ. (n.) *1. நாட்டியத்தின் நடன (கதி) வகை;* a mode of dancing (Naṭya). *"சவுத விகற்பமுங் காட்டி" (குற்றா. தல. தருமசாமி. 55). 2. சவுக்கம்–4 பார்க்க (Mus.);* see *šavukkam-4.*

Pkt. saukka

**சவுதரி-த்தல்** *šavudari-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1. சவதரி–த்தல் (யாழ்.அக.) பார்க்க;* see *šavadari. 2. பாதுகாத்தல், காப்பாற்றுதல்;* to support, maintain.

*[சவதரி → சவுதரி–,]*

**சவுதாரிப்பாய்** *šavudāri-p-pāy,* பெ. (n.) *முரட்டுக்கோரையால் நெய்யப்பட்ட பாய் (இ.வ.);* a kind of coarse mat.

*[சவுதாரி + பாய்]*

**சவுநாகம்** *šavunāgam,* பெ. (n.) *கையாந்தகரை (மலை.);* a plant.

**சவுமம்** *šavumam,* பெ. (n.) *சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று;* one of the treatise on architecture.

**சவுர்நிலம்** *šavur-nilam,* பெ. (n.) *களர்நிலம் (செங்கை);* alkaline earth; saline soil.

*[சவர் → சவுர் + நிலம்]*

**சவுரி**[1] *šavuri,* பெ. (n.) *திருமால் (சூடா.);* Tirumāl.

*[சவரி → சவுரி]*

**சவுரி**[2] *šavuri,* பெ. (n.) *கள்வன் (சூடா.);* thief, robber.

*[கவர் → கவரி → சவரி → சவுரி]*

**சவுரி**[3] *šavuri,* பெ. (n.) *குறட்டை (தைலவ.தைல. 133);* bitter snake-gourd.

*[சவர் → சவரி → சவுரி]*

**சவுரிக்கயிறு** *šavuri-k-kayiṟu,* பெ. (n.) *தென்னைநார்க் கயிறு (வின்.);* cord of coconut fibre.

*[சவரி' + கயிறு]*

**சவுரியம்**[1] *šavuriyam,* பெ. (n.) *களவு (சூடா.);* theft, robbery.

*[கவர் → சவர் → சவுர் → சவுரியம்]*

**சவுல்** *šavul,* பெ. (n.) *ஆ (பசு), குதிரை முதலியன சினைப்படுகை (வின்.);* pregnancy of cows, mares, etc.

*[சூல் → சவுல்]*

**சவுல்மண்** *šavul-maṇ,* பெ. (n.) *வெண்மை கலந்த சதுப்புமண் (தருமபுரி);* a kind of soil, marsh.

க. சவுள் (உவர்ப்பு)

*[சவுள் → சவுல் + மண்]*

**சவுள்** *šavuḷ,* பெ. (n.) *கழிவு உப்பினை வெட்டி அள்ளுதற்கேதுவான மண்வெட்டி போன்ற கருவி (மீனவ.);* a kind of hoe, shovel.

*[சுவள் → சவள் → சவுள்]*

சவள் பார்க்க

**சவுளி** *šavuḷi,* பெ. (n.) சவளி[3] பார்க்க; see *šavaḷi*[3]. "கலைச்சவுளித் தலைக்குலவி" (திருப்பு. 123).

து. சவுளி

*[சவளி → சவுளி]*

**சவை[1]-த்தல்** *šavai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மெல்லுதல்; to chew, munch. 2. குழந்தை தாய்ப்பாலைச் சப்புதல் (இ.வ.); to suck mother's milk.

ம. சவய்க்குக; தெ. சப்பு; குட. சவெ; நா. சவச்; பர். சவல்; மா. சொப்யெ.

*[அகைத்தல் = கூறுபடுத்துதல், அறுத்தல். அகை → சகை → சவை. சவை = மெல்லுதல், மென்று உண்ணுதல், தாய்ப் பாலை உறிஞ்சிக் குடித்தல்]*

**சவை[2]** *šavai,* பெ. (n.) 1. மாந்தர் கூட்டம் (பிங்.); assembly of men 2. அறிஞர் கூட்டம்; assembly of learned men. "சவைநடுவே நீட்டோலை வாசியா நின்றான்" (மூதுரை. 137). 3. கற்றறிந்தோர் (திவா.); learned persons.

*[அமைதல் = பொருந்துதல், கூடுதல். அமை = கூட்டம். (முதனிலைத் தொழிலாகு பெயர்). அமை → அவை. அவை → சவை. ஒ.நோ: அமர் → சமர். அமை → சமை. சவை → சபை. ஒ.நோ: உருவு → உருபு. செய்வவர் → செய்பவர். சபையென்னும் தென்சொல்லே வட மொழியிற் சபா (sabhā) என்னுஞ்சொல்லிற்கு மூலமாகும். வடமொழியிற் கூறும் வேர்ப்பொருள் விளங்குவது (பிரகாசிப்பது). விளக்கத்தோடு கூடியது என்பதே. ஸ = கூட, பா (bhā) = விளங்கு, ஒளிர் (பிரகாசி, to shine) / பா என்பது பால் (வெண்மை, ஒளி) என்பதன் கடைக் குறையாகவுமிருக்கலாம்]*

காலஞ்சென்ற சு.கு. சட்டர்சி அதைமறுத்து, 'sib' என்னும் தியூத்தானிய அல்லது செருமானியச்சொல்லினின்று ஸபா என்னுஞ் சொல் திரிந்ததாகக் கூறினார். ஆயின், 'sib' என்பது உடன்பிறந்தாருள் ஒருவரைக் குறிக்குஞ் சொல்லாதலால், அது பொருந்தாது. ஆகவே அவை என்பதை மூலச்சொல்லாகக் கொள்வதே பொருத்தமாம் (செல்வி. 78. பக். 425)

**சவை[3]** *šavai,* பெ. (n.) ஆடவை ஓரை (மிதுன ராசி) (உரி.நி.); gemini of the zodiac.

*[அவை → சவை]*

**சவைக்கக்கொடு-த்தல்** *šavaikka-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) முலையூட்டுதல் (இ.வ.); to give suck to.

*[சவைக்க + கொடு-,.]*

**சவைக்கோழை** *šavai-k-kōḻai,* பெ. (n.) கோழை (இ.வ.); one who is nervous in company or assembly.

*[சவை + கோழை]*

**சவைமகள்** *šavai-magaḷ,* பெ. (n.) சவை[3] பார்க்க (பிங்.); see *šavai*[3].

*[சவை + மகள்]*

**சவையரம்** *šavai-y-aram,* பெ. (n.) ஒருவகை அரம் (C.E.M.); a kind of file.

*[சவை + அரம்]*

**சவையல்** *šavaiyal,* பெ. (n.) பொழுதுபோக்கு (இ.வ.); amusement, diversion.

*[அவை → சவை → சவையல்]*

**சவையார்** *šavaiyār,* பெ. (n.) 1. ஊரவையோர் (S.I.I. 11, 132); members of a village council. 2. பிராமணரில் ஒரு பிரிவினர் (G.Tj.D.I.78) a sect of Brahmins.

*[அவை → சவை → சவையார்]*

பழந்தமிழகத்தில் ஒவ்வோர் (ஆள்நில) ஊரிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சவை இருந்தது. அச்சவையார்க்கு ஆளுங்கணம் என்றும் கணப்பெருமக்கள் என்றும் வாரியப் பெருமக்கள் என்றும் கணவாரியப் பெருமக்கள் என்றும் பெயர்.

**சவைவாரியர்** *šavai-vāriar,* பெ. (n.) ஊரவையின் ஆளுங்கூட்டத்தார் (I.M.P. Tn. 29.); managing committee of a village assembly.

*[சவை + வாரியர்]*

பழந்தமிழகத்தில் ஊர்ச்சபையானது ஊராட்சி பற்றிய பல்வேறு காரியங்களைக் கவனித்தற்குப் பல்வேறு வாரியமாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வாரியம் என்பது மேற்பார்வை அல்லது மேலாண்மை. ஊரைப்பற்றிய பொதுக் காரியங்களையும் அறமுறை, குற்றத்தீர்ப்பு முதலியவற்றையும் கவனிப்பது ஆட்டை வாரியம் (சம்வத்சாரவாரியம்); தோட்டம், தோப்பு, புன்செய் முதலியவற்றைக் கவனிப்பது தோட்டவாரியம்; நன்செய்களைக் கவனிப்பது கழனிவாரியம்; ஏரி, குளம், ஆறு

முதலிய நீர்நிலைகளைக் கவனிப்பது ஏரி வாரியம்; ஏரி, குளங்களிலுள்ள கலிங்குகளையும் மதகுகளையுங் கவனிப்பது கலிங்குவாரியம்; ஊரில் வழங்கும் காசு (நாணயங்)களை நோட்டஞ் செய்து, நற்காசுகளையே செலாவணியாக்குவது பொன் வாரியம்; ஊர்ச்சபைக் கணக்குகளைக் கவனிப்பது கணக்குவாரியம்; பஞ்சகாலத்திற் பயன்படும் படி வளமைக்காலத்தில் உணவுப் பொருள்களைத் தொகுத்து வைப்பது பஞ்சவாரவாரியம் (பஞ்சவாரியம்); ஊரிலும் அக்கம்பக்கத்திலு முள்ள பெருவழிகளைக் கவனிப்பது தடிவழிவாரியம்; ஊரிலுள்ள குடும்புகளைக் கவனிப்பது குடும்புவாரியம்.

இவற்றுள் சில வாரியங்கள் பலவூர்களி லில்லை.

ஊர்ச்சபைக் கணக்கெழுதுபவன், கரணத்தான் (மத்தியஸ்தன்) எனப்படுவான்.

ஊர்ச்சபை வேலைக்காரனுக்கு வெட்டி (வெட்டியாள், வெட்டியான்) என்று பெயர் *(ப.பு. 29, 30)*

**சவைவாள்** *šavai-vāḷ,* பெ. (n.) ஒருவகை வாள் *(கட்டிட. நாமா. 41)*; tenon-saw.

*[சவை + வாள்]*

**சழக்கன்** *šaḻakkaṉ,* பெ. (n.) தீயவன்; wickedman. *"சழக்கனே னுனைச் சார்ந்திலேன்" (திருவாச. 30, 2).*

*[சழங்கன் → சழக்கன்]*

**சழக்கு** *šaḻakku,* பெ. (n.) 1. குற்றம்; fault, blemish. *உள்ளச் சழக்கு மறினே பிறவி யறும் (சைவச. பொது. 404).* 2. தீமை; wickedness. *"சழக்கு நாக்கொடு" (திவ். பெரியாழ். 5.1.2).* 3. பயனின்மை; uselessness. *"சழக்கே பறிநிறைப் பாரொடு தவமாவது செயன்மின்" (தேவா. 1154. 4).* 4. தளர்ச்சி; fatigue, exhaustion. *"ஒரு சழக்கறச் சமருழக்கினான்" (பாரத. இராச. 61).*

*[சழங்கு → சழக்கு]*

**சழக்குச்சழக்கெனல்** *šaḻakku-c-caḻak-k-eṉal,* பெ. (n.) சழக்குப்புழக்கெனல் பார்க்க; see *šaḻakku-p-puḻakkeṉal (செ.அக.).*

*[சழக்கு + சழக்கு + எனல்]*

**சழக்குப்புழக்கெனல்** *šaḻakku-p-puḻa-k-eṉal,* பெ. (n.) சிதறடிப்பதை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. of splashing sound.

*[சழக்கு + புழக்கு + எனல்]*

**சழக்கெனல்** *šaḻakkeṉal,* பெ. (n.) சழக்குப் புழக்கெனல் பார்க்க; see *šaḻakku-p-puḻakkeṉal.*

*[சழக்கு + எனல்]*

**சழங்கு[1]-தல்** *šaḻaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சோர்தல்; to languish; to be enfeebled. *"உடல் சழங்க லுற்றது" (காஞ்சிப்பு. தழுவக். 93).* 2. நெகிழ்தல்; to be loose - fitting, to hang loose, as one's garment. *"சழங்க லுடையார்ந் தழகு கொள்ள" (பெரியபு. தடுத்தாட். 31).* 3. தொங்கி யசைதல்; to dangle. *"வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க" (பெரியபு. தடுத்தாட். 29).*

*[சுள் → சள் → சழ → சழங்கு-,]*

**சழங்கு[2]** *šaḻaṅgu,* பெ. (n.) முதுமைத் தளர்ச்சி *(யாழ்ப்.)*; decrepitude due to old age.

*[சழங்கு[1] → சழங்கு[2]]*

**சழி-தல்** *šaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. சப்பளிதல்; to be pressed out of form, crushed down on one side; to be squeezed and distorted. 2. தளர்தல்; to become crumpled, wrinkled. 'தேகஞ் சழிந்துவிட்டது' (உ.வ.). 3. நெருங்கிக் கிடத்தல்; to lie thick and close. *"திங்கட்டொல்லரா நல்லிதழி சழிந்த சென்னி" (தேவா. 980. 6).* 4. ஊழற்சதை வைத்தல்; to grow flabby.

ம. சழயுக; க. சடில் (நெகிழ்தல்)

*[சுல் = வளைதற் கருத்துவேர். சுல் → சுள் → சுளகு = வளைத்துப்பின்னும் புடைப்புத்தட்டு. சுள் → சுளி. சுளிதல் = திரிதல். சுளித்தல் = வெறுப்பால் முகத்தைத் திரித்தல். சுள் → சுளி → சளி → சழி. சழி-தல் = உடற்சதை சரிந்து தளர்தல் (வே.க. 227)]*

**சழிவுநெளிவு** *šaḻivu-neḷvu,* பெ. (n.) கோணல் மாணல்; unshapely, distorted condition.

*[சழிவு + நெளிவு. சளி → சழி → சழிவு]*

**சழுக்கம்** *šaḻukkam,* பெ. (n.) 1. நெகிழ்ச்சி; looseness, as of garment. 2. மனமழிகை; rankling, as with envy. *"மனச்சழுக்கம்" (திவா.8,109).*

*[சள் → சழு → சழுங்கு → சழுக்கம் (மு.தா.310)]*

பொருள் குழைவும் மனக்குழைவும் எனக் குழைவு இருவகை. சளுத்தல் = சேறாதல். சள்ளல் = சேறு போன்றன பொருள் குழைவு.

சழுக்கம் = நெகிழ்ச்சி. மனமழிதல் போன்ற மனக்குழைவு. இவை இரண்டிற்கும் 'சள்' துளைப்பொருள்கருத்து வேரே அடிப்படை துளை விழுந்த பொருள் போல் கட்டுவிடுதல் குழைதல்.

**சழுங்கல்** *šaḻuṅgal*, பெ. (n.) சழுக்கம் (வின்.) பார்க்க; see *šaḻukkam*[1].

*[சள் → சழு → சழுங்கு → சழுங்கல்]*

**சழுங்கு-தல்** *šaḻuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* சழங்கு-2 (யாழ்ப்.) பார்க்க; see *šaḻuṅgu-2*. *2.* மழுங்குதல் (வின்.); to become blunt.

*[சள் → சழு → சழுங்கு (மு.தா.310)]*

**சள்** *šaḷ*, பெ. (n.) சுவையின்மையைக் காட்டும் குறிப்பு; onom. expr. of signifying insipidity.

**சள்ளட்டியெனல்** *šaḷḷaṭṭi-y-eṉal*, பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு (யாழ்ப்.); onom. expr. of snarling.

*[சள்ளட்டி + எனல்]*

**சள்ளல்** *šaḷḷal*, பெ. (n.) சேறு (யாழ்ப்.); mud, slush.

ம. சளிப்புறம் (சேற்றுநிலம்)

*[சுள் → சள் → சள்ளல் (மு.தா. 310)]*

அள்ளல் → சள்ளல் என்றுமாம்.

**சள்ளு[1]-தல்** *šaḷḷu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* இளகுதல் (வின்.); to slacken, abate. *2.* எருவாய்க் காற்றுப் பிரிதல் (R.); to break wind. *3.* சிக்குதல் (R.); to be entangled, involved.

ம. சள்ளுக; க. சல்லு (உரம் முதலியவற்றைப் பரப்பு); தெ. சொள்ள, சள்ளு

*[சுள் → சள் → சள்ளுதல் (மு. தா. 312)]*

**சள்ளு[2]-தல்** *šaḷḷu-*, 5 செ.கு.வி. (v.i.) துளை விழுதல்; to form hole.

*[உள் → அள் → சள்-,]*

**சள்ளு[3]** *šaḷḷu*, பெ. (n.) *1.* சள்ளை[1] பார்க்க (இ.வ.); see *šaḷḷai*[1]. *2.* சள்ளுக்காய் பார்க்க; see *šaḷḷu-k-kāy*.

க. சள்ளு.

*[சுள் → சள் → சள்ளு]*

**சள்ளுக்காய்** *šaḷḷu-k-kāy*, பெ. (n.) முற்றாத இளங்காய் (இ.வ.); tender and undeveloped green fruit.

*[சள் → சள்ளு + காய்]*

**சள்ளுச்சள்ளெனல்** *šaḷḷu-c-caḷḷeṉal*, பெ. (n.) *1.* நாய் குரைக்கும் ஒலிக்குறிப்பு (சங்.அக.); dogs bark. *2.* சினத்துடன் பேசுங் குறிப்பு; growling with anger.

*[சள்ளு + சள்(ளு) + எனல்]*

**சள்ளுப்படு-தல்** *šaḷḷu-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) தொல்லைக்குள்ளாதல் (இ.வ.); to undergo troubles, difficulties.

*[சள்ளு + படு-,]*

**சள்ளுப்புள்ளு** *šaḷḷu-p-puḷḷu*, பெ. (n.) *1.* சண்டை (கொ.வ.); quarrel. *2.* தொல்லை (யாழ்ப்.); trouble, worry.

*[சள்ளு + புள்ளு. எதுகை நோக்கி வந்த மரபிணைமொழி]*

**சள்ளுப்புள்ளெனல்** *šaḷḷu-p-puḷḷeṉal*, பெ. (n.) சள்ளுச்சள்ளெனல் (இ.வ.) பார்க்க; see *šaḷḷu-c-caḷḷeṉal*.

*[சள் → சள்ளு + புள்ளு + எனல்]*

**சள்ளுவாயன்** *šaḷḷu-vāyaṉ*, பெ. (n.) ஓயாது பேசுபவன் (இ.வ.); talkative fellow.

*[சள்ளு + வாயன்]*

**சள்ளெனல்** *šaḷ-ḷ-eṉal*, பெ. (n.) சள்ளுச்சள்ளெனல் பார்க்க; see *šaḷḷu-c-caḷḷeṉal*. 'சள்ளென விழுகிறான்' (உ.வ.).

*[சள் + எனல்]*

**சள்ளை[1]** *šaḷḷai*, பெ. (n.). *1.* தொல்லை ; trouble, annoyance. *2.* ஆற்றுமீன்வகை; grey river-mullet, Mugil. "சள்ளை வெள்ளை யங்குருகு தானதுவா மெனக்கருதி வள்ளை வெண்மலரஞ்சி" (தேவா. 628, 4).

பட. சள்ளெ

*[சள் → சள்ளை]*

**சள்ளை[2]** *šaḷḷai*, பெ. (n.) இடுப்பு (யாழ்ப்.); hip.

க., பட. அள்ளெ

*[அள் → அள்ளை = விலாப்புறம். அள்ளை → சள்ளை]*

**சள்ளைக்கடுப்பு** *šaḷḷai-k-kaḍuppu*, பெ. (n.) குளிர்மிகையால் நேரிடும் உடல் வலி; pain in the body caused by cold.

*[சள்ளை + கடுப்பு]*

**சளக்குப்புளக்கெனல்** *šaḷakku-p-puḷak-k-eṉal,* பெ. (n.) சழக்குப்புழக்கெனல் பார்க்க; see *šaḷakku-p-puḷak-k-eṉel.*

*[சளக்கு + புளக்கு + எனல்]*

**சளக்கெனல்** *šaḷakkeṉal,* பெ. (n.) ஓர் ஒலிக் குறிப்புச்சொல் ; onom. expr. of crashing sound. "சளக்கென் றடித்தாள் சதிகாரி" *(விறலிவிடு. 894).*

*[சள் → சளக்கு + எனல்]*

**சளகந்தம்** *šaḷagandam,* பெ. (n.) வசம்பு *(மலை.);* sweet-flag.

**சளகன்** *šaḷagaṉ,* பெ. (n.) நிலையற்ற மனமுடையவன்; weak, fickle-minded man. "சளகரல்லாத சதுரர்" *(திருநூற். 61).*

*[அல் → (அலை) → அலம்பு = அசைதல். அல் → சல் → சள் → சளம் = அசைதல், துன்பந்தருதல். சளம் → சளகன் = அலைபாயும் மனமுள்ளவன்]*

**சளசண்டி** *šaḷa-šaṇḍi,* பெ. (n.) விடாபிடிக்காரன், அடம்பிடிக்கிறவன்; obstinate and impudent fellow.

*[சளம் + சண்டி]*

**சளசள-த்தல்** *šaḷa-šaḷa-, 4* செ.கு.வி. (v.i.) *1.* சேறாயிருத்தல்; to be wet, muddy, sloppy. *2.* அருவி மழை முதலியவற்றின் வீழ்ச்சியால் ஒலியுண்டாதல்; to patter as rain. *3.* கறி முதலியன குழைந்து நீராய் விடுதல் *(வின்.);* to become watery as vegetable, curries. *4.* எதிர்ப் பேச்சு (வாதம்) முதலியவற்றால் தளர்ச்சி யடைதல் *(யாழ்ப்.);* to be discomfited, dispirited in controversy or in public speaking.

ம. சளியுக.

*[சுள் → சள் → சள்ளல் = சேறு. சளசள = சேறாயிருக்குந் தன்மையையுணர்த்தும் ஒலிக்குறிப்புச்சொல். சளசளத்தல் = குழைதல், நெகிழ்தல், ஒழுகுதல், சதை தளர்தல், சோர்வான தன்மையில் பேச்சு வெளிப்படுதல்.]*

**சளசளவெனல்** *šaḷa-šaḷa-v-eṉal,* பெ. (n.) சளசளெனல் பார்க்க; see *šaḷašaḷenal.* "சளசள வென மழைத் தாரை கான்றன" *(கம்பரா. திருவவ.46).*

*[சளசள + எனல்]*

**சளசளெனல்** *šaḷa-šaḷ-eṉal,* பெ. (n.). *1.* அலப்புதற் குறிப்பு ; onom. expr. of babbling. *2.* நீர்வீழ்ச்சி மழை முதலியவற்றால் உண்டாம் ஒலிக்குறிப்பு *(பிங்.)* splashing, pattering as of rain.

க. சளமள;

Mar. saḷasaḷa ṇēm

*[சளசள + எனல்]*

**சளப்பு[1]-தல்** *šaḷappu-, 5* செ.கு.வி. (v.i.) அலப்புதல் *(கொ.வ.);* to babble, prate.

*[அல் → அலை → அலம்பு. அலம்புதல் = அசைதல், அசைத்தல், அசைந்து ஒலித்தல். அலம் (த.வி.) → அலப்பு (பி.வி.) அலப்புதல் = நாவசைத்தல், பேசுதல். அலப்பு → சலப்பு → சளப்பு-]*

**சளப்பு[2]-தல்** *šaḷappu-, 5* செ.குன்றாவி. (v.t.) குழப்புதல் *(சங்.அக.);* to confuse; confound.

*[அலப்பு → சலப்பு → சலிப்பு → சளப்பு = வீண்பேச்சுப் பேசுதல், பிதற்றுதல், குழப்புதல்]*

**சளபுள-த்தல்** *šaḷa-puḷa-, 11* செ.கு.வி. (v.i.) *1.* ஒலித்தல் *(யாழ்ப்.);* to splash. *2.* மனங் கலங்குதல்; to be disconcerted, abashed. *3.* ஆற்றல் முதலியன குறைதல் ; to be reduced in power, wealth. *4.* குழப்பமாயிருத்தல் *(இ.வ.);* to be in utter confusion.

*[சள + புள-,]*

**சளம்[1]** *šaḷam,* பெ. (n.) துன்பம்; pain, distress. "மறலி கொடுபோகுஞ் சளமது தவிர" *(திருப்பு. 584).*

*[சள் → சளம்]*

த. சளம் → Skt. cala.

**சளம்[2]** *šaḷam,* பெ. (n.) *1.* ஏய்ப்பு, வஞ்சனை *(யாழ்.அக.);* deceit, fraud. *2.* சீற்றம், கொடுவெறி *(வின்.);* fury.

*[சள் → சளம் = கடுஞ்சினம்]*

**சளம்பம்** *šaḷambam,* பெ. (n.) சட்டை வகை; a kind of coat. "தோன்முழுச் சளம்ப மீதலம்பவே" *(தக்கயாகப். 369).*

*[சள் → சள → சளம்பம் = நெகிழ்ச்சியான அமைப்புள்ள ஆடை]*

**சளவட்டை** *šaḷavaṭṭai,* பெ. (n.) *சரவட்டை (யாழ்ப்.) பார்க்க;* see *šaravaṭṭai.*

*[சாவட்டை → சரவட்டை → சளவட்டை]*

**சளன்** *šaḷaṉ,* பெ. (n.) *ஏய்ப்பன், வஞ்சகன்;* deceitful person. "*காமச் சளன் செய்த கன்மத்தை*" *(பிரபோத. 6:38).*

*[சளம் → சளன்]*

த. சளம் → Skt. chala

**சளாரெனல்** *šaḷār-eṉal,* பெ. (n.) *ஓர் ஒலிக்குறிப்பு;* onom. expr. of splashing.

*[சளார் + எனல்]*

**சளி**[1] *šaḷi,* பெ. (n.) *1. குளிர்ச்சி ;* cold, chillness. "*சளி கொள் சந்தின்*" *(சீவக. 1693). 2. நீர்க்கோவை;* catarrh. *3. மூக்குச்சளி;* mucus blown out of the nose. "*மூக்குக்குட் சளியிளையோடும்*" *(திருப்பு. 90).* '*சளிபிடித்ததோ சனிபிடித்ததோ*' *(பழ.). 4. கோழை (வின்.);* phlegm. *5. பிசின் (தைலவ.);* resin.

ம. சளி; க., து. சளி, சலி; தெ. சலி, சலும்பு

*[தண் → சண் → சள் → சளி]*

**சளி**[2]**-த்தல்** *šaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *சளிநோய் கொள்ளுதல் (வின்.);* to catch cold.

ம. சளியுக (சேறாதல்)

*[சளி*[1] *→ சளி*[2]*-]*

**சளி**[3]**-த்தல்** *šaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *1. புளித்தல்;* to become stale and sour. *2. பதனழிதல் (வின்.);* to grow mouldy as food, as liquors in incipient fermentation; to be soaked too much; to rot. *3. சழி -, 2. பார்க்க;* see *šaḻi-.* '*அவனுக்கு உடம்பு சளித்துப் போயிற்று*' *(உ.வ.).*

ம. சளிக்கு; க. சளிய (பதனழிந்த தன்மை)

*[சழி → சளி]*

**சளிசிந்து-தல்** *šaḷi-šindu-,* 5 செ.கு.வி. (v.i.) *சளியை மூக்கிலிருந்து வெளியேற்றுதல்;* to blow out the nose.

*[சளி + சிந்து-,]*

**சளிசுரம்** *šaḷi-šuram,* பெ. (n.) *குளிர்காய்ச்சல்;* ague.

க. சளிச்வர

*[சளி + சுரம். சுள் → சுர் → சுரம் = காய்ச்சல்]*

த. சுரம் → Skt. jvara

**சளிப்பு**[1] *šaḷippu,* பெ. (n.) *1. பதனழிகை;* sourness. *2. ஊளைச்சதைப் பிடிக்கை;* flabbiness.

*[சளி*[3] *→ சளிப்பு]*

**சளிப்பு**[2] *šaḷippu,* பெ. (n.) நீர்க்கோவை *(வின்.);* catarrh.

தெ. த்ஜலுபு

*[சளி → சளிப்பு]*

**சளு-த்தல்** *šaḷu-,* 4 செ.கு.வி. (v.i.) *சேறாதல்;* to become muddy.

ம. சளியுக.

*[சுள் → சள் → சளு-,]*

**சளுக்கன்**[1] *šaḷukkaṉ,* பெ. (n.) சளுக்குவேந்தன் *பார்க்க;* see *šaḷukku-vēndaṉ.*

*[சளுக்கு → சளுக்கன்]*

**சளுக்கன்**[2] *šaḷukkaṉ,* பெ. (n.) *பகட்டாரவாரமிக்கவன் (இடம்பக்காரன்) (வின்.);* vain, foppish man. '*சளுக்கன் தனக்குச் சத்துரு சவளிக்காரனுக்கு மித்துரு*' *(பழ.).*

*[தளுக்கன் → சளுக்கன்]*

**சளுக்கி**[1] *šaḷukki,* பெ. (n.) சளுக்குவேந்தன் *பார்க்க;* see *šaḷukku-vendaṉ.* "*திங்களின் வழிவரு சளுக்கி*" (தெ.க.தொ.3, 66).

*[சளுக்கியன் → சளுக்கி]*

**சளுக்கி**[2] *šaḷukki,* பெ. (n.) *நெல்வகை;* kind of paddy.

**சளுக்கியன்** *šaḷukkiyaṉ,* பெ. (n.) சளுக்குவேந்தன் *பார்க்க;* see *šaḷukku-vēndaṉ.*

*[சாளுக்கியன் → சளுக்கியன்]*

**சளுக்கு** *šaḷukku,* பெ. (n.) *1. பகட்டாரவாரம்;* foppery. *2. செருக்கு (வின்.);* conceit, presumption.

*[தளுக்கு → சளுக்கு]*

த. சளுக்கு → U. cālak.

**சளுக்குவேந்தன்** *šaḷukku-vēndaṉ,* பெ. (n.) *தக்காணநாட்டை ஆண்ட சாளுக்கியவரசன் (பிங்.);* Chāḷuka king of the Deccan.

*[சளுக்கு + வேந்தன்]*

**சளுகம்** *šaḷugam,* பெ. (n.) அட்டை (திவா.); leech.

*[சலம் → சலகம் → சலுகம் → சளுகம். நீரில் வாழ்வது]*

சளுகம் → Skt. jalūkā

**சளுவுவாயன்** *šaḷuvu-vāyaṉ,* பெ. (n.) சள்ளு வாயன் (யாழ்ப். அக.) பார்க்க; see *šaḷḷu-vāyaṉ.*

*[சள்ளுவாயன் → சளுவுவாயன்]*

**சளை-த்தல்** *šaḷai-,* 4 செ.கு.வி. (v.i.) தளர்தல், சோர்தல் (உ.வ); to grow tired, become weary.

*[சள் → சளை → சளைத்தல்]*

**சற்று**[1] *šaṟṟu,* பெ. (n.) 1. சிறுக்கம், சிறிதளவு; trifle. "சற்றெனு மருங்குல்" (சூடா.10,30). 2. எளிமை; ease, facility. "இவ்வுருவமாயினும் பெறல் சற்றல" (வைராக். சத. 16.).

*[சிறு → (சிற்று) → சற்று]*

**சற்று**[2] *šaṟṟu,* கு.வி.எ. (adv.) 1. சிறிது; little. 2. சிறிதளவில்; a little, somewhat, a little while. "சற்றேயுந் தாமறிவில்" (தேவா. 190. 10).

*[சிறு → (சிற்று) → சற்று]*

**சற்றும்** *šaṟṟum,* கு.வி.எ. (adv.) கொஞ்சங் கூட, அறவே; even a little. எனக்குப் பாகற்காய் சற்றும் பிடிக்காது.

*[சற்று → சற்றும்]*

**சற்றுமம்** *šaṟṟumam,* பெ. (n.) புளியம் புறணி (புளியம்பழத்தின் தோல்); tamarind shell (சா.அக.).

**சற்றைக்கொருதரம்** *šaṟṟai-k-koru-daram,* வி.எ. (adv.) சிறிதுநேரத்துக்கு ஒருமுறை; quite frequently, often. அவர் சற்றைக்கொரு தரம் திரும்பித் திரும்பிப் பார்க்கிறார்.

**சறடு** *šaṟaḍu,* பெ. (n.) அழுக்கு (மூ.அ); dirt.

*[கசடு → சகடு → சறடு]*

**சறணி** *šaṟaṇi,* பெ. (n.) கீல்; winge (யாழ்ப்.).

**சறாம்பு-தல்** *šaṟāmbu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பேணாதிருத்தல்; to neglect. "சறாம்பி யிருக்கையாய் உடம்பைப் பேணாதிருக்கை யென்னுதல்" (ஈடு, 4:8:4).

**சறுக்கல்** *šaṟukkal,* பெ. (n.) 1. வழுக்கல்; slipperiness, slipping. 2. வழுக்கலிடம் (உ.வ.); slippery place. 3. கலிங்கு (இ.வ.) calingula.

*[சறுக்கு → சறுக்கல்]*

**சறுக்கல்வேலை** *šaṟukkal-vēlai,* பெ. (n.) சுவரிலிருந்து விழும் நீரைச் சாக்கடையிற் செல்லவிடுவதாகிய ஒருவகைக் கட்டுமான வேலை (C.E.M); apron, a construction which conducts the drip on a wall into a gutter.

*[சறுக்கல் + வேலை]*

**சறுக்கு**[1]**-தல்** *šaṟukku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வழுக்குதல்; to slip or slide. 'ஆனைக்கும் அடிசறுக்கும்' (உ.வ.). 2. வழுவுதல் (வின்.); to go astray. 3. செயல் நழுவுதல்; to slip out of hand, as an affair. 4. உராய்ந்துசெல்லுதல் (வின்.); to skim, graze.

ம. சறுக்கு; க. சரகு; தெ., பட. சாரு

*[சருக்கு → சறுக்கு-,]*

**சறுக்கு**[2] *šaṟukku,* பெ. (n.) 1. வழுக்குகை (வின்.); slipping, sliding. 2. சறுக்குக்கட்டை பார்க்க; see *šaṟuku-k-kaṭṭai.* 3. நழுவுவகை (வின்.); fall in circumstances; failure. 4. நெம்புதடி; block or roller put under a log or other heavy thing to facilitate its motion. 5. சாக்குப்போக்கு (இ.வ.); subterfuge, pretext, excuse. 6. தடை (இ.வ.); obstacle, hindrance.

க. சரகு; தெ. சாரு; பட. சாரிகெ

*[சருக்கு → சறுக்கு]*

**சறுக்குக்கட்டை** *šaṟukku-k-kaṭṭai,* பெ. (n.) 1. தேர்ச்செலவை வழிப்படுத்துங் கட்டை; inclined plane set before the front wheels of a car to regulate its course. 2. ஆப்பு (C.E.M); wedge.

*[சறுக்கு + கட்டை. குட்டு → குட்டை; குட்டை → கட்டை= உயரக்குறைவு, அகலக் குறைவு, நீளக்குறைவு]*

**சறுக்குப்பாறைவிளையாட்டு** *šaṟukku-p-pāṟai-viḷaiyāṭṭu,* பெ. (n.) சரிவான பாறையின்மேல் பக்கத்தில் அமர்ந்து கீழ்நோக்கி வழுக்கி விளையாடும் சிறுவர் விளையாட்டு; sliding.

மறுவ. வழுக்குப் பாறை விளையாட்டு

*[சறுக்கு + பாறை + விளையாட்டு]*

**சறுக்குமரம்** *šarukku-maram,* பெ. (n.) 1. பந்தய வழுக்குமரம்; greased pole, slippery post for climbing, as in games. 2. சறுக்கிவிழும் விளையாட்டுப்பலகை; sliding bar, in gymnastics. 3. சறுக்குக்கட்டை[1] பார்க்க; see *šarukku-k-kattai*[1].

[சறுக்கு + மரம்]

**சறுக்கை** *šarukkai,* பெ. (n.) மதகு (W.G); surplus-weir, sluice, flood-gate.

[சறுக்கு → சறுக்கை]

**சறுகு-தல்** *šarugu-,* 5 செ.கு.வி. (v.i.) நழுவுதல்; to slip, slide, to fail. "காரியஞ் சறுகிப் போயிற்று" (இ.வ.).

[சறு → சறுகு-,]

**சறுதாகம்** *šarudāgam,* பெ. (n.) வேங்கை மரம்; Indian kino tree - Pterocarpus marsupium (சா.அக.).

**சறுதாசம்** *šarudāsam,* பெ. (n.) சறுதாகம் பார்க்க; see *šarudāgam.*

**சறுதாவிகம்** *šaru-dāvigam,* பெ. (n.) பூவரசு; portia tree - Thespesia populnae (சா.அக.).

**சறுவாவி** *šaru-vāvi,* பெ. (n.) செங்கடுக்காய்; a red variety of galnut - Terminalia chebula (சா.அக.).

**சறுவானுகம்** *šaruvānugam,* பெ. (n.) சிவதை; jalap - Ipomaea turpethum (சா.அக.).

**சறை**[1] *šarai,* பெ. (n.) தாழ்வு (ஈடு. 4.8.4.); lowness, inferiority.

[சறுக்குதல் = வழுக்குதல். உயரத்தினின்று தாழ நழுவுதல், தாழ்வு, சறு → சறை]

**சறை**[2] *šarai,* பெ. (n.) சறைமணி (ஈடு. 4.8.4); பார்க்க; see *sarai-mani.*

[அறைதல் = ஒலித்தல் அறை → சறை]

**சறைணி** *šaraini,* பெ. (n.) தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்தில் வழக்கிலிருந்த ஓர் அளவை (முகத்தல் அளவை); kind of measure of capacity at Tañjāvūr district, Kumbakōnam taluk. "திருவாளிக்கு குரவின்னு குலட்டினைக்கு கால் சறைணியும் விதனா னக்கு வடத்துக்கு கால் சறைணியும்" (த. மரா. செப்பேடுகள் - 50: 2-68).

[சறு → சறை → சறைணி]

**சறைமணி** *šarāi-mani,* பெ. (n.) ஆநிரைகள் ஓசையைக்கேட்டு உடன்வருகைக்காக இடையர் அரையிற்கட்டி ஒலிப்பிக்கும் மணி (ஈடு, 4. 8. 4): herdsman's tinkling girdle, at the sound of which cows follow him to their stall.

[அறைதல் = ஒலித்தல். அறை → சறை + மணி. முள் → முட்டு = சிறியது. முட்டுகள் = சிறு பொருட்கள். முள் → (மள்) → மண் → மணி = சிறியது]

**சறையினான்** *šaraiyinān,* பெ. (n.) உடம்பைப் பேணாதவன்; one who neglects his person; slovenly fellow. 'சறையினார் கவராத தளிர்நிறத்தால்' (திவ். திருவாய். 4. 8: 4).

[சறை → சறையினான்]

**சன்மலி**[1] *šanmali,* பெ. (n.) இலவு; red cotton. "சன்மலி முட் டைத்துச் சோர்வான்' (சேதுபு. தனுக்கோ. 14).

[சுல் - சிவத்தற் கருத்துவேர். சுல் → சல் → சன் + மலி]

**சன்மலி**[2] *šanmali,* பெ. (n.) உயிர்கட்குத் துன்பஞ் செய்வோரை முள்தைக்குமாறு செய்து துன்புறுத்தும் நிரையம் (நரகம்) (சேதுபு. தனுக்கோ. 3); a hell where ruthless people who never scruple to torment animals are tortured.

[சுல் - குத்தற்கருத்துவேர். சுல் → சல் → சன்மலி]

**சன்னக்கம்பி** *šanna-k-kambi,* பெ. (n.) 1. மெல்லியக்கம்பி; thin-wire. 2. ஆடையின் சிறுகரைக்கோடு; fine border, as of a cloth.

[சன்னம் + கம்பி]

**சன்னக்காரணை** *šanna-k-kāranai,* பெ. (n.) வெட்டிவேர்; cuscus root - Andropogon aromaticus alias Amuricatus (சா.அக.).

**சன்னக்காரை** *šanna-k-kārai,* பெ. (n.) கைக்கு மெதுவாகும்படி நன்றாயரைக்கப்பட்ட சுண்ணாம்பு; fine plaster.

க. சண்ணகாரெ

[சன்னம் + காரை]

**சன்னக்கீற்றுரூபாய்** *šanna-k-kīrru-rūbāy,* பெ. (n.) *பழைய காசு வகை (சரவண. பணவிடு 63);* an ancient coin.

*[சன்னம் + கீறு + ரூபாய். உருவம் → ரூபம் → ரூபா → ரூபாய்]*

**சன்னக்கூனி** *šanna-k-kūni,* பெ. (n.) கூனியிறால் *(பதார்த்த, 930);* a common shrimp.

*[சன்னம் + கூனி]*

**சன்னக்கெண்டை[1]** *šanna-k-kendai,* பெ. (n.) *மீன்வகை (பதார்த்த. 918);* a species of small barbus.

*[சன்னம் + கெண்டை]*



சன்னக்கெண்டை மீன்

**சன்னக்கெண்டை[2]** *šanna-k-kendai,* பெ. (n.). *பொடிச்சரிகைக் கம்பி;* fine braid of lace.

*[சன்னம் + கெண்டை]*

**சன்னகம்** *šannagam,* பெ. (n.) *பூங்கருவி என்னும் படைக்கலம் (பிங்.);* a weapon.

**சன்னகா** *šannagā,* பெ. (n.) நேர்வாளம்; croton seed - Croton tigilium *(சா.அக.).*

**சன்னச்சம்பா** *šanna-c-cambā,* பெ. (n.) *ஆடவை கடக மாதங்களில் விதைத்து ஆறு மாதத்தில் விளையும் நெல்வகை;* a kind of small šampā paddy sown in July-August and maturing in six months *(செ.அக.).*

*க. சண்ணநெல்லு*

*[சன்னம் + சம்பா]*

**சன்னச்சம்பான்** *šanna-c-campān,* பெ. (n.) *குதிரைவகை (அசுவசா. 152.);* a species of horse.

**சன்னசாலம்** *šanna-šālam,* பெ. (n.) சன்னசாலைக் கடுகு (மலை.) பார்க்க; see *šanna-šālai-k-kadugu.*

**சன்னசாலை** *šanna-šālai,* பெ. (n.) சன்னசாலைக் கடுகு (வின்.) பார்க்க; see *šanna-šālai-k-kadugu.*

**சன்னசாலைக்கடுகு** *šanna-calai-k-kadugu,* பெ. (n.) வெண்கடுகு (வின்.); white-mustard.

*[சன்னசாலை + கடுகு]*

**சன்னசிலம்புரி** *šanna-šilam-buri,* பெ. (n.) *புடைவை வகை (யாழ். அக.);* a kind of saree.

*[சன்னம் + சிலம்புரி]*

**சன்னஞ்சன்னமாக** *šannañ-jannam-āga,* கு.வி.எ. (adv.) *சிறிதுசிறிதாக;* little by little, piece-meal. கடனைச் சன்னஞ்சன்னமாகக் கொடுத்தான் *(இவ.)*

*[சன்னம் + சன்னம் + ஆக]*

**சன்னத்திப்பிலி** *šanna-t-tippili,* பெ. (n.) *அரிசித் திப்பிலி;* long-pepper of a thin species as opposed to ஆனைத்திப்பிலி *(சா.அக.).*

*[சன்னம் + திப்பிலி]*

**சன்னத்தும்பை** *šanna-t-tumbai,* பெ. (n.) தும்பை வகை (L.); fascicled minute - leaved white dead nettle shrub.

*[சன்னம் + தும்பை]*

**சன்னத்துருக்குவேம்பு** *šanna-t-turukku-vēmbu,* பெ. (n.) வேம்புவகை (L.); globular-flowered neem.

*[சன்னத்துருக்கு + வேம்பு]*

**சன்னத்துவரை** *šanna-t-tuvarai,* பெ. (n.) ஆற்றுப்பூவரசு (L.); river portia.

*[சன்னம் + துவரை]*

**சன்னநூல்** *šanna-nūl,* பெ. (n.) மெல்லிதான நூல்; fine yārn, opp. to mutuku-nūl.

*[சன்னம் + நூல்]*

**சன்னப்புட்டாணி** *šanna-p-puttāni,* பெ. (n.) மகளிர் புடைவை வகை (இவ.); a kind of saree.

*[சன்னம் + புட்டாணி]*

**சன்னப்பொடி** *šanna-p-podi,* பெ. (n.) *1. சிறு பொடி;* small particles. *2. பொன்துகள்;* gold dust *(சேரநா.).*

*ம. சன்னப் பொடி*

*[சன்னம் + பொடி. புள் → பொள் → பொட்டு = சிறியது, சிற்றளவு. பொள் → பொடி]*

**சன்னபின்னம்** *sannapinnam*, பெ. (n.) சின்னபின்னம்; pieces, shreds. "சன்ன பின்னமாய் நொறுக்கி" (கொண்டல் விடு. 187).

*[சின்னபின்னம் → சன்னப்பின்னம்]*

**சன்னம்**[1] *sannam*, பெ. (n.) வெள்ளைநிறம்; white colour.

*[சுள் → சுண் → சுண்ணம் = நீறு, சுண்ணாம்பு, வெள்ளை. சுண்ணம் → சுன்னம் → சன்னம் = வெள்ளை]*

**சன்னம்**[2] *sannam*, பெ. (n.) 1. நுண்மை; minuteness, smallness. 2. நேர்மை (வின்.); fineness. 3. பொடி மணிக்கல் (உ.வ.); precious stone of small size. 4. நுண்ணியபொடி (பிங்.); small particles, as filings of gold and silver. "சன்னமாகி வெண்சாம்பரி னாயின" (உபதேசகா. சிவவிரத. 174). 5. சிறிய வெடிகுண்டு (வின்); small shot. 6. மெல்லியதாய் அரைக்கப்பட்ட காரை (இ.வ.); fine plaster. 7. மறை பொருள்; covery hits, hidden meaning. 'அவன் வைத்த சன்னம் எனக்குத் தெரியும்' (இ.வ.); 8. குரலிழைவு; thin timbre. 'குரல் சன்னமாயிருக்கிறது' (உ.வ.).

ம. சன்னம், க., தெ. சன்ன.

*[சல் → சல் → சன்னம்]*

**சன்னம்வை**[1]**-த்தல்** *sanna-vai-*, 4 செ.குன்றாவி. (v.i.). வெள்ளை வைத்தல் (இ.வ.); to plaster nicely, as a wall.

*[சன்னம் + வை-,]*

**சன்னம்வை**[2]**-த்தல்** *sanna-vai-*, 4 செ.குவி. (v.i.). 1. சிறிய மணிகளைப் பதித்தல்; to inset fine gems as in ornaments. 2. அழகாய்ப் பேசுதல்; to talk nicely and neatly. 3. பேச்சில் சூழ்ச்சிகளைக் காட்டுதல்; to be cunning in speech. அவன் சன்னம் வைத்துப் பேசுகிறான் (இ.வ).

*[சன்னம்[2] + வை-,]*

**சன்னமணிவலை** *sanna-mani-valai*, பெ. (n.) அடிவலையிற் கட்டப்பெற்ற மிகச்சிறிய மணிகளையுடைய வலை (மீனவ.); a kind fishing net with small bells.

*[சன்னம் + மணி + வலை]*

**சன்னமல்லி** *sanna-malli*, பெ. (n.) ஊசிமல்லிகை; needle jasmine - Jasminum rigidum (சா.அக.).

*[சன்ன(ம்) + மல்லி]*

**சன்னல்பின்னல்** *sannal-pinnal*, பெ. (n.) சிக்கல்; entanglement, intricacy, confusion.

*[சன்னல் + பின்னல். எதுகை நோக்கி வந்த மரபிணை மொழி]*

**சன்னவடம்** *sanna-vadam*, பெ. (n.) மெல்லிய சரடுகளால் திரிக்கப்பட்ட நீண்ட பொன் மாலை; a kind of gold garland.

*[சன்னம் + வடம்]*

**சன்னவாழைப்பூ** *sanna-vālai-p-pū*, பெ. (n.) மகளிர் புடைவை வகை; a kind of saree.

*[சன்னம் + வாழைப் பூ]*

**சன்னவிசிறி** *sanna-visiri*, பெ. (n.) மகளிர் புடைவை வகை; a kind of saree (செ.அக.).

*[சன்னம் + விசிறி]*

**சன்னவீரம்** *sanna-vīram*, பெ. (n.) ஒரு வகை வெற்றி மாலை; a garland indicative of victory. "சன்ன வீரம் திருமார்பில் வில்லிலக" (பதினொ. திருக்கைலாயஞா-19).

*[சன்னம் + வீரம்]*

**சன்னவோரா** *sanna-vōrā*, பெ. (n.) இரு கண்களும் ஒரே பக்கத்திலுள்ள சிறு கடல்மீன் வகை; a flat-fish, Tuthis, as having both eyes on one side.

*[சன்னம் + ஓரா]*

**சன்னாக்கூனி** *sanna-k-kūni*, பெ. (n.) சன்னக்கூனி பார்க்க; see *sanna-kūni*.

**சன்னிகணாயன்** *sanniganāyan*, பெ. (n.) சன்னிநாயகம் (வின்.) பார்க்க; see *sanniṅāyagam*.

**சன்னிகுன்மம்** *sanni-kunmam*, பெ. (n.) சூலை நோய்வகை (R); convulsive fits.

*[சன்னி + குன்மம்]*

**சன்னிநாயகம்** *sanni-nāyagam*, பெ. (n.). 1. தும்பை (மலை.); white dead nettle. 2. கருஞ்சீரகம் (வின்.); black cumin.

*[சன்னி + நாயகம்]*

**சன்னிநாயன்** *sanni-nāyan*, பெ. (n.) சன்னி நாயகம் (வின்.) பார்க்க; see *sanni-nāyagam*.

*[சன்னிநாயகம் → சன்னிநாயன்]*

**சன்னிமீட்டான்** *sanni-mīttān*, பெ. (n.) மூஞ்சுறு; grey musk shrew - Indian musk rat.

**சன்னியம்** *šanniyam,* பெ. (n.) மரமஞ்சள் (யாழ்அக); tree turmeric.

**சன்னை**[1] *šannai,* பெ. (n.) தென்னைமரம்; coconut tree (சாஅக.).

ம. சன்னமிரி; க. சன்ன

**சன்னை**[2] *šannai,* பெ. (n.) 1. தேரின் உலுக்கு மரம் (யாழ்ப்.); timber used as a lever to help the movement of temple car. 2. ஒருவகைப் பெருமுரசு (இ.வ.); a large temple drum .

க. சன்னெ

**சன்னைகொன்னை** *šannai-konnai,* பெ. (n.). திருத்தமற்றபேச்சு (இ.வ.); unrefined speech.

*[சன்னை + கொன்னை. எதுகை நோக்கி வந்த மரபிணைமொழி]*

**சன்னைசயிக்கினை** *šannai-cayikkinai,* பெ. (n.) சாடைமாடை (மதுரகவி.47); hint.

*[சன்னை + சயிக்கினை. மோனை நோக்கி வந்த மரபிணைமொழி]*

**சன்னைசாடை** *šannai-šādai,* பெ. (n.) மறை பொருள், கமுக்கம்; secrecy.

*[சன்னை + சாடை. சாய் → சாள் → சாடு → சாடை]*

**சனக்கிரம்புள்** *šannakkiram-pul,* பெ. (n.) ஆவாரை; tanner's cassia - Cassia auriculata (சாஅக.).

**சனகந்தம்** *šanagandam,* பெ. (n.) வசம்பு (மலை.); sweet-flag.

**சனகபோகிதம்** *šanaga-pōgidam,* பெ. (n.) சிற்றரத்தை; smaller galangal -Alpinia galanga (சாஅக.).

**சனகம்** *šanagam,* பெ. (n.) புளியாரை (மலை.); yellow wood-sorrel.

**சனகிப்பூடு** *šanagi-p-pūdu,* பெ. (n.) நெய்ச்சிட்டிப் பூடு; round-leaved tadda - Grewia orbiculata.

மறுவ. சீதாசெங்கழுநீர்.

**சனகிப்பூண்டு** *šanagi-p-pūndu,* பெ. (n.) எருமை நாக்கிப் பூண்டு, செடி வகை (பாலவா. 346); buffalo-tongue milk - hedge herb, Onosma bracteatum.

*[சாணாக்கி + பூண்டு → சணகிப்பூண்டு → சனகிப்பூண்டு]*

**சனசித்திரம்** *šana-šittiram,* பெ. (n.) புளியாரை (யாழ்அக.); yellow wood-sorrel.

**சனம்பா** *šanambā,* பெ. (n.) சந்தனமரம்; sandal wood - Santanum album (சாஅக.).

*[சந்தனம் → சனம → சனம்பா]*

**சனமாலி** *šana-māli,* பெ. (n.) இலவு; silk cotton tree.

*[சன்மலி → சனமாலி]*

**சனமாவியம்** *šana-māviyam,* பெ. (n.) ஆலமரம்; banyan tree - Ficus bengalensis (சா. அக.).

**சனன்மாலி** *šananmāli,* பெ. (n.) சதகுப்பி (மலை.) பார்க்க; see *šada-kuppi.*

**சனனசாலம்** *šanana-šālam,* பெ. (n.)வெண்கடுகு; white mustard - Brassica alba (சாஅக.).

மறுவ. ஐயவி

*[சன்னம் = வெள்ளை. சன்னம் → சனனம் + சாலம்]*

**சனனமாலி** *šanan-māli,* பெ. (n.) சதகுப்பி பார்க்க; see *šada-kuppi* (சாஅக.).

*[சனன்மாலி → சனனமாலி]*

**சனனி** *šanani,* பெ. (n.) ஒருவகை மல்லிகை; a species of jasmine (சாஅக.).

**சனாசனம்** *šanāšanam,* பெ. (n.) கோனாய் (யாழ். அக.); wolf.

**சனாவு** *šanāvu,* பெ. (n.) கையாந்தகரை; eclipse plant - Eclypta prostrata (சாஅக.).

**சனிகை** *šanigai,* பெ. (n.) பெண்; a girl or woman (சாஅக.).

*[கன்னிகை → சன்னிகை → சனிகை]*

**சனியன்** *šaniyan,* பெ. (n.) குத்தும் படைக்கல வகை; bayonet.

*[சுல் → சல் → சன் → சனியன்]*

**சனிவளையம்** *šani-valayam,* பெ. (n.) மகளிரணியும் காதணிவகை (பரவ.); a kind of ear-ornament worn by women.

*[சனி + வளையம்]*

**சனுகம்** *šanugam,* பெ. (n.) மிளகு (மலை.); pepper.

**சனை** *šanai,* பெ. (n.) ஓமம்; Indian dill - Carum copticum (சாஅக.).

# சா

**சா**[1] *cā / šā*, 'ச'கர மெய்யும் 'ஆ'கார உயிரும் இணைந்த உயிர்மெய்யெழுத்து; the syllable formed by adding the long vowel ā to the consonant 'c' / 'š'.

*[ச் + ஆ]*

**சா**[2]**-தல்** *šā-, 19* செ.கு.வி. (v.i.) ஒன்றிற்காக வருத்திக்கொள்ளுதல்; ஒருவருக்காகத் துன்பப்படுதல்; to torture oneself something; suffer for someone. பணம், பணம் என்று ஏன் சாகிறாய்!

*[சாய் → சா-,]*

**சா**[3]**-தல்** *šā-, 19* செ.கு.வி. (v.i.) *1.* இறத்தல்; to die, to decease, to depart from life, to cease to live, to expire. *"சாதலி னின்னாத தில்லை" (குறள், 230). 2.* பயிர் முதலியன கெட்டுப்போதல்; to be spoiled or blighted, as crops. 'பயிர் தண்ணீரில்லாமற் சாகிறது' (உ.வ.). 3. சோர்தல்; to be exhausted. கைகால் செத்துப் போயின. 4. ஒன்றிற்காகப் பெருவிருப்பம் கொண்டிருத்தல்; to do, have great desire. பணத்திற்காகச் சாகின்ற அவன் ஒழுங்காக உண்ணவும் மாட்டான். 5. உடலுறுப்பு செயலிழத்தல்; to lose, or decay as of limbs. இரண்டு நாள் காய்ச்சலில் நாக்குச் செத்துவிட்டது.

மறுவ. உயிர் நீத்தல், மடிதல்

ம. சாகுக. சாவுக; க. சாய், சாயு; தெ. சச்சு, சா, சாவ்; து. சைபுனி; பட. சாயி; குட. சாள், சாவ்; பர். சய்; கட. சய், சய்; கோண்., மால. சைஆன; பிரா. ககி, சைஆன, சாய், சவெ; குவி. கைய்; Ice. deyja; Dan. do; Scot. dee; E. die, starve; O.E. steorfan.

*[சாய் = சாய்தல், சாய்ந்து விழுதல். சாய் → சா]*

**சா**[4] *šā*, பெ. (n.) முதன்மைவினையின் தன்மை மிகுதிப்படுவதை உணர்த்தும் துணைவினை; an auxiliary to indicate that the action of the main verb is greatly intensified. அப்பா திட்டுவாரோ என்று அஞ்சிச் சாகிறாள்.

**சா**[5] *šā*, பெ. (n.) சாவு பார்க்க; see *šāvu*.

*[சாய் → சா]*

**சா**[6] *šā*, பெ. (n.) வட்டக்கோட்டின் ஒரு பகுதியின் இருமுனைகளையும் சேர்க்கும் கோடு; chord of an arc; sine of an arc.

*[சாய் → சா]*

**சாக்கட்டை** *šākkaṭṭai*, பெ. (n.) கும்பாதிரி மரம் (L.); lac tree.

*[சாய் + கட்டை]*

**சாக்கடை**[1] *šākkaḍai*, பெ. (n.) சாய்கடை பார்க்க; see *šāy-kaḍai*. "சாக்கடைக்குள் நரிக்குட்டி" (இராமநா. உயுத். 43).

ம. சாக்கட; U. sāqit

*[சாய்கடை → சாக்கடை (வே.க. 232) = வட்டமாகவுள்ள அங்கணம் (சலதாரை). ஒ.நோ. சூல் → சால் → சலாகம் = அங்கணம். சாலுதல் = சாய்தல். கடை = இடம்]*

**சாக்கடை**[2] *šākkaḍai*, பெ. (n.) சேறு (யாழ். அக.); mire.

மறுவ. சள்ளல்

*[சாய்கடை → சாக்கடை]*

**சாக்கண்ணன்** *šā-k-kaṇṇaṉ*, பெ. (n.) ஒற்றைக் கண்ணன்; one eyed person (சேரநா.).

ம. சாக்கண்ணன்

*[சாய் + கண்ணன்]*

**சாக்கணவாய்** *šā-k-kaṇavāy*, பெ. (n.) ஆழ்கடலில் காணப்படும் முள்ளில்லாத மீன் (மீனவ.); a kind of sea fish.

*[ஆழ்க்கணவாய் → ஆக்கணவாய் → சாக்கணவாய்]*



**சாக்கா-த்தல்** *šā-k-kā-*, 4 செ.கு.வி. (v.i.) **இறப்போர்க்கு அருகிருந்து உதவுதல்** (யாழ்ப்.); to wait on a dying person, affording necessary help.

*[சா + கா-,]*

**சாக்காட்டு-தல்** *šā-k-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *சாக்கா-* (யாழ்ப்.) பார்க்க.; see *šā-k-kā.*

*[சா + காட்டு-,]*

**சாக்காட்டுப்பறை** *šākkāṭṭu-p-paṟai*, பெ. (n.) *சாப்பறை* (புறநா. 194, உரை); funeral drum.

*[சாக்காடு + பறை]*

**சாக்காட்டுமரம்** *šākkāṭṭu-maram*, பெ. (n.) **இடி, மின்னல் இவற்றால் தாக்குண்டு காய்ந்த மரம்** (இ.வ.); a kind of tree.

*[சாக்காடு + மரம். சாக்காடு = இறப்பு, அழிவு]*

**சாக்காடு** *šākkāḍu*, பெ. (n.) 1. *சாவு*; death. "உறங்குவது போலுஞ் சாக்காடு" *(குறள்.339).* 2. **கெடுதி**; ruin, injury. 'மரம் சாக்காடா யிருக்கிறது' *(இ.வ.).*

*[சா → சாக்காடு. (வே.க. 234). கடு → காடு = மிகுதி. ஒ.நோ. வெள்ளக்காடு]*

**சாக்காலம்** *šākkālam*, பெ. (n.) இறக்கும் நேரம்; time of death.

ம. சாக்காலம்

*[சா(கும்) + காலம். கோல் → கால் = கம்பு, தூண். தூண்போல் உடம்பைத்தாங்கும் உறுப்பு. கால்போல் நீண்டுசெல்லும் நீர்ப்போக்கு. நீண்டியங்கும் காற்று. நீண்டு தொடரும் காலம். கால் → காலம்]*

**சாக்காளி** *šākkāḷi*, பெ. (n.) **தன்னுருவை மறைத்துக் கிடக்கும் புழுவகை**; a kind of worm which conceals its form by a membranous cover made by itself. "சாக்காளி என்னும் புழுப்போல வேறேபூண்டு கிடக்கையாலே" *(திருவுந்தி. 24, உரை).*

*[சாக்கு + ஆள் – சாக்காள் → சாக்காளி]*

**சாக்கி** *šākki*, பெ. (n.) சக்கிமுக்கிக்கல்; flint. "சதி கொண்ட சாக்கி யெரியின் வடிவாம்" *(திருமந். 1653).*

ம. சாக்கி

*[சக்கி → சாக்கி]*

**சாக்கிடு-தல்** *šākkiḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) **தலைக்கீடாகக் கொள்ளுதல், பொய்க்காரணம் கூறுதல்**; to make a false excuse, allege as a pretext. கோயிலைச் சாக்கிட்டு வயிறு வளர்க்கிறான்.

*[சாக்கு + இடு-,]*

**சாக்கிபாக்கி** *šākki-pākki*, பெ. (n.) **கொசுறு** (உ.வ.); extra quantity obtained into the bargain.

*[சாக்கி + பாக்கி. எதுகைநோக்கி வந்த மரபிணைமொழி]*

**சாக்கு[1]-தல்** *šākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) **வளர்த்தல், வளர்த்து உருவாக்குதல்**; to bring up, to foster, to rear, to nurse, to keep, to protect, to preserve (கருநா.).

க., தெ., பட. சாகு

*[சால் → சால்கு → சாக்கு-,]*

**சாக்கு[2]** *šākku*, பெ. (n.) **இறப்பு**; death (சேரநா.).

ம. சாக்கு

*[சா → சாக்கு]*

*சாக்கு[3] பார்க்க*

**சாக்கு[3]** *šākku*, பெ. (n.) போலிக் காரணம்; pretence excuse, pretext. 'வேலையைச் செய்யாமல் சாக்குச் சொல்லுகிறான்' *(உ.வ.).*

தெ., க. சாக; பட. சாகி

*[சா = சாவு. சா → சாக்கு. ம. சாக்கு (இறப்பு) ம. சாக்கும் போக்கும் (இறப்பும் புகலிடமும்). இவ்விணைமொழி மலையாளத்தில் சாக்கும் போக்கும் இல்லாத அல்லது கெட்ட என்று ஆளப்படுவது இதன் பொருளைத் தெளிவுபடுத்துதல் காண்க. இறப்பு அல்லது பிற புகலிடம் இல்லாத இக்கட்டான நிலையை உணர்த்தும் இவ் விணைமொழி இறப்பு அல்லது ஏதாவது புகலிடத்தைப் பற்றிப் பொய்யாகக் கூறும் வீண் காரணத்தையும் குறித்தது. பின் இவ்விணை மொழியின் முதற் சொல்லே இப் பொருளைக் குறித்தது.]*

**சாக்கு[4]** *šākku*, பெ. (n.) பொன் (வின்.); gold.

*[சரக்கு = வணிகப் பண்டம். சரக்கு → சாக்கு]*

**சாக்கு**[5] *šākku,* பெ. (n.) *1.* கோணிப்பை; gunny bag. *2.* சட்டைப்பை (வின்.); pocket in a garment.

OE. sace; L., GK. sakkos; Heb. saq. Port. sac; Du. zak. E. sack, sake.

*[சணப்பு → சாப்பு → சாக்கு]*

**சாக்குக்கணவாய்** *šākku-k-kaṇavāy,* பெ. (n.) நத்தைவகை (வின்.); species of squid, octopus vulgaris.

*[சாக்கு + கணவாய்]*

**சாக்குச்சுருளி** *šākku-c-curuḷi,* பெ. (n.) சாக்கில் சுருட்டி வைத்திருப்பது (இவ.); that which is rolled up in a sack.

*[சாக்கு[5] + சுருளி]*

**சாக்குடி** *šākkuḍi,* பெ. (n.) கால்வழியில்லாமல் அழியும் குடும்பம்; extinction of a family, extinct family.

ம. சாக்குடி

*[சா + குடி. குடி = இல், குடியிருப்பு. குடிகள் = நாட்டிற் குடியிருக்கும் மக்கள்]*

**சாக்குப்போக்கு** *šākku-p-pōkku,* பெ. (n.) சாக்கு[3] பார்க்க; see *šākku*[3].

ம. சாக்கும் போக்கும் (இறப்போ புகலிடமோ இல்லாத)

*[சாக்கு + போக்கு. மரபிணைமொழி]*

**சாக்குமாண்டி** *šākku-māṇḍi.* பெ. (n.) மண்ணையன் (யாழ்ப்.); dullard, fool.

*[சாக்கு + மாண்டி]*

எளிய பொருட்களை உவமைப்படுத்தித் திட்டும் அடிப்படையில் எளியதும், முரட்டமைப்பைக் கொண்டதுமான சாக்கு, திட்டுவதற்கு ஆளப்பட்டுள்ளது. ஒ.நோ. சாணிப்பிணம்.

மொண்ணை → மண்ணை = அறிவுக் கூர்மை இல்லாதவன். மண்ணை → மாண்டி. சாக்குமாண்டி மரபினை மொழி.

**சாக்குரல்** *šā-k-kural,* பெ. (n.) பிறர் இறப்பைக் குறிப்பிக்கும் ஆந்தையோசை; screech of owl, believed to portend death.

*[சா + குரல்]*

**சாக்குரற்பறவை** *šākkuraṟ-paṟavai,* பெ. (n.) சாக்குருவி பார்க்க; see *šākkuruvi.*

*[சாக்குரல் + பறவை]*

**சாக்குருவி** *šā-k-kuruvi,* பெ. (n.) தீச்செயல் நிகழுதற்கு அறிகுறியான ஓசையுடையதென்று கருதப்படும் ஆந்தை வகை; screech - owl, a species of Athene, whose cry is believed to portend death.

ம. சாகுருவி

*[சா + குருவி]*



சாக்குருவி

**சாக்குழந்தை** *šā-k-kulandai,* பெ. (n.) சாப்பிள்ளை பார்க்க; see *šā-p-piḷḷai.*

ம. சாகுருளி

*[சா + குழந்தை]*

**சாக்குறி** *šā-k-kuṟi,* பெ. (n.) இறக்கும் அறிகுறி; omen or sign of death.

*[சா + குறி]*

**சாக்கை**[1] *šākkai,* பெ. (n.) *1.* கணியன் (நிமித்திகன்) (சூடா.); astrologer. *2.* அரசரது கருமத்தலைவன் (பிங்.); king's ministerial officer. *3.* போற்றாளி, தலைமைப்பூசகர் (சங்.அக.); head priest.

*[சால் → சால்கை → சாக்கை]*

**சாக்கை**[2] *šākkai,* பெ. (n.) சாக்கைக் கூத்தாடுபவன்; a dancer. "மறைக்காட்டுக் கணவதியான திருவெள்ளறை சாக்கைக்குப் பங்கு ஒன்றரையும்' *(தெ.க.தொ. 2:66).*

*[சால் = நிறைவு. சால் → சால்கை → சாக்கை = பெருமைகளைச் சொல்லி (புகழ்ந்து) மகிழச் செய்தல், புகழ்மொழிச் சொல்லி ஆடும் கூத்து]*

சாக்கை → Skt. šlāgh

**சாக்கைக்கூத்து** *šākkai-k-kūttu,* பெ. (n.) **ஆடவர் ஆடும்கூத்து வகையுளொன்று;** a dance performed by šākkiyan. "...திருவிழாவிற்கு வந்து சாக்கைக்கூத்து ஆடக்கடவ அடலையூர் சாக்கைக்கு மூன்றங்கம் ஆட நிவந்தம்" *(தெ.க. தொ. 19:171)*

ம. சாக்கயான், சாய்பார் கூத்து

*[சாக்கையன் + கூத்து]*

சாக்கைக்கூத்து ஆடுபவர், சாக்கையர் எனப் பட்டனர். இவர்கள் ஆரியக்கூத்தும் ஆடும் திறமை பெற்றிருந்தனர். இக்கூத்து, தமிழகத்துச் சிவன்கோயில்களில் ஆடப்பெற்றது. சாக்கைக்கூத்து மூன்று பகுதியாகவும், ஏழு பிரிவாகவும் ஆடப்பெறும். *(கல்அக.)*

சாக்கையர் பெயர், வெற்றிக்காலத்தும் அமைதிக்காலத்தும் அரசர்க்குக் கூத்தாடி மகிழ்ச்சியை யுண்டுபண்ணும் வேத்தியற் கூத்தரைக் குறிக்கும்.

**சாக்கையன்** *šākkaiyan,* பெ. (n.) 1. **சாக்கைக் கூத்து நிகழ்த்தும் ஓர் இனத்தான்;** member of a caste, whose profession in ancient times was to sing and dance in temples and palaces. "கூத்தச்சாக்கை யனாடலின்" *(சிலப். 28: 77).* 2. **கணியன்** (சூடா.); astrologer.

*[சாக்கை → சாக்கையன்]*

**சாக்கொட்டு** *šā-k-kottu,* பெ. (n.) சாவுக்கொட்டு பார்க்க; see *šāvu-k-kottu.*

*[சா + கொட்டு]*

**சாக்கோட்டி** *šā-k-kōtti,* பெ. (n.) **கருவுற்ற மகளிர்க்கு வரும் மசக்கை** (இ.வ.); sickness of a pregnant woman.

**சாகக்கீரை** *šāga-k-kīrai,* பெ. (n.) **சிறுகீரை;** garden spinach - Amaranthus campestris.

**சாகச்சூம்பி** *šāga-c-cūmbi,* பெ. (n.) **மிக மெலிந்தவன்** (யாழ்அக.); emaciated person.

*[சா + சூம்பு – சாச்சூம்பு → சாகச்சூம்பி. சும்பு → சூம்பு → சூம்பி. 'இ' வி.முத.ஈறு]*

**சாகச்சோம்பி** *šāga-c-cōmbi,* பெ. (n.) சாகச்சூம்பி பார்க்க (யாழ்அக.); see *šāga-c-cūmbi.*

*[சாகச்சூம்பி → சாகச்சோம்பி]*

**சாகசம்**[1] *šāgašam,* பெ. (n.) **சிறுகீரை;** gardem greens - amaranthus campestris.

**சாகசம்**[2] *šāgašam,* பெ. (n.) **ஊர்க்குருவி;** sparrow.

*[சகடம் – வளையவளைய சுற்றும் பறவை. சகடம் → சகசம் → சாகசம்]*

**சாகசன்** *šāgašan,* பெ. (n.) **துணிவுள்ளவன்** (இ.வ.); a clever, brave man.

*[சாகசம் → சாகசன்]*

**சாகசி** *šāgaši,* பெ. (n.) **மருதோன்றி;** nail-dye - Lawsonia alba *(சா.அக.).*

**சாகசிரேட்டம்** *šāga-širēttam,* பெ. (n.) **பாலை மரம்;** milk-tree - Dichopsis ellipticus *(சா.அக.).*

**சாகஞ்சம்** *šāgañjam,* பெ. (n.) **சிறுதேக்கு;** fire-creeper-Cleodendron serratum alias C. Javanicum *(சா.அக.).*

**சாகடி-த்தல்** *šāgadi-,* 4 செ.கு.வி. (v.i.) **கொல்லுதல், உயிரைப் போக்குதல்);** to kill, render lifeless. 'பணத்துக்காக அவனைச் சாகடித்தான்' *(உ.வ.).*

ம. சாடிப்பு (தூக்குத்தண்டனை)

*[சா + சாக + அடி = சாகடி-,]*

**சாகத்தீவு** *šāga-t-tīvu,* பெ. (n.) **தேக்கந்தீவு;** an annular continent, named after a tree called šāgam or teak. "சாகத்தீவினுளுறைபவர்" *(கம்பரா. படைக்கா-9).*

*[சாகம் + தீவு]*

**சாகதுண்டம்** *šāga-tundam,* பெ. (n.) **அகில்** (அக.நி.); eagle-wood.

**சாகநாற்றனம்** *šāga-nārranam,* பெ. (n.) **ஒரு வகைப் பொன்;** a kind of gold *(சா.அக.).*

**சாகபில்லகம்** *šāga-pillagam,* பெ. (n.) சாகபிலவங்கம் பார்க்க; see *šāga-pilavangam.*

*[சாகபிலவங்கம் → சாகபில்லகம்]*

**சாகபிலவங்கம்** *šāga-pilavangam,* பெ. (n.) **கத்தரிச்செடி;** brinjal plant - Solanum melongena.

**சாகம்**[1] *šāgam,* பெ. (n.) 1. **அசோகு;** asoka tree - Saraca indica. 2. **அரசமரம்;** peepul tree. Ficus religiosa. 3. **மராமரம்;** saul tree - Aporo sa lindleyane *(சா.அக.).*

**சாகம்**[2] *šāgam,* பெ. (n.) வெள்ளாடு (பிங்.); he goat.

மறுவ. வெள்ளை, வற்காலி, கொச்சை

**சாகம்**[3] *šāgam,* பெ. (n.) தேனீ (சூடா.); bee.

*[சரகம் → சாகம்]*

**சாகம்**[4] *šāgam,* பெ. (n.) 1. இலைக்கறி (பிங்.); potherbs, greens. 2. இலை; leaf. "அருந் தவத்தின் சாகந்தழைத்து" (கம்பரா. நகரப். 75). 3. சிறுகீரை (பிங்.); a species of amaranth. 4. தேக்கு (பிங்); teak. 5. தாழை (மலை.); fragrant screwpine. 6. சாகத்தீவு பார்க்க; see *šāga-t-tīvu.* 7. இலைச்சாறு (யாழ்ப்.); juice of leaves.

ம. சாகம்

*[சாகை → சாகம்]*

**சாகம்**[5] *šāgam,* பெ. (n.) வில்; bow. "சாகம் பொன்வரையாக" (தேவா. 1033, 6).

*[ஆவம் → சாவம் → சாபம் = வில். சாபம் → சாவம் → சாகம்]*

**சாகமூலி** *šāga-mūli,* பெ. (n.) 1. கொல்லன் கோவை; snake caper - Bryonia epigaea. 2. ஊமத்தை; dhatura - Ohatura stramonium.

*[சா → சாக (வைக்கும்) + மூலி]*

**சாகயம்** *šāgayam,* பெ. (n.) தேக்கு; teak-wood Tectona grandis (சா.அக.).

*[சாகம் → சாகயம்]*

**சாகரக்கொடி** šāgara-k-koḍi, பெ. (n.) சுழற்சி; bonduct nut (lit); ocean round pebble - Caesalpinia bonduc.

*[சாகரம் + கொடி]*

**சாகரக்கோடி** *šāgara-k-kōḍi,* பெ. (n.) கடற் சங்கு; sea-chank.

*[சாகரம் + கோடி. கோடு → கோடி]*

**சாகரகுலம்** *šāgara-kulam,* பெ. (n.) உப்புரவர் குலம்; a caste of Uppuravar.

*[சாகரம் + குலம்]*

**சாகரத்தினம்** *šāgarattiṉam,* பெ. (n.) ஒரு வகை முல்லை; a species of jasmine (சா.அக.).

**சாகரப்பன்றி** *šāgara-p-paṉṟi,* பெ. (n.) பிலாச்சை மீன்; frog-fish - Ostrachian genus.

**சாகரம்**[1] *šāgaram,* பெ. (n.) யானையின் காது வழி ஒழுகும் மதநீர்; sporting, wantoning (கழ.அக.).

**சாகரம்**[2] *šāgaram,* பெ. (n.) 1. வாரி; ocean. 2. பதினாயிரங் கோடி (வின்.); ten quadrillions.

*[சக்கரம் = வளைவு, வட்டம். சக்கரம் → சகரம் → சாகரம் = நிலவுலகத்தை வளையச் சூழ்ந்திருப்பது]*

சகர என்னும் பெயருடைய ஞாயிற்றுக் குலத்து அரசன் நஞ்சுடன் பிறந்தவன் (ச-கர) என்றும் அவருக்குக் கெலினி என்னும் மனைவியிடம் அசமஞ்ச என்னும் மகனும் சுமதி என்னும் மனைவியிடம் அறுபதினாயிரம் மக்களும் பிறந்தனர் என்றும், கபிலர் என்னும் முனிவர் சாவத்தினால் அவ்வறுபதினாயிர மக்களும் சாம்பலாயினர் என்றும், அவர்களைத் தூய்மைபடுத்த பகீரதன் தன் பத்தியினால் கங்கையை மேலுலகத்திலிருந்து இறங்கச் செய்தான் என்றும், அந்நீர் சென்று சேரும் கடலுக்குத் தன்முன்னோர் பெயரை (சகர) இட்டார் என்றும் தொன்மக் (புராண) கதை அடிப்படையில் சாகரம் என்னும் சொற்கு மூலம் கூறுவது எத்துணையும் பொருந்தா.

மற்றொரு தொன்மக்கதை சகரனின் மக்கள் நிலத்தைத் தோண்டிக் கடலை உருவாக்கினர் எனக் கூறுகிறது. நிலவுலகத்தின் முக்காற் பங்கிற்கும் மேலாகப் பரந்திருப்பது ஒரு சிலரால் தோண்டி உருவாக்கப்பட்டது என்பதும் பொருந்தாது.

இச் சொற்கு இனச்சொற்கள் மேலையாரிய மொழிகளில் இல்லாமை இது இந் நாட்டு இயன்மொழிச்சொல் என்பதை உறுதிப் படுத்துதல் காண்க.

அகன்று விரிந்த கடல் பின்னர் பேரெண்ணிக்கையைக் குறித்தது.

**சாகரி** *šāgari,* பெ. (n.) ஒரு வகைப்பண் (யாழ்.அக.); a melody type.

**சாகலா** *šāgalā,* பெ. (n.) ஆடுதின்னாப் பாலை; worm-killer - Aristolochia bracteata.

**சாகலாசனார்** *šāgalāšaṉār,* பெ. (n.) அகநானூறு 16,270ஆவது பாடல்களின் ஆசிரியர்; šangam poet, author of Aganāṉūṟu 16, 270.

**சாகவில்வம்** *šāgavilvam,* பெ. (n.) சேம்பு (மலை.); cocco, a coarse herb.

**சாகளம்** *šāgaḷam,* பெ. (n.) வெள்ளாடு (உரி.நி.); goat.

**சாகாகுவஞ்சம்** *šāgā-kuvañjam,* பெ. (n.) தேக்கு; teak-wood - Tectona grandis (சா.அக.).

**சாகாங்கம்** *šāgāṅgam,* பெ. (n.) மிளகு (மலை.); pepper.

**சாகாச்சாவு** *šāgā-c-cāvu,* பெ. (n.) சாவாச்சாவு பார்க்க; see *šāvā-c-cāvu.*

ம. சாகாச்சாவு

*[சாவாச்சாவு → சாகாச்சாவு]*

**சாகாசிவை** *šāgācivai,* பெ. (n.) விழுது (யாழ்.அக.); aerial root.

**சாகாடச்சிற்றன்** *šāgāḍa-c-ciṟṟaṉ,* பெ. (n.) ஆநிரை மீட்கும் கரந்தைப்போரில் இறந்த வீரன்; a hero, who lost his life in a battle of restore buffalo herd. "கொங்கத்து எழுமாத்தூர் இருந்து வாழுஞ் சாகாடச் சிற்றன் மீகொன்றை" (தெ.க.தொ. 1971/57).

பல்லவன் கம்பவருமனின் ஆறாம் ஆண்டு; கி.பி. 9ஆம் நூற்றாண்டு. ஈரோடு வட்டத்தில் உள்ளது எழுமாத்தூர். கொங்குவேளாளரில் காடை குலத்தவரில், சாகாடை, பனங்காடை என்ற இரு வகையினர் உண்டு. கொங்கு நாட்டிலிருந்து மீகொன்றை நாட்டிற்கு விருந்திற்கு வந்த வேளையில், எருமை மந்தையை விரட்டிச் சென்றாரைத் தொடர்ந்து சென்று சண்டையிட்டு, எருமைகளை மீட்டு மாண்டான்.

**சாகாடு** *šāgāḍu,* பெ. (n.) 1. பெரும்பாலும் வேளாளர் பணிகளுக்கும் பெருஞ்சுமைகளை ஏற்றிச் செல்வதற்கும் எருது இழுத்துச் செல்லும் வலுவான இரண்டு சக்கரங்களை யுடைய வண்டி; strong two-wheeled, ox drawn vehicle used in farming and for heavy goods. "பீலிபெய் சாகாடு மச்சிறும்" (குறள், 476). 2. வண்டியுருளை; cart wheel. "அச்சுடைச் சாகாட்டாரம்" (புறநா. 256). 3. உருள் நாண்மீன் (திவா.); the fourth nakṣatra.

*[சகடம் → சகடு → சகடி = வண்டி. சகடு → சாகாடு (வே.க. 241)]*

**சாகாதமூலி** *šāgāda-mūli,* பெ. (n.) 1. வேம்பு; margosa tree. 2. சீந்திற்கொடி; moon creeper - Tinospora cordifolia.

*[சாவாத → சாகாத + மூலி]*

**சாகாதுண்டம்**[1] *šāgā-tuṇḍam,* பெ. (n.) சாகதுண்டம் பார்க்க; see *šāgatuṇḍam.*

*[சாகதுண்டம் → சாகாதுண்டம்]*

**சாகாதுண்டம்**[2] *šāgā-tuṇḍam,* பெ. (n.) சீந்தில் (வின்.); gulancha.

**சாகாதுயில்** *šāgā-duyil,* பெ. (n.) அகில்; eagle wood.

**சாகாமருந்து** *šāgā-marundu,* பெ. (n.) 1. தேவ அமிழ்தம் (இறவாமல் காப்பது); ambrosia, as preventing death. 2. ஒரு வகை மூலிகை (யாழ்.அக.); a medicinal shrub.

*[சா + ஆ + மருந்து → சாவா மருந்து → சாகா மருந்து]*

**சாகாமிருகம்** *šāgā-mirugam,* பெ. (n.) (மரக்கிளையில் வாழும்) குரங்கு (உரி.நி.); monkey, as living in branches.

*[சாகைமிருகம் → சாகாமிருகம்]*

Skt. mṛṅga → த. மிருகம்

**சாகாமூலி** *šāgā-mūli,* பெ. (n.) சீந்தில் (மலை.); gulancha.

ம. சாகாமூலி

*[சா + ஆ + மூலி – சாவாமூலி → சாகாமூலி]*

**சாகாமூவாப்பேருரு** *šāgā-mūvā-p-pēruru,* பெ. (n.) திருநுந்தாவிளக்கெரிப்பதற்கு வேண்டும் நெய்யின்பொருட்டு, என்றும் இளமையுடன் ஒரு தொகையுள்ளனவாகக் கோயிற்குவிடப் படும் ஆடுமாடுகள்; cattle of a fixed number endowed to provide a continuous supply of ghee for temple lamps. "சாகாமூவாப் பேருருவாக அட்டின பசு இருபத்தஞ்சு" (T.A.S. I, 14).

*[சா + ஆ + மூ + ஆ + பேருரு → சாவா மூவாப் பேருரு → சாகாமூவாப் பேருரு. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**சாகாரம்** *šāgāram,* பெ. (n.) 'சா' என்னும் தமிழ் வண்ணமாலை எழுத்து; the letter 'sā'.

மறுவ. சகர ஆகாரம்

*[சா+காரம். உயிர்மெய்யெழுத்துகளுள், நெடிலுக்குத் தனிச்சாரியை இல்லை. இருப்பினும், 'காரம்' அவ்வப்போது ஆளப்பெறுகிறது. சகர ஆகாரம் என்பதே, இலக்கணப்படி சரி]*

*சகரஆகாரம் பார்க்க*

**சாகாவுப்புச்செய்நீர்** *śāgā-v-uppu-c-ceynīr,* பெ. (n.) நஞ்சக்கொடியினுப்போடு, ஏனைய மருந்துச் சரக்குகளைச் சேர்த்துப் பின்பு வடிக்கப்பெறும் மூலிகை நீர்; the salt extracted from the navel-string after mixing it with other ingredients.

*[சாகாவுப்பு + செய்நீர்]*

**சாகி** *śāgi,* பெ. (n.) *1.* மரம் (சூடா.); tree. *2.* சிற்றீஞ்சு; shiny-leaved dwarf date. *3.* திராய் (மலை.); Indian chickweed.

*[அகைதல் = தளிர்தல். அகை → சகை → சாகை → சாகி]*

**சாகிலியன்** *śāgiliyaṉ,* பெ. (n.) சிறுகீரை; garden spinach - Amaranthus campestris.

*[சாகி → சாகிலியன்]*

**சாகினி**[1] *śāgiṉi,* பெ. (n.) வெள்ளாடு; goat (கழ.அக.).

*[சாகம் → சாகினி]*

**சாகினி**[2] *śāgiṉi,* பெ. (n.) *1.* சிறுகீரை (திவா.); a species of amaranth. *2.* பூங்கீரை; cocks comb greens. *3.* சேம்பு (பிங்.); cocco.

**சாகினி**[3] *śāgiṉi,* பெ. (n.) தீத்தேவதை (சங்.அக.); an evil spirit.

*[சாவு → சாவினி → சாகினி]*

**சாகினியம்** *śāgiṉiyam,* பெ. (n.) சேம்பு; a vegetable plant with esculent leaves known as Indian kales - Caladium nymphaefolium alias colocasia antiquorum (சா.அக.).

*[சாகனி → சாகினியம்]*

**சாகு-தல்** *śāgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* செல்லுதல்; to go, to move forward, to proceed. *2.* தொடர்தல், முன்னேறுதல்; to proceed or advance (கருநா).

க., தெ. சாகு

*[சல் → சலகு → சாகு-,]*

**சாகுடி** *śāguḍi,* பெ. (n.) வழித்தோன்றல் முடிந்த குடும்பம் (நாஞ்.); extinct family.

ம. சாகுடி

*[சா + குடி]*

**சாகுபடி** *śāgu-paḍi,* பெ. (n.) விளைச்சல், பயிர் வளர்ப்பு; cultivation. கடும்புயலால் நெல் சாகுபடி குறைந்துவிட்டது.

தெ. சாகுபடி (sāgubaḍi); க. து., சாகுவளி

**சாகுபடிக்கணக்கு** *śāgupaḍi-k-kaṇakku,* பெ. (n.) பயிர் செய்யப்பட்ட நிலங்களின் கணக்கு (R.T.); cultivation account.

*[சாகுபடி + கணக்கு]*

**சாகுபடிக்காலம்** *śāgupaḍi-k-kālam,* பெ. (n.) வேளாண் பணி தொடங்கும் காலம்; the time to commence farming.

க. சாகுவளி கால

*[சாகுபடி + காலம்]*

**சாகுபடிசெய்-தல்** *śāgubaḍi-sey-,* 1 செ.குன்றாவி. (v.t.) பயிர் செய்தல்; to cultivate, to till.

க. சாகுவளி மாடு

*[சாகுபடி + செய்-,]*

**சாகுபடித்திட்டம்** *śāgupaḍi-t-tiṭṭam,* பெ. (n.) *1.* காலநிலை கைகொடுக்கும்போது பயிர் செய்யவேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்ட நிலங்களின் பட்டியல் (R.T.); account, taken by revenue servants at the commencement of the cultivating season, of the holdings intended for cultivation. *2.* பயிரிடுதற்கு ஏற்படும் தோராயச் செலவு; approximate cultivation expenses.

*[சாகுபடி + திட்டம்]*

**சாகுபடிப்பத்திரம்** *śāgupaḍi-p-pattiram,* பெ. (n.) பயிர் செய்யப்படும் நிலங்களின் குத்தகை ஆவணம் (R.T.); lease deed of cultivate land.

*[சாகுபடி + பத்திரம்]*

Skt. பத்திரம் → த. பத்திரம்

**சாகுபடிமுச்சலிக்கை** *śāgupaḍi-muccalikkai,* பெ. (n.) *1.* ஒவ்வொருவரது கையொப்பத்துடனும் அவ்வவர்க்குச் சொந்தமான நிலத்தின் பரப்பளவைக் குறித்துவைக்கும் ஆண்டுக்

*கணக்கு (R.T.);* an annual rent-roll in which the extent of land held by each individual ryot is recorded and his signature taken. *2.* **சாகுபடி செய்வதாக ஒப்புக்கொண்டு நிலத்தின் சொந்தக்காரருக்கு எழுதிக் கொடுக்கும் ஆவணம்;** agreement containing the terms of cultivation executed by a tenant in favour of his land-lord.

*[சாகுபடி + முச்சலிக்கை]*

**சாகுருவி** *šā-kuruvi,* பெ. (n.) சாக்குருவி பார்க்க; see *šā-k-kuruvi.*

*[சா + குருவி]*

**சாகுலி** *šāguli,* பெ. (n.) *ஆவாரை;* tanner's cassia -Cassia curiculata.

**சாகுலிகர்** *šāguligar,* பெ. (n.) *கரையார் (யாழ்.அக.);* fisherman.

**சாகுவளி** *šāguvaḷi,* பெ. (n.) *சாகுபடி;* cultivation, agriculture. "தரிசு பூமிசாகு வளி செய்திருக்க" *(தாசீல்தார் நா. பக். 89).*

க. சாகுவளி

*[சாகுபடி → சாகுவளி]*

**சாகுளி** *šāguḷi,* பெ. (n.) **பண் வகை** *(பரத. ராக. 103);* a specific melody type.

**சாகை**[1] *šāgai,* பெ. (n.) *வாழுமிடம், வீடு;* house, hut, residence, halting-place. "அந்த சாக(சாகை) தான் அவன் இருக்குமிடம்".

தெ. சாக; க. சாக (இடம், அறை)

*[சால் → சாய்கை = படுக்குமிடம், இளைப்பாறுமிடம். சாய்கை → சாகை]*

சாய்கை பார்க்க

**சாகை**[2] *šāgai,* பெ. (n.) *1. மரக்கிளை;* branch of a tree. "சாகைச் சம்பு தன்கீழ்" *(மணிமே. பதி.5). 2.* **கிளைக்குடும்பம்;** branch of a family. *(நாஞ்.), 3.* **கை;** hand. "தளிரோங்கு சாகைகளும் *(கோயிற். பாயி. 6). 4.* **மறையின் உட்பிரிவு;** vedic section. "சாகையாயிர முடையார்" *(தேவா. 199, 1). 5.* **மறை** *(பிங்.);* vēdas. *6.* **எசுர் மறைப்பகுதி;** a portion of yajur vēda.

*[உகு → உகை → அகை. அகைதல் = தளிர்தல், கிளைத்தல். அகை → சகை → சாகை]*

**சாகை**[3] *šāgai,* பெ. (n.) **இலை** *(பிங்.);* leaf.

*[அகை → சகை → சாகை]*

**சாகை**[4] *šāgai,* பெ. (n.) **வட்டில்** *(பிங்.);* cup.

*[சுள் → சாள் → சாளை = வட்டமான குடிசை. சாள் → சாணை = வட்டமான சாணைக்கல். சாளை → சாளையம் = வளையம். சாளை → சாகை]*

**சாகை**[5] *šāgai,* பெ. (n.) **இறப்பு;** death. 'சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றி" *(கந்தரலங். 54).*

*[சா → சாகை. 'கை' தொ.பெ.ஈறு]*

**சாங்கசம்** *šāṅgašam,* பெ. (n.) **சீந்தில்;** gulancha *(சா.அக.).*

*[சாங்கம் → சாங்கசம்]*

**சாங்கடை** *šāṅgaḍai,* பெ. (n.) *சாங்காலம்,* **இறக்குந்தறுவாய்** *(வின்.);* moment of death.

*[சா + கடை. 'கடை' இடம், பொழுது]*

**சாங்கம்**[1] *šāṅgam,* பெ. (n.) *1.* **ஒழுங்கு;** order. *2.* **சங்கொலி;** the sound of a blown chank.

*[சங்கு → சங்கம் = பெருஞ்சங்கு. 'அம்' பெருமைப் பொருள் பின்னொட்டு. சங்கம் → சாங்கம்]*

**சாங்கம்**[2] *šāṅgam,* பெ. (n.) **சங்கச் செய்நஞ்சு** *பாடாணம் (மூ.அ.);* a mineral poison.

*[சங்கம் → சாங்கம்]*

**சாங்கம்**[3] *šāṅgam,* பெ. (n.) **சீந்தில்** *(மலை.);* gulancha.

**சாங்கலிகன்** *šāṅgaligaṉ,* பெ. (n.) **நஞ்சுமுறி மருத்துவன்** *(சங்.அக.);* a doctor who has specialised in curing poison.

**சாங்காலம்** *šāṅgālam,* பெ. (n.) **இறக்குந் தருவாய், சாகுங்காலம்;** the time of death.

*[சா (சாகும்) + காலம்]*

**சாங்கிமம்** *šāṅgimam,* பெ. (n.) **மருத யாழ்த்திற வகை** *(பிங்.);* an ancient secondary melody type of marudam class - musical.

**சாங்கிருதம்** *šāṅgirudam,* பெ. (n.) *சலங்கை (யாழ்.அக.);* tinkler in an anklet.

**சாங்கு** *šāṅgu,* பெ. (n.) **ஒரு வகை அம்பு** *(யாழ்.அக.);* a kind of dart, arrow.

*[சங்கு = முளை. சங்கு → சாங்கு]*

**சாங்குகௌரி** *šāṅgu-gauri,* பெ. (n.) புளி நரளை (மலை.); bristly trifoliate vine.

**சாங்குலம்** *šāṅgulam,* பெ. (n.) நஞ்சு; poison (கழ. அக.).

**சாச்சடங்கு** *šā-c-cadaṅgu,* பெ. (n.) இறப்பில் நிகழ்த்தும் செய்கைகள்; funeral ceremonies, obsequies.

மறுவ. ஈமச்சடங்கு

*[சா + சடங்கு]*

**சாச்சா** *šāccā,* பெ. (n.) குறட்டைப்பருப்பு (வின்.); pulp of the bitter snake-gourd.

**சாச்செலவு** *šā-c-celavu,* பெ. (n.) இறப்புச் சடங்கினை நடத்துவதற்கு ஆகும் செலவு (வின்.); funeral expenses.

*[சா + செலவு]*

**சாசக்கினி** *šāšakkiṉi,* பெ. (n.) சிறுதேக்கு; small teak - Cleodandron Javaulcum (சா.அக.).

**சாசங்கமூலி** *šāsaṅga-mūli,* பெ. (n.) செங்குன்றி; crab's eye; red seed of the plant - abrus precatorius (சா.அக.).

**சாசபுடம்** *šāšapuḍam,* பெ. (n.) ஐவகைத் தாளத் தொன்று (பரத. தாள. 2); a variety of time-measure, one of pañja-tāḷam.

**சாசம்** *šāšam,* பெ. (n.) அசோகு; asoka tree - polyathia longifolia (சா.அக.).

**சாசயாபகம்** *šāsayābagam,* பெ. (n.) சிறுநீலி; small-leaved indigo plant - Indigofera tinctoria (சா.அக.).

**சாசற்புடம்** *šāšaṟ-puḍam,* பெ. (n.) சாசபுடம் (பரத. தாள. 12) பார்க்க; see *šāšapuḍam.*

**சாசனம்**[1] *šāšaṉam,* பெ. (n.) வெண்கடுகு (மலை.); white mustard, as keeping of evil spirits.

**சாசனம்**[2] *šāšaṉam,* பெ. (n.) *1.* இறையில்லாதவூர் (யாழ். அக.); tax-free village. *2.* வலையர்சேரி; fishermen's quarters.

**சாசி**[1] *šāši,* பெ. (n.) கீரைவகை (மலை.); Indian chickweed.

**சாசி**[2] *šāši,* பெ. (n.) முலைப்பால்; mother's milk (செ.அக.).

ம. சாச்சி; தெ. த்சாகி; க. சாசி

**சாசியா** *šāšiyā,* பெ. (n.) அரசு; peepul tree - ficus religiosa (சா.அக.).

**சாசினம்** *šāšiṉam,* பெ. (n.) வெண்கடுகு; white mustard - brassica alba (சா.அக.).

**சாசு** *šāšu,* பெ. (n.) பேய்ப்பீர்க்கு; wild luffa - cucumis acutangulus (சா.அக.).

**சாசுக்கிலகம்** *šāšu-k-kilagam,* பெ. (n.) புளி; tamarind - Tamarindus Indicus (சா.அக.).

**சாசுகம்** *šā-šugam,* பெ. (n.) சிவப்புச் சோளம்; red maize (சா.அக.).

**சாசுலம்** *šā-šulam,* பெ. (n.) கருந்தக்காளி; black tomato (சா.அக.).

**சாசுறு** *šāšuṟu,* பெ. (n.) முந்திரி; cashew-nut plant - Cassuvium pomiferum (சா.அக.).

**சாசைவம்** *šāšaivam,* பெ. (n.) வெள்ளைக் கழற்கொடி; a white species of kaḻaṟ-k-koḍi, bonduct nut - Caesalpinia bonducella (சா.அக.).

**சாஞ்சயம்** *šāñjayam,* பெ. (n.) மிளகு (மலை.); pepper.

**சாகாசிவை** *šāgāšivai,* பெ. (n.) கடலாமணக்கு; sea-side castor plant - Jatropha curcas (சா.அக.).

**சாஞ்சி**[1] *šāñji,* பெ. (n.) நடுவண் இந்தியாவில் போபால் அருகிலுள்ள இடம்; a place in middle India near Bhopal.

இங்குப் புத்தமதத்தின் கலைச்சின்னங்கள் அமைந்துள்ளன. இங்கிருந்து அசோகன் மகன் மகேந்திரன் புத்தமதத்தைப் பரப்ப இலங்கைக்குச் சென்றான்.

**சாஞ்சி**[2] *šāñji,* பெ. (n.) சாஞ்சியம் பார்க்க; see *šāñjiyam.*

**சாஞ்சிதம்** *šāñjidam,* பெ. (n.) பச்சைக்கல்லில் (மரகதம்) ஏற்படும் குற்றங்களுள் ஒன்று; a kind of fault in an emerald.

**சாஞ்சியம்** *šāñjiyam,* பெ. (n.) வெண்பாதிரி; white fragrant trumpet flower - Bignonia chelonoides (சா.அக.).

**சாட்குலி** *šāṭkuli,* பெ. (n.) தசை தின்போன் (பிங்.); flesh-eater.

**சாட்கோல்** *šāṭ-kōl,* பெ. (n.) சாணளவுள்ள கோல் (தொல்.எழுத்து. 147, உரை); span measure.

*[சாண் + கோல்]*

**சாட்டம்**[1] *šāṭṭam,* பெ. (n.) 1. அடிக்கை (இ.வ.); beating. 2. செருக்கு (நாஞ்.); arrogant or autocratic behaviour.

*[சாடு → சாட்டம்]*

**சாட்டம்**[2] *šāṭṭam,* பெ. (n.) சாய்வு; slope. 'அங்கணம் வாட்டஞ் சாட்டமாய் இருக்க வேண்டும்' (உ.வ.).

*[சள் → சடு → சாடு. சாடுதல் =சாய்தல். சாடு → சாட்டம் = சாய்வு. ஒ.நோ. வாள் → வாடு → வாட்டம் = சாய்வு. வாட்டம் சாட்டம் என்பது வழக்கு. அங்கணம் வாட்டசாட்டமாய் இருக்க வேண்டும் என்பர் (மு.தா.226)]*

**சாட்டரணை** *šāṭṭaraṇai,* பெ. (n.) மூக்கொற்றி (மலை.); printed-leaved hogweed.

**சாட்டி**[1] *šāṭṭi,* பெ. (n.) சாட்டை பார்க்க (இ.வ.); see *šāṭṭai.*

*[சவட்டு → சவட்டி → சாட்டி]*

**சாட்டி**[2] *šāṭṭi,* பெ. (n.) 1. அறுவடையானபின் உழாது கிடக்கும் நிலம்; land lying fallow after a crop. 2. பயிரிடுதற்கு உரமிடப்பட்டிருக்கும் நிலம்; land manured for raising crop.

ம. சாட்டிப் பூட்டு

**சாட்டிக்கழி-த்தல்** *šāṭṭi-k-kaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. போக்குச் சொல்லிக் கழித்தல்; to shift off responsibility. 2. சிறிது கொடுத்தல் (வின்.); to give sparingly, distribute scantily.

*[சாட்டி + கழி-,]*

**சாட்டியம்**[1] *šāṭṭiyam,* பெ. (n.) 1. ஏய்ப்பு (திவா); deceit, guile. 2. பொய்; falsewood. 'சாட்டியஞ் சொன்ன சத்தியகோடனும்' (நரிவிருத். 24).

*[சாட்டு + இயம்]*

**சாட்டியம்**[2] *šāṭṭiyam,* பெ. (n.) 1. சடத்தன்மை; inanimateness. 2. மந்தம்; dullness, inactivity. 3. சுரக்குறி (கொ.வ.); symptoms of fever. 4. உடல்வலி (சது.); pain, suffering. 5. விடாப்பிடி (நாஞ்.); obstinacy.

**சாட்டு**[1]**-தல்** *šāṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. பொறுப்பை அல்லது கடமையைப் பிறனிடம் சார்த்துதல்; to transfer as a debt: to assign. 2. ஒருவர் மீது குற்றஞ் சுமத்துதல் (வின்.); to accuse, charge with. 3. தலைக்கீடாகக் கொள்ளுதல்; to allege as a pretext. கோயிலைச் சாட்டி வயிறு வளர்க்கிறான் (வின்.).

தெ. சாடு

*[சார்த்து → சாட்டு. ஒ.நோ. துவர்த்து → துவட்டு (வே.க.235)]*

**சாட்டு**[2]**-தல்** *šāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அடித்தல் (வின்.); to beat or strike.

*[சவட்டுதல் = காலால் மிதித்தல், அடித்தல். சவட்டு' → சாட்டு³]*

**சாட்டு**[3] *šāṭṭu,* பெ. (n.) 1. பிறனிடம் சார்த்துகை (வின்.); assigning, transferring. 2. குற்றப் படுத்துகை; accusing, charging.

*[சாட்டு' → சாட்டு²]*

**சாட்டு**[4] *šāṭṭu,* பெ. (n.) புற்றரை (யாழ்.அக.); meadow, pasture land.

**சாட்டுக்கூடை** *šāṭṭu-k-kūḍai,* பெ. (n.) பெரிய கூடை (யாழ்ப்.); large basket.

*[தாட்டு → சாட்டு + கூடை. தாட்டு = பெரிது]*

**சாட்டுகம்** *šāṭṭugam,* பெ. (n.) சாட்டுவம்² பார்க்க; see *šāṭṭuvam*² (சா.அக.).

*[சாட்டுவம் → சாட்டுகம்]*

**சாட்டுவம்**[1] *šāṭṭuvam,* பெ. (n.) அறுகு; harialli grass.

**சாட்டுவம்**[2] *šāṭṭuvam,* பெ. (n.) வச்சநாபி (வின்.); Nepal aconite.

**சாட்டுவரி** *šāṭṭu-vari,* பெ. (n.) வரிவகை (S.I.I.V. 139); a tax.

*[சாட்டு + வரி]*

**சாட்டுவலம்**[1] *šāṭṭu-valam,* பெ. (n.) 1. பைம்புற்றரை (பிங்.); meadow. 2. அறுகு (மலை.); harialli grass.

*[சாட்டுவம் → சாட்டுவலம்]*

**சாட்டுவலம்**[2] *šāṭṭu-valam,* பெ. (n.) நாவல் (மலை.); common black plum.

**சாட்டுவாய்** *šāṭṭuvāy,* பெ. (n.) தூற்றின பொலியிற் பதருடன் கலந்துள்ள தவசக் குவியல் (இ.வ.); grain found mixed with chaff even after winnowing.

*[சகட்டு → சாட்டு → சாட்டுவாய்]*

**சாட்டுளி** *šāṭṭuḷi,* பெ. (n.) சுறாமீன்களை வேட்டையாடப் பயன்படும் கயிற்றுடன் கூடிய எறியீட்டி (மீனவ.); a kind of javelin.

*[சாட்டு → சாட்டுளி]*

**சாட்டை**[1] *šāṭṭai,* பெ. (n.) 1. கயிற்றை அல்லது தோல்வாரைக் கட்டியதும் அடிக்கப் பயன்படுத்துவதுமான ஒருவகைக் கருவி, 'கசை'; whip, made of cord or leather. 2. கோயில் திருமேனிகள் (மூர்த்திகள்), கண்டி நாட்டதிகாரிகள், இன்னோர் திருமுன் மக்கள் அமைதி உண்டாக்க வேண்டி அடித்து ஒலிக்கச் செய்யும் கிறிச்சுச் சாட்டை (யாழ்ப்.); a large whip cracked before idols and chief officers of the Kandyan country to disperse or silence crowd. 3. பம்பரம் மாட்டுங் கயிறு; string to spin a top. "சாட்டையிற் பம்பர சாலம் போலெலா மாட்டுவான்" (தாயு. ஆசை. 3). 4. மரத்தாற் செய்யப்பட்ட ஒருவகைக் குயக்கருவி (வின்.); a small pallet.

ம. சாட்ட; க. சாடி, சாவடி, சாவுடி; தெ. சாடி; கோத. சாட்

*[சவட்டு → சவட்டை → சாட்டை]*

**சாட்டைக்கயிறு** *šāṭṭai-k-kayiṟu,* பெ. (n.) சாட்டைக்கான கயிறு; whip or whip-cord.

ம. சாட்டக்கயிறு

*[சாட்டை + கயிறு]*

**சாட்டைக்கூடை** *šāṭṭai-k-kūḍai,* பெ. (n.) சாட்டுக்கூடை (இ.வ.) பார்க்க; see *šāṭṭu-k-kūḍai.*

*[சாட்டு + கூடை → சாட்டைக்கூடை]*

**சாட்டைக்கோல்**[1] *šāṭṭai-k-kōl,* பெ. (n.) வார்க்கோல்; whip made from twisted leather-strap.

க. சாடிகோலு

*[சாட்டை + கோல்]*

**சாட்டைக்கோல்**[2] *šāṭṭai-k-kōl,* பெ. (n.) சாட்டையின் கைப்பிடிக்கோல்; the wooden handle of a whip.

ம. சாட்டக்கோல்

*[சாட்டை + கோல்]*



சாட்டைக்கோல்

**சாட்டைவார்** *šāṭṭai-vār,* பெ. (n.) சவுக்கு (கொ.வ.); whip cord, whip.

ம. சாட்டவாரி

*[சாட்டை + வார்]*

**சாடி**[1]**-த்தல்** *šāḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கோள் சொல்லுதல் (வின்.); to slander.

க. சாடிசு; தெ. சாடிஞ்சு; து. சாடி

*[சாடு → சாடி. (வே.க.231)]*

**சாடி**[2]**-த்தல்** *šāḍi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கண்டித்தல் (இ.வ.); to chide, rebuke. 2. நொறுக்குதல் (வின்.); to crush.

*[சாடு → சாடி]*

**சாடி**[2]**-த்தல்** *šāḍi-,* 4 செ.கு.வி. (v.i.) இரு பக்கமும் அசைதல் (யாழ்ப்.); to totter, rock from side to side.

*[சாடு → சாடி-,]*

**சாடி**[3] *šāḍi,* பெ. (n.) 1. கோள்மொழி (பிங்.), பிறரைக் குறித்துக் குற்றம் சொல்லும் பேச்சு; malicious report, slander. 2. பொடி (யாழ். அக.); powder.

தெ. துசாடி; க. சகட, சகடி, சகடெ, சாட, சாடி, சாகடி, சாட, சாடி; Mar. cahāḍ, cahāḍi, cāḍi

*[சாள் → சாடு. சாடுதல் = சாய்தல். சாடு → சாடி = ஒருவனைத் தாக்கிச் சொல்லும் கோட்சொல்]*

**சாடி**[4] *šāḍi,* பெ. (n.) சீலை (பிங்.); cloth, clothing.

ம. சாடி; க. சாடி; Skt. šāḍi; H. šāri

*[சவளி → சாளி → சாடி]*

**சாடி**[5] *šādi,* பெ. (n.) ஆண்மக்கள் தலைமயிர் (யாழ்.அக.); man's hair.

*[சாடு → சாடி]*

**சாடி**[6] *šādi,* பெ. (n.) திப்பிலி (மலை.); long pepper.

**சாடி**[7] *šādi,* பெ. (n.) 1. தெருக் குப்பையைக் கூட்ட உதவும் மாறுவகை (mod.); road-sweep. 2. மணிகளைப் பதிக்கும் உம்மிசம்; socket for setting gems. "ரத்தினங்களை யெல்லாம் சாடியிலே பதித்துக் காட்டுமா போல" (திவ். அமலனாதி7. வியா. பக். 86).

*[சாள் → சாடு. சாடுதல் = சாய்தல். சாடு → சாட்டம் = சாய்வு. சாடு → சாடி = குப்பைகளை ஒருபுறம் ஒதுக்க உதவும் மாறு]*

**சாடி**[8] *šādi,* பெ. (n.) 1. பாண்டவகை; jar. "சாடிமட்டயின்று" (சீவக. 1614). 2. கும்ப ஓரை (திவா.); aquarius of the zodiac.

*[சாள் → சாளி → சாடி]*

*சாளி*[1] பார்க்க

**சாடி**[9] *šādi,* பெ. (n.) 1. ஓர் அளவை (தொல். எழுத்து. 170, உரை); a measure of capacity. 2. உழுசால்; a furrow. "மூரி தவிர முடுக்கு முதுசாடி" (பரிபா. 20, 54).

*[சால் → சாலி → சாளி → சாடி]*

**சாடிக்காரன்**[1] *šādi-k-kāran,* பெ. (n.) மீனின் ஒரு வகை (மீனவ.); a kind of fish.

**சாடிக்காரன்**[2] *šādi-k-kāran,* பெ. (n.) பழி தூற்றுபவன்; slanderer.

க. சாடிகார, சாடிகாற

*[சாடி + காரன்]*

**சாடிகம்** *šādigam,* பெ. (n.) திப்பிலி; long-pepper- Piper longume.

**சாடிகோர்** *šādikōr,* பெ. (n.) புறங்கூறுவோன் (C.G.); talebearer, backbiter (செ.அக.).

Mhr. šādakhōra - Persn. cughalkhōr

*[சாடு → சாடி + காரன் - சாடிக்காரன் → சாடிகோர்]*

**சாடிதவம்** *šādi-davam,* பெ. (n.) கற்கோவை; air -living bryony - Bryonia epigaea (சா.அக.).

**சாடிப்பானை** *šādi-p-pānai,* பெ. (n.) கோலா மீன் பிடிக்கச் செல்வோர் கொண்டு செல்லும் உணவு; a kind of fisherman's food.

*[சாடி + பானை - சாடிப்பானை = சாடிப் பானையில் சமைக்கும் உணவு வகை]*

இது பலநாள் கெடாமலிருக்குமாறுப் பக்குவமாகச் சமைக்கப்பட்டிருக்கும் (மீனவ.).

**சாடிப்பேச்சு** *šādi-p-pēccu,* பெ. (n.) பழி தூற்றுரை; slanderous talk.

க. சாடிமாது, சாடிவாது

*[சாடி + பேச்சு]*

**சாடு**[1]**-தல்** *šādu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அடித்தல்; to beat. 'சாடிக்கொன்றனன் சிலவரை' (கம்பரா. கிங்கிர. 36). 2. மோதுதல்; to fall upon. 'கமுகின் குலைசாடி' (திருக்கோ. 100). 3. துகைத்தல்; to trample. "விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடி" (கலித். 101). 4. குத்திக் கிழித்தல்; to tear open, gore. 'அதனிறஞ் சாடி முரண்டீர்ந்த' (கலித். 52). 5. வடுச்செய்தல்; to scratch. 'கூருகிர் சாடிய மார்பும்' (கலித். 91). 6. ஒடித்தல்; to lop off, break, as branches. "குங்குமத் தடஞ்சினை சாடி" (நைடத. நாட். 4). 5. கொல்லுதல்; to kill, destroy. "சாடியது சிற்சிலவர் தம்மை" (கந்தபு. தகரேறு. 14). 8. கடிதல் (வின்.); to abuse, reprove.

ம. சாடு (குதித்தல்); க. சாடிசு (எறிதல்); து. சாண்டுனி (ஈட்டியை அசைத்தல்); குரு. சாட்காரை (குதித்தல்).

*[சாள் → சாடு (வே.க.231)]*

**சாடு**[2]**-தல்** *šādu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அசைதல்; to shake. 2. ஒரு கட்சிக்குச் சார்பாயிருத்தல்; to favour a party, as in a civil suit. 3. சாய்ந்து நிற்றல்; to lean, overhang, as a tree. 4. சாடி[3] பார்க்க; see *šādi*[3]. 'பட்டம் வாலுக்குச் சாடுகிறது'.

ம. சாடுக; க. சாடிசு; து. சாண்டுனி

*[சாள் → சாடு[2]]*

**சாடு**[3]**-தல்** *šādu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கை கால் எறிதல்; to stretch out, as the arms or legs from lassitude.

**சாடு⁴-தல்** *šāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **குறைகூறிக் கடுமையாகத் தாக்குதல்;** to critisize vehemently, attack verbally. *தமிழுக்கு எதிராகப் பேசுவோரைப் பாவாணர் சாடினார். 2.* **தாவுதல், எகிறுதல்;** to leap, jump over. 'திருடன் மேல் சாடி விழுந்தார்'.

*[சள் → சாள் → சாடு → சாடை = தன்மை, சாயல். சள் → சாள் → சாடு. சாடுதல் = சாய்தல்]*

**சாடு⁵-தல்** *šāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *(கண்ணில் பீளை அதிக அளவில்)* **திரளுதல்;** to collect dirt in the eyes. 'கண்வலியால் பீளை சாடிக் கண்ணைத் திறக்க முடியவில்லை'.

*[சாள் → சாடு]*

**சாடு⁶** *šāḍu,* பெ. (n.) **மணிமுற்றாத சோளம்;** unripe grain of great millet.

ம. சாட; தெ. சவிலெ, சாவி; கூய். சடு

**சாடு⁷** *šāḍu,* பெ. (n.) **கைக்கு இடும் உறை;** glove, gauntlet. 'விரற்சாடு' *(சீவக. 2202, உரை).*

க. சாடு; தெ. த்சாடு

*[சாள் → சாடு]*

**சாடு⁸** *šāḍu,* பெ. (n.) *சாட்டுக்கூடை (யாழ்ப்.)* பார்க்க; see *šāṭṭu-k-kūḍai.*

*[சாட்டுக்கூடை → சாடு]*

**சாடு⁹** *šāḍu,* பெ. (n.) **வண்டி;** cart. "குறுஞ்சாட் டுருளையொடு" *(பெரும்பாண். 188).*

ம. சாடு; க. சகம்; தெ. செகடா; Skt. šagaḍam

*[சகடம் → சகடு → சகடி = வண்டி. சகடு → சாகாடு = வண்டி. சகடு → சாடு (வே.க.115)]*

**சாடுகம்** *šāḍugam,* பெ. (n.) சாடு⁷ (அக.நி) பார்க்க; see *šāḍu⁷.*

*[சாடு → சாடுகம்]*

**சாடுசக்கட்டை** *šāḍu-šakkaṭṭai,* பெ. (n.) **திறமையற்றவ-ன்-ள்** *(நாஞ்.);* a worthless person.

*[சாடு + சக்கட்டை]*

**சாடுமாலி** *šāḍu-māli,* பெ. (n.) சாடுமாறி பார்க்க; see *šāḍu-māṟi.*

*[சாள் → சாடு → சாடுமாலி]*

**சாடுமாறி** *šāḍu-māṟi,* பெ. (n.) *1.* **வீட்டைப் பெருக்கித் தூய்மை செய்பவள்;** woman sweeper. *2.* **கீழ்த்தரமானவ-ன்-ள்** *(இ.வ.);* a mean, despicable person.

க. சாடுமாலி

*[சாடு + மாறி]*

**சாடை¹** *šāḍai,* பெ. (n.) *1.* **சாயல்;** appearance, feature. *தமையனுந் தம்பியும் ஒரு சாடை. 2.* **ஒப்பு;** similarity. *முகம் நிலவு சாடையா யிருக்கிறது. 3.* **போக்கு** *(வின்.);* inclination, tendency, temperament. *4.* **சைகை;** hint, significant, gesture. "சாடை பேசிய வகையாலே" *(திருப்பு. 572). 5.* **மிகச்சிறு அளவு, சிறுக்கம்;** trifle, slightness. 'சாடையால் உப்புக்கூட்டு' *(கொ.வ.).*

தெ. சாட; ம. சாட; க. சாடு, சாடெ; கோத. சாட்; பட. சாடெ

*[சாள் → சாடு. சாடுதல் = சாய்தல். சாடு → சாட்டம் = சாய்வு. சாடு → சாடை (வே.க.)]*

**சாடை²** *šāḍai,* பெ. (n.) சாடி²·-1 (வின்.) பார்க்க; see *šāḍi²-1.*

**சாடைக்காரன்** *šāḍai-k-kāraṉ,* பெ. (n.) **கோட்சொல்வான்** *(வின்.);* tale bearer.

*[சாடை + காரன். காரம் → காரன் = உரியவன், உடையவன்]*

**சாடைபண்ணு-தல்** šāḍai-paṇṇu-, 5 செ.கு.வி. (v.i.) *1.* **சைகை காட்டுதல்;** to make gestures. *2.* **இரக்கம் (தயை) காட்டுதல்** *(வின்.);* to be lenient.

*[சாடை + பண்ணு-,]*

**சாடைமாடையாய்** *šāḍai-māḍai-y-āy,* கு.வி.எ. (adv.) *1.* **குறிப்பாக;** by hint. 'சாடைமாடையாய்ப் பேசுகிறார்' *(கொ. வ.). 2.* **சிறுக** *(இ.வ.);* in a small degree, slightly. *3.* **பார்த்தும் பாராமல்;** without taking serious notice, somewhat indifferently. *அவன் செய்த குற்றத்தைச் சாடைமாடையாய் விட்டுவிட்டார்.*

*[சாடை + மாடை + ஆய். சாடு - சாடை = நேரன்மை, சாயல், ஒப்பு. முள் → மாள் → மாடு → மாடை = சாய்]*

**சாடைமாடையாத்திட்டு-தல்** *šādai-mādaiyāy-t-tiṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *நேரல் முறையில் பழித்தல்;* to slander indirectly.

*[சாடைமாடையாய் + திட்டு-,]*

**சாடைமூட்டு-தல்** *šādai-mūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *சண்டையெழுப்புதல்* (யாழ்ப்.); to sow discord, incite quarrel by tale-bearing.

*[சாடை + மூட்டு-,]*

**சாண்**[1] *šāṇ,* பெ. (n.) *விரல்களை அகல விரித்த நிலையில் சுண்டுவிரல் நுனியிலிருந்து கட்டை விரல் நுனிவரை உள்ள தொலைவு;* a span, the distance between the end of the thumb to the end of the little finger or forefinger - nine inches. "எண் சாணளவா லெடுத்த வுடம்புக்குள்" *(திருமந். 2127).*

ம. சாண்; க. கேண், கேண, கேணு; தெ. சேன; து. கேணு, கேண; குட. சாணி; பட. சாணு; கோத. காண்; துட. கீண்; கொலா. சேன

*[அள் → அண் = பொருந்துதல். அண் → சண் → சாண் = இரு இடங்களுக்கு இடைப்பட்ட அதாவது விரித்த கையின் இருவிரல்நுனி (கட்டைவிரல், சிறுவிரல்) களுக்கிடைப்பட்ட இடைவெளி.]*

சாண் ஒன்பது விரலம் (அங்குலம்) அளவுடையது. 8 நெல் = 1 பெருவிரல், 12 பெருவிரல் = 1 சாண், 2 சாண் = 1 முழம் என்றும் ஒரு நீட்டளவு உண்டு.



சாண்

**சாண்**[2] *šāṇ,* பெ. (n.) *சிறியது;* that which is small. 'சாண்பிள்ளையானாலும் ஆண் பிள்ளை' *(பழ.)*

*[சாண்[1] → சாண்]*

**சாண்கெண்டை** *šāṇ-keṇḍai,* பெ. (n.) *ஒரு சாண் அளவுள்ள கெண்டை மீன்;* a carp-fish about a span in length - barbus chola *(சா.அக.).*

*[சாண்[1] + கெண்டை]*

**சாண்சீலை** *šāṇ-šīlai,* பெ. (n.) *சிறுசீலை* (வின்.); loin cloth.

*[சாண்[2] + சீலை. சீரை → சீலை = துணி]*

**சாண்டு[1]-தல்** *šāṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *குற்றுதல்;* to pound *(சேரநா.).*

ம. சாண்டுக; க. சாடிசு; தெ. சாடின்சு; து. சாண்டுனி

*[சாடு + சாண்டு-,]*

**சாண்டு**[2] *šāṇḍu,* பெ. (n.) 1. *பூப்புநீர்;* menstrual discharge. 2. *விந்து;* semen.

ம. சாண்டு; க., தெ. சாடு

*[சாறு → சாண்டு]*

**சாண்மூலி** *šāṇ-mūli,* பெ. (n.) 1. *சாண் உயரம் வளரும் மூலிகை;* any herbaceous plant growing to the height of a span. 2. *கற்பூரவள்ளி;* camphor creeper - Anisochilus carnosus *(சா.அக.).*

*[சாண்[1] + மூலி]*

**சாணக்கல்** *šāṇa-k-kal,* பெ. (n.) *சாணைக்கல் பார்க்க;* see *šāṇai-k-kal.*

*[சாணைக்கல் → சாணக்கல் (கொ.வ.)]*

**சாணகச்சாறு** *šāṇaga-c-cāṟu,* பெ. (n.) *பால், தயிர், நெய், ஆநீர், சாணம் என்னும் ஆனைந்து பொருள்களின் சேர்க்கை;* the mixer of the five products of cow viz., milk, curd, ghee, urine and dung. "சாணகச் சாற்றோபாதி சுத்தி மாத்திரத்தையே உபசீவித்து" *(ஈடு.4. 1:10).*

ம. சாணகச்சாறு

*[சாணகம் + சாறு]*

**சாணகம்** *šāṇagam,* பெ. (n.) *சாணம்*[1] பார்க்க; see *šāṇam*[1]. "சாணகத்தைக் கொண்டு மெழுகுமளவிலே" *(புறநா. 249, உரை).*

ம. சாணகம். Pkt. chaṇaga

*[சாணம் → சாணகம்]*

**சாணகி** *šāṇagi,* பெ. (n.) *கொத்தான்;* air creeper. leafless creeper - Cassytha filiformis *(சா.அக.).*

**சாணங்கி** *šāṇaṅgi,* பெ. (n.) துளசி (மலை.); sacred basil.

**சாணத்தனம்**[1] *šāṇa-t-taṉam,* பெ. (n.) வசம்பு; sweet flag - Acorus calamus *(சா.அக.).*

*[சணம் → சாணம் + தனம்]*

**சாணத்தனம்**[2] *šāṇa-t-taṉam,* பெ. (n.) பகடி (இராட்.); ribaldry.

தெ. சாணதநமு

*[சாணம் + தனம்]*

**சாணந்தெளி-த்தல்** *šāṇan-teḷi-,* 4 செ.கு.வி. (v.i.) வீடு முதலியவற்றைத் தூய்மை செய்யச் சாணிநீர் தெளித்தல் (கொ.வ.); to sprinkle cow-dung mixed in water, for cleansing.

ம. சாணம் தளிக்க

*[சாணம் + தெளி-த்தல்]*

**சாணம்**[1] *šāṇam,* பெ. (n.) *சாணி;* cow-dung.

ம. சாணம், சாணகம்; க. சகணி; பட. செகணி; Pkt. chāṇaka; Skt. chagaṇa

*[சண்ணுதல் = நீக்குதல். சண் → சாண் → சாணம் = மாட்டுப் பவ்வீ. வடவர் பல்வேறு மலத்தையும் சாணியையும் குறிக்கும் சக்ருத் என்னும் சொல்லினின்று சக்ன் என்றொரு மூலத்தை வலிந்து திரிப்பர் (வ.வ. 145)]*

சாணம் வீட்டைத் துப்புரவு செய்யவும் அடுப்பெரிக்கவும் பயிருக்குரமிடவும் உதவுவது.

**சாணம்**[2] *šāṇam,* பெ. (n.) 1. சாணைக்கல் (சது.) பார்க்க; see *šāṇai-k-kal.* 2. சந்தனக்கல் (பிங்.); stone for grinding sandalwood.

ம. சாணம்

*[சூள் → சாள் → சாளை = வட்டமான குடிசை. சாளை → சாளையம் = வளைவு. சாளை → சாணை = வட்டமான சாணைக்கல். சாணை → சாணம்]*

**சாணம்**[3] *šāṇam,* பெ. (n.) தழும்பு; scar. "சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை" *(மதுரைக். 593).*

*[சதைத்தல் = அடித்தல். சதை → சதைவு = அடி, நெகிழ்ச்சி. சதை → சதைவுகாயம் = உதிரம் ஏற்படும் காயம். சதை → (சணை) → சாணை → சாணம்]*

**சாணம்**[4] *šāṇam,* பெ. (n.) நாரால்ஆகிய பொருள் *(நன்.266, மயிலை);* article made of fibres.

*[சள்ளுதல் = சிக்குதல். சள் → சடை = நார். சடை → சடம் → சடம்பு = நாருள்ளச் செடி. சள் → சணம் = சணல், சணல்நார். சணம் → சாணம் = நாரினால் செய்யப்பட்ட பொருள்]*

**சாணம்**[5] *šāṇam,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion.

**சாணம்**[6] *šāṇam,* பெ. (n.) சணற்கயிறு; flaxen cord. "இறுக்கின சாணமும் கட்டின கச்சும்" *(திவ். திருநெடுந். 21, வியா. பக். 170).*

**சாணமுத்திரை** *šāṇamuttirai,* பெ. (n.) முத்திரை வகை (சைவாநுட். வி. 17); a hand-pose.

*[சாள் → சாளை → சாணை = வட்டமானது, வளைந்தது. சாணை → சாணம் + முத்திரை]*

**சாணமூலி** *šāṇamūli,* பெ. (n.) கற்பூரவல்லி; thick-leaved - lavander - Anischilus carnosus.

*[சாணம் + மூலி]*

**சாணளந்தான்பூச்சி** *šāṉ-aḷantāṉ-pūcci,* பெ. (n.) புழுவகை (வின்.); a kind of worm.

*[சாண் + அளந்தான் + பூச்சி]*

**சாணளப்பான்புழு** *šāṉ-aḷappāṉ-puḻu,* பெ. (n.) சாணளந்தான்பூச்சி பார்க்க; see *šāṉ-aḷandāṉ-pūcci.* "சாணளப்பான் புழுப்போவ அந்த ஆன்மா.... வேறொருடலைக் கன்மத்துக்கீடாகப் பற்றினாலும் பற்றும்" *(சிசி.2.37, மறைஞா.).*

*[சாண் + அளப்பான் + புழு]*

**சாணாக்கி** *šāṇākki,* பெ. (n.) சாணாக்கிக்கீரை பார்க்க; see *šāṇākki-k-kīrai.*

**சாணாக்கிக்கீரை** *šāṇākki-k-kīrai* பெ. (n.) 1. மயிர் மாணிக்கம்; sickle leaf. 2. முயற்செவி (பதார்த்த. 600); hare's ear. 3. சனகிப்பூண்டு (வின்.); milk-hedge.

*[சாணாக்கி + கீரை]*

**சாணாக்கிப்பூச்சி** *šāṇākki-p-pūcci,* பெ. (n.) புழு வகை (இ.வ.); a kind of worm.

*[சாணாக்கி + பூச்சி]*

**சாணாக்கியம்** *šāṇākkiyam,* பெ. (n.) *1.* சின்ன முள்ளங்கி அல்லது சுவற்று முள்ளங்கி; wall radish - Blumea aurita. *2.* மக்கி; gamboge tree *(சா.அக.).*

**சாணாகக்கடகம்** *šāṇāga-k-kaḍagam,* பெ. (n.) சாணிக்கூடை (வின்.); basket for cow-dung.

*[சாணாகம் + கடகம். குணகு → குடங்கு → குடகம் → கடகம் = வட்டம், வட்டமான கூடை]*

**சாணாகம்** *šāṇāgam,* பெ. (n.) சாணம்' பார்க்க; see *šāṇam'*. "சாணாகத்தைக் கொண்டு மெழுகுமளவிலே" *(புறநா. 249, உரை).*

*[சாணம் → சாணாகம்]*

**சாணாகமுதலை** *šāṇāga-mudalai,* பெ. (n.) தீங்கு செய்யாத ஒருவகைத் தாழ்தரமான முதலை (வின்.); an inferior, harmless kind of alligator.

*[சாணாகம் + முதலை]*

**சாணாகமூக்கன்** *šāṇāga-mūkkaṉ,* பெ. (n.) வண்டு வகை (யாழ்.அக.); a kind of bee.

*[சாணாக + மூக்கன். சேண் → சாண் → சாணகம்]*

**சாணாங்கி** *šāṇāṅgi,* பெ. (n.) சாணம்' பார்க்க; see *šāṇam'*.

*[சாணம் → சாணாங்கி]*

**சாணாயிரம்முழமாயிரம்கோயில்** *šāṇāyiram-muḻam-āyiram-kōyil,* பெ. (n.) தகடூரிலுள்ள சிவன் கோயில்; Šiva's temple in Tagaḍūr. "நகலிரு சோழமண்டலத்து கங்க நாட்டுத் தகடூர் சாட்டுத் தகடூரில் சாணாயிர முழமாயிரம் உட்பட்ட கோயில்." *(தெ.கல்.தொ. 7. கல். 533, 534).*

*[சாணாயிரம் + முழமாயிரம் + கோயில்]*

**சாணார்** *šāṇār,* பெ. (n.) பனை ஏறுவோர், சாணார்குடி; member of the šāṇār caste, whose occupation is toddy drawing. "பனையேரி சாணான் குடி" *(சேதுபதி மன்னர் செப்பேடுகள்).*

**சாணாரக்கத்தி** *šāṇāra-k-katti,* பெ. (n.) கள்ளுக்காகப் பாளைசீவும் கத்தி; toddy-drawer's knife.

*[சாணான் + கத்தி → சாணாரக்கத்தி]*

**சாணாரமூக்கன்** *šāṇāra-mūkkaṉ,* பெ. (n.) கொம்பேறிமூக்கன் என்னும் பாம்பு (சீவரட்.); tree-snake.

*[சாணார + மூக்கன்]*

**சாணாரமூர்க்கன்** *šāṇāra-mūrkkaṉ,* பெ. (n.) சாணாரமூக்கன் பார்க்க; see *šāṇāra-mūrkkaṉ.*

*[சாணார + மூர்க்கன். மூக்கன் → மூர்க்கன்]*

**சாணி** *šāṇi,* பெ. (n.) சாணம்' பார்க்க; see *šāṇam'*. "சாணியின் குவியலில்" *(மணிமே. 30: 253, உரை.).*

ம. சாணி, சகணம்; உ. சகணி; பட. செகணி; பர். சர்பி; கட. சர்பி, சட்பி;ப் கோண். சராபி, சடாபி; கொண். ராபி; குவி. ராபி

*[சண் → சாண் → சாணம் → சாணி]*

**சாணிக்கெண்டை** *šāṇi-k-keṇḍai,* பெ. (n.) ஒருவகைக் கெண்டை மீன் (மீனவ.); a kind of keṇḍai fish, bitter carp.

மறுவ. கருங்கெண்டை.

ம. சாணிக்கெண்ட

*[சாணி + கெண்டை]*



சாணிக்கெண்டைமீன்

**சாணிச்சுருணை** *šāṇi-c-curuṇai,* பெ. (n.) சாணமிட்டு மெழுகுதற்குரிய துணிக்கற்றை; rags used for cleansing the floor with cow-dung.

*[சாணி + சுருணை. சுருள் → சுருணை = சுருட்டி வைத்தல், சுந்தல்]*

**சாணிதட்டு-தல்** *šāṇi-taṭṭu-,* 5 செ.குன்றா.வி. (v.i.) சாணியை வறட்டிக்காக தட்டுதல்; to beat cow-dung into cakes for fuel.

*[சாணி + தட்டு-,]*

**சாணிநீர்** *šāṇi-nīr,* பெ. (n.) *சாணிப்பால் பார்க்க;* see *šāṇi-p-pāl.*

*ம. சாணகநீர்; பட. செகணி நீரு*

*[சாணி + நீர்]*

**சாணிப்பச்சை** *šāṇi-p-paccai,* பெ. (n.) *கரும்பச்சை நிறம்;* dark green colour.

*ம. சாணகப்பச்ச*

*[சாணி + பச்சை]*

**சாணிப்பால்** *šāṇi-p-pāl,* பெ. (n.) *களத்தில் நெற்குவியலின்மேல் குறியிடுதற்குரிய சாணி நீர்;* cow-dung mixed in water and used for marking paddy heaped on the threshing-floor.

*[சாணி + பால்]*

**சாணிப்பாறை** *šāṇi-p-pāṟai,* பெ. (n.) *கடல் மீன் வகை (F.L.);* marine fish, greyish, Gazza-Asgentaria.

*[சாணி + பாறை]*

**சாணிப்பிண்டம்** *šāṇi-p-piṇḍam,* பெ. (n.) *சாணிப்பிணம் (இ.வ.) பார்க்க;* see *šāṇi-p-piṇam.*

*[சாணி + பிண்டம்]*

**சாணிப்பிணம்** *šāṇi-p-piṇam,* பெ. (n.) *1. சதைமிக்கு வலியற்றவ-ன்-ள்;* flabby, weak person. *2. பயனற்றவ-ன்-ள் (வின்.);* useless fellow.

*[சாணி + பிணம்]*

**சாணிப்புல்** *šāṇi-p-pul,* பெ. (n.) *ஒரு வகைப் புல்;* a kind of grass.

*[சாணி + புல்]*

**சாணிபோடு-தல்** *šāṇi-pōḍu-, 20* செ.கு.வி. (v.i.) *ஆ மலங்கழித்தல்;* to evacuate dung, as cow or buffalo.

*[சாணி + போடு-,]*

**சாணிபோடு[2]-தல்** *šāṇi-pōḍu-, 20* செ.கு.வி. (v.i.) *வெற்றிலையையெண்ணுகையில் கள்ளத்தனமாகச் சிலவற்றை அடிக் கையால் நழுவவிடுதல் (இ.வ.);* to drop stealthily some betel-leaves into the basket while counting them.

*[சாணி + போடு-,]*

**சாணிமுத்திரை** *šāṇi-muttirai,* பெ. (n.) *நெற்குவியலில் சாணிப்பாலால் இடும் குறி;* mark on a heap of paddy made with cow-dung mixture.

*[சாணி + முத்திரை. முக + திரம் = மோதிரம், முத்திரையிட்ட விரலணி. முகத்திரம் → (முத்திரம்) → முத்திரை]*

**சாணிமுதலை** *šāṇi-mudalai,* பெ. (n.) *சாணாக முதலை (இ.வ.) பார்க்க;* see *šāṇāga-mudalai.*

*[சாணி + முதலை]*

**சாணியுடம்பு** *šāṇi-y-uḍambu,* பெ. (n.) *சதைமிக்கு வலியற்றிருக்கும் உடம்பு;* flabby, weak body.

*[சாணி + உடம்பு]*

**சாணிவண்டு** *šāṇi-vaṇḍu,* பெ. (n.) *சாணியிலிருந்து தோன்றும் வண்டு;* the beetle generated in cow-dung *(சா. அக.).*

*[சாணி + வண்டு]*

**சாணிவறட்டி** *šāṇi-varaṭṭi,* பெ. (n.) *வறட்டி;* dried cow-dung cake.

*ம. சாணகவரடி, சாணகவறடி, சாணக வறட்டி, சாணகவரளி; க. சகணபிண்ட, பறடி; பட. செகணிபறட்டி*

*[சாணி + வறட்டி. வறள் + தி = வறட்டி]*

**சாணை[1]** *šāṇai,* பெ. (n.) *1. சாணைக்கல் பார்க்க;* see *šāṇai-k-kal.* *"வாடீட்டிய கிடந்த சாணை" (நைடத. அன்னத்தைத். 14). 2. சருக்கரை முதலியவற்றால் வட்டமாய்ச் சுட்ட பணியார வகை (வின்.);* round flat cake made of jaggery, etc.

*ம. சாண; க. சாணெ; தெ. சான;* Skt. šāṇa

*[சவள் → சாள். சாளுதல் = வளைதல். சாள் → சாய். சாய்தல் = வளைதல். சாள் → சாளை → சாணை (வே.க. 231) சாணை = 1. வட்டமான கதிர்ச்சூட்டு (நெல்லை). 2. வட்டமாய் தட்டிய புளி மொத்தை. வடவர், சோ (தீட்டு) என்னுஞ் சொல்லை மூலமாகக் காட்டுவர் அது சாணைக்கல் ஒன்றற்குத்தான் சிறிது பொருந்தும் (வ.வ. 145).]*

**சாணை**[2] *šāṇai,* பெ. (n.) *சாணைச்சிலை (வின்.) பார்க்க;* see *šāṇai-c-cīlai.*

*[சுள் → சூழ். சூழ்தல் = நாற்புறமும் வளைதல். சுள் → சாள் → சாணை = ஒன்றைச் சூழ்வது, போர்த்துவது]*

**சாணைக்கல்** *šāṇai-k-kal,* பெ. (n.) ஆய்தந் திட்டுங்கல் (C.E.M.); grindstone, whetstone, hone.

ம. சாணக்கல்லு; க., து. சாணெக்கல்லு

*[சாணை + கல்]*

**சாணைக்காரன்** *šāṇai-k-kāraṉ,* பெ. (n.) சாணை பிடிப்பவன்; one who whets and sharpens knives, etc.

ம. சாணக்காரன்; க. சாணெகார, சாணிக

*[சாணை + காரன்]*

**சாணைக்கூறை** *šāṇai-k-kūṟai,* பெ. (n.) குழந்தைகளுக்கு மணம்பேசிச் செய்யும் விழாவில் பெண்ணுக்குக் கொடுக்கும் புதிய சிற்றாடை (யாழ்ப்.); new cloth given by bridegroom's parents to the infant bride at the time of betrothal in child-marriage.

*[சாணை + கூறை]*

**சாணைகட்டு-தல்** *šāṇai-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சோளம் கேழ்வரகு முதலிய கதிர்களை அறுத்துக் குவித்துச் சுற்றிலும் தட்டை, தாள் இவைகளைக் கொண்டு மழைநீர் உட்புகாத படி மூடுதல்; to cover the sheaf from rain.

*[சாணை+ கட்டு-,]*

**சாணைச்சீலை** *šāṇai-c-cīlai,* பெ. (n.) கைக் குழந்தைகளை மூடிப்பொதியுஞ் சீலை (யாழ்.அக.); swaddling clothes.

*[சாணை + சீலை]*

சாணை[2] பார்க்க

**சாணைசேர்-த்தல்** *šāṇai-cēr-,* 4 செ.கு.வி. (v.i.) புளியடை தட்டுதல் (வின்.); to preserve tamarind pulp in round cakes.

*[சாணை+ சேர்-,]*

**சாணைதீர்-தல்** *šāṇai-tīr-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* சாணை பிடிக்கப்படுதல்; to be sharpened, as a weapon. *2.* மணிபட்டை தீர்தல் (வின்.); to be cut and polished, as gems.

தெ. சானபட்டு

*[சாணை+ தீர்-,]*

**சாணைப்பதம்** *šāṇai-p-padam,* பெ. (n.) மருக்களங்காய்; common emetic nut - Randia dumetorum (சா.அக.).

*[சாணை + பதம்]*

**சாணைப்பரல்** *šāṇai-p-paral,* பெ. (n.) சாணை உருவாக்கப் பயன்படுத்தும் ஒரு வகை மணல்; a kind of sand used for making the whetting roller (சேரநா.).

ம. சாணப்பரல்

*[சாணை + பரல். (புர்) → பர → பரல் = பருக்கைக்கல்]*

**சாணைப்பிள்ளை** *šāṇai-piḷḷai,* பெ. (n.) துணியில் கிடக்கும் கைக்குழந்தை (யாழ்ப்.); infant in swaddling - clothes.

*[சாணை + பிள்ளை]*

**சாணைபிடி-த்தல்** *šāṇai-piḍi-,* 4 செ.கு.வி. & செ.குன்றாவி. (v.i. & v.t.) ஆய்தத்தைக் கூர்மைப்படுத்துதல் (திவ்.திருப்பா. 1, அரும். 32); to grind, whet, sharpen, as a weapon.

க. சாணெபிடி

*[சாணை+ பிடி-,]*

**சாணைமேய்-தல்** *šāṇai-mēy-,* 3 செ.கு.வி. (v.i.) சாணைகட்டு-தல் பார்க்க; see šāṇai-kaṭṭu-.

*[சாணை+ மேய்-, வேய் → மேய்]*

**சாணைவை**[1]**-த்தல்** *šāṇai-vai-,* 4 செ.கு.வி. & செ.குன்றாவி. (v.i. & v.t.) சாணைபிடி-த்தல் பார்க்க; see *šāṇai-piḍi-.*

*[சாணை+ வை-,]*

**சாணைவை**[2]**-த்தல்** *šāṇai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) கதிர்க்கட்டுகளைக் களத்தில் ஒரே இடத்தில் கூட்டிவைத்தல்; to gather sheaf.

*[சாணை+ வை-,]*

**சாத்தக்கணத்தார்** *šātta-k-kaṇattār,* பெ. (n.) அய்யனார் கோயிலை ஆளுமை (நிருவாகம்) செய்பவர்கள்; admininstrators of Aiyanār temple. "இத்தன்மம் சாத்த கணத்தார் ரச்சிப்பாராகவும்" *(தெ.க.தொ. III).*

*[சாத்தன் + கணத்தார். கள்ளுதல் = கூடுதல், பொருந்துதல், ஒத்தல். கள் → கள → கண. கணத்தல் = கூடுதல், ஒத்தல். கள் → களம் = கூட்டம், அவை. களம் → கணம் = கூட்டம். கணம் + அத்து + ஆர் = கணத்தார்]*

**சாத்தண்டம்** *šāttaṇḍam,* பெ. (n.) கொலை செய்ததற்கு விதிக்கும் தண்டனை; punishment for killing. சாத்தண்டம் செய்கில் இருபத்து நாலு காணம் கொடுப்பது *(T.A.S. iii. 195).*

*[சா + தண்டம்]*

**சாத்தண்டை** *šāttaṇḍai,* பெ. (n.) நிலத்தில் அண்டை வெட்டுதலில் ஒருவகை (செங். 2); a kind of cultivation. அண்டை வெட்டும்போது வயல்வரப்பில் இருக்கும் ஓட்டைகளை அடைப்பதற்காகச் சேற்றினை அள்ளி வரப்பின்மீது சாத்தி வெட்டும் அண்டை

*[சாத்து + அண்டை]*

**சாத்தந்தை** *šāttandai,* பெ. (n.) சாத்தனுக்குத் தந்தை (தொல். எழுத்து. 347); father of šāttaṉ.

*[சாத்தன் + தந்தை]*

**சாத்தந்தையார்** *šāttandaiyār,* கடைக்கழகப் புலவர்; šangam poet.

*[சாத்தன் + தந்தையார்]*

திணைமொழி யைம்பதின் ஆசிரியர் கண்ணஞ்சேந்தனாருடைய தந்தை. இவர் பாடியதாகப் புறநானூற்றில் நான்கு பாடல்கள் காணப்படுகின்றன. மற்போர் இயல்பு இவர் பாடலில் காணப்படுகிறது. சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியைப் பாடியுள்ளார்.

**சாத்தமகரணி** *šātta-magaraṇi,* பெ. (n.) உத்தாமணி; hedge cotton - Damea extensa (சா.அக.).

**சாத்தம்மி** *šāt-t-ammi,* பெ. (n.) 1. கலவைச் சந்தனங் குழைத்தற்குரிய அம்மி; grindstone for compounding perfumed sandal. 'கருங்கொள்ளியின் நிறத்தையொத்த நறிய சாத்தம்மியிலே கத்தூரி முதலிய பசுங்கூட்டரைக்க' *(நெடுநல். 50 உரை).* 2. மெருகு சுண்ணாம்பு அரைக்கும் பெரிய அம்மி வகை; big grind stone for pounding limepolish, etc.

*[சாந்து + அம்மி – சாந்தம்மி → சாத்தம்மி]*

**சாத்தமிழ்து** *šāttamiḻdu,* பெ. (n.) புளிச் சாறு சோறு; a kind of water soup added to the rice.

*[சாறு → சாற்று → சாத்து + அமிழ்து. அமிழ்து = உணவு]*

**சாத்தமுது** *šāttamudu,* பெ. (n.) சாத்தமிழ்து பார்க்க; see *šāttamiḻdu.*

*[சாத்தமிழ்து → சாத்தமுது]*

**சாத்தர்** *šāttar,* பெ. (n.) சாத்தவர்[2] பார்க்க; see *šāttavar*[2]. "அதர்கெடுத் தலறிய சாத்தரொ டாங்கு" *(அகநா. 39).*

*[சாத்து → சாத்தர்]*

**சாத்தல்** *šāttal,* பெ. (n.) மறைநூல்; the vēdas. "சாத்த லோதும்..... பிரமசாரிப் புதல்வரை" *(திருவாலவா. 27, 52).*

*[சாற்று → சாத்து → சாத்தல்]*

**சாத்தலகு** *šāttalagu,* பெ. (n.) கூரைக் கைமரங்களை இணைக்கும் பட்டியல் சட்டம் (கட்டட); a kind of wooden bar used house making.

*[சார் → சார்த்து → சாத்து + அலகு]*

**சாத்தவர்**[1] *šāttavar,* பெ. (n.) குதிரை வீரர்; cavalry, troopers.

**சாத்தவர்**[2] *šāttavar,* பெ. (n.) வெளிநாடுகளிற் சென்று வணிகஞ் செய்யும் வணிகக் கூட்டத்தார்; trading caravan. "பழுதில் சாத்தவர்கள் சூழ" *(திருவாலவா. 27.1).*

*[சாத்து → சாத்தவர்]*

**சாத்தன்**[1] *šāttaṉ,* பெ. (n.) 1. சாத்தன் எனும் தெய்வம் (திவா.); a village deity. 2. அருகன் (சூடா.); Arhat. 3. புத்தன்; Buddha. 4. சீத்தலைச் சாத்தனார் பார்க்க; see šīttalai-c-šāttaṉār. "அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" *(சிலப். பதி10).* 5. யாரேனும் ஒருவனைக் குறிப்பதற்காகச் சொல்லும் சொல்; imaginary person of male sex. "அக்கடவுளாற் பயன்பெற நின்றானோர் சாத்தனை" *(தொல். பொருள். 422, உரை).*

ம. சாத்தன்; க. சாத (பேய்)

*[சாத்து → சாத்தன் = வணிகச் சாத்தினர் வணங்குந்தெய்வம். பண்டைக் காலத்தில் பெரும்பாலும் வணிகரே சாத்தன் என்னும் பெயர் தாங்கியிருந்தனர்.]*

வடவர் ஐயனாரைக் குறிக்கும்போது சாஸ்தா என்றும் சாஸ்த்கு என்றும் திரிப்பர். இதனின்று அவர் ஏமாற்றை அறிந்து கொள்க *(தமிழ்வ.66).*

**சாத்தன்**[2] *šāttaṉ*, பெ. (n.) **வாணிகக்கூட்டத் தலைவன்** *(நன். 130, மயிலை);* head of a trading caravan *(செ.அக.).*

*[சாத்து → சாத்தன்]*

வணிகச் சாத்தின் தலைவன் சாத்தன் எனப்படுவான். இப்பெயர் ஸார்த்த என்று வடமொழியில் திரியும். வடமொழியில் சாத்தைக் குறிக்கும் சொற்கும் சாத்தின் தலைவனைக் குறிக்கும் சொற்கும் வேறு பாடின்மையும், சாத்தன் என்னும் தெய்வத்தைக் குறிக்கும் சொல் வேறு பட்டிருப்பதும் கண்டு உண்மை தெளிக.

சாத்தன் என்னும் சொல் பிற்காலத்திற் சாத்துவன் என்றும் சாத்துவான் என்றுந் திரிந்தது. கண்ணகியின் தந்தை மாசாத்துவான் (பெருஞ்சாத்தன்) என்று இயற்பெயர் பெற்றிருந்தமை காண்க *(தமிழ்வ. 66).*

**சாத்தன்காசு** *šāttaṉ-kāšu*, பெ. (n.) **ஒரு பழைய காசு வகை;** name of an old coin *(சேரநா.).*

ம. சாத்தன் காசு

*[சாத்தன் + காசு]*

**சாத்தனார்** *šāttaṉār*, பெ. (n.) **கழகக்காலப் புலவர்;** sangam poet.

*[சாத்தன் → சாத்தனார்]*

**சாத்தாதவன்** *šāttātavaṉ*, பெ. (n.) சாத்தானி பார்க்க **(பூணூல் அணியாதவன்);** see *šāttāṇi*, lit. one who does not wear the sacred thread.

*[சாத்து + ஆ + த + அவன்]*

பூணூல் அணியாமலும், உச்சிக்குடுமி வைக்காமலும் இருக்கும் ஒரு பிரிவினர். மாலியத்தை (வைணவத்தை)ச் சார்ந்த இவர்கள் பல்வேறு பிரிவுகளிலிருந்து, ஒன்று சேர்ந்தவர்கள்.

**சாத்தாவாரி** *šāttā-vāri*, பெ. (n.) **தண்ணீர் விட்டான் கிழங்கு;** a common climber with many thick fleshy roots.

**சாத்தானி** *šāttāṇi*, பெ. (n.) **கோயிலில் பூமாலை கட்டிக் கொடுக்கும் பார்ப்பனன் அல்லாத மாலியன்;** non-brahmin caste of vaiṣṇavas who render service in temples.

க., தெ., சாதாநி

*[சாத்து + ஆ + ஆன் → சாத்தான் → சாத்தானி]*

**சாத்திக்கொள்(ளு)-தல்** *šātti-k-koḷ(ḷu)-*, 13 செ.குன்றாவி. (v.t.) **பகட்டாக (ஆடம்பரமாக) மாலை முதலியன அணிதல்** *(யாழ்ப்.);* to dress oneself with gaudy, costly attire, decorate oneself.

*[சாத்து → சாத்தி + கொள்(ளு)-,]*

**சாத்தியசாந்தகம்** *šāttiya-šāndagam*, பெ. (n.) **நான்முகப் புல்;** reed grass - Saccharum spontaneum *(சா.அக.).*

**சாத்தியநாமம்** *šāttiya-nāmam*, பெ. (n.) **ஒருவன் மீது மந்திரம் செயல்படுவதற்காக அம்மந்திரத்திற் சேர்க்கும் அவன் பெயர்** *(யாழ்ப்.);* name of a person introduced in a mantra for achieving the desired end.

*[சாத்திய + நாமம்]*

Skt. nāma → த. நாமம்

**சாத்து**[1]**-தல்** *šāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **ஒருவர் பெயர் நிலைத்துநிற்கும் நோக்கோடு அவர் நினைவாக ஒன்றினைச் செய்தல்;** to do a good thing in memory of an other person. "குன்றனூரனைச் சாத்தி இவர் மகன் ஸ்ரீராசிங்கப் பேரையனான அரைசயன் இகழாநிலை கண்ணனூர்க் குளத்துக்குக் கட்டின குமிழி" *(ஆவணம் 1991: 15-1)*

*[சார் → சார்த்து → சாத்து-,]*

**சாத்து**[2]**-தல்** *šāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அணிதல்;** to put on, adorn used in reference to idols, great persons, etc. 'முளைவெண்டிங்க ளென்னச் சாத்தி' *(சிலப். 12:26).* 2. **பூணுதல்;** to wear, as the caste-mark. 'தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே' *(கம்பரா. கடிமண. 49).* 3. **பூசுதல்** *(பிங்.);* to daub, smear, anoint. 'சாத்தியருளச் சந்தன முக்கசும்' *(S.I.I.iii, 187).* 4. **நூலைப் படித்து முடித்தல்;** to finish reading a sacred book. 5. **அடித்தல்;** beat, thrash. 'அவனை இரண்டு சாத்துச் சாத்தினான்' *(கொ.வ.).*

6. பெயர்த்து நடுதல் (வின்.); to transplant. தென்னம்பிள்ளை சாத்துதல்.

[சுள் → சூர் → சார் → சார்த்து → சாத்து. சாத்துதல் = மூடுதல் (மு.தா.33)]

**சாத்து[3]-தல்** *šāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ஒன்றின் மேல் சாய்ந்த நிலையில் இருக்கச் செய்தல்; rest something at a slant. 'குடையை மூலையில் சாத்தி வை'.

[சார்த்து → சாத்து-,]

**சாத்து[4]-தல்** *šāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) அடைத்தல்; to close, as a door, to shut. "போர்க் கதவஞ் சாத்தி" (திவ்.இயற். 1,4).

[சார்த்து → சாத்து-,]

sātt-u. to close a door, to shut: Saxon scyit-an, to shut in; Dutch schutt-en, to stop; English to shut (C.G. D.F.L. 593).

**சாத்து[5]** *šāttu*, பெ. (n.) 1. சாத்துகை; wearing, as a garland. 'சாத்து கோதையும்' (பெருங். மகத. 5, 78). 2. சாத்துமுறை[-3] பார்க்க; see *šāttumurai-3*. 3. அடி; beat, thrash. 4. பெயர்த்து நடப்பட்ட நாற்று; young plant transplanted. நாற்று முப்பது சாத்து முப்பது *Rd.M.*

[சார்த்து → சாத்து]

**சாத்து[6]** *šāttu*, பெ. (n.) 1. வணிகக் கூட்டம்; trading caravan. 'சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்' (சிலப். 11:190)). 2. கூட்டம்; company. "சுரிவளைச் சாத்து நிறைமதி தவழும்" (கல்லா. 63, 32).

[சேர் → சார் → சார்த்து → சாத்து. சாத்தல் = சேர்தல், கலத்தல், கூடுதல்]

த. சாத்து → Skt. sārtha

நிலவாணிகர் வணிகப்பண்டங்களைக் குதிரைகள் மேலும், கோவேறு கழுதைகள் மேலும் ஏற்றிக்கொண்டு, கூட்டங்கூட்டமாய் காட்டுவழியே தமிழகத்தையடுத்த வடுக நாட்டிற்கும், நெடுந்தொலைவான வட நாட்டிற்கும், காவற்படையுடன் சென்று ஏராளமாய்ப் பொருளீட்டி வந்தனர். அவ் வணிகக் கூட்டங்கட்குச் 'சாத்து' என்று பெயர். சாத்து கூட்டம். சார்த்து → சாத்து. சார்தல் = சேர்தல். வணிகச்சாத்துகளின் காவல்தெய்வமாகிய ஐயனார்க்குச் சாத்தன் என்று பெயர். அதனால் வணிகர்க்குச் சாத்தன், சாத்துவன் என்னும் பெயர்கள் இயற்பெயராய் வழங்கின. ஐயனார் கோயிலில், வணிகச்சாத்தைக் குறித்தற்கு, மண் குதிரை யுருவங்கள் செய்து வைத்திருத்தலைக் காண்க. சாத்தன் என்னும் தெய்வப்பெயர் வடமொழியில் சாஸ்தா எனத் திரியும் (பப. 93).

**சாத்து[7]** *šāttu*, பெ. (n.) சாத்துப்பட்டை பார்க்க; see *šāttu-p-paṭṭai*.

[சார் → சார்த்து → சாத்து]

**சாத்து[8]** *šāttu*, பெ. (n.) சாத்தம்மி; big grinding stone. "ஓர் சாமஞ் சாத்தி லரைக்க தனித்து" (தஞ்.சர. iii, 69).

[சாத்தம்மி → சாத்து]

**சாத்துக்கடி** *šāttu-k-kaḍi*, பெ. (n.) சாத்துக்குடி (இ.வ.) பார்க்க; see *šāttu-k-kuḍi* (செ.அக.).

[சாத்துக்குடி → சாத்துக்கடி]

**சாத்துக்கம்பு** *šāttu-k-kambu*, பெ. (n.) தாழ்வாரத்தைத் தாங்கச் சாய்வாக அமைக்கப் பட்ட கழி; support pole.

[சாத்து + கம்பு. கும் → கொம் → கொம்மை = திரட்சி. கொம் → கொம்பு → கம்பு]

**சாத்துக்கவி** *šāttu-k-kavi*, பெ. (n.) சிறப்புப் பாயிரக்கவி; laudatory stanza in praise of an author and his work.

[சார்த்து + கவி]

**சாத்துக்கழி** *šāttu-k-kaḻi*, பெ. (n.) கூரையைத் தாங்க முகட்டு வளையையும் சுவரின் மேற் பகுதியிலமைந்த சட்டத்தையும் இணைக்கும் மரச்சட்டம் (கட்டட.); a kind of wooden bar used in sloping roof.

[சாத்து + கழி]

**சாத்துக்காப்பு** *šāttu-k-kāppu*, பெ. (n.) சாத்துப்படி (வின்.) பார்க்க; see *šāttu-p-paḍi*.

[சாத்து + காப்பு]

**சாத்துக்கால்[1]** *šāttu-k-kāl*, பெ. (n.) 1. இறைவன் திருமேனியை அழகு செய்யப் பயன்படுத்தும் திருப்பாதம் (இ.வ.); metal leg used in decorating an idol.

[சாத்து + கால்]

**சாத்துக்கால்**[2] *šāttu-k-kāl,* பெ. (n.) மாட்டுக் குற்றவகை (பெரியமாட். 18); a blemish in cattle.

*[சாத்து + கால்]*

**சாத்துக்குடி** *šāttu-k-kuḍi,* பெ. (n.) 1. சாத்துக்குடி என்னும் ஊரில விளைந்த கிச்சிலிப் பழவகை (M.M.); batavian orange produced in sāttukkuḍi, a village in North Arcot district. 2. தித்திப் பெலுமிச்சை; sweet lime - m.tr. Citrus medica-limetta.

*[சாத்து + குடி]*

**சாத்துக்கூறை** *šāttu-k-kūṟai,* பெ. (n.) திருப் பரிவட்டம் (S.I.I.iv, 280.); vestment of a deity.

*[சாத்து + கூறை]*

**சாத்துக்கை** *šāttu-k-kai,* பெ. (n.) திருவிழாத் திருவுருவை அழகுபடுத்தப் பயன்படுத்துந் திருக்கை (இ.வ.); metal arm used in decorating an idol.

*[சாத்து + கை]*

**சாத்துடிப்பு** *šā-t-tuḍippu,* பெ. (n.) இறக்கும் தருவாயில் ஏற்படும் துடிப்பு (மரணவேதனை); death-throb (செ.அக.).

*[சா + துடிப்பு]*

**சாத்துச்சட்டி** *šāttu-c-caṭṭi,* பெ. (n.) குழம்பு வைக்கப் பயன்படுத்தும் மட்பாண்டம்; earthern vessel used for keeping sauce.

*[சாறு → சாற்று → சாத்து + சட்டி]*

**சாத்துநாற்று** *šāttu-nāṟṟu,* பெ. (n.) பட்டுப்போன வற்றிற்கு மாற்றாக நடும் நாற்று (இராட்.); young plants planted in place of those which are dead.

*[சார் → சார்த்து → சாத்து + நாற்று. நாறு → நாற்று]*

**சாத்துநாறு** *šāttu-nāṟu,* பெ. (n.) சாத்துநாற்று (இராட்.) பார்க்க; see *šāttu-nāṟṟu.*

*[சாத்து + நாறு]*

**சாத்துப்பட்டை** *šāttu-p-paṭṭai,* பெ. (n.) கைமரம் (இ.வ); common rafter.

ம. சாத்து (படகின் இருபுறமும் சேர்த்துக் கட்டும் பலகை)

*[சார் → சார்த்து → சாத்து = சாத்துகை. சாத்து + பட்டை]*

**சாத்துப்படி** *šāttu-p-paḍi,* பெ. (n.) 1. கோயிலில் திருமேனிகட்குச் செய்யும் ஒப்பனை; adornment, bedecking of idols. 'சாத்துப்படிக்குச் சந்தனம் பலகாலும்' (T.A.S. iv. 95). 2. பூசுதற்குரிய சந்தனம் (vaiṣṇ.); sandal paste.

ம. சாத்துப்படி

*[சாத்து + படி]*

**சாத்துப்பயிர்** *šāttu-p-payir,* பெ. (n.) பிடுங்கி நடப்பெற்று வளர்ந்த பயிர் (தஞ்சை); grown-up plant transplanted a second time.

*[சாத்து + பயிர்]*

**சாத்துப்பனை** *šāttu-p-paṉai,* பெ. (n.) 1. சாற்றுப் பனை; palmyra, yielding fruit or toddy. 2. பெண் பனை; female palmyra tree (சா.அக.).

*[சாத்து + பனை]*

**சாத்துப்பிள்ளை** *šāttu-p-piḷḷai,* பெ. (n.) ஒரு நெசவுக் கருவி; a kind of weaving parts.

*[சாத்து + பிள்ளை]*

**சாத்துப்பிள்ளைக்கால்** *šāttu-p-piḷḷai-k-kāl,* பெ. (n.) சாத்துப்பிள்ளைத் தாங்கி நிற்கும் மரக்கால்கள்; supporting poles or legs of šāttu-p-pillai.

*[சாத்துப்பிள்ளை + கால்]*

**சாத்துமாலை** *šāttu-mālai,* பெ. (n.) அணிதற்குரிய பூமாலை; garland intended to be put on idols, etc. opp. to tūkku-mālai.

*[சாத்து + மாலை]*

**சாத்துமுறை** *šāttu-muṟai,* பெ. (n.) 1. கோயில் முதலிய இடங்களில் போற்றிப் பாடல்களை ஓதியபின் இறுதியில் சில பாடல்களைச் சிறப்புத் தோன்ற தனியே ஓதுகை; recital of some special stanzas at the close of pirabandam recitation in times of worship at temples, etc. 2. ஆழ்வார் முதலானோர் விழா முடிவு; close of the festival in honour of vaiṣṇava saints. 3. ஓதுகை முடிவு; completion of the study of sacred works.

*[சாற்று → சாத்து + முறை]*

**சாத்துயர்** *šā-t-tuyar,* பெ. (n.) கடுந்துயர் (மரணவேதனை); death agony.

*[சா + துயர்]*

**சாத்துவதி**[1] *šāttu-vadi,* பெ. (n.) அறம் பொருளாகவும் தெய்வமானிடர் தலைவராகவும் வரும் நாடக வகை (விருத்தி); a variety of dramatic, composition which has a semi-divine being for hero and treats of virtue, one of four nāḍaga-virutti, 'அவன் சாத்துவதி.... பாரதி யென வினவ' (சிலப். 3, 13, உரை.).

**சாத்துவரப்பு** *šāttu-varappu,* பெ. (n.) திரட்டுவரப்பு (செங்கை); patch ridge of a field.

*[சாத்து + வரப்பு]*

**சாத்துவரி** *šāttu-vari,* பெ. (n.) கள்ளிறக்கும் மரங்களுக்கிடும் வரி (இ.வ.); tax on toddy-yielding trees.

*[சாறு + வரி − சாற்றுவரி → சாத்துவரி]*

**சாத்துவன்** *šāttuvaṉ,* பெ. (n.) சாத்தன்[2] பார்க்க; see *šāttaṉ*[2].

*[சார் → சார்த்து → சாத்து → சாத்துவன்]*

**சாத்துவாதி** *šāttu-vādi,* பெ. (n.) சித்திர மூலம்; Ceylon leadwort - Plumbago zeylanica (சா.அக.).

**சாத்துவான்** *šāttuvāṉ,* பெ. (n.) சாத்தன்[2] பார்க்க; see *šāttaṉ*,.

*[சாத்து → சாத்துவன் → சாத்துவான்]*

**சாத்துறி** *šātturi,* பெ. (n.) உறிவகை; suspended network of rope. "சாத்துறி பவளக் கன்னல்" (சீவக. 1906).

*[சார்த்து + உறி]*

**சாத்தூலம்** *šāttūlam,* பெ. (n.) புலிதொடக்கிச் சாறு; the juice of tiger stopper - Caesalpinia sepiaria(சா.அக.).

**சாத்தெறி-தல்** *šātteṟi-,* 3 செ.கு.வி. (v.i.) வாணிகக் கூட்டத்தைக் கொள்ளையிடுதல்; to plunder a trading caravan (செ.அக.).

*[சாத்து + எறி-,]*

**சாதகக்கட்சி** *šādaga-k-kaṭci,* பெ. (n.) காந்தம் (மூ.அ.); loadstone.

**சாதகக்கிள்ளையோன்** *šādaga-k-kiḻḻaiyōṉ,* பெ. (n.) காய்ச்சற்செய்நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

**சாதகக்கோடு** *šādaga-k-kōḍu,* பெ. (n.) சங்க செய்நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

**சாதகச்சக்கிலி** *šādaga-c-cakkili,* பெ. (n.) சத்திசாரம் (யாழ்.அக.); an acrid salt.

**சாதகச்சீர்த்தி** *šādaga-c-cīrtti,* பெ. (n.) அரத்தச் செய்நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic.

**சாதகசித்தி** *šādaga-šitti,* பெ. (n.) 1. வல்லாரை Indian penny wort - Hydrocotyle asiatica. 2. வாலுளுவை அரிசி; seeds of spindle tree - Oleum nigrum alias Celastrus Paniculata (சா.அக.).

**சாதகப்புள்** *šādagappuḷ,* பெ. (n.) வானத்தினின்று விழும் மழைத்துளியைப் பருகி வாழ்வதாகக் கருதப்படும் பறவை; வானம்பாடி; shepherd koel, believed to subsist on rain drops.

**சாதகம்** *šādagam,* பெ. (n.) எருக்கு (மலை) பார்க்க; see *erukku*.

**சாதகாகத்தி** *šādagāgatti,* பெ. (n.) கோழித் தலைக் கந்தகம் (வின்.); a prepared arsenic.

**சாதகும்பம்** *šāda-kumbam,* பெ. (n.) பொன்; gold. "விற்சாதகும்பன்" (காளத். உலா, 87).

**சாதகை** *šādagai,* பெ. (n.) மலைமகள்; Durgā.

**சாதல்** *šādal,* பெ. (n.) இறப்பு; death. "சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தினாகும்" (சீவக. 269).

*[சா + தல். 'தல்' தொ.பெ. ஈறு]*

**சாதலப்பேரி** *šādala-p-pēri,* பெ. (n.) ஒருவகைக் கீரை; cake mellow - Abutilon indicum (சா.அக.).

**சாதலம்** *šādalam,* பெ. (n.) ஒருவகைக் கீரை (மலை.); Indian chickweed.

**சாதலி** *šādali,* பெ. (n.) நெய்ச்சிட்டி; jauna - Grewia orbiculata (சா.அக.).

**சாதவாகனன்**[1] *šādavāgaṉaṉ,* பெ. (n.) சாதவாகன இனத்தைச் சார்ந்த ஒரு மன்னன் (நன். 48, மயிலை.); a king of the sātavāgana dynasty

**சாதவாகனன்**[2] *šādavāganan*, பெ. (n.) ஐயனார் *(திவா.)*; Aiyanār, as having a vehicle.

*[சாத்து + வாகனன் → சாத்துவாகனன் → சாதவாகனம். வணிகக் கூட்டத்தை (சாக்கை) ஊர்தியாகக் கொண்டவன் என்னும் பொருளில் சாதவாகனன் ஐயனாரைக் குறித்தது]*

**சாதவு** *šādavu*, பெ. (n.) கருங்கொள்; black horse-gram *(சாஅக.)*.

**சாதவேதம்** *šādavēdam*, பெ. (n.) 1. கொடுவேலி; lead wort - Acacia tomentosa. 2. நெருப்பு; fire *(சாஅக.)*.

**சாதாரி** *šādāri*, பெ. (n.) செவ்வழியாழ்த் திற வகை; a secondary melody-type of the ševvaḻi class corresponding to tēva-kāntāri. "சாதாரி யென்னுங் கானம் பாடினான்" *(திருவாலவா. 54, 32)*.

**சாதாவேரி** *šādā-vēri*, பெ. (n.) தண்ணீர் விட்டான்; a common climber with many thick fleshy roots.

**சாதாவேலி** *šādā-vēli*, பெ. (n.) சாதாவேரி பார்க்க; see *šādā-vēri*.

**சாதாழை** *šādāḻai*, பெ. (n.) 1. கடற்பூண்டு வகை *(யாழ்ப்.)*; dead sea-weed. 2. வலுவற்றவன்; weak, inert person.

**சாதாழைநிம்பம்** *šādāḻai-nimbam*, பெ. (n.) சாதாளம் பார்க்க; see *šādāḷam*.

**சாதாளநிம்பம்** *šādāḷa-nimbam*, பெ. (n.) சாதாளம் பார்க்க; see *šādāḷam*.

*[சாதாளம் + நிம்பம்]*

**சாதாளம்** *šādāḷam*, பெ. (n.) எருக்கு; madar plant - Caltropis gigantea *(சாஅக.)*.

*[சாதகம் → சாதாளம்]*

**சாதாளி** *šādāḷi*, பெ. (n.) சாதாரி பார்க்க; see *šādāri*.

**சாதாளிகம்** *šādāḷigam*, பெ. (n.) விடத்தலை மரம்; viḍattalai tree - Dichrostachyo cinerea *(சாஅக.)*.

**சாதி** *šādi*, பெ. (n.) 1. தேக்கு *(பிங்.)*; teak. 2. திப்பிலி *(வின்.)*; long-pepper. 3. பிரம்பு *(பிங்.)*; common rattan of S. India. 4. பிரப்பம்பாய் *(பிங்.)*; rattan matting. 5. ஆடாதோடை *(மலை.)*; malabar-nut tree. 6. கள் *(பிங்.)*; toddy. 7. புழுகுச் சட்டம்; perfume sac of a civet cat. "அமிர்தை முக்கடு சாதி" *(தைலவ. தைல. 34)*.

*[சடாய்த்தல் = செழித்தல். சடாய் → சதாய் → சாதி]*

**சாதிக்காய்**[1] *šādi-k-kāy*, பெ. (n.) பந்தைப்போல் உருண்டையாயும், பழுப்பு நிறமாயும், மணம் கொண்டுள்ளதாயுமுள்ள ஒருவகை நெற்றுக் காய்; common nutmeg - Myristica fragrans. It is like a ball. The outer portion which forms the kernel of the fruit is yellowish, fragrant.

இது வளிநோயைப் போக்கும். சுறுசுறுப்பை உண்டாக்கும். வயிற்றுவலி, கழிச்சல் முதலிய நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும். இலங்கை, மலையாளம், நீலகிரி முதலிய இடங்களில் பயிராகிறது.

இதன் காய்மேல் படர்ந்திருப்பதே சாதி பத்திரி. இதில் பலவகைகள் உண்டு.

1. பெரிய காட்டுச் சாதிக்காய்: forest nutmeg - Myristica Malabarica
2. மலையாளச்சாதிக்காய்: Travancore nutmeg - Myristica magnia
3. நீலகிரி சாதிக்காய் - a variety grown in the Nilgiris
4. நாட்டுச் சாதிக்காய்:
5. காட்டுச் சாதிக்காய்; wild nutmeg - Myristica laurigolia.

*(சாஅக.)*.

**சாதிக்காய்**[2] *šādi-k-kāy*, பெ. (n.) சீமைக்கள்ளி மரம்; firabies.

**சாதிக்காய்**[3] *šādi-k-kāy*, பெ. (n.) ஐந்து நறுமணத்துள் ஒன்று; nutmeg, fragrant and medicinal.

து. சாய்காய்

**சாதிக்காய்ப்பெட்டி** *šādi-k-kāy-p-peṭṭi*, பெ. (n.) சீமைக்கள்ளிப் பெட்டி; dealwood box, especially used as packing case.

*[சாதிக்காய் + பெட்டி]*

**சாதிகம்** *šādigam,* பெ. (n.) ஆடாதோடை; Malabar winter cherry - Adhatoda vesica *(சா.அக.).*

**சாதிகி** *šādigi,* பெ. (n.) முருங்கை; moringa - drumstick tree *(சா.அக.).*

**சாதிகேசம்** *šādi-kēsam,* பெ. (n.) குங்குமப்பூ; English saffron flower - Crocus sativus *(சா. அக.).*

**சாதிகோசம்** *šādi-kōsam,* பெ. (n.) வேலம் பிசின்; gum of acacia tree - Gummi acasiae *(சா.அக.).*

**சாதிங்குலிகம்** *šādiṅguligam,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion. "சாதிங்குலிக மொடு சமர மொழுகிய" *(பெருங். இலாவாண. 5, 22).*

*[சாதி + குங்குலிகம்]*

**சாதிசம்** *šādišam,* பெ. (n.) *1. சாதிக்காய்*[1] *(தைலவ.தைல. 98). 2.* நறும்பிசின் *(யாழ்.அக.);* socotrine aloe.

*[சாதி → சாதிசம்]*

**சாதித்துப்பூசு-தல்** *šādittu-p-pūšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தேய்த்துப் பூசுதல் *(வின்.);* to rub, as oil. ointment.

*[சாதித்து + பூசு-,]*

**சாதிப்பன்னம்** *šādi-p-paṉṉam,* பெ. (n.) சாதிபத்திரி *(தைலவ.தைல. 109.);* mace.

**சாதினி** *šādini,* பெ. (n.) *1.* முசுக்கட்டை *(மலை.);* Indian Mulberry. *2.* பீர்க்கு; sponge-gourd.

**சாவுத்தீட்டு** *šāvu-t-tīṭṭu,* பெ. (n.) உறவினரின் இறப்பால் நேரும் தீட்டு *(கொ.வ.);* pollution on the death of a relative.

மறுவ. சாதீட்டு, சாத்தீட்டு

*[சாவு + தீட்டு]*

**சாதீவம்** *šādīvam,* பெ. (n.) குழி நாவல்; common myrtle - Myrtus communis *(சா.அக.).*

**சாது**[2] *šādu,* பெ. (n.) தயிர் *(யாழ்.அக.);* curd.

*[அள் → அளி. அளிதல் = குழைதல். அளி → அளை = தயிர். அளை → சளை → (சதை) → சாது]*

சாது → Skt. svādu

**சாதுகம்** *šādugam,* பெ. (n.) பெருங்காயம் *(மூ.அ.);* Asafoetida.

**சாதுசாக்கிரன்** *šādu-šākkiraṉ,* பெ. (n.) வான்வழிச் செல்லும் கலையறிந்த முனிவர்; sage, he knew travelling on sky *(அபி.சிந்.).*

*[சாது + சாக்கிரன்]*

**சாதுசீதளம்** *šādu-sīdaḷam,* பெ. (n.) மகிழம்பூ; ape-face flower - Mimusops elengi *(சா.அக.).*

**சாதுவன்** *šāduvaṉ,* பெ. (n.) காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்த வணிகன்; a merchant lived in Kaviri-p-pūmpaṭṭinam.

*[சாத்து → சாத்துவன் → சாதுவன்]*

**சாதேவி** *šādēvi,* பெ. (n.) திப்பிலி; long pepper *(சா.அக.).*

**சாந்தகப்பை** *šāndagappai,* பெ. (n.) கொத்தன் கரண்டி *(யாழ்ப்.);* mason's trowel.

*[சாந்து + அகப்பை. அகழ் → அகழ்ப்பு → அகழ்ப்பை → அகப்பை]*

**சாந்தகம்** *šāndagam,* பெ. (n.) நான்முகப் புல்; four-faced grass; buffalo reed - Saccharum spontaneum *(சா.அக.).*

**சாந்தகலம்** *šāndagalam,* பெ. (n.) தணக்கு முட்டைக் கோங்கு என்னும் மரம்; whirling nut - Gyrocarpus jacuini.

**சாந்தகவன்னி** *šāndaga-vaṉṉi,* பெ. (n.) தீமுறிப் பூடு; a kind of plant which is said to suspen the action of fire *(சா.அக.).*

**சாந்தகவிராயர்** *šānda-kavirāyar,* பெ. (n.) இரங்கேச வெண்பா இயற்றிய புலவர்; author of Iraṅkēsa-veṇpā.

*[சந்தம் → சாந்தம் + கவிராயர்]*

**சாந்தசந்திரோதயம்** *šānda-šandirōdayam,* பெ. (n.) ஒருவகைக் குளிகை *(வின்.);* a medicinal pill.

**சாந்தபனம்** *šāndabaṉam,* பெ. (n.) ஒருவகை நோன்பு; penance, religious vow.

இது மூன்றுநாள் பகலுணவு மட்டும் உண்டு, பின் மூன்றுநாள் இரவு உணவு மட்டும் உண்டு, மூன்றுநாள் கேட்காமல் கிடைத்த பொருளை உண்டு, மூன்று நாள் உணவின்றிப் பட்டினி இருக்கும் நோன்பு. *(அபி.சிந்.).*

**சாந்தம்**[1] *šāndam,* பெ. (n.) *1. அமைதி;* peace, composure, resignation, quietism. *"சாந்தந் தருபவர் வெங்கை புரேசர்" (வெங்கைக்கோ 329). 2.* **பொறுமை** (சூடா.); endurance, patience. *3.* **ஒன்பான் சுவைகளுள் ஒன்று** (திவா.); sentiment of resignation, quietistic sentiment, one of nava-rašam.

*[சந்து → சந்தம் → சாந்தம். சந்து செய்தல் = சமன்செய்தல், சமன்செய்து அமைதி உண்டாக்கல்.]*

சாந்த (šānta) என்னும் சொற்கு உழைத்தல், அதனால் ஏற்படும் களைப்பு, அதிலும் குறிப்பாகப் பூசை தொடர்பான சடங்கினை மேற்கொள்வதால் ஏற்படும் களைப்பு, களைப்பின் காரணமாகப் பணி செய்யாது வெறுமனே இருத்தல், ஓய்வெடுத்தல், அமைதியாதல் என்பன போன்ற பொருள்களைக் கொண்ட சம் (šam) என்பதை வேராகக் காட்டுகிறது மா.வி. அகரமுதலி. இதில் உழைத்தலும் அதனால் ஏற்படும் களைப்பும் அடிப்பொருள்களாகக் கொண்ட வேர் அமைதிப் பொருள் தராமை கண்டு கொள்க. உழைத்துக் களைப்படையும் நிலை சோர்வினைக் குறிக்குமேயல்லாமல் அமைதிப் பொருள் தராது. அதேபோல் சோர்வின் காரணமாகப் பணிசெய்யாது வெறுமனே இருத்தல் ஓய்வெடுத்தலாகுமே யல்லாமல் எவ்வகையிலும் அமைதியின் பாற்படாது.

அமைதி மனவுணர்வுகளை அமையச்செய்யும் (அமை + தி), அடக்கச் செய்யும் தன்மையது.

வடமொழிக்கு இனமொழிகளான மேலையாரிய மொழிகளில் இச் சொற்கான இனச்சொல் இல்லை.

கொண்முடிபு (சித்தாந்த) நூலாரும் மெய்ப் பொருள் (தத்துவ) நூலாரும், இருவகைப் பற்றுமறுத்து முற்றத்துறந்த முழுமுனிவரான ஓகியரும் இருவினையுஞ் செய்யாது இறைவன் மேல் எண்ணத்தை நிலையாக நிறுத்தி இருக்கும் நிலையில் அமைதி பிறக்கும் என்றும் அது இணையற்ற இன்பநிலை என்றும் குறிப்பிட்டுள்ளனரே யல்லாமல் பணி செய்யாது சும்மாயிருக்கும் நிலையில் அமைதி பிறக்கும் எனக் குறியாமை காண்க.

**சாந்தம்**[2] *šāndam,* பெ. (n.) *1. சந்தனம்;* sandal. *"சாந்த நறும்புகை" (ஐங்குறு. 253). 2.* **குளிர்ச்சி** (சூடா.); coolness. *3.* **சாணம்** (வின்.); cow-dung.

*[சாந்து → சாந்தம் (வ.வ. 148)]*

**சாந்தம்மி** *šāndammi,* பெ. (n.) *1.* **சந்தனக்கல்;** sandal-mortar. *"நறுஞ்சாந்தம்மியும்" (பெருங். உஞ்சைக். 38. 171). 2.* **சுண்ணாம்புச் சாந்து அரைக்கும் அம்மி;** stone for grinding lime.

ம. சாந்தம்மி

*[சாந்து + அம்மி. அம்முதல் = அமுக்குதல், அமுக்கியரைத்தல். அம் + இ - அம்மி = அமுக்கியரைக்கவுதவுங்கல்]*

**சாந்தலிங்கக்கவிராயர்** *šāndaliṅga-k-kavirāyar,* பெ. (n.) **தண்டலையார் சதகம் பாடியவர்;** author of Taṇḍalaiyār šadagam.

இவர் சோழநாட்டில் தண்டலைச்சேரியில் பிறந்தவர். தண்டலையார் சதகம், பழமொழி விளக்கம் எனவும் பெயர் பெறும் (அபி.சிந்.).

**சாந்தலிங்கசுவாமிகள்** *šānda-liṅga-šuvāmigaḷ,* பெ. (n.) **கொலைமறுத்தல் முதலிய நூல்கள் இயற்றியவரும் 17ஆம் நூற்றாண்டினருமாகிய ஒரு வீரச் சிவனிய முனிவர்;** a vīra-šaiva ascetic of the 17th century author of kolai-maṟuttal and some other works.

**சாந்தரை-த்தல்** *šāndarai-,* 4 செ.கு.வி. (v.i.) *சாந்தினை அரைத்துக் கூழாக்குதல்;* to grind sandal to make paste.

*[சாந்து + அரை-,]*

**சாந்தவாரி** *šānda-vāri,* பெ. (n.) **தண்ணீர் விட்டான்** (மலை.); a common climber with many thick fleshy roots.

**சாந்தன்** *šāndaṉ,* பெ. (n.) *1.* **அமைதியுடையோன்;** quiet, peaceful person, patient man. *"புராரியும் புகழ்தற்கொத்த சாந்தனால்" (கம்பரா. திருவவ. 34). 2.* **அருகன்** (திவா.); Arhat. *3.* **புத்தன்** (திவா.); Buddha.

*[சாந்தம் → சாந்தன்]*

**சாந்தாற்றி** *šāndāṟṟi,* பெ. (n.) *1.* **சிற்றால வட்டம்;** fan. *'மணிக்கட் பீலி மின்னு சாந்தாற்றி' (சீவக. 839). 2.* **பீலி விசிறி** (அக.நி.); bunch of peacock's feathers used as fan.

*[சாந்து + ஆற்றி]*

**சாந்தி**[1] *šāndi,* பெ. (n.) *1. அமைதி;* composure, tranquillity, peace. *"சாந்தி மேவி யுயர் தருமம் மல்கி" (சேதுபு. பாவநா. 7). 2. தணிவு;* alleviation, pacification. *3. கோள் கோளாறுகளை அமைதிப்படுத்தச் செய்யும் விழா;* propitiatory rites for averitng the evil influences of planets. *4. கழுவாய்;* remedy, antidote. *5. திருவிழா;* festival. *"கபாலீச் சரமமர்ந்தான் பெருஞ்சாந்தி காணாதே" (தேவா. 1119. 10). 6. பூசை;* worship, *'ஆய்ந்த மரபிற் சாந்திவேட்டு' (பதிற்றுப். 90, பதி.).* **7. தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர்** *(திருக்கலம். காப்பு. உரை);* a Jaina Arhat, one of 24 firttangarars.

*[சாந்தம் → சாந்தி]*

*சாந்தம்*[1] பார்க்க

**சாந்திக்கூத்தன்** *šāndi-k-kūttan,* பெ. (n.) *சாந்திக்கூத்து ஆடுபவன்;* person performing the šāndi-k-kūttu. *'சாந்திக்கூத்தன் திருவாலன் திருமுது குன்றனான விஜயராஜேந்திர ஆசார்யனுக்கும்' (S.I.I.ii. 306).*

*[சாந்தி + கூத்தன்]*

**சாந்திக்கூத்து** *šāndi-k-kūttu,* பெ. (n.) ஒன்பது வகைகளையுடையதும் கோயில்களில் திருவிழாக் காலங்களில், உலக மக்களின் அமைதி வேண்டி ஆடப்படுவதுமான கூத்து வகையுள் ஒன்று; a kind of dance calculated to give peace of mind to the people and other actors. "சித்திரைத் திருநாளுக்குக் கூத்தாடுகைக்குச் சாந்திக் கூத்தாடுகிற ஏழுநாட்டு நங்கைக்கு கூத்தாடுகைக்கு விட்டநிலம்-இந்நிலம் கொண்டு இத்திருநாளுக்கு ஆடக்கடவ கூத்து ஒன்பது ஆடுவாளாகவும்" *(விக்கிரம சோழன், கிபி. 1134, புதுக். கல். 128)* (கல்கலை.அக.).

*[சாந்தி + கூத்து]*

**சாந்திமத்தீவு** *šāndima-t-tīvu,* பெ. (n.) மேல்கடற்கண் உள்ள ஒரு தீவு; an island in the Arabian sea.

*[சாந்திமம் + தீவு. தீர்வு → தீவு]*

முதல் இராசேந்திரன் காலத்தில் இத்தீவு சோழர்களால் வெற்றி பெறப்பட்டது.

யாரும் கிட்டுதற்கரிய அரண்களையுடையது சாந்திமத்தீவு என கூறப்படுகிறது *(பிற். சோழ. வர. சதாசிவபண், பக். 155.).*

**சாந்திரகம்** *šāndiragam,* பெ. (n.) *1. இஞ்சி;* green ginger. *2. சுக்கு;* dried ginger *(சா.அக.).*

**சாந்திறாசு** *šāndirāšu,* பெ. (n.) ஒரு வகை மரம் *(L.);* Tasmanian pine.

**சாந்து** *šāndu,* பெ. (n.) *1. சந்தன மரம்;* sandal tree. *"சாந்துசாய் தடங்கள்" (கம்பரா. வரைக்காட்சி. 44). 2. கலவைச் சந்தனம்;* sandal paste. *"புலர்சாந்தின்....வியன்மார்ப" (புறநா. 3).* **3. அரிசி அல்லது கேழ்வரகைக் கருக்கிக் கூட்டப்பட்டதாய் நெற்றிக்கிடும் கருஞ்சாந்து;** black pigment made of burnt rice or ragi, used as tilaka. *4. திருநீறு;* sacred ashes. *"ஈசன சாந்தும்" (புறநா. 246). 5. விழுது;* paste. *"வெள்ளெட் சாந்து" (புறநா. 246). 6. சுண்ணாம்பு;* mortar, plaster. *7. மலம் (வின்.);* faeces.

*ம. சாந்து; க. சாது, சாந்து; தெ. சாது; து. சாந்து; குட. சாந்தி*

*[சார் → சார்த்து → சாத்து. சாத்துதல் = பூசுதல், திருமண் காப்பிடுதல், சந்தனம் பூசுதல். சாத்து → சாந்து = சுண்ணாம்புச் சேறு, அரைத்த சந்தனம் (வ.வ. 147, 148)]*

Skt. šandana

**சாந்துக்காரை** *šāndu-k-kārai,* பெ. (n.) சுவர் முதலியன பூசுதற்குரிய சுண்ணாம்பு (இ.வ.); lime for plastering walls, etc.

*[சாந்து + காரை]*

**சாந்துக்காறை** *šāndu-k-kārai,* பெ. (n.) மகளிர் கழுத்தணிவகை (இ.வ.); collar-like ornament worn by women.

*[சாந்து + காறை]*

**சாந்துக்கோய்** *šāndu-k-kōy,* பெ. (n.) சாந்துப்பரணி; perfume box or casket. *"ஒடிச் சாந்துக்கோய் புகிய செல்வ" (சீவக. 764).*

*[சாந்து + கோய்]*

**சாந்துகா** *šānduga,* பெ. (n.) வெளிச்சிப் பிசின்; the gem of wood apple tree *(சா.அக.).*

*[சாந்து → சாந்துகா]*

**சாந்துகுத்து-தல்** *šāndu-kuttu-,* 5செ.குன்றாவி. (v.t.) சுண்ணாம்பை உலக்கையாற் குத்திச் சாந்தாக்குதல்; to pound mortar for use.

*[சாந்து + குத்து-,]*

**சாந்துகுழை-த்தல்** *šāndu-kuḻai-*, 4 செ.குவி. (v.i.) *1.* பொட்டிடுதற்குச் சாந்து குழைத்தல்; to soften black pigment with water for use as tilaka. *2.* சுண்ணாம்பு முதலியன குழைத்தல்; to pound and temper mortar, etc.

ம. சாந்துகுழய்க்குக

*[சாந்து + குழை-,]*

**சாந்துகூட்டு-தல்** *šāndu-kūṭṭu-*, 5 செ.குவி. (v.i.) நெற்றிக்கிடுஞ் சாந்து உண்டாக்குதல்; to prepare šāndu or black pigment.

*[சாந்து + கூட்டு-,]*

**சாந்துசாத்தி** *šāndu-šātti*, பெ. (n.) கோயிலில் மூலவர்க்கு நெய்க் காப்பிடுகை (R.); anointing of an idol.

*[சாந்து + சாத்தி. சார் → சார்த்து → சாத்தி]*

**சாந்துசேவை** *šāndu-šēvai*, பெ. (n.) சாந்துசாத்தி (R.) பார்க்க; see *šāndu-šātti.*

*[சாந்து + சேவை]*

Skt. sēv → த. சேவை

**சாந்துதேய்-த்தல்** *šāndu-tēy-*, 5 செ.குவி. (v.i.) சாந்தரை-த்தல் பார்க்க; see *šāndarai-.*

ம. சாந்துதேய்க்குக

*[சாந்து + தேய்-,]*

**சாந்துப்படி** *šāndu-p-paḍi*, பெ. (n.) சந்தனக் குழம்பு தருவதற்கான படி; allowance for supplying sandal paste (சேரநா.).

ம. சாந்துப்படி

*[சாந்து + படி]*

**சாந்துப்புறம்** *šāndu-p-puṟam*, பெ. (n.) சந்தனம் கொடுத்துவருவதற்காக விடப்பட்ட இறையிலி நிலம் (சீவக. 2577); land granted rent-free for supplying sandal paste to the king.

*[சாந்து + புறம்]*

**சாந்துப்பொட்டு** *šāndu-p-poṭṭu*, பெ. (n.) கருஞ்சாந்தால் நெற்றியிலிடும் பொட்டு; tilaka made with black pigment.

க. சாது; தெ. சாது

*[சாந்து + பொட்டு]*

**சாந்துப்பொடி** *šāndu-p-poḍi*, பெ. (n.) மணப் பொடி (வின்.); perfumed powder.

*[சாந்து + பொடி]*

**சாந்துபூசு-தல்** šāndu-pūšu-, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* சந்தனம் முதலியவை பூசுதல் (வின்.); to smear the body with sandal or other unguents. *2.* சுண்ணாம்பு பூசுதல்; to plaster a wall.

ம. சாந்துபூசுக

*[சாந்து + பூசு-,]*

**சாந்துருவம்** *šānduruvam*, பெ. (n.) சுண்ணச் சிலை; plaster statue (கழ.அக.).

*[சாந்து + உருவம்]*

**சாந்துலக்கை** *šāndulakkai*, பெ. (n.) சுண்ணாம்புச் சாந்து குத்தும் உலக்கை; pestle for pounding mortar.

*[சாந்து + உலக்கை. உல் → உலம் = திரட்சி. உலம் → உலக்கை = திரண்ட தடி]*

**சாந்துவாரி** *šānduvāri*, பெ. (n.) குப்பைக்காரன் (வின்.); scavenger.

*[சாந்து + வாரி]*

**சாந்தை** *šāndai*, பெ. (n.) மலைமகள் (கூர்மபு. திருக்கலியாண. 23); Pārvati.

**சாப்படுக்கை** *šā-p-paḍukkai-*, பெ. (n.) இறுதிப் படுக்கை, சாவுக்குரிய இறுதிநோய்; death bed.

*[சா + படுக்கை. பள் → படு → படுக்கை]*

**சாப்பறை**[1] *šāppaṟai* பெ. (n.) நெய்தல் நிலப் பறை; maritime district drum (கழ.அக.).

*[சா + பறை]*

**சாப்பறை**[2] *šāppaṟai* பெ. (n.) சாவில் அடிக்கப்படும் பறை (தி.வா.); funeral drum.

*[சா + பறை]*

**சாப்பாக்கொடு-த்தல்** *šāppā-k-koḍu-*, 4 செ.குவி. (v.i.) சுருதியோடு இசைய வேண்டி முழவைத் தட்டிப் பார்த்தல்; to test the tone of a mattaḷam by striking it.

*[சாப்பா + கொடு-,]*

**சாப்பாட்டுக்கடை** *sāppāṭṭu-k-kaḍai,* பெ. (n.) *1.* **பணங்கொடுத்துச் சாப்பிடுங் கடை;** hotel, restaurant. *2.* **உணவிடுகை;** serving of food. *சாப்பாட்டுக்கடை முடிந்துவிட்டதா?*

*[சாப்பாடு + கடை]*

**சாப்பாட்டுராமன்** *sāppāṭṭu-rāmaṉ,* பெ. (n.) *1.* **பெருந்தீனிக்காரன்;** glutton. *2.* **பயனற்றவன்;** good-for-nothing fellow.

*[சாப்பாடு + ராமன்]*

இராம காதைத் தலைவன் இராமன் மாந்தப் பண்புகளின் உயர்விடமாகக் காட்டப் பட்டுள்ளதையொற்றிப் பிறசெயல்களிலும் மேலானவன் (உண்பதில் முன்னிற்பவன்) எனக் காட்டும் முகத்தான் ஆளப்பட்ட சொல். ஒநோ: தண்டச்சோத்துத் தடிராமன், திண்ணைத் தூங்கி இராமன்.

**சாப்பாட்டுவிடுதி** *sāppāṭṭu-viḍudi,* பெ. (n.) **பணங்கொடுத்து உண்ணும் உண்டிச்சாலை** (இ.வ.); hotel.

*[சாப்பாடு + விடுதி]*

**சாப்பாடு**[1] *sāppāḍu,* பெ. (n.) *1.* **கவளங் கவளமாகக் கறிவகைகளுடன் (அல்லது அவையின்றிக்) குழம்பும் சாறும் மோரும் (அல்லது அவற்றுள் ஒன்று) கலந்து உண்பதற்கான சோறு;** boiled rice with or without side dishes, sauce, buttermilk, etc. *2.* **உணவு;** food, meal especially of human beings. "நல்வண்ணமென்னி லொரு சாப்பாடு" *(திருவேங். சத. 29).*

ம. சாப்பாடு; தெ. சாபாடு

*[சப்பு → சப்பிடு → சாப்பிடு → சாப்பாடு]*

**சாப்பாடு**[2] *sāppāḍu,* பெ. (n.) **நல்ல அடி;** drubbing. 'நீ சேட்டை பண்ணினால் சாப்பாடு கிடைக்கும்' *(உ.வ.).*

ம. சாப்பாடு; தெ. சாபாடு

*[சப்பு → சப்பிடு → சாப்பிடு → சாப்பாடு]*

**சாப்பாணம்** *sāppāṇam,* பெ. (n.) யாழ்ப்பாணம்; a northern province of Ceylon, Jaffna *(சேரநா.).*

ம. சாப்பாணம்

*[யாழ்ப்பாணம் → சாப்பாணம்]*

**சாப்பிடு**[1]**-தல்** *sāppiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) *1.* **குழம்பும் சாறும் மோரும் (அல்லது அவற்றுள் ஒன்று) கலந்த சோற்றைக் கவளங் கவளமாகக் கறிவகைகளுடன் (அல்லது அவையின்றி) உட்கொள்ளுதல்;** to take into mouth chew and swallow boiled rice with or without side dishes, sauce, butter milk, etc. இருவரும் ஒன்றாகத்தான் சாப்பிடச் செல்வோம். *2.* **திட உணவுகளை உண்ணுதல்;** to eat solid foods, eatables. பழம் சாப்பிடப் பெரும் பாலோர்க்கு ஆசை. *3.* **பருகையை (நீர்மத்தை) க் குடித்தல்;** to drink. தேநீர் சாப்பிடச் சென்றனர். *4.* **புகைத்தல் (புகை பிடித்தல்);** to smoke. வெண் சுருட்டு (சிகரட்) சாப்பிடும் பழக்கம் கேடானது.

ம. சாப்பிடுக; தெ. சாபடு

*[சப்பு → சப்பிடு → சாப்பிடு-,]*

**சாப்பிடு**[2]**-தல்** *sāppīḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **கவர்தல்;** to consume, misappropriate ஊர்ப்பணத்தைச் சாப்பிடக் கூடாது.

ம. சாப்பிடுக

*[சப்பிடு → சாப்பிடு]*

**சாப்பிரா** *sāppirā,* பெ. (n.) **சிறுமரவகை** (I.P.); arnotto.

தெ. சாபரா

**சாப்பிராவிதை** *sāppirā-vidai,* பெ. (n.) **குரங்குமஞ்சி விதை;** arnotto, monkey turmeric-Bixa orellana *(சா.அக.).*

*[சாப்பிரா + விதை]*

**சாப்பிள்ளை** *sā-p-piḷḷai,* பெ. (n.) **கருவிலே இறந்துவிழும் பிள்ளை;** still-born child. 'சாப்பிள்ளைபெற்றுத் தாலாட்டலாமா?' *(இ.வ.).*

ம. சாப்பிள்ள, சாகிடாவு

*[சா + பிள்ளை]*

**சாப்பீடு** *sāppīḍu,* பெ. (n.) 'சப்பு' எனும் **உயர்திணை ஒலிக்குறிப்பினின்று தோன்றிய ஒலிக்குறிப்புச் சொல்;** onom. expr. word signifying smacking sound.

*[சப்பு → சப்பிடு → சாப்பிடு → சாப்பீடு]*

**சாப்பு[1]-தல்** *sāppu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *அடித்தல்;* to strike. "கேவரகைத் தண்டெடுத்துக் கேப்பை யென்று சாப்பினேன்" *(நெல்விடு. 416).*

*[சாய் → சாய்ப்பு → சாப்பு-,]*

**சாப்பு[2]** *sāppu,* பெ. (n.) படி (C.G.); copy, transcript.

*[சாய் → சாயை = நிழல். சாய் → சாயல்= ஒப்பு. சாய் → சாய்பு → சாய்ப்பு → சாப்பு]*

**சாப்பு[3]** *sāppu,* பெ. (n.) ஒருவகைத் தாளம்; a kind of cymbal *(கழஅக.).*

**சாப்புத்தாளம்** *sāppu-t-tāḷam,* பெ. (n.) *தாளவகை;* variety of time-measure (Mus.).

*[சாப்பு + தாளம்]*

**சாப்புள்** *sā-p-puḷ,* பெ. (n.) சாக்குருவி பார்க்க; see *sā-k-kuruvi.*

*[சா + புள்]*

**சாப்பை[1]** *sāppai,* பெ. (n.) புற்பாய் (திவா.); mat made of grass or rushes.

ம. சாப்ப; க. சாப, சாபெ, சாபெ; தெ. சாப; து. சாபெ, சாபெ; துட. சோப்ய; பட. சாபெ.

*[சாய் + பாய் = சாய்ப்பாய் → சாப்பை (கொ.வ.). சாய் = பாய்முடையப் பயன்படும் நீர்க்கால் புல்வகை]*

**சாப்பை[2]** *sāppai,* பெ. (n.) ஆற்றலில்லாதவன் (வின்.); weak-minded person.

*[சப்பை → சாப்பை]*

**சாப்பைக்கொண்டான்** *sāppai-k-koṇḍāṉ,* பெ. (n.) சாப்பைச்சொண்டான் பார்க்க; *sāppai-c-coṇḍāṉ* (சாஅக.).

*[சாப்பைச்சொண்டான் → சாப்பைக் கொண்டான்]*

**சாப்பைச்சொண்டான்** *sāppai-c-coṇḍāṉ,* பெ. (n.) நாரைவகை (யாழ்ப்); spoonbill, species of platalea.

**சாப்பொறி** *sā-p-poṟi,* பெ. (n.) காப்பாகத் தோன்றினாலும் உயிருக்குப் பேரிடர் தரக்கூடிய இடம்; death-trap.

*[சா + பொறி]*

**சாபஞ்சியம்** *sābañjiyam,* பெ. (n.) சீரகம்; cummin seed (சாஅக.).

**சாபத்திரி** *sāpattiri,* பெ. (n.) *சாதிபத்திரி (கொ.வ.);* mace.

**சாபம்[1]** *sābam,* பெ. (n.) தவத்தோர் கடிந்து கூறும் மொழி; curse, imprecation. "தடுப்பருஞ் சாபம்" *(கம்பரா. அகலிகை. 7.).*

ம. சாபம்

*[சா → சாவி (பி.வி.). சாவித்தல் = அங்கதம் பாடி அல்லது சினந்துரைத்துச் சாகப் பண்ணுதல், சாவு குறித்த சொற்களைச் சொல்லித் திட்டுதல்.*

*வாழ்த்து (வாழவை) என்னும் பிற வினைக்கு எதிராகச்சாவியென்னுஞ் சொல்லே பொருத்தமாயிருத்தல் காண்க. இனி, ஒருவன் கடுமையாகத் திட்டும்போது, 'சாவிக்கிறன்' என்று கூறும் உலக வழக்கையும் நோக்குக (வ.வ. 147).*

*சாவி → சாவம் → சாபம்]*

**சாபம்[2]** *sābam,* பெ. (n.) 1. மூங்கிலால் செய்த வில்; bow made of bamboo. 2. வில்; bow. "சாபஞ்சாத்திய கணை துஞ்சு வியனகர்" *(பெரும்பாண். 121).* 3. வானவில்; rainbow. 4. சிலை ஓரை (தனுசு) (திவா.); sagittarius of the zodiac.

மறுவ. கொடு, மரம், சிலை.

ம. சாபம்; க. சாப

*[ஆவம் = மூங்கில். ஆவம் → சாவம் = வில். சாவம் → சாபம்]*

த. சாபம் → Skt. cāpa

**சாபம்[3]** *sābam,* பெ. (n.) விலங்கின் குருளை; the younger of an animal. "சாபவெங் கோளரியென" *(பாரத. சம்பவ. 40).*

**சாபம்[4]** *sābam,* பெ. (n.) விலக்கப்பட்டது; that which is prohibited or banned. "உலகத்தார் சாபமென்று ஆசௌசங் கொள்கின்றது மாம்சத்தையன்றே" *(நீலகேசி, 341, உரை.).*

**சாபம்கொடு-த்தல்** *sābam-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) சாபமிடு-தல் பார்க்க; see *sābam-iḍu-.*

க. சாபகொடு

*[சாபம் + கொடு-,]*

**சாபமிடு-தல்** *sābamiḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) திட்டுதல்; to curse, revile.

க. சாபகொடு

*[சாபம் + இடு-,]*

**சாபவான்புழு** *šāpa-vān-pulu,* பெ. (n.) வில்லூன்றிப்புழு (ஞானா.20).; an insect.

**சாபறை** *šā-parai,* பெ. (n.) சாப்பறை² (யாழ்அக) பார்க்க; see *šā-p-parai.*

*[சா + பறை]*

**சாபாவனி** *šāpāvani,* பெ. (n.) அரசிறையைத் தவிர்ப்பதற்காக ஒளித்துச் செய்யும் பயிர்த் தொழில் (M.Sm. D. I. 278); concealment of cultivation for the purpose of evading payment of government revenue.

**சாபி-த்தல்** *šābi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சாவி¹-த்தல் பார்க்க; see *šāvi-.* "கேள்வித் தலைவரைச் சாபியா" (உபதேசகா. அயமுகி. 75).

*[சவி → சபி → சாபி]*

**சாபிணம்** *šā-pinam,* பெ. (n.) வலியற்றுச் சாகுநிலையிலுள்ளவன் (வின்.); weak old person, as one about die-used in contempt.

*[சா ¹ + பிணம்)]*

**சாபிள்ளை** *šāpillai,* பெ. (n.) சாப்பிள்ளை (வின்.) பார்க்க; see *šā-p-pillai.*

*[சா + பிள்ளை]*

**சாபுதாளம்** *šāpu-tālam,* பெ. (n.) சாப்புதாளம் பார்க்க; see *šāppu-tālam.*

*[சாப்புதாளம் → சாபுதாளம்]*

**சாம்பகி** *šāmbagi,* பெ. (n.) நெருஞ்சில்; calotrope - Tirbulus terrestris (சா.அக.).

**சாம்பச்சி** *šāmbacci,* பெ. (n.) சாம்பன் குடியைச் சார்ந்த பெண் (சங்.அக.); a woman belonging to samban clan.

*[சாம்பன் → சாம்பத்தி → சாம்பச்சி. அச்சி = பெண்பாலீறு]*

**சாம்பசதாசிவன்** *šāmba-sadā-sivan,* பெ. (n.) சிவனார் வேம்பு; Šhiva's neem - Indigofera asphalathoides (சா.அக.).

**சாம்பசிவம்** *šāmbasivam,* பெ. (n.) அறுகம்புல்; sacred grass (சா.அக.).

**சாம்பசிவன்** *šāmba-šivan,* பெ. (n.) அம்பிகையுடன் கூடிய சிவன்; Šiva in company with Pārvati.

*[சாம்பன் + சிவன். சாம்பல் → சாம்பன் = சுடலையாண்டி]*

**சாம்பம்** *šāmbam,* பெ. (n.) ஆனைநெருஞ்சி (மலை.); a small plant.

**சாம்பர்** *šāmbar,* பெ. (n.) சாம்பல்¹ பார்க்க; see *šāmbal¹.* "சாம்பரகலத் தணிந்தாய் போற்றி" (தேவா. 967. 4).

*[சாம்பல் → சாம்பர். ல - ர போலி]*

**சாம்பராக்கு** *šāmbarākku,* பெ. (n.) பாட்டினிறுதி தோறும் 'சாம்பராக்கு' என்று முடியுமாறு பாடப்படும் ஒரு வகைப் பாட்டு (வின்.); a poem in praise of a deity, each stanza of which ends with the refrain šāmbarākku.

*[சாம்பல் → சாம்பர் + ஆக்கு]*

**சாம்பல்¹** *šāmbal,* பெ. (n.) 1. ஏதாவது பொருளை எரித்த பின் மிஞ்சும் பொடித்துகள்; powdery residue left after combustion of any substance, ashes. "சுடுகாடான சாம்பல ரங்கத்திலே நிருத்தமாடி" (பு.வெ. 9, 43, உரை.). 2. வாடற்பூ; withered flower. "ஆம்பற் பூவின் சாம்பலன்ன" (குறுந். 46). 3. முதுமை (பிங்.); old age. 4. புகையிலை, பருத்திப்பயிர்களைக் கெடுக்கும் பூச்சி (இ.வ.); insect causing damage to tobacco, cotton, etc.

ம. சாம்பல்

*[சுள் → சுட்பு → சுப்பு. சுப்பெனல் = விரைந்து நீர்வற்றுதல். சுப்பு → சுப்பல் = சுள்ளி. சுப்பு → சும்பு → சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல், வாடுதல். சாம்பு → சாம்பல் (வே.க. 89). எரிபட்ட நீறு, சாம்பல் நிறமாகத் தெரியும் வாடிய பூ, பயிர்களை அழிக்கும் சாம்பம்நிறப் பூச்சி]*

**சாம்பல்²** *šāmbal,* பெ. (n.) நாவல் மரம் (மலை.); jamun plum.

*[சம்பு → சாம்பு → சாம்பல்]*

*சம்பு⁴ பார்க்க*

**சாம்பல்கரை-த்தல்** *šāmbal-karai-,* 4 செ.குன்றாவி. (v.t.) சாம்பற்கரை-த்தல் பார்க்க; see *šāmbar-karai-.*

*[சாம்பல் + கரை-,]*

**சாம்பல்கிளுவை** *šāmbal-kiluvai,* பெ. (n.) சாம்பல்நிறமான கிளுவை; grey balsum - Balsmodendron Beryyi (சா.அக.).

*[சாம்பல் + கிளுவை]*

**சாம்பல்சத்து** *šāmbal-šattu,* பெ. (n.) பயிரின் திரட்சிக்கும், நோய் எதிர்ப்புத் தன்மைக்கும் உதவியாக இருந்து நல்ல சாகுபடியைத் தரும் சத்து; potash.

*[சாம்பல் + சத்து]*

**சாம்பல்நத்தம்** *šāmbal-nattam,* பெ. (n.) மதுரை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Madurai district.

*[சாம்பல் + நத்தம்]*

சம்பந்தர் சமணர்களைச் சொல்லாடலில் (வாதில்) வென்று அவர்கள் பாடிய ஏடுகளைத் தீயில் எரித்துச் சாம்பலாக்கிய காரணமாக பெற்ற பெயர் சாம்பல் நத்தம் *(த.ஊ.பெ.).*

**சாம்பல்நாரை** *šāmbal-nārai,* பெ. (n.) சாம்பல் நிற நாரை வகை; eastern grey heron - Ardea cinerea rectirostris.

மறுவ. நாராயன், நரையான், நாராயணப்பட்சி

*[சாம்பல் + நாரை]*

நரை என்ற சொல், சாம்பல் கலந்த வெள்ளை நிறத்தைக் குறிக்கும். நரை நிறமுடைய பறவையை நரையான் (அ) நாரை என்று அழைத்தனர் *(சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்).*

**சாம்பல்நோய்** *šāmbal-nōy,* பெ. (n.) எள் பயிரைத் தாக்கும் நோய்; a disease attack gingelly.

*[சாம்பல் + நோய். நுள் → நொள் → நோள் → நோய்]*

**சாம்பல்புறா** *šāmbal-purā,* பெ. (n.) ஒரு வகைப் புறா; a kind of dove - Streptopelia decaocto.

*[சாம்பல் + புறா]*

வெள்ளைப் புறா, தூதுணம் புறா என்ற வேறு பெயர்களும் உண்டு. வேலமரத்தில் காணப்படும் தவசங்களோடு சிறுசிறு கற்களையும் விழுங்கும் தன்மையால் தூதுணம் புறா என்றும் அழைப்பர் *(சங்.புள்.விள.).*

**சாம்பல்பூ-த்தல்** *šāmbal-pū-,* 4 செகுன்றாவி. (v.t.) *1.* கதிரில் உள்ள கங்கின்மேல் சாம்பல் படிதல், மரம், காய் முதலியவற்றில் சாம்பல்நிறப் பொருள் படிதல்; to be covered with ashes or ash like thing. *2.* உடல் வெளுத்தல்; to turn ashen to body. அவன் உடம்பு மெலிந்து சாம்பல் பூத்துவிட்டது. *3.* அதிக வேலையினால் உடலில் (வெயர்வையால்) சாம்பல்படிதல்; to turn ashen (of body). 'உடல் சாம்பல் பூத்து விட்டது, குளிக்கவேண்டும்' *(உ.வ.).*

*[சாம்பல் + பூ-,]*

**சாம்பல்பூசனம்** *šāmbal-pūšanam,* பெ. (n.) பருத்திச்செடியைத் தாக்கும் ஒரு நோய், பூசனக்கொல்லிகள்; a kind of disease attack cotton.

*[சாம்பல் + பூசனம். பூஞ்சாளம் → பூசாளம் → பூசனம்]*

**சாம்பல்மரலி** *šāmbal-marali,* பெ. (n.) சிறுநாவல்; ruddy black plum - Eugenia rubicunda *(சா.அக.).*

*[சாம்பல் + மரலி]*

**சாம்பல்மொந்தன்** *šāmbal-mondan,* பெ. (n.) வாழைவகை; a variety of plantain bearing ash - coloured fruits.

ம. சாம்பமொந்தன்

*[சாம்பல்' + மொந்தன். பொந்து → பொந்தன் → மொந்தன். பொதுபொது (இரட்டைக் கிளவி). பொதுக்கு, பொந்து என்னும் சொற்களை நோக்குக. இவை பெருமைப்பொருளைக் குறிப்பன]*

**சாம்பல்வருணி** *šāmbal-varuṇi,* பெ. (n.) செருப்படை; a low spreading plant found in rice fields after harvest - Coldenia procumbens *(சா.அக.).*

*[சாம்பல் + வருணி]*

**சாம்பல்வாழை** *šāmbal-vālai,* பெ. (n.) சாம்பல் மொந்தன் (G.Sm.D.I.i, 215) பார்க்க; see *šāmbal-mondan.*

*[சாம்பல்' + வாழை. சாம்பல் நிற வாழை]*

**சாம்பலச்சி** *šāmbalacci,* பெ. (n.) வெடியுப்பு *(யாழ்ப்.);* saltpetre, potassium nitrate.

*[சாம்பல் → சாம்பலச்சி]*

**சாம்பலடிப்பெருநாள்** *šāmbaladi-p-perunāḷ,* பெ. (n.) கிறித்துவத் திருநாள்களுள் ஒன்று; Ash wednesday. Shrove Tuesday *(R.C.).*

ம. சாம்பல் பெருநாள்

*[சாம்பல் + அடி + பெருநாள்]*

**சாம்பலாண்டி** *šāmbal-āṇḍi,* பெ. (n.) 1. உடல் முழுதும் நீறுபூசிய துறவி; religious mendicant whose whole body is smeared with ashes. 2. கோமாளி (வின்.); clown.

*[சாம்பல் + ஆண்டி]*

**சாம்பலுப்பு** *šāmbal-uppu,* பெ. (n.) மரவுப்பு (இங்.வை.166); potash, salt of tartar, Potassa.

*[சாம்பல் + உப்பு]*

**சாம்பலெரு** *šāmbal-eru,* பெ. (n.) வறட்டி, விறகு, உமி முதலியவை முற்றிலும் எரிந்தபின், கிடைக்கும் எரு (செங்கை); a kind of manure.

*[சாம்பல்+ எரு]*

**சாம்பலொட்டி** *šāmbal-oṭṭi,* பெ. (n.) எருக்கு (சாம்பனிறம் படிந்திருப்பது) (சங்.அக.); madar, as being of ash-like dull-grey colour.

*[சாம்பல்¹ + ஒட்டி. சாம்பலை அப்பியது போன்ற நிறமுடையது]*

**சாம்பவம்¹** *šāmbavam,* பெ. (n.) 1. சிவன் தொடர்பானது; that which pertains to Šivan. 2. சிவமதவேறுபாடு; a šaiva sect. "சிலர் சாத்தமும் சிலர் சாம்பவமுமாய்ச் சேர்வர்" (திருக்காளத். பு. 30: 26).

*[சம்பு → சாம்பு → சாம்பல் → சாம்பன் → சாம்பவன் → சாம்பவம்]*

**சாம்பவம்²** *šāmbavam,* பெ. (n.) சம்புநாவல் (யாழ்.அக.); rose-apple.

*[சம்பு → சாம்பு → சாம்பல் → சாம்பவம்]*

**சாம்பவன்** *šāmbavaṉ,* பெ. (n.) சிவனை வழிபடுவோன்; worshipper of Šivaṉ, šaiva devotee.

*[சாம்பன் → சாம்பவன்]*

**சாம்பவனோடை அம்பலவாண முனிவர்** *šāmbavaṉōḍai-ambalavāṇa-muṉivar,* பெ. (n.) 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து திருவுசாத்தானப் புராணம் பாடிய தில்லை வளாகத்தைச் சேர்ந்த புலவர்; a poet, author of Tiruvušāttāṉa-p-purāṉam, lived in 17th century at Tillaivaḷāgam. "சாம்பவனோடை என்பது இவரின் ஊர்" (பிற்.புல.).

*[சாம்பனோடை + அம்பலவாண முனிவர்]*

**சாம்பவி** *šāmbavi,* பெ. (n.) 1. நாவல்வகை; clove leaved black plum. 2. பெருநாவல் (மலை.); east Indian rose-apple.

*[சாம்பவம் → சாம்பவி]*

**சாம்பவிவிந்து** *šāmbavi-vindu,* பெ. (n.) கௌரி செய்நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic.

**சாம்பற்கத்தலை** *šāmbaṟ-kattalai,* பெ. (n.) மூன்றடி நீளமும், சாம்பல்நிறமும் கொண்டதும், சாப்பிட உதவாததுமான கத்தலை என்னும் கடல்மீன்; a grey-coloured sea-fish - Sciaena albida alias corvina albida. It is about 3ft long not esteemed for table (சா. அக.).

*[சாம்பல் + கத்தலை]*

**சாம்பற்கரைத்தல்** *šāmbaṟ-karaittal,* பெ. (n.) பிணத்தை எரித்த பின்பு, சாம்பலைக் கரைத்து எலும்பைப் பொறுக்கும் ஈமச்சடங்கு (இ.வ.); performing the ceremony of pouring water on the ashes and collecting the bones after cremation.

*[சாம்பல் + கரைத்தல். இதனை அங்கங் கரைத்தல் என்று கூறுவது, தென்பாண்டி வழக்கம்]*

**சாம்பற்கரை-த்தல்** *šāmbaṟ-karai-,* 4 செ.குன்றாவி. (v.t.) இறந்தவரின் உடலை எரித்தபின் சாம்பலையும் எரியாத எலும்பையும் எடுத்து நீரில் விடுதல்; to immerse ashes of a cremated person in river etc., a post-funeral rite.

*[சாம்பல் + கரை-,]*

**சாம்பற்கற்றாழை** *šāmbaṟ-kaṟṟāḻai,* பெ. (n.) வீக்கத்தைக் குணப்படுத்தும் சாம்பல் நிறமான கற்றாழை; an ash-coloured aloe found grown near the railway fencing; Rail - Aloe americana.

*[சாம்பல் + கற்றாழை]*

**சாம்பற்காட்டுக்கோழி** *šāmbaṟ-k-kāṭṭu-k-kōḻi,* பெ. (n.) சாம்பற்கோழி பார்க்க; see *šāmbaṟ-kōḻi.*

*[சாம்பல் + காட்டுக்கோழி]*

**சாம்பற்கீரை** *šāmbaṟ-kīrai,* பெ. (n.) சிறுபசலைக் கீரை; creeping purslane.

*[சாம்பல் + கீரை]*

**சாம்பற்குண்டி** *sāmbar-kundi,* பெ. (n.) அருவருக்கத்தக்கவன் (வின்.); slovenly, dirty, person.

*[சாம்பல் + குண்டி; குள் → குண் → குண்டி = புட்டம். உடல் முழுவதும் சாம்பல் பூசியவன் அல்லது நெடுங்காலம் நீராடாமல் புழுதி படிந்த அம்மணத் தோற்றத்து முனிவன்]*

**சாம்பற்குளி-த்தல்** *sāmbar-kuli-,* 4 செ.குவி. (v.i.) சாம்பலிற் புரளுதல் (யாழ்ப்.); to bathe in ashes to be covered with ashes, as a brooding hen.

*[சாம்பல் + குளி-,]*

**சாம்பற்கோழி** *sāmbar-kōli,* பெ. (n.) சாம்பல் நிறத்தில் இருக்கும் கோழி; ash coloured fowl.

ம. சாம்பக்கோழி

*[சாம்பல் + கோழி. குள் → கொழு → கோழி = நிலத்தையும் குப்பையையும் கிளைக்கும் பறவை]*

**சாம்பற்சுறா** *sāmbar-šurā,* பெ. (n.) சாம்பல் வண்ணமான சுறாமீன்; grey shark - Carcharias macloti (சா.அக.).

*[சாம்பல் + சுறா]*

**சாம்பற்பாரை** *sāmbar-pārai,* பெ. (n.) சாம்பல் வண்ணமான ஒருவகைக் கடல்மீன்; a sea-fish, grey pauray - Caranx nigrescens (சா.அக.).

*[சாம்பல் + பாரை]*

**சாம்பற்புறா** *sāmbar-purā,* பெ. (n.) சாம்பல் நிறத்தில் இருக்கும் புறா; ash coloured dove.

ம. சாம்பப்ராவு

*[சாம்பல் + புறா]*

**சாம்பற்பூ-த்தல்** *sāmbar-pū-,* 4 செ.குவி. (v.i.) *1.* நெருப்பில் நீறுபூத்தல்; to be covered with ashes, as live embers. *2.* காய், இலை முதலியவற்றில் சாம்பல்நிறம் படிதல்; to have ash-like appearance, as fruits, leaves, etc. *3.* சாம்பல் போல் உடல் வெளுத்தல்; to grow ashy, as one's body.

*[சாம்பல் + பூ-,]*

**சாம்பற்பூசணி** *sāmbar-pušani,* பெ. (n.) பூசணி வகை (மலை.); ash-gourd.

*[சாம்பல் + பூசணி]*

**சாம்பன்** *sāmban,* பெ. (n.) சிவன்; Śivan. "சாம்ப கடம்பவ னேசனே" (குமர. பிர. மதுரைக்கலம். 68).

*[சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல். சாம்பு → சாம்பல் = எரிந்த சாணம். சாம்பல் → சாம்பன் = சுடலையாண்டி]*

**சாம்பனாரை** *sāmbanārai,* பெ. (n.) நாரை வகை (யாழ். அக.); a kind of grey crane.

*[சாம்பல் + நாரை]*

**சாம்பாகினி** *sāmbāgini,* பெ. (n.) பசலைக் கீரை; garden spinach, Malabar night shade - Basella Cordifolia (சா.அக).

**சாம்பாட்டு** *sāmpāttu,* பெ. (n.) புடல் (மலை.); snake gourd.

*[சாம்பல் + ஆட்டு → சாம்பலாட்டு → சாம்பாட்டு]*

**சாம்பாத்தி** *sāmbātti,* பெ. (n.) சாம்பச்சி (யாழ்ப்.) பார்க்க; see *sāmbācci.*

**சாம்பான்**[1] *sāmbān,* பெ. (n.) எருக்கிலை; madar leaf - Caltropis gigantea (சா.அக.).

*[சாம்பல் → சாம்பன் → சாம்பான் = சாம்பல்நிற இலைகளைக் கொண்டது]*

**சாம்பான்**[2] *sāmbān,* பெ. (n.) பறையர் பட்டப்பெயர்; caste of Pariahs. "பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து" (தனிப்பா.).

ம. சாம்பான்

*[சும் → சும்பு → (சம்பு) → சாம்பு → சாம்பல் → சாம்பர். சாம்பு → சாம்பான் = பிணத்தைச் சுடுபவன் (மு.தா.149)]*

**சாம்பி** *sāmbi,* பெ. (n.) கயிறு முதலியவற்றை மாட்டி, ஒன்றை உயரத் தூக்குதற்குரிய உருளை (இ.வ.); pulley.

*[சாம்பு → சாம்பி]*

**சாம்பியம்** *sāmbiyam,* பெ. (n.) சிறுநாகப்பூ; iron-wood of Ceylon - Musua ferrea (சா.அக.).

**சாம்பிரி** *sāmbiri* பெ. (n.) சேங்கொட்டை; dhoby's nut - Semicarpus anacardium (சா. அக.).

**சாம்பு[1]-தல்** *šāmbu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* வாடுதல்; to wither, droop. 'நெய்தற் பூச்சாம்பும் புலத்தாங்கண்' *(பட்டினப். 12). 2.* கெடுதல்; to perish, pine away. *3.* குவிதல் *(திவா.);* to close up, as flowers. *4.* ஒடுங்குதல் *(பிங்.);* to decline. *5.* உணர்வழிதல்; to lose consciousness. "சாதல் காப்பவரு மென்றவத்திற் சாம்பினார்" *(கம்பரா. உருக்காட். 21). 6.* ஒளி மழுங்குதல்; to grow dim, as the eyes. "மன்னரெல்லாந் தளர்ந்து கண் சாம்பினாரே" *(சீவக. 811). 7.* எரிதல்; to burn.

ம. சாம்புக

*[சுள் → சுட்டு → சுப்பு. சுப்பெனல் = விரைந்து நீர்வற்றுதல். சுப்பு → சுப்பல் = சுள்ளி. சுப்பு → சுப்பி = சுள்ளி. சுப்பு → சும்பு → சம்பு → சாம்பு (வே.க. 212)]*

**சாம்பு[2]-தல்** *šāmbu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* இழுத்தல் *(வின்.);* to pull in by jerks; to haul' to draw in, to pump. *2.* அறைதல் *(யாழ்ப்.);* to give a blow.

*[சப்பு → சம்பு → சாம்பு]*

**சாம்பு[3]** *šāmbu,* பெ. (n.) பறை *(சூடா.);* drum.

*[சாம்பு[2](-தல்) → சாம்பு = அடித்து இசையெழுப்பும் இசைக்கருவி]*

**சாம்பு[4]** *šāmbu,* பெ. (n.) படுக்கை; bed. "கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்" *(பெரும்பாண். 150).*

*[சாள் → சாடு. சாடுதல் = சாய்தல். சாள் → சாய். சாய்தல் = வளைதல், கவிழ்தல், படுத்தல். சாய் → (சாயம்) Skt. šayana = படுக்கை. சாய் → சாய்கை = படுக்குமிடம். சாள் → சாய்ப்பு → சாம்பு]*

**சாம்பு[5]** *šāmbu,* பெ. (n.) *1. 18* முழங்கொண்ட புடைவை; woman's cloth of 18 cubits. *2.* பல துண்டுகள் கொண்ட முழுச்சீலை *(வின்.);* a full piece containing several clothes.

**சாம்பு[6]** *šāmbu,* பெ. (n.) பொன் *(சூடா.);* gold.

*[சுள் → சுட்டு → சுப்பு. சுப்பெனல் = விரைந்து நீர் வற்றுதல். சுப்பு → சுப்பல் = சுள்ளி. சுப்பு → சும்பு → சம்பு → சாம்பு = எரிதல், ஒளிவிடுதல், ஒளிவிடும் பொன்]*

**சாம்பு[7]** *šāmbu,* பெ. (n.) நாவல் *(தைலவ. தைல.);* jamum plum.

*[சம்பு → சாம்பு]*

**சாம்புசண்பகம்** *šāmbu-sanpagam,* பெ. (n.) நாவற்பூ *(வின்.);* flower of the jamum plum.

*[சாம்பு + சண்பகம்]*

**சாம்புநதம்** *šāmbu-nadam,* பெ. (n.) *1.* மேரு மலைக்கு வடக்கில், நாவற்சாறு பெருகி ஓடும் ஆறு; a river believed to flow north of the Mt. Mēru carrying the juice of the jamun tree. "இத்தருவின் நீங்கனிநீ ராறாய் மேருத் தடவரையைப் புடை சூழ்ந்து வடபாற் சென்று சாம்புநதப் பெயர்பெறும்" *(கந்தபு. அண்டகோ. 33). 2.* நால்வகைப் பொன்களுள் ஒன்று; a kind of fine gold, one of four kinds of poṉ. "பொன்னுக்குச் சாம்புநதம்" *(வள்ளுவமா. 36).*

*[சாம்பு + நதம்]*

**சாம்புவன்** *šāmbuvaṉ,* பெ. (n.) சுடலை காப்பவன்; watchman of burning ground.

*[சும்பு → சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல். சாம்பு → சாம்பல் = எரிவதால் மிஞ்சும் பொடித்துகள், சுடலைப்பொடி. ஒ.நோ: சாம்பற்கரைத்தல். சாம்பலவன் → சாம்புவன்]*

**சாம்பூநதம்** *šāmbū-nadam,* பெ. (n.) சாம்புநதம் பார்க்க; see *šāmbu-nadam.*

*[சாம்புநதம் → சாம்பூநதம்]*

**சாமக்காரன்** *šāma-k-kāraṉ,* பெ. (n.) இரவுக் காவலாளன் *(யாழ்ப்.);* night-watch.

*[சாமம் + காரன்; சாமம் = இரவு, நடுஇரவு]*

**சாமக்காவல்** *šāma-k-kāval,* பெ. (n.) இரவுக் காவல் *(யாழ்.அக.);* night-watch.

*[சாமம் + காவல்]*

**சாமக்கிழங்கு** *šāma-k-kiḻaṅgu,* பெ. (n.) ஒரு வகைக் கிழங்கு; the root of a plant - Colocasia antiquorum *(சா. அக.).*

*[சாமம் + கிழங்கு. கிழக்கு → கிழங்கு = நிலத்தின்கீழ் விளைவது]*

**சாமக்கீரை** *šāma-k-kīrai,* பெ. (n.) கீரை வகை *(விவசா. 4);* a kind of greens.



சாம்பல்நிறத் தாரா



சாம்பல்நிறக் கவுதாரி



சாம்பற் காட்டுக்கோழி



சாம்பற் சுறா



சாம்பல் நாரை

**சாமக்கோழி** *sāma-k-kōḻi,* பெ. (n.) *நள்ளிரவில் கூவுங்கோழி;* cock crowing at midnight. "உறங்குமது தான் சாமக்கோழி" *(திவ். திருப்பா. 18, வ்யா, பக். 170).*

து. சாமகோரி

*[சாமம் + கோழி]*




**சாமசம்** *sāmašam,* பெ. (n.) *யானை;* elephant.

*[யாமயம் → சாமயம் → சாமசம் = கரு நிறமுடையது. ஒ.நோ: யாமம் → சாமம்]*

**சாமண்டகம்** *sāmaṇḍagam,* பெ. (n.) *சரக்கொன்றை;* cassia *(சா.அக.).*

**சாமணம்** *sāmaṇam,* பெ. (n.) தட்டார் கருவி வகை (C.E.M.); nippers, pincers.

ம. சாமணம்

*[சாவணம் → சாமணம்]*

**சாமத்திரம்** *sāmattiram,* பெ. (n.) *கருங்காலி;* black wood *(சா.அக.).*

*[சாமம் + திரம். சாமம் - கருநிறமுடையது]*

**சாமந்தநாராயணத்தொண்டைமான்** *sāmanda-nārāyaṇa-t-toṇḍaimāṉ,* பெ. (n.) தஞ்சையில் சாமந்த நாராயண விண்ணகர் கட்டியவன்; the builder of Sāmanda-nārāyaṇa-viṇṇagar at Tanjore *(அபி.சிந்.).*

*[சாமந்தன் + நாராயணன் + தொண்டைமான்]*

**சாமந்தம்**[1] *sāmandam,* பெ. (n.) ஒரு பண் *(சது.);* a kind of tune.

**சாமந்தம்**[2] *sāmandam,* பெ. (n.) பக்கம் *(யாழ்.அக.);* neighbourhood.

*[அம்முதல் = நெருங்குதல், அடைதல், பொருந்துதல். அம் → அமை. அமைதல் = நெருங்குதல் (மலைபடு. 181). அமை = நெருக்கம், அண்மை. அமை →* Skt. amā. *அமை → அமைந்தம் → சமைந்தம் → சாமந்தம்]*

**சாமந்தன்**[1] *sāmandaṉ,* பெ. (n.) *1. அமைச்சன் (சது.);* king's minister. *2. படைத்தலைவன்;* "சேனை யோட்டு சாமந்தராகி" *(திருவாலவா. 59, 16). 3. சிற்றரசன்;* feudatory prince, petty ruler. "சண்டவார் சிலை சாமந்தர் வாங்கினார்" *(பாரத. முதற்போ. 24).*

ம. சாமந்தன், சாமந்தன்

*[அம்முதல் = பொருந்துதல், கூடுதல், நெருங்குதல். அம் → அமை. அமைதல் = பொருந்துதல், சேர்தல், நெருங்குதல். அம் → அமை → அமைத்தோன் → அமைச்சன் = அரசனுடன் நெருங்கி இருந்து அரசச் செயல்களை நிறை வேற்றுபவன், செயலாற்றும் பணியாளர். அமைந்தோன் → அமைந்தன் → சமைந்தன் → சமந்தன் → சாமந்தன்]*

**சாமந்தன்**[2] *sāmandaṉ,* பெ. (n.) *குலப்பூடண பாண்டியனின் படைத்தலைவன்;* army chief of Kulapūḍaṇa Paṇḍiyan.

*[சாமந்தன்[1] → சாமந்தன்]*

அரசன் படை திரட்டக் கொடுத்த பணத்தை அறவழியில் செலவிட்டவன். இவன் பொருட்டு மதுரைக் கடவுள் மெய்க் காட்டிட்ட திருவிளையாடலைச் செய்தார் என்று திருவிளையாடல் தொன்மம் கூறுகிறது *(சிற.பெ.அக.).*

**சாமந்தன்காசு** *sāmandaṉ-kāšu,* பெ. (n.) *பழைய மாழையால் ஆன பண (நாணய) வகை (சரவண. பணவிடு. 56);* an ancient coin.

*[சாமந்தன் + காசு. காழ் → காசு]*

**சாமந்தி** *sāmandi,* பெ. (n.) *1. ஒருவகைப் பூச்செடி;* Indian chamomile or chinese flower - Chrysanthemum indicum.

தெ. சேமந்தி, க. சேவந்தி

*[சாமம் + அந்தி - சாமம் அந்தி → சாம அந்தி - மாலையந்தி. சாம அந்தி → சாமந்தி = அந்தி வண்ணம், அந்தி வண்ணம் போன்ற நிறமுடைய பூ வகை]*

செவ்வந்தி → Skt. šēvati

சாமந்தியை, நாட்டுச் சாமந்தி, சீமைச் சாமந்தி என இருவகைப்படுத்தியும் அதன் பூவின்

நிறத்தை வைத்து மஞ்சள், வெள்ளை, நீலம் என வகைப்படுத்தியும் குறிப்பதுண்டு.

**பூவின் வகைகள்**

1. நாட்டுச் சாமந்தி - தோட்டச் சாமந்தி; garden chamomile - Chrysan themum indicum.
2. மஞ்சள் சாமந்தி; yellow chamomile - Chrysanthemum caronarium.
3. வெள்ளைச் சாமந்தி; white chamomile - Chrysanthemum crinatum
4. சிவப்புச் சாமந்தி; red chamomile - Chrysanthemum roxburghi.
5. நீலச் சாமந்தி; blue chamomile - Chrysanthemum genus.
6. சீமைச் சாமந்தி; Europe chamomile - Anthemis nobilis.
7. துலுக்கச் சாமந்தி; Turkish chamomile - Tagetus erec.
8. ஆடை சாமந்தி; Helicteres isora.
9. காட்டுச் சாமந்தி; wild chamomile - Matricuria chamomile *(சா.அக.).*

**சாமந்திப்பூ** *sāmandi-p-pū,* பெ. (n.) செவ்வந்திப் பூ வடிவினதான திருகுவில்லை என்ற மகளிர் அணி; gold jewel resembling chrysanthemum, worn by women in the hair.

*[சாமந்தி + பூ]*

**சாமபுட்பம்** *sāma-putpam,* பெ. (n.) பாக்கு மரம்; arecanut - areca catechu *(சா.அக.).*

**சாமம்**[1] *sāmam,* பெ. (n.) தூண், கதவு, உத்திரம் முதலியன செய்யப் பயன்படும் மரம்; a kind of tree.

**சாமம்**[2] *sāmam,* பெ. (n.) 1. $7^1/_2$ நாழிகை கொண்ட காலவளவை (பிங்.); a watch of $7^1/_2$ nāḻigai = 3 hours. 2. நடுச்சாமம் (வின்); midnight. 3. இரவு (பிங்.); night.

*[யாமம் → சாமம்]*

**சாமம்**[3] *sāmam,* பெ. (n.) 1. பசுமை (பிங்.); green or dark green colour. 2. கருமை; dark or black colour. "சாயற் சாமத் திருமேனி" *(திவ். திருவாய். 8.5.1).* 3. அறுகு (மலை.); cynodon grass.

*[யா = கருமை. யா → யாமம் = இருள், இரவு, கருமை. யாமம் → சாமம் = கருப்பு, பச்சைகளை அழிக்கும் அறுகம் (அறு → அறுகு) புல்]*

**சாமம்**[4] *sāmam,* பெ. (n.) வறட்சி, பஞ்சம்; drought, famine.

*[சப்பு → சம்பு → சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல், வாடுதல். சாம்பு → சாம்பல் = எரிந்த சாணம். அம் → சம் → சாம் → சாமம் = வறட்சி]*

**சாமரசம்** *sāmarašam,* பெ. (n.) பசுமுன்னை; fire-brand teak *(சா.அக).*

**சாமரம்**[1] *sāmaram,* பெ. (n.) கழு, இறப்புத் தண்டனை (மரணத்தண்டனை) வழங்கப் பயன்படுத்தும் கூர்முனையுள்ள கம்பம்; impaling stake. "குறித்த சாமரம் பெற்றது குற்றமோ" *(திருவாலவா. 38, 51).*

*[சா + மரம்]*

**சாமரம்**[2] *sāmaram,* பெ. (n.) 1. கவரிமானின் மயிரால் அமைந்த அரசச் சின்னம் (சூடா.); chowry, bush tail of the yak, used as a fly-flapper for idols or as a royal insignia. 2. கவரிமானின் மயிரால் அமைந்த விசிறி; fan.

ம. சாமரம்; க. சமர, சாமர; து. சாமர, சாமரோ

*[கவரி → சவரி → சமரி → சாமரி → சாமரம்]*

த. செவ்வந்தி → Skt. sāmara



சாமரம்

**சாமரம்**[3] *sāmaram,* பெ. (n.) சிவதைக்கொடி (மலை.); jalap.

**சாமரம்வீசு-தல்** *sāmaram-vīsu-,* 5 செ.கு.வி. (v.i.) காற்று வருமாறு சாமரம் (விசிறி) கொண்டு அசைத்தல்; to fly-flap with bushy tail of the yak, chowry.

க. சாமரவனிடு

*[சாமரம் + வீசு-,]*

## சாமந்தி வகைகள்



சிவப்புச் சாமந்தி



நீலச் சாமந்தி





மஞ்சள் சாமந்தி



சாமந்தி



நாட்டுச் சாமந்தி



காட்டுச் சாமந்தி

**சாமரி** *šāmari,* பெ. (n.) குதிரை (யாழ்.அக.); horse.

ம. சாமரி

**சாமரிகம்** *šāmarigam,* பெ. (n.) குதிரைக் குளம்படி; horse-hoof plant (சா.அக).

*[சாமரி → சாமரிகம்]*

**சாமரை** *šāmarai,* பெ. (n.) சாமரம்² பார்க்க; see šāmaram. "சாமரை யுக்க மாதியாம்" (கம்பரா. நிந்தனை. 12).

**சாமளம்** *šāmaḷam,* பெ. (n.) *1.* கருமை (உரிநி.); blackness. *2.* பசுமை (திவா.); dark-green colour.

*[சாமம் → சாமளம்]*

**சாமளை** *šāmaḷai,* பெ. (n.) மலைமகள் (சாமள நிறமுடையவள்); Pārvati, as being of dark-green complexion. "சாம்பவி சங்கரி சாமளை" (அபிராமி. 50).

*[சாமம் → சாமளை]*

**சாமன்**[1] *šāman̲,* பெ. (n.) *1.* அறிவன் (புதன்) (பிங்.); the planet mercury. *2.* சிவன்; Šivan̲.

*[சாம்பன் → சாமன்]*

**சாமன்**[2] *šāman̲,* பெ. (n.) காமன்தம்பி; younger brother of Kāma. "சாமனார் தம்முன் செலவு" (கலித். 94).

**சாமிநாதக்கவிராயர்** *šāmināda-k-kavirāyar,* பெ. (n.) பொதிகை நிகண்டின் ஆசிரியர்; a poet, author of Podigai Nigaṇḍu.

*[சாமிநாதன் + கவி + அரையர் → ராயர்]*

இவர் பாண்டி நாட்டில் கல்லிடைக் குறிச்சியில் வாழ்ந்தவர். இவரின் தந்தையார் நாமதீப நிகண்டு இயற்றிய சிவசுப்பிரமணியக் கவிராயர் (தமி. புல. அக.).

**சாமிலம்** *šāmilam,* பெ. (n.) புளிவஞ்சி; a sour plant, perhaps a species of rattan (சா.அக.).

**சாமுகூர்த்தம்** *šāmukūrttam,* பெ. (n.) சாமுழுத்தம் பார்க்க; see *šāmuḻuttam.*

*[சா + முகூர்த்தம்]*

**சாமுண்டி**[1] *šāmuṇḍi,* பெ. (n.) ஏழு கன்னியரில் ஒருத்தியாகிய கொற்றவை; Durgā, one of šatta-mādar.

ம. சாமுண்ட, சாமுண்டி, சாமுண்ணி; க. சாமுண்டி; து. சாமுண்டி, சவுண்டி

*[சாவு + உண்டி - சாவுண்டி → சாமுண்டி. வெற்றித் தெய்வமாகக் கருதப்படும் கொற்றவை சாவு உண்டாக்கும் திறம் பற்றிச் சாமுண்டி எனப்பட்டாள்]*

cāmuṇḍā, a form of Durgā or Māri, in D. also cavuṇḍi, cavuḍi. The word is composed of D. sāvu, death; a corpse, and uṇḍā (uṇḍi, uḍi). Uṇḍi, etc. may be uṇi, uṇṇi or oḍati (of uḷ, to possess), or uruṇḍi (she who rolls about) (K.K.E.D. XXIX).

**சாமுண்டி**[2] *šāmuṇḍi,* பெ. (n.) *1.* நாணல் (மலை.); kaus. *2.* அவுரி; Indigo plant.

**சாமுண்டி**[3] *šāmuṇḍi,* பெ. (n.) பொன்னாவிரை (மலை.); negro coffee.

**சாமுண்டிதேவநாயகர்** *šāmuṇḍi-dēvanāyagar,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள மாகறல் ஊரினராகிய புறப்பொருள் வெண்பாமாலையின் உரையாசிரியர்; the commentator of Pur̲a-p-poruḷ-veṇbā-mālai, native of Mākar̲al, in Cheṅgar̲paṭṭuu district (செ.அக.).

*[சாமுண்டி + தேவநாயகர்]*

**சாமுதம்**[1] *šāmudam,* பெ. (n.) கடுக்காய் (வின்.); chebulic myrobalan.

**சாமுதம்**[2] *šāmudam,* பெ. (n.) கோரைப்புல் (மலை.); sedge.

**சாமுழுத்தம்** *šāmuḻuttam,* பெ. (n.) கெட்ட காலம் (வின்.); fatal hour, inauspicious time.

*[சா + முழுத்தம்]*

**சாமூஞ்சி** *šāmūñji,* பெ. (n.) பிணமூஞ்சி; dismal, ghastly countenance.

*[சா + மூஞ்சி. முசு → மூசு. மூசுதல் = மூச்சுயிர்த்தல், மோப்பம் பிடித்தல். மூசு → மூச்சு. முசு → முஞ்சு → மூஞ்சி = மூக்கு, மூக்குள்ள முகப்பகுதி]*

**சாமூர்த்தம்** *šā-mūrttam,* பெ. (n.) சாமுழுத்தம் பார்க்க; see *šāmuḻūttam.* "சாமூர்த்தமென்றே மந்திரிநூன் மறை வல்லவ ரோதினர்" (விதான. குணாகுண. 91).

*[சாமுகூர்த்தல் → சாமூர்த்தம்]*

**சாமூலி** *šāmūli*, பெ. (n.) **ஊமத்தை;** dhatura (*சா.அக.*).

*[சா + மூலி]*

**சாமேளம்** *šā-mēḷam*, பெ. (n.) *சாப்பறை;* funeral drum.

*[சா + மேளம்]*

**சாமை**[1] *šāmai*, பெ. (n.) *1.* **மடங்கல் (ஆவணி) மாதத்தில் விதைத்து 6 கிழமை முதல் 4 மாதங்களுள் விளையும் ஒரு வகைப் புன்செய்ப்பயிர்;** poor-man's millet, sown in Āvaṇi and maturing in six weeks to four months 'சக்கிலியப் பெண்ணும் சாமைக்கதிரும் சமைந்தால் தெரியும்' (*பழ.*) *2.* **தவச வகை;** little millet, panicum miliare. "சாமை தினை வண்ண வோதனம்" (*விதான. யாத்திரை. 8*). *3.* **வரகு;** common millet.

*ம. சாம; க. சாமெ, சாவெ, சந்தெ; தெ. ச்யாமாலு; பட. சாமெ; பர். சாம;*

H. sāma; Skt. šyāma

*[சமை → சாமை. வடவர் கரியது என்று பொருட்காரணம் கூறுவது தவறு. சாமை கரியதாகாது.]*

சாமை படைப்புக் காலந் தொட்டுத் தென்னாட்டில் விளைந்துவரும் தொண் (ஒன்பான்) கூலங்களுள் ஒன்றாகும். இன்றும் அது நாட்டுப்புற உழவர்க்கு உரிய ஒழுங்கான உணவு வகைகளுள் ஒன்றாக இருந்து வருகின்றது (*மொ.க.66*).

**சாமை**[2] *šāmai*, பெ. (n.) *1.* **பெருநெருஞ்சி** (*சங்.அக.*); a stout stemmed herb. *2.* **கற்சேம்பு** (*சங்.அக.*); a plant.

**சாமைக்குருணை** *šāmai-k-kuruṇai*, பெ. (n.) **ஒரு வகைப் புல்;** a kind of grass.

*[சாமை + குருணை]*

**சாமைப்புல்** *šāmai-p-pul*, பெ. (n.) **ஒரு வகைப் புல்;** a kind of grass.

*[சாமை + புல். சாமைப் பயிர் போன்ற புல்]*

**சாய்**[1]**-தல்** *šāy-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **கவிழ்தல்;** to incline, hand down. "நாணடச் சாய்ந்த நலங்கிள ரெருத்தின்" (*பொருந. 31*). *2.* **வானில் கோள் முதலியவை சாய்தல்;** to decline, as a heavenly body. *3.* **வளைதல்;** to bend, turn down, as the ear. "சாய் செவிக்குருளை" (*சிறுபாண். 130*). *4.* **படுத்தல்;** to recline, lie down. 'திருக்கையிலே சாயுமித்தனை' (*ஈடு, 27: 5*). *5.* **திரண்டுசெல்லுதல்;** to march, in crowds. 'திருவிழாவுக்கு மக்கள் திரள் சாய்கிறார்கள்' (*உ.வ.*). *6.* **முறிதல்;** to give way, break. "சாய்ந்த வல்லுருமு போய்" (*கம்பரா. நாகபாச. 99*). *7.* **தோற்றோடுதல்;** to be routed; to flee. "வந்தவர் சாய்ந்த வாறும்" (*பாரத. நீரைமீட்சி. 137*). *8.* **நடுநிலை திறம்புதல்;** to be partial, biassed. *9.* **ஒதுங்குதல்** (வின்.); to decline from a direct course; to deviate. *10.* **சார்தல்;** to lean. தூணின் மேல் சாய்ந்தான். *11.* **நடந்தேறுதல்;** to happen, succeed. அந்தக் காரியஞ் சாய்ந்தது.

*ம. சாயுக; து. சாவுனி; வ. சய்; சீ, கூடிய்.*

*[சூள் → சாள் → சாய்]*

**சாய்**[2]**-தல்** *šāy-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **தளர்தல்;** to be fatigued, to grow weary. "கள்ளொற்றிக் கண் சாய்பவர்" (*குறள், 927*). *2.* **வருந்துதல்;** to be troubled. "சாய்குவ ளல்லளோ" (*கலித். 79: 10*). *3.* **மெலிதல்;** to grow thin, emaciated. "சாயினள் வருந்தியாளிடும்பை" (*கலித். 121*). *4.* **வற்றுதல்;** to get dried up, as a channel. "கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்" (*அகநா. 25*). *5.* **அழிதல்;** to be ruined, to perish. "மறஞ்சாய" (*பு.வெ. 2,1, கொளு.*).

*[சாள் → சாய்]*

**சாய்**[3]**-த்தல்** *šāy-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **சாயச் செய்தல்;** to cause to incline, bend or stoop. "உண்டுறையுடைந்த பூப்புனல் சாய்ப்ப" (*கலித். 78*). *2.* **ஒருபக்கமாக ஓட்டுதல்** (வின்.); to turn in a new direction, to drive. *3.* **கரைக்குச் செலுத்துதல்** (வின்.); to steer shoreward, as a vessel. *4.* **மனஞ்சாயப் பண்ணுதல்** (வின்.); to prejudice. *5.* **கெடுத்தல்;** to destroy, mar or spoil. "மல்லரை மறஞ்சாய்த்த" (*கலித். 134*). *6.* **தோல்வியுறச் செய்தல்;** to discomfit, defeat. "சூதும் பங்கய முகையுஞ் சாய்த்துப் பணைத் தெழுந்து" (*பெரியபு. தடுத்தாட். 21*). *7.* **முறித்தல்;** to break off. "குருந்தஞ் சாய்த்ததூஉம்" (*திரிகடு. காப்பு, 1*). *8.* **மெய்ப்படுத்துதல்;** to establish. "தன்பாற் றவறுண்டெனக் கௌசிகன் சாய்க்கின்" (*அரிச். பு. இந்திர. 42*). *9.* **முற்றுவித்தல்;** to finish, bring to a successful issue. *10.* **மிகுதியாகக் கொடுத்தல்;** to give in abundance. 'தாய் பெண்ணுக்கு எல்லாவற்றையுஞ் சாய்த்தாள்' (*உ.வ.*)

*ம. சாய்க்குக; து. சாசுனி*

*[சாள்→சாய். சாய்தல் (த.வி.), சாய்த்தல் (பி.வி.)]*

**சாய்**[4] *šāy,* பெ. (n.) 1. ஒளி; brilliance, light. "சாய்கொண்ட விம்மையும்" *(திவ். திருவாய். 3. 9: 9);* 2. சாயல், அழகு; beauty. "சங்கஞ் சரிந்தன சாயிழந்தேன்" *(திவ். திருவாய். 8. 2: 1).* 3. சாயம், நிறம்; colour. "சாயாற்கரியானை" *(திவ்.இயற். பெரியதிருவந். 14).* 4. புகழ்; fame, reputation. 'இந்திரன் தன் சாயாப் பெருஞ்சாய் கெட" *(கம்பரா. நாகபா. 21).* 5. சாயை, நிழல்; shadow.

ம. சாய்; குட. சய் (அழகு); கோத. சய்வ் (நிறம்)

*[சால் → சாய் (வே.க. 232.)]*

**சாய்**[5] *šāy,* பெ. (n.) 1. தண்டான்கோரை; sedge. "சாய்க்கொழுதிப்பாவை தந்தணைத் தற்கோ" *(கலித். 76,7).* 2. செறும்பு; splinter. "இரும்பனை வெளிற்றின் புன்சாயன்ன" *(திருமுரு. 312).*

*[சான் → சாய்]*

**சாய்க்காடு** *šāy-k-kāḍu,* பெ. (n.) பூம்புகாரைச் சார்ந்த ஊர்; a village near Pōmbukar.

*[சாய் + காடு]*

இவ்வூர், தேவாரத்தில் பூம்புகார்ச் சாய்க்காடு என்றும் காவிரிப் பூம்பட்டினத்துச் சாய்க்காடு என்றும் குறிக்கப்படுகிறது. "விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித் தன் புகார்ச்சாய்க்காட்டுள் தலைவன் தாள் சார்ந்தாரே" எனவும் "மொட்டலர்ந்த தடந்தாழை முருகுயிர்க்கும் காவிரிப்பூம் பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே" *(திருச்சாய்க்காட்டுப் பதிகம். 1: 4).*

**சாய்கடை** *šāy-kaḍai,* பெ. (n.) நீர்த்தாரை; drain, gutter for carrying off sewage.

மறுவ. சுருங்கு, சலதாரை, சாலகம், அங்கணம்

*[சான் → சாய். சாய்தல் = வளைதல். சாய் + கடை]*

அங்கணம் என்னும் பெயரும் இக்கரணியம் பற்றியதே. ஒ.நோ. வணங்கு → வாங்கு → வங்கு → அங்கு. அங்குதல் = வளைதல், சாய்தல். அங்கு + அணம் - அங்கணம் - வாட்டஞ் சாட்டமாயிருக்கும் சாலகம்.

**சாய்கண்குருடு** *šāy-kaṇ-kuruḍu,* பெ. (n.) வாய், கண், மூக்கு, நாக்கு இவை ஒரு பக்கத்தில் இழுத்துக் கொண்டு, அத்துடன் கண்கள் சிவந்து குருடாகி, எரிச்சல், நீர் வடிதல் ஆகிய பண்புகளைக் காட்டுமோர் நோய்; blindness of the eyes characterised by controtion of the face on one side, thereby affecting the mouth, eyes, nose, tongue, etc., attended with inflammation, burning and watery discharge from the eyes *(சா.அக.).*

*[சாய் + கண் + குருடு]*

**சாய்கரகம்** *šāy-karagam,* பெ. (n.) தண்ணீர்ப் பந்தரில் நீர் வார்க்கும் ஏன (பாத்திர) வகை *(ஈடு, 6. 10: 7);* a kind of spouted vessel used in pouring water.

*[சாய் + கரகம்]*

**சாய்கால்** *šāy-kāl,* பெ. (n.) செயற்றிறம் வாய்ந்த மதிப்பு (இ.வ.); influence.

*[சான் → சாய் → சாய்கால் (வே.க.233.)]*

**சாய்கால்விக்கிரயம்** *šāykāl-vikkirayam,* பெ. (n.) உள்ளூர் வணிகம்; inland trade.

*[சாய்கால் + விக்கிரயம்]*

**சாய்காலம்** *šāy-kālam,* பெ. (n.) சொல் செயற்படும்படியான நிலை (இ.வ.); time of prosperity and influence.

*[சாய்[1] + காலம்]*

**சாய்கை** *šāygai,* பெ. (n.) தங்குமிடம் (யாழ்ப்.); house, rest-house.

*[சாய்[1] → சாய்கை. சாய்கை = படுக்குமிடம், இளைப்பாறுமிடம். 'கை' சொ. ஆ. ஈறு.]*

ஒ.நோ: இ. சகா; சாய் → (சாயனம்) → வ. சயனம் = படுக்கை. உ. சாகர்

**சாய்ங்காலம்** *šāy-ṅ-gālam,* பெ. (n.) சாயுங் காலம் பார்க்க; see *šāyu-ṅ-gālam.* 'சாய்ங்காலம் இன்றைக்கு ஊருக்குப் போறேன்' *(உ.வ.).*

*[சாயுங்காலம் → சாயங்காலம் → சாய்ங்காலம்]*

**சாய்த்துக்கொடு-த்தல்** *šāyttu-k-kōḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஒருசேரக் கொடுத்தல்; to give in abundance. "பரிசிலரைக் காணில்...... யானையை அணியணியாகச் சாய்த்துக் கொடுக்கும்" *(புறநா. 135, உரை.).*

*[சாய் → சாய்த்து + கொடு-,]*

**சாய்த்துப்பார்-த்தல்** *šāyttu-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) கண்ணைக் கோணலாக வைத்துக் கொண்டு (வக்கிரித்துப்) பார்த்தல்; to look askant.

*[சாய் → சாய்த்து + பார்-,]*

**சாய்த்துவிடு-தல்** *šāyttu-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. சாய்த்துக்கொடு பார்க்க; see *šāyttu-k-kodu-*. 2. கொல்லுதல் (இ.வ.); to kill.

*[சாய் → சாய்த்து + விடு-,]*

**சாய்ந்தரக்களை** *šāyndara-k-kaḷai*, பெ. (n.) மாலை நான்கு மணியில் இருந்து இருட்டும் வரை செய்யும் களையெடுத்தல் தொழில் (தெ.ஆ.); evening weeding. சாய்ந்தரக் களைக்கு ஆள் கூப்பிடு.

*[சாய்ந்தரம் + களை. சாய் → சாய்ந்தரம்]*

**சாய்ந்தரப்பூட்டு** *šāyndara-p-pūṭṭu*, பெ. (n.) மாலையில் (4 மணிக்குமேல்) செய்யும் உழவு (தொழில்); evening ploughing.

*[சாய்ந்தரம் + பூட்டு. பூண் → பூட்டு = உழவு]*

**சாயந்தரம்** *šāyandaram*, பெ. (n.) மாலைப் பொழுது; evening.

*[சாய் → சாய்ந்தரம் → சாயந்தரம்]*

**சாய்ந்தாட்டம்** *šāyndāṭṭam*, பெ. (n.) சாய்ந்தாடுதல்; swinging or swerveing sideways without shifting position.

ம. சாஞ்சாட்டம்

*[சாய்ந்தாடு → சாந்தாட்டம்]*

**சாய்ந்தாடு-தல்** *šāyndāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) நிலத்தில் நின்றுகொண்டு அல்லது இருக்கையில் இருந்து கொண்டு பக்கவாட்டில் அல்லது முன்னும்பின்னும் அசைதல்; to swing or swerve sideways without shifting position. "சாந்தாடம்மா சாய்ந்தாடு" (குழந்தைப் பாட்டு).

ம. சாஞ்ஞாடுக, சாஞ்சாடுக

*[சாய்ந்து + ஆடு-,]*

**சாய்ப்பாங்கரை** *šāy-p-pāṅgarai*, பெ. (n.) அடுப்பங்கரை, அடுப்படி; kitchen; the front of the hearth.

*[சாய்ப்பாங்கடை → சாய்ப்பாங்கரை]*

**சாய்ப்பாய்விடு-தல்** *šāy-p-pāy-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) பாராதுபோல இருந்து விடுதல்; to connive at.

*[சாய்ப்பாய் + விடு-,]*

**சாய்ப்பாவை** *šāy-p-pāvai*, பெ. (n.); கோரைப் பாவை (கலித். 133, 33, உரை); doll made of sedge.

*[சாய்[5] + பாவை. சாய் = கோரை]*

**சாய்ப்பிடம்** *šāyppiḍam*, பெ. (n.) 1. படை பின் வாங்குமிடம்; place of retreat, as of an army. "சாய்ப்பிடமாகப் போர்ப்படை பரப்பி" (பெருங். மகத. 17: 63). 2. சிறு கொட்டகை (இவ.); a shed with sloping roof.

*[சாய்[3] + சாய்ப்பிடம்]*

**சாய்ப்பிறக்கு-தல்** *šāyppiṟakku-*, 5 செ.கு.வி. (v.i.) சாய்வாக மேற்கூரை அமைத்தல் (வின்.); to construct a sloping roof.

*[சாய்ப்பு + இறக்கு-,]*

**சாய்ப்பு** *šāyppu*, பெ. (n.) 1. தாழ்வு (பிங்.); slope, slant. 2. மலைச்சரிவு (வின்.); slide or declivity of a mountain. 3. சாய்வான கூரை (வின்.); sloping or slanting roof. 4. சாய்வு-2 பார்க்க (வின்.); see *šāyvu-2*. 5. முகங்கொடாமை (வின்.); aversion, indifference. 6. மட்ட வெற்றிலை (யாழ்ப்.); inferior betel leaves.

ம. சாயிப்பு

*[சாய் + சாய்ப்பு. 'பு' சொ.ஆ.ஈறு]*

**சாய்பலகை** *šāy-palagai*, பெ. (n.) சாய்மானப் பலகை (இ.வ.); sloping wooden back for reclining.

*[சாய் + பலகை]*

**சாய்மணை** *šāy-maṇai*, பெ. (n.) 1. சாய்மானம்[1], 1 பார்க்க; see *šāy-māṉam[1]*, l. 2. திண்டு; a kind of pillow.

*[சாய் + மணை]*

**சாய்மரம்** *šāy-maram*, பெ. (n.) சிவதை (மலை); jalap.

**சாய்மானக்கதிரை** *šāy-māṉa-k-kadirai*, பெ. (n.) சாய்வுநாற்காலி (இலங்கை); easy chair.

*[சாய்மானம் + கதிரை]*

**சாய்மானப்பலகை** *šāymāṉa-p-palagai*, பெ. (n.) *1. சாய்ந்துகொள்ளுதற்குரிய பலகை;* a plank used for reclining. *2. துணிவெளுக்கும் பலகை (இ.வ.);* washboards.

*[சாய்மானம் + பலகை]*

**சாய்மானம்**[1] *šāymāṉam*, பெ. (n.) *1. சார்மணை (உ.வ.);* back, as of a chair; a masonry construction to recline. *2. சாய்கை (உ.வ.);* leaning, reclining. *3. சாய்வு[1], 2 (வின்.) பார்க்க;* see šāyvu[1],2.

ம. சாய்மானம்

*[சாய் + மானம்]*

**சாய்மானம்**[2] šāy-māṉam, பெ. (n.) ஒப்பொழுக்கம் *(ஒப்பாசாரம்) (யாழ். அக.);* conformity, decorum.

*[சாய் + மானம்]*

**சாய்மேதிதம்** *šāy-mēdidam*, பெ. (n.) குங்குமப்பூ; English saffron flower - Crocus sativus *(சா.அக.)*.

**சாய்வு**[1] *šāyvu*, பெ. (n.) *1.* சரிவு *(யாழ்.அக.);* slope, declivity, side of a hill. *2.* ஒருபாற்கோடல் *(சங்.அக.);* bias, partiality. *3.* குறைவு; defect, deficiency. "சாய்வறத் திருத்திய சாலை" *(கம்பரா. திருவவ. 84)*. *4.* நிலைமைத்தாழ்வு; straitened circumstances. *5.* வளைவு *(யாழ்ப்.);* going obliquely; turning aside; obliquity, divergency. *6.* நோக்கம்; inclination, bent of mind. *7.* அழிவு; death; destruction. "உயிர்ப்பொறைச் சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்" *(கம்பரா. இராவணன்வதை, 182)*. *8.* கட்டடம் முதலியவற்றின் வாட்டம் (இ.வ.); gradient.

ம. சாய்வு

*[சாள் → சாய் → சாய்வு. 'வு' சொ.ஆ.ஈறு]*

**சாய்வு**[2] *šāyvu*, பெ. (n.) நீர் இல்லாமல் உலர்ந்து போன பயிர் (செங்கை); dry crop (without water).

*[சாய் → சாய்வு]*

**சாய்வுசரிவு** *šāyvu-šarivu*, பெ. (n.) *1.* இரக்கம் *(தாட்சணியம்);* kindness, leniency. *2. சாய்வு[1]–2 பார்க்க;* see *šāyvu[1]-2*.

*[சாய்வு + சரிவு]*

**சாய்வுநாற்காலி** *šāyvu-nāṟkāli*, பெ. (n.) கெட்டியான துணியைத் தொட்டில் போல் தொங்கவிட்ட, சாய்ந்து கொள்வதற்கான நாற்காலி; deck-chair; easy chair. தாத்தாவுக்கு ஒரு சாய்வு நாற்காலி வாங்க வேண்டும்.

*[சாய்வு + நாற்காலி]*



சாய்வு நாற்காலி

**சாய்வுப்பாதை** *šāyvu-p-pādai*, பெ. (n.) மாடிக்கு அல்லது மேடைக்குச் செல்லப் படியில்லாமல் சாய்வாக அமைக்கப்பட்ட தளப்பாதை *(கட்டட.);* terrace way without step, ramp.

*[சாய்வு + பாதை]*

**சாய்வுமேசை** *šāyvu-mēšai*, பெ (n.) எழுதுவதற்கு ஏந்தாகக் கீழ்நோக்கிச் சாய்ந்த பரப்பையுடைய மிசை; a desk with a sloping top.

*[சாய்வு + மேசை]*

**சாயக்காரன்** *šāya-k-kāraṉ*, பெ. (n.) *1. சாயமிடுபவன்;* dyer. *2. சாயம் காய்ச்சுபவன்;* one who prepares dye.

*[சாயம் + காரன்]*

**சாயக்கிழங்கு** *šāya-k-kiḻaṅgu*, பெ. (n.) கிழங்கு மஞ்சள்; green turmeric, turmeric root *(சா.அக.)*.

*[சாயம் + கிழங்கு]*

**சாயக்குண்டா** *šāya-k-kuṇḍā*, பெ. (n.) சாயம் போடப் பயன்படும் செப்பு ஏனம் (செங்கை); copper vessel for dyeing.

*[சாயம் + குண்டா. குள் → குண் → குண்டு → குண்டா = உருண்டு திரண்ட கலம்]*

**சாயக்கொண்டை** *šāya-k-koṇḍai*, பெ. (n.) *1.* மகளிரது கொண்டை வகைகளுளொன்று; women's tresses done in a particular way.

*2.* கோயில்களில் திருவிழாக் காலங்களில் உலா வரும் திருமேனிக்குச் சிவப்பு அல்லது நீலநிறப் பட்டாடையால் தலையில் முடி போல் அமைக்கப்படுங் கொண்டை; a turban of red or blue silk resembling crown, put on the head of urcavamūrtti. *3.* முடியணி வகை; a kind of coronet.

*[சாய்வுக்கொண்டை → சாயக்கொண்டை]*

**சாயக்கோரை** *šāya-k-kōrai,* பெ. (n.) சாயம் நனைத்துப் பாய் முதலியன பின்னப் பயன்படும் கோரைவகை (வின்.); a sedge used for making mat etc.

*[சாயம் + கோரை]*

**சாயக்கோல்** *šāya-k-kōl,* பெ (n.) சாயம் போடுதலில் பயன்படும் மரக்கோல் (செங்கை); wooden pole for dyeing.

*[சாயம் + கோல். குல் → கோல் = திரட்சி, திரண்டகம்பு]*

**சாயகம்** *šāyagam,* பெ (n.) அம்பு; arrow. "இரட்டிச் சாயகங்கள்" *(கம்பரா. மகரக்கண்ணன். 18).*

*[சாய் → சாயகம் - சாயச்செய்வது; விழ்த்துவது]*

**சாயங்காய்ச்சு-தல்** *šāyan-kāyccu-,* 5 செ.குவி. (v.i.) சாயம் போடுதல் (வின்.); to dye, colour.

*[சாயம் + காய்ச்சு. காய் → காய்ச்சு. காய்தல் = சுடுதல். காய்ச்சுதல் = சுடவைத்தல்]*

**சாயங்காலம்** *šāyan-gālam,* பெ (n.) சாயுங் காலம் பார்க்க; see *šāyun-gālam.*

தெ. சாயமு

*[சாயுங்காலம் → சாயங்காலம்]*

**சாயங்கொட்டை** *šāyan-kottai,* பெ (n.) சேங்கொட்டை; dhoby's nut (சா.அக.).

*[சாயம் + கொட்டை]*

**சாயச்சந்தி** *šāya-c-candi,* பெ (n.) *1.* மாலை மங்கல் (வின்.); evening twilight. *2.* மாலை வழிபாடு (இ.வ.); evening devotions.

*[சாய் → சாயும் + சந்தி → சாயும் சந்தி → சாயச்சந்தி = மாலைப்பொழுது, அப்பொழுதில் செய்யும் வழிபாடு]*

**சாயச்சம்பங்கி** *šāya-c-cambangi,* பெ (n.) கொடிச் சம்பங்கி; champank creeper - Pergularia monor (சா.அக.).

*[சாயம் + சம்பங்கி]*

**சாயச்சாந்தி** *šāya-c-cāndi,* பெ. (n.) சாவுச்சடங்கு (அந்தியேட்டி) (யாழ் அக.); crematory rite.

*[சாவுசாந்தி → சாயசாந்தி]*

**சாயச்சால்** *šāya-c-cāl,* பெ. (n.) சாயந் தோய்க்கும் பானை (வின்.); vat for dyeing.

*[சாயம் + சால்]*

**சாயச்சீலை** *šāya-c-cīlai,* பெ (n.) சாயமேற்றப் பட்ட வண்ணத்துணி; coloured cloth.

ம. சாயச்சீல (ஓணத்தில் உடுத்தும் புதிய வண்ணத்துணி)

*[சாயம் + சீலை]*

**சாயச்செடி** *šāya-c-cedi,* பெ (n.) இம்பூறல்; Indian madder (சா.அக.).

*[சாயம் + செடி]*

**சாயடி** *šāyadi,* பெ. (n.) சாயம் போடுமிடம்; place for dyeing.

*[சாயம் + அடி. அடி = இடம்]*

**சாயத்துணி** *šāya-t-tuni,* பெ. (n.) நிறமேற்றப் பட்ட துணி; dyed cloth.

ம. சாயத்துணி

*[சாயம் + துணி]*

**சாயந்தரம்** *šāyandaram,* பெ. (n.) சாயுங்காலம் பார்க்க; see *šāyungālam.*

Skt. antara → த. அந்தரம்

**சாயந்தீர்-தல்** *šāyan-tīr-,* 4 செ.குன்றாவி., செ.குவி. (v.t & v.i.) சாயந்தோய்த்தல் (வின்.) பார்க்க; see *šāyandōy-.*

*[சாயம் + தீர்-,]*

**சாயந்தோய்-த்தல்** *šāyan-tōy-,* 4 செ.குவி. (v.i.) சாயம் போடுதல் (கொ.வ.); to dye, colour.

*[சாயம் + தோய்-,]*

**சாயப்பட்டை** *šāya-p-pattai,* பெ. (n.) வேம்பாடம் பட்டை; the bark of buck thorn climber (சா.அக.).

*[சாயம் + பட்டை]*

**சாயப்பணி** *šāya-p-paṇi,* பெ. (n.) 1. செஞ் சாயமிடுந் தொழில் (வின்.); work of dyeing with red, dist. fr. nīla-p-paṇi. 2. சாயமூட்டும் பணி the art of painting, dyeing.

ம. சாயப்பணி

[சாயம் + பணி]

**சாயப்பாக்கு** *šāya-p-pākku,* பெ. (n.) சாயமேற்றிய பாக்கு (உ.வ.); areca-nut sliced and dyed by boiling.

[சாயம் + பாக்கு]

**சாயப்பிடி-த்தல்** *šāya-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) காற்றுவாக்கிற் கப்பலைச் செலுத்துதல் (யாழ்ப்.); to steer a vessel windward (செ.அக.).

[சாய் + பிடி-,]

**சாயப்பூலிகம்** *šāya-p-pūligam,* பெ. (n.) சிவப்புப் பசலை; red spinach (சா.அக.).

[சாயம் + பூலிகம்]

**சாயப்பெட்டி** *šāya-p-peṭṭi,* பெ. (n.) சாயமிட்ட ஓலை முதலியவற்றால் அறைகள் உள்ளனவாகச் செய்யப்பட்ட பெட்டி (இ.வ.); small lacquer boxes with compartments; dyed ola-covered baskets with compartments.

[சாயம் + பெட்டி]

**சாயப்போல்** *šāya-p-pol,* பெ. (n.) சாயமிட்ட கழி (யாழ்ப்.); painted cane or staff.

[சாயம் + போல்]

**சாயப்பொன்** *šāya-p-poṉ,* பெ. (n.) நிறமூட்டப் பட்ட பொன்; coloured gold.

ம. சாயப்பொன்னு

[சாயம் + பொன்]

**சாயம்**[1] *šāyam,* பெ. (n.) சாயங்காலம் (பிங்.) பார்க்க; see *šāyaṅgālam.*

[சாய்[3] → சாயம்]

**சாயம்**[2] *šāyam,* பெ. (n.) 1. நிறம்; colour, tinge, tint. 2. நூல் முதலியவற்றிற்கு ஊட்டும் வண்ணம்; dye. 3. உண்மைத்தன்மை; true colour; real nature. "சாயந்துலங்கி விட்டது". 4. பொய்த்தன்மை; false nature. சாயம் வெளுத்து விட்டது. 5. சாயவேர் (வின்.) பார்க்க; see *šāya-vēr.*

ம. சாயம்; க., தெ., பட. சாய; குட. சாய்; கோத. சய்வ்; துட. சாய

[சாய் → சாயை = நிழல், படிவடிவம், ஒப்பு, புகழ். சாய்[4] → சாயம்]

த. சாயம் → Skt. chāyā

**சாயம்பற்றவை-த்தல்** *šāyam-paṟṟa-vai-,* 4 செ.கு.வி. (v.i.) பொய்ச்செய்தியைப் பரப்புதல் (நாஞ்.); to spread false information.

[சாயம் + பற்ற + வை-,]

**சாயம்பிடி**[1]**-த்தல்** *šāyam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சாயம்பற்றுதல்; to take on colour.

[சாயம் + பிடி-,]

**சாயம்பிடி**[2]**-த்தல்** *šāyam-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சாயந்தோய்-த்தல் பார்க்க; see *šāyandōy-.*

[சாயம்[2] + பிடி-,]

**சாயம்பிடி**[3] *šāyam-piḍi,* பெ. (n.) பொன்னாங் காய்; Indian soap-nut (சா.அக.).

[சாயம் + பிடி]

**சாயம்போ-தல்** *šāyam-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ஏற்றிய நிறம் நீங்குதல்; to become change of real colour.

[சாயம் + போ-,]

**சாயம்போடு-தல்** *šāyam-pōḍu-,* 19 செ.கு.வி. (v.i.) சாயந்தோய்-த்தல் பார்க்க; see *šāyan-tōy-.*

[சாயம் + போடு-,]

**சாயம்வெளு-த்தல்** *šāyam-veḷu-,* 4 செ.கு.வி. (v.i.) பொய் மறைந்து உண்மை வெளிப்படுதல்; to come to light; get-exposed. அவன் சாயம் வெளுத்துப் போச்சு, இனி யாரையும் ஏமாற்ற முடியாது.

[சாயம் + வெளு-,]

**சாயமடி-த்தல்** *šāyam-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சாயந்தோய்-த்தல் பார்க்க; see *šāyan-dōy-.*

[சாயம் + அடி-,]

**சாயமரம்** *šāya-maram,* பெ. (n.) 1. ஒரு வகை மரம் (M.M.464); Malay sandal. 2. மரவகை (இங்.வை.); American logwood.

[சாயம் + மரம்]

**சாயமேற்று-தல்** *šāyam-ēṟṟu-, 5* செ.கு.வி. (v.i.) சாயந்தோய்-த்தல் பார்க்க; see *šāyan-dōy-* (செ.அக.).

*[சாயம் + ஏற்று-,]*

**சாயர்** *šāyar,* பெ. (n.) *1.* நிலவரி நீங்கிய வழக்கமான பிற தீர்வை (C.G); customs, duties, current or customary sources of revenue other than land tax. *2.* தீர்வை தண்டுபவர்; custom-house officer (செ.அக.).

*[ஆயம் = வரி. ஆயர் = வரி வாங்குபவர். ஆயர் → சாயர்]*

**சாயர்சௌகி** *šāyar-caugi,* பெ. (n.) தீர்வை வாங்குமிடம் (C.G.); custom-house or station.

*[சாயர் + சௌகி. சவுக்கம் → சவுக்கி → சௌகி]*

**சாயரச்சை** *šāya-raṭcai,* பெ. (n.) *1.* சாயங் காலம்; evening. *2.* கோவிலில் நடக்கும் மாலைப் பூசை; evening service in temples.

*[சாயம் + ரச்சை. சாயம் = மாலை, த. ரச்சை → Skt. rakṣā. செய்கிறபொழுது, போகிறபொழுது என்பனபோல் வரும் தொடர்நிகழ்வைக் குறிக்கும், சொல்லாட்சிகள் செய்கிறச்சை, போரச்சை எனக் கொச்சை திரிபுற்று வழக்கெய்தியன. அச்சொல்லாட்சிகளில் பின்னொட்டாக வரும் ரச்சை என்பதனைத் தனிச்சொல்லாகக் கொண்டு ரக்ஷா என்னும் வட சொற்றிரிபு எனத் தலைக்கீழாகக் கொண்டனர்]*

**சாயரி** *šāyari,* பெ. (n.) பாலைப் பண்வகை (பிங்.); a primary melody type of the pālai class.

**சாயல்**[1] *šāyal,* பெ. (n.) *1.* சாய்வு; inclining, slanting. *2.* இளைப்பு; weariness, exhaustion. "உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே" (புறநா. 262). *3.* நுணுக்கம் (திவா.); contraction, shrinking. *4.* துயிலிடம் (பிங்.); bed, sleeping place.

ம. சாயல்

*[சாய்தல் = படுத்தல். தலைசாய்தல் = படுத்தல், சிறிது நேரம் உறங்குதல். சாய் → சாய்கை = படுக்குமிடம் சாய் → (சாயனம்) → வ. சயனம் = படுக்கை. சாய்[2] → சாயல்]*

**சாயல்**[2] *šāyal,* பெ. (n.) *1.* அழகு; beauty, gracefulness. "கண்ணாருஞ் சாயல்" (பரிபா. 11:54). *2.* நிறம் (பிங்.); colour. *3.* மேனி, உடல்; body form. "தளர்ந்த சாயற் றகைமென் கூந்தல்" (சிலப். 8: 100). *4.* ஒப்பு; likeness, resembleance in feature. "பாலனை நின் சாயல் கண்டு... மெல்லியலா ளெடுத்தாள்" (தனிப்பா. 2: 142:361). *5.* நிழல்; reflectd image, shadow. *6.* சார்பு; protection. "அன்பர்கள் சாயலுளடையலுற் றிருந்தேன்" (தேவா. 154, 7). *7.* மஞ்சள் (மலை.); turmeric. *8.* மேம்பாடு (சூடா.); excellence, superiority. *9.* அருள்; grace, as of God. "சாயனினது வானிறை" (பரிபா. 2:56). *10.* மேம்பாடாகிய சொல்; lofty words. "சாயலே மெய்யே யுணர்ந்ததார் மிகவுரைப்பர்" (ஏலாதி, 28).

ம. சாயல்; Skt. chāyā

*[சாய்[4] + சாயல்]*

**சாயல்**[3] *šāyal,* பெ. (n.) மென்மை; tenderness. "அது நாயும் பன்றியும் போலாது மயிலும் குயிலும் போல்வதோர் தன்மை" (தொல்.பொருள். 243, இராம. உரை).

*[சாய்[4] + சாயல்]*

**சாயல்காட்டு-தல்** *šāyal-kāṭṭu-, 5* செ.குன்றாவி. (v.t.) *1.* நடித்தல்; to imitate, represent, personate. *2.* முன்குறியாகக் காட்டுதல் (உவ.); to foreshadow.

*[சாயல் + காட்டு-,]*

**சாயல்சரிவு** *šāyal-šarivu,* பெ. (n.) *1.* ஒப்பு; likeness. *2.* இசைவு; symmetry. *3.* இணக்கங் காட்டுங் குணம்; spirit of compromise

*[சாயல் + சரிவு - சாயல்சரிவு - மரபிணை மொழி]*

**சாயல்பிடி**[1]**-த்தல்** *šāyal-piḍi-, 4* செ.கு.வி. (v.i.) சரியான படி (அராகம்) பண்பிடித்தல்; to get the right tune.

*[சாயல் + பிடி]*

**சாயல்பிடி**[2]**-த்தல்** *šāyal-piḍi-, 4* செ.குன்றாவி. (v.t.) ஒத்திசைத்தல் (அனுகரித்ததல்); to imitate correctly, as in dress.

*[சாயல் + பிடி-,]*

**சாயல்மாயலாய்** *šāyal-māyalāy,* குவி.எ. (adv.) சாடைமாடையாய் (இ.வ.); without taking serious notice.

*[சாயல் + மாயல் + ஆய்]*

**சாயல்வரி** *šāyal-vari,* பெ. (n.) வரிப் பாட்டு வகை (சிலப். 7:43, உரை); a love-song.

*[சாயல் + வரி]*

**சாயல்வாகை** *šāyal-vāgai,* பெ. (n.) உசிலமர வகை (L); black sirissa.

**சாயலம்** *šāyalam,* பெ. (n.) ஓரணி கலன்; a kind of ornament. "வயிரசாயலம், பாதசாயலம்" (S.I.I.iil6).

*[சாய்[4] → சாயல் = அழகு. சாயல் → சாயலம்]*

**சாயலன்** *šāyalan,* பெ. (n.) காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஒரு வணிகன்; a trader in Kāviri-p-pūm-paṭṭinam. எட்டிப் பட்டம் பெற்ற வணிகன் (சா.அக.).

*[சாயல் → சாயலன்]*

**சாயலாள்** *šāyalāḷ,* பெ. (n.) நல்ல தலைமுடி உள்ளவள், அழகி; a woman having beautiful hair, a beautiful woman (சேரநா.).

ம. சாயலாள்

*[சாயல் + ஆள்]*

**சாயவடுப்பு** *šāya-v-aduppu,* பெ. (n.) சாயம் காயச்சுதற்குரிய அடுப்பு; oven for preparing dye.

*[சாயம் + அடுப்பு. அடுதல் = சுடுதல், சமைத்தல். அடு → அடுப்பு]*

**சாயவிடு-தல்** *šāya-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) சாய்த்தல்; to cause to incline. 'முட்டையைச் சாயவிட்டான்' (உ.வ.).

*[சாய் → சாய + விடு-,]*

**சாயவிராதகம்** *šāya-virādagam,* பெ. (n.) கடுக்காய்; gallnut (சா.அக.).

**சாயவிரை** *šāya-virai,* பெ. (n.) குரங்குமூஞ்சி விதை; monkey turmeric (சா.அக.).

**சாயவிலை** *šāya-vilai,* பெ. (n.) சீமைக் கற்பூரம் (L); Bengal sage.

**சாயவெளிச்சை** *šāya-veḷiccai,* பெ. (n.) ஆறு விரலம் (அங்குலம்) நீளமுள்ள ஆற்றுமீன் வகை (F.L.); a river-fish, silvery, attaining 6 in. in length.

**சாயவேட்டி** *šāya-vēṭṭi,* பெ. (n.) சாயமேற்றிய ஆடை; dyed clothworn by men.

*[சாயம் + வேட்டி]*

**சாயவேர்** *šāya-vēr,* பெ. (n.) சாயமிடுதற்குதவும் பூடுவகை (M.M. 160); chayroot, Indian madder.

ம. சாயவேர்; க. சாயி, சாயிபேரு

*[சாயம் + வேர்]*

**சாயவேர்குத்திகள்** *šāyavēr-kuttigaḷ,* பெ. (n.) சாயவேரைத் தோண்டியெடுப்போர் (யாழ்ப்.); chayroot diggers.

*[சாயவேர் + குத்திகள்]*

**சாயவேர்ச்சக்களத்தி** *šāya-vēr-c-cakkaḷatti,* பெ. (n.) போலிச்சாயவேர் (சங்.அக.); counterfeit chayroot.

*[சாயவேர் + சக்களத்தி]*

**சாயவேளாகொல்லி** *šāyavēḷākolli,* பெ. (n.) பண்வகை (சிலப். 14:166, உரை); primary melody-type.

**சாயவோலை** *šāya-v-ōlai,* பெ. (n.) காதுக்கு இடவும் பெட்டி முடையவும் உதவுஞ் சாயமிட்ட ஓலை (வின்.); dyed olas or rushes for ear-ornament and for matting.

*[சாயம் + ஓலை]*

**சாயனதம்** *šāyanadam,* பெ. (n.) சாயானகம் பார்க்க (யாழ்.அக.); see *šāyānagam.*

**சாயனம்** *šāyanam,* பெ. (n.) கோள்நிலை (வின்.); celestial longitude computed form the vernal equinox.

**சாயாகிரகம்** *šāyā-kiragam,* பெ. (n.) சாயைக்கிரகம் பார்க்க; see *šāyai-k-kiragam.*

*[சாயை → சாயா + கிரகம்]*

Skt. graha → த. கிரகம்

**சாயாகௌளம்** *šāyākauḷam,* பெ. (n.) பண் (அராகம்) வகை (பரத. இராக. 55); a specific melody - type.

**சாயாசூரன்** *šāyā-šūran*, பெ. (n.) ஓர் அசூரன்; a monster.

*[சாய் → சாயா + சூரன். சுள் → சுர் → சுரம் → சுரன் → சூரன்]*

**சாயாபடம்** *šāyā-padam*, பெ. (n.) சாயைப்படம் பார்க்க; see *šāyai-p-padam*.

*[சாய் → சாயா + படம்]*

**சாயானகம்** *šāyānagam*, பெ. (n.) ஓந்தி (திவா.); chameleon.

**சாயி**[1] *šāyi*, பெ. (n.) மை (C.G.); ink.

க. சாய்

*[சாய் = நிறம். சாய் → சாயி]*

**சாயி**[2] *šāyi*, பெ. (n.) படுத்துக்கிடப்பவன்; reclining person used only in compounds.

*[சாள் → சாடு. சாடுதல் = சாய்தல். சாள் → சாய். சாய்தல் = படுத்தல். சாய் + இ - சாயி]*

**சாயிதான்** *šāyitān*, பெ. (n.) மைக்கூடு (C.G.); ink stand, ink-bottle.

*[சாயம் → சாயி + தான். தானம் → தான்]*

U. dān → த. தான்

**சாயினம்** *šāyinam*, பெ. (n.) மென்மையுள்ள மகளிர்கூட்டம்; bevy of beautiful ladies. "துவ்வா நறவின் சாயினத்தானே" (பதிற்றுப். 60).

*[சாய்[4] → சாயல் → சாயினம்]*

**சாயு** *šāyu*, பெ. (n.) ஒருவகைப்புல்; a kind of grass.

*[சாய்[5] → சாயு]*

**சாயுங்காலம்** *šāyungālam*, பெ. (n.) கதிரவன் சாயும் வேளை (எற்பாடு) மாலைப் பொழுது; evening.

*[சாயும் + காலம்]*

கதிரவன் சாயுங்காலத்தைப் பொழுது சாய்கிற வேளை என்பது இன்றும் பெருவழக்கான உலக வழக்கு. ஆங்கிலரும் decline என்று கூறுதல் காண்க.

வடவர் ஸோ என்பதை மூலமாகக் காட்டுவர். ஸோ = அழி, கொல், முடி. சாயம் = நாள், முடிவு. இங்ஙனம் வடசொல்லாகக் காட்டுவதற்கே சாயுங்காலம் என்னும் வடிவைச் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியிற் காட்டாது விட்டிருக்கின்றனர் (வ.வ.146).

த. சாயுங்காலம் → Skt. sāyam

**சாயை**[1] *šāyai*, பெ. (n.) 1. நிழல்; shadow. "தன்னது சாயை தனக்குத வாது" (திருமந். 170). 2. படிவடிவம் (வின்.); reflected image, reflection. 3. ஒப்பு; resemblance, likeness. இக் குழந்தைக்குத் தகப்பன் சாயை உள்ளது. 4. சாயைக்கிரகம் பார்க்க (வின்.)); see *šāyai-k-kiragam*. 5. புகழ்; fame. "நின் சாயை யழிவு கண்டாய்" (திவ். பெரியாழ். 5,3,3.). 6. நிழல்போல் தொடரும் கரிசு (பாவம்); sin, as following a person like his shadow. "பிரமக் கொலைச் சாயை" (திருவானைக். தீர்த்தலி. 9).

வ. சாயா; கிரே. ஸ்கிய

*[சாய் + ஐ - சாயை = நிழல்]*

நிழல் சாய்கிறது என்பது வழக்கு. ஒ.நோ: மாய் + ஐ = மாயை. சாயை சாயா என்று ஆகார வீறாக்கின வளவானே வடசொல்லாகக் கூறுவது நகைப்பிற்கிடமானதே (ஒப். மொ.64).

**சாயை**[2] *šāyai*, பெ. (n.) சாயமரம் பார்க்க (L.); see *šāya-maram*.

*[சாயம் → சாயை]*

**சாயை**[3] *šāyai*, பெ. (n.) மனைவி (யாழ்அக.); wife.

*[சாயல் → சாயை. சாயல் = நிழல்; சாயை = நிழல்போல் உடனிருப்பவள்]*

**சாயை**[4] *šāyai*, பெ. (n.) சுவடு; trace. "தன்னய விருப்பின் சாயைகூடத் தன்னிடம் இல்லாமலும்" (நித்தியானுசந். பக்.366).

*[சாயல் → சாயை]*

**சாயைக்கிரகம்** *šāyai-k-kiragam*, பெ. (n.) காணாக்கோள்களாகக் கருதப்படும் இராகு, கேது என்னும் கோள்கள்; nodes, considered as invisible planets.

Skt. graha → த. கிரகம்

*[சாய் → சாயை + கிரகம்]*

கருங்கோள் (இராகு), செங்கோள் (கேது) எனக் கருதப்படும் இரு கோள்களும் தனியான கோள்கள் அல்ல. பெருங்கோள்களின் சாயை (நிழல்).

**சாயைகாட்டு-தல்** *šāyai-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கோயிலில் இறைவனுக்கு முன் மதிப்புரவாகக் (உபசாரமாகக்) கண்ணாடி காட்டுதல் (இ.வ.); to hold a mirror before an idol, in worship.

*[சாயை = நிழல். சாயை + காட்டு-,]*

**சாயைப்படம்** *šāyai-p-paḍam,* பெ. (n.) புகைப்படம்; photograph.

*[சாயை = படம்]*

**சார்¹-தல்** *šār-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. சென்றடைதல்; to reach, approach. "சாரா வேதங்கள்" (திவ். திருவாய். 10. 5:8). 2. புகலடைதல்; to depend upon, take shelter in. 3. அடுத்தல்; to be near to. கடல்சார்ந்து மின்னீர் பிறக்கும்" (நாலடி, 245). 4. கலத்தல்; to unite. "நல்லெழில் மார்பனைச் சார்ந்து" (கலித். 142). 5. உறவு கொள்ளுதல் (கொ.வ.); to be related to. 6. ஒத்தல்; to resemble, equal. 7. சாய்தல் (வின்.); to lean upon, recline against. 8. பொருந்தி யிருத்தல்; to be associated or connected with. "நலமாட்சி நல்லாரைச் சார்ந்து" (நாலடி. 175).

ம. சாருக; க. சார்; தெ. சாரு; து. சார்தி; கோத. சார்ய்; துட. சோர்ய்; பட. சேரு

*[சுள் → சள் → சழி. சழிதல் = கலமும் பெட்டியும் பக்கமாக அமுங்கிச் சரிதல். சள் → சரு → சருவு. சருவுதல் = சாய்தல். சரு → சரி → சரிவு. சரிதல் = சாய்தல். சடி = அடி வாரம். சரு → சார். சார்தல் = சாய்தல் (மு.தா.66,67)]*

**சார்²** *šār,* பெ. (n.) 1. கூடுகை (சூடா.); joining, uniting. 2. இடம் (பிங்.); place, situation. 3. இடப்பொருளுணர்த்தும் ஏழனுருபு; a locative ending. "காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை" (கலித். 117:11). 4. பக்கம்; side. "பழுமரத்தின் புறத்தொரு சார்" (திருவிளை. பழியஞ்சு. 12). 5. அணைக்கரை (வின்.); bund across a river or channel with an opening for placing a fishing net. 6. தாழ்வாரம்; inner verandah under sloping roof surrounding the inner courtyard of a house. 7. வகை; kind, class, species. ஒருசாராசிரியர். 8. அழகு (பிங்.); beauty, comeliness. 9. ஒரு மரம்; a tree. "ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்" (தொல். எழுத்து. 363).

*[சாள் → சார்]*

**சார்³** *šār,* பெ. (n.) ஒற்றன்; spy. "சிறுவனுய்த்த சாரென நினைந்து" (கந்தபு. அவைபுகு. 151).

**சார்⁴** *šār,* பெ. (n.) 1. சுவர்; wall. "தச்சனஞ்சிச் சாரகழ்கள்வனென்கின்ற தன்மையினாய்" (நீலகேசி, 510). 2. மலரணை (நாஞ்.); benami .

*[சாள் → சார்]*

**சார்க்கரம்** *šārkkaram,* பெ. (n.) 1. கற்கண்டு; sugar candy. 2. பாலின் ஆடை; skim of milk.

*[சருக்கரை → சர்க்கரை → சக்கரை = வட்டமாக வார்க்கப்பட்ட வெல்லக்கட்டி. சருக்கரம் → சார்க்கரம் (வே.க.114)]*

**சார்க்களம்** *šār-k-kaḷam,* பெ. (n.) ஆதொண்டை; Ceylon caper - Capparis horrida (சா.அக.).

**சார்க்காரி** *šār-k-kāri,* பெ. (n.) தழுதாழை; wind-killer-Cleodendron phlomoides (சா.அக.).

**சார்க்கேசபுஞ்சம்** *šār-k-kēšapuñjam,* பெ. (n.) இலவம்பிசின் (யாழ். அக.); gum of the red cotton tree.

**சார்க்கருவூலம்** *šār-k-karuvūlam,* பெ. (n.) மாவட்டக் கிளைக் கருவூலம்; district sub-treasury.

*[சார் + கருவூலம்]*

**சார்கொடு-த்தல்** *šār-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) அணுகவிடுதல்; to give room as to a disease. "நோயுஞ் சார்கொடான்" (திவ். திருவாய். 1. 10: 6).

*[சார்² + கொடு-,]*

**சார்ச்சார்** *šār-c-cār,* கு.வி.எ. (adv.) இடந்தொறு மிடந்தொறும்; everywhere. "மலையினிழி யருவி சார்ச்சார்க் கரைமரஞ் சேர்ந்து" (பரிபா. 16, 32).

*[சார் + சார்]*

**சார்ச்சி¹** *šārcci,* பெ. (n.) 1. சாய்வு; leaning. 2. சேருகை; uniting. 3. தொடர்பு; connection. "கருமச் சார்ச்சியல்லாத" (தொல். சொல். 84, உரை). 4. வருகை; approach. "சகுனி கௌசிகன் சார்ச்சியை" (பெருங். மகத. 26: 47). 5. சார்விடம் (பிங்.); support, place of support.

*[சார் → சார்ச்சி]*

**சார்ச்சி²** *šārcci,* பெ. (n.) ஒன்றை மற்றொன்றாகச் சார்த்திக் கூறுதல் (உபசரித்தல்); to quote one's own as others (in metonymy).

*[சார் → சார்ச்சி]*

**சார்த்தவகன்** *šārttavagan*, பெ. (n.) வாணிகன் (யாழ்.அக.); merchant, trader.

*[சார் → (சாத்து) → சார்த்து → சார்த்தவகன்]*

**சார்த்திக்கொடு-த்தல்** *šārtti-k-koḍu-*, 4. செ.கு.வி (v.i.) ஆடு, மாடு, கன்று போன்றவற்றை ஒன்றாக மதிப்பீடு செய்து கொடுத்தல்; to pay tax in kind, calculating goat, cow calf etc., in total. "பசுவின் கன்றும் எருதும் பசுச் சார்த்திக் குடுத்தன பசுவாகவும் ஆட்டுக் குட்டியும் கிடாயும் ஆடு சாத்திக் குடுத்தன ஆடாகவும்" (தெ. க. தொ. 2, கல். 63).

*[சார்த்தி + கொடு-,]*

**சார்த்தியளத்தல்** *šārtti-y-aḷattal*, பெ. (n.) ஒன்றனோடு மற்றொன்றை ஒப்பிட்டு அளக்கை (தொல். எழுத்து. 7, உரை); measurement by comparison.

*[சார்த்தி + அள-,]*

**சார்த்து[1]-தல்** *šārttu*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சாரச் செய்தல்; to cause to lean, to support. 2. இணைத்தல்; to join, unite, connect (செ. அக.).

ம. சார்த்து; க. சார்; தெ. சாது; து. சார்ணி; பட. சேத்து

*[சார் → சார்த்து (வே.க. 234)]*

**சார்த்து[2]** *šārttu*, பெ. (n.) 1. ஆவணம்; document. 'கைச்சார்த்து' (நாஞ்.). 2. குறிப்பு; note, memorandum. 'முகூர்த்தச் சார்த்து' (இ.வ.).

*[சார் → சார்த்து]*

**சார்த்து[3]** *šārttu*, பெ. (n.) 1. வணிகக் கூட்டம்; a caravan. 2. வணிகப் பொருட்கள்; merchandise, commodity (சேரநா.).

ம. சார்த்து

*[சார் → (சாத்து) → சார்த்து]*

**சார்த்துக்கை** *šārttu-k-kai*, பெ. (n.) கைமரம் (யாழ்ப்.); common rafter.

*[சார் → சார்த்து + கை]*

**சார்த்துகவி** *šārttu-kavi*, பெ. (n.) ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுட் புணர்ப்போன் (வெண்பாப். செய். 48, உரை); one who composes a verse after a model set by another.

*[சார் → சார்த்து + கவி]*

**சார்த்துப்பெட்டி** *šārttu-p-peṭṭi*, பெ. (n.) அரிப்பெட்டியின்கீழ்ச் சலித்த பொருளைக் கொள்ளவைக்கும் பெட்டி (யாழ். அக.); box under a sieve to receive anything sifted, as corn flour.

*[சார் → சார்த்து + பெட்டி]*

**சார்த்துவகை** *šārttu-vagai*, பெ. (n.) தலைமை வகையானன்றி உவமை முதலிய சார்பு வகையாற் கூறும் முறை; mode of stating a thing casually or incidentally, dist. fr. talaimai-vagai. "அகத்திணைக்கண் சார்த்துவகையான் வந்தனவன்றித் தலைமை வகையாக வந்தில என்பது" (தொல். பொருள். 54. உரை).

*[சார் → சார்த்து + வகை]*

**சார்த்துவரி** *šārttu-vari*, பெ. (n.) பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரொடுஞ் சார்த்திப் பாடும் வரிப்பாட்டு வகை (சிலப். 7: 7. அரும்.); a kind of love songs having the name or the place of the hero, as its theme.

*[சார் → சார்த்து + வரி. வரி = வரிப்பாட்டு]*

**சார்த்தூலம்** *šārttūlam*, பெ. (n.) புலி (திவா.); tiger.

மறுவ. வல்லியம், வயமா, வெல்லுமா, உழுவை, பாய்மா, தரக்கு, வேங்கை, குயவரி, புல், புண்டரீகம், கொடுவரி

**சார்ந்தோர்** *šārndōr*, பெ. (n.) 1. சுற்றத்தார் (சூடா.); relatives. 2. நண்பர்; friends, associates.

*[சார் → சார்ந்தோர்]*

**சார்நிலை** *šār-nilai*, பெ. (n.) மாவட்ட அளவில் உள்ள அலுவலர்க்கோ அலுவலகத்துக்கோ அடுத்த நிலை; subordinate to district level officer or offices sub as in sub-registrar, sub-treasury, etc.

*[சார் + நிலை]*

**சார்ப்பிறக்கு-தல்** *šārppiṟakku-*, 5 செ.கு.வி. (v.i.) சாய்ப்பிறக்குதல் (இ.வ.); to construct a sloping roof.

*[சார் → சார்ப்பு + இறக்கு-,]*

**சார்ப்பு** *šārppu*, பெ. (n.) 1. சாய்ப்புக்கூரை; sloping roof. 2. அடிப்படை; support. "சார்ப்புக் கொண்ட தஞ்சிறகரால்" (கந்தபு. திருநாட்டுப். 45). 3. மலைச்சரிவு; slope of hill.

*[சார் → சார்ப்பு]*

**சார்படமானம்** *šārpaḍamāṉam,* பெ. (n.) பின்னொற்றி (இ.வ.); subsequent mortgage.

*[சார்பு + அடமானம்]*

**சார்பதிவாளர்** *šār-padivāḷar,* பெ. (n.) பதிவுத் துறை உதவிப்பதிவாளர்; sub-registrar in registrar's office.

*[சார் + பதிவாளர்]*

**சார்பறு-த்தல்** *šārpaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. துறத்தல் (சூடா.); to renounce the world. 2. பிறப்பறுத்தல்; to be freed from births. "இறைவற் பேணிச் சார்பறுத் துய்தி யென்று" (சீவக. 1221).

*[சார் → சார்பு + அறு-,]*

**சார்பாக** *šārbāga,* வி.எ. (adv.) 1. ஒருவருக்கோ ஒன்றனுக்கோ நிகராளியாக; on behalf of; for someone. 2. உதவுவித்து; on behalf of; in one's favour.

*[சார்பு + ஆக]*

**சார்பியல்கோட்பாடு** *šārbiyal-kōṭpāḍu,* பெ. (n.) இயக்கத்திலிருக்கும் பொருளின் அளவு, நிறை, காலம் ஆகியவை வேகத்தைச் சார்ந்து மாறுபடும் என்பதை விளக்கும் கோட்பாடு; theory of relativity.

*[சார்பியல் + கோட்பாடு]*

**சார்பில்** *šārbil,* வி.எ. (adv.) ஆள்வினை பொருணிலை ஆகியவற்றால் செய்யும் உதவியில்; under the auspicious of a university, etc., with the help of. அறக்கட்டளையின் சார்பல் நடைபெறும் சொற்பொழிவுத் தொடர் இது (கிரியா.).

*[சார்பு + இல்]*

**சார்பிலார்**[1] *šārbilār,* பெ. (n.) முனிவர்; ascetics.

*[சார் → சார்பு + இலார்]*

**சார்பிலார்**[2] *šārbilār,* பெ. (n.) பகைவர்; enemies.

*[சார் → சார்பு + இலார். இல்லார் → இலார்]*

**சார்பிலோர்** *šārbilōr,* பெ. (n.) சார்பிலார் (சூடா.) பார்க்க; see *šārbilār.*

*[சார்பிலார் → சார்பிலோர்]*

**சார்பிற்றோற்றம்** *šārbiṟṟōṟṟam,* பெ. (n.) 1. இயற்கைத் தோற்றமுறை (சி.சி.); natural cause of existence, as offspring from the parent, saplings from the root. 2. சார்பெழுத்து பார்க்க. see *šārbeḻuttu.* "சார்பிற்றோற்றம் பிறக்குமாறு கூறுகின்றது" (தொல். எழுத்து. 101, உரை). 3. சார்பு-8 பார்க்க. see *šārpu-8.* "தவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்" (மணிமே. 21: 163).

*[சார்பு + இல் + தோற்றம்]*

**சார்பின்சார்பு** *šārbiṉ-šārpu,* பெ. (n.) குறுகின சார்பெழுத்து; shortened secondary letter. "சார்பின் சார்பாகிய ஆய்தக் குறுக்கமும்" (நன். 87, விருத்.).

*[சார் → சார்பின் + சார்பு]*

**சார்பு** *šārbu,* பெ. (n.) 1. இடம்; place. "படைஞர் சார்புதொறேகி" (கந்தபு. முதனாட். 30). 2. பக்கம்; side. வாதிசார்பில் நியாயாதிபதி தீர்மானித்தார். 3. சார்ப்பு, 1 பார்க்க; see *šārppu, 1.* 4. துணை; help, support. "மதலையாஞ் சார்பிலார்க்கு" (குறள், 449). 5. புகலிடம்; refuge, shelter. "ஓர் சார்பிலாமையால்— காப்பு நீங்கினார்" (திருவிளை. வளையல். 28). 6. பற்று; attachment. "சார்புகெட வொழுகின்" (குறள், 359). 7. பிறப்பு; birth. "சார்பறுத் துய்தி யென்று கூறினன்" (சீவக. 1221). 8. புத்த மதத்தினர் கூறும் பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பிறப்பு, தோற்றம் வினைப்பயன் என்ற பன்னிரண்டு நெறிகள் (மணிமே. 21: 163-4); causes of misery, 12 in number.. 9. ஒருதலைப்பக்கம்; bias, partiality. அவனுக்குச் சார்பாகப் பேசுகிறான். 10. கூட்டுறவு; friendship. அவனோடு இவன் சார்புள்ளவன். 11. கிட்டுகை (வின்.); approximation. 12. அருகு, அண்மை (வின்.); adjacency, nearness.

*[சார் → சார்பு]*

**சார்புச்செயலர்** *šārbu-c-ceyalar,* பெ. (n.) தலைமைச் செயலக உதவிச் செயலர் (இக்.வ.); under secretary in secretariat.

*[சார் → சார்பு + செயலர்]*

**சார்புநூல்** *šārbu-nūl,* பெ. (n.) நூல்வகை மூன்றனுள் முதனூல் வழிநூல்களோடு பொருண்முடிபு ஒருபுடையொத்து ஒழிந்தன ஒவ்வாமையுடைய புடைநூல் (நன். 8, உரை);

a work, which has for its source a mutanūl and a valinūl, but differs from them in many particulars, one of three kinds of nūl.

*[சார்பு + நூல்]*

*1. முதனூல் வழிநூல் ஆகிய நூலுள்ளும் ஒரு வழி முடிந்த பொருளை ஒரு பயன் நோக்கி ஒரு கோவைபட வைப்பது (இறை. 1).*

*2. முதனூல், வழிநூல் ஆகிய நூலுள்ளும் ஒருவழி முடிந்த பொருளை ஓராசிரியன் யாதானும் ஒரு பயன்நோக்கி ஒரு கோவைபட வைப்பது. (யாப். பாயிரம்).*

*3. சார்பு நூல் என்று ஒன்றுண்டா லெனின் அஃது இருவர் ஆசிரியர் கூறியதற்கு உடம்பட்டு வருதலின் அதுவும் வழிநூலென அடங்கும் (தொல்.பொருள். 639 இளம். உரை).*

**சார்பெழுத்து** *sārbeḻuttu,* பெ. (n.) **தமக்கென்று தனியான வரிவடிவங்கள் இல்லாமல் முதலெழுத்துகளைச் சார்ந்து ஒலிக்கும் எழுத்துகள்;** secondary letters.

*[சார்பு + எழுத்து]*

*1. தம்மொடு தாம் சார்ந்தும் இடஞ் சார்ந்தும் இடமும் பற்றுக்கோடும் சார்ந்தும் வேறுபாட்டால் வருதலின் சார்பெழுத் தென்றாயின (நன். 60 மயிலை).*

*2. சார்ந்து வருவதானும் தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தால் பிறத்தலானும் சார்பெழுத்தாயின.*

*உயிர்மெய் யொழிந்தன, அகரம் முதலியன போல் தனித்தானும், ககரம் முதலியனபோல் அகரமொடு சிவணியானும் இலங்கும் இயல்பின்றி ஒரு மொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையின் சார்பெழுத்தாயின (நன். 60. சிவ.) (உ.சொ.க.).*

*தொல்காப்பியம் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்றினைச் சார்பெழுத்துகளாகக் குறிப்பிடுகிறது.*

*நன்னூல் இவற்றொடு உயிர்மெய், உயிரளபெடை, ஒற்றளபெடை, ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம் ஆகியவற்றையும் சேர்த்துச் சார்பெழுத்துகள் பத்து என்று குறிப்பிடுகிறது.*

*உயிரும் மெய்யும் ஆகிய முதலெழுத்துகளுட் சிலவற்றின் சார்பினால் தோன்றுவன சார்பெழுத்துகள். சார்தல் ஒன்றையொன்று அடுத்தல். உயிரினத்தைச் சேர்ந்தவை இரண்டும் மெய்யினத்தைச் சேர்ந்தது ஒன்றும் ஆக, சார்பெழுத்துகள் மொத்தம் மூன்றாம். அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பனவாகும்.*

*தொல்காப்பியர் கூறியவாறு இம் மூன்றே சார்பெழுத்துகள். நன்னூலார் உயிர் மெய்யையும் வேறு சில எழுத்துக் குறுக்கங்களையும் அளபெடையையும் சேர்த்துத் தவறாகப் பத்தென விரித்து விட்டார். உயிர்மெய், உயிரும் மெய்யும் சேர்ந்த கூட்டெழுத்தே யன்றி வேறெழுத்தாகாது. எழுத்துக் குறுக்கங்களையெல்லாம் சார்பெழுத்தென்று கொள்ளின் ஆய்தக் குறுக்கத்தைச் சார்பிற் சார்பென்று கொள்ளவேண்டும். அளபெடை என்பது எழுத்தொலி நீட்டமேயன்றித் தனியெழுத்தாகாது. இவ்வுண்மைகளை யெல்லாம் நோக்காது. சார்பெழுத்துத் தொகையைப் பெருக்கியதற்கு மாணவரை மயக்குதலன்றி வேறொரு பயனுமின்றாம் (த.வ. 137).*

**சார்போடு-தல்** *sār-bōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **மீன் பிடிக்கச் சிறுகரை போடுதல்** (வின்.); to put up a small bund for fishing.

*[சார் + போடு-தல். சார் = கரை]*

**சார்போதன்** *sār-pōtaṉ,* பெ. (n.) **படிகம்போல் சார்ந்ததன் வண்ணமாகிய ஆதன்** (ஆன்மா); soul, as assuming, like crystal, the characteristics of objects in contact (செ.அக.).

*[சார்பு + ஆதன் - சார்பாதன் → சார்போதன்]*

**சார்மணை** *sār-maṇai,* பெ. (n.) **சுவரோடு ஒட்டித் திண்ணையில் கட்டிய சாய்மானத் திண்டு** (வின்.); cushion-like masonry work against the wall on a pial, intended to lean on.

*[சார் + மணை]*

**சார்மானம்** *sār-māṉam,* பெ. (n.) **சாய்மானம்** (வின்.); anything to lean on.

ம. சார்ம்மானம்.

*[சார் + மானம்]*

**சார்வணை** *sārvaṇai,* பெ. (n.) **சாய்ந்திருத்தற் குரிய அணை;** seat provided with back. "சந்தனப் பீடிகைச் சார்வணை யேறி" *(பெருங். உஞ்சைச். 37: 15).*

*[சார் + அணை]*

**சார்வரி** *šār-vari,* பெ. (n.) நரிப்பயறு; fox gram - Rothia trifoliate *(சா.அக.).*

**சார்வலை** *šārvalai,* பெ. (n.) மீன் வலை வகை *(இ.வ.);* a fishing net.

*[சார் + வலை]*

**சார்வா-தல்** *šārvā-,* 6 செ.குன்றாவி. (v.i.) அறமன்றக் கட்டளை முதலியன உரியவனிடத்துக் கொடுக்கப்படுதல்; to be served as summons. சம்மன் அவனுக்குச் சார்வாகவில்லை.

*[சார் → சார்வா-,]*

**சார்வாய்** *šārvāy,* பெ. (n.) அறுத்தவித்த பனங்காய் *(யாழ்அக.);* palmyra fruit sliced and cooked.

**சார்வாய்க்கதிர்வேற்கவிராயர்** *šārvāy-k-kadir-vēṟ-kavirāyar,* பெ. (n.) முருகர் பதிற்றுப் பத்தாந்தியின் ஆசிரியர்; a poet, author of Murugar-padirru-p-pattantādi.

*[சார்வாய் + கதிர்வேற் கவிராயர்]*

இவர் சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் சார்வாய் என்னும் ஊரைச் சார்ந்தவர். குமரேசசதகம் பாடிய குருபாத தாசர் இவரின் தந்தை. இவர் உயிர் வருக்கத் திருப்புகழ், உயிர் வருக்கக் கீர்த்தனை, பஞ்சரத்தினத் திருப்புகழ் முதலிய நூல்களை இயற்றியவர் *(பிற்.புல.).*

**சார்வாரம்** šārvāram, பெ. (n.) மகளிர் கச்சின் றலைப்பு *(பிங்.);* tying ends of a bodice.

*[சார் + வாரம். வார் → வாரி = நீண்ட வார் → வாரம்]*

**சார்வு** šārvu, பெ. (n.) 1. இடம் *(பிங்.);* place, residence. 2. ஒட்டுத்திண்ணை; verandha. "சார்வுந் திண்ணையுங் குயிற்றி" *(சீவக. 108).* 3. புகலிடம்; refuge. "உறுவர் செல்சார்வாகி" *(புறநா. 205).* 4. அடிப்படை; basis. 5. துணை; help, support. "கெட்டார்க்குச் சார்வாய்" *(குறள், 15).* 6. வழிவகை; means. "உயருஞ் சார்விலா வுயிர்" *(கம்பரா. நாட்டு. 55).* 7. பற்று *(சூடா.);* attachment. 8. அயலிடம் *(வின்);* vicinity, neighbourhood. 9. ஒருதலைப் பக்கம்; partiality. 10. சார்வோலை *(யாழ்ப்.)* பார்க்க; see šār-v-ōlai.

*[சார் → சார்வு]*

**சார்வோலை** *šār-v-ōlai,* பெ. (n.) முதிர்ந்த குருத்தோலை *(யாழ்ப்.);* matured palm leaf adjoining kuruttu.

*[சார்வு + ஓலை]*

**சாரக்கட்டை** *šāra-k-kaṭṭai,* பெ. (n.) 1. வளைவைத் தாங்குதற் கென்று கட்டிப் பின்பு எடுத்துவிடக் கூடிய சுவர்; temporary wall erected for supporting an arch under construction. 2. அணை வளைவைத் தாங்க இடைக்கால ஏற்பாடாகக் கட்டப்படும் நடுக்கட்டைச் சுவர் (C.E.M.); centering pier.

*[சாரம் + கட்டை]*

**சாரக்கிழங்கு** *šāra-k-kiḻaṅgu,* பெ. (n.) சிறுகிழங்கு; Chinese yam; small yam - Dioscorea aculeata *(சா.அக.).*

*[சாரம் + கிழங்கு. கிழக்கு → கிழங்கு = நிலத்தின்கீழ் விளைவது]*

**சாரக்கினி** *šāra-k-kiṉi,* பெ. (n.) சிறுகீரை; field spinach - Amaranthus eampestris *(சா.அக.).*

**சாரக்குறி** *šāra-k-kuṟi,* பெ. (n.) (சாம்பலால்) நெற்றியில் பூசும் குறி; a mark on the forehead etc. made by ashes *(சேரநா.).*

ம. சாரக்குறி

*[சாரம் + குறி]*

**சாரகத்தி** *šāra-katti,* பெ. (n.) நீர்முள்ளி; water thistle - Hygrophila spinosa *(சா.அக.).*

**சாரகந்தகம்** *šāra-kandagam,* பெ. (n.) சந்தனம் *(மலை.);* sandalwood.

**சாரகந்தம்** *šāra-kandam,* பெ. (n.) சாரகந்தகம் பார்க்க *(மூ.அ.);* see *šāra-kandagam.*

*[சாரகந்தகம் → சாரகந்தம்]*

**சாரகம்**[1] *šāragam,* பெ. (n.) தேன் *(சங்அக.);* honey.

ம. சாரகம்; Skt. kṣāraka

**சாரகம்**[2] *šāragam,* பெ. (n.) இந்துப்பு *(மூ.அ.);* rock salt.

**சாரங்கட்டு-தல்** *šāraṅgaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) கட்டடத்தின் மேற்பகுதிக்கு ஏறுவதற்கு வாய்ப்பாகக் கம்புகளைக் கொண்டு படி போன்ற நிலையினை உருவாக்குதல்; to scaffold.

க. சாரகட்டு

*[சாரம் + கட்டு-,]*

**சாரங்கநாட்டை** *šāraṅga-nāṭṭai,* பெ. (n.) பண் வகை (பரத. ராக. 102); a specific melody-type.

**சாரங்கபாடாணம்** *šāraṅga-pāḍāṇam,* பெ. (n.) செய்நஞ்சு (பாடாண) வகையுளொன்று (சங்அக.); a kind of arsenic.

**சாரங்கம்**[1] *šāraṅgam,* பெ. (n.) 1. குறிஞ்சா; Indian ipecacuanha. 2. சிறுகுறிஞ்சா; small Indian pecacuanha (செஅக.).

**சாரங்கம்**[2] *šāraṅgam,* பெ. (n.) சாரங்கவீணை பார்க்க (பரத. ஒழிபி. 15); see *šāraṅga-vīṇai.*

**சாரங்கவீணை** *šāraṅga-vīṇai,* பெ. (n.) வீணை வகை (சங்அக.); a kind of lute.

*[சாரங்கம் + வீணை. விண் = வில்நரம்பு தெரித்தற்குறிப்பு. விண்விண் = யாழ்நரம்பு தெரித்தற்குறிப்பு. விண் → வீணை]*

**சாரங்கன்**[1] *šāraṅgaṉ,* பெ. (n.) திருமால் (வின்.); Tirumāl (Viṣṇu), as a bowman.

*[சரம் = அம்பு. சரம் → சாரம் + அங்கன்]*

Skt. aṅga → த. அங்கன்

**சாரங்கன்**[2] *šāraṅgaṉ,* பெ. (n.) குதிரை வகை (அசுவசா. 151); a species of horse (செஅக.).

**சாரங்கி** *šāraṅgi,* பெ. (n.) நரம்பிசைக் கருவி வகை (வின்.); Indian violin, a stringed instrument played with a bow.

**சாரசணம்** *šārašaṇam,* பெ. (n.) மாதரின் இடையணி வகை (யாழ்அக.); a waist band for women (செஅக.).

**சாரசம்** *šārašam,* பெ. (n.) சீமை நன்னாரி (M.M.171); sarsaparilla china root, smilax officinalis.

**சாரசவேர்** *šāraša-vēr,* பெ. (n.) சீமை நன்னாரி வேர்; root of jamaica sarsaparilla - sarsac radix (சாஅக.).

*[சாரசம் + வேர்]*

**சாரசிங்கி** *šāra-šiṅgi,* பெ. (n.). 1. கல்லுப்பு; crystallized sea-salt. 2. சவ்வீரம்; corrosive sublimate (சாஅக.).

**சாரசேர்** *šārašēr,* பெ. (n.) முதியார் கூந்தல்; virginian silk - Periploca sclapidae (சாஅக.).

**சாரஞ்சுடு-தல்** *šārañ-juḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) காரநீர் மருந்துக்கானச் சாம்பலுக்காகக் கள்ளி முதலியவற்றை எரித்தல் (வின்.); to burn the milk - hedge, prickly pear, etc., to get their ashes for making lye .

*[சாரம் + சுடு-,]*

**சாரடை** *šāraḍai,* பெ. (n.) வரிவகையுளொன்று (தெ.க.தொ. 4. 106); a tax.

**சாரணத்தி** *šāraṇatti,* பெ. (n.) சாரணை (மலை.) பார்க்க; see *šāraṇai.*

*[சாரணை → சாரணத்தி]*

**சாரணம்** *šāraṇam,* பெ. (n.) அம்மையார் கூந்தல் (மலை.); seeta's thread.

**சாரணர்**[1] *šāraṇar,* பெ. (n.) 1. ஒற்றர்; spies, secret agents, emissaries. "தவாத் தொழிற் றூதுவர் சாரணர்" (திவா.). 2 தூதுவர்; messengers, ambassadors. "சாரணர்....... அளித்த வோலை" (விநாயகபு. 3: 35). 3. சமணரிலும் புத்தரிலும் சித்தி பெற்றோர்; Jain or Buddhist sages who have obtained supernatural powers. "சாரண ரறிந்தோர் காரணங்கூற" (மணிமே. 29. 29). 4. பதினெண்கணத்துள் ஒரு சாரார் (சூடா.); a class of celestial hosts, one of patiṉeṉ-kaṇam. 5. நாட்டு நலப்பணியாளர்கள்; scouts.

*[சரணம் = கால். சரணம் → சாரணர்]*

**சாரணர்**[2] *šāraṇar,* பெ. (n.) தேவருள்பாடும் வகுப்பார்; recite caste (அபி.கோ).

**சாரணரியக்கம்** *šāraṇar-iyakkam,* பெ. (n.) நாட்டுநலப்பணித் தொண்டர் படை இயக்கம் (Mod.); scout movement.

*[சாரணர் + இயக்கம்]*

**சாரணை** *šāraṇai,* பெ. (n.) மழைக்காலத்தில் முளைக்கும் செடி; one - styled trianthema - Trianthema monogyna (சாஅக.).

**வகைகள்**

1. சத்திச் சாரணை; hogweed - Boerhaavia rependa.
2. வெள்ளைச் சாரணை; white Shauranay - Trianthema decandra.
3. சிகப்புச் சாரணை; red Shauranay - Orygia decumbens alias O. trianthemoides.

4. மிளகுச் சாரணை; pungent trianthema.
5. செஞ் சாரணை;
6. மூக்கரைச் சாரணை; a white creeper - Trianthema monogyna.
7. வட்டச் சாரணை; purslane - leaved trianthema - Trianthema pentardra.
8. அதி சாரணை;
9. சிறு சாரணை;

**சாரத்தண்ணீர்** *šāra-t-tannīr,* பெ. (n.) காரத் தண்ணீர் (வின்.); lye.

*[காரம் → சாரம் + தண்ணீர்]*

**சாரத்துளை** *šāra-t-tuḷai,* பெ. (n.) சாரக்கழி வைக்கும் சுவர்த்துளை; scaffold - hole or pút log hole in a building under construction.

*[சாரம் + துளை. துள் → துளை]*

**சாரப்பருப்பு** *šāra-p-paruppu,* பெ. (n.) காட்டுமாவிரை (பதார்த்த. 786); pulp of Cuddapah almond.

*[சாரம் + பருப்பு]*

**சாரப்பாரிகம்** *šārap-pārigam,* பெ. (n.) விளாம்பழம்; the riped fruit of wood - apple tree (சா.அக.).

**சாரப்பந்தினி** *šārabandini,* பெ. (n.) பேரா முட்டி; fragrant pavinia - Pavonia odorate (சா.அக.).

**சாரம்**[1] *šāram,* பெ. (n.) 1. மேலேறக்கட்டும் மரம்; scaffolding, sheers, sticks tied to the smaller branches of a flower - tree, as a scaffold for pricking flowers. "உதர ரோமச் சங்கிலி சாரமாக்கி" (குற்றால. தல. தருமசா. 70). 2. மேடு (வின்.); elevation, eminence, high ground.

ம. சாரம்; க. சார; தெ. சாரவ, சாருவ; கோத. சாம்

*[சார் → சாரம் = சுவரைச் சாரக்கட்டும் மரம்]*

**சாரம்**[2] *šāram,* பெ. (n.) 1. பயிர்களின் உயிர்ச் சாறு; sap, as of plants. "வழியு மாசாரமுஞ் சிறந்தீர்" (அழகர்கல. 67). 2. இனிமை (பிங்.); relish sweetness. 3. மருந்து (பிங்.); medicine, elixir. 4. சிறந்தது; that which is of superior quality. "மாமணிச்சாரம் வைத்த வலயமொன்று" (பார. சூது போர். 175). 5. வடித்தெடுத்த பகுதி; essence, gist. "பதார்த்த மெல்லாஞ் சாரமாச் சேகரித்து" (சிவரக. சிவதன்மா. 34). 6. பயன்; advantage use. 7. ஆற்றல்; strength, vigour. 8. மரவயிரம் (பிங்.); hard inner part or heart of a tree. 9. மரவகை; Cuddapah almond, Buchanania latifolia. 10. இருப்பை (மலை.); South Indian mahua. 11. கொட்டை முந்திரி (மலை.); cashew tree. 11. சித்திரப் பாலடை (மலை.); tailed tick-trefoil.

*[சாறு → சாறம் → சாரம்]*

**சாரம்**[3] *šāram,* பெ. (n.) 1. எரிவுப்பு (நவச்சாரம்); ammonium chloride. 2. வண்ணான் காரம்; washerman's lye. 3. காரச் சாம்பல்; ashes for lye.

*[காரம் → சாரம்]*

**சாரம்**[4] *šāram,* பெ. (n.) அணிவகை (பாப்பா. 72); a figure of speech.

**சாரம்**[5] *šāram,* பெ. (n.) சாம்பல்; a kind of ash.

ம. சாரம்;

Pkt. charra; Skt. kṣāra.

*[சார் → சாரம்]*

**சாரம்**[6] *šāram,* பெ. (n.) அருகு, அண்மை; nearness, vicinity (சேரநா.).

ம. சாரம்; க., பட. சாரெ; து. சார்தி (சந்திப்பு); கோத. சாரி; துட. சோரி; குட. சாசெ (உறவினர்)

*[சார் → சாரம்]*

**சாரம்போடு-தல்** *šārampōḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) சாரங்கட்டு-தல் பார்க்க; see *šāraṅ-gaṭṭu-.*

*[சரம் + போடு-,]*

**சாரமண்** *šāra-maṇ,* பெ. (n.) 1. உழமண்; fuller's earth. 2. தூய்மையான மண்; pure alkaline earth (சா.அக.).

*[காரம் → சாரம் + மண்]*

**சாரமத்தியம்** *šāra-mattiyam,* பெ. (n.) நாயுருவி; Indian burr - Achy - ranthes aspera (சா.அக.).

**சாரமாக்கு-தல்** *šāram-ākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) பொருட்படுத்துதல்; to give importance, mind. அவன் செய்ததைச் சாரமாக்காதே (நாஞ்).

*[சாரம் + ஆக்கு-,]*

**சாரமாணி** *šāramāṇi,* பெ. (n.) *பகடிக்காரன் (சிலப். 5: 53, உரை);* professional buffoon.

*[சாரம் + மாணி]*

**சாரமிறக்கு[1]-தல்** *šāram-iṟakku-,* 5 செ.குன்றாவி. (v.i.) *கட்டடச் சாரத்தைப் பிரித்தல் (வின்.);* to take down a scaffoldings.

*[சார் → சாரம் + இறக்கு-,]*

**சாரமிறக்கு[2]-தல்** *šāram-iṟakku-,* 5 செ.குன்றாவி. (v.i.) *1. சாறுபிழிதல் (வின்.);* to express juice, distil. *2. சாற்றை உட்செலுத்துதல்;* to swallow the juice of anything chewed or dissolved in the mouth.

*[சாறு → சாறம் → சாரம் + இறக்கு-,]*

**சாரமேசன்** *šāra-mešaṉ,* பெ. (n.) கருஞ்சிந்தில்; a black variety of moon-creeper - menispermum cardifolium *(சா.அக.).*

**சாரமேயன்** *šāra-mēyaṉ,* பெ. (n.) *நாய் (பிங்.);* dog.

**சாரர்** *šārar,* பெ. (n.) *1. ஒற்றர்;* spy. *2. நண்பர்;* friend.

*[சார் → சாரர்]*

**சாரல்[1]** *šāral,* பெ. (n.) *சாய்வாகவும் துளித் துளியாகவும் விழும் மழை அல்லது காற்றால் அடித்துவரப்படும் மழை;* light drizzle, driving rain. குற்றாலத்தில் சாரல் எப்போது தொடங்கும்.

*ம. சாரல் (மழை); பட. செரெ*

*[சார் → சாரல் = சாய்ந்து பெய்யும் தூறல்]*

šāral, rain driven by th wind ; in the usage of the southern Tamilians, the rain brought by the south-west monsoon. Comp. Samoiede sarre, Perimian ser, Votiak sor, rain. (C.G.D.F.L. 619).

**சாரல்[2]** *šāral,* பெ. (n.) *1. கிட்டுகை;* drawing near. "தாஞ்சாரற்கரிய தனுவளைத்தான்" *(பாரத. திரௌபதி. 57). 2. பக்கம்;* side. "மாளிகையின் சாரல்" *(கம்பரா. ஊர்தே. 100). 3. பக்கமலை;* side or slope of a mountain. "வழையமை நறுஞ்சாரல்" *(கலித். 53). 4. மலை (பிங்.);* mountain. *5. தூவானம்;* rain driven in. *6. மலையில் மேகங் கட்டிப் பெய்யுந் தூற்றல்;* drizzling rain from clouds gathering on hill-tops. *7. மருதயாழ்த் திறமாகிய காந்தாரப்பண் (பிங்.);* gāndhāra, a secondary melody-type of the marutham class.

*ம. சாரல்*

*[சார் → சாரல் = மலைச்சரிவு]*

*மலையடிவாரம் சாரல் எனப்படும். 'சாரல்நாட செவ்வியை யாகுமதி' (குறுந். 18-2) "சாரல் நாட நடுநாள்" (குறுந். 9). "சாரல் நாட வாரலோ எனவே" (குறுந். 141:8) என்பன மலைப்பக்க நாட்டைச் சாரல் நாடு எனக் கூறுதல் காண்க. மேற்புறமாயினும் கீழ்ப்புறமாயினும் சேரநாடு முழுவதும் பெரும்பாலும் மேற்குத் தொடர்ச்சி கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் அடிவாரச் சரிவே. இதனாலேயே இந்நாட்டரசன் சேரன் (சாரல் - சேரல் - சேரலன் - சேரன்) எனப்பட்டான்.*

**சாரல்[3]** *šāral,* பெ. (n.) *நிறம் சற்றுக் குறைகை;* become dull colour.

*[சார் → சாரல்]*

**சாரல்கட்டு-தல்** *šāral-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) *மழைபெய்தற்கு ஏற்றபடி நிறைந்திருத்தல்;* to be dense with water-vapour as clouds on hill-side (Tinn.).

*[சாரல் + கட்டு-,]*

**சாரல்காற்று** *šāral-kāṟṟu,* பெ. (n.) *மேற்குக் காற்று;* west wind.

*ம. சாரவாயு*

*[சாரல் + காற்று]*

**சாரல்நாடன்** *šāral-nāḍaṉ,* பெ. (n.) *மலைச் சரிவிலுள்ள நாட்டரசன்;* king of slope of hill. "சாரல் நாட வாரலோ வெனவே" *(குறுந். 141).*

*[சாரல் + நாடன்]*

**சாரலம்** *šāralam,* பெ. (n.) *எள் (மூ.அ.);* sesamum.

**சாரலன்** *šāralaṉ,* பெ. (n.) *சாரல்நாடன் பார்க்க;* see *šāral-nāḍaṉ.*

*[சார் → சாரல் = மலைச்சரிவு, சாய்ந்து பெய்யும் மழை. சாரல் → சாரலன்]*

**சாரலி** *šārali,* பெ. (n.) *நெல்வகை (வின்.);* a kind of paddy.

*[சாலி → சாரலி]*



சாரளை



சாரப்பருப்பு



சாமந்தி



சாலாமிசிறி



சாறுவேளை

**சாரவறுதி** *šāravaṟuti*, பெ. (n.) நொய்மை (இலேசு); lightness, slightness, as of a blow, a fall. *'அடி சாரவறுதியாய்ப்பட்டது' (யாழ்ப்.).*

*[சாரம் + அறுதி]*

**சாரவாக்கியம்** *šāra-vākkiyam*, பெ. (n.) கோள்நிலையைக் கணிக்கும் விளக்க நூற்பா (வின்.); mnemonic or formula for calculating the position of planets, the letters of the alphabet being substituted for numbers.

*[சாரம் + வாக்கியம்]*

**சாரவிறுதி** *šāraviṟuit*, பெ. (n.) சாரவறுதி (யாழ்ப்.) பார்க்க; see *šāravaṟudi.*

*[சாரம் + இறுதி]*

**சாரற்கட்டு** *šāraṟ-kaṭṭu*, பெ. (n.) கோடைக் காலத்தில் மலையுச்சியில் முகில் கூடியிருக்கை; gathering of clouds over the hills during the monsoon. "விண்மலர்ந்த சாரற்கட்டு" *(தொண்டல் விடு. 651).*

*[சாரல் + கட்டு]*

**சாரன்** *šāraṉ*, பெ. (n.) 1. ஒற்றன்; spy, emissary. "ஓடினார் சாரர்வல்லை" *(கம்பரா. பிரமாத்திர. 162).* 2. குதிரைவகை (அசுவசா. 152.); a breed of horse.

*[சார் → சாரன்]*

**சாராக** *šārāga*, கு.வி.எ. (adv.) அணைவாக (நாஞ்.); benami.

*[சார் → சாராக]*

**சாராம்சம்** *šāramšam*, பெ. (n.) வடித்தெடுத்த பகுதி (கொ.வ.); essence, as of a fruit, purport, gist, as of speech.

*[சாறு → சாரு → சாரம் + அம்சம்]*
Skt. amsa → த. அம்சம்

**சாராயக்கடை** *šārāya-k-kaḍai*, பெ. (n.) சாராயம் விற்கும் கடை; an arrack shop.

ம. சாராயக்கட; பட. சாராயக்கடெ

*[சாராயம் + கடை]*

**சாராயக்காரன்** *šārāya-k-kāraṉ*, பெ. (n.) 1. சாராயம் காய்ச்சுபவன்; one who distills arrack. 2. சாராயம் விற்போன்; one who sells arrack.

ம. சாராயக்காரன்; பட. சாராயகாரா

*[சாராயம் + காரன்]*

**சாராயக்கிடங்கு** *šārāya-k-kiḍaṅgu*, பெ. (n.) சாராயக்கடை; arrack shop tavern.

*[சாராயம் + கிடங்கு. கிழக்கு → கிழங்கு = நிலத்தின் கீழ் விளைவது. கிழங்கு → கிடங்கு]*

**சாராயங்கட்டு-தல்** *šārāyaṅ-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) சாராயங் காய்ச்சு-தல் (வின்.) பார்க்க; see *šārāyaṅ-kāyccu-.*

*[சாராயம் + கட்டு-,]*

**சாராயங்காய்ச்சு-தல்** *šārāyaṅ-kāyccu-*, பெ. (n.) சாராயம் வடித்தல்; to distil arrack.

*[சாராயம் + காய்ச்சு. காய் → காய்ச்சு]*

**சாராயச்சட்டி** *šārāya-c-caṭṭi*, பெ. (n.) சாராயம் காய்ச்சுவதற்குப் பயன்படுத்தும் பானை; an earthern vessel used for distilling arrack .

ம. சாராயச்சட்டி

*[சாராயம் + சட்டி]*

**சாராயப்பாவாலை** *šārāya-p-pāvālai*, பெ. (n.) சாராயம் வடியும் பானை (இ.வ.) (வின்.); vessel for receiving distilled spirits.

*[சாராயம் + பாவாலை]*

**சாராயம்** *šārāyam*, பெ. (n.) மரப் பட்டையையோ, கரும்பின் கழிவையோ, சில வகைக் கிழங்கையோ நொதிக்க வைத்துக் காய்ச்சி வடித்தெடுக்கும் மயக்கமூட்டும் நீர்மம்; local alcoholic brew; spirits; arrack.

ம. சாராயம்; க. சாராய; தெ. சாராய், சாராயி; து. சாராயி; பட. சாராய; Ar. sharab; Skt. saraka.

*[சாறு → சாரு → சாராயம்]*

**சாராய வகைகள்**

1. இலுப்பைச் சாராயம்
2. வேலம்பட்டைச் சாராயம்
3. வத்தாவிச் சாராயம்
4. தென்னஞ் சாராயம்
5. கொழும்புச் சாராயம்
6. ஈச்சஞ் சாராயம்
7. வெல்லச் சாராயம்
8. பனஞ் சாராயம்
9. பட்டைச் சாராயம்
10. அரிசிச் சாராயம்
11. கூந்தல்பனைச் சாராயம்

(சா. அக.).

**சாரார்** *šārār,* பெ. (n.) *குழுவினர்; பிரிவினர்;* group or party; section. *இரு சாராருமே ஒத்துப் போக வேண்டும்.*

*[சார் + ஆர். 'ஆர்' பலர்பாலீறு]*

**சாரி**[1] *šāri,* பெ. (n.) *1. வட்டமாயோடுகை;* circular, movement, wheeling, as of soldiers, horses or chariots in fighting. *"திரிந்தார் நெடுஞ்சாரி" (கம்பரா. வாலிவ. 37).* 2. நடை (வின்.); movement, course. 3. *ஊர்தி மீது செல்லுகை;* ride, drive. 4. *உலாவுகை (வின்.);* stroll, walk. 5. *கூட்டம்;* company, swarm, as of ants. *எறும்பு சாரிசாரியாய்ப் போகிறது.*

*[சார் → சாரி]*

**சாரி**[2] *šāri,* பெ. (n.) *இசைக்கருவி வகை;* a musical instrument. *"கரடிகை பீலிசாரி" (கந்தபு. திருக்கல். 6.).*

*[சார் → சாரி]*

**சாரி**[3] *šāri,* பெ. (n.) *சூதாடுகாய் (பிங்.);* dice.

*[சார் → சாரி]*

**சாரி**[4] *šāri,* பெ. (n.) 1. *பக்கம்;* side, wing. *'அவன் வீடு வடசாரியில் இருக்கிறது'.* 2. *வரிசை;* row or series. *சாரிசாரியாக மக்கள் சென்றனர்.* 3. *நடந்து செல்பவனைக் குறிக்கவரும் கூட்டுச் சொல்லின் இறுதிப் பகுதி;* at the end of compounds one who is moving, walking or wandering about. *பாதசாரி.*

ம. சாரி

*[சார் → சாரி]*

*சாரம்*[8] பார்க்க

**சாரி**[5] *šāri,* பெ. (n.) *தடவை;* time, turn. *அவனுக்குப் பலசாரி சொன்னார் (தஞ்சை.) (செ.அக.).*

தெ., க., து. சாரி

*[சார் → சாரி]*

**சாரி**[7] *šāri,* பெ. (n.) *மகளிர் சீலை வகை;* long piece of cotton or silk cloth worn by women.

*[சீரை → சாரி]*

**சாரி**[8] *šāri,* பெ. (n.) *அஞ்சனச் செய்நஞ்சு (பாடாணம்) (யாழ்.அக.);* a mineral poison.

**சாரி**[9]**-த்தல்** *šāri-,* 4 செ. குன்றாவி. (v.t.) *கீழ் வீழ்த்தல்;* to prostrate, fell down. *"நெடுமரத்தாற் சாரித்தலைத் துருட்டும்" (கம்பரா. அதிகாயன். 161).*

*[சார் → சாரி-,]*

**சாரிகை**[1] *šārigai,* பெ. (n.) 1. *சாரி*[1] *பார்க்க;* see *šāri*[1]. *"நெடுஞ்சாரிகை திரிந்தான்" (கம்பரா. நிகும்பலை. 104).* 2. *வையாளி;* horse-riding. *"சாரிகைப் புள்ளர்" (திருவிருத். 19).* 3. *கதி;* onward movement. *"சாரிகை மறுத்து" (பரிபா. 6, 36).* 4. *சுழல்காற்று (பிங்.);* whirlwind.

*[சார் → சாரி → சாரிகை]*

**சாரிகை**[2] *šārigai,* பெ. (n.) *நாகணவாய்ப்புள்;* myna. *"கருந்தலைச் சாரிகை" (கல்லா.7.).*

**சாரிகை**[3] *šārigai,* பெ. (n.) *சாரி*[4] *(வின்.) பார்க்க;* see *šāri*[4] *(செ.அக.).*

*[சார் → சாரி → சாரிகை]*

**சாரிகை**[4] *šārigai,* பெ. (n.) *கவசம் (சது.);* armour coat of mail.

*[சுல் → (சோல்) → சால் → சால்பை = போர்வை. சால் → சார் → சாரிகை = மெய்புகு கருவி, மெய்யை மூடும் கருவி]*

**சாரிகைவரி** *sārigai-vari,* பெ. (n.) *தலைச் சுமையாக வழிச்சாரிகள் சுமந்து வந்து விற்பனை செய்யும் பொருள்களுக்கான வரி;* duty, toll. *"முன்னாள் வழிச்சாரிகையில் வைத்துக் குடுத்த மகண்மையும்" (தெ. க. தொ. 17, க. 142)*

மறுவ. மகண்மை

*[சாரிகை + வரி]*

**சாரிகொள்(ளு)-தல்** *šāri-koḷ(ḷu)-,* 13 செ.கு.வி. (v.i.) *நடனத்தில் இடம் வலமாக ஆடுதல்;* to move about or dance in a circle, as in nautch. *"பதசாரி சாரி கொள்ள" (விறலிவிடு. 419).*

*[சாரி + கொள்]*

**சாரிசாரியாக** *šārišariyāga,* வி.எ. (adv.) *வரிசை வரிசையாக;* in a row or series. *மக்கள் திருவிழாவிற்குச் சாரிசாரியாகச் சென்றனர்.*

*[சாரி + சாரியாக]*

**சாரிதங்கன்** *šāri-daṅgaṉ,* பெ.(n.) *சிறுகீரை;* pig's greens - Amaranthus campestris *(சா.அக.).*

**சாரிபம்** *šāripam,* பெ. (n.) *சாரிபை* (மலை.) *பார்க்க;* see *šāribai.*

**சாரிபாதிதம்** *šāri-pādidam,* பெ. (n.) *வெருகன் கிழங்கு;* a kind of bulbous root - Arum Macrorhizon *(சா.அக.).*

**சாரிபூமி** *šāri-būmi,* பெ. (n.) *முற்றவெளி;* esplanade.

*[சார் → சாரி + பூமி]*

Skt. būmi → த. பூமி

**சாரிபை** *šāripai,* பெ. (n.) நன்னாரி (தைலவ. தைல. *34);* Indian saraparilla.

**சாரியக்கோட்டை** *šāriya-k-kōṭṭai,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடி வட்டாரத்தில் உள்ள ஊர்; a village in Tanjavur district, Mannārkuḍi taluk. "சமையதன்மை இனிது நடாத்தி நிகழாநின்ற சாரியக் கோட்டையில் புவனெகவிரன்மடிகையில் நான்கு திசை பதினெண் விஷயத்தோம்" *(தெ. க. தொ. 6, க. 47-10).*

*[சாரியம் + கோட்டை]*

**சாரியம்**[1] *šāriyam,* பெ. (n.) *எட்டி* (மலை.); strychnine tree.

**சாரியம்**[2] *šāriyam,* பெ. (n.) *சாரிபை* (மலை.) *பார்க்க;* see *šāribai.*

**சாரியல்** *šāriyal,* பெ. (n.) இந்துப்பு (யாழ்.அக.); rock-salt.

*[சாரி + இயல்]*

**சாரியன்** *šāriyaṉ,* பெ. (n.) ஒழுக்கமுடையவன்; person of unimpeachable conduct. "மாசாரியனா மறுதலைச் சொன் மாற்றுவதே ஆசாரியன தமைவு" *(ஏலாதி, 75).*

**சாரியா** *šāriyā,* பெ. (n.) அகத்திக்கீரை; leaves of sesbane - Sesbania grandiflora.

**சாரியெலும்பு** *šāri-y-elumbu,* பெ. (n.) கரட்டெலும்பு (இங்.வை.15); ankle bone, Astragalus.

*[சாரி + எலும்பு. எல் = ஒளி, வெள்ளை. எல் → எலும்பு]*

**சாரியை**[1] *šāriyai,* பெ. (n.) 1. குதிரையின் சுற்று வரவு; pace of horse in a circle. "பதினெட்டுச் சாரியையும்" *(பு.வெ.12, வென்றிப். 13).* 2. வீரனுடைய நடை வகை; course, onward movement, as of a warrior. "சாரியை யந்தரத் தியக்கமும்" *(பெருங். உஞ்சைக். 37, 30).* 3. ஆடல் வகை ; a mode of dancing. "பெருநடை சாரியை பிரமரி இவை முதலாயினவும்" *(சிலப். 3, 16, உரை.).*

*[சார் → சாரியை]*

**சாரியை**[2] *šāriyai,* பெ. (n.) சொல்லுக்கும் உருபுக்கும் இடையில் தோன்றும் அசை; empty morph.

ம. சாரிய

*[சார் → சாரியை]*

தாமாகச் சேராத சொல்லுறுப்புகளையும் சொற்களையும் சார்ந்து இயைக்கும் அசைகளும் சொற்களும் சாரியை எனப்படும். இயைத்தல் → இசைத்தல். தாமாக ஒலிக்காத எழுத்துகளை ஒலித்தற்கும், ஒலிக்கும் எழுத்துகளை எளிதாய் ஒலித்தற்கும், அவற்றைச் சார்ந்து வரும் ஒலிகளும் சாரியை எனப்படும். ஆகவே எழுத்துச்சாரியை, சொற் சாரியை எனச் சாரியை இரு வகையாம்.

எழுத்துச்சாரியை

உயிரெழுத்துகளுள் குறிலுக்குக் கரமும் நெடிலுக்குக் காரமும் சாரியையாம். நெடில்களுள் ஐ, ஔ என்னும் இரண்டிற்கும் கான் என்பது சிறப்புச் சாரியை.

ஆய்தத்திற்குச் சாரியை ஏனம் என்பதாம். அது சேரும்போது ஆய்தத்திற்கு முன் அகரமும் பின் ககர மெய்யும் சேர்ந்து அஃகேனம் என்றாகும்.

மெய்யெழுத்திற்கு 'அ' சாரியை. அது மெய்க்குப் பின் வரும். க என்பது சாரியை யேற்ற மெய்யெழுத்திற்கும் க என்னும் குறிலுக்கும் பொதுவாயிருப்பதால் மெய் யெழுத்தை விதந்து குறிக்கும்போது ககரமெய் என்பது மரபு.

உயிர்மெய்யெழுத்துகளுள், குறிலுக்குக் கரம் சாரியை; நெடிலுக்குத் தனிச் சாரியை இல்லை. அதனால் மெய்யையும் நெடிலையும் பிரித்துக் ககர ஆகாரம் (கா), ககர ஈகாரம் (கீ) என்ற முறையிற் சொல்லப்பெறும்.

*சொற்சாரியை*

*அ, அத்து, அம், அற்று, அன், ஆம், இற்று, இன், உ, ஐ முதலியன சொற்சாரியை.*

*எ-டு: தட்டாரப்பாட்டம், எனக்கு, பட்டினத் தான், குளத்துப் பாய்ச்சல், புளியம்பழம், அவற்றை, அதனை. கல்லாங்கொள்ளி, பதிற்றுப்பத்து, பதினொன்று, வேரினை, அவனுக்கு, பண்டைக்காலம்.*

இவற்றுள் அற்றுச் சாரியைப் புணர்ச்சியும் இற்றுச் சாரியைப் புணர்ச்சியும் இன்று உலக வழக்கற்றன. அவைகள் என்பது மிகைபடக் கூறும் வழூஉச் சொல்லும், அதுகள் என்பது இழிவழக்கும் ஆகும். ஆதலால், அவற்றை இவற்றை எவற்றை என்றே குமரி நாட்டுப் பொதுமக்கள் வழங்கியிருத்தல் வேண்டும்.

*சாரியைகளும் சுட்டடியினவே. (த.வ.252, 253)*

பகுபதவுறுப்புகளுள் ஒன்றான சாரியை முழுச் சொல்லோடு இடைச் சொற்கள் சேரும்போதும் பிற இடங்களிலும் அச் சொற்கள் நன்கு இசையும் வண்ணம் சார்ந்து இயைந்து நிற்கும். சாரியைக்கென்று தனிப்பட்ட பொருள் எதுவும் இல்லை. அதனாற்றான் இதனைப் பொருளற்ற உருபன் (empty morph) என்றழைப்பர்.

மொழியியல் நோக்கில் அகப்புணர்ச்சியில் வரும் சாரியைகளுக்குப் பொருள் இல்லை என்பதனைப் பல சொற்கள் சாரியை இல்லாமல் வருவது, (வேந்தன், வேந்தனை, கை, கையால், கால் (காற்று) காலொடு) சில சொற்கள் சாரியை பெற்றும் பெறாமலும் வருவது, (நாட்டை நாட்டினை, வடக்கண் வடக்கின்கண்) ஆகியவற்றைக் காரணமாகக் காட்டுவர். சாரியை பொருளுள்ளனவாக இருந்தால் சாரியை பெற்று வரும் சொற்களை நோக்கச் சாரியை பெறாது வரும் சொற்கள் பொருள் குறைவு உடையனவாக இருக்கவேண்டும். அவ்வாறின்மையால் சாரியைக்குப் பொருள் இல்லை என்பதே ஏரண அடிப்படையான முடிவாகும்.

**சாரிரத்தை** *šārirattai,* பெ. (n.) எட்டி (யாழ்.அக.); strychine.

**சாரிவசந்தம்** *šāri-vašandam,* பெ. (n.) கழற் கொடி; grey bonduc - Casalpinia bonducella.

**சாரு** *šāru,* பெ. (n.) *1.* அழகு (பிங்.); beauty. *2.* கிளி; parrot.

*[சார் → சாரு]*

**சாருகம்** *šārugam,* பெ. (n.) *1.* கொலை; murder. *2.* ஊறு; disaster. *3.* அணங்கு; an inferior deity. *4.* வேட்டம்; hunting.

**சாருகன்** *šārugaṉ,* பெ. (n.) கொலையாளன் (பிங்.); murderer.

**சாருகேசி** *šārug-kēci,* பெ. (n.) முதன்மைப் பண் வகையுளொன்று (சங்.சந்.47); a primary rāga.

**சாருசகம்** *šāru-šagam,* பெ. (n.) கறியுப்பு; common salt (சா.அக.).

**சாருசம்** *šārušam,* பெ. (n.) கல்லுப்பு (யாழ்.அக.); rock salt.

**சாருசி** *šāruši,* பெ. (n.) சிற்றாமணக்கு; small castor seed - Ricinus communis (சா.அக.).

**சாருணி** *šāruṇi,* பெ. (n.) மஞ்சிட்டி; butter seed tree - Bira Orellana (சா.அக.).

**சாருதாரி** *šāru-dāri,* பெ. (n.) வெள்ளைக் கரிசிலாங்கண்ணி; white flowered eclipse plant - Eclipta alba (சா.அக.).

**சாருபலம்** *šāru-palam,* பெ. (n.) கொடி முந்திரிகை; grape vine - Vitis vinifera (சா.அக.).

**சாருமாட்சிகம்** *šāru-māṭcigam,* பெ. (n.) முந்திரிகை; cashew nut - Anacardium Occidentale (சா.அக.).

**சாருல்** *šārul,* பெ. (n.) உத்திரம், தூண், பாலம் முதலியன கட்டப் பயன்படும் காட்டு மர வகை; a kind of forest tree.

**சாரை**[1] *šārai,* பெ. (n.) நீளமான கோடு (வின்.); long, straight, direct course or line, stripe.

*[சார் → சாரை]*

**சாரை**[2] *šārai,* பெ. (n.) ஒரு வகைப் பாம்பு, சாரைப்பாம்பு; a kind of a rat-snake.

*[சர் → சர → சர சர → சாரை. 'சர்' எனும் ஒலிக் குறிப்பினின்று தோன்றிய சொல்]*

நல்ல பாம்போடு இணையும் ஆண் பாம்பு புகர் நிறம் அல்லது மஞ்சள் நிறம் கொண்டது. இப்பாம்பு சீறும் தன்மையது. எனினும் நச்சுத் தன்மை இல்லாதது. நீண்ட உடலும் வேக ஓட்டமும் கொண்டது. எதிரியை வாலால் அடிக்கும் தன்மையது.

**இதன் வகைகள்:**

1. *கருஞ்சாரை;* black rat snake.
2. *மலஞ்சாரை;* hill rat snake.
3. *பெருஞ்சாரை அல்லது சாரைக்கடா;* large rat snake.
4. *நெடுஞ்சாரை;* long rat snake.
5. *வெண்சாரை;* white rat snake.
6. *மஞ்சட்சாரை;* yellow rat snake.
7. *செஞ்சாரை;* red rat snake.



சாரைப் பாம்பு

**சாரை**[3] *šārai,* பெ. (n.) வெள்ளை நிற வெள்ளாடு (செங்கை); a kind of goat.

**சாரைக்கடா** *šārai-k-kadā,* பெ. (n.) *சாரை*[2] *(யாழ்ப். )* பார்க்க; see *šārai*[2].

*[சாரை + கடா]*

**சாரைக்கிட்டகுட்டி** *šārai-k-kiṭṭa-kuṭṭi,* பெ. (n.) 1. *முயற்குட்டி;* feeble leveret, unable to escape from pursuit, usually with a white spot on the forehead. 2. *நோஞ்சான்;* feeble, harmless chap.

*[சாரை + கிட்டகுட்டி]*

**சாரைசாரையாக** *šārai-sārai-y-āga,* வி.எ. (adv.) *சாரிசாரியாக* பார்க்க; see *šāri-šāri-y-āga.*

*[சாரை + சாரையாக]*

**சாரையுப்பு** *šārai-y-uppu,* பெ. (n.) *கல்லுப்பு;* crystallised sea salt *(சா.அக.).*

**சாரையோட்டம்** *šārai-y-ōṭṭam,* பெ. (n.) *சாரைப்பாம்பின் விரைவு (வின்.);* darting, rapid and direct motion of the rat-snake, applied to persons, bulls, etc.

*[சாரை*[2] *+ ஓட்டம்]*

**சாரைவால்** *šārai-vāl,* பெ. (n.) மாட்டு வால் வகையுள் ஒன்று; a kind of cow's tail.

*[சாரை + வால்]*

**சாரைவாலன்** *šārai-vālaṉ,* பெ. (n.) 1. நீண்ட வாலுள்ள எருது *(யாழ்ப்.);* bullock with a long tapering tail. 2. புகையிலை வகை; a kind of tobacco.

*[சாரை + வாலன். வால் → வாலன். 'ன்' உடைமை குறித்த ஈறு]*

**சாரோசி** *šārōsi,* பெ. (n.) எரியுப்பு (நவச்சாரம்) *(யாழ்.அக.);* sal-ammoniac, a solder.

**சாரோலை** *šārōlai,* பெ. (n.) பாய், தடுக்கு, பெட்டிகள் செய்யப் பயன்படும் பனையின் முதிர்ந்த குருத்தோலை; palmyra leaf 'சாரோலை விழுந்ததென்று குருத்தோலை சிரிக்கலாமா' *(பழ.)*(செ.அக.).

*[சார் + ஓலை - சாரோலை].*

*சார்வோலை பார்க்க*

**சால்**[1]**(லு)-தல்** *šāl(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) 1. *நிறைதல்;* to be abundant, full, extensive. "ஈடுசால் பேர்" *(சீவக. 59).* 2. மாட்சிபெறுதல்; to excel in moral worth; to great, noble. 3. பொருந்துதல்; to be suitable, fiting. "இந்திரனே சாலுங் கரி" *(குறள், 25).* 4. முற்றுதல்; to be finished, exhausted. "தாமத்தாரின ரெண்ணினுஞ் சால்வரோ" *(கம்பரா. பிணிவீட்டு. 97).* 5. போதியதாதல்; to be all that is required, to be sufficient.

ம. சாலு; க., து. சாலு; தெ. சாலு; கோத. சலு; துட. சௌலு.

*[சல் → சோல் → சால். சாலுதல் = நிறைதல், நற்குணம் நிறைந்திருத்தல், முற்றுதல், நிறைதலால் போதியதாதல்]*

**சால்**[2] *šāl,* பெ. (n.) உத்தரம், தளம், தூண், பாலம் முதலிய வேலைகளுக்குப் பயன்படும் மரம்; a kind of strong trees.

**சால்**[3] *šāl,* பெ. (n.) 1. *நிறைவு;* fullness, abundance. 2. தண்ணீர் நிரப்பும் பானை *(பிங்.);* large water -pot; 3. நீர் இறைக்கும் கலம்; baling bucket. 4. உழவுசால்; furrow in ploughing. "உழுத செஞ்சால்" *(சீவக. 817).* 5. விதைக்கும் பொழுது விதைப்பவன் வயலில் ஒரு முறை சென்று திரும்புகை *(வின்.);* track of a sower in passing and repassing while sowing grain. 6. கும்பஓரை (கும்பராசி) *(குமாரசு. தினாதி, 3, உரை);*

the eleventh sign of the zodiac, Aquarius. *7. நீண்டவரி;* continuous line, row *(செ.அக.).*

ம. சால; க. சால், சாலு (போதும்); தெ. சால, சாலு (முடியும், போதும்); கொலா. சால் (முடியும்); குவி. கால் (போதும்)

E. jar

*[சுல் → (சோல்) → சால்]*

sāl, a bucket, a furrow, Comp. oni-ia (sēl-ia), any flat board or tray with a raised rim (C.G.D.F.L. 593).

**சால்**[4] *šāl,* பெ. (n.) *ஆண்டு (இ.வ.);* year *(செ.அக.).*

*[சுல் → (சோல்) → சால் = நிறைதல், ஒரு குறிப்பிட்ட கால எல்லை நிறைவடைதல்]*



சால்

**சால்**[5]**(லு)-தல்** *šāl(lu)-,* 5 செ.கு.வி. (v.i.) *சாய்தல்;* to decline.

*[சுல் → சால்-,]*

**சால்கட்டு-தல்** *šāl-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) *1. தலைச்சாலுழுதல் (வின்.);* to plough the first furrow in a field. *2. வாய்க்கால் போல் நீண்ட கோடு உருவாக்குதல்;* to form a line *3. சாலில் விதைத்துச் செல்லுதல்;* to pass and repass, sowing grain in a field.

ம. சாலாகுக (உழுதல், சிறுகால்வாய் வெட்டுதல்); க. சாலுகட்டு

*[சால் + கட்டு-,]*

**சால்கரகம்** *šāl-karagam,* பெ. (n.) *ஒருவகைக் குடம்;* a kind of water pot. *"அமு பானை சட்டி திருமஞ்சனக் குடம் சால் கரகம் எரி கரும்பு இவையும்" (தெ.க, தொ. 7, க. 470/4)*

*[சால் + கரகம்]*

**சால்கோல்** *šāl-kōl,* பெ. (n.) *ஏற்றக்கோல் (செங்கை);* bamboo pole of picottah.

*[சால் + கோல்]*

**சால்பிடி-த்தல்** *šālpidi,* 4 செ.குன்றாவி. (v.t.) *ஏர்ச்சால் பிடித்தல்;* to form a line, to be in rows.

க. சால் கொள், சால்தெகெ; பட. சால் கிடி

*[சால் + பிடி]*

**சால்பு**[1] *šālbu,* பெ. (n.) *1. மேன்மை (திவா.);* excellence. *2. நற்குணம்;* good quality or character. *"சாலும் பிறநூலின் சால்பு" (ஏலாதி, 5).* *3. சான்றாண்மை;* nobility. *"என்ன பயத்ததோ சால்பு" (குறள், 987).* *4. தன்மை;* nature, *"தடுப்பன போலுஞ் சால்பின" (கம்பரா. கடிமண. 67).* *5. கல்வி (திவா.);* learning, erudition.

மறுவ. தகவு, பெற்றி, தகுதி, பான்மை, தகைமை

*[சால் → சால்பு]*

**சால்பு**[2] *šālbu,* பெ. (n.) *மனவமைவு;* frame of mind. *"இரவொல்லாச் சால்பு" (குறள், 1064).*

*[சால் → சால்பு. 'பு' சொல்லாக்க ஈறு]*

**சால்புமுல்லை** *šālbu-mullai,* பெ. (n.) *சான்றோரின் அமைதி கூறும் புறத்துறை (பு.வெ. 8:31);* theme describing the serenity of noble - minded persons.

*[சால்பு + முல்லை]*

**சால்புளி** *šāl-puli,* பெ. (n.) *முறைப்படி;* in the prescribed manner. *"சமிதைக் கிரிகை சால்புளிக் கழிப்பி" (பெருங். இலாவாண. 3, 81).*

*[சால்பு → சால்புளி]*

**சால்வடம்** *šāl-vadam,* பெ. (n.) *துலான் வடம்;* a kind of picottah part.

*[சால் + வடம்]*

**சால்வயிறு** *šāl-vayiru,* பெ. (n.) *பெருவயிறு (கொ.வா.);* pot belly.

*[சால் + வயிறு]*

**சால்வளை-த்தல்** *šāl-valai-,* 4 செ.கு.வி. (v.i.) *சால்விடு-, பார்க்க;* see *šāl-vidu-.*

*[சால் + வளை-,]*

**சால்வளையம்** *šāl-vaḷaiyam,* பெ. (n.) சாலின் நான்கு இரும்புப் பட்டைகள் சேர்ந்த, மேற் பகுதியில் உள்ள வளையம் (செங்கை); a ring of baling bucket.

*[சால் + வளையம். வள் → வளை → வளையம்]*

**சால்விடு-தல்** *šāl-viḍu-,* 20 செ.குவி. (v.i.) ஏர்ச்சாலுழுதல் (யாழ்ப்.); to plough a furrow.

*[சால் + விடு-,]*

**சால்விதைப்பு** *šāl-vidaippu,* பெ. (n.) மழை பெய்து மேல்மண் காய்ந்தபின் ஏர்ச்சாலில் விதைகளைப் போடுதல்; furrow sowing.

*[சால் + விதைப்பு. விதை → விதைப்பு]*

**சால்வு** *šālvu,* பெ. (n.) பொந்திகை (திருப்தி); satisfaction.

*[சால் → சால்வு]*

*சால்பு*[1] பார்க்க

**சால்வை** *šālvai,* பெ. (n.) மயிர்க்கம்பளம்; shawl. சொற்பொழிவாளர் சால்வை பரிசில் பெற்றார்.

க. சாலுவெ, சாலு; பட. சால்வெ

*[சல் → (சோல்) → சால் → சால்வை = போர்வை (மு.தா. 191). போர்த்திக் கொள்வதற்குப் பயன்படுவது]*

**சால்வையெடு-த்தல்** *šālvai-y-eḍu-,* 4 செ.குவி. (v.i.) மதிப்புரவாக (மரியாதையாக) மேல்துண்டை யெடுத்தல் (யாழ்ப்.); to lower or take the upper cloth as a mark of respect.

*[சால்வை + எடு-,]*

**சால** *šāla,* கு.வி.எ. (adv.) மிகவும்; very well, very much. "சால வமுதுண்டு" *(திருவாச. 16, 8).*

ம. சால; க. சலெ; தெ. சாலு

*[சால் → சால]*

**சாலக்காரன்** *šāla-k-kāraṉ,* பெ. (n.) ஏய்ப்பவன் (வஞ்சகன்); deceiver, hypocrite.

க. சாலகார (கடன்காரன்)

*[சாலம் + காரன்]*

**சாலக்கிராமம்** *šāla-k-kirāmam,* பெ. (n.) சாளக்கிராமம் பார்க்க; see *šāḷa-k-kirāmam.*

*[சாளக்கிராமம் → சாலக்கிராமம்]*

**சாலகம்**[1] *šālagam,* பெ. (n.) 1. வலை (அக.நி); net, rope-net. 2. சிலந்தி வலை; cobweb. 3. வேள்வி செய்யுங்கால் வேள்வி செய்பவரின் மனைவியணியும் நுதலணி (புறநா. 166, உரை.); ornament worn on the forehead by sacrificer's wife. 4. பறவைக் கூடு; bird's nest. 5. அரும்பு (பிங்); flower bud. 6. மந்திரவித்தை (வின்); trick, magic.

க. சாளேசு; து. சாலீசு

*[சூல் → சால் → சாலகம்]*

**சாலகம்**[2] *šālagam,* பெ. (n.) கழிவு நீர் செல்லும் மூடிய வழி, அங்கணம்; drain.

ம. சாலகம்.

*[சூல் → சால் → சாலகம். சாலுதல் = சாய்தல்]*

**சாலகம்**[3] *šālagam,* பெ. (n.) சிறுகுறிஞ்சா (மலை); species of gymnema.

**சாலகம்**[4] *šālagam,* பெ. (n.) கோயிற் கருவறை முகமண்டபத்திலும் பெருமண்டபத்திலும் ஒளியும், வளியும் உட்செல்லத் துளைகள் பல அமையுமாறு சிற்ப வேலைப்பாட்டுடன் அழகூட்டமாகச் செய்யப்பெறும் சிற்பப் பலகணி; a kind of ornament window. "மங்கைமார் சாலக வாசல்பற்றி" *(திவ். பெரியாழ். 3,4:1)* "இத்திருச்சலாகம் கஞ்சமலைப் பெரிய பிள்ளை தன்மம்" *(தெ. க. தொ.4,க.146)* "சாலேகம் சார நட" *(முத்தொள்.).*

*[சாளரம் → சாலகம்]*

**சாலகராகம்** *šālagragam,* பெ. (n.) தூய (சுத்த) பண்ணை (அராகத்தை)யொட்டி அதற்கடுத்த படியிலுள்ள பண் (அராகம்); a class of melody type differing but slightly form cutta-rāgam.

*[சாலகம் + அராகம்]*

**சாலகாரகன்** *šālakāragaṉ,* பெ. (n.) 1. சிலந்தி; spider. 2. வலை பின்னுவோன்; net weaver.

*[சாலிகன் → சாலகாரன்]*

**சாலடி-த்தல்** *šālaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சால்பட உழுதல்; to make furrows in ploughing.

*[சால் + அடி-,]*

**சாலப்பகம்** *šālappagam,* பெ. (n.) நாவல்; jambo tree (சா.அக.).

**சாலப்பு** *šālappu,* பெ. (n.) சிவதை; Indian jalap

u. jālab

*[சாலம் → சாலப்பு]*

**சாலப்பூச்செடி** *šāla-p-pūccedi,* பெ. (n.) மலமிளக்கிக் கிழங்கு; purgative root, true jalap (சா.அக.).

**சாலபஞ்சிகை**[1] *šāla-pañjigai,* பெ. (n.) மரப் பாவை (இலக்.அக.); wooden image.

**சாலபஞ்சிகை**[2] *šāla-pañjigai,* பெ. (n.) விலை மகள் (வேசி) (யாழ்.அக.); prostitude.

**சாலம்**[1] *šālam,* பெ. (n.) 1. சாலவித்தை பார்க்க; see *šāla-vittai* 2. நடிப்பு; artfulness. pretence. "சாலமென்ன சொல்லுவேன்" (பணவிடு. 316). 3. கூட்டம்; multitude, company, flock, herd, shoal. "திரிந்தன சாலமீன் சாலம்" (கம்பரா. வருணனை, 25). 4. சவை (பிங்); assembly, court. 5. வலை; net. "அளப்பில் சாலம் வீசிநின் றீர்த்திடும்" (கந்தபு. திருநகரப். 18). 6. பலகணி (பிங்.); latticed window. 7. அரும்பு (வின்.); flower-bud. 8. குறளை (பிங்); slander. 9. கல்வி (திவா.); learning. 10. மருத்துவநூல் (வின்.); medical science.

தெ. சால

*[சலுக்கு பிலுக்கு = நகைகளைக் காட்டி மிடுக்காக நடக்கும் ஒலிக்குறிப்பு. சலுக்கு → சாலக்கு → சாலம்]*

**சாலம்**[2] *šālam,* பெ. (n.) சாலப்பு பார்க்க; see *šālappu.*

**சாலம்**[3] *šālam,* பெ. (n.) 1. மதில் (பிங்); surrounding wall, fortress. 2. ஆச்சா (பிங்); sal. 3. மராமரம்; Ceylon ebony. 4. மரம் (வின்); tree.

*[சூல் → சால் → சாலம்]*

**சாலம்**[4] *šālam,* பெ. (n.) அகலம் (அக.நி.); width.

*[சால் → சாலம். அகலம் → ஆலம் → சாலம் என்றுமாம்]*

**சாலம்பப்பாடாணம்** *šālamba-p-pādāṇam,* பெ. (n.) ஒருவகைச் செய்நஞ்சு (பாடாணம்) (யாழ்.அக.); a kind of arsenic.

**சாலமலி** *šāla-mali,* பெ. (n.) 1. இலவு; silk-cotton tree-Bombaz malabartcum. 2. இலவம்பிசின்; the gum of silk - cotton tree.

**சாலமலிபத்திரம்** *šāla-mali-pattiram,* பெ. (n.) ஏழிலைப் புன்னை; seven leaved poon.

*[சாலமலி + பத்திரம்]*

**சாலமலிநிருச்சி** *šāla-mali-nirucci,* பெ. (n.) இலவம் பிசின்; gum of silk cotton tree.

**சாலமாலம்**[1] *šālamālam,* பெ. (n.) ஏய்ப்பு (வஞ்சகம்) (யாழ்ப்.); trickery deceplion.

*[சாலம் + மாலம். 'சாலமாலம்' மரபிணை மொழி]*

**சாலமாலம்**[2] *šālamālam,* பெ. (n.) கண்டு சாய்ப்பு (யாழ்.அக.); furtiveness. கண்டுங் காணாதது போலிருக்கை.

*[சாலம் + மாலம். எதுகை நோக்கி வந்த இணைமொழி]*

**சாலர்**[1] *šālar,* பெ. (n.) நெய்தனிலமாக்கள் (வலையுடையோர்) (சூடா.); inhabitants of coastal region, fishermen as using nets.

மறுவ. பரதவர், நுளையர், பஃறியர், திமிலர், கடலர், கழியர்

*[சலம் → சலர் → சாலர்]*

**சாலர்**[3] *šālar,* பெ. (n.) கைத்தாளம்; cymbals.

*[சல் → சல்லர் → சாலர். சல் அல்லது சல்லரை என்னும் ஓசையுண்டாக்குவது. இத்தாளக் கருவியில் பெரியது சல்லரி சிறியது சாலர்]*

த. சாலர் → Skt. jhallai

**சாலரா** *šālarā,* பெ. (n.) சாலர்[3] பார்க்க; see *šālar*[3].

*[சாலர் → சாலரா]*

**சாலரி** *šālari,* பெ. (n.) ஓர் இசைக் கருவி; a musical instrument.

*[சாலர் → சாலரி]*

**சாலவம்** *šālavaṃ*, பெ. (n.) சலதாரை (இ.வ.); drain, gutter.

*[சல் → சூல் → சால் → சாலகம் → சாலவம்]*

**சாலவித்தை** *šāla-vittai*, பெ. (n.) கண்கட்டி கலை (வித்தை); magic, juggelry.

*[சாலம் + வித்தை]*

Skt. vidyā → த. வித்தை

**சாலா** *šālā*, பெ. (n.) 1. சிறிய கடல்மீன் (நெல்லை); small sea fish. 2. ஆற்றில் மேயுங் கெண்டை மீன்; river fish.



சாலா கெண்டைமீன்

**சாலாங்கபாடாணம்** *šālāṅga-pāḍāṇam*, பெ. (n.) பிறவிச் செய்நஞ்சு வகை; a mineral poison.

**சாலாதார்** *šālātār*, பெ. (n.) பெருமை யில்லாதோர்; சான்றாண்மை இல்லாதோர்; ignorable persons. opp to šaṉṟōr. "சாலாதார் தீயவினைகளைச் செய்து" (குறள், 657, உரை.).

*[சால் + ஆ + தார். ஆ' எ.ம.இ.]*

**சாலாபோகம்** *šālāpōgam*, பெ. (n.) அறச் சாலைகட்காக விடப்படும் இறையிலி நிலம் (T.A.S. I. 16, 5); endowment of land for the maintenance of rest houses and choultries.

*[சாலை → சாலா + போகம்]*

**சாலாமாலாவாக** *šālāmālā-v-āga*, கு.வி.எ. (adv.) குழப்பமாக (இ.வ.); confusedly.

*[சாலா + மாலா. எதுகை நோக்கி வந்த மரபிணைமொழி]*

**சாலாமியம்** *šālāmiyam*, பெ. (n.) கருடக்கொடி; Indian birth-wort - Aristolochia Indica (சா.அக.).

**சாலாரம்** *šālāram*, பெ. (n.) 1. ஏணி; ladder. 2. படிக்கட்டு; steps. 3. பறவைக்கூடு; nest, cage (கழ.அக.).

*[சால் + ஆரம். சால் போன்று அடுக்கடுக்காக அமையும் படி, ஏணி.]*

**சாலாவலை** *šālā-valai*, பெ. (n.) சாலாமீன் பிடிக்கப் பயன்படும் வலை (மீனவ.); a fishing net.

*[சாலா + வலை]*

**சாலி**[1] *šāli*, பெ. (n.) 1. செந்நெல்; a superior, species of paddy. "சாலி வெண்சோறு குவைஇய குன்றில்" (ஞானா. 36,15). 2. நெற்பயிர்ப்பொது; growing paddy crop. "தாரைகொள்ளத் தழைப்பன சாலியே" (கம்பரா. நாட். 25). 3. புழுகுச் சட்டம் (தைலவ.); perfume - sac of the civet cat.

மறுவ. வரி, கொல், விரீஇ, யவம்; க. சாலி, சாலெ ம. சாலி

*[சேய் → சே. சேத்தல் = சிவத்தல். சேது → சேது = சிவப்பு. சல் → (சோல்) சால் → சாலி (மு.தா. 153)]*

**சாலி**[2] *šāli*, பெ. (n.) உடையவன்-உடையவள் என்னும் பொருளுடன் தொடர்மொழியிறுதியில் வருஞ்சொல்; word meaning possessor, used at the end of compounds, as in திறமைசாலி, குணசாலி.

*[சால் = நிறைவு, உடைமை. சால் → சாலி]*

**சாலி**[3] *šāli*, பெ. (n.) அருந்ததி; wife of Vasiṣṭaṉ. "சாலியொருமீன் றகையாளை" (சிலப். 1: 51).

**சாலி**[4] *šāli*, பெ. (n.) சாலிகை[2] (அக. நி.) பார்க்க; see *šāligai*[2].

*[சால் → சாலி]*

**சாலி**[5] *šāli*, பெ. (n.) 1. மராமரம் (க); Ceylon ebony. "மிக்க சாலிக ளேழையும்" (சேதுபு. சேதுவந். 9). 2. சீமைவேல்; Jerusalam thorn. 3. குடைவேல்; umbrella - thorn babul. 4. கூந்தல் வேல்; elephant thorn. 5. முள்வேல்; buffalo - thorncutch.

**சாலிக்கண்ணி** *šāli-k-kaṇṇi*, பெ. (n.) அவுரி; indigo - Indigo fera tinctoria (சா.அக.).

**சாலிக்கிராமம்** *šāli-k-kirāmam,* பெ. (n.) சாளக்கிரமம்; see *šāḷa-k-kirāmam.*

**சாலிகம்** *šāligam,* பெ. (n.) சம்பா நெல்; champa paddy-Oryza sative (சா.அக.)

*[சாலி → சாலிகம்]*

**சாலிகர்** *šāligar,* பெ. (n.) நெய்வோன்; weaver. "சாலிகற்க்கு குடியிருப்புக் காணியாக விட்ட மனம் பெரியான் திருவீதி" (தெ.க.தொ. 24, க. 145-4)

*[சாலி → சாலியர் → சாலிகர்]*

**சாலிகன்** *šāligan,* பெ. (n.) 1. சாலியன், 1 பார்க்க; see *šāliyan, 1.* 2. சாலியன் நெய்த ஆடை (நன் 289, மயிலை); cloth manufactured by weavers.

க. சாலிக

*[சாலியன் → சாலிகன்]*

**சாலிகை**[1] *šāligai,* பெ. (n.) ஒருவகை மரம்; french honey-suckle-Desmodium genus (சா.அக.).

*[சாலி → சாலிகை]*

**சாலிகை**[2] *šāligai,* பெ. (n.) கவசம்; armour, coat of mail. "சாலிகை யுடம்பினர் தறுகணாளரே" (சீவக. 2227).

மறுவ. அரணம், சடாரி, ஆசு, கண்டம், பருமம், மெய்யுறை, கச்சை, பரம்.

*[சுல் → (சோல்) → சால் = நிறைதல். சால் → சாலிகை = குறிப்பிட்ட உறுப்பை முழுவதுமாக (நிறைவாக) மூடுவது]*

**சாலிகை**[3] *šāligai,* பெ. (n.) வரி, இறை; toll, customs, duty.

**சாலிகைத்தறி** *šāligai-t-tari,* பெ. (n.) பழைய வரிவகை (S.I.I. i. 91); ancient tax.

*[சாலிகை + தறி]*

**சாலிநெல்** *šāli-nel,* பெ. (n.) செந்நெல்; paddy (கழ.அக.).

க. சாலி (நெல்)

*[சாலி + நெல். சால் → சாலி = செந்நெல்]*

சாலி[1] பார்க்க

**சாலிப்பகுதி** *šāli-p-pagudi,* பெ. (n.) கடைகளுக்கு வாங்கும் வரிவகை (R.T.); a tax on shops.

**சாலிப்பரணி** *šāli-p-parani,* பெ. (n.) 1. பெரு மல்லிகை; large jasmine. 2. படிக்கட்டு; steps. 3. பறவைக் கூடு; nest, cage (சா.அக.).

*[சால் → சாலி + பரணை. பரணை → பரணி. சால் போன்று அடுக்கடுக்காக (பரணையாக) அமையும் படிக்கட்டு]*

**சாலிமரம்** *šāli-maram,* பெ. (n.) குடைவேல் மரம்; arrowthorn (சா.அக.).

*[சாலி + மரம்]*

**சாலியக்கோட்டம்** *šāliya-k-kōṭṭam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தை உள்ளடக்கிய பழைய நாடு; an ancient province, country. "சோழ மண்டபத்தில் சாலியக் கோட்டத்தில் வாழை குலைச்சேரி கிராமம் ஒன்றும்" (திருப். க. தொ. 2. க. 106–4)

*[சாலியம் + கோட்டம். கோண் → கோடு. கோடுதல் = வளைதல். கோடு → கோட்டம் = வளைவு]*

**சாலியம்பாக்கு** *šāliyam-pākku,* பெ. (n.) சாயப்பாக்கு (இ.வ.); areca nut sliced and boiled in water which gives it a reddish hue.

ம. சாயில்யம்

*[சுல் → செல் → சேல் = செந்நிறக் கெண்டை. சுல் → சேல் → சால் → சாலி = சிவப்பு. சாலி + அம் + பாக்கு]*

**சாலியர்காணம்** *šāliyar-kāṇam,* பெ. (n.) துணி நெய்யும் நூலிற்குச் சாயமிடும் சாலியக்குடியினர் அத்தொழிலுக்குரிய வரியைக் காசாகச் செலுத்தும் முறை; a tax rended by šāliyar of their weaving occupation (கல். கலை. அக).

மறுவ. சாலியத்தறி

*[சாலியர் + காணம்]*

சாலிகைத்தறி பார்க்க

**சாலியன்** *šāliyan,* பெ. (n.) 1. நெசவுத் தொழில் செய்யும் இனத்தான்; a caste of weavers "பட்டுச்சாலிய ரிருக்கு மிடங்களும்" (சிலப். 5: 17, உரை). 2. காராம்பூப்பட்டையை உரிக்கும் யாழ்ப்பாணத்து வகுப்பான் (சாதியான்) (யாழ்ப்.); member of a caste of cinnmon peelers.

ம. சாலியன்; க. சாலிக; தெ. சாலெவாடு; து. சாலியன், சாடெ, சாட்ய

*[சாலி → சாலியன்]*

**சாலியன்கூறை**[1] *šāliyaṉ-kūṟai,* பெ. (n.) திருமணத்தில் மணமகளுடுத்துங் கூறைப் புடைவை (இ.வ); bride's wedding cloth.

*[சாலியன் + கூறை]*

**சாலிவாகனசகாப்தம்** *šālivāgaṉa-šagāptam,* பெ. (n.) கி.பி. 78ஆம் ஆண்டு மேழம் (சைத்திர) மாதத்தில் தொடங்கிச் சாலிவாகனன் பெயரால் வழங்கும் ஆண்டு; era of Salivahana commencing with chaitra. 78 A.D.

*[சாலிவாகனன் + சகாப்தம்]*

**சாலிவாகனன்** *šālivāganaṉ,* பெ. (n.) விக்கிரமாதித்தனுக்குப் பகைவனும் ஆண்டு தொடக்கத்திற்குரியவனுமாகச் சொல்லப்படும் ஒரு பேரரசன்; a celebrated king believed to have been the enemy of Vikramāditya and the institutor of the era now called Sākā (செ.அக.).

*[சாலி + வாகனன். சல் → (சோல்) → சால் = நிறைதல், ஒரு கால எல்லை நிறைவு, ஆண்டு. ஆண்டுமானக் கணக்குக்குரிய அரசன்]*

**சாலினி**[1] *šāliṉi,* பெ. (n.) 1. தெய்வமேறியாடும் பெண்; women employed in pronouncing oracles under the influence of a spirit. "பழங்கடனுற்ற முழங்குவாய்ச் சாலினி" (சிலப். 12:7). 2. அருந்ததி; wife of Vasiṣṭaṉ. "கடவு ளொருமீன் சாலினி யொழிய" (பரிபா. 5: 44).

மறுவ. தேவராட்டி.

சாலினி தெய்வமேறியாடும் பெண். காளி பெண் தெய்வமாதலின் அணங்காடுபவள் பெரும்பாலும் சாலினியே யென்பது 'வேட்டுவவரி'யால் அறியக் கிடக்கின்றது.

**சாலினி**[2] *šāliṉi,* பெ. (n.) 1. பேய்ப்பீர்க்கு (தைலவ.தைல. 52); bitter luffa. 2. பீர்க்கு (மலை.); sponge gourd.

க. சாலினீ

**சாலினி**[3] *šāliṉi,* பெ. (n.) கள் வாணிச்சி (அக.நி.); woman who deals in toddy.

*[சாலி → சாலினி]*

**சாலு**[2] *šālu,* பெ. (n.) சால்வை பார்க்க; see *šālvai.*

க. சாலு

*[சல் → (சோல்) → சால் → சாலு (மு.தா.209)]*

**சாலுகம்** *šālugam,* பெ. (n.) சாதிக்காய் (சங்.அக.); nutmeg.

**சாலுங்கரகம்** *šāluṅ-karagam,* பெ. (n.) பட்டினவர் திருமணத்துள் நாட்டாண்மைக் காரர் வீட்டிலிருந்து மணவீட்டுக்கு மேள தாளத்துடன் எடுத்துச்செல்லும் நீர்க் கரகம் (இ.வ.); water -pot, taken ceremoniously from the Nāṭṭāṇmaikkār's house to the house where a marriage is being performed, among Paṭṭiṉavar.

*[சால் + உம் + கரகம்]*

**சாலுவை** *šāluvai,* பெ. (n.) சால்வை பார்க்க; see *šālvai.* "தண்டிகையும் போர்த்திட்ட சாலுவையும்" (பணவிடு. 245).

க. சாலுவெ; பட. சாலவெ

*[சால்வை → சாலுவை]*

**சாலூரம்**[1] *šālūram,* பெ. (n.) மேன்மை (சூடா.); greatness, eminence.

*[சால் + ஊர் - சாலூர் → சாலூரம்]*

**சாலூரம்**[2] *šālūram,* பெ. (n.) தவளை; frog.

*[சால் + ஊரம். ஊர் → ஊரம்]*

**சாலெடு-த்தல்** *šāleḍu-,* 4 செ.குவி. (v.i.) கீறுதல் போன்ற நீண்ட பள்ளம் உருவாக்குதல்; to furrow, to form a line.

க. சாலிடு; பட. சாலிடி

*[சால் + எடு-,]*

**சாலேகம்**[1] *šālēgam,* பெ. (n.) 1. சாளரம்; latticed window. "சாலேகநாற்றிக் குத்துறுத்து" (நெடுநல். 125). 2. பூவரும்பு (பிங்.); flower - bud.

க. சாளக

*[காலேகம் → சாலேகம். கால் = காற்று]*

**சாலேகம்**[2] *šālēgam,* பெ. (n.) 1. சந்தனம் (மலை.); sandalwood. 2. சிந்தூரம் (வின்.); vermilion.

*[சேய் → சே. சேத்தல் = சிவத்தல். சல் → (சோல்) → சால் → சாலி = செந்நெல். சேல் → சேலேகம் = சிந்தூரம். சேலேகம் → சாலேகம் (மு.தா. 140)]*

**சாலேகால்** *šālēgāl,* பெ. (n.) நடப்பு ஆண்டு (C.G.); current year.

*[சால் + ஏ + கால்]*

**சாலேயம்**[1] *šālēyam,* பெ. (n.) சிறுதேக்கு; bushy fire brand teak (சா.அக).

*[சால் = மரவகை. சால் → சாலேயம்]*

**சாலேயம்**[2] *šālēyam,* பெ. (n.) செந்நெல் விளையும் நிலம் (பிங்.); field where šāli rice is cultivated.

*[சாலி → சாலேயம். சாலி = நெல். நெல் விளையும் நிலம்]*

**சாலேயம்**[3] *šālēyam,* பெ. (n.) கம்பளித்துணி (யாழ்.அக.); woollen cloth

**சாலை**[1] *šālai,* பெ. (n.) நீர்க்குழாய்கள் செய்யப் பயன்படும் மரம்; a tree used to made water tubes.

*[சால் → சாலை]*

**சாலை**[2] *šālai,* பெ. (n.) 1. உணவு அளிக்கும் அறச்சாலை; alms-house, feeding-house. "தண்ட மிட்டன்றிச் சாலை உண்ணப் பெறார்" *(T.A. S. 1, 9).* 2. வேள்விச் சாலை; sacrificial hall. "திருத்திய சாலை புக்கனன்" *(கம்பரா. திருவவ. 84).* 3. பள்ளிக்கூடம்; school. "கறையறு கல்வி கற்குங் காமர்சாலையும்" *(குசேலோ. குசே. வைகுந். 23).* 4. குதிரை யானை முதலியவற்றின் கூடம் (பிங்.); stable, elephant-stable. 5. ஆவின் (பசுக்)கொட்டில்; cow-shed. "ஆத்துறு சாலைதோறும்" *(கம்பரா. ஊர்தேடு. 101).* 6. பெரிய பொது மண்டபம் (இ.வ.); large public hall. 7. அரண்மனை (பிங்); royal palace. 8. வீடு; house, mansion. "விதுரன் சாலைக் கரும்புது விருந்தா மருந்தே" *(அழகர்கல. 5).* 9. இருபக்கமும் மரஞ்செறிந்த பாதை; avenue, public road shaded by trees. 10. அகன்ற பாதை; road. 'அண்ணா சாலை சென்னையில் மிக நீளமானது' (உ.வ.).

ம. சால; E. saloon, hall

*[சால் → சாலை = பெருங்கூடம், பட்டறை, தொழிலகம், அலுவலகம், அகன்றபாதை (மு.தா. 173)]*

மாணவர் கல்வி பயிலும் பள்ளியைக் கல்விச் சாலை, பாடசாலை என்றும் தொழிலாளர் பலர் கூடித்தொழில் செய்யுமிடத்தைத் தொழிற்சாலை என்றும், கம்மியர் வீட்டில் பணிசெய்யும் அறையை, பட்டசாலை என்றும் வழங்குதல் காண்க.

**சாலை**[2] *šālai,* பெ. (n.) கையாந்தகரை (L); a plant.

*[கரிசாலை → சாலை]*

**சாலைக்கரை** *šālai-k-karai,* பெ. (n.) சாலைப் பக்கம் (கொ.வ.); road-side.

*[சாலை + கரை]*

**சாலைநடவு** *šālai-naḍavu,* பெ. (n.) பயிர் நடவு வகை (செங்.); transplantation of seedlings.

*[சாலை + நடவு. நடவு 'வு' தொ.பெ. ஈறு]*

**சாலைப்பணி** *šālai-p-paṇi,* பெ. (n.) சாலை அமைக்கும் பணி; work of laying road.

*[சாலை + பணி]*

**சாலைப்புறம்** *šālai-p-puṟam,* பெ. (n.) அந்தணர்கள் உண்பதற்குக் களப்பாளர் அரசன் ஏற்படுத்திய மடம், மடப்புறம்; brahmin's abbey. "திரிபுவனசண்டேஸ்வர தேவற்கு இத்தேவர் ஸ்ரீ பண்டாரத்தை வஸ்துக் கொண்டு இச்சாலைப்புறமாக நாங்கள் இறையிலியாக விற்றுக்குடுக்க நிலைமாவுது" *(ந.க. 2. க 321-6).*

*[சாலை + புறம்]*

**சாலைமடையன்** *šālai-maḍaiyaṉ,* பெ. (n.) கோயில் உணவு சமைப்பவன்; temple cook. "சனி ஒன்றுக்கு எண்ணை உரி ஆழாக்குக்கு நெல்லு ஐங்குறுணியும் சாலைமடையன் ஒருவனுக்கு நெல்லு அறுநாழியும்" *(தெ. க. தொ. 4. க. 223/1986).*

*[சாலை + மடையன். மடைத்தொழில் = உணவு சமைக்கும் தொழில்]*

**சாலையட்டுவான்** *šālai-y-aṭṭuvāṉ,* பெ. (n.) உணவுச் சாலையில் உணவிடுபவன்; server. "சாலையட்டுவானுக்கு நெல்லுப்பது பதக்கும்" *(தெ. க.தொ.13. க.157-3).*

*[சாலை + அட்டுவான்]*

**சாலையூஞ்சல்** *šālai-y-ūñjal,* பெ. (n.) ஒருவகை ஊஞ்சல் மரம்; a kind of sirissa tree (சா.அக.).

**சாலைவாசல்** *šālai-vāšal,* பெ. (n.) அறச்சாலை அல்லது உணவுச்சாலை; alms-house, mess. "திருக்கொடி திருநாள்-2க்கு ஏழந் திருநாளில் சாலை வாசலில் அமுது செய்தருளும் சீடைப்படி" *(திருப். க. தொ-3 க. 127-4).*

*[சாலை + வாசல்]*

**சாவக்காய்** *šāva-k-kāy,* பெ. (n.) மாமரம்; mango tree - Mungifera India (சா.அக.).

**சாவக்கை** *šāvakkai,* பெ. (n.) கூரை வேயப் பயன்படும் குருத்துள்ள மூங்கில் தப்பை; bark of bamboo.

*[சவம் = மூங்கில். சவம் → சாவம் → சாவக்கை]*

**சாவகக்குறிஞ்சி** *šāvaga-k-kuriñji,* பெ. (n.) குறிஞ்சியாழ்த் திறத்துள் ஒன்று (பிங்.); a secondary melody-type of kuriñji class.

மறுவ. சாவகன் குறிஞ்சி.

*[சாவகம் + குறிஞ்சி]*

**சாவகநோன்பி** *šāvaga-nōnbi,* பெ. (n.) இல்லறத்திலிருந்து நோன்பு இருப்போன்; householder who takes to ascetic practice "சாவகநோன்பிக ளடிக ளாதலின்" (சிலப். 16:18).

*[சாவகம் + நோன்பி]*

**சாவகம்**[1] *šāvagam,* பெ. (n.) 1. யவத்தீவு; the Archipelago, Sumatra-Java or Java. "சாவக நன்னாட்டுத் தண்பெயன் மறுத்தலின்" (மணிமே. 14, 74). 2. யவத்தீவில் வழங்குதும் பதினெண் மொழிகளுள் ஒன்றானதுமான மொழி; language of the country of Šāvagam, one of 18 languages referred to in Tamil work.

**சாவகம்**[2] *šāvagam,* பெ. (n.) 1. நாயுருவி; Indian burr-Achyanthus aspera. 2. கருப்புக் கடுகு; black mustard (சா.அக.).

**சாவகன்** *šāvagan,* பெ. (n.) காரி (சனி) (திவா.); Saturn.

*[சாவு + அகம் - சாவகம் → சாவகன்]*

**சாவகாரியம்** *šāvakāriyam,* பெ. (n.) உலகியல் அறிவு; discernment, discrimination.

**சாவச்சம்** *šāvaccam,* பெ. (n.) இறப்பு நேரக்கூடும் என்னும் நேரத்தில் மனத்தில் தோன்றும் அச்சம்; death fear. 'பாட்டிக்குச் சாவச்சம் வந்துவிட்டது' (உ.வ.).

*[சாவு + அச்சம். அஞ்சு → அச்சம்]*

**சாவட்டம்** *šāvaṭṭam,* பெ. (n.) ஒற்றை உருபாவைக் குறிக்கும் குழூஉக்குறி (இ.வ.); slang term for a rupee.

ம. சாவட்டம்

*[சாவு + வட்டம் → சாவுவட்டம் → சாவட்டம். வட்டம் = காசு]*

இறந்தவர் நெற்றியில் ஒட்டும் பணம் பெரும்பாலும் ஓர் உருபாவாக் இருந்ததன் அடிப்படையில் தோன்றிய குழூஉக்குறி.

**சாவட்டை**[1] *šāvaṭṭai,* பெ. (n.) 1. ஈர் (வின்.); nits found in the hair. 2. பயிர்ச்சாவி (இ.வ.); withered grain, chaff. 3. மெலிந்தவ-ன்-ள் (இ.வ.); emaciated person. 4. உலர்ந்தவெற்றிலை (யாழ்ப்.); dried betel leaves. 5. தட்டாரப்பூச்சி; butterfly.

ம. சாவட்ட

*[சா → சாம்பு. சாம்புதல் = வாடுதல், குவிதல், ஒடுங்குதல். சா + அட்டை]*

**சாவட்டை**[2] *šāvaṭṭai,* பெ. (n.) சிறுவட்டத் தலையணை (நாஞ்); a small round pillow.

*[சாய் → சா + வட்டை. வட்டு → வட்டை. 'ஐ' ப.பெ. ஈறு]*

**சாவட்டைப்பயிர்** *šavaṭṭai-p-payir,* பெ. (n.) சாவியான பயிர் (வின்.); blighted or withered plants.

*[சாவட்டை + பயிர்]*

**சாவடி**[1] *šāvaḍi,* பெ. (n.) இறப்பை விளைக்கத் தக்க அடி; deadly blow.

*[சாவு + அடி]*

**சாவடி**[2] *šāvaḍi,* பெ. (n.) 1. வழிப்போக்கர் தங்குமிடம்; inn, choultry. "மலர்ச்சோலையுஞ் சாவடிகளும்" (இராமநா.சுந்தர.3). 2. ஊர்ப் பொதுக்கட்டடம்; a public building in a village. 3. காவல் அலுவலகம் (கச்சேரி) (வின்.); police station, office of village magistrate. customs station. 4. வீட்டுச்சவுக்கை; open dais in front of a house for general use. "சாவடியும் வீடுந் தலைவாசலும்" (பணவிடு. 163).

ம., க., குரு. சாவடி; தெ. சாவடி, சாவிடி; Mar. chavḍi

*[உசாவடி → சாவடி]*

**சாவடிச்சீட்டு** *šāvaḍi-c-cīṭṭu,* பெ. (n.) 1. சாவடியில் சோறுண்ணுதற்குப் பெறும் நுழைவுச்சீட்டு; a chit or ticket permitting one

to obtain food at a choultry. 2. *அரசனளிக்குங் கொடை;* royal or government grant.

*[சாவடி + சீட்டு]*

**சாவடிமரம்** *šāvaḍi-maram,* பெ. (n.) வெடங்குறுணி அல்லது அலம்பல்மரம்; walking stick bignonia - Stereospermum xylocarpum (சா.அக.).

*[சாவடி + மரம்]*

**சாவணம்**[1] *šāvaṇam,* பெ. (n.) 1. கம்மியர் கருவி வகை; goldsmith's pincers. 2. மூக்குமயிர் களையும் கருவி (யாழ்ப்.); barber's pincers for extracting hair of the nose.

ம. சாவணம்; தெ. ச்ராவணமு



சாவணம்

**சாவணம்**[2] *šāvaṇam,* பெ. (n.) 1. நாணல் (மலை); kaus. 2. நாளம்; hollow stalk as of a lotus.

*[சரவணம் → சாவணம்]*

**சாவதயிலம்** *šāva-tayilam,* பெ. (n.) மாமரம் (மலை.); mango tree.

**சாவம்**[1] *šāvam,* பெ. (n.) வில்; bow. "சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்" *(சிறுபாண். 98).*

*[ஆவம் = மூங்கில். ஆவம் → சாவம்]*

த. சாவம் → Skt. cāpa

**சாவம்**[2] *šāvam,* பெ. (n.) தீமொழி (சாபம்); curse. "சாவ முண்டெடன தாருயிர் தந்ததால்" *(கம்பரா. சூளா.21).*

Pkt. šava

*[சாவி → சாவம் (வ.வ.147); சாவித்தல் = கடுமையாகத் திட்டுதல்]*

**சாவம்**[3] *šāvam,* பெ. (n.) 1. சாத்திட்டு; pollution due to death of a relative. "அதனால் வருஞ் சாவம் சூதகத்தோடு அழியும்" *(சங்.அக.).* 2. பிணம்; corpse, carcass.

ம. சாவம்

*[சா → சாவு → சாவம். 'அம்' ப.பெ.ஈறு]*

சவம்[1] பார்க்க.

**சாவம்**[4] *šāvam,* பெ. (n.) அறுகு; panic grass (சா.அக.).

**சாவல்** *šāval,* பெ. (n.) ஆண்கோழி; cock, male of domestic fowls.

ம. சாவல்

*[சேவல் → சாவல்]*

**சாவறுதி** *šā-v-aṟudi,* பெ. (n.) 1. இறக்குந் தறுவாய்; the moment of death 2. வலுவின்மை; feebleness, debility.

*[சாவு + அறுதி]*

**சாவாக்கியம்** *šāvākkiyam,* பெ. (n.) கணித வாய்பாட்டு வகை (சங்.அக.); table of equations.

**சாவாக்கிழங்கு** *šāvā-k-kiḻaṅgu,* பெ. (n.) கருடன் கிழங்கு (மலை); Indian birth wort.

*[சா + ஆ+ கிழங்கு]*

**சாவாச்சாவு** *šāvā-c-cāvu,* பெ. (n.) இறந்தவன் போல் இருக்கும் நிலை; பயனற்று வாழும் நிலை; a state similar to death, to be useless or inactive like a dead body.

ம. சாகாச் சாவு

*[சாவு + ஆ + சாவு]*

**சாவாஞ்செத்தவன்** *šāvāñ-cettavaṉ,* பெ. (n.) வலுவற்றவன் (வின்); very weak person, not much better than a live corpse.

*[சாவு + ஆ + செத்தவன்]*

**சாவாடுசெத்தவன்** *šāvāḍu-cettavaṉ,* பெ. (n.) சாவாஞ்செத்தவன் பார்க்க; see *šāvāñ-cettavaṉ.*

தெ. சாவடமு

*[சாவு → சாவாடு + செத்தவன்]*

**சாவாடைசெத்த** *šāvādai-cetta,* கு.பெ.எ. (adj.) *பயனற்ற (இ.வ.);* worthless, withered, good for nothing.

*[சாவு → சாவாடை. சா → சத்த → செத்த. சாவாடை + செத்த]*

**சாவாண்டை** *šāvāṇḍai,* பெ. (n.) *பொன்னின் நிறைபற்றி வழங்கும் ஒரு குழூஉக் குறி;* a trade term for a weight of gold.

**சாவாமருந்து** *šāvā-marundu,* பெ. (n.) *1. இறவாமல் காப்பது, அமிழ்தம்;* ambrosia, as preventing death. *"சாவாமருந் தெனினும் வேண்டற்பாற் றன்று" (குறள், 82)* 2. *ஒருவகை மூலிகை (யாழ்.அக.);* a medicinal shrub.

*[சா + ஆ + மருந்து. 'ஆ' (எ.ம.இ.)]*

**சாவாமூலி** *šāvā-mūli,* பெ. (n.) *1. மயிற்றோகை (சங்.அக.);* peacock fan. 2. *வேம்பு;* margosa.

*[சா + ஆ + மூலி. மூல் → மூலி]*

**சாவாமூவா** *šāvā-mūvā,* பெ. (n.) *இறப்போ முதுமையோ இல்லாமல் கோயில் விளக்கு தொடர்ந்து எரிவதற்குரிய நெய்யினைத் தரும் கால்நடைகளின் நலத்தினைக் குறிக்கும் பழைய வழக்கு;* an old usage to quality milch cattle (neither dying nor growing old, healthy) endowed to provide a continuous supply of ghee for temple lamps.

ம. சாவாமூவா

*[சா + ஆ + மூ + ஆ. 'ஆ' எ.ம.இ.]*

**சாவாமூவாச்செவ்வரிஆடு** *šāvā-mūvā-c-cevvari-āḍu,* பெ. (n.) *முதலீடாக வைத்த எண்ணிக்கையளவு குறையாமல் இருக்கும் பெரிய செம்மறி ஆடுகள்;* big rams. *"நெய் தொண்ணூற்று நாழிக்கு விட்ட சாவா மூவா செவ்வரி ஆடு" (தெ. க. தொ. 5, க. 646).*

*[சாவா + மூவா + செவ்வரி + ஆடு. செவ்வரி = செம்மறி]*

**சாவாமூவாப்பசு** *šāvā-mūvā-p-pašu,* பெ. (n.) *வைத்த எண்ணிக்கையில் குறையாது ஈடு செய்து காக்கும் ஆநிரை;* cow endowed. *'திருவிறையான் கோயில் மஹா தேவர்க்கு விட்ட சாவாமூவாப் பசு பதிநாறு' (முதற்குலோத்துங்கன், கி.பி.1092, தெ.க.தொ. 7, க.849)*

*[சாவா + மூவா + பசு]*

Skt. pasu → த. பசு

**சாவாமூவாப்பாலாடு** *šāvā-mūvā-p-pāl-āḍu,* பெ. (n.) *என்றும் எண்ணிக்கை குறையாது பால் கறக்கும் ஆடு;* a constant counting goat. *"சாவாமூவா பாலாடு தொண்ணூற்று ஆறு இவ்வாடு கொண்டு..." (தெ.க.தொ. 24, க. 45-58).*

*[சாவா + மூவா + பால் + ஆடு]*

**சாவாமூவாப்பேராடு** *šāvā-mūvā-p-pēr-āḍu,* பெ. (n.) *நந்தாவிளக்கு எரிப்பதற்கு வேண்டும் நெய்யின் பொருட்டு என்றும் இளமையுடன் ஒரு தொகையுள்ளனவாகக் கோயிற்கு விடப்படும் ஆடுகள்;* a fixed number of milch sheep endowed permanently to provide a continuous supply of ghee for temple lamps. *"நந்தா விளக்கொன்றினுக்கு வைத்த சாவா மூவாப் பேராடு தொண்ணூறு" (S.I.I. III, 107).*

*[சாவா + மூவா + பேராடு]*

**சாவாமூவாவாழ்மாடு** *šāvā-mūvā-vāḻ-māḍū,* பெ. (n.) *கோயில்களில் திருவிளக்கு இடுவதற்குக் கொடையாகக் கொடுக்கப்பட்ட ஆநிரைகளை எண்ணிக்கையில் குறையாமல் வைத்திருக்க வேண்டும் என்னும் ஒப்பந்தக் குறிப்பு;* cow endowed agreement.

*[சாவா + மூவா + வாழ் + மாடு]*

கோயில்களில் விளக்கு வைப்பதற்கு மானிய மாகப்பெறும் மாடுகள் முதுமையுற்றாலும் இறந்து விட்டாலும் ஒப்பந்தக்காரர் அதற்கு ஈடாக அவருக்கு உரிமையான கன்றினங்களில் பருவமடைந்த கன்றுகளைத் தந்து எண்ணிக்கைக் குறையாமல் வைப்பர் *(தெ.க.தொ.ம.க. 51).*

**சாவாவரம்** *šāvā-varam,* பெ. (n.) *இறவாதபடி பெறும் இறையருள்;* divine gift of immortality.

*[சாவா + வரம்]*

**சாவாவுடம்பு** *šāvā-v-uḍambu,* பெ. (n.) *புகழ் அழியாத உடல்;* fame as vehicle of deathless life. *"இம்மூவர் சாவாவுடம் பெய்தினார்" (திரிகடு. 16).*

*[சாவா + உடம்பு]*

**சாவாளன்** *šāvāḷaṉ,* பெ. (n.) *இறப்பைக் கொண்டவன், மனிதன்;* one who is mortal, man *(சேரநா.).*

ம. சாவாளன்

*[சா + ஆளன்]*

**சாவாளை** *śāvāḷai,* பெ. (n.) மூன்றடி நீளமுள்ள கடல்மீன் வகை (சங்அக.); sabre-fish-attaining at least 3 ft. in length.

ம. சாவாள; தெ. சாவட



சாவாளை மீன்

**சாவி¹** *śāvi,* பெ. (n.) மணிபிடியாமற் பதராய்ப் போன பயிர்; withered crop, blighted empty grain. "சாவியே போன புன்செயே யனையேன்" (அருட்பா. 4, அபயத்திறன். 13).

ம. சாவி; தெ. சாவி

[சாவு → சாவி. 'வி' ப.பெ.ஈறு]

**சாவி²-த்தல்** *śāvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) திட்டுதல்; to curse, revile. "வீணாகச் சாவிக்கிறான்" (இவ.).

[சா → சாவி. சாவித்தல் = அங்கதம் பாடி அல்லது சினந்து, வைது சாகப் பண்ணுதல். சாவுகுறித்த சொற்களைச் சொல்லித்திட்டுதல் (வ.வ.)]

**சாவி³-த்தல்** *śāvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அங்கதம் பாடி அல்லது சினந்துரைத்துச் சாகச் செய்தல் (தொல். எழுத்து. 76 இளம்.); to cause to die.

[சா. → சாவி. சாவி–, (வ.வ.)]

**சாவிப்பு** *śāvippu,* பெ. (n.) வசையாணை; curse.

[சாவித்தல் = திட்டுதல். சாவி → சாவிப்பு. 'பு' பெ.ஆ.ஈறு.]

**சாவிப்போ-தல்** *śāvi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) பயிர் பட்டுப்போதல்; to perish, to be blighted, as crop. "கொல்லைதான் சாவிபோய் விட்டாலு மங்குவரு குருவிக்கு மேய்ச்சலுண்டு" (குமரே. சத. 79).

[சாவு → சாவி + போ–,]

**சாவியபயிர்** *śāviya-payir,* பெ. (n.) சவலைப் பயிர் பார்க்க; see *śavalai-p-payir.*

[சாவிய + பயிர்]

**சாவியோதம்** *śāvi-y-ōdam,* பெ. (n.) ஒருவகை முல்லை; a species of jasmine (சாஅக.).

**சாவிவைக்கோல்** *śāvi-vaikkōl,* பெ. (n.) சாவியாய்ப் போன பயிரின் வைக்கோல்; straw of blighted crop.

[சாவி + வைக்கோல்]

**சாவிளைவு** *śā-viḷaivu,* பெ. (n.) சாக்குறியாக விளையும் பெருவிளைவு; super-abundant crop, believed to be a prognostic of death of the land owner or his near relatives. 'அவனுக்குச் சாவிளைவாயிருக்கிறது. நலமாய் இருக்க வேண்டும்' (உ.வ.).

[சாவு + விளைவு]

**சாவீடு** *śāvīḍu,* பெ. (n.) இழவு நேர்ந்த வீடு; house in mourning.

பட. சாவுமனெ

[சாவு + வீடு]

**சாவீரன்** *śāvīraṉ,* பெ. (n.) தற்கொலைப் படை மறவன்; a soldier belonging to a suicide squad (சேரநா.).

ம. சாவீரன், சாவரக்கன்

[சா(வு) + வீரன்]

**சாவு** *śāvu,* பெ. (n.) 1. இறப்பு (பிங்.); death. 2. பிணம்; corpse. 3. பிறந்த ஒன்றுக்கு (இலக்கினத்துக்கு) எட்டா மிடமாகிய இறப்பைக் குறிக்கும் இடம் (விதான. மரபி. 4); the eighth house, as the house of death. 4. பேய்; ghost. "சாவாயகன்று தாவினன்" (ஞானா. 33, 10).

ம. சாவு; க., து., பட. குட. சாவு; தெ. சாவு. கோத. சாவ்; துட. சொவ்; கோண். காவ; குவி. கானெ; பர். சாந்த்

[சாய் = சாய்தல், சாய்ந்து விழுதல். சாய் → சா → சாவு = நேராக நிற்கும் தன்மையற்ற (உயிரற்ற) உடல். இறந்தவர் பேயாக மாறுவர் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் சாவு, பேயைக் குறித்தது. 'வு' தொ.பெ.ஈறு.]

**சாவுக்காணிக்கை** *šāvu-k-kāṇikkai,* பெ. (n.) இறப்பின் பேரில் போடப்பட்ட வரிவகை (நாஞ்.); a kind of death-duty, opp. to vāḻvu-kāṇikkai.

*[சாவு + காணிக்கை]*

**சாவுக்காயம்** *šāvu-k-kāyam,* பெ. (n.) இறப்பு தரத்தக்க புண் (இறப்புக் காயம்) (வின்.); mortal wound.

*[சாவு + காயம்]*

**சாவுக்கொட்டு** *šāvu-k-koṭṭu,* பெ. (n.) சாவு குறிக்கும் பறைமுழக்கு (உ.வ.); a mode of beating the drum to indicate the death of a person.

*[சாவு + கொட்டு]*

**சாவுகம்** *šā-v-ugam,* பெ. (n.) வன்னிக்காய்; Indian tanarix-tamarix gallica (சா.அக.).

**சாவுச்சான்றிதழ்** *šāvu-c-cāṉṟidaḻ,* பெ. (n.) ஒருவரது இறப்பைத் தெரிவிக்கும் சான்றிதழ்; death certificate.

ம. இறப்புச் சான்றிதழ்.

*[சாவு + சான்றிதழ்]*

**சாவுசெத்தவன்** *šāvu-šettavaṉ,* பெ. (n.) சாவாஞ் செத்தவன் பார்க்க; see *šāvāñ-cettavaṉ.*

*[சாவு + செத்தவன்]*

**சாவுநோவு** *šāvu-nōvu,* பெ. (n.) இறப்பும் நோவும், துன்பப்பட்டறிவு; death and experiencing agony.

க. சாவு நோவு

*[சாவு + நோவு]*

**சாவுமணி** *šāvu-maṇi,* பெ. (n.) 1. ஒருவர் இறப்பைத் தெரிவிக்கும் வகையில், கிறித்தவர் கோயிலில் அடிக்கப்படும் மணி; death bell in a church. 2. ஒன்றின் முடிவு; end. 'அவன் ஆட்சிக்குச் 'சாவுமணி' அடித்தாயிற்று'.

ம. சாவுமணி

*[சாவு + மணி]*

**சாவெடி** *šā-veḍi,* பெ. (n.) பிணநாற்றம் (இ.வ.); fetid smell of a corpse.

*[சா + வெடி. வெறி → வெடி]*

**சாவெடில்** *šā-veḍil,* பெ. (n.) 1. சாவெடி (சங்.அக.) பார்க்க; see *šāveḍi.* 2. கெட்ட நாற்றம் (யாழ்ப்.); stinking smell, as of putrid matter.

*[சா + வெடில். வெடி → வெடில்]*

**சாவெடு-த்தல்** *šāveḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) இறந்த உடலை நன்காட்டிற்குக் கொண்டு செல்லுதல்; to take the dead body to funeral ground.

ம. சாவெடுக்குக; பட. சாவெத்து

*[சாவு + எடு-,]*

**சாவெழுத்து** *šā-v-eḻuttu,* பெ. (n.) நச்செழுத்து (வின்.); fatal letter.

மறுவ. நச்செழுத்து

*[சாவு + எழுத்து. மங்கலமொழி அல்லாதவிடத்து மொழி முதலில் வரக்கூடாத எழுத்துகள். ய், ர், ள், யா, ரா, லா, ளா, யோ, ரோ, லோ, ளோ, ஃ, மகரக்குறுக்கம், அளபெடை]*

**சாவேரி** *šāvēri,* பெ. (n.) ஒரு பண் (அராகம்), (பரத.இராக.56); a specific melody-type.

**சாவேறு** *šāvēṟu,* பெ. (n.) பகையரசனைச் சூழ்ந்து காக்கும் படைமீது ஒருமுகமாய்ப் பாய்ந்து ஊடறுத்துச் செல்லமுயன்று அந்நிலையில் உயிர் துறத்தலையே சூளாகக் (விரதமாகக்) கொண்ட வீரர் தொகுதி; a select band of armed warriors who, under a solemn vow, rush in a body, endeavor to cut their way through the guards of the enemy-king and lose their lives in the fray 'சாவேறெல்லாந் தனி விசும்பேற' (தெ.க.தொ. 3. க.145).

ம. சாவேறு

*[சாவு + ஏறு]*

**சாவோலை** *šā-v-ōlai,* பெ. (n.) இறப்பைத் தெரிவிக்கும் ஓலைச்சீட்டு; ōlai letter informing the death of a person. "சாவோலை கொண்டொருவ னெதிரே செல்ல" (தனிப்பா.).

ம. சாவோல

*[சாவு + ஓலை]*

**சாழல்** *šāḻal,* பெ (n.) *1.* **மகளிர் விளையாட்டு வகை;** an ancient game played by girls. *"மற்று மங்கையர் சாழலாம் விளையாடலாக" (திருவாத. புபுத்துரை. 86).* *2.* **முன்னிரண்டடிகள் வினாவும் பின்னிரண்டடிகள் விடையுமாக அவ்விடையிறுதியில் 'சாழலோ' என்ற சொல்லுடையவாக வரும் பாடல்களையுடைய சிற்றிலக்கியம்** *(திவ்.பெரியதி. 11,5);* a poem whose stanzas are each in the form of a question and answer with the refrain šāḻalō at the end. *3. வரிக்கூத்து வகை (சிலப். 3, 13, உரை);* a masquerade dance. *4. கரடி (அக.நி.);* bear.

**சாழல்படி-த்தல்** *šāḻal-p-paḍi-,* 4 செ.குன்றாவி. (v.i.) **ஒருவன் சாகுந்தறுவாயில் திருவாசகத்தின் பகுதியாகிய திருச்சாழலை ஓதுதல்** (நாஞ்.); to recite or read Tiru-c-cāḻal from Māṇikka-vāšagar's Tiruvāšagam during the last moments of a person.

*[சாழல் + படி-,]*

**சாழல்பாடு-தல்** *šāḻal-pāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) *சாழல் ஆடுதல் (வின்.);* to play the šāḻal game.

*[சாழல் + பாடு-,]*

**சாழை**[1] *šāḻai,* பெ. (n.) **கைகொட்டி ஆடும் விளையாட்டு** *(யாழ்.அக.);* a girls game accompained with clapping of hands.

*[சாழல் → சாழை]*

**சாழை**[2] *šāḻai,* பெ. (n.) *சாளை[2] (வின்.) பார்க்க;* see *šāḷai[2].*

*[சாளை → சாழை]*

**சாழைகொட்டு-தல்** *šāḻai-koṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) **கைகொட்டுதல்** (வின்.); to clap hands.

*[சாழை + கொட்டு-,]*

**சாழையகத்தி** *šāḻai-y-agatti,* பெ. (n.) **ஒருவகை அகத்திமரம்;** a species of sesbane tree *(யாழ்.அக.).*

**சாளக்கிராமம்** *šāḷa-k-kirāmam,* பெ. (n.) **திருமாலுருவமாகக் கொண்டு பூசித்தற்குரிய கண்டகிச் சிலை;** black fossil ammonite worshipped as a form of Tirumāl chiefly found in the river Gandak. "பாற் கடற் பிறந்தாலு நத்தை தான் சாளக்கிராம மாமோ *(சேதுபு. சக்கர. 19).*

**சாளகபைரவி** *šāḷaga-bairavi,* பெ. (n.) **பண் வகை** *(பரத.ராக.102);* a specific melody-type.

*[சாளகம் + பைரவி]*

**சாளகம்** *šāḷagam,* பெ. (n.) **இசைப்பாவுக்குரிய சாதியோசை மூன்றனுள் ஒன்று** *(சிலப். 6, 35, உரை);* one of the three types of harmonic tone.

**சாளம்**[1] *šāḷam,* பெ. (n.) **குங்கிலியம்** *(மூ.அ.);* dammar resin.

**சாளம்**[2] *šāḷam,* பெ. (n.) **மணல்** *(சங்.அக.);* sand.

*[அளம் = உவர்மண், நெய்தல் நிலம், அளம் → (சளம்) → சாளம்]*

**சாளம்**[3] *šāḷam,* பெ. (n.) *சாளரம் பார்க்க;* see *šāḷaram.* "மலயத் தனிக்கால் வரசாளந் தைவந் துலவ" *(சொக்கநா. உலா. 42).*

*[சாளரம் → சாளம்]*

**சாளமீன்** *šāḷa-mīṉ,* பெ. (n.) **ஒருவகை மீன்** *(மீனவ.);* a kind of fish.

*[சாளை + மீன் = சாளை மீன் → சாளமீன்]*

**சாளர்** *šāḷar,* பெ. (n.) **செவ்வழி யாழ்த்திற வகை** *(பிங்);* a secondary melody-type of the ševvaḻi class.

**சாளரம்**[1] *šāḷaram,* பெ. (n.) **பலகணி;** latticed window; window. "சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திரவுதயங் கண்டார்" (கம்பரா. மிதிலைக். 14).

ம. சாளரம்; க. சாலந்தரா

*[சாரல் → சாரலம் → சாரளம் → சாளரம்]*

**சாளரம்**[2] *šāḷaram,* பெ. (n.) **சாலகராகம்** பார்க்க; see *šālaga-rāgam.* "சுத்த சாளர சங்கீதம்" *(திருவால வா. 54. 13).*

**சாளரவாயில்** *šāḷara-vāyil,* பெ. (n.) **பலகணி** *(வின்.);* window.

க. சாலகா

*[சாளரம் + வாயில்]*

**சாளவலை** *šāḷa-valai,* பெ. (n.) **சாலமீன் பிடிக்கப் பயன்படும் வலை;** sāla fish net.

*[சாளை → சாள + வலை]*

**சாளா** *šāḷā,* பெ. (n.) *சாளை[1] (சங்அக.) பார்க்க;* see *šāḷai[1].*

*[சாளை → சாளா]*

**சாளி[1]** *šāḷi,* பெ. (n.) *சாளிகை[2] (தனிப்பா 1, 72, 142. உரை) பார்க்க;* see *šāḷigai.*

*[சாள் → சாளி]*

**சாளி[2]** *šāḷi,* பெ. (n.) குடைவேல் *மரம்;* umbrella thorn babul.

**சாளிகம்** *šāḷigam,* பெ. (n.) *சாளிகை[1] (வின்.) பார்க்க;* see *šāḷigai.*

*[சாளிகை → சாளிகம்]*

**சாளிகை[1]** *šāḷigai,* பெ. (n.) வண்டு *(வின்);* beetle.

ம. *சாழி*

*[அள் = கூர்மை, முள், கொடுக்கு. அள் → அளி = கொட்டும் உறுப்புள்ள ஈ அல்லது வண்டு. அளி → சளி → சாளி → சாளிகை]*

**சாளிகை[2]** *šāḷigai,* பெ. (n.) பணப்பை; money bag. "மாளிகையும் பணச்சாளிகையும்" *(கந்தரலங். 78).*

ம. *சாளிக;* க. *சாளிகெ;* தெ. *சாலியா, சாலெ. சாலேய;* Skt. jālaka

*[சால் → சாலிகை → சாளிகை]*

**சாளிகை[3]** *šāḷigai,* பெ. (n.) *சாடி;* jar.

*[சாடி → சாடிகை → சாளிகை]*

**சாளிகைப்பணக்காரன்** *šāḷigai-p-paṇa-k-kāran,* பெ (n.) பெருஞ்செல்வன் *(வின்.);* person with long purse, wealthy man.

*[சாளிகை + பணக்காரன்]*

**சாளிகைமாடு** *šāḷigai-māḍu,* பெ (n.) சல்லிக் கட்டுக்குரிய எருது *(இ.வ.);* bull let out in bull-baiting.

*[சாளிகை + மாடு]*

**சாளியல்** *šāḷiyal,* பெ (n.); *சாளிகை[2] (இ.வ.) பார்க்க;* see *šāḷigai[2].*

*[சாளி(கை) → சாளியல்]*

**சாளியா** *šāḷiyā,* பெ. (n.) ஒருவகை மருந்துவிதை *(வின்.);* a kind of medicinal seed.

**சாளு-தல்** *šāḷu-,* 5 செ.கு.வி. (v.i.) *வளைதல்;* to bend *(பே.மொ.வ. 145).*

*[சூள் → சாள் + சாளை = வட்டமான குடிசை. சாளை → சாளையம் = வளைவு. சவள் → சாள் → சாளு-.]*

**சாளுக்கிநாராயணன்கால்** *šāḷukki-nārāyaṇan-kāl,* பெ. (n.) முகத்தல் அளவை *(அளவு);* measure of capacity. "சிரிபண்டாரத்திலே சாளுக்கி நாராயன் காலால் அமுதுபடி இரண்டு மரக்காலும்" *(திருப்-க- தொ. 2, க 3-4)*

*[சாளுக்கி நாராயணன் + கால்]*

**சாளுக்கியர்** *šāḷukkiyar,* பெ. (n.) இந்தியாவின் தென்பகுதியை ஆறு முதல் பதின்மூன்றாவது நூற்றாண்டு வரை ஆண்டு வந்த ஓர் அரச *மரபினர்;* a dynasty of kings who ruled in the Dekhan from 6th to 13th C. A.D.

**சாளுவன்** *šāḷuvan,* பெ. (n.) விசயநகர அரசரது பட்டப்பெயர்களுள் (விருதுகளுள்) ஒன்று; a dynastic surname of the kings of Vijayanagar. "சாளுவ தேவமகாராயர்" *(தெ.க.தொ.85).*

**சாளை[1]** *šāḷai,* பெ. (n.) எட்டு விரலளவு நீளமுள்ள கடல்மீன் வகை (வின்.); oil sardine, bluish, attaining 8 in. in length species of clupea.

ம. *சாலி*

**சாளை[2]** *šāḷai,* பெ. (n.) இரண்டடிச்சுவரும் அதன் மீது கூரைச்சாய்ப்பும் கொண்ட வீடு, வட்டமான குடிசை; hut, hovel. "சாளை போட்டான்" *(சங்அக.).*

*[சவள் → சாள். சாளுதல் = வளைதல். சாள் → சாய். சாய்தல் = வளைதல். சாள் → சாளை = வட்டமான குடிசை (வ.வ.145)]*

ம. சாள → Skt. šālā

**சாளை[3]** *šāḷai,* பெ. (n.) வழிந்து விழும் வாய்நீர் *(கொ.வ.);* dribble, saliva flowing from the mouth.

ம. *சாளுக*

*[சுள் → சொள் = வடியும் வாய்நீர். சுள் → சள் → சழ → சழங்கு. சழங்குதல் = சோர்தல். சள் → சாள் → சாளை (மு.தா. 312.)]*

**சாளைக்காரன்** *šāḷai-k-kāraṉ,* பெ. (n.) குடிசையில் வாழ்பவன்; one who lives in a hut.

ம. சாளக்காரன்

*[சாளை + காரன்]*

**சாளைக்கெண்டை** *šāḷai-k-keṇḍai,* பெ. (n.) பழுப்பு நிறமுள்ள ஆற்றுமீன் வகை (வின்.); a kind of river-mullet, greenish-brown, barbas carnaticus.

*[சாளை + கெண்டை]*

**சாளைத்தடி** *šāḷai-t-taḍi,* பெ. (n) கட்டுமரம்; a fishing catamaran, used on the west coast.

ம. சாளத்தடி

*[சாளை + தடி. சாளை = வளைவு. துள் → தள் → தண்டு → தண்டம். தண்டு → தண்டி → தடி = திரண்ட கம்பு. சாளைத்தடி = வளைந்து திரண்ட கம்பு]*

**சாளையக்கை** *šāḷaiya-k-kai,* பெ. (n) பெருவிரல், சுட்டுவிரல், நடுவிரல் இம் மூன்றையும் நீட்டி, மோதிரவிரல் சுண்டு விரல்களின் நுனி உள்ளங்கையிற்படும்படி வளைத்து, விரல்களின் இடைவெளி தோன்றும்படி செய்து, மணிக்கட்டை வளைத்துக்காட்டும் நளிநயக்கை (முத்திரைக் கை) (பரதபாவ.24); gesture with one hand in which the thumb, fore-finger and the middle finger are held erect and the reminaing fingers are so bent that their trips touch the palm, the wrist being turned down.

*[சூள் → சாள் → சாளை = வட்டமான குடிசை. சாளை → சாணை = வட்டமான கதிர்ச்சூடு. சாள் → சாளை + அம் + கை = விரல்கள் வளைந்து நிற்கும் தன்மை]*

**சாளையப்பட்டு** *šāḷaiya-p-paṭṭu,* பெ. (n) படைவீரர்கள் தங்குங் குடிசைகளுள்ள இடம்; soldiers lines. "சாளையப்பட்டு சளப்பட்டு" (மான்விடு. 112).

*[சுள் → சுழி. சுழிதல் = வளைதல். சுள் → சுட்டி = வட்டமான நெற்றியணி. சூள் → சூடு. சூடுதல் = வளைதல். சூள் → சாள் → சாளை = வட்டமான குடிசை. சாளை + அம் + பட்டு]*

**சாளையம்** *šāḷaiyam,* பெ. (n) வளைவு; bent.

*[சூள் → சாள் → சாளை = வட்டமான குடிசை. சாளை → சாளையம் = வளைவு (வே.க. 231.)]*

**சாளையிறக்கு-தல்** *šāḷai-y-iṟakku-,* 5 செ.குவி. (v.i.) குடிசை கட்டுதல் (யாழ்ப்.); to put up a hut.

*[சாளை + இறக்கு-,]*

**சாளைவாய்** *šāḷai-vāy,* பெ. (n.) நீர்வடியும் வாய் (கொ.வ.); dribbling mouth.

ம. சாளுவா

*[சாளை + வாய்]*

**சாற்காந்தள்** *šāṟ-kāndaḷ,* பெ. (n.) மலையத்தி; malabar mountain ebony.

**சாற்றங்காலி** *šāṟṟaṅgāli,* பெ. (n) கருங்காலி; glabrous foliaged cutech - Acacia catechu.

*[சாறு → சாரம், வலிமை. சாறு + அம் + காலி]*

**சாற்றமுது** *šāṟṟamudu,* பெ. (n.) மிளகுச்சாறு; pepper-water (vaiṣṇ.).

*[சாறு + அமுது]*

**சாற்று[1]-தல்** *šāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விளம்பரப்படுத்துதல்; to publish, announce. "அடிசேர்ந்து சாற்றுமின்" (பரிபா. 8, 79). 2. விரித்துச்சொல்லுதல்; to explain in detail. கலந்தார்க் குயலுண்மை சாற்றுவேன் மன் (குறள், 1212) 3. சொல்லுதல் (தி.வா.); to speak, mention. 4. புகழ்தல்; to praise. "சாற்றரிய வாயிரக்கால் மண்டபம்" (ஏகாம். உலா. காப்பு). 5. அடித்தல்; to beat, as a drum. "பேரி........ திரிந்து சாற்றினான்" (கம்பரா. மந்தரை. 25). 6. நிறைத்தல்; to fill with water, as tank. "குளங்கொளச் சாற்றி" (மதுரைக். 246). 7. அமைத்தல்; to form. "விற்படைசாற்றி" (சீவக. 1951).

ம. சாற்றுக; க. சாறு; தெ. சாடு; து. சாரியுனி; கோத. சார்; பட. சாறு

*[சார் → சார்த்து → சாத்து. சாத்துதல் = பூசுதல், திருமண் காப்பிடுதல். சாத்து → சாற்று → சாற்றுதல் = பலரறியச் சொல்லுதல்]*

**சாற்று**[2] *šāṟṟu,* பெ. (n). *1.* விளம்பரப்படுத்துகை; proclaiming, declaring. *2.* ஓசை; sound. "சுரிவளைச் சாற்றும்" (கல்லா. 46, 11).

ம. சாற்று

**சாற்றுப்பட்டை** *šāṟṟu-p-paṭṭai,* பெ. (n) சாத்துப்பட்டை (C.E.M.) பார்க்க; see *šāttu-p-paṭṭai.*

[சாத்துப்பட்டை → சாற்றுப்பட்டை]

**சாற்றுப்படி** *šāṟṟu-p-paḍi,* பெ. (n) சாத்துப்படி[1] பார்க்க; see *šāttup-paḍi.* "அடைக்காயமுது சாற்றுப்படி" (T.A.S.I. 268).

[சாத்துப்படி → சாற்றுப்படி]

**சாற்றுப்பனை** *šāṟṟu-p-paṉai,* பெ. (n) பனை; char-palm.

[சாறு + பனை]

பனை பார்க்க

**சாற்றுப்பாட்டு** *šāṟṟu-p-pāṭṭu,* பெ. (n) திருநாலாயிரப் பனுவல் ஓதி முடிக்கும்போது பாடும் (விசேடந் தோன்ற அனுவந்திக்கும் அதன்) இறுதிப் பாடல்கள் (பாசுரங்கள்); stanzas sung to mark the close of Tivya-p-prapantam recitation in a temple.

ம. சாற்றுப்பாட்டு

[சாற்று + பாட்டு]

**சாற்றுவரி** *šāṟṟu-vari,* பெ. (n) கள்ளிறக்கும் மரவரி; tax on toddy-yielding trees.

[சாறு → சாற்று + வரி]

**சாற்றுவாய்** *šāṟṟu-vāy,* பெ. (n) சாளைவாய் (யாழ்.அக.); dribbling mouth.

[சாறு + வாய்]

**சாற்றுவாயூற்று-தல்** *šāṟṟu-vāy-ūṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சாளைவடிதல் (வின்.); to dirbble in the mouth, as a babe.

[சாறு → சாற்று + வாய் + ஊற்று-,]

**சாற்றுவாரி** *šāṟṟu-vāri,* பெ. (n.). சாளைவாய் (வின்.) பார்க்க; see *šāḷai-vāy.*

[சாறு + வாரி → சாற்றுவாரி]

**சாற்றோலை** *šāṟṟōlai,* பெ. (n.) ஆட்டுக் கிடையில் இடையர்கள் ஒதுங்கியிருக்கும் மறைவோலை (நாஞ்); ōlai shelter for shepherds keeping watch over their flock.

[சாற்று + ஓலை]

**சாறடை** *šāṟaḍai,* பெ. (n.) சாறணை (பிங்.) பார்க்க; see *šāṟaṇai.*

[சாறணை → சாறடை]

**சாறணத்தி** *šāṟaṇatti,* பெ. (n). சாறணை (வின்) பார்க்க; see *šāṟaṇai.*

[சாறணை → சாறணத்தி]

**சாறணை** *šāṟaṇai,* பெ. (n) பூடு வகை (பிங்.); purslane leaved trianthema.

**சாறதி** *šāṟadi,* பெ. (n.) சிறு செருப்படை; a low spreading leaf - coldenia procumbens (சா.அக.).

**சாறயர்-தல்** *šāṟayar-,* 3 செ.கு.வி. (v.i.) விழாக் கொண்டாடுதல்; to celebrate a festival. "சாறயர்ந் திறைவற் பேணி" (சீவக.1221).

[சாறு[3] + அயர்-,]

**சாறல்** *šāṟal,* பெ. (n) சாரல் பார்க்க; see *šāral.*

[சாரல் → சாறல்]

**சாறிப்போ-தல்** *šāṟi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) வீண் போதல்; to prove futile, to fail, as business. காரியஞ் சாறிப் போயிற்று (வின்.)

[சாறு → சாறி + போ-,]

**சாறு**[1]**-தல்** *šāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* நழுவுதல்; to slip off. "கலையுஞ் சாறின" (கம்பரா. உண்டாட்டு. 63). *2.* வழுக்குதல்; to slip down, as from a tree. "சாறிவிழுந்தான்" (வின்.) *3.* சரிதல் (வின்.); to slant, incline as a post; to deviate. *4.* வடிதல்; to flow, issue. "இரு விழிகள் பீளை சாறிட" (திருப்பு. 790).

ம. சாருக; க. சாறு; தெ. சாறு; பட. சாரு

[சார் → சாறு]

**சாறு**[2]**-தல்** *šāṟu-,* 5 செகுன்றாவி. (v.t.) *1.* களத்தில் தவசம் (தானியம்) பெருக்குதல் (யாழ்ப்.) to sweep the threshing floor and gather scattered grain. *2.* நிலத்தைக்கொத்துதல்; to hoe superficially, harrow.

[சார் → சாறு-,]

**சாறு**[3] *šāṟu-*, பெ. (n.) 1. இலை பழம் முதலியவற்றின் சாறு; juice, sap. "கரும்பூர்ந்த சாறு" (நாலடி. 34). 2. கள் (பிங்.); toddy. 3. மணப் பொருள்கள் ஊறின நீர்; water in which aromatic substances are infused. "சாறுஞ் சேறு நெய்யு மலரும்" (பரிபா. 6, 41). 4. மிளகுச் சாறு; pepper water. "காரசாரஞ் சேர் சாற்றிலே கலந்து சோறு" (அருட்பா, 4. அவாவறு,2). 5 இழவு வீட்டில் இறந்தவருடைய உறவினர் இடும் உணவு (இ.வ.); food given by relatives in the house of the chief mourner, generally on the tenth day.

ம. சாறு; க. சாறு, சாறு; து. சாரு, சாரு; தெ. சேரு

*[தெள் → தெறு → தெற்று = தெளிவு. தெற்றென = தெளிவாக. தெறு → தேறு. தேறுதல் = தெளிதல், துணிதல். தேறு → தேறல் = தெளிவு, தெளிந்த கள், தேன், தெளிந்த சாறு (சாரம்.). தேறு → சேறு = கள், தேன், பாகு, இனிமை. ஒ.நோ: தாறு → சாறு = காய்கனிக் குலை (பிங்). சேறு → சாறு = கள், நறுமணப் பண்டங்கள் ஊறின நீர், மிளகுநீர், இலை, கனி முதலியவற்றின் நீர். (வ.வ.147)]*

த. சாறு → Skt. sāra

**சாறு**[3] *šāṟu*, பெ. (n.) 1. விழா; festival. "வேறு வேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்" (சிலப். 5, 178). 2. பூசை; worship. "அடியார் சாறுகொள வெழுந்து" (பரிபா. 8: 96). 3. திருமணம்; marriage. "நூன்மறை விதியிற் சாறு செய்தே" (திருவாலவா. 31, 5).

**சாறு**[4] *šāṟu*, பெ. (n.) மீன்பிடிக்க இடும் சிற்றணை (இ.வ.); small dam of mud across a channel with a row of bamboo splits planted on it, put up in fishing.

தெ. சாருவ

*[சார் → சாறு]*

**சாறு**[5] *šāṟu*, பெ. (n.) மரத்தின் குலை (பிங்); bunch or cluster of fruits.

ம. சாறு.

*[தாறு → சாறு]*

**சாறுசிவப்பி** *šāṟu-šivappi*, பெ. (n) தேள் கொடுக்கிச்செடி; scorpion's sting plant - Heliotropium indicum (சா.அக.).

**சாறுதாரி** *šāṟu-dāri*, பெ. (n) கரிசலாங்கண்ணி (மலை.); species of eclipta.

*[சாறு + தாரி]*

Skt. dhārin → த. தாரி

**சாறுபிழி-தல்** *šāṟu-piḻi-*, 2 செ.கு.வி. (v.i.) 1. சாறெடுத்தல்; to express juice. 2. வேலை மிகுதி முதலியவற்றால் வருத்துதல்; to squeeze oppress as by over working a person. 3. நன்றாய் அடித்தல் (வின்.); to give one a good drubbing.

*[சாறு + பிழி-,]*

**சாறுவேளை**[1] *šāṟu-vēḷai*, பெ. (n.) 1. தைவேளை; fire leaved cleome - Cleome pentaphylla. 2. வெள்ளைச்சாறணை; white trianthema - Trianthema decandra (சா.அக.).

*[சாறு + வேளை]*

**சாறுவேளை**[2] *šāṟu-vēḷai*, பெ. (n.) சாறணை பார்க்க; see *sāraṇai*.

*[சாறு + வேளை]*

**சான்மலம்** *šāṉmalam*, பெ. (n.) சான்மலி (மூ.அ.) பார்க்க; see *šāṉmali*.

*[சான்மலி → சான்மலம்]*

**சான்மலி** *šāṉmali*, பெ. (n.) 1. இலவு (பிங்.); red flowerd silk-cotton tree. 2. சான்மலித்துவீபம் பார்க்க; see *šāṉmali-t-tuvībam*. "கன்னல் வளைந்துடைய தீபஞ் சான்மலியாம்" (கந்தபு. அண்டகோ. 53) 3. ஒரு நிரயம் (நரகம்) (சி.போ.பா. 2, 3, பக்.204); a hell.

*[சால் + மலி]*

**சான்மலிசாரம்** *šāṉmali-sāram*, பெ. (n.) இலவம் பிசின் (யாழ்.அக.); resin of the silk-cotton tree.

*[சான்மலி + சாரம்]*

**சான்மலித்தீவு** *šāṉmali-t-tīvu*, பெ. (n) இலவந்தீவு; an annular continent named after silk-cotton tree. "சான்மலித் தீவின் வேந்தன்" (நைடத. சுயம்வர. 135).

*[சான்மலி + தீவு. தீர்வு → தீவு]*

**சான்மலித்துவீபம்** *sāṉmali-t-tuvībam,* பெ. (n) சால்மலித்தீவம்; *sālmali-t-tīvam.*

*[சான்மலி + துவீபம். தீர்தல் = நீங்குதல். தீர் → தீர்வு → தீவு]*

Skt. dvīpa → துவீபம்

**சான்மூலிகை** *sāṉ-mūligai,* பெ. (n) சிறுதேக்கு; small teak - cleadendron serratum *(சா.அக.).*

*[சான் + மூலிகை]*

**சான்ற** *sāṉṟa,* பெ.எ. (adj.) இயல்பு, தன்மை, பண்பு முதலியவற்றைக் குறிக்கும் பெயர்களோடு இணைக்கப்படும்போது, 'உள்ள', 'நிறைந்திருக்கிற' என்னும் பொருளில் பயன்படுத்தும் சொல்; when added to nouns of quality, nature, etc. it is used in the sense of 'having', being full of. 'புகழ் சான்ற தலைவர்' *(உ.வ.).*

*[சால் → சான்ற]*

**சான்றவர்** *sāṉṟavar,* பெ. (n.) 1. சான்றோர்[1] பார்க்க; see *sāṉṟōr-1.* "சான்றவர் சான்றாண்மை குன்றின்" (குறள், 990). 2. சான்றோர்[2] பார்க்க; see *sāṉṟōr-2.* "ஞாலமேழ் புகழுஞ் சான்றவ ருடனே" *(திருவாலவ. 17,6).*

*[சால் → சான் → சான்றவர்]*

**சான்றவன்** *sāṉṟavaṉ,* பெ. (n) சான்று கூறுவோன்; a witness. "பொய்த்த சான்றவன் குலமென" *(கம்பரா. வருணனை. 25).*

*[சான்று → சான்றவன்.]*

**சான்றளி-த்தல்** *sāṉṟaḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.). விளத்தம் உண்மையானது என்று அல்லது அவற்றின் படி உண்மையானது என்று கையொப்பமும் முத்திரையும் இட்டு உறுதியளித்தல்; to certify (a fact) attest (a copy). 'விண்ணப்பத்துடன் சான்றளிக்கப்பட்ட மதிப்பெண் பட்டியலையும் இணைத்து அனுப்புக' *(உ.வ).*

*[சான்று + அளித்தல்]*

**சான்றாண்மை[1]** *sāṉṟāṇmai,* பெ. (n.) 1. பெருந்தன்மை; நற்குணங்கள் பல்லாற் றானும் அமைதல் (குறள். அதி, 99, மணக் குடவர்); nobility, greatness. "சான்றாண்மை தீயினஞ்சேரக் கெடும்" *(நாலடி.179).* 2. பொறுமை, பலகுணங்களானும் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மை (குறள், அதி. 99, பரிமே.); self-control, patience. "கதனன்று சான்றாண்மை தீது" *(சிறுபஞ். 17).*

ம. சான்னாய்

*[சல் → சோல் → சால். சாலுதல் = நிறைதல். சால = மிக. சால் → சான்றோர். சால் - சான்றாண்மை = எல்லா நற்குணங்களும் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மை (மு.தா.158)]*

**சான்றாண்மை[2]** *sāṉṟāṇmai,* பெ. (n.) கள்ளிறக்கும் தொழில்; toddy-drawing. "சான்றாண்மை பயின்றார்" *(குமரபிர. மதுரைக்.24).*

*[சாறு = கள். சாறு + ஆண்மை - சாற்றாண்மை → சான்றாண்மை]*

**சான்றார்[1]** *sāṉṟār,* பெ. (n.). சான்றோர் பார்க்க; see *sāṉṟōr.* "சான்றாருட் சான்றானெனப்படுதல்" *(திரிகடு.82).*

ம. சான்றான்

*[சால் → சான் → சான்றோர்]*

**சான்றார்[2]** *sāṉṟār,* பெ. (n.) சாணார்; sāṇārs. "சான்றான்மாட்டு மேனிப்பொன்னும்" *(T.A.S. II. 67).*

*[சான்றோர் = போர் மறவர் "தேர்தர வந்த சான்றோரெல்லாம்" (புறம்.63) சான்றோர் → சான்றார். "ஈழக்குலச் சான்றார் ஏனாதி நாயனார்" (பெரியபு.15:2)]*

இப்பிரிவினருடைய தொழில் கள்ளிறக்குதல், கருப்பட்டி காய்ச்சுதல், வாணிகஞ்செய்தல், குடிக்காவல், படைக்கலம் பயிற்றல் ஆகியன.

இதில் கருக்கு மட்டையன், மேனாட்டான், கொடிக்கால் நாட்டாத்தி, பிழுக்கை என்னும் பிரிவுகளுண்டு.

நாடார், சேர்வைகாரன் என்பன, இவர்களின் குலப்பட்டப் பெயர்கள். முக்குந்தன் என்பது வழக்கு வீழ்ந்தது *(தமி.வ.111).*

**சான்றிதழ்** *sāṉṟidaḻ,* பெ. (n.) பிறப்பு, கல்வி முதலிய குறித்துக் குறிப்பிட்ட விளக்கமளித்து அதற்குரிய அதிகாரி அல்லது அமைப்பு வழங்கும் எழுத்து வடிவான சான்று;

testimonial; certificate. ஓட்டுநர் பயிற்சிச் சான்றிதழ் வாங்க வேண்டும்.

*[சான்று + இதழ்]*

**சான்று** *šāṉṟu,* பெ. (n.) *கரி;* witness, evidence. "வன்னிமரமு மடைப்பளியுஞ் சான்றாக" *(சிலப். 21:5).*

*[சால் → சான்று]*

**சான்றுரை** *šāṉṟurai,* பெ. (n.) *சான்றுக்காகச் சொல்லும் உரை;* evidence, demonstration.

*[சான்று + உரை]*

**சான்றுறுதி** *šāṉṟuṟudi,* பெ. (n.) *எழுத்துமூலம் அளிக்கும் உறுதி;* testimony.

*[சான்று + உறுதி]*

**சான்றோர்** *šāṉṟōr,* பெ. (n.) *1. அறிவொழுக்கங் களால் நிறைந்த பெரியோர்;* the great, the learned, the noble. *"சான்றோர் செய்த நன்றுண்டாயின்" (புறநா. 34:20). 2. கழகக் காலத்துப் புலவர்;* poets of the Saṅgam period. "சான்றோர் செய்யுளில் இன்சாரியை உருபுபற்றாது நிற்றல் நோக்கி" *(தொல்.சொல். 1, உரை). 3. வீரர்;* warriors. "தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்" *(புறநா. 63, 5).*

மறுவ. மிக்கோர், நல்லோர், தகுதியோர், மேலோர், ஆய்ந்தோர், ஆன்றவர், உலகம், மேதாவியர்

*[சாலுதல் = நிறைதல். சால் → சான் → சான்றோர் = அறிவு நிறைந்தோர் (மு.தா.158)]*

**சான்றோர்தன்மை** *šāṉṟōr-taṉmai,* பெ. (n.) *சான்றோர்க்குரிய எட்டுத் தன்மைகள்;* the eight qualities of learned men.

*[சான்றோர் + தன்மை]*

**சான்றோராட்சி** *šāṉṟōr-āṭci,* பெ. (n) *கற்றோர் வழக்கு;* the learned usages.

*[சான்றோர் + ஆட்சி]*

**சான்றோன்**[1] *šāṉṟōṉ,* பெ. (n.) *அறிவொழுக்கங் களாற் சிறந்தவன்;* a wise, learned and respectable man. *"சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே" (புறநா. 312).*

*[சால் → சான் → சான்றோன்]*

தாமாக உயர்ந்த ஒழுக்கம் பூணும் ஒரு சிலரே சான்றோர். ஏனையோரெல்லாம், அரசனின் தண்டனைக்கஞ்சியே ஒழுக்கத்தைக் கடைப் பிடிப்பவராவர்.

**சான்றோன்**[2] *šāṉṟōṉ,* பெ. (n) *மாழ்கு விண்மீன் (மிருகசீரிடம்) (பிங்.);* the fifth nakṣatra.

**சான்றோன்**[3] *šāṉṟōṉ,* பெ. (n) *கதிரவன் (பிங்.);* sun.

*[சான்று → சான்றோன்]*

**சான்றோன்மூலி** *šāṉṟōṉ-mūli,* பெ. (n.) *கொடி எலுமிச்சை;* lemon creeper - Citrus medica limonum *(சா.அக.).*

*[சான்றோன் + மூலி]*

**சானக்கிமேனி** *šāṉakki-mēṉi,* பெ. (n) *குப்பை மேனிச் செடி;* rubbish plant - Acalypha indica *(சா.அக.).*

**சானகி**[1] *šāṉagi,* பெ. (n.) *1. பொன்னாங்காணி (மலை);* plant growing in damp places. *2. கொற்றான்செடி;* a plant.

**சானகி**[2] *šāṉagi,* பெ. (n.) *மூங்கில் (யாழ்.அக.);* bamboo.

*[சானகம் → சானகி]*

**சானகை** *šāṉagai,* பெ. (n.). *சானிகை (இவ.) பார்க்க;* see *šāṉigai.*

**சானம்**[1] *šāṉam,* பெ. (n.) *பெருங்காயம் (மூ.அ.);* asafoetida.

**சானம்**[2] *šāṉam,* பெ. (n.) *சாதிலிங்கம்;* vermilion.

**சானம்**[3] *šāṉam,* பெ. (n.) *1. அம்மி (யாழ்.அக.);* millstone. *2. உரைகல்;* touchstone.

**சானிகை** *šāṉigai,* பெ. (n.) *மண்ணாற் செய்த தட்டு;* earthen dish (madr).

தெ. சானிக

**சானினி** *šāṉiṉi,* பெ. (n.) *1. சிறுகீரை (மலை.);* amaranth. *2. சேம்பு;* cocco, coarse herb.

*[சாகினி → சானினி]*

**சானீளம்** *šāṉīḷam,* பெ. (n.) *ஒரு படைச்சால் நீளம்;* a furlong.

*[சால் + நீளம்]*